# 'பதிவுகள்' 55 சிறுகதைகள்

## (தொகுதி ஒன்று)

***"அனைவருடனும் அறிவினைப் பகிர்ந்து கொள்வோம்"***



***"அனைவருடனும் அறிவினைப் பகிர்ந்து கொள்வோம்" என்பதைத்தாரக மந்திரத்துடன், எழுத்தாளர் வ.ந.கிரிதரனை ஆசிரியராகக்கொண்டு மார்ச் 2000 ஆம் ஆண்டிலிருந்து வெளியாகும் இணைய இதழ் 'பதிவுகள்' (பதிவுகள்.காம்). 'பதிவுகள்' இணைய இதழில் வெளியான கட்டுரைகள், சிறுகதைகள், கவிதைகள் மற்றும் ஆய்வுக் கட்டுரைகள் மின்னூற் தொகுப்புகளாக வெளியாகும். இது அவ்வகையில் வெளியாகும் முதலாவது சிறுகதைத் தொகுப்பு.***



## 'பதிவுகள்.காம்' வெளியீடு!

**அக்டோபர் 2020**

# உள்ளே

**1. நண்பன் - க.அருள்சுப்பிரமணியம்**

பெரியகுளம் பச்சைக் குழந்தையாய் படுத்திருந்தது. சகாயம் வானத்தில் ஒன்றியவனாய் குளக்கட்டில் மல்லாந்து படுத்திருந்தான். பஞ்சு பஞ்சாய் திரண்ட முகிற் கூட்டங்கள் நிலாவைத் தாக்கி அழிக்க வியூகம் விரித்துப் பாய்ந்தன. நுழைந்து மறைந்து கண்ணாம்பூச்சி காட்டித் தப்பிக்கொண்டே இருந்தது முழுநிலா. மகிழ்ச்சியில் பூத்துக் குலுங்கிய நட்சத்திரப் புஷ்பங்கள்! வலப் பக்கமாகத் திரும்பி தலைக்கு முட்டுக் கொடுத்து எதிரே நீண்டு விழுந்திருக்கும் குளத்தைப் பார்த்தான். நிலா விரித்த வெள்ளிப்பாயின் ஜொலிப்பு. அப்படியும் குளத்தின் அந்தக் கரை தெரியவில்லை. அவ்வளவு விசாலமான சாம்ராச்சியம். பொருத்தமாகத்தான் பெயர் வைத்திருக்கிறார்கள் - பெரியகுளம்!

கைத்தாங்கலை விலக்கி நிமிர்ந்தான். பௌர்ணமியின் பூரிப்பில் வானத்து விசித்திரத்தை விஸ்தாரமாக ரசிக்க விடாமல் வரிசை கட்டி முட்டி மோதிய நினைவுக்கணைகள் குளத்தின் அந்தக் கரைக்கப்பாலும் துளைத்து ஊடுருவிற்று.

மாதம் மும்மாரி பொழிந்து கதிர் பருத்துச் சரிந்து இடுப்பு வலி கண்ட பூமி அது. ஏழை பாழைகளுக்கும் வயிற்றுக்கு வஞ்சனையின்றி வாரிக் கொட்டிய அன்னை. அதனால்தானோ அந்தப் பக்கமிருந்து வரும் பஞ்சைப் பராரிகளுக்கும் வாய்க்குப் பஞ்சமில்லை.

"ஏனக்கா உன் மூத்த பொடியனை என்னோடு விடன், பட்டறையில் கை உதவிக்கு ஆளில்லாமல் கஷ்டப்படுகிறேன்."

கையிலும் இடுப்பிலும் குழந்தைச் சுமையோடு வள்ளத்தில் வந்திறங்கி பட்டறையடி வேப்பமரத்து நிழலில் பஸ் ஏற அவள் காத்திருந்த போது சகாயம் பவ்வியமாகக் கேட்டான். அவள் அவன் பக்கம் திரும்பவில்லை. கையில் பால்குடிக் குழந்தை. வெளிறிப் போன சேலைத் தலைப்பைப் பிடித்தபடி ஏழு வயதளவில் மூக்கால் ஓடிய ஒரு பிள்ளை. அம்மாவை முந்திக் கொண்டு ஓடிய மூத்தவனுக்கு பன்னிரண்டு இருக்கும். பள்ளிக்கூடத்தை மிரித்தவனாகத் தெரியவில்லை - பேச்சும் பாய்ச்சலும் சகாயத்திற்குப் பிடித்து விட்டது.

சுற்று வட்டாரத்திலேயே மரவேலையில் சகாயத்தை அடிக்க ஆளில்லை. முதிரையும் தேக்கும் யாவறனையும் அவன் சொன்னபடி கேட்கும். பூக்கொத்திய வாசற் கதவுகள் நிசப்பூக்களின் கவிதை சொல்லும். நேர்த்தி சற்றும் பிசகாத வெட்டுமானம். தனிக்கட்டை. பட்டறையோடு இணைந்த பின்பக்க வீடு, பக்கத்து மாதா கோயில், தன் பட்டறை என்ற கையளவு வாழ்க்கை. ஓரேயொரு ஆசை - நெடுநாளையக் கனவு - மரம் அறுக்கும் மெசின் வாங்க வேண்டும். செலவில் கவனமாயிருந்ததில்

முப்பதாயிரத்திற்கு - கிட்டத்தட்ட பதினைந்து சேர்த்தாயிற்று. புதுவருசம் பிறப்பதற்குள் எப்படியும் வாங்கி வெள்ளோட்டம் விடும் வேகம். டவுனிலிருந்து வரும் ஓடர்களை ஒரு கையால் சமாளிக்க முடியவில்லை.

"சாப்பாடும் போட்டு மூன்னு¡று ரூவாக் காசுந் தருகிறேன் அக்கா."

அந்தத் தெருவில் கார் கீர் வராது. எப்போதாவது ஒருவன் சைக்கிளில் போவான் - மற்றப்படி து¡ங்குமூஞ்சித்தெரு. இரண்டு பிள்ளைகளும் சுதந்திரமாய் கலகலத்து ஓடிப்பிடித்து தெரு முழுக்க புழுதி அளைந்து கொண்டிருந்தார்கள். குளத்துப் பக்கம் அவர்கள் போகவில்லை. ஆனாலும் அவள் கத்தினாள். "டேய் குளத்துப் பக்கம் போகாதீங்கடா."

"என்னக்கா ஓமென் டு சொல்லன்."

மரத்தடியிலிருந்து சேலைத்தலைப்பால் பிள்ளையை மூடிப் பால் கொடுத்துக் கொண்டிருந்தவள் அரிகண்டம் தாங்க மாட்டாமல் தலை நிமிர்ந்தாள்.

"எங்க ஊரில விளைஞ்சதை வெட்டுறதுக்கே ஆளில்லாம க-டப்படுறம் - மரப்பட்டறைக்கு ஆள் கேக்கிறார் மண்ணாங்கட்டி மனுசன்."

இருப்பது ஒன்றுக்கும் வழியில்லாத பஞ்சைத் தோற்றம். அந்தப் பக்கத்துக் காணியெல்லாம் தன் பெயரில் வைத்திருப்பவள் போன்ற ஆளுமைப் பதில். வயதுகூட அவனை விட ஒன்றோ இரண்டோ குறைவாகத்தான் இருக்கும். ஆனால் கூடுதலாகத் தெரிந்தது. மூன்று பிள்ளைகளின் தாய் என்ற ஒரு மரியாதைக்காக அக்கா என்றே கதைத்தான்.

"பிள்ளை மாதிரி வைச்சுப் பாப்பனக்கா. இங்க பார் அவன் உடுப்பை. புது உடுப்பெல்லாம் நான் தைச்சுக் குடுப்பன். கிறிஸ்மஸ¤ம் வருகுது."

ஒரு உளி தேவையென்றாலும் வேலையை குறையில் விட்டு எழுந்து கொள்ள வேண்டியிருக்கிறது. ஒரு வாய் வெற்றிலை போடுவதற்கும் அவன்தான் அசைய வேண்டும். இந்தப் பிள்ளை மட்டும் பக்கத்தில் இருந்தால்! .. .. .. நினைக்கவே ஆறுதலாயிருந்தது.

"என்னக்கா சொல்றாய்? "

அவளுக்குப் பொத்துக்கொண்டு வந்தது.

"இதென்ன ஆக்கினையாக்கிடக்கு. தகப்பன் சரியில்லை. வெள்ளாமைக் கூலியை குடிச்சு அழிக்கிறான். என்ர பிள்ளையள் இப்படியா இருக்கும். நீ ஒன்டும் தைச்சுக் கிழிக்க வேணாம். நாலு நாளைக்கு களை புடுங்கப் போனாப் போதும். பெரிசாப் பேச வந்திற்றார்."

பிடி கொடுக்காமலே பேசினாள். அவனும் தன் பிடியை விடுவதாக இல்லை.

"இராப்பள்ளியில் விட்டு படிப்புச் சொல்லிக் குடுப்பேனக்கா. தொழிலையும் சுத்தமாச் சொல்லிக் குடுப்பன். பிறகு பாரன் அவன்ர நடப்பை. என்ர பட்டறையே அவனுக்குத்தான்."

அவன் ஆசை காட்டவில்லை. சத்தியமாகத்தான் அதைச் சொன்னான். அவனுக்கென்று பெஞ்சாதியா பிள்ளையா. வயது நாற்பது தாண்டி விட்டது. பாதர் §ஐ¡சேப்பு கூட எவ்வளவோ சொல்லிப் பார்த்து விட்டார். ஒண்டிக்கட்டையாகவே இருந்துவிட முடிவு.

சகாயம் சொன்னதில் பொடியனுக்கே ஒரு மயக்கம். ஓடித்திரியாமல் அம்மாவிற்குப் பக்கத்தில் நின்று நிதானமாகக் கவனித்தான்.

"நீ ஒன்டும் இஞ்ச புடுங்க வேண்டாம். எங்களுக்கு எங்கட மண் இருக்குது."

பஸ் வர - கூடிய கவனத்துடன் பிள்ளைகளின் கை பிடித்துக் கூட்டிக் கொண்டு ஏறினாள். சனத்தோடு மல்லுக்கட்டி சீற்றில் ஆறுதலாக இருந்த பின் பிள்ளைபிடிகாரனைப் பார்ப்பது போல சகாயத்தைப் பார்த்தாள்.

எப்படி இவளுக்கு இவ்வளவு கொழுப்பு வந்தது! எல்லாம் அந்த மண் கொடுத்த கொழுப்பு.

பட்டறையிலிருந்து பார்த்தால் தூரத்தில் அந்த ஊரின் அசைவுகள் துணியில் மூட்டைப்பூச்சி ஊர்வது போல மெலிதாகத் தெரியும். இரண்டு ஊரையும் பிரிப்பது பெரியகுளந்தான். தெருவால் சுற்றிப் போவதென்றால் ஐந்து மைல். இப்போது தெருவில் அடிக்கொரு சோதனைச்சாவடி!

அந்த மண்ணில் போன வாரம் வரை குண்டுமாரி பொழிந்தன. கண்மூடித் திறப்பதற்குள் ¦ஐட் விமானங்கள் குண்டைப் போட்டுவிட்டுப் புகை கக்கிப் பறந்தன. இராட்சத ஹெலிகள் சரமாரியாய் இறக்கி விட்டுப் போயின. எத்தனை இருக்கோ எத்தனை போச்சோ!.............ஒருவருக்கும் ஒன்றும் தெரியாத நிலை. அந்தச் சூனியப் பிரதேசத்துள்

நுழைய யாருக்கும் அனுமதியில்லை.

கதிரெல்லாம் வெட்டாமல் அப்படியே அழுகிப்போச்சு. முக்கால்வாசி வீடும் சரி. கோயில் நிரம்பி மணக்குது. சனம் பட்டினியில் அந்தரிக்குது. பச்சைப் பிள்ளையளுக்குப் பாலில்லை. வயிற்றால் போய்ச் சாகுது என்றெல்லாம் காற்றிலே கலந்த செய்திகள் காதிலே வந்து கனத்தன.

மாதாவே!

குளத்தில் விட்டெறிய கல்லொன்றை எடுத்தான் சகாயம். அசந்து படுக்கும் குளத்தை குழப்ப மனம் வரவில்லை. பின்பக்கம் பச்சைப் பற்றைக்குள் எறிந்தான். நெஞ்சு விறைத்துக்கொண்டே வந்தது. அந்தப் பிள்ளைகுட்டிக்காறி மனதில் வந்தாள். இருக்கிறாளோ இல்லையோ. ஆறு மாதம் ஆகியிராத பாலகனுக்கு பாலுக்கு எங்கே போவாள்! தாயின் இடுப்பில் இருந்து கொண்டு குழந்தை ஒன்றுக்குப் போன அழகு கண்களுக்குள் வந்தது. இரவு சாப்பிட்ட பானும் பருப்புக்கறியும் வயிற்றில் பொருமிக் கேட்டது.

சகாயம் தீர்மானமாக எழுந்தான். “ஒருவருக்கும் தெரியாமப் போய் குடுத்திற்று வரவேனும்.“

பச்சைப்புல்வெளி கடந்து பட்டறைக்குள் வந்ததும் ஐன்னலால் குளத்தைப் பார்த்தான். எனக்கொன்றும் தெரியாது என்றது போல் அது ஆழ்ந்த சயனத்திலிருந்தது. எப்படிப் போவது? குளக்கட்டில் ஏற்றியிருந்த §ஐக்கப்பின் வள்ளம் உதவிக்கு நானிருக்கிறேன் என்று கூறிற்று. பயத்தில் ஒரு மாதமாக §ஐக்கப் மீன்பிடிக்க குளத்தில் இறங்கவில்லை.

ஒன்று மட்டும் உதைத்தது. அந்தக் குளம்! அதன் கரையோரக் கட்டுகள் பராமரிப்பில்லாமல் து¡ர்ந்து போய் கால் வைத்த இடமெல்லாம் ஆளை மூடும் ஆழம். அவனுக்கு நீச்சலும் தெரியாது. உதவிக்கு ஒரு கையிருந்தால் நம்பிப் போகலாம்!

பொழுது விடிந்த கையோடு அவன் டவுனுக்குக் கிளம்பினான். பால்மா சீனி பருப்பு தேயிலை.. .. .. மலர்ச்சியோடு பெரிய பில் போட்ட கடை முதலாளி சங்கரப்பிள்ளை கேட்டார். சேர்ச்சில என்ன விசேசம்? நான்கு பெரிய பச்சைத்தாளை நீட்டியதும் அவர் காரணத்தை மறந்து காரியத்தில் மூழ்கினார்.

ஆட்டோவில் திரும்பி வரும் போது இரும்புக்கடையில் முன்னர் பார்த்து வைத்த மரம் அறுக்கும் மெசீன் கண்ணில் பட்டது. சனமெல்லாம் சாப்பாடில்லாமச் சாகுது. மெசின் கேக்குதாம் கண்டறியாத மெசின்.

வழியில் நாலைந்து இடங்களில் இறக்கிப் பார்த்தார்கள். கம்பி விட்டுக் குத்திப் பார்த்தார்கள். கேள்வி கேட்டார்கள். மாதா கோவில் பெயரைச் சொல்லி ஒருவிதமாக மாறிக் கொண்டு வந்தாயிற்று. பட்டறை வாசலில் வந்து இறங்க டவுன் நண்பன் பரமானந்தம் சிரித்துக் கொண்டு நின்றான். "கடவுளைக் கண்ட மாதிரி இருக்கு சகாயம். உன்னட்டைத்தான் வந்தனான்."

"என்ன விசயம்? "

"ஒரு 500 ரூவா அவசரமாத் தேவைப்படுது சகாயம் சம்பளத்தோட தந்திருவன்."

பரமானந்தம் முன்னரும் ஐஞ்சு பத்தென்று பல தடவைகள் காசு மாறியிருக்கிறான். இந்த முறைதான் இவ்வளவு கேட்கிறான். கொஞ்சம் முந்திப்பிந்தினாலும் திருப்பிக் கொடுத்து விடும் நாணயம் இருந்தது. ஐந்நுறுக்கு வந்த அவசரம் என்ன என்ற விளக்கம் கேட்காமல் சட்டைப் பையிலிருந்த மிச்சக்காசில் எண்ணிக் கொடுத்துவிட்டு மூட்டையை இறக்கி பக்கமாக வைத்தான்.

"சாமானெல்லாம் தடபுடலாயிருக்கு ஆர் பொம்பிளை? "

"உனக்கு ஒரே பகிடிதான். வாவன் சொல்றன்." .. .. .. சகாயம் ஆட்டோவை அனுப்பிவிட்டு விசயம் சொன்னான்.

"ஒரு ஆள் உதவிக்கு வந்தா லேசாயிருக்கும். அதுதான் யோசிக்கிறன்."

"உனக்குச் செய்யாம வேற ஆருக்குச் செய்யிறது. நான் வாறன் சகாயம்."

பரமானந்தத்தின் கை பற்றி கண்களில் ஒற்றினான் சகாயம். இரவு ஒன்பது மணிக்கு ஆயத்தமாக இருக்கும்படி சொல்லிவிட்டுப் புறப்பட்டான் பரமானந்தம். இருட்டு குளத்துக்கரையை மூடத் தொடங்கிற்று. இருட்டை மூடி பனி பெய்யத் தொடங்கிற்று. தவளைகள் சங்கீத ஆலாபனை தொடங்கி வெகு நேரமாயிற்று. சகாயம் மணிக்கூட்டைப் பார்த்தான். ஒன்பதரை. தொங்கலை பிடித்து இழுக்க - ஏற்கனவே தயாராக இருந்தது போல பள்ளத்தில் இலேசாக வழுக்கி வந்தது வள்ளம். மூட்டையை ஏற்றிவிட்டுக் காத்திருந்தான். மேகம் கறுத்திருந்தது. சந்திரன் எங்கே என்று வானத்தைப் பார்த்தான். காணவில்லை. மழை வரப்போகிறதோ! பன்னிரண்டாயிற்று - பரமானந்தம் வரவில்லை. வழியில் என்ன நடந்ததோ! குடுத்திட்டு விடியிறதுக்கு முன் திரும்ப வேனுமே. அவன் வள்ளத்தைத் தள்ளி குளத்தில் இறக்கி தனியாக இருட்டில் நுழைந்து மறைந்தான்.

விடிந்து ஏழு மணி போல் டவுன் மார்க்கட்டில் கதைத்தார்கள்.

"மரக்காலை சகாயத்தை விடியப்பறம் ஜஞ்சு மணிக்கு குளத்தங்கரையில வைச்சு பொலிஸ் பிடிச்சதாம். §ஐ¡சப் பாதர் போய் கதைச்சு கூட்டி வந்திற்றாராம். இனிமே குளத்தில வள்ளம் விடக்கூடாது என்டு உத்தரவாம்."

சுடச்சுட அரிசிமாப்புட்டும் முட்டைப்பொரியலும் சாப்பிட்டுக் கொண்டிருந்த பரமானந்தம் மனைவியிடம் சொன்னான். "மடையன்ர பேச்சைக் கேட்டு நானும் போயிருந்தா எனக்கும் இந்தக் கெதிதான்."

மனைவி மனந் தாளாமல் கேட்டாள்.

"நேத்து ஏன் வரேல்லையென்டு சகாயண்ணன் கேட்டா? "

"எங்கட ஏரியாவில ராத்திரி ரவுண்ட் அப் என் டு சொன்னாப் போச்சு!"

karulsubramaniam@yahoo.com

**2. பிரெஞ்சு சிறுகதை: எல்ஸாவின் தோட்டம் -ஷோவென் ழான்-ரொபெர்| தமிழில் -நாகரத்தினம் கிருஷ்ணா -**

1-

தோட்டத்தில் விளையாடிக்கொண்டிருக்கும் எல்ஸாவுக்கு வயது 5. சுருள் சுருளாக, பழுப்பு நிறத்தில் நீண்டமுடி. படிகம் போன்ற தெளிவான விழிகள். மண்ணில் விளையாடியதால் அழுக்கடைந்த கால்கள். எல்ஸாவின் தோட்டம் உயரமான மரங்களும், எண்ணிக்கையற்ற பூவகைகளும் நிறைந்த தோட்டம். எல்ஸாவின் சிறியக் கண்களுக்குள் அடங்காத மிகப்பெரியத் தோட்டம். ஆனால் அவள் கற்பனையில் விரிந்தக் கதைகளுக்கும், துடுக்கான விளையாட்டிற்கும், அவ்விளையாட்டுக்கெனவே கற்பனையில் உதிக்கின்ற அவளது தோழர்களுக்கும் ஏற்றத் தோட்டம்.

மரங்கள் தோறும் தாவிச் செல்லும் சித்திரக் குள்ளன். அழகான மலர்களிலிருந்து சுகந்தத்தை மட்டுமே சேகரிக்கின்ற குட்டி தேவதைகள். வழக்கம்போல வசிய மருந்துகக்காக கள்ளிச் செடிகளையும், அழுகியப் பழங்களையும் தேடுகின்ற சூனியக்காரிகள் என அவளது கற்பனைக் கேற்றவாறு தோட்டத்தின் பங்களிப்பு மாறும். மணல் நிரப்பப்பட்டத் தொட்டியில், அவள் கட்டுகின்ற மணற்கோட்டைகளில் சூரியனின் கதிர்களும், மேகத்தின் நிழல்களும் வாசம் செய்யும். பூமியில் காதினை வைத்து மண்ணில் வாழும் புழுக்களும் வண்டுகளும் இடும் இரைச்சலைக் கேட்டு, அவைகளை ஆச்சரியப் படுத்துவாள். சிறிது நேரம் அவள் ஆடுகின்ற ஊஞ்சலின் மூலம் உயரே பறக்கின்ற 'மேசான்ழ்' குருவியை பிடித்திட முயல்வாள். பின்னர் இறங்கி 'ராஸ்பெரி' பழங்களைப் பறித்து 'மாக்பை' குருவியோடு பங்குபோட்டுக் கொள்வாள். 'மாக்பை' குருவி அமர்ந்திருக்கும் சுவர்தான் வீதியிலிருந்தும், வெளி மனிதர்களிடமிருந்தும் தோட்டத்தைப் பாதுகாக்கிறது. தோட்டத்து அமைதியை எப்போதும் பூட்டி வைத்திருக்கிறது.

"உஸ்.. சத்தம் போடாதே!" அணிலிடம் ஏதாவது வேலையைப் பணிக்கும்போதுகூட இப்படித்தான் ஆரம்பிப்பாள். மழையில் நனைவதில் சந்தோஷமா? அடுத்தவர்களுக்கு கேட்டுவிடாது, மெதுவாகத்தான் சிரிப்பாள். அவளது கற்பனைக் கதைகளின் தோழர்களான நரி, பூனை எறும்புகளைப்போல, மெள்ள, ஊர்ந்து நடப்பதெல்லாம் கூட அப்படித்தான். கற்பதித்தத் தோட்டத்து பாதைகளில் விழுந்து அவள் முழங்காலிலோ, முழங்கையிலோ சிராய்த்துக்கொள்ள நேரும்போது கூட கண்ணீரை அடக்கிக் கொள்ளத் தெரிந்தவள். அப்படி அழுவதால் ஒருவேளை ஜன்னலை மூடிக்கொண்டு கீழ்த்தள அறைக்குள் களைப்பாலுறங்கும் அவள் அம்மாவை எழுப்பிவிடக் கூடும். அதற்கடுத்தவறையில் இருக்கும் அப்பாவைப் பற்றிச் சொல்லவே வேண்டாம். கோபக்காரர். கண்டிப்பானவர். எல்ஸாவிற்கு அடக்கமில்லை என்றும், பெரியவர்கள்

பேசும்போது குறுக்கிடுகிறவள் எனவும் கூச்சலிட்டு பயமுறுத்திக் கொண்டிருப்பவர்.

-2-

தோட்டத்தில் படித்துக் கொண்டிருக்கும் எல்ஸாவிற்கு வயது 10. சுருள் சுருளாக தலை முடி ஆனால் கண்களில் முன்பிருந்த ஒளியும், தெளிவும் தொலைந்திருந்தன.

கைவிரல்கள் புத்தகத்தை அழுந்தப் பிடித்திருந்தன. இப்போதெல்லாம் படிப்பதென்பது ஒருவகையில் அவளுக்கான புகலிடம். அவளது விருப்பமானத் தோட்டத்தைப் போலவே வெளிமனிதர்களிடமிருந்தும் அவர்களிடும் கூச்சல்களிடமிருந்தும் அடைக்கலம் தரும் புகலிடம். அலுவலக அ¨றையினின்று அப்பா கூச்சலிடுகின்ற நேரங்களில் புத்தகங்கள் மட்டுமே அவளுக்கான ஒளிப்பிடம். புத்தகத்திலிருந்து விடுபட்டு எல்ஸா வானத்தை பார்க்கிறாள். பிறகு 'திய்யேல்' மரத்தருகேச் சென்று, அதன் நிழலில் குப்புறப் படுக்கிறாள். தலையை உயர்த்தி பின்னோக்கிச் சாய்த்து கதிரவனை நேராகப் பார்க்கிறாள். பிறகதன் வண்ணத் துகள்கள் செய்யும் ஜால வித்தையை கண்ணிமைகளை இறுக மூடி அனுபவிக்கிறாள். மேகத்தின் குளிர் நிழல் முகத்தில் படவே, கண்களை மெல்லத் திறக்கிறாள். அப்பாவின் அலுவலக அறையிலிருந்து, கூடுதலாக இ ¢ந்த முறை இன்னொரு குரல் - பெண்குரல். அந்த குரல்கள் உரையாடலைப் பொறுத்து, உயர்ந்தும் தாழ்ந்தும் தோட்டம் வரை கேட்கின்றன. அப்பெண் எல்ஸாவின் வகுப்பாசிரியையாக இருக்க வேண்டும். 'எல்ஸாவின் அதிகப் படியான அமைதி' அந்தப் பெண்ணை கலவரபடுத்துகிறதாம். புகார் சொல்லிக்கொண்டிருக்கிறாள். எல்ஸா அவர்கள் பேசுவதை அமைதியாகவேக் கேட்டுக் கொண்டாள். அவளை பொறுத்தவரையில் கீழ்த்தளத்து அறையில் ஜன்னலை மூடிக்கொண்டு உறங்கும் அம்மாவுக்குத் தொந்தரவு நேர்ந்துவிடக்கூடாது. அப்பா "வாயை மூடிக்கொண்டிரு" என்று சொல்லியிருந்தார்.

பட்டாம் பூச்சியொன்று அவளது திறந்திருந்த புத்தக ஏட்டில் மெள்ள காற்பதித்து உட்காருகிறது. எல்ஸா மூச்சினை அடக்கிக் கொண்டாள். தன் சுவாசம் பட்டாம்பூச்சியை எழுப்பிவிடுமென்கின்ற பயம். ஆசிரியையும், எல்ஸாவின் அப்பாவும் தோட்டத்திற்குள் நுழைந்து, இவள் படுத்திருக்கின்ற 'திய்யேல்' மரத்தை நோக்கி வருகிறார்கள். அவர்களின் காலடி சத்தத்தில் அதிர்ச்சியுற்ற பட்டாம் பூச்சி பறந்துவிட்டது. அதனைத் தொடர்ந்து சென்ற எல்ஸாவின் கண்கள் எதிர்பட்ட வகுப்பாசிரியைச் சந்திக்கின்றன. ஆசிரியை அளவாகப் புன்னகைக்கிறாள். எல்ஸாவின் அப்பா என்ன நினைத்தாரோ விலகிக் கொண்டார். ஆசிரியை எல்ஸாவில் பக்கத்திலமர்ந்து நிறைய பேசுகிறாள். எல்ஸா வழக்கம்போல அமைதியாகக் கேட்டுக்கொண்டாள். 'அவள் வாயை திறக்ககூடாது, குறுக்கிடக்கூடாது. எதைச் சொன்னாலும் அமைதியாகக் கேட்டுக்

கொள்ள வேண்டும். அப்படித்தான் அவளப்பா வளர்த்திருக்கிறார்.

எல்ஸா எழுந்தாள். தோட்டத்தில் உள்ள நடைபாதையை எப்போதாகிலும் உபயோகிப்பாள். இந்த முறை அதில் நடக்கும் போது, கால்களை அழுந்தப் பதித்துத் தேய்த்து நடந்தாள். தோட்டத்துச் சுவரினை நெருங்கி ராஸ்பெரியை கை நிறையப் பறித்துக் கொண்டாள். அதில் கொஞ்சமெடுத்து அவளைத் தொடர்ந்து வந்திருந்த, ஆசிரியையிடம் கொடுத்தாள். இருவரும் அமைதியாகப் புன்னகைத்துக் கொண்டனர். அப்பாவிடம் 'அடக்கமாயிருப்பேன்' என்று சத்தியம் செய்திருப்பது ஞாபகத்துக்கு வந்தது. அதை மீறுவதில்லையெனத் தீர்மானித்தாள். ஆசிரியையிடம் பேசவில்லை.

-3-

தோட்டத்தில் அழுதுகொண்டிருக்கும் எல்ஸாவிற்கு வயது 15. குட்டையான முடி. சோகம் நிறைந்த விழிகள். ஒடுங்கிய உடல்.

முழங்கால்களை மார்புபட முடக்கி, முன் கைகளால் அவற்றை இறுகப் பிடித்து, தலையை வளைத்து, முகத்தைப் புதைத்து, அவளுக்குள்ளேயே அடைக்கலம் தேடி, அவளுக்குள்ளேயே கரைந்து, அவளை அவளே விழுங்க நினப்பதுபோல சுருண்டு கிடக்கிறாள். அவளது ஊமை அதிர்வுகளை அடக்க வேண்டி, சுவாசமே நின்று போகும் அளவிற்குத் தன்னை வருத்திக் கொள்கிறாள். அசையாமல் கிடக்கிறாள். சுற்றிலும் தோட்டத்தின் நிசப்தம். மலர்களின் சுகந்த வாசம். வீதியிலிருந்தும் வெளியுலகத்திலிருந்தும் தோட்டத்தைப் பிரித்து நிற்கும் சுவரில் மண்டிக்கிடக்கும் ராஸ்பெரி, அவற்றின் சர்க்கரை மணம். பிறகு தனிமை. அந்த நிலையிலிருந்து மீளவோ, ஒரு கைப்பிடி அளவு ராஸ்பெரியை பறிக்கவோ அவளுக்கு ஆர்வமில்லை. பசி கூட தோன்றவில்லை. சொல்லபோனால் எதன் மீதும் விருப்பமில்லை. நாளை மாலைவரை, விடுதிக்குத் திரும்பும்வரை இப்படித்தான் நேரத்தைப் போக்கியாகவேண்டும்.

பூமியில் முன்பு அவளுக்குக் கிடைத்த ஆறுதலை, மண்ணுயிர்களின் எதிரொலியை மறுபடியும் தேடினாள். கண்கள் குருடாகின்ற வகையில், மூச்சை நிறுத்திக் கொள்ளும் எண்ணத்துடன் முகத்தை பூமியில் பதித்து இறுகத் தேய்த்தாள். திடுமென்று எழுந்து கொண்டாள் ' தியல்' மரத்தின் முன்னே சென்று நின்றாள். மரப்பட்டைகளை மெள்ள வருடினாள். தனது துயரங்களை விட்டுச் செல்கின்ற வகையில் மரத்தை இறுகத் தழுவினாள். அதன் வேர்களிடமிருந்து அன்றைய மாலையைச் சந்திக்கப் போதுமான சக்தியைத் தேடிப் பெற்றுக் கொண்டாள்.

இப்போதெல்லாம் எல்ஸாவிற்கு மாலையைக் கண்டால் வெறுப்பு. இரவென்றால் அச்சம். அவளது பின் கழுத்தை சுவற்றுக்குப் பின்னால் மறையும் சூரியனின் கடைசிக் கதிர்கள் தொட்டுவிட்டு விலகிக் கொள்கின்றன. அந்தி நேரம் அவளுக்குள் காய்ச்சலை ஏற்படுத்தி உடலை நடுங்கச் செய்வதால் அதனிடமும் பயம். அப்பா அலுவலக அறையிலிலிருந்து வெளிப்பட்டு கூச்சலிடுகிறார். இனி, மேலும் கூச்சலிடலாம். எல்ஸாவின் அம்மா இரண்டாண்டுகளுக்கு முன்னால் ஏதோவொரு தீராத வியாதியால் இறந்திருந்தாள். அவளுக்கினிஎவரும் தொந்தரவு கொடுத்துவிட இயலாது. அம்மாவிற்காக எல்ஸா அமைதியாக இருக்க வேண்டியதில்லை. விம்மி விம்மி அழுதாள். அவ்வழுகை கேட்பதற்கு ஆளின்றி ஒலித்து ஓய்ந்தது.

-4-

தோட்டத்து நினைவுகளில் ஆழ்ந்து கிடக்கும் எல்ஸாவிற்கு வயது 20. தலை முடி ஒட்ட வெட்டப்பட்டிருந்தது.

நினைவுகளால் தேய்ந்து, உருக்குலைந்து, உணர்ச்சியற்று மரத்துப்போன உடல். இப்போதெல்லாம் ஊஞ்சலில் ஆடுவதற்கோ, 'தியேல்' மரத்தடியில் உட்காருவதற்கோ ஆளில்லை. சித்திரகுள்ளனுக்கும், தேவதைகளுக்கும், மண்ணில் வாழ்கின்ற இனத்திற்கும் உயிரூட்ட எவருமில்லை. சூரியனை முகத்திற்கு நேரே பார்ப்பதற்குக் ஒருவருமில்லை. எல்ஸா சன்னல் வழியே வெறித்து நோக்குகிறாள். இங்கே அவளைச் சுற்றியிருந்த சுவர் வானத்தையும் பூமியையும் அவளிடமிருந்து பிரித்திருந்தது. தோட்டத்தையும் அதன் அமைதியையும் பாதுகாத்த சுவர் ஞாபகத்தில் வந்து போனது. இந்தச் சுவர் அப்படியல்ல இவளிடமிருந்து வெளியுலகத்தைக் காக்கின்ற சுவர். இவளைச் சிறை பிடித்துள்ள சுவர். இங்குள்ள சன்னலை இவளது விருப்பபடி மூடவோ அல்லது திறக்கவோ இயலாது. விளையாடுவதற்கோ, படிப்பதற்கோ அல்லது அழுவதற்குமே கூட அவள் விரும்பிய நேரங்களில் வெளியில் சென்றிட முடியாது. அதிக பட்சமாக அவள் வெளியே அனுமதிக்கப் படுகின்ற நேரம் பதினைந்து நிமிடங்கள். அப்படி அனுமதிக்கப் படுகின்ற நேரங்களில் காங்க்ரீட் வெளி வாசலில் காதினைவைத்து எறும்புகளுக்கும் மண்புழுக்களுக்கும் காத்திருப்பதென்பது நடக்கின்ற காரியமா? எல்ஸா விளையாடுவதில்லை, படிப்பதில்லை ஏன் அழுவதைக் கூட நிறுத்தியாயிற்று. மாறாக தண்டனைக் கைதியாக மணிக் கணக்காக, நாட்கணக்காக, மாதக் கணக்காக, வருடக் கணக்காக அமைதியாகக் காத்திருக்கிறாள். இந்த அமைதி மட்டுமே அவளைவிட்டு நீங்காது, தொடர்ந்து ஒட்டிக் கொண்டிருக்கிறது. அந்த அமைதியின் சுவாசத்தில் மட்டுமே அவளது ஜீவன் அடங்கிக் கிடக்கின்றது. இந்த வாழ்க்கையை மறுக்கவில்லை ஏற்றுக் கொண்டாள்.

மறுபடியும் அமைதி கண்களை மூடுகிறாள்: கற்பனையில் மீண்டும் அந்த சிறுமி. சுருள் சுருளாக முடி, பளபளக்கும் கண்கள். தோட்டத்து நடைபாதையைக் கடக்கும் போதெல்லாம் கால்களை அழுந்தப் பதித்து தேய்த்து நடக்கும் சிறுமி. அறையிலிருந்துகொண்டு திறந்திருக்கும் ஜன்னல்வழியாக பட்டாம்பூச்சியொன்றின் பறக்கும் அழகை ரசிக்கும் சிறுமி. ஜன்னலருகில் கையூன்றி புன்னகை செய்யும் அம்மாவிற்கு தன்னுடைய புன்னகையை மறுமொழியாக அளிக்கின்ற சிறுமி. உயரே பறந்துகொண்டிருக்கும் 'மேக்பை' குருவிக்கு இடையூறின்றி மெள்ள நடந்து கைநிறைய ராஸ்பெரியை பறித்து மென்று துப்புகின்ற சிறுமி. இறுதியாக, கால்களாள் குழிபறித்து அதில் எல்ஸாவின் தந்தையைப் புதைத்து அவளுக்கு விடுதலைவாங்கித் தரும் சிறுமி.

3. **போர்க்களம்** - பாவண்ணன் -

ஒன்று-

பாற்கடலின் விளிம்பில் ரத்தச் சிவப்பு படர்ந்தது. சூரியன் மறையப்போகும் நேரம். அலைகளின் இரைச்சலை மீறிக் கொண்டு அசுரர்களின் இரைச்சல் வானில் மோதியது. ஒருபுறம் மார்பு பிளந்த மகாபலியின் அலறல். இன்னொருபுறம் நமுசியும் சம்பரனும் இதயத்தில் தைத்த வேல்களைப் பிடுங்கும்போது எழுப்பிய மரணக் கூச்சல். மற்றொரு புறத்தில் வேரற்ற மரம் போல விழுந்த அயோமுகனின் சத்தம். அச்சத்தத்தில் நெஞ்சம் துடித்தது. தன்னைச் சுற்றிலும் அசுரர்கள் அபயக் குரல் எழுப்பியபடி ஓடுவதைக் கண்டன ராகுவின் கண்கள். உடல் இரண்டு துண்டுகளாக அறுபட்ட நிலையில் முன்னால் வேகவேகமாக மாறிக் கொண்டிருந்த காட்சிகளைத் துயரத்துடன் நோக்கினான் அவன். கடலின் செந்நிறம் ஏறிக் கொண்டே இருந்தது. ரத்தம் கலந்த கடற்பரப்பில் மரணதேவதையின் முகம் தெரிந்தது. ஒரு பெரிய மிருகத்தின் முகம் போல இருந்தது அவள் முகம். அந்த வெறி. அந்தச் சிவப்பு. அவள் கோரைப் பற்கள். உயிரற்ற உடல்களை அள்ளி எடுக்க நீண்டன அவள் கைகள். அக்கை கடலையே துழாவிக் கரையைத் தொட்டது. யாரோ தாக்கியது போல உடல் அதிர்ந்தது. "ஐயோ" என்றான்.

விழிப்பு வந்துவிட்டது. பீதியில் இதயம் துடிக்கச் சுற்றியும் இருந்த கூடாரங்களைப் பார்த்தான் ராகு. உண்ணாநோன்பினால் சோர்ந்திருந்தாலும் மோகினியின் அங்க அழகுகளைச் சுவையோடு பேசிக் கொண்டிருக்கும் சக வீரர்களின் குரல்கள் கேட்டன. அனைவரும் கொல்லப்படுவதாக எப்படி நினைத்தோம் என்று ஆச்சரியமாக இருந்தது. உடனே அந்தக் கனவின் காட்சி மீண்டும் விரிந்தது. மெல்ல எழுந்து கூடாரத்தைவிட்டு வெளியே வந்தான். வெயில் ஏறிய வானம் கண்களைக் கூசவைத்தது. அருகில் இரைச்சலிடும் அலைகளையே வெகுநேரம் பார்த்தான். அவனுக்குத் தன் மனத்தில் கவிந்திருக்கும் குழப்பம் பற்றிக் கவலை உண்டானது. "அபசகுனம்" என்று முணுமுணுத்துக் கொண்டான். எழுந்து கைகளை வானை நோக்கி உதறினான். அவசரமாகப் பணியாள் ஓடிவந்து அருகில் நின்றான். "துணைக்கு வரவேண்டுமா அரசே?" என்றான். ராகுவின் பார்வை அவன் தோள்களில் பட்டு மீண்டது. அவன் காட்டும் பணிவு நடிப்பா உண்மையா புரிந்துகொள்ள முயற்சி செய்து தோற்றான். புன்னகையோடு தலையசைத்தபடி தொடர்ந்து தனியாக நடக்கத் தொடங்கினான்.

கரை நெருங்கியது. கடலின் பெரிய பெரிய அலைகள் கரையை விழுங்க போட்டி போட்டுக் கொண்டு ஒவ்வொரு அணியாய் வருவது போல இருந்தது. முதலில் வருவது ரதப்படை. அப்புறம் வருவது யானைப்படை. அதற்கப்புறம் குதிரைப்படை. தொடர்ந்து வருவது காலாட்படை. அப்படி எண்ணியதைத் தொடர்ந்து ஒவ்வொரு அலை எழுந்து

வரும்போதும் அதற்குரிய காலடி ஓசையைப் பொருத்திப் பார்த்தான். என்ன ஆச்சரியம். அலையின் ஓசையும் படைகளின் ஓசையும் சரியாகப் பொருந்தின. எதனாலும் வெல்லப்பட முடியாத ஒன்றாக நீண்டிருந்தது கரை. கரைநெடுக வானின் வடுபோல அலையின் சுவடுகள். அங்கங்கே பாறைகள் காணப்பட்டன. பாறைகளுடன் ஆக்ரோஷத்துடன் மோதின அலைகள். அப்பாறைகளின் ஆகிருதியைக் குலைத்து நசுக்கிக் கூழாக்கிவிடத் துடிப்பதைப் போலிருந்தன அலைகள். அலைகளுக்கும் பாறைகளுக்கும் காலகாலமாக அந்த யுத்தம் தொடரந்து நடப்பது போலக் காணப்பட்டது.

கரையையொட்டி ஒரு சிறு குன்றைக் கண்டான். குன்று முழுக்கக் கரிய பாறைக் கூட்டங்கள் யானைகளைப் போலப் பரவிக்கிடந்தன. அங்கங்கே செடிகள் நின்றிருந்தன. அஸ்தமனப்பொழுதில் அவற்றின் இலைகள் வாடிச் சுருங்கிக் கவிழ்ந்திருந்தன. செடிகளின் உடல்முழுதும் ஒருவித ·சோர்வு தென்பட்டது. அவை விடும் பெ முச்சு போல அவற்றின் வழியாக வீசிய காற்று இருந்தது. அங்கங்கே கிளைகளில் சிறுசிறு குருவிகள் அமர்ந்திருந்தன. காலடியோசையில் அதிர்ந் து அவை கிறீச்சிட்டு மேலெழும்பித் தாவின. அவற்றின் தவிப்பை உணர்ந்தது போல அந்தத் திசையிலிருந்து விலகி இன்னொரு கிளைத்திசையில் நடந்தான் ராகு. போதுமான தொலைவு நடந்த பிறகும் கூட குருவிகளின் கிறீச்சிடல் நிற்காதது அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. மொட்டைப் பாறைகளுக்கும் கிளைகளுக்கும் இடையே அவை தவித்து அலைந்தன. அப்போதுதான் பாறையின் இடுக்கில் ஒரு பாம்பும் கீரியும் ஆக்ரோஷமாகச் சண்டையிடுவதைக் காண நேர்ந்தது. இரண்டு பிராணிகளின் கண்களிலும் கொலைவெறி மின்னியது. அவற்றின் வெறிக் பச்சலைக் கேட்டு குருவிகள் மிரண்டன. ஒன்றை ஒன்று கடித்துக் குதறத் துடிக்கும் ஆவேசம் கொண்ட அப்பிராணிகளைப் பார்க்கும்போது ஒரே சமயம் வெறுப்பும் சிரிப்பும் ஏற்பட்டது. உடனடியாக அந்தச் சிறுயுத்தம் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் ஆண்டாண்டுகளாகத் தொடர்ந்து நடந்துவரும் யுத்தத்தை நினைவூட்டியது. உடனடியாக அந்த இடத்திலிருந்து திரும்பிவிட வேண்டும் என்று அவன் மனம் விரும்பியது. எனினும் அக்காட்சியிலிருந்து அவனால் தன் கண்களை மீட்க முடியவில்லை. கீரி தன் தலையை அப்படியும் இப்படியும் திருப்பித் தருணம் பார்த்து வசமான இடத்தில் பாம்பைக் கவ்வ முயற்சி செய்தது. உடலை வளைத்தும் நெளித்தும் நீட்டியும் பாம்பு அதன் பிடியில் அகப்பட்டுவிடாமல் தப்பித்துக் கொண்டிருந்தது. இருப்பினும் அதன் உடலில் அங்கங்கே கீறலின் கடிகள். ரத்தக் கசிவுகள். அக்காட்சி அவனுக்குள் ஓர் அமைதியின்மையை எழுப்பியது. சலித்து வந்த வழியே திரும்பினான். சூரியன் வேகவேகமாக மேற்கு நோக்கிச் சரிந்தபடி இருந்தது. பகல் வடிந்த வானம் எடுக்க மறந்த துணிபோல தனிமையில் கிடந்தது. அலைகளின் ஆக்ரோஷம் சற்றும் தணியாதிருந்தது.

ஏதோ ஒரு திசையிலிருந்து குளிர்ந்த காற்று வீசியது. மார்பை அது தீண்டியதும் உடலில் உருவான சிலிர்ப்பை உணர்ந்தான் ராகு. அவன் மனம் அதில் பெரும் நிம்மதியைக்

கண்டது. அந்தச் சிறுநேர நிம்மதியில் அவன் மனப்பாரம் பெருமளிவில் குறைந்தது. கடந்த இரவிலிருந்து அவன் மனத்தைக் குடைந்து கொண்டிருந்த குழப்பங்களிலிருந்து கணநேரத்துக்கு விடுதலை அடைந்தான். அவன் அசுரபுத்திரன். வீரன். ஆக்ரோஷத்துடன் எதிரிகளுடன் மோதி வீழ்த்துபவன். இந்த அகிலத்தில் தேவர்களுக்கு இணையாகத் தம் குலம் வாழ்வதற்கான ஜீவித நியாயத்தை நிறுவிக் காட்டுவதில் வேகமும் ஆற்றலும் கொண்டாவன். அப்படிச் சொல்லிச் சொல்லித்தான் காலம் காலமாக வளர்க்கப்பட்டிருந்தான் அவன். அக்கடமையிலிருந்து அவனால் ஒருபோதும் மீள முடியாது. மந்தர மலையை மத்தாக்கி வாசுகிப் பாம்பைத் தேவர்கள் ஒரு புறமும் அசுரர்கள் ஒருபுறமுமாகப் பிடித்துக் கடைந்து கொண்டிருந்த தருணத்தில் கூட அந்த எண்ணம் அவன் மனத்தின் ஆழத்தில் மிதந்தபடியே இருந்தது.
காலம் முழுக்கத் தம் குலத்தின் ஜீவித நியாயங்களை மறுத்துவந்த தேவர்களின் ஒற்றுமை வார்த்தைகள் உள்ளார்ந்த நட்பா, நாடகமா என்ற சந்தேகம் கிளைவிரித்தபடி இருந்தது. தன்வந்திரியிடமிருந்து அமுத கலசத்தை மகாபலியும் மற்றவர்களும் பிடுங்கிக் கொண்ட சமயத்தில்தான் அச்சந்தேகம் எல்லார் மனங்களிலும் தங்கியிருந்ததை அவனால் உணர முடிந்தது. பல ஜென்மங்களாகத் தொடரும் மோதல் மறுபடியும் தொடங்கிவிடும் போல இருந்த நிலையில்தான் அந்த இளமபெண் வெளிப்பட்டாள். தன் பெயர் மோகினி என்று சொல்லிக் கொண்டாள். அவள் யார், எங்கிருந்து வந்தாள், என்கிற விவரம் யாருக்கும் தெரியவில்லை. ஆனால் அங்குலம் கூட நகர விடாமல் ஆளைக்கட்டி நிறுத்திவிட்டது அந்தக் கவர்ச்சியான புன்னகை. இனிமையான குரல். ஒயிலான நடை. "அழகியே.. நீ பொது ஆள். உன்னைப் பார்த்தால் மனத்தில் நம்பிக்கை துளிர்க்கிறது. இந்த அமுதத்தைச் சமமாக எங்களுக்குப் பிரித்தளிப்பாயா?" என்று அசுரர்களே அமுதக் கலசத்தை அவளிடம் நீட்டினார்கள். மற்ற சமயங்களில் செய்வது போல மகாபலியோ நமுசோ பிற அசுரர்களைக் கூட்டிச் செய்ய வேண்டியதைக் குறித்து ஆலோசனை நடத்தவில்லை. கருத்துகள் பரிமாறப்படவில்லை. ஒரே நொடியில் முடிவெடுத்து கலசத்தை அந்தப் பெண்ணிடம் ஒப்படைத்துவிட்டாள் மகாபலி. அந்தத் தருணத்தில் "ஐயோ..சக்கரவர்த்தி, என்ன காரியம் செய்கிறீர்கள்" என்று பதறி ஓடிப் பிடுங்கிக் கொள்ள முடியவில்லை. "அசுரர்களே அந்த மோகினியை நம்பாதீர்கள். இதில் ஏதோ சதி இருப்பது போலத் தெரிகிறது" என்று அவளைத் தடுக்க முடியவில்லை. "யாரென்றே தெரியாத பெண்ணை நம்பினால் மோசம் போய்விடுவோம்" என்று கத்தி ஆர்ப்பாட்டம் செய்ய இயலவில்லை. எல்லாம் கூடிவருகிற வேளையில் என்ன செயல் இது என்று மகாபலியின் தோளை உலுக்கி நாலு வார்த்தைகள் நாக்கைப் பிடுங்கிக் கொள்கிற மாதிரி கேட்டிருந்தாலாவது ஆசுவாசம் கிடைத்திருக்கும் . அவனைத் தவிர அசுர கூட்டத்தின் கண்கள் அந்தப் பெண்ணின் மீதிருந்தது. தொடை வரை நீண்ட அவள் கூந்தல் ஆசையைத் துண்டும் அவள் கண்கள். தங்கத் தகடென மின்னும் கன்னம். கவர்ச்சியான தோள் வளைவுகள். செழிப்பான மார்பு. குழைவான இடை. அவர்கள் பார்வைகள் அவள் மீது அங்கம் அங்கமாக மொய்க்கத் தொடங்கியதைப் பார்க்க அருவருப்பாக இருந்தது.

அந்தத் தருணத்தில் அவர்கள் அனைவரின் மீதும் கடுமையான ஆத்திரமும் வெறுப்பும் பொங்கின. "என்ன குலம் இது? ஏமாந்து அழிவதே இதன் தலையெழுத்தா?ஏ என்று கசப்புடன் நொந்து கொண்டான். அவர்களுடைய முரட்டு மோகம் முதல் முறையாக அவனுடைய கோபத்தைத் து¡ண்டியது. அந்தப் பெண்களின் முன் அவர்கள் நெளிவதையும் குழைவதையும் பல்லிளித்துக் கொண்டு நான் முந்தி நீ முந்தி என்று பேச முற்பட்டதையும் காண எரிச்சல் பொங்கியது. ஏஆண் சிங்கங்களே, என் மீது நீங்கள் வைத்துள்ள நம்பிக்கைக்கு நன்றி. அமர நிலை எய்ய வைக்கும் அமுதத்தை உண்ணும் முன்பு நாளை ஒரு நாள் உண்ணாநோன்பிருப்போம். நாளை மறுநாள் அதிகாலையில் பங்கிட்டுக் கொள்வோம்" அவளது இனிய குரலுக்கும் குழைவான சொற்களுக்கும் அசுரர்கள் கூட்டம் அடிபணிந்துவிட்டது.

மகாபலியை நெருங்கிச் சந்தேகத்தை முன்வைக்கவே இயலவில்லை. மோகினியின் விழிகளிலிருந்து புறப்பட்ட கணைகளை உடல்முழுக்கச் சுமந்து கொண்டிருப்பது போன்ற கனவில் மிதந்து கொண்டிருந்தார் அவர். சக்கரவர்த்தியைவிட ஒருபடி மேலாக மற்றவர்கள் உருகிக் கிடந்தார்கள். இதையெல்லாம் கண்ணால் பார்த்து சங்கடப்படவேண்டியதாகிவிட்டதே என்று குமைவதைத் தவிர வேறு வழியில்லை. தேவர் குலத்தில் யுத்தத்தை நேருக்குநேர் எதிர்த்துக் கொன்றழித்தால்தான் தன் மனம் ஆறுமோ என்னமோ என்று தோன்றியது. பெரும்கூட்டமாக வந்து , வினயத்துடன் வணங்கி, ஏநாமெல்லாம் அண்ணன் தம்பிகள் போலத்தானே, நாம் ஒன்று கூடி செய்கிற காரியத்தில் வெற்றி கிடைக்காமல் போகுமோஏ என்று இனிப்பான வார்த்தைகளை உதிர்த்த போது அவன் மனத்தில் முதலில் எழுந்தது இந்தச் சந்தேகம்தான். அந்தச் சம்தேகக் கோட்டின் ஈரம் இன்னும் அழியாமல் இருப்பதாகத் தோன்றியது. அதற்கப்புறம் ஓர் இரவு கூட நிம்மதியாய்த் து¡ங்க இயலவில்லை. சாவு குறிக்கப்பட்டுவிட்ட கைதியாக மனம் தத்தளித்தபடி இருந்தது. எல்லாம் முடிந்து அமுத கலசம் கையில் கிடைத்த தருணத்தில் அந்தக் கள்ளி வந்து சேர்ந்தாள்.

எப்படியெல்லாம் தளுக்கினாள் அந்தக் கள்ளி. உதடுகளை அவள் சுழித்த சுழிப்பு. கண்களில் அவள் தேக்கியிருந்த கவர்ச்சி. வார்த்தைக்கு வார்த்தை புன்சிரிப்புதான். மெலிந்த கைகளை நீட்டித் தோள்களில் தீண்டினாள். அந்த இன்பத்தில் சிலிர்த்தார்கள் அசுரர்கள். பெண்ணின் மென்மையை உணர்ந்தறியாத அவர்கள் உடலும் மனமும் கிளர்ச்சியுற்றுப் பைத்தியம் பிடித்ததைப் போல மாறிவிட்டார்கள். அவளை அடையும் உத்வேகத்தில் அவள் இடும் கட்டளைகளையோ விதிமுறைகளையோ காதில் வாங்கிக் கொள்ளவே இல்லை. அவர்கள் எதிர்பார்த்தெல்லாம் அதிக நேரம் அவளுடன் செலவழிக்க வேண்டும் என்பதுதான். அவள் தோள் தொட்டுப் பேச வேண்டும். கன்னத்தை ஒருமுறை தீண்டிப் பார்க்க வேண்டும். அவளுடன் கை கோர்த்துக் கொண்டு நடக்க வேண்டும். அவளைத் தோளில் சுமந்து கொள்ள வேண்டும். பஞ்சு போன்ற அவள் பாதங்களில் முத்தம் பதிக்க வேண்டும். மழையில் அவளுடன் நனைய வேண்டும்.

இவைதாம் அவர்கள் கனவுகளாக இருந்தன. இவையெல்லாம் நடக்க வேண்டும் என்றுகூட இல்லை. இக்கனவுகளை அனுமதிக்கிற விதமாக அவள் பழகியதே அவர்களுக்கு அமுதம் குடித்ததைப் போல இருந்தது. "யோசித்துப் பாருங்கள் ஒப்புக் கொள்ளும் முன்பு" என்று அவள் சொன்னது கூட செவிடன் காதில் ஊதிய சங்காகிவிட்டது.

எதுவுமே பிடிக்கவில்லை. அமுதமும் வேண்டாம், விஷமும் வெண்டாம் என்று அலுப்பாகிவிட்டது. திரும்பவும் தன் இடம் நோக்கி சென்றுவிடலாம் என்று தோன்றியது. ஏமற்றவர்கள் அனைவருமே வந்தால் வரட்டும் , இருந்து அந்த மோகினியை நம்பி எக்கேடாவது கெட்டுப் போகட்டும்ஏ என விட்டுச் செல்ல விழைந்தது மனம். மறுகணமே "இது என்ன சுயநலம், அழிவதென்றால் அனைவருமே சேர்ந்து அழிவோம், வாழ்வென்றாலும் அனைவருமே சேர்ந்து வாழ்வோம்" என்று எண்ணம் எழுந்தது. ஒரு கண நேரத்தில் உதித்த சுயநலச் சிந்தனையை எண்ணி வெட்கம் ஏற்பட்டது.

கரையோரமாகவே வெகு து¡ரம் வந்ததை உணர்ந்தான் ராகு. திரும்பிப் பார்த்தான். தம் கூடாரங்கள் தொலைவில் புள்ளியாய்த் தெரிந்தன. திரும்பிக் கடலைப் பார்த்தான். கடலின் விளிம்பில் செம்மை அடர்த்தியாய்ப் படர்ந்திருந்தது. சூரியன் தடுக்கி விழும் குழந்தை போல மேகத்தின் விளிம்புக்கு வந்திருந்தான். திடுமெனத் தன் பகல்கனவை அவன் நினைத்துக் கொண்டான். அது மரணதேவதையின் முகத்தையும் அம்முகம் மோகினியின் முகத்தையும் கொண்டு வந்து நிறுத்தியது. ராகுவின் உடல் பதற்றத்தில் நடுங்கியது.

-இரண்டு-

கடற்காற்று உள்ளே நுழையாவண்ணம் கூடாரம் இறுக்கமாகக் கட்டப்பட்டிருந்ததெனினும் குளிரடித்தது. குளிர் படிந்து படிந்து மஞ்சத்தில் ஓர் ஈரத்தன்மை ஏறி விட்டிருந்தது. கதகதப்புக்காக கொஞ்சமாக மது அருந்தினால் நன்றாக இருக்கும் என்று தோன்றியது. உண்ணாநோன்பின் நாளில் மதுவை நினைப்பது குற்ற உணர்வைத் தந்தது. கவனத்தை உடனடியாக வேறுபக்கம் திருப்பினான் ராகு. அடுத்தடுத்த கூடாரங்களிலிருந்து பேச்சுக் குரல்கள் மிதந்து வந்தன. கடந்த இரவு முதல் அவர்கள் பேசிக் கொண்டே இருப்பதைக் கண்டு ஆச்சரியமாக இருந்தது. அக்குரல்கள் அனைத்தையும் இணைத்து ஒர் ஓவியத்தைத் தீட்டினால் அந்த நங்கையைத் தீட்டிவிடுவது சுலபம். ஒலி அலைகளை இணைத்து ஓர் ஓவியத்தைக் காற்றுவெளியில் தீட்டித்தான் அவர்கள் பேசிக் கொண்டே இருக்கிறார்களோ என்று தோன்றியது. நாலைந்து கண நேர சந்திப்பில் அந்த நங்கையைப் பற்றி இந்த அளவு பேச முடியுமா என்று ஆச்சரியப்பட்டான். மஞ்சத்தில் அமர்ந்தவனீன் காதில் அக்குரல்கள் வந்து விழுந்தபடி இருந்தன. மனம் ஏதோ ஒரு குழப்பத்தில் தத்தளித்துக் கொண்டிருந்ததால் அந்தக் குரல்கள், அசுரர்கள், அந்த இரவு, அந்த நங்கை எல்லாவற்றின் மீதும் என்னவென்று

சொல்லவியலாத கடுகடுப்பும் எரிச்சலும் பொங்கின. தன் மன அமைதியைக் குலைத்துவிட்ட அந்த நங்கையை மனசாரச் சபித்தான்.

கூடாரத்தின் இணைப்பின் இடைவெளியில் தலையை நுழைத்து யாரோ பார்ப்பது போல இருந்தது. அயல் கண்கள் தன்னை மொய்பப்தை அவன் சட்டென உணர்ந்து அகாண்டான். அந்த முகம் யாருடையது என்று உள்வாங்கிக் கொள்வதற்குள் அது மறைந்துவிட்டது. முதலில் வேலைக்காரனாக இருக்குமோ என்று தோன்றினாலும் மறுகணமே அவனுக்கு அந்த அளவு தைரியமிருக்காது என்கிற நம்பிக்கையில் அந்த எண்ணத்தைத் தள்ளினான். மீசை அமைப்பைக் கொண்டு யோசித்துப் பார்த்தால் தளபதி காலநாபனோ அல்லது அயக்ரீவனோவாகத்தான் இருக்க வேண்டும் என்று தோன்றியது. அவர்கள்தாம் என்று உறுதியாக மனம் நம்பத் தொடங்கியதும் எரிச்சல் ஏற்பட்டது. உளவறியும் அளவுக்குத் தன் மீது இவர்களுக்கு என்னவிதமான சந்தேகம் தோன்றியது என்றுகோபம் வந்தது. உடனே இந்த விஷயத்தைச் சக்கரவர்த்தியின் கவனத்துக்குக் கொண்டு செல்ல வேண்டும் என்று விழைந்தது அவன் மனம் . ஒரு கணம்தான். மறுகணமே இந்த உளவு வேளை அவர் வேலையாகவே இருந்துவிட்டால் என்ன செய்வது என்றொரு மாற்று எண்ணம் எழுந்ததும் அவன் வேகம் வடிந்து போனது. அவர்கள் அனைவரையும் தவிர்த்துவிட்டு எங்காவது போய் விட வேண்டும் என்று யோசித்தான். வெளியே கடுங்குளிர். இருட்டு. கடற்கரை தனிமையில் விரிந்திருந்தது. எங்கும் போகப் பிடிக்கவில்லை. ஏதோ ஒருவித அச்சம்தான் அவன் மனத்தின் அடியில் தேங்கியிருந்தது. அந்த அச்சத்தை உணர்ந்துவிடாதபடி எரிச்சலிலலும் ஆத்திரத்திலும் மனம் மாறிமாறித் தஞ்சமடைந்தது. எல்லாருக்காகவும் யோசிக்கிற பொறுப்பை நீ எடுத்துக் கொள்ள வேண்டாம் என்று சொன்ன சம்பரனின் துடுக்கான வார்த்தைகள் அவனை அவமானப்படுத்தும் நோக்கத்துடன் சொல்லப்பட்டதாகத் தோன்றியது. அவர்கள் எல்லாரும் உயிர் துறந்து தான்மட்டும் தப்பித்து உயிர்த்திருக்கிற நிலை ஏற்பட்டால் உயிர்க்காற்று பிரியும் தருணத்திலாவது தான் எடுத்துரைத்த உண்மையை உணர்ந்து அவர்கள் வருத்தம் கொள்வார்களோ என்றொரு கேள்வி எழுந்தது. அதே சமயத்தில் அப்படி ஓர் எண்ணம் எழ இடம் தந்த மனத்தை நொந்து கொண்டான். எக்காரணத்தைக் கொண்டும் அவர்கள் சாகக் கூடாது. அவர்கள் பெரியவர்கள். அனுபவம் மிக்கவர்கள். வாழ்வின் மேடுபள்ளங்களில் ஆயிரம் அடிபட்டவர்ள். அவர்கள் அனைவரும் உயிர்த்திருக்கத் தன் உயிர் மட்டும் பிரிய, அப்பிரிவின் சமயத்தில் உண்மையின் வெளிச்சம் அவர்களின் கண்களில் படுமானால் அதுதான் உயர்ந்ததாக இருக்கும் என்று நினைத்தான். அவர்களுக்காகத் தானாக முன்வந்து உயிர்துறக்கும் வீரனாகத் தன்னைக் கற்பனை செய்து பார்த்தான். அக்கற்பனை மரணம் காவிய நயம் கொணடதாகவும் மனத்துக்கு இதமாகவும் இருந்தது.

அந்த நங்கையை நினைத்துப் பார்த்தான் ராகு. அவள் குழைந்து பேசியதில் ஏதோ செயற்கைத்தனத்தை மனம் உணர்ந்ததால் அக்கணத்தில் அவள் உருவத்தைச் சரியாகப்

பதித்துக் கொள்ளவில்லை அவன். அவள் உதடுகள் மட்டுமே சட்டென்று நினைவுக்கு வந்தன. பூவின் இதழை நினைவூட்டும் செழிப்பான உதடுகளில் ஈரம் மின்னியது. மூக்குக்குக் கீழே சின்ன மொக்குப் போன்ற குழியைத் தொடர்ந்து பழச்சுளையொன்றைக் கிள்ளி ஒட்டியது போன்ற பளபளப்பான உதடுகள். அவை அச்சத்தையும் ஆசையையும் து¡ண்டுவதாக இருந்தன. நொடிக்கொரு முறை அவ்வுதடுகள் பிரிவதும் கூடுவதும் சுழிப்பதும் உள்ளொடுங்குவதுமாக மாறிய கோலத்தைப் பார்த்தன. அப்போது அவளைப் பார்க்கவே பிடிக்கவில்லை. அந்த இரவில் அந்த உதடுகளின் கோலம் நினைவிலெழுந்ததும் இதயம் பதறுவதை உணர்ந்தான். உதடுகள், பிறகு உதட்டுக்குத் தகுந்த கன்னம். கன்னத்துக்குத் தகுந்த முகம். முகத்துக்கு தகுந்த உடல் என ஒவ்வொன்றாக அடுத்தடுத்து அந்த மனச்சித்திரத்தை எழுதிக் கொண்டே போனான். அவன் உடலில் பரபரப்பு கூடிக் கொண்டே போனது. முழு உருவமும் மனசிலெழுந்த போது அவன் உத்வேகம் பல மடங்காகப் பெருகியது. அதே நங்கைதான் அவ்வுருவம். புனைவு அல்ல. துல்லியமாக அதே நங்கைதான். அவள் உடலின் ஒவ்வொரு அசைவையும் மனசின் இன்னொரு கண் தன் கட்டளையை எதிர்பாரக் காமலேயே பதித்து வைத்திருந்ததை எண்ணி ஆச்சரியமாக இருந்தது. வெறும் உதடுகளை மட்டுமே தான் பார்த்ததாக நினைத்தது எவ்வளவு நடிப்பு என்று நினைத்தபோது கூச்சமாக இருந்தது. அருகில் சகோதர அசுரர்களின் பாடல் ஒலி கேட்டது. பெண்ணைப் பற்றிய பாடல்தான். அந்த வரிகளின் தாளத்துக்குத் தகுந்தபடி யாரோ யாழை இசைத்துக் கொண்டிருந்தார்கள்.

அந்த இளநங்கை அருகில்தான் இருக்கிறாளாம். கண்களை அசைக்கிறாளாம். ஒவ்வொரு அசைவும் ஒரு கவிதையாம். காதல் களிப்பேறிக் கட்டித் தழுவ கைகளை நீட்டும்போது அவள் மறைந்துவிடுகிறாளாம். கண்டதெல்லாம் கனவா, நனவா புரியாமல் குழப்பம் ஏற்படுகிறதாம். அப்பாடலின் வரிகள் நெகிழ்ந்து நெகிழ்ந்து முத்தாய்ப்பு கொண்டன. உடனே யாழ் அதிர இன்னெருவன் குரலெடுத்துப் பாடத் தொடங்கிவிட்டான். முழுநிலவு போன்று அவள் முகம் ஒளிர எதிரே நிற்கிறாளாம். அந்த நங்கை. அவள் அமுத வாய் திறந்து ஏதோ ஒரு சொல் பிறக்கிறது. அச்சொல் ஒளியாகவும் இசையாகவும் மாறுகிறது. ஒளிபட்டு உலகம் மிளிர்கிறது. இசை காற்றாக மாறி எங்கும் அலையலையாய்ப் பரவி நிறைகிறது. அந்த ஒளியும் இசையும் கூடி வானை நோக்கி நகர்கின்றன. மேகத்தில் அமர்ந்து இளைப்பாறுகின்றன. அங்கிருந்து அவை உதிரும்போது அமுத தாரைகளாகின்றன. அம்மழையின் தீண்டுதலில் உடல் ஆனந்தம் ஆனந்தம் என்று பாடுகிறது. இப்படிச் சென்று முடிந்தது இன்னொரு பாடல். முடிவேயற்று அவர்கள் பாடல்களை இசைத்தபடியே இருந்தார்கள்.

விளக்கில் எண்ணெய் வற்றி அணைந்து விட்டது. படபடவென்று அத்திரி துடிக்கிற தருணத்தில்தான் அவன் அதைக் கவனித்தான். அடுத்த கணமே அது அணைந்துபோனது. செம்புள்ளியாய் அத்திரியின் நுனி சிறிது நேரம் ஒளிர்ந்து அடங்கியது. கூடாரம்

முழுக்கப் புகையின் மணம் சுழன்று சுழன்று வந்தது. பணியாளை அழைக்கலாமா என்ற யோசனையை உடனடியாகத் தவிர்த்துவிட்டு இருட்டையே வெறித்தபடி இருந்தான். சில கணங்களுக்குப் பிறகு ஒவ்வொன்றும் தெளிவாகத் தெரிந்தது. மஞ்சம்.
விளக்கு. குடம். குடுவை. துணிகள். காலணி.

மறுபடியும் பாடலும் இசையும் ஒலிக்கத் தொடங்கிய போது மீட்டப்பட்ட யாழ் நரம்பு போல மனம் துடித்தது. உடல் முழுக்க அந்த இசை நிரம்பித் தளம்புவது போல இருந்தது. ரத்தத்தில் ஒருவித சூடு பரவியது. மஞ்சத்தின் விளிம்பில் துகில் அலைய,
கூந்தலில் சூட்டிய பூ மணக்க ஒரு இளம்பெண்¢ன் உருவம் தெரிந்தது. அந்த உருவம் மெல்ல மெல்ல மோகினியாக மாறியபோது துணுக்குற்றான். தன் எண்ணம் நகரும் திசையை எண்ணிக் குற்ற உணர்வு கொண்டான். யார் அவளைப் பற்றி நினைத்துக் கொண் ருந்தாலும் தான் மட்டும் அவளை நினைத்துக் கூடப் பாரக் கக் கூடாது என்று நினைத்தான். பிறகு அமைதி ஏற்பட்டது.

கூடாரத்தைத் தாண்டி யாராரோ நடந்து செல்லும் காலடி ஓசை கேட்டது. அவர்களின் குரல்கள் தெளிவாகக் கேட்டன. திரும்பிப் பார்க்க நினைத்தான். எனினும்
எழுந்திருக்கவில்லை. மனத்துக்கும் உடலுக்குமான கட்டளைத் தொடர் அறுபட்டது போல இருந்தது. கண்களைத் திருப்பக் கூட முடியவில்லை. அசைவில்லாமல் படுத்திருந்தான். மனம் இறுக்கமாக இருந்தது. கண்களின் முன் மறுபடியும் அவள் முகம் வந்து நின்றது. ஆனந்தம் மின்னிக் கொண்டிருந்தது அவள் கண்களில். அவள் தன் மார்போடு
அமுத கலசத்தை இறுக்கி அணைத்தபடி இருந்தாள். அவள் தோள்கள் வெயில்பட்டு மினுமினுத்தன. கூந்தல் காற்றில் அசைந்தது. கன்னத்தில் செம்மை ஏறியது. நறுக்கிய பவழ உதடுகளில் ஈரம் ஒளிர்ந்தது. கலசத்தின் அமுதத்தையெலக்லாம் தனித்தே குடித்துவிட்டவள் போல. அவன் மனம் அதிர்ந்தது. பறிகொடுத்த இழப்புணர்வில் வேகம் ஏறியது. "அடி கள்ளி, வேஷக்காரியே நான் நினைத்தது நடந்துவிட்டதே. எங்களை என்னவென்ற நினைத்தாய்? ஏமாந்தவரகள் என்றா? அறிவற்ற பேதைகள் என்றா? நீ அருந்திவிட்டதைக் கண்டு தலைவிதியை நொந்தவண்ணம் வெறும்கையோடு திரும்பிச் சென்று விடுவோம் என்று எண்ணிக் கொண்டாயா?" ஓடிச்சென்று அவளை இழுத்து அறைந்து உலுக்குவது போலக் கற்பனை செய்தான். வெறுப்பாக இருந்தது.
சந்தர்ப்பங்கள் சார்ந்த சம்பவங்களுக்குக் கண்ணும் காதும் வைத்து ஊதிப் பெருக்கி நிம்மதியை இழந்து தவிக்கிறோமோ என்று ஆற்றாமையால் தலையில் அடித்துக் கொண்டான்.

"ராகு"
கனவில் கேட்கும் குரலோ என்று ஒரு கணம் பொறுமையாய் இருந்தான்.
"ராகு"

மறுகணம் சரியாகக் காதில் விழுந்தது அக்குரல். உடனே மஞ்சத்தைவிட்டு எழுந்தான். பரபரப்போடு கூடாரத்தின் வாசலைப் பிரித்துத் திறந்தான். மகாபலி. சக்கரவர்த்தி

"இருளில் என்ன செய்கிறாய் ராகு?"

"து¡க்கம் வரவில்லை அரசே. படுத்துப் புரண்டு கொண்டிருந்தேன்" அவன் தலைவணங்கியபடி பதில் சொன்னான். சக்கிரவர்த்தி அவனை நெருங்கித் தோளில் தொட்டார். அவர் உள்ளங்கையின் வடுக்கள் உறுத்தின.

ஏகளியாட்டத்தில் ஏன் எங்களோடு வந்து கலந்து கொள்ளவில்லை?"

ராகு பதில் சொல்லவில்லை.

"வரவர நீ அசுரனா, தேவனா என்றே தெரியவில்லை. நம் ஆர்ப்பாட்டங்களிலிருந்து தள்ளித் தள்ளிப் போகிறாயே? ஏளனத்துக்குரியவர்களாக எங்களைப் பற்றி நினைக்கிறாய் போலத் தெரிகிறது"

"இல்லை அரசே, இல்லை" அவசரமாக அவன் மறுத்துத் தலையசைத்தான். கண்களின் ஓரம் அடிபட்ட வேதனை தெரிந்தது.

"வயதில் சிறியவன் நீ. பேசிச் சிரிக்க வேண்டிய வயது. ஆனால் நீ தவித்து ஒதுங்கியிருப்பதைப் பார்க்கும்போது வேதனை தாள முடியவில்லை."

மகாபலியின் வார்த்தைகளைக் கேட்டு ராகுவின் தொண்டை அடைத்தது. விழிகளில் கண்ணீர் தளும்பியது.

"வருந்தாதே ராகு. ஒரு மோகினி அல்ல, இன்னும் நு¡று மோகினிகள் வந்தாலும் நம் அசுர குலத்தை ஏமாற்றிவிட முடியாது. உன் மேல் ஆணை. அதற்கு ஒருபோதும் நான் இடம் தரமாட்டேன்."

கணீரென்ற குரலில் அவர் வார்த்தைகள் ஆணி அடித்தது போல ராகுவின் நெஞ்சில் இறங்கியது. அதில் இனம்புரியாத கனிவு கலந்திருப்பதை உணர்ந்தான். அக்கனிவு அவனை உருக்கியது. தன் மனத்தில் இருப்பதை இவர் எப்படிப் படித்தார் என்று வியப்பில் ஆழ்ந்தான்.

"போ ராகு.. போய் நிம்மதியாக உறங்கு. காலையில் உதயவேளைக்கு முன்னர் தயாராக வேண்டும்"

மகாபலி கூடாரத்தைக் கடந்து போனார். அவருடன் மற்ற தளபதிகளும் சென்றார்கள்.

-மூன்று-

குளக்கரையில் ஏராளமான மரங்களும் புதர்களும் அடர்ந்திருந்தன. விழிததெழுந்த பறவைகள் சத்தமிட்டபடி மேலே பறந்தன. குளித்து முடித்த அசுரர்கள் ஈர உடலுடன் கூடாரத்துக்குத் திரும்பிக் கொண்டிருந்தார்கள். இன்னும் விடியாத சாலையில் ஒற்றையடிப்பாதை ஒரு பாம்பு போல நீண்டிருந்தது. அதைப் பார்த்ததும் வாசுகிப் பாம்பின் ஞாபகம் வந்தது ராகுவுக்கு. உடனே அடுக்கடுக்காகச் சம்பவங்கள் கிளைவிடத் தொடங்கின. அவளைத் தொடர்ந்து அந்த இளம்பெண்ணின் ஞாபகம். ராகு தலையைப் பிடித்துக்கொண்டான். யோசனைகளை ஒரு மூட்டையாய்க் கட்டி எங்காவது கடலில் து¡க்கிப் போட்டுத் தொலைந்து விடுகிற வித்தை தெரிந்திருந்தால் எவ்வளவோ நன்றாக இருந்திருக்கும் என்று தோன்றியது. குளத்தின் மேல் பார்வையைப் படரவிட்டான். நடுக் குளத்தில் அசுரர்கள் நீச்சல் அடித்துக் கொண்டிருந்தார்கள். இன்னும் சற்றே தள்ளி இருக்கிற தாமரைப்பூவை யார் முதலில் சென்று எடுத்துவருவது என்ற போட்டி வைத்துக் கொண்டு இருவர் வேகமாக அதை நோக்கி நீந்தினார்கள். பறித்துவரும் அம்மலரை மோகினிக்குத் தர இருவர் மனத்திலும் ஆசை படர்ந்தது. இன்னும் சிலர் குளத்தின் மறுகரையைத் தொட்டுத் திரும்பப் பந்தயம் வைத்துக் கொண்டு தண்ணீருக்குள் பாய்ந்தார்கள். ஒருவன் குளத்துக்குள் மூழ்கி குளத்தின் ஆழத்திலிருந்து மண்ணை எடுத்துவந்து உள்ளங்கையில் வைத்துக் காட்டினான். குளம் கலங்கத் தொடங்கியது,. சளக்சளக்கென்ற ஓசை குளம் முழுக்கக் கேட்டபடி இருந்தது. யாரோ ஒருவன் இரவில் பாடிய பாடலொன்றின் வரியை ராகத்துடன் இழுத்தான் உடனே அவர்களுக்கு உற்சாகம் கிளம்பிவிட்டது. அனைவரும் ஒரே குரலில் அவ்வரியைப் பாடத் தொடங்கி விட்டார்கள். இன்னும் இருள் பிரியாத சூழலில் அக்குரல்கள் ராகுவுக்கு ஒருவிதமான சங்கட உணர்வைக் கொடுத்தது.

குளத்தின் கரையிலேயே நின்று குளித்துவிட்டுக் கூடாரத்துக்குத் திரும்பாமல் கரையோரமாக இருந்த பாறை ஒன்றின் மீது உட்கார்ந்து கொண்டான் ராகு. அங்கே அவன் உட்காரந்திருப்பதைப் பார்த்தும் கூட அவனிடம் பேச விரும்பாமல் நடந்தார்கள் பலர். அவர்களுடைய வெறுமையான பார்வை மட்டும் ஒருமுறை அவன் மீது பட்டுத் திரும்பியது. அவ்வளவுதான். குன்றின் மேல் இன்னும் இருள் விலகாதிருந்தது. பூக்களும் , மிதக்கும் இலைகளும் கருத்துத் தெரிந்தன. நடந்து செல்லும் சகோதர அசுரர்களின் முகங்களைக் கவனித்தான். அவர்கள் கண்களில் உற்சாகமும் களிப்பும் தாண்டவமாடின. அமுதம் பருகி அமரர்களாக மாறும் தருணத்தை எதிர்கொள்ளும் பரபரப்பு அதில் தென்பட்டது. அந்த அமுதத்தை வழங்கப் போவது மனத்துக்குப் பிடித்தமான அழகான இளம்பெண் என்பதில் இன்னும் கொஞ்சம் கூடுதலான பரபரப்பில்

மிதப்பது தெரிந்தது. நீண்ட பெருமூச்சுடன் ஒருமுறை கண்களை மூடி இருட்டில் திளைத்துவிட்டுத் திறந்தான்.

எத்தனை காலமாக இப்படிப் பெருமூச்சுடன் பொழுதுகளைக் கழித்திருக்கிறோம் என்று நினைத்தபோது மனம் கசப்பில் கவிந்தது. வாழ்வில் கசப்பை உணர்ந்த முதல் தருணத்தை அசை போட்டான் ராகு. அப்போது சிறுவயது. சுற்றியும் தந்தையும் அவர் வயதையொத்தவர்களும் மூத்த ஆண்களும் உடற்பயிற்சி செய்து கொண்டிருந்த நேரம். ஓரமாய் ஒதுங்கி நின்று இறுகி நெகிழும் அவர்கள் உடல் தசைகளையும் தோள் வலிமையையும் கட்டான உடல் வனப்பையும் பார்த்ததும் உலகிலேயே முக்கியமான குலம் தம்முடையதே என்று தோன்றி பெருமையால் விம்மியது அவன் மனம். அவர்கள் தொடாமல் உலகில் எக்காரியமும் இல்லை. அவர்கள் வலிமைதான் உலகையே தாங்கிக் கொண்டிருக்கிறது. அந்தப் பெருமையெல்லாம் இன்னும் மன ஆழத்தில் இருந்தது. ஆனால் அவர்களையும் அவர்கள் அசைவுகளையும் அவர்கள் உடல் வலிமையையும் பற்றி மற்றவர்கள் உதிர்க்கும் ஒவ்வொரு சொல்லும் வாளால் நெஞ்சில் செருகுகிற மாதிரி இருந்தது. அவனால் யாரையுமே நிமிர்ந்து பார்த்து நேருக்குநேர் பேச முடியாமல் போய்விட்டது. வெட்கமும் அவமான உணர்வும் தலைகுனிய வைத்துவிட்டது. அவர்கள் அசுரர்கள். சபிக்கப்பட்டவர்கள். திதியின் கருவில் தங்கிய ஜய விஜயர்களின் குலம். தேவர்கள் முன்னிலையில் பேச நேரும்போது உடல் முழுக்க ஒரு படபடப்பும் தவிப்பும் எப்படியோ வந்து விடுகின்றன. அந்த உணர்வுகள் ஆத்திரமாகவும் எரிச்சலாகவும் வெடித்துவிடும். அப்போது தொடங்கிய பெருமூச்சை காலம் கடந்த பிறகு கூட நிறுத்த முடியவில்லை. எவ்வளவோ முயன்றும் அந்தப் பெருமூச்சிலிருந்து அவனுக்கு விடுதலையே இல்லை. அவன் மனம் என்னதான் விரும்புகிறது? தேவர்களுக்கு இணையான வாழ்வையா? மதிப்பையா? அதெல்லாம் பெரிதல்ல என்று தோன்றியது. தேவர்களின் நுணுக்கமான தந்திரத்தால் அசுரர்களை விழ்த்தி விடுகிறார்கள். ஆசை காட்டி மோசம் செய்வது காலம் காலமாகத் தொடர்கிறது. அவர்கள் தம் ஆதாயத்துக்காக அசுரர்களின் உடல்களைப் பயன்படுத்திக் கொள்கிறார்கள். தந்திரம் அறிவாகவும் எதிர்பார்ப்பு நிறைவேறாதத¢ல் கிளர்ந்தெழும் வேகம் அசட்டுத் தனமாகவும் பார்க்கப் பட்டது. அசுரர்களின் வரலாறாக இந்தக் கேவலம் சித்தரிக்கப்படும்போது பெருமூச்சைத் தவிர வேறு வழி என்னவென்று இருக்கும் என்ற குழம்பினான் ராகு.

பேச்சுத்துணைக்கு ஆள் கிடைத்தால் பரவாயில்லை என்று தோன்றியது. இரண்டு நாட்களாக அசுர குலத்தவர் ஒவ்வொருவரும் அந்த இளநங்கையின் நினைவில்தான் மிதந்தபடி இருக்கிறான். யாரை நிறுத்தி எப்படிப் பேசுவது என்று குழம்பினான். யோசனை அவனைப் பைத்தியமாக்கிவிடும் என்று பட்டது. அசுரனாக இருப்பதைவிட ஒரு மரமாக , ஒரு செடியாக, ஒரு கல்லாக , ஒரு பூச்சியாக இருந்து விடலாம். அவற்றுக்கு எண்ணங்கள் இல்லை. குழப்பங்கள் இல்லை. நிம்மதியாக இருக்கலாம்.

அக்குளக்கரையோரம் தான் ஒரு பூச்சியாக மாறிப் பறந்து செல்வது போன்ற எண்ணம் ராகுவுக்கு சற்றே ஆறுதல் அளித்தது.

பலிச்சக்கரவர்த்தி அருகில் வந்து "நீராடியாயிற்றா ராகு?" என்ற வினவினார். தேக்குமரம் போன்ற அவர் உடல் வயதை மீறி கட்டுக் குலையாமல் இருந்தது. தோளில் படர்ந்திருந்த நீர் முத்துகளில் சூரியன் மின்னியது. "ஆயிற்று அரசே" என்று எழுந்து நின்றான் ராகு. குனிந்து அவர் கால்களைத் தொட்டு வணங்கினான். குழப்பம் கவிந்த அவன் முகத்தைத் தொட்டுத் து¡க்கினார் பலி. அவர் கண்களில் ததும்பிய கருணையைக் கண்டு சற்றே உதடு பிரித்துச் சிரிக்க முயன்றான்.

"சொல் ராகு. இரண்டு நாட்களாக ஏன் அமைதியற்றுத் திரிகிறாய்? நேற்று இரவு சொன்னதையெல்லாம் மறந்துவிட்டாயா?" என்றார் பலி.

மனத்தைத் திறந்து எல்லாவற்றையும் கொட்டிவிடும் வேகம் கொண்டான் ராகு. மனத்துக்குள் ஒரு பெரிய மரம் காற்றில் தலைவிரித்தாடிக் கொண்டிருப்பதைப் போலிருந்தது.

"நாம் பாற்கடலுக்கு வந்திருக் கவே கூடாது என்று தோன்றுகிறது. இந்த அமுதும் அமர நிலையும் யாருக்கு வேண்டும் அரசே?"

"அமரனாக இருப்பது நல்லதுதானே நமக்கு"

"யாருக்கு நல்லது அரசே?" வேகமாகக் கேட்டான் ராகு. அவன் கண்களில் கொட்டுவது போல கூர்மை ஏறியது.

"எல்லாருக்கும்தானே ராகு"

"எல்லாரும் என்ற ஒரே சிமிழில் அவர்களையும் நம்மையும் அடைக்காதீர்கள் அரசே. நாம்தாம் எல்லாரும் எல்லாரும் என்று பரந்த மனப்பான்மை பற்றிப் பேசுகிறோம். தேவர்கள் இனத்தைச் சேர்ந்த ஒருவனாவது அப்படிப் பேசிப் பார்த்திருக்கிறீர்களா? நாங்களும் அசுரர்களும், நீங்களும் நாங்களும் என்றுதான் பேசுகிறார் கள். அவர்கள் மனத்தில் அப்படிப் பார்க்கும் மனப்பான்மைதான் இருக்கிறது. இன்று நேற்றல்ல, இந்தக் குலம் தோன்றிய காலத்திலிருந்து அவர்கள் மனத்தில் அந்த எண்ணம்தான் என் ஆத்திரத்தையெல்லாம் கொட்டத் தொடங்கினால்.." ராகு வேகவேகமாய்ப் பேசினான்.

அவன் பேசுவதையெல்லாம் அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்தார் பலி. பிறகு மெதுவான குரலில் "உன் வருத்தம் புரிகிறது ராகு. என் நிலையை யோசித்துப் பார். காலம்

முழுக்க அழிந்தது நம் வம்சம்தான். உயிர் விட்டது நம் வம்சம்தான். எத்தனை எத்தனை உயிர்கள் நம் பிரிவில் பலியாகிவிட்டன தெரியுமா? அவர்களையெல்லாம் நாம் மீண்டும் பார்க்க முடியுமா? எண்ணிப்பார். நம் வம்சத்துக்கு சாகாமல் இருக்க ஒரு வாய்ப்பு உருவாகி வரும்போது அதை விடாமல் எப்படி இருக்க முடியும்? எதிர் அணிக்காரர்கள் அமரராக இருந்து, நாம் மட்டும் மரணத்தைத் தழுவுகிறவர்களாக இருந்தால் நம் குலம் நாசமாகிவிடாதா?"

"ஒரு மன்னனாகவே இந்தப் பிரச்சனையைப் பார்க்கிறீர்கள். ஏன் ஒரு தனி ஆளின் கோணத்தில் பார்க்க மறுக்கிறிர்கள்?" என்றான் சலிப்புடன் ராகு

"மன்னனுக்குத் தனிப்பட்ட கோணம் இல்லை ராகு. என் குலம்தான் எனக்கு முக்கியம். அவர்கள் வாழ்ந்தால் நான் வாழ்வேன். அவர்கள் இறந்தால் அவர்களோடு நானும் இறந்து விடுவேன்."

"உங்கள் கடமையுணர்வை நான் மிகவும் மதிக்கிறேன் அரசே. அவர்களின் சூழ்ச்சிக்கு நாம் நம்மையறியாமல் பலியாகி விட்டோமோ என்றுதான் சொல்ல வருகிறேன்"

"தேவைக்கு மேல் ஒரு விஷயத்தைப் பெரிதுபடுத்திப் பார்க்கிறாய் ராகு. அதனால்தான் அவசியமல்லாத வேதனையும் துக்கமும் உனக்கு" என்றார் பலி. அவ்வார்த்தைகள் அவன் மனத்தில் தைத்தன.

"தேவையின் அளவு தெரியவில்லை அரசே எனக்கு. நான் முட்டாள்" என்றான் சூடாக. பலிக்கு அவன் கோபம் சிரிப்பு மூட்டுவதாக இருந்தது. ஒரு குழந்தையைப் பார்ப்பது போல அவனைப் பார்த்துத் தணிந்த குரலில் "சொல். எதன் ஆதாரத்தின் மீது அவர்கள் நடவடிக்கையைச் சூழ்ச்சி என்று சொல்கிறாய்?" என்றார்

"நன்றாக யோசித்துப் பாருங்கள் . பாற்கடலைக் கடைய நாமும் அவர்களும் ஒரே அணியாகப் போய் நின்ற அக்கணத்தை எண்ணிப் பாருங்கள். துல்லியமாக யோசித்துப் பார்த்தால் விவரம் புரியும் உங்களுக்கு. எல்லாக் காரியங்களிலும் நம்மைத் து¡ண்டி விட்டுப் பின்னால் இருந்து வேடிக்கை பார்க்கிறார்கள் தேவர்கள். ஆனால் அந்தச் சமயத்தில் என்ன செய்தார்கள்? அவசரம் அவசரமாகப் பாம்பின் தலைப்பக்கம் போய் நின்று கொண்டார்கள். எதையுமே முதல் ஆளாய்ச் செய்து பழகிய உங்கள் அகங்காரம் உடனே பொத்துக் கொண்டு விட்டது. நீங்கள் சத்தம் போட்டதும் உங்களுக்காக விட்டுத்தருகிற மாதிரி தலைப் பக்கத்தை நமக்கு விட்டுத் தந்து விட்டார்கள். அவர்கள் வால் பக்கம் போய் நின்றார்கள். ஆனால் கடைசியில் நேர்ந்தது என்ன? பாம்பின் மூச்சுக்காற்றின் விஷத்தால் தவித்து நலிந்தது நாம்தானே. இது சூழ்ச்சி இல்லையா?" சூடாகக் கேட்டான் ராகு.

"ஒவ்வொரு செயலுக்கும் ஒவ்வொரு அர்த்தம் கற்பித்துப் பார்த்தால் எப்படி ராகு? நம் விருப்பப்படிதானே அவர்கள் நடந்து அகாண்டார்கள்? இதில் சூழ்ச்சி எங்கிருந்து வந்தது?" என்றார் அப்பாவித்தனமாக. அவர் அவனை அமைதிப்படுத்த முயற்சி செய்வது போல இருந்தது. அந்த அன்பு அவனைத்தடுமாற வைத்தது. அந்த இடைவெளியைப் பயன்படுத்திப் பலி ஆலகாலம் வெளிப்பட்ட போது இரு அணிகளிலுமே கணிசமான பேர் மயங்கி விழத்தானே செய்தோம்? பிறகு அனைவரும் சமமாகத்தானே காப்பபாற்றப்பட்டோம்? நீ சொல்கிற மாதிரி அவர்கள் மனத்தில் ஓரவஞ்சனை இருக்குமெனில் நம்மை அப்படியே சாக விட்டிருக்கலாமே? அப்படி ஏன் செய்ய்வில்லை?ஏ என்று கேட்டார். "அமுதம் எடுக்கும் வேலை முடியும் மட்டும் அசுரர்களின் துணை அவசியம் என்பது அவர்களுக்கும் தெரியும் சக்கரவர்த்தி" என்றான் குத்தலாக ராகு

அதைக் கேட்டுப் பகீரென்றது அவருக்கு. "இது என்ன பேச்சு ராகு? ஒருவர் மீது ஒருவருக்கு நம்பிக்கை இல்லையென்றால் காலம் முழுக்க யுத்தம் செய்து கொண்டே இருக்க வேண்டியதுதான்" என்றான்

"தந்திரத்தின் பின்னணியில் ஒற்றுமையை வளர்ப்பதைவிட வெளிப்படையாய் மோதிச் செத்துப் போகலாம்" என்று முனகினான் ராகு.

"சாக வைப்பது ஒரு மன்னனின் நோக்கமாக எப்போதும் இருக்க முடியாது ராகு. நீ உண்மை தெரியாமல் பேசுகிறாய்".

"அவ்வளவு நியாயம் பேசுகிற நீங்கள் தன்வந்திரியிடமிருந்து அமுதகலசத்தைப் பிடுங்கிக் கொண்டு ஏன் ஓடி வரவேண்டும்?"

"நல்ல கேள்விதான். நீ சொல்கிற மாதிரி அவர்கள் மீதான அவநம்பிக்கையின் மிச்சம் இன்னும் நம் மனத்தில் இருக்கிறது என்று புலப்படத்தான் பிடுங்கிக் கொண்டு வந்தேன்."

"அப்படியென்றால் அதை அக்ககணமே குலத்தில் உள்ள அனைவருக்கும் பருகக் கொடுத்திருக்கலாமே? அதைத் து¡க்கி முன்பின் தெரியாத ஒரு பெண்ணிடம் ஏன் தந்தீர்கள்?" கோபமாகக் கேட்டான் ராகு. பலி அதைக் கேட்டுச் சிரித்தார்.

"பிடுங்கிக் கொண்டு ஓடியது நம் அவநம்பிக்கையைப் புலப்படுத்த மட்டும்தான். நாமே குடித்து நாம் மட்டுமே அமரர்களாக வேண்டும் என்கிற பேராசையால் அல்ல. பாவம், உழைத்தே அறியாத தேவர்கள் நம்முடன் சேர்ந்து உழைத்திருக்கிறார்கள். உழைப்பின் பலன் உரியவர்களுக்குக் கிடைப்பதில்லை என்பதுதானே காலம் காலமாக நாம் பேசி வரும் பேச்சு? அவர்களுக்குத் தராமல் நாம் மட்டுமே அமுதம் பருகினால் வாய்ப்பு

கிடைத்தால் நாமும் அவர்கள் போல நடப்பவரகள்தாம் என்று இன்னொருவர் நம்மைச் சுட் டிக் காட்டிப் பேச வழி செய்து தராதா? பொது ஆளான அவளிடம் கொடுத்தால் எல்லாருக்கும் சமமாக கொடுத்து விடுவாள் என்கிற நம்பிக்கையில்தான் அவளிடம் தந்தேன்"

ராகு அமைதியாக இருந்தார். தொடர்ந்து பலியிடம் வாதிட அவனுக்கு விருப்பமில்லை. அவரைப் பின்பற்றி நடப்பதொன்றே தன் கடமை என்று எண்ணியவனாக மெளனமாக இருந்தான்.

"வா ராகு, போகலாம். சூரியன் எழும் முன்பு நாம் போய்ச்சேர வேணடும்" பலி அவன் தோள்களைத் தொட்டு அணைத்தவாறே நடத்திச் சென்றார். குளத்தில் இருந்தவர்கள் ஒவ்வொருவராகக் கரையேறி அவர்களைப் பின்தொடர்ந்தார்கள். புதர்களிடையேயிருந்து பறவைகளின் கிரீச்சென்ற குரல்கள் கேட்டபடி இருந்தன. அவை "போகதே.. போகாதே" என்று சொல்வது போல இருந்தது ராகுவுக்கு.

-நான்கு-

பாற்கடலின் கரையெங்கும் ஒருவிதமான பரபரப்பு ஏற்படுவதை உணர்ந்தான் ராகு. "வந்துவிட்டாள் வந்துவிட்டாள்" என்ற மகிழ்ச்சியான குரல்கள் எங்கும் எதிரொலித்தன. "அதோ.. அதோ.. அங்கே பார்" என்று கைகள் ஒரு திசையில் சுட்டிக் காட்டின. திரும்பிப் பார்த்தான் ராகு. தொலைவில் கருங்கூந்தல் புரளும் நெற்றியில் சூரியனின் ஒளிப்புள்ளியில் மின்னும் நெற்றிச்சுட்டி தெரிந்தது. கும்பல் அவளை நெருக்கியபடி இருந்தது. அலையும் கும்பலை அவளின் குரல் அடக்கியது. மெல்லப் பின்வாங்கிச் சற்றே உயரமான மேடான மணல்பகுதிக்குச் சென்று நின்றாள் மோகினி. அப்போது அவளை முழுக்கப் பார்த்தான் ராகு.

குவளைப் பூவின் நிறத்தில் அவள் மேனி. அளவான உயரம். ஒரு கையில் அமுத கலசம் தாங்கியிருந்தாள். அலைபாயும் கரிய பெரிய விழிகள். ஜொலிக்கும் கன்னங்கள். கழுத்திலும் இடையிலும் அவள் அணிந்திருந்த அணிகலன்கள் கண்ணைக் கவர்ந்தன. அவள் நடக்கும் போது தண்டையும் கொலுசும் இனிய நாதம் எழுப்பின. காற்றில் அவள் மஞ்சள் ஆடை படபடபத்தது. அவளது ஒவ்வொரு அசைவையும் துல்லியமாகக் கவனித்தான் ராகு. கூர்மையாக அவள் கண்களை நோக்கினான். அவற்றில் எந்தக் கள்ளமும் இல்லை. இனிமையும் அன்பும் அக்கண்களில் வழிந்தன. எந்தத் தந்திரத்தையும் அவற்றில் கண்டுபிடிக்க இயலவில்லை. சூழ்ச்சியின் அடையாளம் கிஞ்சித்தும் இல்லை. குழந்தைக்குத் தன் மார்பைக் காட்டும் தாயின் கண்களில் புலப்படும் நெகிழ்ச்சியும் குழைவும் மட்டுமே அவள் முகத்தில் தேங்கியிருந்தன. அவள் உடலிலிருந்து ஒருவித இனிய மணம் வீசியது. மலர் மணம். இசை மிதக்கும் காற்றின் மணம். தன்னை

அறியாமல் மனம் ஒடுங்கினான் ராகு. தன் குழப்பங்கள் அர்த்தமற்றவையோ என்ற நாணம் படர்ந்தது. எல்லாம் நல்லபடியாக நடந்துவிடும் என்று ஒருகணம் பெரும் நிம்மதி பரவியது. புலன்கள் அமைதியடைந்து அடங்கும் தருணத்தில் அவன் சந்தேகமுள் மறுபடியும் தலைநீட்டிக் கீறியது.

தேவர்களும் அசுரர்களுமாக அலைமோதியது கூட்டம். அவள் தன் இனிய குரலில் "அமைதி..அமைதி" என்று கூட்டத்தினரைப் பார்த்துச் சொன்னாள். அவள் கைகளை உயர்த்தும் போது கைவளைகள் குலுங்கின. அவள் உள்ளங்கையின் வெண்மை வெள்ளரிப்பழத் துண்டு போல இருந்தது.

கூட்டத்தினிடையே சலசலப்பு ஓய்ந்தது. எங்கும் மௌனம் நிலவியது. முகம் பொலிய நின்ற மோகினி கூட்டத்தைப் பார்த்து "நான் சொல்வதைக் கேட்பதாக எல்லாரும் வாக்களித்திருக்கிறீர்கள், நினைவிருக்கிறதா?" என்றாள் . அனைவரும் ஒரே நேரத்தில் "இருக்கிறது" என்று பதிலிறுத்தார்கள். அவள் கையை உயர்த்தி "நல்லது.. நல்லது நீங்கள் அனைவரும் நீடுழி வாழ்க" என்று வாழ் த்தினாள். கூட்டம் முழுக்க மகிழ்ச்சிப் பரவசம் காற்றலை போல பரவி மிதந்தது.

"முதலில் அனைவரும் இரண்டு அணிகளாகப் பிரிந்து தனித்தனியாக அமருங்கள். இதோ கொப்பரைகள். ஆளுக்கொன்று எடுத்துக் கொள்ளுங்கள். அமுதம் வழங்கி முடிக்கிற வரை யாரும் எதுவும் பேசக் கூடாது. கேட்கக் கூடாது. குற்றம் குறை சொல்லக் கூடாது. அப்படி நடந்தால் அமுதம் தன் தன் சக்தியை இழந்துவிடும் , தெரிகிறதா?"

எல்லாரும் தலையசைத்தார்கள்.

பலிச்சக்கரவர்த்தி முன்னால் சென்று கொப்பரையை எடுத்துக் கொண்டு இடது பக்கமாய் நடந்தான். தொடரந்து கொப்பரைகளை எடுத்துக் கொண்ட அசுரர்கள் அவனைப் பின்தொடர்ந்து வரிசையில் உட்கார்ந்தார்கள். எதிர்பார்ப்பும் ஆசையும் அவர்களைப் பதற்றமுற வைத்தது. கொப்பரைகளைத் து¡க்கித் து¡க்கிப் போட்டுப் பிடித்தார்கள். மோகினி அவர்களைப் பார்த்து உதட்டைச் சுழித்து "ம்ஹ¤ம்..அவசரம் கூடாது" என்றாள். அந்த வார்த்தைகள் அவர்களைக் கிறங்கடித்தன. பேசும்போது அவள் கண்களில் வெளிப்பட்ட ஒளியையும் வீசும் காற்றில் நெற்றி முழுக்க அலையும் அவள் கூந்தலையும், விலகி ஓடும் மேலாடையையும் இறுக்கி முடிந்த மார்புக் கச்சையையும் பார்க்கக் கிடைத்த பரவசத்தில் மெய்மறந்திருந்தார்கள். அவர்களைப் போலவே தேவர்கள் அணியும் ஒன்று கூடி எதிர்ப்புறத்தில் உட்கார்ந்திருந்தது. இந்திரன் அவளைப் பார்வையால் விழுங்கியபடி இருந்தான். இரு வரிசைக்கிடையேயும் அந்த மங்கை நின்றாள்.

ராகுவின் நெஞ்சு வேகவேகமாக அடித்தபடி இருந்தது. அவன் இதயத்தின் துடிப்பை

அவனால் மிகச் சரியாகக் கேட்டக முடிந்தது. அவள் மீது உருவாக்கிக் கொண்ட வெறுப்பைக் கழற்றிவிட்டுப் பார்த்தால் அவள் உண்மையிலேயே பேரழகிதான் என்று தோன்றியது அவனுக்கு. அதுவரை அவளைப் போல ஓர் அழகியை எங்கும் கண்டதில்லை என்று நினைத்தான். ரத்தத்தில் கதகதப்பு பரவுவதை உணர்ந்தான். ஒரு பெண்ணின் அழகுக்கும் ஓர் ஆணின் உடலில் ஓடும் ரத்தத்துக்கும் எப்படி இந்த உறவு ஏற்படுட முடியும் என்கிற விசித்திரமான கேள்வி அவன் மனத்தைக் குடைந்தது. ஏயாரோ ஒருத்தி அவள் யாரோ ஒரு அசுர இளைஞன் நான் என் மூளை நரம்பின் அசைவுகளை அவள் அழகால் கட்டுப்படுத்தப்படும் செயலாக எப்படி நிகழ்கிறது? ரத்தத்துக்கு இந்த விசேஷ குணம் எப்படி வந்தது?ஏ அவன் மனம் குவிவதை அந்தக் கேள்வி சிதறடித்தது. கரையில் என்ன நடக்கிறது என்றே அவனால் சரியாகக் கவனிக்க இயலவில்லை. குழப்பங்கள் அவன் நெஞ்சை இறுக்கிப் பிசைந்தன.

அவள் மெல்ல மெல்ல முன்னால் வந்து கொண்டிருந்தாள். அகப்பையால் கலசத்திலிருந்து அமுதத்தை முகர்ந்து தேவர்களின் வரிசையில் ஒருவனின் கொப்பரையில் ஊற்றினாள். அடுத்து அதே நளினம். அதே சிரிப்பு. அதே குழைவு. மெல்ல வந்து அசுரர்களின் வரிசையில் ஒருவனின் கொப்பரையில் ஊற்றினாள். அவர்கள் முகங்களில் படர்ந்த பரவசத்துக்குக் காரணம் பருகிய அமுதமா, அவளது அழகா தெரியவில்லை.

சிரித்தபடி நங்கை நகர்ந்தாள். மெல்ல மெல்ல வரிசையைத் தாண்டி வந்தாள். அவளையே பார்த்தபடி இருந்தான் ராகு.

சூரியன் தெளிவாக மேலேறிவிட்டான். வானத்தில் சிவப்புக் கரைந்து வெண்மை படரத் தொடங்கியது. மேகங்கள் அற்ற வானம் தெளிவாகத் தெரிந்தது. அலைகளின் ஓசை தொடர்ந்து கேட்டபடி இருந்தது. தொலைவில் தேவர்கள் தங்கியிருந்த கூடாரங்களும் அசுரர்களின் கூடாரங்களும் தள்ளித் தள்ளிக் காணப்பட்டன. அருகில் பச்சைக் குன்று. ஈரம் சுமந்த காலைக் காற்று எங்கும் இதம்பட வீசியது. காற்றின் வேகம் கூடக் கூட மோகினியின் ஆடை ஒரு கணம் உடலோடு ஒட்டியது. மறுகணம் நெகிழ்ந்தது. அவள் உடல் வளைவுகளும் செழிப்பும் புலப்பட்டன. அவள் முகத்தில் களிப்பும் உற்சாகமும் தெரிந்தன.

ஏதோ எண்ணங்களில் மூழ்கி இருந்துவிட்டுச் சட்டென ஒருகணத்தில் மீண்டான் ராகு. அந்த மோகினி அவன் கண்ணெதிரில் நு¡ற்றுக்கு நு¡று சதவீதம் பார்க்கிற தொலைவில் ஐந்தாறு அடி தள்ளி நிற்பதைக் கண்டான். அவன் ரத்தத்தில் மெல்ல மெல்ல சூடேறியது. சட்டென கவனம் பிசகி, அவள் உடலின் மீது பதிந்திருந்த கண்களைத் திருப்பி கொப்பரையின் மீது பதித்தான். அக்கணமே அவன் அதிர்ச்சியில் உறைந்தான். தேவர்களின் கையில் உள்ள கொப்பரையில் மட்டும் அகப்பையால் அமுதத்தை முகர்ந்து ஊற்றினாள் அவள். அதே மலர்ந்த முகத்துடன் முகர்வது போன்ற பாவனையுடன் கலசத்துக்குள்

விட்டெடுத்த வெறும் அகப்பையை அசுரர்களின் கொப்பரையில் கவிழ்த்தாள். வெற்றுக் கொப்பரையை வாய்க்குள் கவிழ்த்துக் கொள்ளும் அசுரர்கள் தாம் எதையுமே பருகவில்லை என்கிற உணர்வு கூட இல்லாமல் அவளையே வைத்தகண் வாங்காமல் பார்த்தபடி இருந்தார்கள். ராகுவால் அக்காட்சியை நம்பவே முடியவில்லை. ஒரு கணம் கண்களைக் கசக்கிக் கொண்டு மறுபடியும் பார்த்தான். தேவரின் கைக்கொப்பரையில் அமுதத்தைக் கவிழ்க்கும் அகப்பை. அசுரர்களின் கொப்பரையில் வெற்று அகப்பை கவிழ் ந்து மீண்டது. அவசரம் அவசரமாக அவன் கண்கள் பலியைத் தேடின. வரிசையின் முதலில் அவர் காணப்பட்டார. மோகினியின் அழகில் மயங்கிய நிலையில் சிலை போல உட்கார்ந்திருந்தார் அவர். ஓடிப்போய் அவரை எழுப்பி உண்மையைச் சொல்ல வேண்டும் என்று பரபரத்தது அவன் மனம். எழுந்து கத்த வேணடும் போல துடித்தது அவன் உடல். மெல்மெல்ல வெறியேறியது அவனுக்கு, மறுகணமே காலம் முழுக்க குழப்பவாதி என்றும் அவநம்பிக்கைக்காரன் என்றும் சொல்லிவரும் தன் கூட்டம் தன்னை நம்பாது என்று தோன்றியதும் சலித்துக் கொண்டான். எனினும் ஏதாவது செய்ய வேண்டும் என்று உத்வேகம் கொண்டான் ராகு. அதிர்ச்சியில் வறண்ட தொண்டையில் ஈரம் பரவ எச்சிலைக் கூட்டி விழுங்கியபடி வேகமாக யோசித்தான். அழகியின் கால்கள் அவனை நோக்கி நெருங்கி விட்டன. அக்கணமே அவன் மனம் ஒரு முடிவெடுத்தது. தவிப்புடன் கண்களை மூடினான். தன் ஆற்றலின் உதவியால் தன்னை யாருக்கும் தெரியாமல் ஒரு தேவர் குலத்தவனாக உருமாற்றிக் கெண்டான். அனைவரின் கவனமும் மோகினியின் முகத்தில் குவிந்திருந்த கணத்தைப் பயன்படுத்திக் கொண்டு வரிசை மாறி உட்கார்ந்தான். உள்ளூர அமுதத்தின் மேல் அவனுக்கு நம்பிக்கையில்லை. அக்கணம் அவன் அமுதத்தை வெறுத்தான். அதைவிட ஒரு துளி விஷம் மேலானது என்று தோன்றியது. எனினும் விருட்டென்று எழுந்துபோய் அப்பெண்ணின் தந்திரத்தை அம்பலப்படுத்துவதைவிட இது சிறந்த வழி என்று அவன் மனத்துக்குப்பட்டது. பலிக்கும் மற்றவர்களுக்கும் தான் எடுத்துச் சொல்லிவந்த உண்மை அப்போதுதான் புரியும் என்று அமைதியுற்றான்

மோகினி அவனை நெருங்கினாள். அவள் அகப்பை அவனது கொப்பரையில் அமுதத்தை ஊற்றியது. அவன் அதை ஆர்வமின்றிக் குடித்து முடித்தான். கொப்பரையைத் தரையில் வைக்கும்போது அருகில் உட்கார்நதிருந்தவன் ஏஜயோ பெண்ணே, இவன் தேவர் குலத்தவன் அல்ல. என் பக்கத்தில் உட்கார்ந்திருந்தவன் இவன் இல்லை. அதோ திக்விஜயன்., அவன்தான் என் அருகில் இருந்தான். இடையில் எப்படி இவன் முளைத்தானோ தெரியவில்லை. வேஷதாரி. அசுரர் குலத்தவன். ஆள் மாறாட்டம் செய்கிறான்ஏ என்று கூவினான். உடனே வரிசை கலைந்தது. ஏவிடாதே பிடி கொல்லுஏ என்று கூக்குரல்கள் தேவர்கள் நடுவிலிருந்து கேட்டன. கூட்டமே அவனை நோக்கிப் பாய்ந்தது. ஏநிறுத்துங்கள்.. நிறுத்துங்கள்ஏ என்ற கூவிக் கொண்டே ஓடி வரும் பலியை யாரும் பொருட்படுத்தவில்லை. ஓட முயற்சி செய்தவனைப் பிடித்து இழுத்தார்கள் தேவர்கள். அதற்கள் மோகினி தன் கையிலிருந்த அகப்பையாலேயே அவனை ஓங்கி அடித்தாள். வாள் வீச்சு போல இறங்கியது அந்த அடி. ஏஅம்மாஏ என்ற

அலறலுடன் அவன் உடல் இரு துண்டுகளாக விழுந்தன. விழுந்த வேகத்தில் அவன் சொந்த உருவடைந்தான். வேதனையும் அதிர்ச்சியும் கொண்ட அவன் கண்கள் அந்த மோகினியின் மீது நிலைகுத்தி நின்றன. ஏராகு.. ராகுஏ சுற்றிலும் குரல்கள் கேட்டன. உடனே செய்தி பரவ ரத்த வெள்ளத்தில் விழுந்து துடிக்கும் ராகுவைக் காண ஓடி வந்தார்கள் அனைவரும். அசுரர்களால் அக்காட்சியை நம்பவே முடியவில்லை. ஆ என்ற சத்தத்துடன் தோளைக் குலுக்கிக் கொண்டு அந்தப் பெண் மீது பாய்ந்தார் பலி. அவர் கண்களில் கவிந்திருந்த பரவசம் மறைந்து மூர்ககம் ஏறியது. அவருடன் மற்ற அசுரர்களும் சேர்ந்து கொண்டார்கள். அவளைத் தடுத்தாட்டொள்ள முயன்றது தேவர்கள் வரிசை. இரண்டு வரிசைகளும் மோதின. தலைகளைப் பிளக்கும் கரங்கள். ஆளையே து¡க்கித் தொடையில் வைத்து ஒடிக்கும் வேகம். எங்கும் துண்டான உடல்கள். கிழிந்த இதயங்கள். வெட்டுப்பட்ட கைகள். உரத்த குரலில் கூவியபடி பலி ஒரு யானையைப் போல அப்படைகள்¢ன் இடையே புகுந்து சுழன்றார். ஏகொல்.. கொல்.. நம்ப வைத்துக் கழுத்தறுப்பதே காலம் முழுக்க வேலையாகிவிட்டது இந்த வீணர்களுக்கு..ஏ ஏவிடாதே பிடி கொல்லு. உயிருக்கு உயிர் பலி வாங்காமல் விடக்கூடாதுஏ ஏஒன்றல்ல.. இன்றைக்கு ஒரு கோடி தலைகள் தரையில் உருள வேண்டும். இந்த பாற்கடல் ரத்தத்தில் சிவக்க வேண்டும்ஏ ஏஇந்த அசுரர்கள் நம்மை என்ன கையாலாகாதவர்கள் என்று நினைத்துவிட்டார்களா? காட்டுங்கள் தேவர்களே நம் கைவரிசையைஏ. குரல்கள் கூவின. வெட்டப்பட்ட தலைகளும் உடல் உறுப்புகளும் பந்துகள் போல தலைக்குமேலே பறந்தபடி இருந்தன. எங்கும் கதறல் . அழுகை. கெஞ்சுதல்கள். தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் இடையே மோதல் வலுத்தது.

-ஐந்து-

ரத்தச் சேறாக மாறிய கடற்கரையில் தன்னந்தனியாக உட்காரந்திருந்தார் பலி. முற்றிலுமாக அவர் மனம் சிதைந்திருந்தது. நடந்ததெல்லாம் ஒரு கனவு போல இருந்தது. அவருக்கு. இப்படியெல்லாம் நடக்குமா என்ற நம்பக் கூட முடியவில்லை.. அவர் மனம் ராகுவுக்காக உருகியபடி இருந்தது. சந்தேகங்களைக் கண்களில் தேக்கியபடி இருந்த ராகு. உள்மனம் உணர்ந்ததைத் தயக்கமின்றி சொன்ன இளம்வீரன் ராகு. அவன் முகம் நினைவுக்கு வந்தது. அவன் குரல் காதில் ஒலித்தது. மிக அருகில் உட்காரந்துகொணன்டு மன்னா மன்னா என்று ஏதோ சொல்வது போல இருந்தது. உடல் முழுக்க சிலிர்த்தது. பலி மிகவும் சோர்வாக உணர்ந்தார். வானத்தின் பக்கம் பார்வையை திருப்பினார். இருள் அடர்ந்திருந்தது. இந்த ஒரு நாள் பிறக்காமலேயே இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும் என்று அவர் மனம் அவாவியது.

"சக்கரவர்த்தி"

நிமிர்ந்து பார்த்தார். மெய்க்காப்பாளன்.

"போகலாம் அரசே..இருட்டிவிட்டது..இறந்த அசுரர்களுக்குச் சிதை மூட்ட வேண்டும்"

"நம் அணியில் எவ்வளவு பேர் மாண்டார்கள்?"

மெய்க்காப்பாளன் பேசாமல் தலைகுனிந்தான். பலி தலையை அசைத்துக் கொண்டார். எழுந்து நிற்கக் கூட தன் உடலில் பலமில்லை என்று தோன்றியது. வெட்டுண்ட கையிலிருந்தும் தோளிலிருந்தும் ரத்தம் வடிந்து உறைந்திருந்தது. ஊன்றிக் கொள்ள மற்றொரு கையைத் தரையை நோக்கிப் பதித்த போது கொப்பரை தட்டுப்பட்டது. அதைப் பார்த்துமே ராகுவின் நினைவு மறுபடியும் வந்தது. ராகு என்று வாய்விட்டுச் சொன்னபடி வானத்தை நோக்கினார். வெட்டுண்ட ராகுவின் கண்களை நட்சத்திரங்களின் குவியலிக்கிடையே பார்த்தார். ராகு என்று தளர்ந்த குரலில் சொன்னபடி எழும் முயற்சியைக் கைவிட்டுச் சரிந்து உட்கார்ந்தார்.

'பதிவுகள்' பெப்ருவரி 2004 இதழ் 50

4. **சிறுகதை: புலம்பெயர்ந்த காகம் - நாகரத்தினம் கிருஷ்ணா** -

கா காகா கா.. என்ற சத்தம் அவர் வீட்டின் பின் பக்கமிருந்து வந்திருக்க வேண்டும். கையில் கட்டியிருந்த வாட்சைப் பார்த்துக் கொண்டார். மணி காலை 5.30 என்றது. தன்னிடமிருந்த மாற்றுத் திறப்பின் மூலம் கதவினைத் திறந்துகொண்டு வீட்டிற்குள் நுழைந்தார். கா.. கா என்ற குரல் இந்தமுறை அதிக வன்மையுடன் அவரைத் தொட்டது. பின்புறம் சென்று பார்க்கலாமா? என்று நினைத்து மீண்டும் அந்த குரல் வந்தால் போய்ப் பார்க்கலாம் எனத் தீர்மானித்தார். உறங்கிக் கிடந்த வீட்டை எழுப்ப நினைத்து ஸ்விட்சைத் தட்டினார். வெளிச்சம் நிரம்பி வழிந்தது. ஜன்னல் கண்ணாடிகளுக்கு வெளியே இருந்த பிவிசி திரைகளை மின்சாரப் பொத்தானை அழுத்தி சுருட்டினார். உள்ளே இருந்த மெல்லிய பிரெஞ்சுத் திரைச் சீலைகளும் நீக்கபட்டன. வெளியே ஆரவாரமற்ற ஐரோப்பிய வைகறை. தலையில் ஒளியைச் சுற்றிய வண்ணம் மெல்லிய உறுமலோடு குப்பைக்கூடைகளை ஒரு பகாசூரனின் பசி ஆர்வத்தோடு வயிற்றில் இட்டுக் கொள்ளும் குப்பையள்ளும் லாரி. சிறிது நேரம் அந்தக் காட்சியில் லயிப்பற்றுக் கவனம் செலுத்த, மறுபடியும் பின்பக்கமிருந்து கா கா என்ற அந்தக் குரல். இந்தியாவில் மட்டுமே அவர் கேட்டிருக்கின்ற ஓசை. குரலா? ஓசையா? எப்படி இனம் பிரிப்பது என்ற கேள்வி தேவையில்லாமல் எழுந்தது. சற்று கவனமாகக் கேட்டார். ஆச்சரியமாக இருந்தது. அது ஒரு காகத்தின் குரல் தான். இங்கே எப்படி?

இந்தியாவிற்குப் போகும் போதெல்லாம் அந்த குரலின் அல்லது ஓசையின் சுகத்திற்காகவே வீட்டுக்குப் பின்புறம் இருக்கும் புழக்கடைப் பக்கம் சென்று படுப்பது வழக்கம். அதிகாலையில் எங்கேயோ ஒரு சேவல் "கொக்கரிக்கோ " எனத் தொண்டை கமறலோடு ஆரம்பித்துவைக்க அது ஊரெல்லாம் எதிரொலித்துவிட்டு இவரது சகோதரர் வீட்டு கோழிக்கூண்டில் வந்து முடியும். இந்த நிகழ்வுக்காகவே காத்திருந்தது போல, ஒரு காகம் கா.. கா என ஆரம்பித்துக் கொடுக்க, அதனைத் தொடர்ந்து, அடுத்த அரை மணி நேரத்திற்கு கா.. கா என்ற கச்சேரி. " இந்தப் பாழாப்போன காக்கைகள், தூக்கத்தைக் கெடுக்குதே! உள்ளே வந்து படுக்கக் கூடாதா? என்று அங்கலாய்க்கும் அவரது அம்மாவிற்குத் தெரியுமா? இந்தியாவிற்கு அவரை இழுத்துவருகின்ற விஷயங்களில் இதுபோன்ற ஓசைகளும் உள்ளடக்கம் என்று.

இந்தியாவில் இருக்கும் வரை, அமாவாசை கிருத்திகை எனக் கடவுள்களுக்கோ, முன்னோர்களுக்கோ வீட்டில் படைக்கும் போதெல்லாம் காக்கைக்குச் சாதம் வைப்பது இவராகத்தான் இருக்கும். பூவரச இலையைக் கிள்ளி ஒரு கவளப் படையலை ஏந்தி பின்புறமிருக்கும் கிணற்றடிச் சுவரில் கையிலிருக்கும் குவளைநீரைத் தெளித்து, சோற்றுக் கவளத்தை வைத்துவிட்டுக் காகத்தைத் தேடி அது ஒன்று பத்தாகும் ரசவாதத்தை மெய்மறந்து கண்களை விரியவிட்டிருக்கிறார். கடைசியாக அவரது அப்பா

இறந்தபோது,காரியப் பிண்டத்தைக் குளத்தங்கரையில் வைத்துவிட்டு துக்கத்தை மறந்து, காகங்களின் ஆள் சேர்ப்பில் சந்தோஷம் கண்டது ஞாபகத்திற்கு வந்து போனது..

இப்படி திடுமென்று பிரான்சில்,அதுவும் இவர் இருக்கின்ற குளிர்கூடிய நகரத்தில் காகத்தினை எதிர்பார்க்கவில்லை. படுக்கை அறையில் நுழைந்து பால்கனி வழியாக எட்டிப் பார்த்தார்.

அவருக்கு நம்புவது கடினமாக இருந்தது. அது ஒரு காகம் அல்லது காகத்தின் சாயலில் இருந்த ஒன்று. கண்ணாற் பார்த்ததும் காதாற் கேட்டதும் அது காகம் என்று ஊர்ஜிதம் செய்தாலும், மனம் நம்ப மறுத்தது. தீர விசாரிப்பதே மெய் என்பதின் முதற் கட்டமாக கீழே இறங்கி அதன் எதிரே சென்று கொஞ்ச நேரம் நின்றார். திரும்பக் கத்தும் என எதிர்பார்த்தார். ம்.. இல்லை. மாறாக இறக்கைகளைப் படபடத்து, கண்களில் பயத்தை இடுக்கிக் கொண்டு, குதித்துக் குதித்து அருகிலிருந்த பைன் மர மெல்லிய இருளில் ஒதுங்கிநின்று என்ன நினைத்ததோ மறுபடியும் கா கா கா... அந்தக் குரலுக்கு ஆறுதல் அளிக்க அல்லது துணையாக வேறு காக்கைகள் வருமோ? எனச் சில விநாடிகள் அவர் காத்திருக்க, அங்கே அசாதரண மௌனம். குரல் கொடுத்த காக்கையிடத்தும் அந்த எதிர்பார்ப்பு இருந்திருக்க வேண்டும். எல்லாத் திசைகளிலும், தலையை நான்கைந்து முறை வெட்டி வெட்டி இழுத்துப் பார்த்துவிட்டு ஏமாற்றத்துடன் இவரைப் பார்த்தது. அதன் பதற்றத்தைத் தணிக்கின்ற வகையில் மெள்ள அதனை நெருங்கிக் கைகளைக் கொண்டுபோனார். அதற்குப் பயம் குறைந்ததா அல்லது மறுபடியும் குதித்து ஓட வழியில்லையா எனத் தெரியவில்லை. அமைதியாக அசையாமல் நின்றது. மெள்ளப் பற்றினார். இந்த முறை சற்று அதிகமாக கா.. கா. என்று கூச்சலிட்டு அவரிடம் இருந்து விடுபடமுயன்று தோற்றுப் பின்னர் சோர்ந்து அவரைப் பார்த்தது. உள்ளே கொண்டு போனால் சத்தம் போடுமே என்ற கேள்வி எழுந்தது. சந்தேகத்தோடு பார்த்தார். அதற்கு என்ன புரிந்ததோ மௌனமாய் நின்றது. கைகளில் அணைத்துக் கொண்டு உள்ளே கொண்டு வந்தார்.

படுக்கையில் புரண்டு படுத்த அவரது திருமதி "என்னங்க சத்தம் ? கொஞ்சம் கதவடைக்கிறீங்களா?" என்று சொல்லிவிட்டு புரண்டு படுத்தாள். காலை எட்டு மணிக்கு முன்னதாக அவள் எழுந்திருப்பதில்லை. அவரது இரண்டு பிள்ளைகளும் அவர்களுக்கு வேண்டிய காலை உணவை அவர்களே பார்த்துக் கொள்வார்கள். அதற்குப் பிறகு தங்களைத் தாங்களே தயார்படுத்திக்கொண்டு அவரவர் பள்ளிக்கோ அல்லது பல்கலைக்கழகத்திற்கோ சென்றார்களென்றால் திரும்பிவர, மாலையாகிவிடும். எட்டுமணிக்கு எழுந்து, பத்துமணிக்கு சமைக்க உட்கார்ந்து பதினோருமணிக்கு வீட்டைச் சுத்தப் படுத்துகிறேன் என ஆரம்பித்தால் பின்னேரம் வரை சுத்தம் செய்து கொண்டிருப்பாள். அவளுக்கு எல்லாம் பளிச்சென்று அந்தந்த இடத்தில் இருக்கவேண்டும். அவளைத் தவிர

அந்த வீட்டில் யாருமே அசுத்தவாதிகள் என்பது அவளது கட்சி.

கொண்டுவந்த காகத்தைச் சமயலறையின் மேசையில் நிறுத்தி, குக்கரில் நேற்றைய சாதம் ஏதேனும் இருக்குமா என்றுபார்த்தார். இருந்தது. ஒரு பிடி எடுத்து ஆர்வத்தோடு அதன் முன் வைத்தார். கா கா.. எனச் சொல்ல நினைத்து வெட்கப்பட்டு ஆவலைத் தணித்துக் கொண்டார். இப்போது அவருக்கும் பயம் தொற்றிக் கொண்டது. எங்கேஅது தொண்டை கிழியக் கத்தி ஊரைக் கூட்டிவிடுமோ என்ற பயம். அப்படி ஏதும் நிகழ்ந்து விடவில்லை. மாறாக, உணவை ஆவலோடு அலகில் முடிந்த மட்டும் கொத்தி விழுங்க ஆரம்பித்தது. சந்தோஷம் நிறப்பிரிகையாய்த் தோகைவிரித்தது. அவருக்குள் இருந்த மன அழுத்தம் குறைந்திருந்தது

சம்தி அவரது குடும்பப்பெயர் அல்லது முதலாவது பெயர் எனச் சொல்லலாம். பெயருக்கு முன்னால் தகப்பன் பெயரைப் போட்டுக் கொள்ளுவதில் என்ன குழப்பமோ? பிரான்சில் எல்லோருக்குமே இந்த குடும்பப்பெயர்தான் முதற் பெயர். ஒருவரை அடையாளப் படுத்துவதற்கு உதவுவது என்னவோ இந்தக் குடும்பப்பெயர்தான். சொந்தப்பெயர்கள் வீட்டில் மட்டுமே பயன்படுத்தபடும். இந்தக் குடும்பப் பெயரை வைத்து வம்சாவளிகளை எத்தனை தலைமுறையானாலும் அடையாளப் படுத்தமுடியும். ஆனால் அவருக்கு சம்தி என்ற பெயர் வந்ததில் சுவாரஸ்யமான செய்தி உண்டு.

அப்போது புதுச்சேரி பிரெஞ்சுக்காரர்களுக்கு அடிமைப் பட்டிருந்தநேரம். வியட்நாம் போருக்கு, பிரெஞ்சு ராணுவம் ஆட்சேர்த்துக் கொண்டிருந்தது. சமூக ரீதியாகவோ, பொருளாதார ரீதியாகவோ தண்டிக்கப்பட்டிருந்தவர்கள் எல்லாம் கப்பல் ஏறினால் விமோசனம் கிடைக்கும் எனக் காத்திருந்த காலம். அப்படிக் காத்திருந்தவர்களிலே கோவிந்தசாமியும் ஒருவர். தமிழ்ப் பெயர்களை உச்சரிக்கச்சிரமப்பட்ட பிரெஞ்சுக்காரன் அவனுக்குத் தோன்றிய பெயர்களையெல்லாம் தமிழனுக்கு வைத்தான். அவருக்கு முன்னே வரிசையில் நின்றவர்களுக்கு வாரத்தின் நாட்களின் பெயர்களை வைத்துக் கொண்டு போக, இவருக்குக்கிடைத்தது 'சம்தி'. 'சம்தி' யென்றால் பிரெஞ்சில் சனிக்கிழமை. வேலுநாயக்கர் கோவிந்தசாமி சம்தி கோவிந்தசாமியாகி இருபது ஆண்டுகாலம் வியட்நாம் , அல்ஜ"ரியாஆகிய நாடுகளில் 'சொல்தா' வாகக் காலந் தள்ளிவிட்டு கணிசமான பணத்தோடு இந்தியாவிற்குத் திரும்பி கிராமத்தில் வீடு, நிலம் என வாங்கிப் போட்டு, பிரெஞ்சுக்காரன் கொடுத்த பென்ஷனில், ராஜ வாழ்க்கை. அதைத் தொடர வேண்டுமே, அவரது இரண்டாவது மகன் சம்தி பாஸ்கரனை பிரான்சுக்கு அனுப்பி வைத்தார்.

ஏதோ ஒர் ஆர்வத்தோடு வந்து, தாசி வீட்டின் ஆரம்பகால போகியாய்த் தொடர்ந்த சம்தி பாஸ்கரனின் பிரான்சு வாழ்க்கை, இந்த 30 ஆண்டுகளில் அவர் அறிந்தோ அறியாமலோ எதை எதையோ இழந்து கசந்து முடிந்திருக்கிறது. இங்கே வானும் மண்ணும், நீரும் காற்றும்கூட ஒருவித அன்னியத்துடன் பழகி வந்திருப்பதை உணரத் தலைப் பட்டபோது

காலம் கடந்திருந்தது. பிரான்சுத்கு வந்தவுடன், பிரெஞ்சு ராணுவத்தில் ஒரு வருடக் கட்டாய சேவையை முடித்து வெளிவந்தவருக்கு ஏமாற்றங்கள் வரிசையாய்க் காத்திருந்தன. வேலைவாய்ப்பின்மை, பெருகிவரும் வன்முறை, எனத்தொடரும் பிரச்சனைகளுக்கு வெளிநாட்டினரே காரணம் என்று வலதுசாரித் தீவிரவாதக் கட்சிகள் குற்றஞ் சாட்ட, அதைக் ஏற்றுக் கொண்டதன் அடையாளமாக அவர் இன்றைக்குவரை வேலை செய்த தொழிற்சாலையில், பயணம் செய்யும் பஸ்ஸில், மருந்து வாங்கப்போன பார்மஸியில், ஏன் நேற்றுவரை இவர் எதிர்ப்படும்போதெல்லாம் "போன்ழூர்" சொல்வானே ழில்பெர் அவனிடத்திற்கூட அந்த மாற்றத்தின் இறுக்கம் தெரிந்தது.

ஆரம்பத்தில் ஏதேதோ வேலைகள் செய்துவிட்டு அந்த ரொட்டிகள் தயாரிக்கும் உசினில் இரவு நேர ஊழியராகப் பணியில் சேர்ந்தபோது சந்தோஷப்பட்டது வாஸ்த்தவம். கைநிறையச் சம்பளம், கூடுதலாக ஏதேதோ பெயரில் ஊக்கத் தொகைகள், கனிவான நிர்வாகம், என அனைத்தும் சேர்ந்து அவரை அதிஷ்டசாலி என்றது . கற்பனையில் விரிந்த அந்த வாழ்வுக்கும் கண்முன்னே தெரிந்த இந்த வாழ்வுக்கும் இடையிலான அகன்றவெளிக்கு யார் காரணம். அவர் பிறந்த மண்ணா? புலம் பெயர்ந்த மண்ணா?

பிரான்சுக்கு வந்த புதிதில் 'சம்தி என்ற தனது பெயர்குறித்து ஒரு வித அற்பசந்தோஷம். வித்தியாசமான அந்தப் பெயரும், இங்கே வந்து அவர் தழுவிய மதமும் சேர்ந்து, பிரெஞ்சுக் காரனோடு தன்னை நிகராக்கிவிடும் என்ற பேராசை அவருக்குள்ளும் இருந்தது. மாற்றத்தை மதமோ பெயரோ அழைத்து வராது, நல்ல மனங்கள்தான் அழைத்து வரவேண்டும் என்பது அவரைப் பொறுத்தவரையில் உண்மையாகிவிட்டது. இப்படித்தான் ஒரு நாள் தொழிற்சாலையில் புதிதாக பொறுப்பேற்றிருந்த உற்பத்தி இயக்குனர் இவரை "ஷேப் த எக்கிப்" ஆக பதவி உயர்வு செய்வதற்குக் கூப்பிட்டனுப்பினான். இவரை நேரில் பார்த்தவுடன் "அடடே நீ இந்தியனா? உன் பெயரை வைத்து ஏமாந்து விட்டேன்" என்று வெளிப்படையாகவே சொல்லிவிட்டான். அந்தச் சம்பவத்திற்குப் பிறகு அந்தப் பதவி ஒரு இத்தாலியனுக்குப் போய்ச் சேர்ந்தது.

இன்றைக்கும் அப்படித்தான் தொழிற்சாலையில் கடந்த நிதியாண்டில் ஏற்பட்ட நட்டத்தை சரிக் கட்ட ஆட்குறைப்பை நிருவாகம் அறிவித்தது. பாதிக்கப்பட்டிருந்த பதினைந்து பேருக்குள்ளும் அடிப்படையில் ஒர் ஒற்றுமை. சம்தி பாஸ்கரன் இந்தியா என்றால், போனிபாஸ் செனகலிலிருந்தும், தான் சூன் லாவோசிலிருந்தும், அஜ்மால் மொராக்கோவிலிருந்தும் இடம் பெயர்ந்து வந்தவர்கள், அந்நியர்கள் அதுதான் உண்மை.

நினைவிலிருந்து மீண்டு காகத்தைப் பார்த்தார். அதற்குக் கவனம் முழுதும் சோற்றுருண்டைகள் மீது. இந்த மனிதர்களுக்கும் காக்கைக்கும் அதிக வித்தியாசமில்லை . "உபரி" என்கின்ற போது கூவி அழைப்பதும், இல்லை என்கின்றபோது எரிச்சல் படுவதும் இயற்கை என்றாகிவிட்டது.

"என்னங்க இது? காகம் மாதிரி இருக்கே?"

மனைவியின் குரல் தீண்ட, தன் மனோ அவஸ்தைகளிலிருந்து மீண்டு அவளைப் பார்த்தார்.

"ஆமாம் காகமேதான்." அமைதியாக பதிலிறுத்தார்.

"என்னாலெ நம்ப முடியலையே!"

"நம்பித்தான் ஆகணும். எப்படியோ வந்துட்டுது. ஏன் இப்படி வரணும்? இந்த மண்ணுல சாகணும்ணு அதுக்குத் தலையெழுத்தா?"

"என்ன பேசறீங்க நீங்க? பாவம். அதற்கு பழைய இடத்துல என்ன பிரச்சினையோ?"

**5. தவிப்பு - டானியல் ஜீவா -**

என்னெண்டு தெரியல நாரி போட்டு விண்விண்ணென்று குத்தி, உளைஞ்சு கொண்டு இருக்கு. கால்வேற மசிலி இறிகி நொந்து கொண்டிருக்கு. நேற்று வேலை தேடி அதிகம் அலைந்ததாலோ இந்த உடல் வலியோ... கொஞ்சம் நோ எடுபடுமெண்டு நினைச்சுத்தான் சுடு தண்ணீயில கொஞ்சம் பச்சத்தண்ணீ கலந்து குளிச்சுட்டு வந்தனான்.நல்ல வெக்கையாய் இருக்குது. குளிச்சிட்டு வந்தாலும் உடம்பு பிசு பிசுத்தபடி. அப்பாட்மென்காரி கீற்றரை நல்லாக் கூட்டிப் போட்டாள் போல இருக்கு. அவ கூட்டினாப் போல என்ன எங்கட கீற்றரால குறைச்சால் ரியாய் போய்விடும் எண்டு நினைச்சுத்தான் குளிச்சிற்று வெளியில வரக்கில கீற்றரை நல்லாக் குறைச்சுப் போட்டு வந்தனான். அப்படியிருந்தும், இப்புடி வெக்கையாய் இருக்கு.... உடம்பிலே வேற சேட்டு போட்டிருக்க வேண்டிய நிலை. மாமி எந்த நேரமும் வீட்டில் இருக்கும் போது கொஞ்சம் கூச்சமாய் இருக்கும் அதனால் என்டில்ல, ஊரில இருக்கும்போது கூட அப்படித்தான் எந்த வெக்கையாய் இருந்தாலும் உடம்பில் இருக்கிற சேட்டை கழட்ட மாட்டேன். அது என்ர பரவனி புத்தியெண்டு அம்மா சொல்லுவ. இப்ப முப்பது வயதாகிட்டு, உடம் பெல்லாம் மசுக்குட்டி மயிர் படர்ந்து கிடக்கிறது போல. என் உடம்பு முழுவதும். அதுவும் கூச்சத்துக்கு காரணமாயிருக்கலாம். சீச்...சீ... அப்படியும் சொல்ல ஏலாது. நான் பிறப்பாலே கொஞ்சம் கூச்சப்பட்டவன் தான். ஒரு தாழ்வுச் சிக்கல் எண்டுகூட சொல்லலாம். என்ர மனசு தேவையில்லாமல் எதை எதை யோவெல்லாம் அலட்டிக்கொண்டு இருக்குது என்று என் மனம் சொல்லியது.

தொங்கப் போடப்பட்ட என் தலையை மேலே தூக்கிக் கொண்டு சோபாவில் இருந்த மாமியை நோக்கி என் கண்களின் பார்வையை நிலை நிறுத்தினேன். ஏதோ ஆழ்ந்த யோசினையிலிருந்த மாமி என்னை நோக்கி பார்வை வீச்சால் ஒரு தடவை உலாவவிட்டுவிட்டு, "தம்பி ஏதும் குடியுமென்?" என்று கேட்டாள்.

"வேண்டாம் மாமி. காலையில எழும்பின கையோடு ஒரு தேத்தணீ போட்டுக் குடிச்சிட்டன். நேற்று ஸ்¡£ல் பக்கமாக வேலைக்கு அலைஞ்சதில கால் சாடையாய் நோகுது".

"நேற்று நீங்க வேலை தேடப் போய்ற்றேங்க எண்டுதான் சொன்னனான். அதுக்கு அவள் என்னைத் தீண்டு போட்டாள். நீங்க வேலை தேடப் போறதில்லையாம், ஊர் சுற்றிப் போட்டு சாப்பாட்டு நேரம் பார்த்து வாறியளாம் எண்டு கவிதா சொல்லுறாள்.
கல்யாண றெஜிஸ்ரேசன் வருகிற திங்கக்கிழமை ஸ்காபரோ ரவுண் சென்ரலில பதிவு செய்கிறதாம். கல்யாணம் மா¢யகொறற்றி சேச்சிலை ஒழுங்கு பண்ணியிருக்கிறாளாம். கல்யாணக்காட்டு அடிக்கிறதுக்கு பரடைஸ் அச்சகத்தில குடுத்திட்டாளாம்.
என்னமோ எனக்கு பயமாக இருக்குது. தம்பி உன்ர போக்குக்கும் அவளின்ர போக்குக்கும் என்று சொல்லி முடிப்பதற்குள், நான் குறுக்கிட்டு,

"இதெல்லாத்தையும் என்னோடு கதைச் சிருக்கலாம்தானே.... அவ ஏன் என்னோட முகம்விட்டு கதைக்கிறாவில்ல நான் என்ன அவவ திண்டா போடுவன்...?"

"தொண்ணூறு நாட்களில்ல ஏதாவது செய்தே ஆகனும். இல்லையென்றால் அது பெரிய சிக்கலில வந்து முடியும்." மாமி சொல்லும் போதே கண்களிலிருந்து கண்ணீர் கசிந்தது.

அச்சம் படர்ந்த பார்வையோடு மாமியின் முகத்தைப் பார்த்தேன். பாவம் மனிசி. ஒரேயொரு பிள்ளை. நல்ல அழகான பெயர் கவிதா. நான் வந்து ஒரு மாதத்திற்கு மேலாகுது. ஒரு நாள் கூட குண்டி குத்தி இருந்து, என்கூட கதைச்சது கிடையாது. எங்கட வீட்டாரும், மாமியும் விரும்பித் தான் இந்தக் கல்யாணத்திற்கு ஏற்பாடு பண்ணினவிய, என்ன மிஞ்சி மிஞ்சி போனால் ஒரு வருடம்தான் இந்த உறவு தொடங்கி, எனக்கு நல்லாய் நினைவுகூட இருக்கு. மன்னாரிலே பனங்கட்டிக் கொட்டிலில் அகதியாய் அம்மமாக்களோடு இருக்கக்கேல ஒரு நாள் இரவு ஒன்பது மணியிருக்கும் எண்டு நினைக்கிறேன். மாமி ரெலிபோன் எடுத்து அம்மாக்கிட்ட கல்யாணம் சம்மந்தமாக கேட்டா. அம்மா என்னட்ட கேக்காமலே ஓமெண்டு சொல்லிப்போட்டா.... வெளிநாட்டுச் சம்மந்த மல்ல! அதுமட்டுமல்ல அம்மா சொல்லுத் தட்டாத பிள்ளையல்ல. நான், எப்படியோஇங்க வந்து சேர்ந்துட்டன். வாழ்வுதான் திசை தெரியாமல்இருக்கிறது. கவிதாவை கல்யாணம் செய்வதா....? நினைக்கவே மனசு எரிச்சல அடைகிறது. வாழ்வின் நெளிவு சுழிவு தெரியாத எனக்கு, வாழ்க்கைத் துணைவியாய் வருபவள்..? எந்தக கோணத்தில் பார்த்தாலும், அவளின் அந்நிய கலாச்சாரத்துக்குள் என் மனம் அடங்க மறுக்கிறது. நெஞ்சு நொந்து சுருங்குகிறது.

"தம்பி என்ன மோன கடுமையாய் யோசிக்கிறியள்?" மாமி கேட்டதும் நினைவிலிருந்து சுயத்திற்கு வந்தேன்.

"என்ன தம்பி எத்தனை நாளாய் போய்ச்சு....ஒருநாள் கூட மனம் திறந்து கதைச்சது கிடையாது. வேலைக்கு போறாள், வாறாள், சாப்பிறாள், தன்ர பாட்டில போய் நெத்திர கொள்ளுறாள். விடிய எழும்பினா வேலைக்கு போறாள். இதென்னெண்டு ஒண்டுமா புரியல....? இங்க என்ன தம்பி....பெரிய மனுசங்க எண்டு யாரையும் மதிப்பதில்லை. எத்தனை தாய் தேப்பன்மார் பெத்துப்போட்ட பிள்ளைகளை நினைச்சு கண்ணீர் வடிக்கிறாங்க....நான் என்னால ஆனமட்டும் அவளுக்கு புத்திமதி கூறிப்போட்டேன் அவளும் கிறுங்கிற மாதிரி தெரியல...."

சற்று மௌனித்து விட்டு மீண்டும் தொடங்கினா...

"கல்யாணம் பேசும் போதே இவள் விருப்பமில்லையெண்டு சொல்லிந்தால் இந்தளவுக்கு வந்திருக்காது. இப்ப என்னண்டால் நீங்க வந்த பின்ன மூஞ்சியைக் காட்டிக் கொண்டு

திரியிறாள். என்ர இவர் இருந்திருந்தாலும் ஏதாவது சொல்லிக்கில்லி ரிக்கட்டிப் போடுவார். அவரை கோதாரியில வீழந்து போன, பிரண்டு போன, இந்தியன் ஆமிக்காரன் கடலுக்கு போய்விட்டு வரக்கில சுட்டுப் போட்டானுங்க. அதிலயிருந்து ஊரக்குள்ள இருக்கவே பிடிப்பில்லாமல் போய்ச்சுது. எனக்கு அப்பதான் கவிதா ஸ்பொன்சர் பண்ணி எடுத்தவள். வந்ததிலிருந்து ஒருதாய் எண்டு என்ன மதிச்சு நடந்தது கிடையாது. என்ன செய்யிறது. "..தென்னையைப் பெற்றால்இளநீரு, பிள்ளையப் பெற்றால் கண்ணீரு என்று தெரியாமல்தானா பாடினாங்க..." மாமியின் கண்கள் கலங்கியது.
நான் கண் வெட்டாது, மாமியின் பேச்சையே உன்னித்துக் கேட்டுக் கொண்டிருந்தேன்.கொஞ்ச நேரத்தால மாமி விம்மி....விம்மி அழத்தொடங்கினா. அழுது கொண்டே...

"என்ர இவர் தங்கப்பவுண். நான் கல்யாணம் செய்யிறத்து முதல் அவர்கூட பேசியதே கிடையாது. ஒரு முறையில் பார்த்தால் அவர் சொந்தம் தான். எங்கட வீட்டுக்காரரும், அவங்கட வீட்டுக்காரரும் பேசித்தான் எங்களுக்கு கல்யாணம் பண்ணி வைச்சாங்க நான் கூட பெரிசாப் படிச்சது கிடையாது. இவர் களங்கண்ணி வலைத் தொழில் சாகிற வரையும் செய்தவர். சிகரட் குடிப்பழக்கம் கிடையாது. வெத்திலை பாக்குக்கூட போடுறது கிடையாது. ரியாய் உங்களைப் போல தான் அவற்ற குணம். வலைஇழுக்க சாமத்தில போகக்கில என்ன எழுப்புங்கோ. நான் தேத்தண்ணீ போட்டுத் தாறன் எண்டு சொன்னா அவர் சொல்லுவார், "நீ ஏன்ரி அந்தச் சாமத்தில எழும்பி உன்ர நித்திரையை குழப்பிறாய். நான் போகக்கில சந்தியில காக்கவட கடையில ஒரு தேத்தண்ணீ குடிச்சிட்டு போறனடி" எண்டு சொல்லுவார். நல்ல மனுசன். வீட்டில சும்மா எண்டு இருக்க மாட்டார். விறகு கொத்தித் தருவார். மிளகாய்த்தூள் இடிச்சுத் தருவார், வலை பொத்துவார். நான் கொஞ்ச நேரம் கூட அவர விட்டிட்டு இருக்க மாட்டன். எங்கயும் வெளியால அவர் போனவரென்டால் எப்ப வருவார்.... எப்ப வருவார் எண்டு வாசலிலேயே பார்த்துக் கொண்டிருப்பேன். அவரும் அப்படித்தான் எங்கயும் போனால் நேரத்தமினக் கெடுத்தாமல் சுறுக்கென்று வந்துடுவார்.இதென்ன இந்தக் காலத்து புள்ளயல நினைச்சாலே கவலையாய் இருக்குது. இவள் கவிதாவிக்குப் புறகு எங்களுக்கு ஒரு புள்ளயும் பிறக்கேல அதால அவளை கொஞ்சம் செல்லம் கொடுத்து வளத்திட்டோம். மாமியின் அழுகை கொஞ்சம் கொஞ்சமாய் குறைந்து கொண்டு வந்தது. கனத்த அழுகுரல் அடங்கிப் போகவும். தொலைபேசி கிணுகிணுக்கவும் ரியாய் இருந்தது. மாமி தொலைபேசி இருக்கும் இடம் தேடிப் போய் தொலைபேசியை எடுத்து "கலோ" என்று மாமி சொல்ல....மறுமுனையிலிருந்து ஏதோ குரல் வர....

"இரு கவிதாவ?" என்று மாமி கேட்டா.

இனியும் இந்தக் கதிரையில் தொங்கிக் கொண்டிருக்க மனம் இடம் கொடுக்கல. சடக்கென எழும்பி படுக்கை அறைக்குள் வந்தேன். இனம்புரியாத சந்தேகம் இதயத்துள் குடிகொண்டது.

குந்திதேவி கர்ணனைப் பெற்றதும் தன்மான உணர்ச்சி காரணமாய் தன் பெற்ற மகனேயே கங்கையில் விட்டது போல் கவிதாவையும் பிறந்தவுடன் அவள் குணத்தை மாமி அறிந்திருந்தால் கட்டையடி முனங்கால எறிந்திருப்பாளோ கவிதாவை..... என்னுள் தேங்கிக் கிடந்த தேக அலுப்பும், வேதனையும் கண்ணீர் வழி கசிந்தது. உடலுழைப்பில் உரமேறிய உடலில் சந்தேக வலை மாயமாய் வந்து மடிந்து கொண்டது. கவிதாவின் வாழ்வின் மேல் இருந்த என் மதிப்பீடுகள் மங்கிப்போய் மாமியின் மீது சந்தேகம் படர்ந்தது.

மாமி வேணு மெண்டு திட்டமிட்டு இந்தக் கதை கதைக்கிறவ...? அச்சம், அருவருப்புத் தன்மையோடு என்னுள் அரியாசனம் ஏறியது.இவகாட்டும் பா¢வும் பாசமும் என்மீது எதற்காக......? ஆர்வத்தை நாசுக்காக புலப்படுத்தி தன்மனதில் இடம் பிடிக்கிற முயற்சியா?

அறுபதோ, அறுபத்தெட்டோ தெரியல.இந்தக் கிழட்டு வயதுக்கு ஒரு பொடியன் தேவையாக்கும். தன்ர புருசன்ர குணம் மாதிரி எண்டு என்னைப் பார்த்து எந்தத் துணிவில சொல்லுவா? கனடாவில பொம்பிளையல் ரியில்ல எண்டு ஊரில இருக்கேக்க சொன்னவிய அது சரியாய்ப் போச்சு. நேற்று தலையிடிக்குது எண்டு சொன்னவுடன் பாஞ்சு விழுந்து ஓடிவந்து நெத்தியில விக்ஸ் தடவி விட்ட வடிவை பார்த்தாலே அவ வேற பிளான்னில என்ன மடக்கப் பாக்கிற போல. எனக்குள் இருந்த கோபம் ஐயமற்று மாமியில் முடங்கியது. இன்டைக்கு இரண்டில் ஒண்டு பார்க்கத்தான் வேணும் எண்டு நினைத்துக் கொண்டு கதவைத் திறந்து வெளியால் வருவதற்கும், திடீரென வந்த ஒப்பாரிச் சத்தத்துடன் நான் திறக்க வந்த கதவை மாமி தட்டவும் ரியாய் இருந்தது.

"தம்பி....தம்பி...." என்று தலையில அடிச்சபடி நின்ற மாமியின் கோலத்தைக் கண்டதும், கொப்பளித்துக் கொண்டு வந்த கோபம் பெட்டிப் பாம்பாய் அடங்கியது.
என்னங்க....என்னங்க.... என்னங்க நடந்துட்டெண்டு சொல்லிப் போட்டுத் தான் அழுங்களன்?

அது ஏன் கேப்பான்..? அந்த தலையால தெறிச்சுப் போவாள், கவிதா யாரோ கயனாக் காரனோடு வேலை செய்யிற இடத்தில பழக்கமாம். அவனோடயே தான் இருக்கப் போறன் எண்டு சொல்லிப் போட்டுப் போறாள். குறுக்கால விழுந்து போவாள். பெத்து வளத்துவிட்ட நன்றியையும் மறந்துட்டு எளியன்தனமான வேலை செய்து போட்டாள். "..அவள் செத்துப் போய்ற்றாள்...அவள் செத்துப் போய்ற்றாள்...." என்று சொல்லி நெஞ்சில அடிச்சு அழுது கொண்டிருந்தா மாமி. நான் மலைத்துப் போனேன்........எதுவும் பேசாமல் ஊமையாய் நின்றேன். பிள்ளையைப் பிரிந்த பிரிவு ரேகை முகத்தில் இழையோடியது .விழிகள் சிவந்து வீங்கியது . அழுகை நின்ற பாடில்லை, அவ அவமானப்பட்டது போல் துடித்து அழுதுகொண்டே பார்வை என்னில்

நிலை நிறுத்திக் கொண்டு, “நான் செத்துப் போனால்.., கொள்ளி வைக்கிறது நீங்க தான். என்னுடைய பிள்ளை நீங்கதான். நான் லோயரோட கதைச்சு இங்கேயே இருக்கிறதுக்கு ஏற்பாடு பண்ணுறேன். நான் தனிக்கட்டையில்ல எனக்கு ஒரு மகன் இருக்கிறான் என்ற சந்தோசத்தில வாழந்து செத்துப் போவேன்.மாமி சொல்லும்போது என் மனக் கண்கள் என்னையறியாமல் அழுதது. என் தவறான கணிப்பு தகர்ந்து, கோபங்களெல்லாம் சிதிலமாகி.., கழிவிரக்கம் கொண்டது. நான் இழந்த தாயே என் முன்னால் நிற்பது போல் தோன்றியது. ஐயமும், அச்சமும் அகன்று அகல் விளக்கொளியொன்று என்னுள் படர்ந்தது.

பதிவுகள் ஜூலை 2002 இதழ் 31

## 6. **வாழ முற்படுதல்.......** - **-டானியல் ஜீவா-**

"ஏனுங்க விடிய எழும்பி வேலைக்கும் போகாமல் அழுதுகொண்டு இருக்கிறியள்"

அழுதுகொண்டு இருந்த சாந்தனைப் பார்த்து கனிமொழி மெல்லிய குரலில் கேட்டாள். அப்போது தான் கனிமொழியும் பிள்ளையும் எழும்பியதைக் கண்டான்.

"ஒன்றுமில்லை கனிமொழி" என்றான்.

"இப்படித்தான் ஒன்றுமில்லை ஒன்றுமில்லை என்று எத்தனை நாளைக்குத் தான் இந்த அரியண்டத்துள் வாழ்வது. இரவு பகலாய் கண்விழித்து மாடாய் உழைத்தும் உங்களுக்கு இந்த நிலை. ஒரு நாள் இரண்டு நாளெண்டல்ல நித்தமும் இதே கூத்தாகத்தான் இருக்கு. ஏன் நீங்க அழுகிறீங்க எண்டு எனக்குத் தெரியாதோ நேற்று உங்கடஐயா பேசினதை நினைச்சுத்தான் கவலைப்பட்டு அழுகிறியள்"

"இல்லையம்மா".

கனிமொழியை அவன் அம்மாவென்று தான் அழைப்பது வழக்கம். அவள் ஆழ்மனதில் ஆழமாக பதிவாகிய எண்ணங்களுக்குள்சுழன்றடித்தது மனம்....ஒவ்வொரு நிகழ்வாய் மலர்கோத்து மகிழ்ந்தது. தன்னை அம்மா என்று அழைத்ததை நெஞ்சில் பசுமை நினைவுகளால் நிறைத்தாள். அந்நிகழ்வை இதயத்தில் இருத்திவிட்டாள்.

"என்னை அம்மா என்று ஏன் அழைக்கிறீர்கள்?"

கனிமொழி அடக்கமான குரலில் கேட்டதற்குச் சாந்தன் சொன்னான்.

"நான் உங்களை என் அம்மாவுக்கு நிகராக நினைக்கிறேன் அதனால்தான் .... உங்களைப்பிரியவேண்டி வந்தால் என்னால் உயிர்வாழ முடியாது என்று நான் சொல்லவில்லை. ஆனால் உங்களைப் பிரிந்த வாழ்வு எனக்கு வாழ்வாய் இருக்காது. அது ஏதோ உயிரற்ற உடலாய் இருக்கும்"

"நானும் அதே போல் தான் நான் உங்களை அத்தான் என்றே அழைக்கிறேன். ஆனால் என்னைப் பொறுத்தவரையில் அம்மா, அப்பா, கடவுள் எல்லாம் நீங்கள் தாங்க" கனிமொழிசொல்லும் போதே கண்களில் ஈரக்கசிவுகள்.

தன் கணவர் எவ்வளவு முரண்பாடுகளும் தங்கள் பெற்றோருடனும் ஏற்பட்டபோதும் சாந்தன் தன்மீது கொண்ட அன்பில் சிறு மாற்றமும் இல்லாத வாழ்வை நினைத்து பெருமைப்பட்டாள். அவள் சாந்தனைப்பற்றி கோர்த்து வந்த வாழ்வு நிறைவாகத் தான் அவளுக்குக் கிடைத்தது. இன்னும் சொல்லப்போனால் அவள் எதிர்பார்த்ததை விட. ஆயினும் தன் கணவரை சுடுசொல்லால் கொடுமைப்படுத்துவதைத் தான் அவளால் தாங்க முடியவில்லை.

கொழும்பில் வருடக்கணக்கில் நிற்கும் வரை லொட்சுக்கு காசும் சாப்பாட்டக்கு பணமும் பிள்ளை தான் அனுப்ப வேண்டும். ரெலிபோன் எடுக்காட்டியா அவர் வாங்குகின்ற பேச்சு கொஞ்சநெஞ்சமா? ரி மாமா படிக்கவைத்தார். பிள்ளையை வளர்த்தார் இல்லையெண்டு சொல்லேல. அதற்காக பிள்ளையை இப்படியுமா கஸ்ரப்படுத்தவேண்டும். குடிக்கிறதற்கு காசு கொடுக்கேல்லை எண்டால் வெல்பெயாருக்கு அடிப்பனடா எண்டும், தொட்டதற்கும் பட்டதற்கும் தன்னைப்பார்ப்பதில்லை எண்டு தான் குறை. நான் வந்து மூன்று மாதத்திலேயே என்னென்ன காரணமெல்லாம் சொல்லி வெல்பெயார் எடுக்கத்தொடங்கிட்டாங்க. இனியாவது பாவம் அவங்க இளம் குடும்பம் வாழட்டும் எண்டு விடுவதும் கிடையாது. போகவர ஒவ்வொரு குத்தல் கதை சொல்லி அழவச்சிடுவாங்கள். கனிமொழி மனதால் நினைத்து திட்டித்தீர்த்தாள்

"கனிமொழி..... என்னம்மா?"

சாந்தனின் அமைதியான குரல் கேட்டு சோகம் தேங்கிய விழியோடு நிமர்ந்தாள். கண்குவளைக்குள் இஇருந்து கண்ணீர்த் துளிகள் சித்திரம் வரைந்தது. கெஞ்சும் கண்கள் பா ¢தாபமாய்ப்பார்த்தது.

"என்னதான் இஇருந்தாலும் உங்கட ஐயா இப்படி பேசியிருக்கக் கூடாது. தண்ணீ மூக்கு முட்ட போட்டா காரணமற்ற கொழுவல் போடுவது உடலோடு ஊறிப்போயிற்று உங்க ஐயாவுக்கு" சொல்லிக் கொண்டு கனிமொழி அழுதாள். சாந்தன் மனதைத் தேற்றுவதற்காக கனிமொழி பக்கத்தில் நெருங்கி கண்ணீரைத் துடைத்தான். அவள் மார்பில் சாய்ந்து தேம்பித்தேம்பி அழுதாள்.

“அழுகைதான் வாழ்க்கையா”?

அவன் வலக்கரம் கொண்டு தலையை தடவிக்கொடுத்து குழம்பியிருந்த மயிர்களை நீவி விட்டான். அவனுள்ளும் அழுகை தேங்கி நின்றது. ஆயினும் அவன் அழவில்லை. தன் மனதை தேற்றினான்.

“அத்தான் நீங்கள் என்நெஞ்சோடு சாயும் போது ஒரு சுகம் எனக்கு வருமே அந்தச்சுகம் எப்போதும் என்கூடவே இஇருக்க வேண்டும். என் மார்பில் உங்கள் தலை புதைத்து என் முகத்தை அண்ணார்ந்து பார்ப்பீர்களே.......அந்த பார்வை எப்போதும் என்கூடவே இருக்க வேண்டும். நான் உயிரோடு இருக்கும் வரையில் உங்களை கண்கலங்க விடமாட்டேன். எனக்கு எல்லாம் நீங்கள் தான் எண்டு தான் வந்திருக்கிறேன். அதே போல் தான் உங்களுக்கு எல்லாமே நான் தான் என்று நினைக்கிறேன். உங்களுக்கு ஒரு காய்ச்சல் வந்தால் கூட என்மனம் தாங்காமல் தவிக்கிறது. அந்த காய்ச்சல் எனக்கு வந்திருந்தாலும் பரவாயில்லை என்று கூட நினைப்பேன். சில வேளைகளில் உங்கள் மனம் படும் வேதனையை என்னால் பார்த்து சகிக்க முடியாமல் இருக்கிறது"

“கனிமொழி........."

"என்னுங்க”?

"இப்படி பெரியவர்த்தையெல்லாம் சொல்றெங்கே......."

ஒரு கணம் கனிமொழியின் முகத்தை கீழ்நோக்கி பார்த்தபோது அவளின் கீழ்த்தாடையோடு மோதுண்டு நின்றது முகம்.

“உங்க மூக்கு அழகாயிருக்கு”....... அவன் எதையோ சொல்ல நினைத்து இப்படியொரு வார்த்தையைப் போட்டான். கனிமொழியின் மனதை மகிழ்ச்சிப்படுத்துவதற்காகவே அப்படிச் சொல்லியிருக்கலாம். ஆயினும் அவள் எந்தவித அசுமாத்தமும் இல்லாமல் அவள் முகம் கிடந்தது.

"கனிமொழி நீங்க கொழும்பில் நிற்கும்போது ரெலிபோனில் சொன்னது நினைவிருக்கா........?"

“எதைப்பற்றியுங்க? நிறைய நீங்க கதைச்சனீங்க. எதுவெண்டு தெரியல?"

"நம் குழந்தையை என்னால் சுமக்கமுடியுமென்டால் நானே சுமப்பேன் என்று சொன்னேனே நினைவிருக்கிறதா?"

"ஓமொம்..... அதையேன் இப்ப நினைவுபடுத்திறீங்க?"

"நீங்க சொன்னேங்க பெண்குழந்தை எண்டால் ஐந்து மாதம் நீங்கள் சுமப்பதாவும் ஐந்து மாதம் என்னையும் சுமக்கச்சொன்னீங்க. ஆண் குழந்தையென்றால் பத்து மாதமும் நீஙகளே சுமப்பதாக சொன்னீங்க. ஆனால் பெண்குழந்தை தான் நமக்குப் பிறந்திருக்கு ஆயினும் நீங்க தான் பத்து மாதமும் சுமந்து பெற்றிருக்கிறீங்க. அப்பவே கேப்பமென்று மறந்து

போனேன். ஏன் பெண்குழந்தை விருப்பம் இல்லையா? சீதனம் கொடுக்கவேண்டும் என்டதற்காகவா?"

“அப்படி நான் நினைக்கேலேயங்க. எனக்கு உங்களைப்போல குணத்தோடு ஒரு ஆண்முதலில் தேவையுங்க  பின்னர் எப்படிப் பிறந்தாலும் பரவாயில்லங்க"

“ஏனுங்க உங்களைப் போல் பெண்ளை உங்களைப்போல குணத்தோடு பிறந்தால் சரியில்லையாங்க”?

சற்றும் எதிர்பாரத பதிலை கேட்டு முகத்தில் மந்தகாசம் பூத்தது.

"இப்படியே கதையைச் சொல்லி சொல்லி என்னை சிரிக்க வைத்து விடுவீங்க. நான் தான் உங்கள் மனக்கவலையைத் தீர்க்க மருந்து என்னும் கண்டுபிடிக்கவில்லை?" என்றாள்.

“நீங்க வேலைக்கு போவதற்கு முதல் உங்களுக்கு வேண்டியதை எல்லாம் செய்துவிட்டு வேலைக்கு அனுப்பின பின்தான் நான் தேனீர் கூட குடிப்பேன். நீங்க வேலைக்கு போன பிறகு நான் நானாக இருப்பதில்லை.எப்போது நீங்க வருவீங்க என்று எதிர்பார்த்தபடியே என் மனம் துடித்துக்கொண்டிருக்கும். என் கண்காண உங்கள் கண்ணில் தூசி கூட விழவிடமாட்டேன். அந்தளவு உங்கள் மீது கண்ணும் கருத்துமாக இருப்பேன்"

"மெய்தானா.......?" சாந்தன் கேட்டான்.

"ஓமுங்க.... உங்களை நம்பித்தான் கனடா வந்தனான். உங்களைத்தவிர எனக்குயாரு இருக்கிறாங்க........"

சாந்தன் மெல்லிய குரலில் "என்னால் முடிந்தவரை உங்களுக்கு வாழ்க்கைத் துணையாய் இருப்பேன். அதேபோல் நீங்கள் என் வாழ்க்கைத் துணையாக இருக்கவேண்டும். அதைவிட்டுட்டு எனக்கு வேலைக்காரியாக இருப்பதை நான் விரும்பமாட்டேன். அப்படி உன்மனதில் இருந்தால் அதை அடியோடு வெட்டியெறிந்து விடும். குடும்பம் வாழ்வுக்கு அடிப்படை புரிந்துணர்வுதான்.  ஒருவருக்கொருவர் விட்டுக்கொடுத்து வாழ்வது தான் வாழ்க்கை"

"ஏதோ பெண்விடுதலை என்றெல்லாம் கதைப்பாங்க அதையா நீங்க சொல்லிறியள்?"

"எனக்கு அது பற்றி எதுவுமே தெரியாது. ஆனால் எனக்குச் சமமாக நீ இருக்கவேண்டும். என் உயிர் நீதான். இந்தச் சொத்துடமைச் சமூதாயத்தில் நீ எனக்கென்று எழுதப்பட்ட சொத்தாக நான் நினைக்கல. எந்த நிலையிலும் நீ சுயமாக என்னோடு வாழ்வது

பற்றி முடிவெடுக்கலாம்"

சாந்தனின் அப்பழுக்கற்ற மனதின் வெளிப்பாட்டை ஆமொதிப்பது போல் தலையசைத்தாள்.

வைகறைப்பொழுதில் கண்சிவக்கச் சிவக்க எழும்பி அரையும் குறையுமாக அவசரப்பட்டு வேலைக்கு ஓடி அந்த வேலை முடிந்தவுடன் அடுத்த வேலைக்கு பஸ் எடுத்து ஓடி உடலைத் திண்ணும் இரவு ஓய்ந்து உறங்க கனவெல்லாம் சிதையும். வாழ்வு கரையும். சாந்தனுக்கு கனிமொழியின் இருப்புத்தான் அவன் மனதின் காயங்களுக்கு செப்பனிட்டது. அவளின் வருகையால் தான் மண்ணில் வேரோடிய காதல்கொடி கனடாவில் பூத்துக்குழுங்கியது. ஒரு ரோஜ¡வனத்தைப் பார்க்கின்ற அழகு சாந்தனுக்குள் எழும். ஏதேனும் கதைத்துக் கொண்டிருக்கும் போது கூட சாந்தனை உதாரணமாய் சொல்லிக் கொள்வாள். கனிமொழி என்ற பெயருக்கு நு¡று வீதமும் பொருத்தமானவள். தன்னைப்போலவே மற்றவர்களையம் மதித்து நடப்பவள். பச்சத்தண்ணி அப்பாவி எண்டெல்லாம் சாந்தனால் சொல்லப்படுபவள். சாந்தனின் பெற்றோருக்காக காதலையே தள்ளிவைத்து முதலில் அவர்கள் இங்கு வந்த பின் தன்னை ஸ்பொன்னசர் பண்ணச் சொல்லி வாக்கறுதி கொடுத்துளூ அதன்படி அவள்  நடந்தும் கொண்டவள்.சிறு பிராயம் தொட்டு கனிமொழியின் கண்களில் விழுந்து உள்சதை வரை ஊடுருவிப் பாய்ந்தவன். ஆயினும் சாந்தன் கனடா வந்து ஆறுவருடத்தின் பின்னரே கனிமொழியியை ஸ்பொன்சர் பண்ணி எடுத்தான்.

அவன் மனச் சுமையை இறக்கமுடியாமல் நெஞ்சு பிசைந்து நீண்ட கனம். இருவரிலும் அடர்த்தியான மௌனம் செல் அடித்து ஒய்ந்து கிடக்கும் மண்போல. இதயம் இருண்டு விசாரப் பட்டது. கண்களில் ஏதோ இனம் புரிந்த சோகம் அவனில்.
நினவுச்சூழல் ஊருக்கு போனது...

கனிமொழி!அவன் உயிரில் எழுதிய ஓவியம். கண்களின் பார்வை காதலின் முதல் விதையல்லவா! அன்று தான் சாந்தனும் கனிமொழியும் நேரில் பேசியதாக ஞாபகம் சாந்தனுக்கு. ஒரே ஊர் ஒரே பாடசாலை, ஒரே தெரு சிறு வயது முதல் முளைத்த பார்வை என்றாலும் அன்று தான் முதல் பார்வை. வகுப்பறையில் கணிதபாடத்தில் ஏற்பட்ட சிக்கலைத் தீர்ப்பதற்காக சாந்தனிடம் கேட்க முயன்றுளூ காதல் வலையில் சிக்குண்டாள்

பகல் இடைவேளை எல்லோரும் வெளியில் போய்விட்டார்கள். வகுப்பறையில் சாந்தனும் கனிமொழியும் தான். தூரத்தை விலக்கி மேசைதான் இருந்தது. மெல்ல எழுந்து கனிமொழி நடந்து வந்தாள்.

நிலா பகலில் வந்து ஒளிதெறித்ததுபோல்.

“அவள் நிலவா அல்லது நிலாதான் அவளா”?

ஒரு புன்னகை மலரோடு சாந்தனுக்குப் பக்கத்தில் வந்தாள்.

கனிமொழிதான். மெய்மறந்து நிமிர்ந்தான்.

“என்ன கனிமொழி” என்றான்.

வெக்கத்தால் நாணம் சிவந்த பார்வை வீச்சுக்கள். ஒரு கணம் தான்.

“சாந்தன்.... கணித பாடத்தில் ரீச்சர் சொன்னது விளங்கேல அது தான் உங்ககிட்ட கேட்கலாமெண்டு வந்தனான்" தயங்கித்தயங்கி உடைந்த குரலில் கேட்டாள்.

“ஏன் கனிமொழி..... விளங்கேலேயண்டால் ரீச்சர் கிட்ட கேட்டிருக் லாம் தானே”? எடுத்தறிந்து பேசுவது போல் சாந்தன் சொன்னான். ஒரு மயான அமைதி அவளில் தன் மனதில் இருக்கும் ஆதங்கத்தை வெளிப்படுத்துவதற்கு முன்மொழிதல் தருவான் என்று வனப்புடன் இருந்த மனது வாடிப்போனது. உள்ளம் வெந்து கண்கள் உருகிக் கலங்கின.

“என்ன கனிமொழி ஒரு மாதிரிப்போச்சீங்க.”?

“ஒண்டுமில்ல”.......

“ஒரு சிக்கல் கேட்க வந்த எனக்கு முகத்திலே அடிச்சமாதிரி பதில் சொல்லிவிட்டீங்க ஒரு பெண்ணை புரிந்து கொள்கின்ற பக்குவநிலை உங்களிடம் இருக்கெண்டு.”

சொல்லி முடிப்பதற்குள்..

"ரி... ரி... என்ன சொல்லிப்போட்டேன். கொஞ்சம் பகிடியாக பேசவேண்டுமெண்டதற்காக அப்படிச் சொன்னேன். அதற்குள்ளே இவ்வளவு தவறான புரிதல் உங்கள் மனதில் எழுந்து விட்டது. ஏதும் புண்பட சொல்லிவிட்டேன் என்றால் மன்னித்துக் கொள்ளுங்கள்"

"நான் உங்களை மன்னிக்கிறதா? என் மனதில் தெய்வமாய் வைத்து நினைத்து வணங்கிக் கொண்டிருக்கிறேன். நானா உங்களை மன்னிக்கிறது"

அடுத்த வார்த்தை சாந்தனிடம் இருந்து வருவதற்குள் வகுப்பறையை இடைவேளை மணி நிரப்பியது. அது தான் அவர்கள் இருவரும் பேசிக்கொண்ட வார்த்தைகள்.

அன்று தொடக்கம் தன் மனதை பறிகொடுத்து காதல் அவளில் விழித்தது அவன் உற்றுப்பார்க்கிற இஇடமெல்லாம் அவன் உழைப்பே வியாபித்துக் கிடக்கிறது. தொடர்மாடிக் குடியிருப்பில் வாடகைக்கு எடுக்கப்பட்ட இரு அறைகொண்ட வீடு தான் ஆயினும் அவன் இரவும் பகலும் உழைத்தவையெல்லாம் தன் தாய், தகப்பன், சகோதரர்கள் என்றே கரைந்து போன கனேடிய டொலர் ஒவ்வொன்றும் அவன் மனதுக்குள் முண்டியடித்து முண்டியடித்து நேற்று நிகழ்ந்தது போல் பின்னல் கொடியாய் படர்ந்தது. இடி மின்னலாய் நெருப்புடன் நெஞ்சில் இறங்கியது.

இரவு கண்விழித்து விழிப்பின் அசதி அவனில்..........சற்று கனிமொழியின் மடியில் கண்மூட

“டொக்...டொக்.....டொக்....என்று கதவு தட்டும் சத்தம் கேட்டது.கனிமொழியின் மடியிலிருந்து எழுந்தான்.

"கனிமொழி ஒழும்பி கதவைத்திறந்து விடுங்கோ"

அவள் கேட்டும் கேளாதது போல் இருந்தாள்.

"யாருமா...? உங்கட ஐயாவும் அம்மாவும்தான். கோயிலுக்கு போயிற்று வருவினம். அவயிட்ட திறப்பு இருக்குத்தானே திறந்து வரட்டும்..ஐக்கட்டுக்குள்ள இருக்கிற துறப்பை எடுத்து திறக்க பஞ்சியாக்கும்"

மீண்டும் டொக்..டொக்.. என்ற சத்தம் கேட்டது.

கனிமொழி எழுந்து கதவைத் திறக்கவில்லை. அவர்களே திறந்து உள்ளே வந்தார்கள்.உள்ளே வந்த வேகம் வித்தியாசமாக இருந்தது.நடையில் புதிய தென்பு முளைத்தது சாந்தனின் அம்மாவிற்கு. மனதை அழுத்திக்கொண்டு கண்களில் தீ பரவ முகத்தில் கோபத்தின் கீறல்கள். ஏதோ முனகினாள்

அவ்வளவுதான் கனிமொழிக்கு நெஞ்சிலிருந்து நெருப்பாறு பீறிட்டு எழுந்தது போல் என்றுமில்லாதவாறு கோபம் வந்தது. ஆயிரம் ஆயிரம் கனவுகளின் சிதிலங்கள் அவள் மனதில் இருந்து உடைந்து பனிப்படலமாய் உறைந்து இறுகியது. என்றெனும் இல்லாத போக்கில் அவள் தன்னை மாற்றிக்கொண்டாள். இது தற்சயலாக எழுந்த நிகழ்வா? இல்லை தானாக உள்ளுக்குள் விதையாக மலர்ந்ததா? எப்படியோ அவள் கோபம் கொண்டாள்.

"மாமி நீங்க நீனக்கிற மாதிரி என்ர புரசன் நோஞ்சாண்டியில்ல. அவர் வெட்கத்திற்காக வாயை மூடிக்கொண்டிருக்கிறார். உங்கட எளியந்தனமான வார்த்தையெல்லாம் கேட்டு எங்களுக்கு வாழவேண்டிய தலையெழுத்தல்ல. வீட்டுப்பிரச்சினைகள் வெளியில் தெரிந்தால் வெட்கம் என்டதற்காக மெனமாய் வாழ்கிறோம். இனிமேல் அவரைப் பற்றி ஏதேனும் கதைத்தால் நடக்கிற வேற "என்றாள் கனிமொழி

அவ்வளவும்தான்.. வந்தவர்கள் வாயடைத்துப்போய் நின்றார்கள்.

பதிவுகள் மே 2002 இதழ் 29

7. **திரேசா - நாவாந்துறை டானியல் ஜீவா-**

நள்ளிரவு இரண்டு மணியைக் கடந்தும் தூக்கம் வராமல் தூரத்தே செல்ல; என் கால நகர்வில் கடந்து சென்ற ஐந்தாண் ஆண்டுகளுக்கு முன் முற்றுப்பெற்று விட்ட அந்த மனிதத்தின் நினைவு எனக்குள் ஓடத்தொடங்கியது. .வயதெல்லை தாண்டி வார்த்தைகள் வலுவிழந்து மானிடமே ஒவ்வொரு கணமும் மரணித்துக் கொண்டும் மரணத்தினுடாக வாழ்வைத்தேடுகின்ற மைந்தர்களில் திரேசாவின் இழப்பு ஆயிரத்தில் ஒன்றாக மறைந்து போயிருக்கலாம். ஆனால் என் கண்முன்னே கணப்பொழுதில் சிதைந்து போன அவளது உடல் என் இதயத்தில் ஆழமாய் பதிவாகிவிட்டது. அவளது மரணம் நேற்று நிகழ்ந்தது போல இன்னும் என்னும மனத்திரையிலிருந்து விலகாது ஒட்டிக்கொண்டிருக்கின்றது. என்னில் எழுந்து பின் மறைந்து போகின்ற நிகழ்வுகளைப்போல் அல்லாது என் இதயமே வெடித்திடும் போல் இருக்கின்றது. என் வாழ்வில் முடிந்து போன சோகங்களில் முற்றுப்பெறாத கவிதை வரிகளுக்கு கருப்பொருளானள். . . .

திரேசாவின் மரணம் அந்த மீனவ கிராமத்தை வியப்பில் ஆழ்திய நிகழ்வுதான். அன்று எல்லோர் முகங்களிலும் சோகம் கவிழ்ந்து கிடந்தது ஊர் எங்கும் வீசிய உப்புக்காற்றுக் கூட இழப்பைத் தாங்கிக் கொள்ளும் முடியாமல் சோகத்தை சுமந்தபடி சென்றது. மண்ணுக்குள் நேர்ந்த மாரடைப்ப¨ நிணைந்து என் செஞ்சே தீப் பிளம்பானது. இருள் விலகிடாப் பூமியில் இன்னுயிர் ஈந்தும் முடிவவுறாத சோகங்களுமே சொந்தமாயின. அடிவானத்தைக் கடல் குடிக்க உயிர்களை இரும்பு உண்ணும். வைகறையின் சத்தம் அதிகாலை ஆறு மணியை நினைவு படுத்திக் கொண்டிருக்கும்.

தொழிலாளர்களும் காக்கை தீவு செல்கின்ற மீன் வியாபாரிகளும் நாவந்துறை மீன் சந்தைக்கு முன்பாக கூடுவார்கள். நாவாந்துறை சந்தை நாவலர் வீதியும் காரைநகர் வீதியும் சந்திக்கும் இடத்தில் அமைந்துள்ளது. யாழ்ப்பாணத்தில் உள்ள மீன் சந்தைகளில் ஓலளவு வசதியாக உள்ள சந்தைகளில் நாவந்துறை மீன் சந்தையும் ஒன்று. இறைச்சி வகைகளும் மரக்கறி வகைகளும் உட்பட விற்பனை செய்யப்படுகின்றன. இச் சந்தையில் இருந்து காக்கை தீவுச் சந்தை ஒன்ரரை மைல் தொலைவில் உள்ளது. விடியற்காலை ஏழு மணியில் இருந்து பதினொரு மணி வரை கூடி பின்னர் கலையும். நாவாந்துறைச் சந்தை பன்னிரண்டு மணிக்குத் தொடங்கி பிற்பகல் வரை நீடிக்கும்.

இரண்டு மீன் சந்தைகளிலும் வியாபாரம் செய்பவர்களில் திரேசா ஒருத்தி. சந்தைக்கு முன்பாக தேனீர்க் கடையும் இருக்கின்றன. பின்பக்கமாக அழகிய கடற்கரை இருக்கின்றது. இந்தக் கடலை நம்பியே இங்குள்ள மீனவர்கள் வாழ்கிறார்கள்.
கரையோர்தில் மேவப்பட்ட வெண்மணல் புதிய அழகை கொடுத்துக் கொண்டிருந்தது. காலப்போக்கில் அங்கொன்றும் இங்கொன்றுமாக குடிசைகள் முளைக்கத் தொடங்கின.

திரேசா தேனீர்க் கடை வாசல் படியில் நின்ற படி ""கடகத்தை கொஞ்சம் இறக்குமோன"" என்று விடுவலை வானைப் பார்த்துக் கொண்டிருந்த ரவியிடம் சொன்னாள். இறக்கிய கையோடு கபூர் காக்காவிடம் கூடான தேனீர் போடச் சொன்னாள். கபூர்க்காக்காவின் தேத்தண்ணிக் கடையில் வாடிக்கையாளர்களில் திரேசாவும் ஒருத்தி. காலையில் காக்கை தீவு மீன் சந்தைக்கு போவதற்கு முதல் கப'ர்க்காக்காவிடம் ஒரு பிளேன் ரீ சுடச்சுட குடித்துப் போட்டுத்தான் கால் நடையாக காக்கை தீவுக்கு போவது வழக்கம். தனக்காக எதையும் சேர்த்து வைக்காது பிள்ளைகளின் வாழ்விற்காக உழைத்து ஓடப் போனவள் நீண்டு நெடுத்த உடல்கட்டும் ஒன்று இரண்டு கறுப்பைத்தவிர வெண் நாரையின் நிறம் போல் தலைமுடி வெளுத்துப்போன சீத்த ச் சட்டையும், பச்சை நிற நு¡ல் சேலையும், இடுப்பினில் துணிப்பையும், அதன் பக்கமாக செபமாலையும் இதுதான் அவளது வெளித்தோற்றம். அனால் அவளது மனசு கடலைப்போல் எல்லையற்று, பரந்து விரிந்து கிடக்கின்றது. மனித நேயம் மடியினில் அடைகாத்து வைப்பாள் வாழ்வின் ஒவ்வொரு நெருக்கடியையும் தன் அறிவுக்கேற்ப வெற்றி கொண்டு வாழ்பவள். காலை எழுந்ததும் தேத்தண்ணீக்கடை, காக்கை தீவுச் சந்தை , நாவாந்துறைச் சந்தை வடு£ திரும்பியதும் கோடிப் பக்கமாக கடகத்தையும், சுளகையும் கழுவி வைத்து விட்டு, சின்னத்தூக்கம். அழுந்ததும் கிழவிகளோடு ஊர்க்கதை பின்னர் ஓலைக் குடிசையில் ஒட்டுத்தூவாரத்தில் உறைவிடம் மீன்டும் அடுத்த நாள் காலை காக்கை தீவை நோக்கி இப்படியோ அவளது பத்து வருடமும் ஓடியது. இந்த மீன் வியாபாரத்திற்கு வருவதற்கும் அவளுக்குள் ஒரு சோகம் ஒளிந்து கடந்ததை மறக்கமுடியாது.

ஒவ்வொரு வணி பதினைஞ்சும் இங்கு பரலோகமாதா திருவிழா நடைபெறும் ஒன்பது நாள் நோவினையும் ஒரு நாள் பாடல் பூசையுடன் திருவிழாவை சிறப்பிக்க நாட்டுக் கூத்தும் நடைபெறும். இம்முறை கலைக்கவி நீ. எஸ்தாக்கி எழுதி பெலிக்கான் அண்ணாவியாரால் நெறிப்படுத்தப்பட்ட தென்மோடி நாட்டுக் கூத்தான செபஸ்தியார் நாட்டுக் கூத்து நடந்து கொண்டிருந்தது. கிறிஸ்த்தவ மதத்திற்காக தங்கள் உயிரை இன்னுயிர் ஈந்தவர்களில் செபஸ்தியாரும் ஒருவர். இவரின் வாழ்க்கை வரலாற்றைக் கொண்டதே செபஸ்தியார் நாட்டுக்கூத்து.

திரேசா அவளது கணவர் அருளர், பிள்ளைகள் எல்லோருக்கும் நாட்டுக்கூத்தென்றால் உயிர். வறுத்த சோளகம் கொட்டையும், கச்சானும் , சுடுதண்ணிப் போத்தலில் தேத்தண்ணியோடும் மேடைக்கு முன்னால் உட்காந்திருவார்கள்.கடசிசெபத்தியாரின் கட்டத்தை பார்த்துவிட்டுளூவலை இலுக்கப் போகலாம் என்ற முடிவெடுத்து காத்திருந்தார் அருளார். இரவு மூன்று மனியாகிவிட்டது. பனி உதிர்ந்து கொண்டிருந்தது. நட்சத்திரங்கள்வான்வெளியில் விரவிக்கிடந்தன குளிர்நிலாவில் திரேசாவின் தலை ஈரமாகியது.கூத்தும் நடுப்பகுதியை நெருங்கிக்கொண்டிருந்தது வழமை போல் கடசிப்பகுதியில் வரும் செபத்தியார் வேடத்தை அண்ணவியார் பெலிக்கான் அவர்களே

ஏற்று நடிக்கிறார். கடசியில் வரும் யோகன் இராசாவும் வந்திட்டார்ளூ இனிக்கடசி செபத்தியார் வரப்போகிறா¡ர் என்ற ஆவலோடு அருளாரின் கண்கள் அகல விரிந்தன. திரேசாவின் பார்வையும்தான். இயேசுவின் மறுஉருவம்போல் சித்திரவதை செய்யப்பட்ட உடல்காயயங்களோடு சிகப்புநிறடை உடலோடு இறுக்கப்பட்டுளூமேடையில் தோன்றினார் அண்ணாவியார் பெலிக்கான்.காத்திருப்பின் அர்த்தம் உள்ளத்தில் இன்பஉணர்வலையை மீட்டிய கணமே தொழிலுக்கும் போகவேண்டிய கடமை உணர்வும் அவனுள் எழுந்தது.தொழிக்கு போகவில்லையென்றாள் பிள்ளைகள் பட்டினியாய் கிடப்பார்கள் என்று மனதிற்குள் நினைத்துக்கொண்டு தொழிக்கு யுத்தமானன்.

திரேசா நான்போயிற்று வாறேன் என்றார் அருளார். நாட்டுக்கூத்தையே கண்வெட்டாமல் பார்த்துக் கொண்டிநத திரேசா ஒரு கணம் அருளாரை திரும்பிப்பார்த்து ஏனணன இன்னும் கொஞ்சம் தானே இருக்குது தொழிக்கு போகமல் பார்க்கலாம்தானே என்று ஒரே மூச்சில் சொன்னாள். இங்கெரப்பா இண்டைக்கு மங்களம் பாடமாட்டாங்க..... ஏனென்றாள் அடுத்த சனிக்கிழமை நிலவு வந்துவிடும் தொழிக்கு போகத்தேவையில்லை விடிய விடிய பார்க்கலாம் என்று சொல்லிக்கொண்டே புறப்பட்டார் அருளர். கடலில் நீந்தியும்,சுழியோடியும் களம்கட்டி வளைத்தும்,புயலோடும்,அலையோடும் போரடச்சென்ற அருளர் இன்று வரை வீடுதிரும்பவில்லை.மண்டைதீவிலிருந்து வீசிய செல்லுக்கு இரையாகி கடலில் தொலைந்து போனான். அன்று கூத்தும் கும்மாளமுமாய் ஊறிக்கிடந்த மனிதர்களின் முகத்தில் இனம் புரியாத சோகம் கவ்வியது.அருளர் இறந்து முப்பத்தொராம் நாள் முடிய நார்க்கடகமும் சுளகமும் சுமக்கத்தொடங்கியவள் இன்று வரை சுமக்கிறாள்.

திரேசா தேத்தண்ணீயை ஒரு முறடு குடித்து விட்டு வானத்தை அண்ணார்ந்து பார்த்தாள்.அடிவானம் சிவந்து இரவு நிலா குறுகிக் குறிகி கடலுக்குள் கரைந்து கொண்டிருந்தது. அப்போதுதான் காக்கை தீவு போகாமல் நிற்பதை திரேசா உணர்ந்தாள். வெள்ளாப்புக் கொடுத்து விடிவதற்குள் காக்கைதீவு போச்சேர்ந்து விடவேண்டும் என்ற நோக்கில் விறுவிறுப்பாக நடக்கத்தொடங்கினாள். வழமையான நடையைவிட இன்று வேகமாகத்தான் நடக்கிறாள். சொந்த வாக்கையிலும் கூட திரேசா ஒரு நாளோ இருநாளோ நடக்கவில்லை. கிட்டத்தட்ட ஆறு வருடமாக நடதே பழக்கப்பட்டவள்.

மொத்தமாக ஆறு பிள்ளைகள் ஐந்து பெண்களும், ஒரு பையனும். ஐந்து பெண்களுக்கும் தன்னால் முடிந்ததைக் கொடுத்து சீரும்சிறப்புமாக திருமணம் செய்து வைத்தாள். கடைசி மகன் தாசனை பி. ஏ வரை படிக்க வைத்தாள். படித்து முடிந்ததும் கொழும்பில் உத்தியோகத்தோடு திருமணம் செய்து கொண்டான். ஊர்ப்பக்கமே திரும்பிப் பார்ப்பது கிடையாது. நன்றி கெட்டவனாக இன்னும் வாழ்ந்து கொண்டிருக்கிறான். அவன் கூட இவ்வளவு வயது வந்தும் ஆச்சி காக்கைதீவு போய் கஸ்ரப்பட வேண்டுமா என்று ஒரு கணம் கூட சிந்திப்பதில்லை. தானும் தன் குடும்பமும் என்று கொழும்பில் உல்லாச வாழ்க்கை.

செபமாலை சொல்லிக் கொண்டு வந்த திரேசா வசந்தபுரத்தைத் தாண்டி காக்கைதீவை நெருங்கி விட்டதை உணர்ந்தாள். கடசிக் காரணிக்கத்தை விரைவாக சொல்லி முடித்தாள். நேற்றும் ஓடா நீராம் மச்சச் சாதி ஒன்றையும் காணல எங்களுக்குத்தான் சுனை நீர், ஓடா நீர் வெள்ளிக் கிழமை நிலவு என்று தனக்குள் முனுமுத்தபடி நடந்தாள்.

வாடைக்காற்று வந்தால் சோர்ந்து கிடக்கும் மீனவர்கள் விழிப்பார்கள். நல்ல மீன் சாதிகள் பிடிபடும். களங்கண்ணியில் வெள்ளை இறால் பாட்டு இறால் என்று பிடிபடும். மீனவர்கள் குடும்பம் செல்வச் செழிப்பில் சிரித்து விளையாடும். திரேசாவும் அப்படித்தான். ஏனென்றாள் அவர்களை நம்பித்தான் அவளது வாழ்க்கை. என்றும் இல்லாதாவாறு அறியப்படாத அன்னியமுகங்களால் காக்கைதீவு மீன் சந்தை நிரம்பி வழிந்தது. கோட்டையில் இருந்து ஆமி செல்லடிக்கிறாங்கள் என்றதால் யாழ்ப்பாணத்துச் சந்தைகள் இயங்காமல் போய்விட்டது. அதனால் மீன் வாங்குவதற்காக புதிய புதிய முகங்கலெல்லாம் சந்தையில் கூடிவிட்டது.

வள்ளத்தில் இருந்து கூறி விற்கும் கூறியான் அந்தோனியின் குரல் வானத்தைத் தொடும்போல் எதிரொலித்துக் கொண்டிருந்தது. மீன் வாங்க வந்தவர்கள் அங்குமிங்குமாக ஓடித்திரிந்தார்கள் எங்கு மலிவான விலையில் மீன் விற்பார்கள் என்பதற்காகவோ தெரியவில்லை. கரையைத் தட்டிக்கொண்டிருந்த வள்ளங்களில் தொழிலாளர்கள் மீன் பொறுக்கிக் கொண்டிருந்தார்கள். இறால் வியாபாரி முருகேசு தராசு படியோடு ஓரமாக நின்று கொண்டிருந்தார். கனிபாவின் பாயாச அடுப்பைச் சுற்றி பக்கத்தில் இருக்கும் வடைக்கார கிழவியை முற்றுகையிட்டபடி இளவட்டங்கள்.

திரேசா அவசர அவசரமாக தான் கொண்டு வந்த கடகத்தை தலையில் இருந்து இறக்கினாள். கடகத்துக்குள் இருந்த பலகையை எடுத்து தனக்கு வசதியாக வைத்துவிட்டு உற்காந்தாள். வள்ளத்தில் இருந்து வந்த வாசு மீனை ஒரு சுளகிலும், இறாலை ஒரு சுளகிலும் போட்டான். அந்தக் கணமே தென் திசையில் இருந்து இரைச்சலோடு ஹெலி வந்துகொண்டிருந்தது. ஹெலிச் சத்தத்தைக் கேட்டு ஒரு சிலர் ஹெலி வருகுது சுடப்போகிறார்கள் என்று சொல்லிக் கொண்டு சைக்கிளை எடுத்துக் கொண்டு போனார்கள். தாழப்பறந்து வந்த ஹெலி சுடத்தொடங்கியது. வானத்திற்கும் பூமிக்கும் இடையில் மனித நாகரிகத்திற்கு அப்பால் ஓசை எழுப்பிக்கொண்டிருந்தது. எல்லோரும் பாதுகாப்பான இடத்திற்திற்கு சிதறி ஓடினார்கள். பின்னர் இடியோடு வந்த புயல் மழை ஓய்ந்து விட்டது. ஹெலியின் சத்தம் குறைந்தது. திரைப்படங்களில் காணப்படும் அழிவுகளின் காட்சியாக காக்கை தீவு சீரழிந்து கிடந்தது. மரங்களில் ஹெலி சுட்ட காயங்களின் தழும்புகள் இந்துமா சமுத்திரத்தையும் தாண்டி எங்கள் அழுகுரல் உலகம் எங்கள் பக்கம் விழிக்கவில்லை. மையான அமைதி. வயதான திரேசா எழும்பி ஓடுவதகுள் வேட்டுக்கள் தீர்ந்து விட்டது. சிதறிப்போய்க் கிடந்த மீன்களுக்கிடையில் திரேசா இரத்த

வெள்ளத்தில கிடந்தாள். என் கட்டிலில் அருகில் இருந்த மணிக்கூடு எலாம் அடிக்கத் தொடங்கியது. என் நினைவுகளெல்லாம் கலைந்தது. நான் இன்னும் தூங்கவில்லையே? நேற்றிரவு கழுவித் துடைத்த சட்டிகள் நினைவிற்கு வந்தது. ஓடு ஓடு வேலைக்கு ஓடு என்று என் மனம் சொல்லியது.

பதிவுகள் ஜனவரி 2003 இதழ் 37

## 8. மொழிபெயர்ப்புச் சிறுகதை: ஜோ பாசின் அன்னைக்கு ஒரு திறந்த கடிதம். மார்கரெட் லாரன்சு (கனடா) | தமிழில்: டாக்டர் வை.பாரதி ஹரிசங்கர் -

நீங்கள் பார்ப்பதற்கு எப்படி இருப்பீர்கள் என்று எனக்குத் தெரியாது. நாம் சந்திக்க மாட்டோம். உங்கள் வயது எனக்குத் தெரியாது. என் வயதினராக இருப்பீர்களென நினைக்கிறேன். எனக்கு நாற்பத்தோரு வயதாகிறது. உங்களுக்கு எவ்வளவு குழந்தைகளிருக்கிறார்கள் என்றும் எனக்குத் தெரியாது. எனக்கு இரண்டு பிள்ளைகளிருக்கிறார்கள். என் மகளுக்கு பதினைந்து வயதாகிறது.என் மகனுக்கு பன்னிரண்டு வயசாகிறது. உங்களுக்கும் பன்னிரண்டு வயதில் ஒரு மகனிருக்கிறான்.

என் மகன் கானாவில் பிறந்தான். அப்போது மருத்துவர் அருகிலில்லை. நான் நலமாக இருந்தாலும் டாக்டருக்கு அதிக வேலைகள் இருந்ததாலும், ஒரு மருத்துவச்சி தான் என்னை கவனித்துக் கொண்டாள். அவள் ஒரு கானிய குடும்பத் தலைவி. நான்கு குழந்தைகளுக்குத் தாய். எனவே எந்த மருத்துவருக்கும் அவருக்குத் தெரிந்த அளவு தெரிந்திருக்க நியாயமில்லை. நேரம் செல்லச் செல்ல அவர் எனக்கு உறுதியளித்தார். "இது ஒரு ண் குழந்தையாகத் தானிருக்கும். ஒரு ஆணால் தான் இவ்வளவு பிடிவாதமாக இருக்க முடியும்". நான் வலியால் துடித்த போது அந்த பெண்மணி நான் பிடித்துக் கொள்ள தனது கைகளை நீட்டினாள். அந்தக் கைகள் மட்டுமே வாழ்வின் கடைசி நம்பிக்கைச் சின்னங்களாக நினைத்து நான் பற்றிக் கொண்டேன். "இதோ விரைவில் முடிந்து விடும். நான் உன்னிடம் பொய் செல்வேனா. இதோ பார். எனக்குத் தெரியும். நானும் குழந்தைகளைப் பெற்றெடுத்திருக்கிறேன்," என்று கூறினார்.

ஆம். அவருக்குத் தெரிந்திருந்தது. எனக்கு மயக்க மருந்து கொடுக்கப் படவில்லை. பிறந்தவுடன் ஒல்லியாக ஈரப்பசையுடன் இரத்தக் கறையுடனுமிருந்த குழந்தையை என் வயிற்றின் மேல் போட்டார். " நான் உன்னிடம் என்னெ சொன்னேன்? இதோ உன் பிள்ளை. இங்கே இருக்கிறான். பார்."

என் மகனின் பிறப்பை கடவுளின் அருகிலிருந்து நான் பார்த்தபோது அந்தப் பெண் மட்டுமே அங்கிருந்தார். அவருக்கும் குழந்தைகள் இருந்ததால் அவர் நடப்பனவற்றை அறிந்திருந்தார். மேலும் சதையிலுணர்ந்தால் தான் நிஜமாக அறியமுடியுமென்பதையும் அறிந்திருந்தார்.

இதுவரை என் மகன் அதிருஷ்ட்டக்காரனாக இருந்துள்ளான். ஒரு முறை ஆபிலிருந்த போது அவனுக்கு மலேரியாக் காய்சலிருந்தது. பிறகு கனடாவிலும் இங்கிலாந்திலும் அவனுக்கு தொண்டை நோய்களும் விளையாட்டமையும் ஏற்பட்டன. அப்போது ஒவ்வொரு முறையும் குடலுறைந்ததைப் போன்ற உணர்வில் நான் பயந்திருந்தேன். என் குழந்தைகளுக்குக் கெடுதல் ஏற்படுவதைத் தவிர எந்த கெட்ட நிகழ்ச்சியையும் என்னால் எதிர்கொள்ள முடியுமென நம்பியிருந்தேன்.

இப்போது அவன் தன்னுடையு சைக்கிளில் கணக்கிலடங்கா மைல்கள் சுற்றுகிறான்.ஆவன் சுபாவத்தில் அறிவியல் நோக்குடையவன். மின்சாரத்திலியங்கும் அவனது இரயில் பொம்மைகளுக்கு பலவித சிக்கலான சுவிட்சுகளும் நுணுக்கமான மின் கம்பிகளும் உள்ளன. அவன் தானாகவே அவற்றை அற்புதமாக வேலை செய்ய வைத்து அந்தச் சின்னஞ் சிறு இஞ்சினை தான் ணையிடுவதைப் போல் வேலை செய்ய வைக்கிறான். இது வரையில் அவன் தன் வாழ்க்கையை நட்பான மனிதர்களிடையே வாழ்ந்திருக்கிறான். இதனால்ஆவனுக்கு வலி என்பது என்னவென்று தெரியாது எனச் சொல்ல முடியாது. ஏனெனில் எனக்குத் தெரிந்ததை விட அவனுக்குத் தெரிந்துள்ளது.ஆவற்றில் சிலவற்றை நானறிவேன். ஆனால் இதுவரை அவனது வாழ்வில் வலி என்பது அவனாகவே சமாளிக்கும் வகையிலிருந்துள்ளது.

திருமதி பாசு. உங்கள் மகனை நான் ஒரே ஒரு முறைதான் பார்த்திருக்கிறேன். அதுவும் ஒரு தினப் பத்திரிகையிலிருந்த புகைப்படத்தின் வாயிலாக. டெட்ராய்ட்டில் ஒரு மாலைப் பொழுதில். அவன் நண்பர்கள் கூப்பிட்டதால் வெளியே சென்றான்.ஆனால் அது வெளியில் உலாவ தக்கதொரு மாலை அல்ல. உங்கள் மகன் போலிசாரால் சுட்டுக் கொள்ளப்பட்டான். அவன் தற்செயலாகக் கழுத்தில் சுடப்பட்டான் என்று போலிசார் கூறினர். மாக் கள்ளுக்கடையிலிருந்தஆஅறு டின்கள் கள்ளைத் திருடிக் கொண்டு வெளியில் வந்து கொண்டிருந்த பில்லி பர் என்பவனை நோக்கி போலிசார் குறி வைத்தனர். ஏதோ ஒரு உந்துதலினால் போலிசாரைக் கண்ட பில்லி ஓடிக் கொண்டேயிருந்தான். அவன் சுடப்பட்டான். ஆனால் போலிசார் ஒரு முறைக்கு மேல் சுட்டதால் அவ்வழியிலிருந்த ஜோவும் சுடப்பட்டான். தினசரிப் பத்திரிகைகள் உங்கள் மகன் பிழைப்பானா என்று கூறவில்லை. இது போன்ற நிலையிலிருந்த ஒரு பன்னிரண்டு வயதுச் சிறுவனால்- ஒரு நீக்ரோவால் - குணமடைய முடியுமா என்றும் கூறவில்லை.

உங்கள் மகன் ஒல்லியானவன். என் பன்னிரண்டு வயது மகனை விட சிறிது உயரமானவனாலும்யாவ்வளவு திடகாத்திரமானவல்ல. அவன் கண்கள் திறந்த நிலையில் சாலையோரத்தில் கிடந்தான். தான் உள்பட எல்லாவற்றையும் அவன் பார்த்துக் கொண்டிருந்தானென நான் நினைக்கிறேன். இரத்தம் கசிந்திருந்த அவனது கை சிந்திய இரத்தத்தில் தளர்ந்து படர்ந்திருந்தது. அவன் முகத்தில் எந்தவிதமான உணர்ச்சியுமில்லை. நான் அந்தப் புகைப்படத்தை வெகு நேரம் பார்த்துக் கொண்டிருந்தேன். பிறகு அந்தப் பத்திரிகையை தூரப் போட்டு விட்டாலும் அந்த முகத்தை அப்புறப்படுத்த முடியவில்லை.ஆந்த வெறுமையான குழந்தை முகம் என் மனதில் அலைந்து கொண்டிருந்தது. அது சில சமயம் உங்கள் மகனின் முகமாகவும் சில நேரங்களில் என் மகனைப் போலவுமிருந்தது.

பிறகு நான் வேறொரு பத்திரிகையில் வந்த புகைப்படத்தை நினைத்துக் கொண்டேன்.ஆது

வடக்கு வியட்நாமைச் சேர்ந்த ஒரு பெண்ணினுடையது. நாபாம் எனும் புது வகையான ஒரு இரசாயனப் பொருளண்மையில் புழக்கத்திற்கு வந்திருந்தது.
அதனுடைய இலக்கணங்கள் எனக்குப் புரியவில்லை. இந்தப் பொருள் எரிந்து கொண்டே தோலில் ஒட்டிக் கொண்டால் அதை அகற்ற முடியாது. அந்தப் புகைப்படத்திலுள்ள பெண் பதினெட்டு மாதங்களான ஒரு குழந்தையைத் தூக்கிக் கொண்டிருந்தாள்.
அதன் முகத்தில் கறுத்துக் கருகிக் கொண்டிருக்கும் பகுதியிலிருந்து ஏதோ ஒன்ரைக் கிள்ள முயன்றிருந்தாள். அந்தக் குழந்தை பிறந்து புதிதாக வாழ்வில்ஆடியெடுத்து வைத்த பொழுது அந்தப் பெண் என்ன நினைத்திருப்பாளென வியந்தேன். ஒரு வேளை அவளும் தான் கடவுளின் அருகிலிருந்து பார்த்துக் கொண்டிருப்பதாகக் கற்பனைச் செய்திருப்பாள் போலும்.

திருமதி பாசு. இவ்விரு படங்களையும் ஒப்பிடுவது சரியாகாது என எனக்குத் தெரியும். நீங்கள் வாழும் தேசம் பல கோணங்களையுடையது என எனக்குத் தெரியும். இவ்விதமான பைத்தியக்காரத்தனமான நிலக்கு இறங்குவதைக் கண்டு நான் அன்பு வைத்துள்ள மற்றும் அங்கு வாழும் அனேக மக்களும் என்னைவிட மனதுடைந்திருக்கிறார்கள். மேலும் நான் ஒரு வடக்கு அமெரிக்க நாட்டவள் என்பதால் இந்தத் தடுமாற்றத்திலிருந்து விலகிக் கொள்ள முடியாது.ஆனாலும் அவர்கள் தான் காரணம் என நான் கூறமுடியாது. நாஜாமுநூ தான் காரணம் என்றும் கூறக் கட்டாயப்படுத்தப் பட்டுள்ளேன். எதிரி யாரென்று உங்களுக்குத் தெரியும். ஒரு வேளை அது நானாகவுமிருக்கலாம்.

நான் வெகு நாட்களுக்கு முன்பு ஒரு முறை இருபது வயதுக் கண்ணோட்டத்தில் என் தந்தையைப் பற்றி ஒரு கவிதை எழுதினேன். அது ஒரு ஊரிலுள்ள கல்லறையைப் பற்றியதாகவுமிருக்கலாம். அதிலுள்ள வாக்கியங்களாவன:

'இந்தக் கல்லுக்கடியில் பத்து வருடங்களுக்கு முன்பு இறந்த என் தந்தை கிடக்கிறார். வேசி பிள்ளைப் போன்ற இந்த உலகத்தைத் தான் உருவாக்கினோம் என்று அவருக்குத் தெரியவே தெரியாது.' நானும் உலகத்துடன் பிள்ளையாக அல்லாமல் பெற்றவனாக ஒரு நாள் தொடர்புக் கொள்ளக் கூடுமென எனக்கு அன்று தோன்றவில்லை.

இவை எல்லாவற்றிற்கும் யார் பொறுப்பு என்று எனக்கு உறுதியாகத் தெரியவில்லை. பொறுப்பு என்பது மிகவும் விரிவான பொருளுடைய சொல். ஒரு கண்டம் என் முழு உலகமும் தானியங்கிகளாக சுற்றுவதைப் போல் தோன்றுகிறது. சக்கரங்கள் சுழலுகின்றன.ஆனாலும் ஒருவரும் தான் சுற்றியதாக ஒட்துக் கொள்ள மறுக்கிறார்கள். ஊர் பேருள்ள மனிதர்கள் கொல்லப்படுகிறார்கள். ஆனால் இச்செயல்களுக்கும் அமெரிக்கக் கதைகளிலிருந்ததாகக் கூறப்படும் இடையர்களின் போலியான இறப்பிற்குமிடையே உள்ள வித்தியாசம் குறைந்து கொண்டு வருகிறது. வனக்களில் படர்ந்து நெருக்கிக் கொண்டிருக்கும் கொடி வகைகள் மரங்களின் இடத்தை எடுத்துக் கொள்வதைப் போல.

இந்த மனத்தோற்றம் உண்மையை மறைக்கிறது. எல்லாமெ தொலைக்காட்சியில் நடந்தும் கொண்டிருக்கிறது.

ஆனால் உண்மை இதுவல்ல. அந்த மாலைப் பொழுதில் உங்கள் மகனை போலிசு சுட்டபோது நீங்கள் வலியை சதையில் உணர்ந்தீர்கள்.ஆதலால் உங்களுக்குத் தெரியும் நாம் நிஜமாக் உணருமுன் வலியை உள் சதையில் உணருதல் அவசியமா? அது அவசியமென நான் நினைக்கிறேன். என் வாழ்வில் பதினைந்து வருடங்களை நான் நாவல் மற்றும் சில எழுத்துகளை எழுதுவதில் கழித்துள்ளேன். நான் எழுத்தின் மீது நம்பிக்கை கொண்டிருந்தேன். 'முதலில் வார்த்தையிருந்தது. அந்த வார்த்தை கடவுளிடமிருந்தது.ஆந்த வார்த்தைதான் கடவுள்.' இந்தவிதமான நம்பிக்கை நிறைய எழுத்தாளர்களுக்குள்ளது. மனித உரையாடல்களின் மூலமாகத்தான் நாம் மற்றவருடன் பரிமாறிக் கொள்ள முடியும். வேறு வகையான பரிமாற்றங்களிருந்தாலும் அவை தனிமனுதனுக்கானவை.நாம் அன்பு கொள்ளலாம். நமது குழந்தைகளை அணைத்து றுதலளிக்கலாம். இவை இல்லாவிடில் நாம் வார்த்தைகளில்தான் பிடிபட்டுள்ளோம். இது குறையான வழியானாலும் ஒரே வழியாதலால் நாம் ஒருவருகொருவர் பேச முயற்சிக்க வேண்டும்.

ஆனாலும் நான் டெட்ராய்ட் நகரின் சாலையோரத்தில் இரத்த வெள்ளத்தில் கிடந்த உங்கள் மகனின் படத்தைப் பார்க்கிறேன். உண்மையில் இம்முடிவு இதே வயதான என் மகனுக்கு ஏற்பட்டிருந்தால் பயனுள்ள வேலையாகக் கருதி என்னால் நாவல்களை எழுதிக் கொண்டிருக்க முடியுமா என வியக்கிறேன். இந்தக் கேள்விக்கு என்னால் பதில் கூறமுடியுமெனத் தோன்றவில்லை. நாம் நம் எல்லோரின் குழந்தைகளுக்காகவும் பயப்படுகிறேன்.

பதிவுகள் ஆகஸ்ட் 2003 இதழ் 44 -

9. **நாகதோஷம்! - சுமதி ரூபன் -**

கலைந்து போன அவளின் கருங்கூந்தல் நீண்டு பரந்து அந்த அறைப் பரப்பை மூடிக்கொள்ள சாளரத்தினூடே ஊடுருவிப் புகுந்து கொண்ட மெல்லிய நீல நிலவொளி அவளின் நிர்வாண உடல்பரப்பில் பட்டுத் தெறித்து விட்டத்தில் ஏற்ற இறக்கங்களை காட்டி நின்றது. அவள் மோகித்திருந்தாள்.. அண்டத்தின் அனைத்தும் அவளின் காலடியில் என்பதாய் மமதையில் மரணத்திற்கும் வாழ்விற்குமான இடைவெளியை ரசித்தபடியே அவள் கலைந்தாள். நாகம் அசைந்தது.. மென் கறுப்புத் தோலைக் களைந்து விட்ட நாகம் தனது நுண்மையான கரும் நாக்கால் அவளின் பாதம் தொடங்கித் தலைவரை மெல்ல நகர்ந்து, முகர்ந்து, புகுந்து, நழுவ சூரியனைத் தொட்டுவந்தவள் போல் உடல்த் தணதணப்பில் அவள் சிணுங்கினாள்.. நாகத்திற்கு கோபம் தலைக்கேறியது.. என்றோ தான் ஏங்க வைக்கப்பட்டு ஏமாந்தது போல் ஆவேசம் வந்தது.. நாகம் வேகம் கொண்டு அவள் உடலை சுற்றி ஆவெசமாய் இறுக்க எலும்புகள் மெல்ல நொறுங்கத் தொடங்கின.. அவள் உச்சத்தின் வேதனையில் வாய்விட்டுக் கதறினாள்.. நாகத்தின் பார்வையில் குரோதம் தெரிந்தது.. மூடிக்கிடந்த அவள் கண்களை தனது நாக்கால் எச்சில் படுத்தி அவள் கண்விழிகளுக்குள் தனது பார்வையைச் செலுத்தியது.. அவள் வார்த்தைகளற்று வதைபட்டாள்.. அவள் வளைவுகளை அழுத்தி தனக்கான மோகத்தில் திளைத்து எழுந்தது நாகம்.. அவள் மூச்சுக்காற்று மெல்ல மெல்ல அடங்க களைப்புற்ற நாகம் விலகி அவள் கூந்தலுக்குள் நுழைந்து புரண்டு தனது தோலுக்குள் புகுந்து நகர்ந்து கொண்டது.. வரண்டு போய் அசைவின்றிக் கிடந்தாள் அவள். கண் விழித்தாள்.. தெளிவற்று குத்தி நின்றது பார்வை.. பல வருட கேள்விகளுக்கு விடைதேடிக்களைத்து இன்று பதில் கிடைப்பதாய் நம்பி மீண்டும் கலைந்து போனாள். மனதுக்குள் குரோதம் வளர்ந்தது.. ஆண்மையின் மிதப்பில் நாகம் அசைந்தது. விம்மிப்புடைந்து நிற்கும் தனது மார்புகளிளைத் தடவிக்கொடுத்து அதிசயித்தாள்.

நீள்சதுர கண்ணாடி பிம்பத்தை தனக்குள் வாங்கிப் பிரதிபலிக்க, இருப்பதால் இடையளவிலிருந்து தலைமட்டும் கண்ணாடிக்குள் அடங்கிப்போய், இடுப்பில் பிதுங்கும் தசை.. பதிவாய் தொங்கும் பருத்த மார்பகங்கள்.. உச்சியில் ஊடுருவும் வெள்ளை மயிர்;கள்.. கண்கள் உடலில் அர்த்தமின்றி மேய்ந்து வலம்வர குளிர்காற்று ஊடுருவி தலைமயிரைக் கலைத்துக் கன்னத்தில் போட்டது..

இயற்கை தனது கடமைகளைச் சளைக்காது செய்தருள, மனித மனம் மட்டும் குழப்பத்துடன் போராடிக்கொண்டிருக்கும்.. எனக்காக குழப்பம் இதுதான் என்று சபைமுன்னே எழுந்து நின்று மனம் திறந்து கொட்ட முடிவதில்லை.. இது சரி, இது தவறு என்ற எங்காவது அகராதியில் அடையாளப்படுத்தியிருந்தால் அதை வாழ்வின் கோட்பாடாய்க் கொள்ளலாம்.. நிறைவாய். மனம் திருப்தி பெறத் தவறென்று சுட்டு விரல் நீட்டும். சில, தவறோ என்று தடுமாற சரளமாக மற்றவை செய்து முன்னேறும்.. வாழ்வின்

நிரந்தரமின்னையின் புரிதலால் இருக்கும் வரை இன்புற்றிருப்போம் என்றால், அது எப்படியும் வாழலாம் என்றில்லாம் இப்படித்தான் வாழவேண்டும் என்ற நியதியை இடீத்துக் கொள்ளும்..

அவள் புரண்டு படுத்தாள்.. உடைகளுக்குள் தன்னைப் புகுத்திக்கொள்ள ஏனோ பிடிக்கவில்லை.. தொலைபேசி அலறியது.. புகை மூட்டமாய் முகில்கள் அலைந்து, அலைந்து உடலைச்சிலுப்புற வைத்த வேதனையை அனுபவித்து அயர்ச்சியாய் கிடந்தாள். அவள் சிந்தனையில்..

அவளின் கூம்பிய தோற்றத்திற்கும் தோஷம் தான் காரணம் என்றார்கள்.. நாகபூசணி அம்மனுக்கு வெள்ளி தோறும் விரதம் பிடிக்கவைத்து சூரியப் பொழுதுக்கு முன்னம் குளிர்; நீரைத் தலைக்கு ஊற்றி கோவிலுக்கு நடையாய் அழைத்துச்செல்வாள் அம்மா.. தாவணி நழுவி விடும் தட்டையான மார்பு, கிள்ளிப்பார்க்க சதை இன்றி துருத்தி நிற்கும் எலும்புத் தேகம், அப்பி விட்ட கறுப்புத் தோல் துருத்திக்கொள்ளும் பற்கள்.. இருந்தும் அவள் பெண்.. திருமணம் குழந்தைகள் குடும்பம் என்ற கற்பனைகளை வளர்த்து வாழும் சாதாரண உணர்வுடைய இளம் பெண்.. அவளுக்கு அவளின் தோற்றத்தில் திருப்தியில்லை.. மாற்றமுடியுமா? மஞ்சளும் சவர்க்காரமும் கரைந்ததுதான் மிச்சம்.. திருமணங்கள் தட்டிப்போனது.. காரணம் நாகதோஷம்.. என்றார்கள்.. அம்மா எள்ளை இடித்திடித்துப் பிடித்து சாப்பிட வைப்பாள்.. அப்பிய கருப்பு மினுக்கம் காணும்.. எலும்பை மூடி சதை போடும் பற்களுக்கும் ஏதாவது நடக்கலாம். இருந்தும் எள்ளுச்சாப்பிட்டால் கர்ப்பத்தைத் தாங்கும் பலம் வரும் என்றாள்.. தோஷத்தின் வேகம் அவளது சாதகத்தில் மட்டும் ஆழமாய் இருப்பதாய் புலம்புவாள்.. ஜாதகத்தை யாரிமாவது கொடுத்து மாற்றி விடலாம் என்ற அப்பாவின் ஆசை பின் வளவுக்குள் நாகம் புற்று அமைத்துக் குடிபுகுந்த போது மறந்து மறைந்து போனது.. திரைப்படங்களின் தாக்கம் அதிகமாகி அவளைப் பால் வார்த்துக் கும்பிடும் படியும் வற்புறுத்தினார்கள்.. ஜடமாய் நம்பிக்கையற்றுக் கோவிலுக்குள் வலம் வந்தவளை கோவில் பின் வீதியில் வாழ்ந்து வந்த நாகத்தின் நேரடிப்பார்வை கவர்ந்து விட.. பின்னர் கோயிலே கதியெனக்கிடந்தாள்..

மா பூசியது போல் தோல், சுருள் சுருளான தலைமயிர், அங்குமிங்கும் சுழரும் கரும் கண்கள்.. அவனின் பார்வை தன்னில் விழுந்தபோது அவள் துவண்டு போனாள். காதலுக்கு கண் இல்லை என்பதை முற்றிலும் நம்பினாள். பெரியவளான போது நிறுத்தப்பட்ட கல்வி.. ஆழமாகப் பிடித்து உலுக்கும் தோஷம்.. அவலட்டணமாக தோற்றம், முன் படலை தாண்டமுடியாத வாழ்க்கை எல்லாமே அவன் பார்வை அவள் மேல் பட்ட பின்னர் அவளை நெருடுவதில்லை.. மாலை நேரங்களில் பின் வளவிற்குள் சென்று நாகத்திற்குப் பாலூற்றும் தீவிரம் கூடியது.. மணிக்கணக்காக பாலூற்றிப் பிரார்த்தித்து இருள் மூழ்கும் போது வீடு திரும்புவாள். அவளை ஒருவரும் கேள்வி

கேட்டதில்லை. நாகத்தின் வலிமை அவள் வாழ்வில் மாற்றத்தை உண்டு பண்ணுவதாகப் பெற்றோர்கள் நம்பினார்கள்.. எடை போட்டு அவள் உடலிலும் மாற்றங்கள் ஏற்பட்டது.. சந்தணம் கலந்த அவள் உடலின் மெல்லிய வியர்வை மணம். திரட்;சியற்றிருப்பினும் நாகத்திற்கு போதை தந்தது.. அவளை விழுங்கி விட தக்க சந்தர்ப்பம் ஒன்றிற்காய் காத்திருந்தது.. தினம் தினம் மாலை நேரம் பால் வைத்து இன்புற்றுப் போதை ஏற்றித் அவள் வாய் திறந்து கணீர் என்று தேவாரம் பாடும் போது நாகத்திற்கு முறுக்கேறும்.. மெல்ல எழுந்து வந்து அவள் உடல் சுற்றித் தழுவும். தட்டையான மார்புகளும்., வரண்டு போன வயிற்றுப் புறங்களும் அலுப்பைத் தர கண்மூடி அவள் தூரத்தில் இருக்கையில் மெதுவாக அவள் அடி வயிறு நகரும்.. அவள் கலகலவென்று சிரித்த படியே ஓடிவிடுவாள்..

வீட்டில் அவள் திருமணப்பேச்சை எடுத்த போது அவளை ஒருவரும் ஒரு பொருட்டாகவேனும் எண்ணவில்லை.. தோஷத்தையும் தாண்டி ஜாதகம் ஒன்று பொருந்திவந்த சந்தோஷம் அவர்களுக்கு.. வான் பிளக்க உரத்த குரல் எடுத்து நாகம் பற்றி அவள் கதறியது உதட்டோடு உறைந்து கொண்டது.. நாகத்தை தன் தொடை அமர்த்தி தலை வருடி பாலைச் சொட்ட ஊற்றிக் கண்கலங்க தன் விதியை நொந்தாள். நாகம் அவசரம் கொண்டது.. கைக் கெட்டியது வாய்கெட்டாமல் போகும் பயம் அதற்கு.. உடை தளர்த்தி உள்ளே புக முயன்றது.. அவளின் வேதனை அவளிற்கு உதறி விட்டு எழுந்து கொண்டாள்.. நாகம் பாய்ந்து அவளை வேகமாக அணைக்க அவள் திமிறினாள்.. மஞ்சள் கயிறைக் கொடுத்து கட்டி அழைத்துப் போ என்றாள்.. நாகம் தளர்ந்தது.. பின்வாங்கியது.. அவளின் உருவம் அதற்குப் பயம் கொடுத்தது.. கருந் தோலில் துருத்திக்கொண்டிருக்கும் பற்கள் நாகத்தைப் பார்த்துச் சிரித்தன.. மெல்ல மெல்லப் பின்வாங்கி ஓடி மறைந்தது நாகம்.. அவள் தனது தட்டையான மார்புகளைத் தடவிக்கொண்டாள்..

உடல் விறைக்க ஜடமாய்க் கிடந்து.. வலி எழும்ப வாந்தி எடுத்து, கண்கள் சிவக்க சாமி ஆடி முயன்று பார்த்து முடியாமல் போய் அவள் கழுத்தில் தாலி ஏறியது.. வெறுமனே கிடந்து தொடர்ந்து நான்கு குழந்தைகளை வயிற்றில் தாங்கிப் பெற்றுப் போட்டாள்.. இருந்தும் ஏங்கும் நாகத்தின் தழுவலுக்காய்.. நாகத்தை வீணே நழுவ விட்டதாய் மனம். கதறும். தன் வாழ்வின் முழுமை நாகத்துடனான புணர்விலேயே என்றும் தன் காதலைப் புனிதமானது என்றும் நம்பினாள்..

நீள்சதுர கண்ணாடி பிம்பத்தை தனக்குள் வாங்கிப் பிரதிபலிக்க இருப்பதால் இடையளவிலிருந்து தலைமட்டும் கண்ணாடிக்குள் அடங்கிப்போய் இடுப்பு இறுக, பதிவாய் தொங்கும் பருத்த மார்பகங்கள்.. வரிசையாய் மின்னும் பற்கள்.. பதினாறில் தவற விட்டது நாற்பதில் கிடைத்த சந்தோஷம் அவளிற்கு.. உச்சியில் ஊடுருவும் வெள்ளை மயிர்;களை மறைக்க மருதோண்டி போட்டுத் தலைகுளித்து தக,தகப்பாய், கண்கள்

உடலில் அர்த்தத்தோடு மேய பெருமையாய் இருந்தது அவளிற்கு.. அவள் அழகாக இருந்தாள்.. இயற்கையைப் பணத்தால் வாங்கி விட்ட சந்தோஷம்.. அவளைப் புரட்டிப் புரட்டிப் போட்டு அவள் தானா என்ற சந்தேகத்தை மீண்டும் மீண்டும் தீர்த்துக்கொண்டான் அவன். கண்களில் வீணாக விட்டுவிட்டோமே என்ற ஏக்கம் தெரிந்தது.. அவள் குரூரமாகத் திருப்திப் பட்டாள்.. அவன் போய் விட்டான்.. இனி அழைப்பான், குழைவான், கெஞ்சுவான். அவளிற்குத் திருப்தியாய் இருந்தது..

அவள் மோகித்திருந்தாள்.. அண்டத்தின் அனைத்தும் அவளின் காலடியில் என்பதாய் மமதையில் மரணத்திற்கும் வாழ்விற்குமான இடைவெளியை ரசித்தபடியே அவள்.. மூலையில் தேடுவாரற்று புகை மூட்டமாய் அம்மாள்.. அருகில் பித்தளையில் நாகம்..

தொலைபேசி அலறியது. அவன் அழைத்தான் குழைந்தான்.. கொஞ்சினான்.. அவள் வெறுமனே 'ம்" கொட்ட அவன் குழைவில் தீவிரம் புகுந்தது.. அவன் செருமினாள். கண்கள் மின்ன பற்கள் புடைத்தன. எதுவோ அவளை உலுக்கி உயரத்திற்கு நகர்த்தியது.. அவள் மீண்டும் குரலைச் செருமி மெல்லிய குரலில் அவனிடம் கேட்டாள்.. 'நீ ஏதாவது மருந்து சாப்பிடலாமே.. பத்துவயதுப் பெடியன்ர போலல்லோ இருக்கு" தொலைபேசித் தொடர்பு அறுந்தது.

பதிவுகள் மார்ச் 2005 இதழ் 63

## 10. **வேட்கை! - சுமதி ரூபன்**

காற்றின் ஓலம் அதன் வேகத்தைக் காட்டிக்கொண்டிருந்தது.. வெள்ளைப் புழுதியாய் பனிமணல் அலைந்து பறந்து ரோட்டில் கோலம் போட அதில் உருவங்கள் தேடித் தேடி நேரத்தைக் கொண்டுகொண்டிருந்தாள் வசந்தமலர்.. .வேலை முடியும் நேரத்திற்கு இன்னும் ஒருமணி நேரம் இருப்பது அலுப்பைத் தந்தது. நீண்ட நேரமாக காருக்குள் அடங்கியிருந்ததால் விறைத்துப்போன ஒற்றைக்காலை மேலே தூக்கி நீவி விட்டாள்.. முகுந்தன் சுருண்டு போய்க்கிடந்தான்.. சின்னதாய் ஒரு குறட்டை அவனிடமிருந்து வெளிப்பட்டுக் கொண்டிருந்தது.. காதில் வெள்ளி வளையம்.. நெல்வரம்பாய் பின்னிவிடப்பட்ட தலைமயிர் உச்சியில் தூக்கிக் கட்டப்பட்டிருந்தது.. கன்னத்தின் ஓரத்தில் ஒற்றைவரியாய் கோடாய் கச்சிதமாய் வெட்டப்பட்ட மெல்லிய மயிர் மோவாயில் ஆட்டுத்தாடியாய் முடிவுகண்டது.. கழுத்தில் வெள்ளி ஆரம் கறுத்துப்போய் நெஞ்சு மயிரோடு சிக்கி அவன் மெல்லிய மூச்சிழுப்பில் மேலும் கீழும் அசைந்துகொண்டிருந்து.. கழன்று விழுமோ என்ற அச்சத்தை தந்த காற்சட்டை… ஆமிக்காரனை நினைவிற்குக் கொண்டு வந்த காலணி.. “அம்மா இது என்ர ப்ரெண்ட்” ஆரணி இப்பிடியொருவனை எனக்கு அறிமுகப்படுத்தினால் என்னால் ஏற்றுக்கொள்ள முடியுமா? நான் ஏற்றுக்கொண்டாலும் குமார் கொண்டு போட்டுவிடுவார்.. வசந்தமலர் தனக்குள் சிரித்துக்கொண்டாள்..

குமார் வேலை முடிந்து வீட்டுக்கு வந்து அவசர அவசரமாய்ச் சாப்பிட்டு விட்டு அடுத்த வேலைக்குப் ஓடும் நேரம் இது..மீன் குழம்பு, மீன் பொரியல், கீரை, பருப்பு குமாரிற்குப் பிடித்த உணவு வகைகள். வசந்தமலருக்குத் திருப்தியாய் இருந்தது.. “அடடா கீழ் அலுமாரிக்குள் மாமா தந்த ஊர் ஊறுகாய் இருக்கே..ச்சீ சொல்லாமல் போயிட்டேனே கீரையோடு கொஞ்சம் ஊறுகாயைப் போட்டுப் பிசைந்து சாப்பிட குமாருக்கு நல்லாப் பிடிக்கும் .ம் பரவாயில்லை இரவு வந்ததும் எடுத்துக்குடுக்கலாம்..ஆரணி தங்கையோடு வீடு வந்து சாப்பிட்டு விட்டு, ரீவி பார்க்கத் தொடங்கிருப்பாள்.. இல்லாவிடின் குப்புறப்படுத்து கால்களை மேலும் கீழும் ஆட்டியபடியே ரெலிபோனில் யாருடனாவது அரட்டை அடித்துக்கொண்டிருப்பாள்.. ஆண்களுடன் யாருடனாவது கதைக்கிறாளா என்பதைக் கண்காணிக்க வேணும்.. குட்டிப்பெட்டை நிஷாதான் அம்மா வரும் நேரத்தை அடிக்கடி மணிக்கூட்டில் பார்ப்பதும், பின் ரீவியைப் பார்ப்பதுமாக இருப்பாள்.. இன்றைக்கு எப்படியும் எட்டாம் வாய்பாட்டைப் பாடமாக்க வைக்கவேண்டும்.. பிள்ளைகளுக்கு ஏன்தான் இவ்வளவு வீட்டு வேலையைக் கொடுக்கிறார்களோ.. பாவங்கள் தூக்க முடியாமல் புத்தகங்களை கழுதைபோல் முதுகில் பொதியாய்.. முகுந்தன் அசைந்தான்..

வேலை முடிந்து வீட்டிற்குச் செல்லும் அவசரத்தில் ரோட்டில் வேகமாகச்சென்று கொண்டிருந்த கார்களின் அதிர்வு முகுந்தனின் நித்திரையைக் கெடுத்திருக்க வேண்டும்.. மெல்லக்கண் விழித்து ஒற்றைக்கையை வசந்தமலரின் கழுத்துப் பின்புறத்துக்குள்

நீட்டி முகத்தோடிழுத்து வாய்பதித்து ஈரப்படுத்தினான்.. பின்னர் சின்னச் சிணுங்கலுடன் கண்களை மூடி மூடித்திறந்து “என்ன நேரம்?”

“ நாலரையாகுது”

“ சொறியக்கா”

“ எதுக்கு”

“நித்திரையாப் போயிட்டன்”

“பரவாயில்லை”

“உடம்பு சரியான அலுப்பாயிருந்துது” சுளி விழுந்த சிரிப்போடு கண்ணடித்தான்..

வசந்தமலர் மௌனமாய் கை விரல் நுனியில் எதையோ தேடியபடியிருந்தாள்

“ போர் அடிச்சுதா?”

“ இல்லை நான் காத்தோட அள்ளுப்பட்டுப் போற ஸ்னோவைப் பாத்துக்கொண்டிருந்தன்.. பிறகு கொஞ்சம் யோசிச்சன்”

“ என்னத்தை”

“ என்னை உன்னை என்ர வாழ்க்கைய”

“ ஏதாவது கிடைச்சுதா”

இச் வசந்தமலர் முகம் சுளித்து அலுத்துக்கொண்டாள்.. பின்னர் மௌனமாக முகுந்தனைப் பார்த்தாள்.. “ நான் செய்யிறது பிழையாடா?” கேட்ட படியே நெல் வரம்பில் விரல்களை அளையவிட்டாள்.. வியர்வையோடு கலந்து எண்ணெய் பிசுபிசுப்பில்
இருந்தது அவன் தலை..
“ இப்ப ரெண்டு வருஷமாச்சு எத்தின தரம் இதைக் கேட்டிட்டீங்கள்..” வசந்தமலரின் கைவிரல்களை எடுத்து எண்ணிய படியே முகுந்தன் சிரித்தான்..

“ தெரியேலை சில நேரம் என்னை நினைச்சாலே எனக்கு வெறுப்பா இருக்கு” வசந்தமலரின் பார்வை தூர வெறிக்க முகம் வாடிப்போனது..

“ அக்கா இண்டைக்கு நீங்கள் சந்தோஷமாத்தானே இருந்தனீங்கள்.. அதுதான் முக்கியம் மற்றதுகளை விடுங்கோ..” அவள் கைவிரல்களை தன்னுக்குள் அடக்கி இறுக்கிக்கொண்டான்.. வியர்த்திருக்கும் அவன் கைகளின் ஈரம் பட்டு வசந்தமலர் உடல் சிலிர்த்துக்கொண்டது..

“ இல்லேடா” என்றவளை இழுத்து அணைத்துக் கொண்டான்

“ விடடா”

“ ஏனக்கா”

“ வீட்டை போற நேரம் வருகுது”

“ இன்னும் ஒரு மணித்தியாலம் இருக்கு”

“ அதுக்கு”

அன்று அவள் சிறிதும் எதிர்பாராத விதமாக ஒரு பரந்த வெளியில் முற்றிலும் பனிபடிந்திருக்கும் ஒரு பாலைவனப்பகுதில் தனது காரை நிறுத்திவிட்டு “இண்டைக்கு இஞ்சதான் நிக்கப்போறம்” என்று அவன் சொன்னபோது ஏதோ அவன் விளையாடுகிறான் என்று முதலி;;ல் வசந்தமலர் எண்ணினாள்.. அவன் தான் இருந்த சீட்டை சரிய விட்டு கைகளைப் பின்புறமாகப் போட்டு அவளை விழுங்கி விடுவதுபோல் பார்த்த படியே “அப்புறம்” என்ற போது அவன் விளையாடவில்லை என்பதைப் புரிந்து கொண்டாள் “உனக்கென்ன விசரா இந்த வெளியில நடுவுக்க காரை நிப்பாட்டிப்போட்டு.. ஆரும் கண்டாலும்” அவள் சுற்றுமுற்றும் பார்க்க.. அவளைத் தன் மேல் இழுத்துப் போர்த்துக்கொண்டான்.. “ஏன் எல்லாத்துக்கும் பயப்படுறீங்கள்.. பாருங்கோ. எவ்வளவு வடிவா இருக்கு.. சுத்திவர வெள்ளைப் போர்வை.. தூரத்தில சின்னதா ஊருற கார்கள் காத்துச் சத்தம்.. மேல நீலமாய் மேகம்.. அதுக்குக் கீழ நானும் நீங்களும் கட்டிப்பிடிச்சபடி” அவள் தலைமயிரை குலைத்து தன் முகத்தில் பரவவிட்டான்..
“ ம்.. உனக்கு விசர் முத்திப்போச்சு.. யாராவது பார்த்தால் நான் சரி.. வேலைக்கும்; போகாமல் உன்னோட வந்து கூத்தடிச்சுக்கொண்டு.. பேசாமல் வா.. நாங்கள் வழமையாப் போற இடத்துக்கே போவம்.. நான் காசு வைச்சிருக்கிறன்.. யோசிக்காதை..”
தன்னை அவனிடமிருந்து விடுவிக்க முயன்று முயன்று தோற்றுப்போய்ப் புலம்பினாள்.. அவன் அவள் புலம்பலைப் பொருட்படுத்தாமல் தனது பற்களால் அவள் தாடைஇ காதுஇ மூக்கு என்று மெல்லஇ மெல்ல கௌவ. “ இப்ப என்ன செய்யிறாய்.. ஐயோ உனக்கு உண்மையிலேயே விசர்தான் பிடிச்சிட்டுது..” கைகளால் அவன் நெஞ்சைத் தள்ளித் தன்னை அவள் விடுவிக்க முயன்றாள். “தாலிக்கொடிய கழட்டுங்கோ” அவன் பார்வையில்

பாசிஇ  திடுக்கிட்ட வசந்தமலர்.. “என்னடா சொல்லுறாய்.. இந்த வெளிலிய காருக்க..ஐயோ நான் மாட்டன்” அவளின் கைகளைத் தன் ஒற்றைக் கையால் இழுத்துப் பிடித்தபடியே.. மறுகையால் அவளின் உடையைக் களையத்துடங்கினான். சுற்றும் முற்றும் பயத்துடன் பார்த்தாள் வசந்தமலர்..கைகள் நடுங்கியது..இருந்தும் மறுக்கமுடியவில்லை..
நடுத்தெருவில் நிர்வாணமாய் நிற்பதான பயத்துடன் கூடிய கிளர்ச்சி அவளிற்குப் புது அனுபவமாகவும் பிடித்துமிருந்தது.. அவர்களின் அசைவினால் வினோதமாக ஒலி எழுப்பும் கார்.. இடையிடையே தவறுதலான அழுத்தத்தால் ஹோர் அடிக்க திடுக்கிட்டு பின் சிரித்து.. கோபப்பட்டுஇ வெட்கப்பட்டு.. அவன் மேல் சரிந்தாள்.. அகண்ட பரந்த வெளியில் மெல்லிய நீலத்தில் வானம்.. நிர்மலமாய் பனிப்படிவுகள்.. பொன் கீற்றாய் கதிரொளி காரின் கண்ணாடியில் தெறித்து மின்ன.. கண்கள் சொருகி, அனுங்கி குழந்தைகளும், குமாரும் கனவு போல் வந்து போக..

வசந்தமலர் முகுந்தனையே கண்வெட்டாமல் பார்த்தாள்.. இன்னும் என்னவெல்லாம் அதிசயங்கள் காட்டி என்னை திக்குமுக்காட வைக்கப்போகிறானோ..

“ சரி வா ஒரு கோப்பி வாங்கிக் குடிச்சிட்டு பஸ் கோல்ட்டில என்னை இறக்கிவிடு நான் கொஞ்சச் சாப்பாட்டுச் சாமான்கள் வாங்கவேணும்”

“ நானும் வாறன் பிறகு உங்கள வீட்டில இறக்கி விடுறன்”

“ அதெல்லாம் வேண்டாம்”

“ ம்.. உங்கட வீட்டையும் சொல்லமாட்டீங்கள், புது வேலை இடத்தையும் சொல்ல மாட்டீங்கள். நான் நினைச்சா எல்லாத்தையும் ஒரு நிமிஷத்தில கண்டு பிடிச்சிடுவன் உங்களுக்குப் பிடிக்கேலை அதுதான்..”

வசந்தமலர் முறைத்தாள்.. “ அந்தப் பக்கம் உன்ர காரைக் கண்டனோ மவனே நீ அதோட சரி..

“ கோவத்திலையும் நீங்கள் நல்ல வடிவா இருக்கிறீங்கள்”

“ வழியாதை வா போவம்” சீப்பை எடுத்து தலையைச் சரிசெய்தாள்.. முகத்தை தண்ணீர் சீலை கொண்டு ஒத்திவிட்டாள்.. கொஞ்சம் பவுடர் போட்டாள்

முகுந்தன் கண்வெட்டாமல் அவளையே பாத்துக்கொண்டிருந்தான்..“ பக்றறி வேலை முடிஞ்சு வீட்டை போகோக்கை யார் இப்பிடிக் கச்சிதமாப் போகப்போகீனம்.”
“ அதுக்கில்லை உன்ர மணம் அடிக்காமல் இருக்கவேணும்” சிரித்தாள். பின்னர் சீப்பை

அவனிடம் நீட்டினாள்.. மீண்டும சிரித்தாள் “என்னடா உது கேயர் ஸ்டைல்.. கறுப்பங்களுக்குத் தலைமயிர் வளராது அதாலை அவங்கள் ஏதோ செய்யிறாங்கள்.. நீ எதுக்கு.. உனக்குத்தானே நல்ல மயிர் இருக்கு”

“ இல்லேக்கா இதுதான் இப்ப ஸ்டைல்..இது பழைய காலத்து கறுப்பங்களின்ர தலை பின்னிற முறையாம் திரும்ப வந்திட்டுது.. இப்ப எல்லாரும் செய்யீனம்..”

வசந்தமலர் கொட்டாவி விட்டாள்.. நேரத்தைப் பார்த்தாள்..” சரி என்னைக் கடையில இறக்கி விடு. வேலை முடியிற நேரமாகுது..” என்ற படியே கான்ட் பாக்கைத் திறந்து ஒரு இருபது டொலர் தாளை எடுத்து அவனிடம் நீட்டினாள்..

“ நானேல்லோ உங்களுக்கு காசு தரவேணும்”

“ உப்பிடிப் பகிடிகள் விடாதை எனக்குப் பிடிக்கேலை” கோபமாய்ச் சொன்னவள்.. “இவ்வளவு நேரமாக் கார் ஸ்டாட்டிலேயே இருந்தது போய்க் கொஞ்சம் பெட்றோல் அடி” அவன் கைக்குள் காசைத் திணித்தாள்.. பின்னர் தாலிக்கொடியை எடுத்து கழுத்தில் மாட்டி உள்ளே விட்டாள்.. மாட்டும் போது ஒரு முறை கண்ணை மூடிப்பிரார்த்தித்துக் கொண்டாள் போல் இருந்தது..

“ பதினொண்டுக்கு போன் அடிப்பீங்களே..” இந்த இரண்டு வருஷமாக முகுந்தனைச் சந்திக்காத நாட்களில் பதினொருமணிக்கு அவனுக்கு போன் அழைத்துக் சில நிமிடங்களாவது கதைப்பதை வசந்தமலர் ஒருநாளும் தவற விட்டதில்லை.. முகுந்தனின் நண்பர்கள் கூட உன்ர பதினொருமணிப் பெட்டை என்று பகிடியாகக் கதைப்பதுண்டு.. முகுந்தனும் நண்பர்கள் மத்தியில் வசந்தமலரை ஒரு பாடசாலை மாணவியாகவே பிரதிமை பண்ணி விட்டிருந்தான்..

“ பிள்ளைகள் படுத்தாப்பிறகு பாப்பம்”

“சரி பரவாயில்லை நாளைக்கு அடியுங்கோ” சொன்னபடியே காருக்குள் பாடல் ஒன்றை அதிர விட்டு ஒற்றைக் கையால் ஸ்டியரிங்கை சுளற்றிக் கோப்பிக் கடையை நோக்கி ஓட்டினான்.. வசந்தமலர் ஸ்கார்பால் தனது தலையைச் சுற்றி மூடியபடியே கார் சீட்டைப் பதித்து விட்டு தன்னை வெளி உலகத்திற்கு மறைக்க முயன்று கொண்டிருந்தாள்..

முகுந்தன் தனது தொடர் மாடிக்கட்டிடத்துக்குள் நுழைந்த போது கருவாட்டு மணம் மூக்கைத் தாக்கியது.. இரண்டு மூன்று நாளாகக் கழுவப்படாத பாத்திரங்கள்.. சப்பாத்துடன் ஒட்டி வந்து அங்கும் இங்கும் பதிந்து போயிருந்த பனிச்சேறு.. தாறு மாறாகப் போடபட்டிருந்த படக்கொப்பிகள்.. தண்ணீர் காணாமல் காய்ந்து போயிருந்த பூச்செடிகள்..

சிகரெட் துண்டுகள்.. பியர் போத்தல்கள்.. கஞ்சா உதிர்வுகள்.. தாண்டி உடைகளைக் களைந்து விட்டு சுடுநீரில் உடல் வலி தீரக்குளித்தான்.. சாரம் மாற்றிக் கட்டிலில் விழுந்த போது தொலைபேசி அனுங்கியது.. இலக்கத்தைப் பார்த்தான் சித்தன்.. எடுப்பமா விடுவமா என்று மனம் முடிவு செய்வதற்கு முன்பே கைகள் ரிசீவரை எடுக்க உதடுகள் " ஹலோ" என்றது..

" டேய் எங்கேடா போட்டாய்.. பகல் முழுத்தலும் அடி அடியெண்டு அடிச்சனான்.." மறுபக்கத்தில் சித்தனின் குரல் அலறியது..

" வேலை தேடி அலைஞ்சு போட்டு வாறன் மச்சான்.. அலுப்பா இருக்கு அதுதான் படுத்துக் கிடக்கிறன் "

" கிடச்சுதோ"

" எங்கை மச்சான் பாப்பன்.. ஒண்டு அம்பிடாமலே போப்போகுது.. அதுசரி உனக்கு இண்டைக்கு வேலை இல்லையே.."

"அதை ஏன் மச்சான் கேக்கிறாய்.. போனனான் லேஓவ் தந்து அனுப்பிப்போட்டான்கள்.. "

" ஏனடா"

" என்னவோ வேசைமக்கள் பிஸ்னஸ் லொஸ்ட்டில போகிது எண்டு கனபேரை வெட்டிப்போடான்கள்.. அதுதான் உனக்கு அடிச்சனான் மனசுக்கு ஆறுதலா ஒரு சுத்து அடிப்பம் எண்டு.. "

" சுத்து இல்லேடா.. இருந்ததை ராத்திரி அடிச்சிட்டன்.. சிகரெட்டும் இல்லை.. கையில காசும் இல்லை.." அலுத்தான்..

" என்னை வந்து ஏத்து காருக்கு காஸ் அடிச்சுப் போட்டு சுத்து வாங்கிப் பத்துவம்.."

வசந்தமலர் தந்த இருபது டொலரைப் பத்திரப்படுத்தியபடியே சித்தனைப் பாக்கக் கிளம்பினான் முகுந்தன்.

வசந்தமலர் வீட்டிற்குள் நுழைய "அம்மா" என்று ஓடிவந்து கட்டிக்கொண்டாள் குட்டிப்பெட்டை நிஷா.. "அம்மா பிள்ளைக்கு குக்கீஸ் எல்லாம் வாங்கிக்கொண்டு வந்திருக்கிறன்" பெட்டியை எடுத்துக் கொடுத்துவிட்டு " ஹாய் ஆரணி கோம் வேர்க் முடிச்சிட்டீங்களோ" மகளின் தலையை வருடி அவளுக்குப் பிடித்த சொக்லெட் பாரை

எடுத்து நீட்டி உள்ளே சென்று உடைகளைக் கழைந்து துவைக்கப்போட்டு நன்றாக உடல் தேய்த்துக் குளித்தாள்.. முகுந்தனின் வியர்வையுடன் கூடிய சிகரெட் வாடை உடலில் ஒட்டி அவளை போதைக்குள்ளாக்கியது.. வெட்ட வெளியில் நிர்வாணமாய் காருக்குள் தான் இருந்ததை எண்ணி குற்ற உணர்வோடு சேர்ந்த திருப்பி மனதில் எழுந்து எழுந்து அவளை உலுக்கிப்போட்டது. குமார் அங்கும் இங்குமாகப் போட்டு வைத்த அவன் உடைகளை எடுத்து மடித்து வைத்து.. குழந்தைகளுக்குச் சாப்பிடக் குடுத்து.. பாடத்திற்கு உதவி செய்து.. குமாரிக்கு பிடித்ததை சமைத்து வைத்து.. கட்டிலில் வந்து விழுந்து கொண்டாள்.. விட்டத்தை விறைத்து மீண்டும் தன் வாழ்விற்கு அர்த்தம் காண முயன்று தோற்றுப் போனாள்..தான் யாரை ஏமாற்றுகின்றாள்.. குமாரையா? குழந்தைகளையா? முகுந்தனையா? இல்லை என்னை நானே ஏமாற்றுகின்றேனா என்பதில் பல காலமாக அவளிற்கு குழப்பம். முகுந்தனுடன் அவளுக்குண்டான உறவின் பின்னர் குழந்தைகளுடன் சிடுசிடுப்பதை..குமாருடன் குரல் உயர்த்தி அலுத்துக்கொள்வதை.. சொல்லப்போனாள் அவள் குடும்ப உறவு முன்பு இருந்ததை விட இறுக்கமாகிப் போயிருந்தது.. இது எல்லாம் தன் குற்ற உணர்விற்கு அவர்களுக்குக் கொடுக்கும் லஞ்சமா என்ற பரிதவிப்பும் இடையிடையே அவளை வாட்டுவதுண்டு.. இருந்துமென்ன எல்லோரும் சந்தோஷமாக இருப்பது தானே முக்கியம்..அவள் கண்கள் குழப்பங்களுடன் மெல்ல மெல்ல மூடிக்கொண்டது..

முதல் முதலில் முகுந்தனை வேலைத்தளத்தில் வசந்தமலர் சந்தித்தபோது அவளிற்கு வேடிக்கையாகவும் கொஞ்சம் அவமானமாகவும் இருந்தது.. ஈழத்தமிழன் என்று பெருமையாகச் சொல்லிக்கொள்ளும் தோற்றத்தில் அவன் இல்லை.. எப்போதும் போதையில் காரணமின்ற சண்டை போடும்.. துப்பாக்கி தூக்கும்.. பத்திரிகைகளில் அன்றாடம் அடிபடும் பலரில் ஒருவன் என்பதை பாத்த மாத்திரத்தில் அவள் உணர்ந்து கொண்டாள்.. அவனைப் பார்ப்பதை பேசுவதை இயன்ற அளவிற்குத் தவிர்த்து வந்தும் அவள் போதாத வேளை என்று எண்ணும் வண்ணம் மகள் நிஷாவிற்கு உடம்பு சுகமில்லாமல் போய் பாடசாலையில் இருந்து அழைப்பு வர கொட்டும் பனிக்குள் பஸ் பிடித்து நேரத்திற்குப் போய்ச் சேரமுடியுமா என்று தவித்தபோது தானாக வந்து உதவுவதாக முன்நின்றான் முகுந்தன் சிந்திக்க நேரமின்றி அவனின் உதவியைப் பெற்றுக்கொண்டவள்.. பின்னர் காய்ந்து போன உணவை அவன் மென்று மென்று விழுங்கும் போது தன் உணவில் கொஞ்சமாகப் பகிர்ந்து.. பின்னர் கொஞ்சமாகக் கதைத்து.. காலப்போக்கில் அவன் மென்மையான பக்கங்கள் கண்டு அதிர்ந்து.. சகஜமாகப் பழகும் நிலை வந்த போது ஒருநாள்..

சமைத்துக்கொண்டு கொண்டு நின்ற வசந்தமலரின் காதில் படிக்கட்டால் உருண்டு கதறியபடி விழுந்த நிஷவின் குரல் கேட்டு பதறித்திரும்பியவளின் கண்ளை அருகே திறந்து விட்டிருந்த கதவின் மூலை தாக்க கண்டிப்போன கண்களுடன் ஓடிப்போய் நிஷாவை அவள் அனைக்க மனைவியையும் மகளையும் படியில் கிடத்தி ஐஸ்

கட்டிகளால் மாற்றி மாற்றி ஒத்தடம் பிடித்த கணவனின் நகைச்சுவையை முகுந்தனுடன் பகிர்ந்து சிரிக்க எண்ணி அவன் அருகில் போய் அவள் அமர்ந்த போது பதட்டத்துடன் அவள் கைகளைப் பற்றி அழுத்திய படியே "உங்கட மனுஷன் உங்களுக்கு அடிக்கிறவரா அக்கா" என்றவனின் கைகளின் வியர்வை உடலை சிலிர்க் வைக்க அவன் பார்வையை மிக அருகில் சந்தித்த வசந்தமலரில் உடலில் ஈரம் கசிந்தது.. அவனில் இருந்து வந்த அந்த சிகரெட்டுடன் கூடிய வியர்வை மணம் சின்னதாக அவள் உடலை நடுங்கச் செய்ய மென்று விழுங்கித் தன்நிலை மறந்து அவன் தோளில் சாய்ந்தாள்.. அவள் தலையை வருடி "அழுங்கோ அக்கா அப்பதான் உங்கட வேதனை குறையும்" வருடியவனின் குரல் கேட்டு ஏனோ விம்மினாள் வசந்தமலர்..

அதன் பின்னர் பணத்திற்காகப் பல்லைக் கடித்துக்கொண்டு வேலைத்தளத்தில் மாய்ந்தவளிற்கு வேலைக்குப் போவது பிடித்துப் போனது.. பதினைந்து வருடதிருமண வாழ்வு மீண்டும் அர்த்தத்ததைத் தந்தது.. முகுந்தனின் அணைப்பு.. தொடுகை வெட்கமற்ற பேச்சு எல்லாமே அவளிற்கு புதிய அனுபவமாய் அவள் இரத்த ஓட்டத்தை வேகப்படுத்தியது.. குமாரை அவள் வெறுக்கவில்லை.. முகுந்தனை அவள் காதலிக்கவுமில்லை.. ஆனால்..குழந்தைகள் வளர்ந்து விட்டார்கள் என்பதால் தன்னை வயதானவளாக உருமாற்றி உணர்வுகள் மெல்ல மெல்ல உறைந்து போய் விட்டதாக எண்ணி வாழ்ந்தவளை மீண்டும் உலுப்பி விட்டிருந்தான் முகுந்தன்..

கஞ்சா அடிச்ததில் இருவரின் கண்களும் சிவந்து போயிருந்தன.. குளிர்காய கோப்பிக்கடைக்குள் இருந்தபடியே வருவோர் போவோரை அளந்து கொண்டிருந்தார்கள்.. வசந்தமலரின் மணம் கிறக்கம் இடையிடையே முகுந்தனின் நினைவில் வந்து அலைந்து கொண்டிருந்தது.. தான் உறவு வைத்திருக்கும் அத்தனை பெண்களைப் பற்றியும் சித்தனிடம் கதை அளக்கும் முகுந்தனுக்கு ஏனோ வசந்தமலர் பற்றி வாய் திறக்க முடியவில்லை.. வசந்தமலர் மேல் தனக்கு உண்மையான காதலோ என்று அவனிற்கு அடிக்கடி பயமாக இருந்தது.. வசந்தமலரின் குரலை ஒருநாள் கேட்காவிட்டாலும் அவனிற்று எதுவோ போல் இருக்கும்.. மற்றைய பெண்களைப் போலில்லாமல் மணிக்கணக்காக அவளுடன் கதை அளக்க அவனுக்குப் பிடித்திருந்தது.. வசந்தமலருடனான தனது உறவைப் புனிதமானதாக எண்ணி வசந்தமலர் பற்றி எந்த ஒருமனிதனும் தவறாகக் கதைத்துவிடக்கூடாது என்பதில் மிகவும் கவனமாக இருந்தான்.. கணவனை இழந்தவளிற்கு வாழ்க்கை குடுத்தால் அது உத்தமம்.. கணவனால் துன்புறுத்தப்படும் ஒரு பெண்ணிற்கு வாழ்வில் சில இன்பங்களைக் காட்டினால்.. தன்னைத் தேற்றிக்கொண்டான் அவன்..

வேறு தமிழர் இல்லாததால் அக்கா அக்கா என்று வேலைதளத்தில் ஆரம்பித்த உறவு சாப்பாடு பகிர்வதில் தொடங்கி.. பஸ் தரிப்பில் இறக்கி விடுவதில் போய் ஒருநாள் கண்களுக்கு கீழே கட்டி பட்டுப்போயிருந்த இரத்தத்தைப் பார்த்தபோது நெருக்கம் கொண்டது.. கணவனிடம் காணாத அன்பு அரவணைப்பை வசந்தமலரிற்கு தான்

கொடுப்பதாக எண்ணிப் பெருமை கொண்டான்.. மெல்ல மெல்ல தன்னுடன் பழகும் இளம் பெண்களிடமிருந்து விலகி நேரம் கிடைக்கும் போதெல்லாம் வசந்தமலருடன் உறவுகொள்ளத் தொடங்கினான்.. "டேய் என்னை விட்டிடாதை.. என்னை ஏமாத்திப்போடாதை.. வேற ஒரு பெட்டைகளோடையும் போகாதை.." அவள் கொஞ்சியபோது அந்த அன்புஇ காதல்இ மோகம் கண்டு விறைத்து துவண்டு குழந்தை போல் அவள் மடியில் முகம் புதைத்தான். "உன்னைக் கலியாணம் கட்டவேண்டாம் எண்டு நான் சொல்லேலை.. நீ கட்டிற நேரம் வரேக்க நானே விலகிப் போறன் ஆனால் இப்ப வேறை ஒண்டும் வேண்டாம்" அவனிடம் சத்தியம் வாங்கிக்கொண்டாள்..

மாதங்கள் நாட்களாகி மறைந்து போக..முகுந்தனின் மனதில் முற்றாக வசந்தமலர் இடம் பிடித்துக்கொண்டாள்.. சித்தன் வேறு வேலை எடுத்து பிஸியாகி விட வசந்தமலருடன் தொலைபேசியில் கதைப்பது, சந்திப்பது.. இப்படியாக..இப்படியாக..

இன்றுடன் ஒரு கிழமையாயிற்று வசந்தமலரின் குரலைக் கேட்டு.. முகுந்தனிற்கு தலையே வெடித்துவிடும் போலிருந்தது.. அவள் தொலைபேசி இலக்கம் அவனிடம் இல்லை.. ஏன் வீண் பிரச்சனை நானே ஒவ்வொருநாளும் உன்னுடன் கதைக்கிறேன் என்று தொலைபேசி இலக்கத்தை கொடுக்க மறுத்திருந்தாள் வசந்தமலர்.. சித்தனிடம் மனம் விட்டுக் கதைக்கும் துணிவு அவனுக்கில்லை.. திருமணமாகி இரண்டு பெண் பிள்ளைகளிற்குத் தாயான ஒருத்தியுடன் தான் உறவு வைத்திருப்பது.. அதை உண்மையான காதலாக மனதுக்குள் பூஜித்து அவள் குரல் கேட்காது உடைந்து போவது பற்றி எவ்வளவுக்கு நண்பனாக இருப்பினும் சொல்ல முடியுமா? அவன் என்னைக் கேவலமாகப் பார்ப்பான் இல்லாவிட்டால் கிண்டல் அடிப்பான் இரண்டையும் தாங்கும் மனப்பக்குவம் முகுந்தனிடம் இருக்கவில்லை.. மூளை குழம்பிய நிலையில் சாப்பிட மனமின்றி கஞ்சாவைப் புகைத்துப் புகைத்துத் துவண்டு போனான். இன்றுடன் ஒரு கிழமையாயிற்று வேலையில்லை கையில் பணமில்லை.. இந்த நிலை தொடர்ந்தால் தான் மீள்ளாது போய் விடுவேனோ என்று பயந்து எழுந்து தன்னை திடப்படுத்த முயன்று தலையில் சுடுநீரை வாரி இறைத்துக் குளித்தான்.. பாவம் வசந்தமலர் வீட்டில் ஏதும் பிரச்சனையோ தெரியவில்லை.. அவள் மேல் அன்பை வைத்திருந்து என்ன பிரயோசனம்.. வேண்டிய நேரத்திற்கு ஆறதல் சொல்ல தன்னால் முடியவில்லையே..ஏக்கமாக இருந்தது அவனிற்கு.. இன்று அவள் அழைப்பாள் இன்று எப்படியும் வசந்தமலரின் குரலைத் தான் கேட்கமுடியும் என்ற நம்பிக்கையுடன் வயிறு புகைந்து போக கோப்பி;க் கடையை நோக்கிப்புறப்பட்டான்..

முகுந்தனின் கைகள் குளிர்ந்து போயின. வாய் விட்டுக்கதறுவதற்குக் கூட முடியாத நிலை.. பொங்கிப் பொங்கி வந்த அழுகையை தனக்குள்ளேயே மென்று, மென்று தோற்றுப்போய்க் கொண்டிருந்தான்.. அங்குலம், அங்குலமாகத் தான் அழகுபார்த்து முகர்ந்து, முத்தம் கொடுத்தவை எல்லாம் அடங்கிப்போயிருந்தது அவனுக்குக் கனவு

போலிருந்தது.. 'முந்தி எங்களோட வேலை செய்த பிள்ளை வசந்தமலரெண்டு.. உனக்கு நினைவிருக்கோ என்னவோ.. அக்சிடென்ரில செத்திட்டுதாம்.. இண்டைக்கு பாக்கிறதுக்கு வைக்கினம் நாங்கள் வேலையாக்களெல்லாம் சேந்து போறம்.. நீ வரப்போறியே.." அந்த வயதான பெண்மணி கேட்டபோது.. முகுந்தன் சுருண்டு விட்டான்.. தலையை சுவரில் அடித்து, அடித்துக் கதறியாகி விட்டது.. கண்கள் வீங்கிப்போய் விட்டன.. ஆனால் அவன் இயல்பாக இருக்க வேணும் 'பாவம் அவ்வளவு வயசும் இல்லை.. ரெண்டு பொம்பிளப்பிள்ளைகள்.. புருஷன் தான் தனியக் கஷ்டப்படப்போகுது." என்று மற்றவர்களுடன் சேர்ந்து சப்புக்கொட்ட வேண்டும்.. தன்னால் முடியுமா.. கடைசியாக ஒருமுறை கைகளில் நடுக்கமின்றி.. பொங்கி வரும் கண்ணீர்த் துளிகளை சுரப்பிக்குள் திரும்பவும் தள்ளி தன்னால் முடியுமா? கட்டிலில் குப்புறப்புரண்டு கதறியவன்.. வசந்தமலரைக் கடைசியாகப் பார்க்கும் ஒரு சந்தர்ப்பத்தை இழக்க விரும்பாது அழுத்தி, அழுத்தி குளிர் தண்ணீரை முகத்தில் அடித்துக் கண்களின் வீக்கத்தையும் சிவப்பையும் போக்கமுயன்று மற்றவர்களுடன் கூடி வசந்தமலரின் உடல் பார்வைக்காக வைக்கப் பட்ட மண்டபத்திற்குள் நுழைந்து விட்டான்..

வசந்தமலரின் முகத்தில் புன்னகை தெரிந்தது.. மெல்லிய சிவப்பு நிறப்பட்டில் உயிர்ப்போடிருந்தாள் அவள்.. வரிசையில் நின்று மெல்ல நகர்ந்து வசந்தமலரைக் கடைசியாக ஒருமுறை சில நிமிடங்கள் பார்த்து விட்டு வாய்விட்டுக் கதறிக்கொண்டிருக்கும் குமாரையும், பிள்ளைகளையும் அணைத்து ஆறுதல் சொல்லிவிட்டுத் தமது கடமை முடிந்ததாய் போய்க்கொண்டிருந்தார்கள் பலர்.. முகுந்தன் அந்த வயதான பெண்மணியின் கைகளை இறுகப்பற்றிய படியே 'என்னைத் தனியாக விட்டுவிடாதே என்ற பாணியில் மெல்ல நகர்ந்து கொண்டிருந்தான்.. அவள் பார்வையில் தெரிந்த கேள்விக்குறியைப் பற்றிக் கவலைப்படும் நேரமல்ல அது.. புன்னகைக்கும் வசந்தமலரின் முகத்தில் ஒரு தெளிவு, நிம்மதி தெரிந்தது.. உடல் சிதறாமல் அழகோடிருந்தது முகுந்தனுக்கு ஆறுதலைத் தந்தது.. வயதான பெண்மணியின் கையை இறுக, இறுக அழுத்தித் வசந்தமலரிற்கு தனது கடைசி அஞ்சலியை மனதுக்குள் முணுமுணுத்தான்.. வசந்தமலரின் பெண்களை உரிமையோடு தலைவருடி ஆறுதல் சொன்னவன் குற்ற உணர்வோடு கடமைக்காக குமாரின் பக்கம் திரும்பியபோது குமாரின் கண்களின் தெரிந்த அந்தக் குரூரம் முகுந்தனை ஒருமுறை நடுங்கச் செய்தது.. கால்கள் தடுமாற பின்னே ஒரு அடி எடுத்து வைத்தனைப் பார்த்து ஏளனமாக ஒரு சிரிப்பை எவரும் பார்க்காத வகையில் வீசினான் குமார்.. ஊதல் காற்றுடன் கூடிய வெண்பனி மூடலில் வீதியோரம் விறைத்தபடியே நடந்து கொண்டிருந்தான் முகுந்தன். அவன் கண்களில் கண்ணீரில்லை எல்லாமே விறைத்துப் போயிருந்தன.

பதிவுகள் பெப்ருவரி 2005 இதழ் 62 -

## 11. ரெக்ஸ் எண்டொரு நாய்க்குட்டி! - சுமதி ரூபன் -

"கணன் மாமாவும், மாமியும் கனடா வந்து நிக்கினம்.. ஒரு கிழமைக்கு என்னோட தங்கச் சொல்லிக் கேட்டனான்.. உன்ர அறையிலதான் விடப்போறன் நீ தம்பியோட ஷெயர் பண்ணு" அம்மா சொல்லி விட்டுப் போய் விட்டாள். தம்பி அவசரமாக தன்ரை அறைக்குள் புகுந்து கொண்டான். என்னத்தை ஒளிக்கிறான், மறைக்கிறானோ தெரியாது. அம்மா யன்னல் சீலைகளைத் தோய்கிறது, கட்டிலுக்கு புது பெட்சீட் மாத்திற தெண்டு படு பிஸியாயிட்டா. பாவம் அம்மா..அப்பா இருக்கேக்க ரெண்டு பேருமா வேலைகளை சேந்து செய்திச்சீனம்.. இப்ப ரெண்டும் பெடியள்.. அதுகளிட்ட என்னண்டு வீட்டு வேலை செய்யக் கேக்கிறதெண்டு நினைச்சுத் தானே கிடந்து முறிவா.. நான் கொஞ்மாவது ஏதாவது உதவுவன்.. ஆனால் தம்பி படிக்கிற மாதிரிப் போஸ் குடுத்துக் கொண்டு எந்த நேரம் பாத்தாலும் கொம்பியூட்டரைக் கிண்டிக்கொண்டு இருப்பான்.

கணன் மாமா.. எங்கட சொந்தாக்காறர் இல்லை.. ஊரில பக்கத்து வீடு.. மாமியும், அம்மாவும் நல்ல ப்ரெண்ஸ்.. குமுதம், ஆனந்தவிடகனில வாற தொடர்கதை பற்றிக் கதைக்கிறது, சேந்து சொப்பிங் போறது, படத்துக்குப் போறது எண்டு ஒண்டாச் சுத்தித் திரிவீனம். ஆனால் மாமாவும் அப்பாவும் பெரிசாக் கதைக்கிறதை நான் கண்டதில்லை.. சிலவேளகளில ரோட்டில எங்காவது கண்டா சும்மா சாட்டுக்கு "எப்பிடி" எண்டு ஆளையாள் கேட்டிட்டுப் போவீனம். அவ்வளவுதான்.. மாமாக்கு மூண்டு(ம்) பெட்டைகள்..

(நானும் தம்பியும் அவேலை பெட்டைகள் பெட்டைகள் எண்டு கதைக்கிறது அம்மாக்குப் பிடிக்கிறேலை.. "அதென்ன பெட்டைகள் மனேஸ் இல்லாமல்" எண்டு ஒருநாள் அம்மா சொல்லிப்போட்டுப் போக தம்பி "அதென்ன மனேஸ் இல்லாமல்" எண்டு அம்மா மாதிரி நெளிச்சுக் காட்டிச் சிரித்தான், எனக்கு அது அவ்வளவாப் பிடிக்கேலை) நான் நடுவானைக் கொஞ்ச நாளாச் சைட் அடிச்சன். அது பிறகு வேற ஒரு பெடினோட கதைச்சுக் கொண்டு திரியிறதைக் கண்டிட்டு விலகீட்டன்.

ஒரு நாள் மாமி எங்கட வீட்டை அவசரமா ஓடி வந்து அம்மாட்ட ஏதோ ரகசியமாச் சொல்லி மூக்கைச் சீறிச் சீறி அழுதா.. அம்மா என்னைக் கடைக் கண்ணால பாத்துப் பாத்து மெல்லமா ஏதோ மாமீன்ர காதுக்க குசுகுசுத்தா. நான் விறாந்தையில் லாவகமாகக் கதிரையில சரிஞ்சு இருந்து கொண்டு ஆனந்தவிகடனில கமலகாசன் வாணி ஜெயராமைக் கலியாணம் கட்டப் போகுதாம் எண்ட கிசுகிசு வாசிச்சுக் கொண்டு இருந்தனான். சிறீதேவியைக் கட்டாதது எனக்கு நல்ல சந்தோஷம். அம்மா என்னைப் பாத்து "தம்பி பெரியாக்கள் கதைக்கேக்க நீ என்ன இஞ்ச, உள்ள போ" எண்டு என்னைக் கலைச்சுப் போட்டா.. நான் கனநேரமா மாமி அழுத விஷயத்தைச் சொல்லுவா எண்டு ஆனந்தவிகடனில முகத்தை மேஞ்சது வீணாப் போச்சுது. அம்மா

இன்னும் என்னைப் பெரிய பெடியனாப் பாக்காததும் ஏமாற்றமா இருந்துது.

நான் சோம்பல் முறித்தபடி எழும்பி முன் ஒழுங்கேக்க வந்து யாரும் பெட்டைகள் சைக்கிளில வரீனமோ எண்டு பாத்துக்கொண்டு நிண்டன். (ஒண்டும் செய்ய இல்லாட்டி இதுதான் என்ர பொழுது போக்கு) மாமியின்ர கடைசிப் பெட்டைதான் ரியூசன் வகுப்புக்கு போறதுக்காக சைக்கிளோட வெளியில வந்துது. கொஞ்சம் கறுப்பா இருந்தாலும் நல்ல முகவெட்டும் வடிவும். இருந்தாலும் ரெண்டாவதை நான் மனசார விரும்பினதால கடைசிப் பெட்டையில ஒரு பிடிப்பு வரமாட்டன் எண்டிட்டிது.
பெட்டைக்குப் பக்கத்தால சந்தோஷமாத் துள்ளிக் கொண்டு "ரெக்ஸ்" உம் ஓடி வந்துது. கையில இருந்த ஒரு துண்டு பிஸ்கோத்தை என்ர காலடியில போட்டு ரெக்ஸ்சை என்ர காலுக்க வரப்பண்ணிப் போட்டு ஒரு வில்லங்கமான சிரிப்போட கடந்து போச்சுது பெட்டை. நான் முகத்தை "உம்" எண்டு பிடிச்சுக் கொண்டு நிண்டன். ரெக்ஸ் பிஸ்கோத்தை திண்டிட்டு என்ர காலை நக்கீச்சு.. நான் அதின்ர தலையில தடவி விட்டன்.

வீட்டுக்கு ஒருக்கா கள்ளன் வந்த பிறகு மாமா எங்கையோ இருந்து இந்த உருண்ட வெள்ளை ரெக்ஸ்சை வீட்டை கொண்டு வந்து கட்டினார். மாமா வீட்டை ஆர் கடந்து போனாலும் அதிகமா ரெக்ஸ் குரைச்சுக் கொண்டு அவையள விட்டுக் கலைக்கும். அதால அதிகமா மாமா வீட்டைக் கடக்கிற எல்லாருமே கொஞ்சம் உசாரா விடுவிடு வெண்டுதான் நடந்து போவீனம். சைக்கிள்காறர் எண்டா பாஸ்ட்டா ஓடி வந்து வீட்டைக்கடக்கேக்க பாரில காலைத் தூக்கி வைச்சுக் கொண்டு போவினம். ஆனால் ரெக்ஸ் இதுவரைக்கும் ஒருத்தரையும் கடிச்சதெண்டு நான் கேள்விப்படேலை.. நாங்கள் பக்கத்து வீட்டில இருக்கிறதாலையும், மாமியோட சேந்து ரெக்ஸ் அடிக்கடி எங்கட வீட்டை வாறதாலையும் எங்க வீட்டில யாரைக்கண்டாலும் சந்தோஷத்தோட வாலை ஆட்டிக்கொண்டு வந்து காலை நக்கும்.

ஒருநாள் நான் வகுப்பு முடிஞ்சு வீட்ட சைக்கிள்ள வரேக்க,, மாமி வீட்டை பெரிய சத்தமா ரெண்டு மூண்டு நாய்களின்ர கத்தி குரைக்கிற சத்தம் கேட்டுது. நான் சைக்கிள மதிலோட சாய்சுப் போட்டு போய்ப் பாத்தன் ரெக்ஸ் ஒரு பெட்டை நாயோட ஒட்டிப்போய் இழுப்பட்டுக் கொண்டு நிண்டுது. மாமி வீடு பூட்டிக் கிடந்துது.. (பூட்டிக் கிடக்கோ இல்லாட்டி பெட்டைகள் வெளியில வர வெக்கப் பட்டு உள்ளுக்க நிக்கீனமோ எண்டு தெரியேலை.). நான் ஒரு தடிய எடுத்து அதுகளைக் கலைச்சன். ரெண்டும் கத்திக் கொண்டு இழுபட்ட படியே பின் வளவுக்க ஓடீற்றுதுகள்..

பிறகு கொஞ்ச நாளால ஒருநாள் நான் வெளியில வெளிக்கிட்டிக்கொண்டிருக்கேக்க அம்மா ஓடி வந்து "தம்பி நான் ஊத்தையா நிக்கிறனடா இதை ஒருக்கா மாமீட்டைக் குடுத்திட்டுப் போ" எண்டு ஒரு பெட்டிய நீட்டினா.. மங்கையர்மலரில சொன்ன "ரெசுப்பி" இப்பிடித்தான் அடிக்கடி பெட்டியோட அங்கையும் இஞ்சையும் கை மாறும். நான்

சினத்தோட பெட்டிய வாங்கிக் கொண்டு மாமி வீட்டை போனன். மாமி வீட்டு விறாந்தையில சறத்தை மடிச்சுக் கட்டி, மஞ்சள் நிறத்தில நைலோன் ஆம்கட் ரீசேட் போட்ட தடிச்ச கறுப்பன் ஒருத்தன் ரெக்ஸ்சை அமத்திப்பிடிச்சுக் கொண்டு மாமாவோட ஏதோ கதைச்சுக் கொண்டு நிண்டான். ரெக்ஸ் என்னைக் கண்ட உடன மெல்லிய குரலில முனகிப் பிறகு குரைச்சுது. நான் தயங்கித் தயங்கிக் கிட்டப் போக மாமா என்ன ஒரு மாதிரிப் பாத்திட்டு உள்ள போ எண்டு தலைய ஆட்டினார். நான் பேசாமல் உள்ள போனன். மாமி மேசையில துணிய விரிச்சு வைச்சு அளந்து அளந்து ஏதோ வெட்டிக்கொண்டிருந்தா. அவவின்ர வயிறு உப்பின மாதிரி இருந்துது.

மூண்டு பெட்டைகளும் ரேடியோவில இசையும் கதையும் கேட்டுக்கொண்டு இருந்தீச்சுதுகள். நான் முகத்தை "உம்" எண்டு பிடிச்சுக் கொண்டு மாமீற்ர பெட்டிய நீட்டினன். மாமி வாங்கி மேசையில வைச்சுப் போட்டுத் துணி வெட்டிறதில கவனமா இருந்தா. இசையும் கதையுமில "காதலிலே தோல்வியுற்றான் காளை ஒருத்தன்" எண்டு பாட்டுப் பாடீச்சுது. நான் பெட்டைகளையும் மாமியையும் மாறி மாறி பாத்துக் கொண்டு நிக்க (நான் மூத்த பெட்டைய மட்டும்தான் அக்கா எண்டு கூப்பிடுறனான், முந்தி எனக்கு அக்காவோட நல்லா ஒத்துப் போகும். அவ சொல்லுற வேலையெல்லாம் ஓடியோடிச் செய்வன்.. ஆனால் இப்பவும் அவ என்னைச் சின்னப் பெடியன் மாதிரி கண்ட கிண்ட வேலைகள் சொல்லுறதால நான் அவேன்ர வீட்டை போறதைக் குறைச்சுப் போட்டன்.. பத்தாததுக்கு ரெண்டாவது பெட்டை அக்காட்ட என்னைப் பற்றி ஏதோ அள்ளி வைச்சிட்டுது எண்ட சந்தேகமும் எனக்கு இருக்கு) அக்கா என்னைப் பாத்து "என்ன பெட்டி வேணுமே" எண்டு கேட்டா.. நான் "இல்லை" எண்டு தலையாட்டினன். கடைசிப்பெட்டை என்னைப் பாத்துக் கண்ணால சிரிச்சுது. பிறகும் நான் போகாமல் நிக்கிறதைக் கண்ட மாமி "என்னடா" எண்டா.. "இல்லை மாமி ரெக்ஸை யாருக்கும் குடுக்கப் போறீங்களே?" எண்டன். கடைசிப் பெட்டை ஒரு மார்க்கமா சிரிச்சுக் கொண்டு அறைக்குள்ள ஓடிச்சுது. நான் வந்த கோவத்தில திரும்ப "அது ஒண்டுமில்லையடா இஞ்சதான் நிக்கும் நீ போ" எண்டு மாமி வாயுக்க ஒரு சிரிப்போட சொன்னா.. எல்லாமே எனக்கு ஒரு புதிரா இருந்துது.. ரெண்டாவது பெட்டை என்னை ஒரு பொருட்;டாவே எடுக்கிறதில்லை.. நினைச்சா நான் அவவின்ர லவ் கதைய அம்மாட்டச் சொல்லி நாறடிச்சுப் போடுவன்.. ஆனால் ஏனோ மனம் கேக்கேலை.. நான் பேசாமல் திரும்பி நடக்க, பின் முத்தத்து வேப்பமரத்தில ரெக்ஸ்சை அந்த தடியன் கட்டி வைச்சிட்டு நிலத்தில இருந்து ஏதோ செய்து கொண்டிருந்தான்.. ரெக்ஸ் அனுங்கிக் கொண்டு நிண்டுது. நான் நிண்டு கொஞ்ச நேரம் பாக்க மாமா "இதெல்லாம் நீ பாக்கக் கூடாது போ" எண்டார். தயங்கித் தயங்கி நான் வெளியில் வர ரெக்ஸ் பெரிசாக் கத்திற சத்தம் கேட்டுது. ரெக்ஸ்க்கு ஏதோ செய்யிறான் அந்த தடியன்.. ஓடிப்போய் அதைக் காப்பாற்ற வேணும் எண்டு ஆசையா இருந்திச்சு.. நான் எட்டிப் பாத்தன்..மாமான்ர தலை மதிலால இன்னும் தெரிஞ்சுது.. அதால நான் திரும்பிப் போகாமல் பேசாமல் வந்திட்டன்.

அடுத்தநாள் நான் வெளியில வெளிக்கிடேக்க ரெக்ஸ் மாமா வீட்டு வாசலில நிண்டு மெல்லமாக் குரைச்சுது. நான் "ஓடி வா" எண்டு கையக் காட்டவும் வராமல் சினுங்கிச் சினுங்கிக் குரைச்சுது.. நான் கிட்டப் போக பின்பக்கத்தை ஒரு மாதிரி உயத்திப் பிடிச்சுக் கொண்டு கால்கள் ரெண்டையும் அகட்டிக் கொண்டு முனகிய படியே மெல்ல மெல்ல என்னட்ட நடந்து வந்துது. நான் அதை மெல்லமாத் தூக்கி தடவி விட்டன். பின்பக்கமா அதுக்கு ஒரு கட்டுப் போட்டிருந்துது.

மூண்டு பெட்டைகளுக்குப் பிறகு கனகாலத்தால மாமிக்கு ஒரு பெடியன் பிறந்துது. நானும் தம்பியும் மாமிக்குப் பிள்ளை பிறந்ததை கதைச்சுச் சிரிச்சதைக் கேட்டு அம்மா "வயசுக்கு ஒரு மரியாதை இல்லாமல் உதென்ன கதையும் சிரப்பும்" எண்டு கோவிச்சா.. தம்பி என்ர காதுக்கு "எங்களுக்குத் தங்கச்சி பிறக்காட்டிச் சரி" எண்டு சொல்ல நான் சிரிப்புத் தாங்கேலாம் வெளியில ஓடீற்றன். அம்மா என்னை முறைச்சுப் பாத்துப் போட்டுப் போட்டா..

கணன்; மாமான்ர தலை நரைச்சிருந்தாலும் நடையில தளர்ச்சி இல்லை.. மாமி தலைக்கு டை அடிச்சிருந்தா. முகந்தான் சுருங்கிப் போய் இருந்துது. எங்களைக் கண்ட உடன கட்டிப் பிடிச்சு அழுதா. அப்பா செத்தாப்பிறகு இப்பதான் காணுறா.. அதுதானாம் அந்த அழுகை. பெட்டைகள் மூண்டும் கலியாணம் கட்டி லண்டனில தான் இருக்குதுகள் எண்டா. ரெண்டாவது பெட்டைக்கு எத்தின பிள்ளை எண்டு வாயில வந்த கேள்விய நான் அடக்கிக் கொண்டன். எனக்கு எப்ப கலியாணம் எண்டு கேட்டா.. "அவன் யாரையோ லவ் பண்ணிறானாம் பெட்டை யூனிவேசிட்டியில படிக்குதாம் படிப்பு முடியத்தான் கலியாணம் எண்டு இழுத்தடிக்கிறான்" எண்டு அம்மா சொன்னா. நான் பெருமையாச் சிரிச்சன். தன்ர கடைசிப் பெடியன் லண்டனில் டொக்டருக்குப் படிகிக்கிறான் எண்டு என்ர பெருமையில மண்ணை அள்ளிப் போட்டா மாமி.

லண்டனிலும் பாக்க கனடா நல்லா இருக்குது எண்டும், சாப்பாடு, இடமெல்லாம் எங்கட ஊர் போல கிடக்குது எண்டும் மாமா சொன்னார். தான் இப்ப இடியப்பம் தோசை ஒண்டும் செய்யிறேலை எல்லாம் கடையில வாங்கலாம் எண்டு அம்மா கனடாப் பெருமையக் கொஞ்சம் கூட்டிச் சொன்னா. தான் கனடாவில வாங்கின சீலைகள மாமி அம்மாக்குக் காட்டினா. அம்மா முகத்தைச் சோகமா வைச்சுக் கொண்டு தான் இப்ப பெரிசாப் பட்டு ஒண்டும் கட்டிறேலை எண்டா.. எனக்கு விசர் வந்துது. தம்பி ரூமுக்க கொம்பியூட்டரில் கிணுகிணுக்கிற சத்தம் கேட்டுது. நாளைக்கு வேலைக்கு வெள்ளணைப் போக வேணும் இருண்டிட்டுது படுக்கலாம் எண்டா வழியக் காணேலை.. (நான் மூத்த ஆம்பிளப் பிள்ளையாம் விசிற்ரேஸ் வந்திருக்கேக்க அவையளோட இருந்து கதைக்க வேணுமாம்..அம்மான்ர மனேஸ் இஞ்சையும் வேலை செய்யுது) நான் சோபாவில இருந்து தூங்கிக் கொண்டு இருந்தன். கதை கதையெண்டு கதைச்சு அலம்பி ஒரு வழியாக் கொட்டாவி விட்ட படியே ஒவ்வொருத்தரா படுக்கப் போச்சீனம்.

நான் பேசாமல் சோபாவில படுக்க அம்மா வந்து எழுப்பி "அவையள் கண்டாச் சரியில்லை.. போய்த் தம்பியோட படு" எண்டு பலவந்தமா அனுப்பினா. தம்பி கட்டிலில காலை விசிச்சுப் பரந்து படுத்திருந்தான். இண்டைக்கு நித்திரை கொண்ட மாதிரித்தான் எண்டு நான் ஒரு ஓரமா ஒதுங்கினன்.

கண் மூடி மூடித் திறக்க நான் அயருவதும் முழிப்பதுமாகப் புரண்டு கொண்டு கிடந்தன். மாமீன்ர ரெண்டாவது அடிக்கடி வந்து சிரிச்சிது. தம்பி சின்னதாக் குறட்டை விட்டான். நான் கையால அவன்ர வாயை மூடிப்பாத்தன் சரி வரேலை.. பெட் சீட்டை எடுத்து தலையைப் போத்து கண்களை இறுக மூடி ஒண்டு ரெண்டு எண்டு மனதுக்க எண்ணிக் கொண்டு கிடக்க, என்ர அறையில கட்டில் ஆடுற சத்தம் கேட்டுது. மாமி கிளுகிளுத்தா சின்னதாச் சிரித்தா.. பிறகு சினுங்கினா..மாமா ஏதோ ரகசிய குரலில குசுகுசுத்தார்.. மாமியின்ர குரல் இன்னும் சினுங்கியது.. பிறகு ரெண்டு பேற்ற மூச்சும் ஒரு மாதிரிக் கேட்டுது. என்னடா இது சோதினை எண்ட படி நான் தம்பியப் பாத்தன் அவன் வாய் திறந்து சொர்க்கத்தில கிடந்தான். நான் காதைப் பொத்திக் கொண்டு கிடக்க மாமியின்ர ஆ.. ஆ வெண்ட குரல் வந்து காதைப் பொத்தி அடிச்சிது.. பிறகு கொஞ்ச நேரத்தால ஓய்ஞ்சு போச்சுது. மாமா இருமுற சத்தம் கேட்டீச்சு.. எனக்கு கையெல்லாம் குளிந்து விறைச்சுப் போச்சு.. அடக்க முடியாமல் வந்த சிரிப்பை அடக்கிக் கொண்டு கிடந்த என்ர கண்களை நித்திரை வந்து மூட பின் கால்களை அகட்டிப் பிடித்த படி முனகலோடு அரக்கி அரக்கி நடக்கும் நான் மறந்து போயிருந்த "ரெக்ஸ"; என் கண்களுக்குள் வந்து போனது.

**12.. நரகத்திற்குச் செல்லும் நான்.. - கறுப்பி (சுமதி ரூபன்) -**

சில மணிநேரங்கள் கண்களை மூடித் தியானநிலையில் இருக்கும் போது எல்லாமே வந்து விடுகின்றது. வந்தவற்றைக் கண்களைத் திறந்து மீண்டும் ஒரு முறை மீட்டுப் பார்க்க முயல்கையில் ஒன்று மற்ற நிலையே எஞ்சியிருக்கும். சில மணிநேரங்கள் கண்களை மூடித் தியானநிலையில் இருக்கும் போது எல்லாமே வந்து விடுகின்றது. வந்தவற்றைக் கண்களைத் திறந்து மீண்டும் ஒரு முறை மீட்டுப் பார்க்க முயல்கையில் ஒன்று மற்ற நிலையே எஞ்சியிருக்கும். திட்டமிட்டுச் செயல்படுபவர்கைளப் பார்க்கையில் வெறுப்பாக வருகின்றது. முறுக்கிவிட்டது போல் ஒவ்வொருநாளையும் ஒரே மாதிரி, மூன்று நேரம் சாப்பிட்டு, அதற்கிடைப்பட்ட நேரத்தில் வேலையும், உதிரி வேலைகளையும் செய்து முடித்து கட்டிலில் "டாண்" என்று அதே நேரத்திற்குச் சரிந்து, இன்று உடலுறவு கொள்ளலாம் என்று முன் கூட்டியே குறித்து வைத்திருப்பார்களோ என்னவோகம் என்பது இவர்களை இயக்கிக்கொண்டேயிருக்கின்றது. இவர்களும் இயங்கியபடியேயிருக்கின்றார்கள். பின்னர் நான் இப்படித்தான், இப்படித்தான் இருக்கப்போகின்றேன் என்று முடிவெடுத்த பியாராவது அடையாளப்படுத்தவோ, ஒரு கட்டத்துக்குள் அடைத்து விடவோ முயல்கையில் கோபம் வேகமாக வந்து போகின்றது. (போகின்றது என்றவரை சந்தோஷம்தான்) இன்று போல் நாளை வாழ மனம் ஒப்பா என்ற நிலையில் அலைந்து கொண்டிருக்கின்றேன்.

"சுஷானி" போது இந்தியாவாக இருக்குமோ என்ற சந்தேகம் எழுந்தாலும், உருவம் அதற்குப்; பொருந்தாமல் இருந்தது. நிச்சயமாக ஐரோப்பா அதிலும் குறிப்பாக லண்டனிலிருந்து வந்திருப்பாள் என்று மனதுக்குள் பட்டது. இங்கிலாந்து மக்களுக்கென என் கணிப்பில் இருக்கும் அந்தக் கச்சிதமான உடை அலங்காரம் முழுமையாக அவளிடமிருந்தது. பொன்நிறத் தலைமயிரை கட்டையாக வெட்டியிருந்தாள். மிக நாகரீகமாக உடையணியும் பல்கலாச்சாரப் பெண்கள் மத்தியில், ஒரு அலுவலகத்திற்கேயான ஒழுங்கு முறையான உடையணிந்த அவள் கதைக்கும் போது ஆங்கிலத்தைச் சிரமப்பட்டுத் விழுங்கிய போதுதான் எனக்குள் சந்தேகம் எழுந்தது. எங்கிருந்து வந்திருக்கின்றாய் என்று கேட்டேன். ரஷ்யா, கனடா வந்து இரண்டு வருடங்கள் ஆகின்றது என்றாள். நான் உடனேயே எழுந்து நின்று விட்டேன்.

விடுமுறைக்காக இந்தியா சென்றிருந்த போது நாங்கள் சென்ற புகையிரதவண்டி கேரளாவைக் கடந்து செல்கையில் நான் யன்னலால் எட்டி எட்டி எதையோ தேட பொறுமை இழந்த என் கணவன் என்னத்தை அப்படி ஆவலோடு தேடுகிறீர் என்று கேட்டபோது மோகன்லால் அல்லது மம்முட்டி யாராவது கண்ணில் தட்டுப் படுகின்றார்களா என்று பார்க்கின்றேன் என்று சொன்னது ஞாபகத்திற்கு வந்தது. இப்போது அந்தப் பட்டியலில் மீரா ஜாஸ்மீனும் சேர்ந்துகொண்டிடுள்ளார்.

நான் கலவரம் அடைந்து விட்டேன். "நீ பிறந்த ஊர் எது? யஸ்னயா போல்யனா விற்குச் சென்றிருக்கின்றாயா? "பிளேஸ் வித் த லிட்டில் கிறீன் ஸ்டிக்"; ஐப் பார்த்திருக்கின்றாயா? கேள்விகளை அடுக்கத் தொடங்கினேன். நான் எழுந்து நின்றதையும், என் விசித்திரமான கேள்விகளையும் கண்டு அவளும் கலவரம் அடைந்து என்னை வினோதமாகப் பார்த்தாள். நான் என்னை சுதாகரித்த படியே, இல்லை ட்ரோல்ஸ் ஸ்ரோய் என்றால் விசராகும் அளவிற்கு பிடிக்கும். அன்ட்ரூவையும், லெவினையும் உண்மையாக் காதலிப்பவள் நான் என்றால் நம்பவா போகிறாய்?. நான் நினைக்கிறேன் அன்ட்ரூவையும், லெவினையும் லியோ தன்னை வைச்சுத்தான் உருவகப் படுத்தியிருக்கின்றார் என்று. அப்பிடிப் பார்த்தால் உண்மையிலேயே நான் காதலிப்பது லியோவைத்தான் என்று நினைக்கின்றேன் என்றேன்.

வேலைக்குச் சேர்ந்த முதல் நாளே ஒரு லூசிடம் மாட்டிக்கொண்டு விட்டேனோ என்ற பாவனையில் முகத்தைத் திருப்பித் தனக்காக மேசை மேல் வைக்கப்பட்டிருந்த வேலைப் பத்திரங்களைக் கையில் எடுத்துப் புரட்டத் தொடங்கினாள் அவள். நான் அவமதிக்கப்பட்டது போல் உணர்ந்தேன். என் மேசையின் பக்கம் திரும்பி ஒரு தமிழ் பாடலை முணுமுணுத்த படியே அவள் என் கேள்விகுப் பதில் சொல்லாது திரும்பிக் கொண்டது பெரிய பாதிப்பு ஒன்றையும் எனக்குத் தரவில்லைப் போல் காட்டிக்கொண்டு எனது வேலையில் மிக மும்மரமாக ஈடுபடத் தொடங்கினேன். நான் அவளுக்கு வேலையில் மூத்தவள். வயதில் நிச்சயமாகச் சின்னவளாகத்தான் இருப்பேன் என்றொரு நம்பிக்கை. வேலையில் சந்தேகம் வந்தால் நிச்சயமாக என்னிடம் தான் கேட்க வேண்டும் அப்போது பார்த்துக் கொள்கின்றேன் என்று என் காயப்பட்ட மனதிற்கு ஆறுதல் சொன்னேன். நான் மின்கணனியின் மேல் பார்வையைச் செலுத்தும் போது அவள் என் கடைக்கண் பார்வையில் விழுந்தபடியே இருந்தாள். ஒரு பத்திரத்தை அப்படியும் இப்படியுமாகப் புரட்டிய படி என் பக்கம் திரும்புவதும் பின்னர் அதிகாரியின் அறை பக்கம் பார்வையை ஓட்டுவதுமாகத் தடுமாறிக் கொண்டிருந்தாள். ஒரு கிழமை வேலைப் பயிற்சியை முடித்துக் கொண்டு மிக ஆர்வமாக முதல் நாள் வேலையைத் தொடங்கியவளுக்கு முதல் பத்திரமே சந்தேகத்தை எழுப்பி விட்டிருந்தது. நான் மனதுக்குள் குதூகலித்துக் கொண்டிருந்தேன். வழமையாக மற்றவர்களின் துக்கத்திலோ, சிரமத்திலோ குதூகலிக்கும் வன்மமான மனம் கொண்டவளல்ல நான். இன்று அப்படி உணர்வதில் எனக்குள் சங்கடமான ஒரு சந்தோஷம். சில நிமிடங்களின் பின்னர் என் மனச்சாட்சி என்னைத் தொல்லை செய்தது. நான் மிகவும் மும்மரமாக வேலையில் ஈடுபடுவதுபோல் பாசாங்கு செய்வதால் அவள் என்னைத் தொந்தரவு செய்யத் தயங்குகின்றாள். இல்லாவிட்டால் என்னிடம் ஏதாவது கேட்கப் போய் நான் பதில் சொல்லப்படாத கேள்விகளை மீண்டும் தொடரலாம் என்ற தயக்கம் கூட அவளுக்கு இருக்கலாம். நான் என் முதல்நாள் வேலை அனுபவத்தை மனதுக்குள் ஒருமுறை மீட்டுப் பார்த்தேன். எப்போதுமே என்மேல் அபரிமிதமான நம்பிக்கை கொண்டவள் நான். அதனால் சிலவேளைகளில் அதிகப்பிரசங்கித் தனமாக நடந்து கொண்டு மூக்கை உடைத்துக்கொள்வதும் உண்டு. ஒருகிழமை வேலைப்

பயிற்சியின் பின்னர் இந்த மேசைக்கு நான் அனுப்பப்பட்டு முதல்பத்திரம் என் கைகளுக்கு வந்தபோது நானும் தடுமாறித்தான் போனேன். முதல் பத்திரமே என்னை முழுசிப் பார்த்தது. முதல்கோணல் முற்றும் கோணலாய் போய்விடுமோ என்ற அச்சத்தில் நான் முழித்திருக்கையில் நான் கேட்காமலே தானாய் வந்து கைகொடுத்தவர்கள் பலர். இப்போது நான் அனுபவசாலி. பலருக்கு உதவியிருக்கின்றேன். நீ என் பக்கத்து மேசைக்காறி. உனக்கு நான் உதவுவேன் என்ற நம்பிக்கையில் உன்னை ஒருவரும் நாடிவரப் போவதில்லை. என் உதவி உனக்கு நிச்சயம் தேவை என்பது எனக்குப் புரிகிறது, ஆனால் நீயாகக் கேட்க வேண்டும் என்று என் குரூரமனம் ஏனோ என்னை உனக்கு நானான உதவுவதை இழுத்துப் பிடிக்கின்றது.

ஏதாவது ஒரு உரையாடலுடன் அவளுக்கு உதவி வேண்டுமா என்றறிந்து உதவு என்று என் நல்ல மனம் உத்தரவிட்டது. நான் ஒரு சுவிங்கத்தை எடுத்து ஒன்றை வாயிற்குள் போட்ட படியே இயல்பாக அவளின் பக்கம் ஒன்றை நீட்டினேன். இப்போதாவது அவள் இறங்கி வந்து என்னிடம் தானாக உதவி கேட்கின்றாளா என்று பார்க்கும் எண்ணத்தோடுதான் நான் அதைச் செய்தேன். அவள் சிநேகிதமாய் சிரித்த படியே ஒன்றை எடுத்துக் கொண்டு நன்றி சொன்னாள். எல்லாம் சரியாக இருக்கிறதா? சந்தேகம் ஒன்றும் இல்லையே என்று கேட்டேன். தடுமாறிய படியே பத்திரத்தை என்னிடம் காட்டித் தனக்கான சந்தேகத்தைக் கேட்டாள். நான் சந்தோஷத்துடன் அவளுக்கு விளக்கிக் கூறினேன். அவள் நட்போடு சிரித்த படியே நன்றி சொல்லி விட்டு வேலையை ஆரம்பித்தாள்.

உதவி பெற்றுவிட்டாள். இப்போது அவள் எனக்கு அடிமை. தேத்தண்ணி இடைவேளையில் போது அவளையும் அழைத்துக் கொண்டு ஓய்வு அறையின் பக்கம் சென்றேன். அவள் கண்களில் என்னுடன் உரையாடல் தொடங்குவதற்கான மிரட்சி தெரிந்தது.
முதல் முதலில் ஒருவர் அறிமுகமாகும் போது இரண்டு நல்ல வார்த்தை பேச வேண்டும் என்பதை மறந்து நான் கேட்ட கேள்விகளுக்காக இப்போது வருந்தி, "உனக்கு எத்தனை பிள்ளைகள்?, என்ன பிள்ளைகள்?, எத்தனை வயது? என்ற உப்புச்சப்பில்லாத வழமையான கேள்விகளைக் கேட்டு அவளை இயல்பு நிலைக்குக் கொண்டுவந்தேன். இருந்தாலும் என் முந்தைய கேள்விகளைச் சுற்றியே என் மனம் சுழன்றுகொண்டிருந்தது. தேனீரோடு ஒரு பிஸ்கட்டையும் சாப்பிட்டு விட்டுத் திரும்பவும் எமது இருக்கைக்கு வந்தோம். இப்போது அவள் என்னோடு ஒட்டிக்கொண்டு விட்டாள். கைப்பைக்குள் இருந்து தனது குடும்பப் படத்தை எனக்கு எடுத்துக் காட்டினாள். இரண்டு பெண்பிள்ளைகள். மூத்தவள் அண்மையில்தான் திருமணம் செய்ததாகச் சொன்னாள். மருமகனைத் தனக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை என்றாள். விட்டால் வேலை எதையும் செய்யாமல் குடும்பக் கச்சேரி நடத்தத் தொடங்கிவிடுவாளோ என்று எனக்குச் சந்தேகமாக இருக்க, எனது "சீனியோரிட்டியை" இப்போது காட்டி அவளைச் சிறிது நோகப்பண்ணலாம் என்று என் சாத்தான் மனது சொன்னது. "வேலை நேரத்தில இப்பிடி அளவுக்கு அதிகமாக் கதைக்கக்

கூடாது, அதிகாரி கவனித்தால் உனக்குத்தான் பிரச்சனை" என்றேன். அவள் முகம் சுருங்கிக் கொண்டது. உடனே மன்னிப்புக் கேட்டு விட்டு தன்வேலையைத் தொடங்கினாள். எனக்குத் திருப்தியாக இருந்தது. யாரையாவது அதிகாரம் பண்ணும்போது கிடைக்கும் சந்தோஷமே அலாதிதான். என் கணவர் எதற்கு வேண்டாததற்கெல்லாம் என்னை அதிகாரம் பண்ணுகின்றார் என்பது இப்போது புரிந்தது.

தொடர்ந்து வந்து நாட்களில் அவள் தனக்கான வேலைத்தள நண்பியாக என்னை வரிந்து கொண்டாள். அவளை நான் வெறும் "தொல்லை" என்பதாய்க் காட்ட முயன்றாலும் அவள் என்னைச் சுற்றிசுற்றி வருவது எனக்கும் பிடித்திருந்தது. எங்கள் ஆங்கில அறிவு ஒருவருக்கொருவர் ஒத்துப் போவதாய் இருந்தது. அவளுடைய உச்சரிப்பு எனக்கு விளங்கவில்லை என்று நக்கலாக நான் சொல்வதுண்டு. புலிக்கு (நாலுகால் மிருகம்) வாலாய் இருப்பதை விடப் பூனைக்குத் தலையாய் இருக்கலாம் என்று மனம் சொன்னது. என் உச்சரிப்பு அவளுக்கும் நகைப்பாய் இருக்கின்றது என்று தெரிந்த போது எனக்குள் கோபம் எழுந்தது. எத்தனை வருடங்கள் கனடாவில் வாழ்ந்தாலும் று க்கும் ஏ க்குமான உச்சரிப்பு வித்தியாசம் விளங்கமாட்டேன் என்கிறது. கனேடியர்கள் முன்நிலையில் சரியாக உச்சரிக்கின்றோமா என்ற தயக்கத்தோடு கதைப்பதை விட அவளோடு கதைப்பது சுலபமாகவிருந்தது. இருந்தும் ஏதாவதொரு காரணம் கண்டுபிடித்து அவளை மட்டம் தட்டி அவள் முகம் சுருங்கிப் போவதைக் கண்டு வக்கிரமாகத் திருப்திப்படுவதுமுண்டு. சிலவேளைகளில் அவள் முகம் சுண்டிப்போவதைக் கண்டு என் மனமும் நொந்து போகும். எதற்காக நான் இப்படி நடக்கின்றேன் என்று என்னை நானே கேட்பதுமுண்டு. அவள் ஒரு பிற்போக்குவாதி முட்டாள்தனமாக எதையாவது புசத்துவாள். நான் ரோல்ஸ் ரோய், தஸ்தஸ்வாக்கி, சிமோன்தி பூவா. பிரேட்ய் அது இதுவென்று வாசித்துத் தள்ளும் ஒருமுற்போக்குவாதியாக இருந்துகொண்டு எதற்காக இந்தச் சின்னத்தனம். அவள் பிற்போக்குவாதி குறை உடையவள். நான் முற்போக்குவாதி அனைத்தையும் அறிந்தவள். எனவே குறை உள்ள ஒரு உயிரினத்தை நிறைவான ஒரு மனிதன் காயப்படுத்த மாட்டான் என்று நான் கண்டுபிடித்த தத்துவத்தின் மூலம் எனக்குள்ளேயே "அவளை மனம் நோகப்பண்ண மாட்டேன்" என்று சத்தியப்பிரமாணம் செய்துகொண்டேன்.

அவளுக்கும் எனக்கும் சின்னச்சின்ன விஷயங்களிலெல்லாம் போட்டி இருந்தது. சின்னச்சின்ன விஷயங்கள் என்று சொல்வதைவிட உப்புச்சப்பில்லாத விஷயங்கள் என்று சொல்வதுதான் சரி. எப்படிப்பட்ட விஷயங்களுக்குப் போட்டி போடுவது என்று விவஸ்தையே இல்லாமலே போட்டிபோட்டுக்கொண்டிருந்தோம். அவளிலும் பார்க்க எனக்கு சிறிது ஐ.கியூ கூடுதலாக இருக்கிறது என்றே நம்புகின்றேன். எங்கு எப்படி அவளை அடிக்கலாம் என்று புரிந்து வைத்திருந்தேன். எனது சத்யபிரமாணம் அவ்வப்போது மறந்து போகும். ஐம்பதை எட்டிக்கொண்டிருக்கும் இருவருக்கிடையிலும் யாருக்குக் குறைவாக நோய் என்பதில் போட்டி. "நாரி சரியாக நோகுது" என்று அவள் சொன்னால், "நான் நல்ல

ஃபிட்" என்று நான் சொல்வேன். "எனக்கு இண்டைக்கு டொக்டரிடம் அப்பொன்ட்மென்ட்" என்று நான் சொன்னால் அவள் கண்கள் மின்ன கத்தை சோகமாக வைத்துக்கொண்டு "உடம்புக்கு என்ன என்பாள்", அவள் உள்ளம் வேண்டுவது ஏதாவது ஒரு கொடிய நோயைத்தான் என்று எனக்குப் படும், நான் மிக இயல்பாக முகத்தை வைத்து, மார்பகத்தில் தட்டுப்படும் கட்டியால் ஒருகிழமையாகத் தொலைத்த நித்திரையையும் மறைத்து "சும்மா ஒரு செக்கப்" என்பேன். மதியநேரம் சாப்பாட்டு வேளையில் யார் என்ன சாப்பாடு என்பதிலும் போட்டி. மிளகாய்த்தூள் உடம்புக்குக் கூடாது என்பாள் அவள். எங்கள் மசாலாப் பொருட்கள் மேல் மோகம் கொண்டுதான் ஐரோப்பியர்கள் எமது நாட்டைக் கைப்பற்றி ஆண்டார்கள் அது தெரியுமா உனக்கு என்று அவளை நான் மடக்குவேன். உங்கள் உணவு எந்தவிதமான உப்புச்சப்பும் இல்லாமல் இருக்கிறதே எப்படித்தான் சாப்பிடுகின்றீர்களோ ன்று அலுத்துக் கொள்ளுவேன். என் அதிரடிகள் தாங்காது அவள் மௌனமாவாள். எனக்கும் கவலையாக இருக்கும். வாழ்க்கையில் என் கணவன், குழந்தைகளோடு செலவிடும் நேரத்தைவிட அவளோடு நான் செலவிடும் நேரமே அதிகம். அவளோடு சுமூகமான உறவு ஒன்றை மேற்கொள்வதை விடுத்து எதற்காக இத்தனை காழ்ப்புணர்வு. எங்கள் கணவர்கள் பற்றியும் எங்களுக்குள் போட்டி. இந்த விடையத்தில் நான் கொஞ்சம் "வீக்". என் முற்போக்குப் பெண்ணியச்சிந்தனை என்பனவற்றில் உணர்ச்சிவசப்பட்டு என் கணவனின் அதிகார குணம் பற்றிப் போட்டு உடைத்து விட்டேன். அவள் நிதானமாக ஒரு சம்மனசுபோல் புன்னகைத்தபடியே "என் கணவன் மிகவும் நல்லவர். அவரைப் போல ஒரு நல்ல கணவன் கிடைக்க நான் கொடுத்து வைத்திருக்கின்றேன். நான் வாழ்வில் மிகவும் சந்தோஷமாக உள்ளேன். நான் மிகவும் அதிஷ்டசாலி, அதிஷ்டசாலி" என்றாள் கண்களை மயங்குவது போல் மூடி மூடித் திறந்து. எனக்கு யாரோ அம்மிக்குளவியைத் தலையில் தூக்கிப் போட்டதுபோல் இருந்தது. எந்த ஒரு சூழ்நிலையிலும் உனது குடும்ப அங்கத்தவரைப் பற்றிக் குறைகூறாதே. எல்லா வீட்டின் அலுமாரியிலும் எலும்புக்கூடுகளே உள்ளன, ஆனால் ஒருவரும் கதவைத் திறந்து காட்டப் போவதில்லை. உண்மை பேசுகின்றோம், நேர்மையாக இருக்கின்றோம் என்று முட்டாள் தனமாக உன் அலுமாரியின் எலும்புக் கூடுகளை வெளியே எடுத்துப் போடாதே. எனது சகோதரியின் கூற்று என் மண்டையில் தட்டியது.

சில கிழமைகளுக்கு முன்புதான் ஒரு வெள்ளிக்கிழமை நான் தொலைபேசி மூலம் ஆங்கில நாடகம் ஒன்றிற்கான பற்றுச்சீட்டுப் பதிவு செய்த போது ஒட்டுக் கேட்டவள் போல், நான் தொலைபேசியை வைத்தவுடன் என் அருகில், மிக அருகில் வந்து "எங்கே போகின்றாய்?" என்றாள். "வேலை முடிய நாடகம் ஒன்றிற்குப் போகப் போகின்றேன் வெள்ளிக்கிழமைகளில் பத்து டொலருக்கு டிக்கெட் கிடைக்கும் நீயும் வருகின்றாயா?" என்று கேட்டேன். அதிர்ந்தவள், "தனியாகவா போகின்றாய்?" என்றாள். "ஓம்" என்ற எனது பதில் அவளுக்கு மேலும் அதிர்சியைத் தந்திருக்க வேண்டும், "உன் கணவன் இதற்கெல்லாம் சம்மதிப்பாரா?" என்றாள். "அனுமதி கேட்டால் சம்மதம் கிடைக்காது, அறிவித்து விட்டுப் போகப் போகின்றேன்" என்றேன்.

அவள் முகம்; சுருங்கிக் கொண்டது. "என் வீட்டில் ஒரு கொலையே விழும் என்றாள்". அங்கொங்கும் இங்கொங்றுமாக அவளுடனான உரையாடல்களில் இருந்து சேகரித்ததகவல்களின் படி "இப்பிடி ஒரு அருiமாயன(நல்ல) கணவனை அடைய நான் கொடு;த்து வைத்திருக்க வேண்டும்" என்ற "டயலாக்" இற்குச் சிறிதும் பொருந்தாதவர் அவள் கணவன் என்பது என் அனுமானம். இன்று அனைத்தைம் மறந்து தன் கணவனை உயரே உயர்த்திச் சுழற்றுகின்றாள்.

தான் அதிஷ்டசாலி, அதிஷ்டசாலி என்று அவள் கூறியதைத் தொடர்ந்து என் முகம் போன போக்கில் நான் பெரியதொரு தாக்குதலுக்கான வார்த்தைகளைச் சேகரிக்கின்றேன் என்று அவள் ஊகித்துக் கொண்டவளாய் உடனேயே அந்த இடத்திலிருந்து விலகிக் கொண்டாள். என் மனம் பாம்புபோல் சீறிக்கொண்டிருந்தது. "ப்பிச்" வாயுக்குள் முணுமுணுத்துக் கொண்டு இனிமேல் இவளோடு நான் சேரப்போவதில்லை என்று அருவரிப் பிள்ளைகளைப் போல் முடிவெடுத்துக் கொண்டேன். அன்று மீதியிருந்த நாட்களில் வேலையில் என் மனம் ஓடவில்லை. இவளை ஏதாவதொரு வழியில் தாக்கிவிடவேண்டும் என்று என் மனம் திட்டம் போட்டது. அவ்வப்போது என்ன ஆச்சு உன் சத்தியபிரமாணம்? என்று என் சாத்தான் மனம் அடித்துக்கொள்ள, அவளைத் தாக்குவதென்று முடிவெடுத்த பின்னர் அதனைச் சரியென்று சரிப்படுத்துவதற்கான காரணத்தை என் மனம் தேடித் தேடிக் களைத்துப் போனது. கோவத்தால் கனைத்துக் கொண்டிருந்த மனதோடு அன்றைய நாள் முழுக்க அநியாயமாகிப் போக இதன் மிகுதியை வீட்டிற்கும் இழுத்துச் சென்று கணவர், குழந்தைகளிடமும் சீறப் போகின்றேன்.

அதன் பின்னர் அவளைத் தவிர்த்து ஆனால் அவளின் காதுகளில் படும்படி, என் கணவர் எனக்காகச் சாப்பாடு கட்டித்தந்திருக்கின்றார், இன்று நான் போட்டிருக்கும் உடை என் கணவர் எனக்காக வாங்கி வந்தது, நேற்று வேலையிலிருந்து வீட்டிற்குச் சென்ற போது இரவு உணவு மேசையில் மெழுகுதிரி சகிதம் இருந்தது, அருகில் பூக்கொத்து வேறு என்று இல்லாத கற்பனையில் எனது ஒண்டுக்கும் உதவாத கணவனை மற்றவர்களுக்குப் புழுகித் தள்ளிக்கொண்டிருந்தேன். அவர்களும் ஆ.. ஓ.. என்று என் சந்தோஷத்தில் பங்கெடுத்துகொண்டார்கள். "அப்படி என்ன அற்புதம் அவருக்கு நீ செய்து விட்டாய்?" என்ற கேள்வி வேறு, நான் பொய்யாக வெட்கப்பட்டுக் கொண்டேன். சுஷானிக் வாயுக்குள் சிரித்துக் கொள்கின்றாளோ என்ற சந்தேகம் அடிக்கடி எனக்குள் வந்து போகாமலில்லை. என் சின்னத் தனம் என்னைக் கேலி செய்தது. உன் பெண்ணியம் இதுதானா என்ற கேள்வி அடிக்கடி என் மனதுக்குள் எழாமலில்லை.

தொடர்ந்து வந்த நாட்களில் அவளோடு வழமைபோல் நேரத்தைச் செலவிட்டாலும் இருவருக்குமிடையில் ஒரு மௌனப்போர் நிகழ்ந்துகொண்டிருப்பது உணரமுடிந்தது. தாக்குதல் எதிர்த்தாக்குதல் என்று அகோரமாகப் போய்க்கொண்டிருந்தன நாட்கள். அவள் ஞாயிற்றுக்கிழமைப் பூசைக்குத் தவறாமல் கோயிலுக்குப் போய் வருவாள் என்பதை

அறிந்து கொண்டு "நீ எதற்காகக் கோயிலுக்குத் தவறாமல் போகின்றாய்?" என்று கேட்டு வேண்டுமென்றே அவளை வம்புக்கிழுத்தேன். "என்ன நீ தெரியாத மாதிரிக் கேட்கின்றாய்? நீ எதற்காக உங்கள் கோயிலுக்குப் போய்ப் பிரார்த்தனை செய்கின்றாயோ அதே போல்த்தான் நானும் எங்கள் கோயிலுக்குச் சென்று பிரார்த்தனை செய்து கொள்கின்றேன்" என்றாள். "நான் கோயிலுக்குப் போய்ப் பிரார்த்தனை செய்வதாக யார் உனக்குச் சொன்னார்கள்?" என்றேன். மௌனமானாள். குழம்பியநிலையில் என்னைப் பார்த்தாள். ஒரு பெண், ஒரு மனைவி, ஒருதாய், கோயிலுக்குப் போகாமலிருப்பது எவ்வளவு சாத்தியம் என்பது அவளது கற்பனைக்கு எட்டாவிடையம். கண்கள் கொஞ்சம் பனித்திருக்க (என் கற்பனையோ என்னவோ) "நீ உங்கள் கோயிலுக்குப் போய்ப் பிரார்தனை செய்வதில்லையா?" என்றாள். இல்லை என்பதாய் நான் தலையசைத்தேன். "அப்ப வீட்டிலா பிராத்திக்கின்றாய்? கோயிலுக்குப் போய்தான் பிரார்த்தனை செய்ய வேண்டும் என்ற அவசியமில்லைத்தான்" என்றாள் மிகவும் புரிந்துணர்வு கொண்டவள் போல். "நான் பிரார்த்திப்பதே இல்லை, எனக்குக் கடவுள் நம்பிக்கை இல்லை, நான் ஒரு நாஸ்த்திகை" என்றேன். அதிர்ந்து போய் நம்பிக்கையின்மையோடு என்னைப் பார்த்தாள். நான் பெருமையாய்ச் சிரித்தேன். அவள் கண்கள் சாந்தமாக மிளிர்ந்தது. மீண்டும் ஒரு சம்மனசு போல்க் காட்சியளித்தாள். பாவப்பட்ட என்னை கடவுள் மன்னிப்பார் என்பது போல் அவள் பார்வை இருந்தது. "ஆண்டவன் அனைவரையும் மன்னிக்கும் அற்புதம் கொண்டவர், சொர்க்கம், நரகம் இரண்டில் எதற்குப் போகப் போகின்றோம் என்பதை நாங்கள் இப்போது பூமியில் வாழும் போதே தீர்மானித்து அதற்கேற்ப எமது வாழ்வை ஒழுங்குபடு;த்திக் கொள்ளுதல் வேண்டும், செய்யும் தவறு..." அவள் முடிக்கு முன்பே குறுக்கிட்டு "தற்போதைய வாழ்க்கையை நரகமாக்கி நான் இறந்த பின்னர் சொர்க்கம் போ வேண்டிய அவசியம் எனக்கில்லை, அதிலும் பார்க்க இப்போது சொர்க்கத்தை அனுபவித்து விட்டு, இறந்த பின்னர் நான் நரகத்திற்கே போய்க் கொள்கின்றேனே, இருந்தாலும் எனக்கு சொர்க்கம், நரகம், அதிலும் நம்பிக்கை இல்லை" என்றேன். தலையைச் சிலுப்பிக் கொண்டாள்.

அதன் பின்னர் அவள் என்னை முற்றாகத் தவிர்த்து மற்றய பெண்களோடு நெருங்கிச் செல்வது புரிந்தது. என் ஐ.கியூ மேல் எனக்கே சந்தேகம் எழுந்தது. அவள் என்னைத் தவிர்த்து, மற்றவர்களோடு சேர்ந்து கொண்டு எனது நாஸ்திகம் பற்றி வம்பு பண்ணுகின்றாள் என்று வேண்டாத கற்பனை எனக்குள் விஸ்வரூபம் எடுத்தது. நானறிந்து எனது அலுவலகத்தில் கடவுள் நம்பிக்கையற்றவர்கள் ஒருவருமில்லை. அந்தப் பேச்சுக்கே அங்கே இடமிருக்கவில்லை. வேண்டுமானால் உன்னுடைய கடவுளிலும் விட என்னுடைய கடவுள் மேல் என்ற விவாதத்திற்கு இடமிருக்கலாம்.

தொடர்ந்த நாட்களில் வெறும் காலை வணக்கத்தோடு எமது நாட்கள் நகர்ந்து கொண்டிருந்தன.

2009 ம் ஆண்டு பங்குனி மாதத்தில் ஒருநாள், குளிரோடு, சிறிது பனியும் வடிந்து கொண்ருந்தது. தொலைக்காட்சிகள், வானொலிகள், பத்திரிகைகள் அனைத்திலும் ஈழப்பிரச்சனை முக்கியத்துவம் பெற்றுக்கொண்டிருந்த நாட்கள் அவை. வேலை நேரத்தில் முடிந்தவரை மின்கணனியில் எமது நாட்டு நிலவரம் பற்றி அறிந்து கொண்டிருந்தேன். ஈழ மக்களின் நேரடிப்பாதிப்புக்கள் ஒளிநாடாக்களில் பார்க்க நேரிடுகையில் எழும் உணர்வைப் பகிர்ந்து கொள்ள முடியாத நிலையில் வேண்டா வெறுப்பாக அலுவலக வேலைளை அளைந்து கொண்டிருக்கும் கண்களும், கைகளும். எனது அலுவலகத்தில் இலங்கையர்கள் ஒருவரும் இல்லாததால், மனம் சோர்ந்து போகும் பொழுதுகளின் நண்பர்களுடன் தொலைபேசியில் மட்டுமே உரையாட முடிந்தது.

அன்று எனது அலுவலகம் அமைந்திருக்கும் பெருஞ்சாலையில் சிறுவர்கள் தொடக்கம் முதியவர்கள் வரை, கடுங்குளிரையும் பொருட்படுத்தாது கை கோர்த்து, பாதாகைகள் தூக்கி “எமது தலைவர் பிரபாகரன், எமக்கு வேண்டும் தமிழீழம்” என்று கோஷம் போட்டபடியிருந்தார்கள். நான் தலையைக் குனிந்த படியே அலுவலகத்திற்குள் நுழைந்து எனது இருக்கையில் இருந்த பின்பும் பல மணிநேரமாக எனது பதட்டம் குறையவில்லை. பதட்டத்திற்கான காரணம் புரியவில்லை. நான் என்றும் உணராத நெஞ்சின் நெருடல் என்னை அலைக்கழித்துக்கொண்டிருந்தது. வெட்கமா? கவலையா? இயலாமையா? அவமானமா?. மின்கணனியை அழுத்;திவிட்டு வெறுமனே இருந்தேன். சுஷானிக் வேகமாக வந்தாள். எனது தோளைத் தொட்டாள். “உனது நாட்டில் என்ன பிரச்சனை?, ஏன் உன் நாட்டு மக்கள் கோஷம் போடுகின்றார்கள்?, நீ இது பற்றி ஒருநாளும் கதைத்ததில்லையே..” அவள் கேள்வி தொடர்ந்து கொண்டேயிருந்தது. நான் அப்போதிருந்த மனநிலையில் உரையாடலைத் தவிர்க்க எண்ணி, “நீ தொலைக்காட்சிச் செய்தியைப் பார்த்து அறிந்து கொண்டிருப்பாய் என்று நினைத்தேன்” என்று கூறிவிட்டு எனது வேலையில் கவனம் செலுத்துவது போல் பாவனை செய்தேன். “நீ ஏன் போராட்டத்தில் கலந்து கொள்ளவில்லை?, மேலதிகாரியிடம் சொல்லி விட்டு ஒரு மணித்தியாலம் ஆவது போய் வரலாம் தானே” என்றாள். எனக்குள் சினம் எழுந்தது. என் அப்போதான மனநிலை அவளோடு போட்டி போடவோ, விவாதம் பண்ணவோ சுமூமாக இயங்கவில்லை. இல்லை என்பது போல் வெறுமனே தலையை அசைத்தேன். அவளும் விடுவதாயில்லை “ஏன்?” என்றாள். கண்களில் சினம் பொங்க “ உனக்கு எங்கள் நாட்டு அரசியல் பற்றி என்ன தெரியும்? என்றேன். அவள் மீண்டும் சாந்தமாகக் “கோவிக்காதே ஏதோ கொஞ்சம் விளங்குகின்றது, உன்னில் இருக்கும் அக்கறையில்தான் கேட்கின்றேன், அங்கே வெளியில் அந்தக் குளிருக்குள் நிற்பவர்கள் உன் மக்கள் தானே?, உன் இனம் தானே?, அவர்களுக்கு இருக்கும் பிரச்சனை உனக்கும் உள்ளதுதானே? கதவைத் திறந்து கொண்டு வெளியில் இறங்கினால் நீயும் அவர்களில் ஒருத்தி, பின்னர் ஏன் கலந்து கொள்ளாமல் இங்கே நிற்கின்றாய்? என்றாள். நான் என்னைச் சாந்தப் படுத்திக்கொண்டு “எனக்கு அவர்கள் அரசியலோடு ஒத்துப் போவதில்லை, அவர்கள் செய்யும் போராட்ட முறை எனக்குப்

பிடிக்கவில்லை, எமது மக்களுக்கான தலைவர் என்று குறிப்பிடும் அவரை நான் ஏற்றுக்கொள்ளவில்லை" என்றேன். அவள் மௌனமானாள். காலம் நேரம் பார்க்காமல் ஒரு பெரும்தாக்குதலுக்கு அவள் தன்னைத் தயார்ப்படுத்திக்கொண்டிருந்தாள்.
கண்களைச் சுருக்கி என்னைச் சிறிது நேரம் பார்த்தாள். பின்னர் குரலைச் செருமிச் சரிப்படுத்திவிட்டு, நிதானமாக "நீ உனது கணவருக்குத் தெரியாமல் சிலவற்றைச் செய்யும் போது எனக்குள் சந்தேகம் இருந்தது, பின்னர் கடவுள் நம்பிக்கையில்லை என்றாய் அதையும் ஒருமாதிரித் தாங்கிக்கொண்டேன், ஆனால் இப்போது உனது மக்களுக்காக முதியவர்கள், சிறுவர்கள் என்று குளிருக்குள் நின்று வாடுகின்றார்கள் இப்போதும் உன் விதண்டாவாதத்தை நீ விடவில்லை. உனது மக்களுக்காகச் சிறிது நேரம் குளிருக்குள் நிற்க உன்னால் முடியவில்லை, உனது மக்களின் பாதுகாப்பிற்காக உன்னால் கடவுளிடம் இரங்கி வேண்ட முடியில்லை. நீயெல்லாம் ச்சீ.. நீ நரகத்திற்குப் போவது நிச்சயம்" பொரிந்து விட்டு தனது இருக்கையை இழுத்து என்னிலிருந்து மிகத் தூரத்தில் முடிந்தவரை தன்னை இருத்திக் கொண்டாள். ஒரு முழுமையான அதிர்வோடு, உடல்விறைக்க நான் அசையாது இருந்தேன்.

பதிவுகள் நவம்பர் 2010 இதழ் 131

**13. பெண்கள்: நான் கணிக்கின்றேன்! - சுமதி ரூபன் -**

பயணம் நிச்சயமாகி விட்டது. .எப்படியாவது யன்னலருகிலுள்ள சீட்டை புக் பண்ணுங்கள் என்ற போது என்ன கடைசி நேரத்தில இப்பிடி கேக்கிறீங்கள் என்று அவன் சினப்பது தெரிந்தது.. வரேக்க ஒரு பட்டு வேட்டி சால்வை வாங்கிக்கொண்டு வருவன் என்றதும்.. வினோதமான ஒரு ஒலியுடன் அவன் சிரித்தான் அவ்வளவுதான்.. எனக்கான இருக்கை எண்ணை கத்திதமான ஒருத்தி சுட்டிக்காட்ட பட்டுவேட்டி சால்வைக்கு முழுக்குப் போட்டு உடலை நுழைத்துக்கொண்டேன்.. நெருக்கமாக இருந்தது.. இடதுபக்கத்தில் பின்னால் இருந்து யாரோ பின்னால் குத்துவதுபோல் ஒருவித ஒலியை எழுப்பியபடியே பிலிப்பீனோ தம்பதி ஒருவர். சண்டை போடுகிறார்களா? சம்பா'¢க்கிறார்களா? புரியவில்லை.. புரிந்து என்ன பண்ணுவது.. தொடரும் ஆறுமணித்தியாலங்களிற்கு எனக்கான பின்ணணி இசை அது என்று மட்டும் புரிந்தது.. வலதுபக்கத்திலிருந்த வெள்ளப்பெண்ணிடமிருந்து வந்த விலையுயர்ந்த வாசனை தலையிடியைத் தந்தது.. சுற்றுமுற்றும் பார்த்தேன்.. கனடா பல்கலாச்சார நாடு என்பது உறுதியானது.. வடஇந்தியப் பெண்மணி ஒருத்தி கணவனின் உழைப்பில் குடும்பத்தைப் பார்க்க ஊருக்குப் போகிறாள் போலும்.. கழுத்து கைகள் எல்லாம் கணவனின் உழைப்பால் நிறைந்திருந்தது.. தலையணையை அணைத்தபடி எப்போது விமானம் கிளம்பும் குறட்டை விட்டுத்து¡ங்கலாம் என்பதான நிலையில் அவள் காத்திருந்தாள்.. எடுத்துச் சென்ற புத்தகத்தைக் கூட பிரிக்க முடியாத இறுக்கத்தில் இறுகிப்போய் நான்.. என்னைத் தவிர எல்லோருமே வாழ்வில் பலமணி நேரங்களை வீணடித்துக்கொண்டிருக்கிறார்கள் என்ற எண்ணம் மீண்டும் எனக்குள் எழுந்தது.. நான் தயாரானேன்..பயணத்திற்காய்..

அவள் என்னை இறுக அணைத்துக்கொண்டாள்.. அதே நீள் சதுர முகம் வயதாகிப்போயிருந்தது.. கட்டையாய் வெட்டப்பட்ட தலைமயிரை து¡க்கிக் கட்டியிருந்தாள்.. கருகருவென்றிருந்தது.. நிச்சயம் டை அடித்திருப்பாள்.. உடல் இறுகி ஆண் தனத்தைக் காட்டியது.. மீண்டும் அணைத்துக்கொண்டோம்.. எத்தினை வருஷமாச்சு.. இப்பவாவது வந்தியே.. என்னுடைய பையைப் பறித்து கழுத்தில் மாட்டியபடியே குதிரை போல் அவள் நடந்தாள்.. நீண்ட தலைமயிரும் மெல்லிய இடையும் நாணமும்.. கூச்சமுமாக பெண்களுக்கே ஆதாரமாக இருந்தவள்.. இன்று.. என்னை நான் குனிந்து பார்த்துக்கொண்டேன்.. விதியை நொந்தபடியே அவள் பின்னால் நான்..

லண்டனின் நெளிந்த குறுகிய ரோட்டும்.. நெருப்புபெட்டி போன்ற கார்களும் வினோதமாக இருந்தது.. அவள் ஆங்கிலப் பாடல் ஒன்றைப் ஓட விட்டு என் கைகளுக்குள் தன் கையைப் பிணைத்து நல்ல குண்டா வந்திட்டாய்.. அம்மா மாதிரி இருக்கிறாய் என்றாள்.. பிள்ளைகள் கணவன் குடும்ப வாழ்க்கை எல்லாம் எப்பிடிப் போகுது என்றாள்.. என் அளவில் எனது சந்தோஷங்கள் எனக்குப் பிடித்திருந்தது.. பெருமையாயும் இருந்தது.. அவளை நோகடிக்க விரும்பாது நான் சிரித்தேன்.. அவளும்..

கச்சிதம் என்ற வார்த்தைக்கு அர்த்தத்தை அவள் இருப்பிடத்திற்குள் புகுந்த போது புரிந்துகொண்டேன்.. வீடு ஒரு பல்கலாச்சார பள்ளியாய் சீனர்களின் சிரித்த வாய் குண்டுப் புத்தாவிலிருந்து.. கறுப்பர்களின் நார்பின்னல் தலையுடனான சின்னச் சின்னச் சிலைகள் ஓவியங்களுடன் ஒவ்வொரு பகுதியும் வெவ்வேறு நாட்டவர்களின் கலையுணர்வைக் காட்டி நின்றது.. கண் விழித்து நான் வியப்போடு பார்க்க தனது வேலை அப்படிப்பட்டதென்றாள்.. கட்டிடக்கலை ஆராய்ச்சில் தான் வேலை செய்வதாகவும் பல நாட்டு நண்பர்கள் தனக்கு இருப்பதாகவும் சொல்லி என்னை நான் தங்கும் அறைக்கு அழைத்துச் சென்று காட்டினாள்.. எல்லாமே புதுமையாகவும் கொஞ்சம் அதிசயக்கக்கூடியதாகவும் இருந்தது..

நான் அவளுடன் தங்கும் அந்த ஒரு கிழமையில் எங்கெல்லாம் செல்வது என்ன சாப்பிடுவது என்பதை மிகவும் நேர்த்தியாக எழுதி வைத்து என்னிடம் காட்டி சம்மதமா என்றாள்? நான் யாரையாவது பிரத்தியேகமாகச் சந்திக்க வேண்டுமா என்றும் கேட்டாள்.. அவள் எல்லாவற்றையும் ஒழுங்கு முறையோடு எழுதி வைத்து அதன்படி நடப்பது ஒரு வித செயற்கைத் தனம் போல் இருந்தாலும் அதில் இருக்கும் கச்சிதம் அவள் எனக்காக எடுத்துக்கொண்ட பிரயத்தனம் என்னைக் கவர்ந்திருந்தது.. பதினைந்து வருட நண்பியை முதல் முதலாய் பார்ப்பது போல் வினோதமாகப் பார்த்தேன்.. இருந்தும் அந்த வீடு நிறைவற்றதாய் எனக்குள் பெருமூச்சை வெளிக்கொணர்ந்ததை தவிர்க்கமுடியவில்லை..

கால்கடுக்க லண்டன் ஹைட் பாக்கில் பொடேரோ சிப்ஸ் சாப்பிட்டபடியே பாடசாலை நாட்களை மீட்டு மீட்டு வாய்விட்டுச் சிரித்து மீண்டும் எம்மை சிறுமிகளாக்கி புளகாந்கிதம் அடைந்தோம்.. மீட்டுப்பார்க்க எமக்குள் அடங்கியிருக்கும் நினைவுகளைப்போல் புலம்பெயர்ந்து வாழும் குழந்தைகளுக்கு இல்லை என்ற படியே அவளின் கண்பார்வையைத் தவிர்த்து ஏன் இன்னும் கலியாணம் கட்டாமல் தனியா இருக்கிறாய் என்ற போது அவளின் தொலைபேசி ஒலித்தது.. என்னிடம் கண்ணால் பொறு என்பதாய் காட்டி விட்டு சிறிது து¡ரமாய் போய் சிரித்துச் சிரித்துக் கதைத்தவள்.. பின்னர் என்ர ப்ரெண்ட் மைக்கல் வெரி இன்ரறஸ்ரிங் பெலோ.. நைஜ£ரியன் யூனிவேர்சிட்டிலிய வேலை செய்யிறான்.. எப்ப பாத்தாலும் ரிசேக அது இது எண்டு உலகம் சுத்துவான்.. இப்ப பிரான்ஸ்சில நிக்கிறானாம் இன்னும் ட்ரூ வீக்ஸில இஞ்ச வந்திடுவன் எண்டான்.. நீ வாறது அவனுக்குத் தெரியும்.. உனக்கும் ஹாய் சொல்லச் சொன்னான்.. மூச்சு விடாமல் கூறியவள்.. சிறிது நிறுத்தி வந்தால் என்னோடதான் தங்கிறவன்.. என்றாள் இயல்பாய்.. என் இயல்பு களங்கப்பட்டது..

எனக்கான அந்தக் கிழமை.. அவளுடன் சேர்ந்து ஒவ்வொரு இடமாகச்செல்லும் போதும் மிகவும் அர்த்தம் பொதிந்ததாக பிரமிப்பபை ஏற்படுத்தியது.. குடும்பத்துடன் எத்தனை

இடங்களுக்குச் சென்றுள்ளேன்.. எப்போதும் பதட்டமும் களைப்பும் அலுப்பும் எப்படா வீட்டிற்கு வருவோம் என்றிருக்கும்.. வீணான சிடுசிடுப்புக்கள் கோபங்கள்.. வெறிச்சிடும் வாழ்வு.. ஆனால் இப்போது.. இவள் வாழ்வின் ஒவ்வொரு விடயத்தையும் அர்த்தமாக்கி அனுபவிக்கிறாள்.. தோள் தேய்த்து நடக்க கணவன்.. காலுக்குள் இடற குழந்தைகள் அற்ற நிலையிலும்..இவளால் சிரிக்க குது¡கலிக்க முடியுமெனின்.. கணவன் குழந்தைகள்.. வீடு கார்.. அதற்கும் மேலாய் இன்னும் கொஞ்சம் போய் வாசிப்பு எழுத்து என்று என்னை மேன்மை படுத்தி பெண்ணியம் முற்போக்குத்தனம் என்று பவிசு பண்ணி.. மேதாவியாய் உலவி.. இப்போது.. என் முற்போக்குத்தனம் பெண்ணியக் கருத்துக்கள் என்னுள் முரண்டு பிடிக்கத்தொடங்கியது.. இருந்தும் எனக்குள் இவள் ஏன் இன்னும் கலியாணம் கட்டாமல்.. ஆண்களோடு இவ்வளவு க்ளோஸாக..

லண்டனில் பிரசித்தி பெற்ற சுற்றுலாப்பயணிகள் பார்க்க வேண்டிய இடங்கள் என்ற பட்டியலை முடித்து அவளது வேலைத்தளத்திற்கும் அழைத்துச் சென்றாள்.. பல இனத்து நாட்டவர்களும் அவளைக் கண்டதும் ஓடிவந்து அணைத்து என்னையும் சுகம் விசாரித்தார்கள்.. பாடசாலை நாட்களில் ஆண்களை நிமிர்ந்து பார்க்க மாட்டாள்.. ஆனால் இப்போது.. சரளமாக ஆண்களை அணைப்பது அவர்களின் கையைப் பிடித்தபடியே உரையாடுவது.. அவளின் இந்த போல்ட்நெஸ் எனக்குள் வியப்பாய்..விரிய.. அவள் இடுப்பை வளைத்துப் பிடித்திருக்கும் வெள்ளையன் ஒருத்தனை தானும் அணைத்து அவன் உதட்டில் முத்தமிட்டு ஈரப்படுத்தி எல்லோரிடமும் இருந்து விடைபெற்றுக்கொண்டாள்.. நான் என்னிலிருந்து மீண்டு வர பல மணிநேரமானது..

அவளை நான் உன்னிப்பாகக் கவனித்தேன்.. ஒருவேளை தீர்க்க முடியாத நோயினால் சாகப்போகிறாளோ? இல்லாவிட்டால் காதல் தோல்வியை மறைக்க சந்தோஷமாக இருப்பதாய் பாசாங்குபண்ணுகிறாளோ..? கர்ப்பம் கொள்ளாததால் கண்டிப்போன உடல்.. நேர்கோடாய் நிமிர்ந்து நிற்கும் விதம்.. நுனிநாக்கு ஆங்கிலம்.. காற்றில் கலைந்து நெற்றியில் வழியும் கருமயிர் கன்னத்தில் குழி விழ குழந்தைபோல் சிரிப்பு.. எனக்குள் எதுவோ எழுந்து என்னைக் கேள்வி கேட்க தலையை உலுக்கி மீள முயன்று மீண்டும் தோற்றேன்..

லெமன் ரீக்குள் கொஞ்சம் தேனை விட்டு எனக்கு ஒரு கப்பை நீட்டியவள்.. சோபாவில் இரு கால்களையும் து¡க்கிப்போட்டு தன்னை கு'னுக்குள் புதைத்து தனது ரீ கப்பை இரு கைகளாலும் அணைத்துப் பிடித்து வெளியேறும் சூட்டை உள்ளங்கைக்குள் வாங்கி ஒரு குழந்தையைப் போல் கவனமாகக் வாயருகே கொண்டு சென்று கண்களை மூடி முகர்ந்து பார்த்துப் பின்னர் ஒரு முறை மெதுவாக உறிஞ்சி.. ச்ஆஆஆஆ.. என்றாள்.. ஒரு தேனீரைக் கூட இவளால் எப்படி இவ்வளவு அலாக்காக அனுபவிக்க முடிகிறது..

எனக்குள் எழுவது என்ன?.. புரியவில்லை..புரியவதில் சம்மதமுமில்லை.. மௌனமாக இருந்து விட்டு பின்னர் மீண்டும் கேட்டேன்.. ஏன் நீ இன்னும் கலியாணம் கட்டேலை..? நான் கேட்பதைப் பொருட்படுத்தாது மீண்டும் ஒரு முறை தேனீரை உறிஞ்சியவள்.. என்னைப் பார்த்துச் சிரித்தாள்.. எதுக்கு நீ இந்தியா போறாய் தெரியாததுபோல் கேட்டாள்.. நான் அலுத்துக்கொண்டேன்.. இவள் எதையோ மறைக்கிறாள்.. உண்மையான நட்பு என்பதற்கு இவளிற்கு அர்த்தம் தெரியவில்லை என்ற கோபமும் வந்தது.. அவள் என்னையே பார்த்தபடி இருக்க.. அதுதான் சொன்னனே.. இலக்கியச்சந்திப்பு ஒண்டு.. பெண்ணியம் எண்ட தலைப்பில நான் ஒரு கட்டுரை வாசிக்கப் போறன். எங்கட கலாச்சாரத்தில எப்பிடியெல்லாம் பெண்கள் அடக்கப்படுகிறார்கள்.. எண்ட கட்டுரை என்றேன் பெருமையாய்.. பின்னர் நான் வாசிக்கும் புத்தகங்கள்.. பற்றியும் எனது முற்போக்குச் சிந்தனை கொண்ட எழுத்து.. பெண்ணியக் கருத்துக்கள் என்பன எவ்வளவு து¡ரம் பரவலாக அங்கீகரிக்கப்பட்டுள்ளது பேசப்படுகிறது என்பது பற்றியும் பெருமை இல்லாது சொல்லி வைத்தேன்.. குட்.. வாவ் ¥ என்று விட்டு மீண்டும் தேனீரை உறிஞ்சிய படியே உன்னை நினைக்க எனக்குப் பெருமையா இருக்கு என்றாள். எனக்குள் நான் மீண்டும் என்னைத் துளைத்தெடுத்து கேட்டேன் ஏன் இன்னும் கலியாணம் கட்டாமல் இருக்கிறாய் ஏதாவது பேர்சனல் பிரைச்சனையா?

அவள் கண்மூடி மீண்டும் தேனிரை உறிஞ்சியது எரிச்சலைத் தந்தது.. நான் கேக்கிறதை நீ இக்நோ பண்ணுறாய் எனக்கு விளங்குது.. நான் நினைச்சன் நீ என்ர உண்மையா ப்ரெண்ட் எண்டு உன்னுடைய கவலை வேதனைகளை என்னோட பகிரந்து கொள்ளாமல் நீ என்னை து¡ரத்தில வைக்கிறாய் நான் கொஞ்சம் உணர்ச்சிவசப் பட..அவள் வாய் விட்டுச்சிரித்தாள்.. பின்னர் எழுந்து வந்து என்னருகில் இருந்தவள்.. ரெண்டு பிள்ளைகளுக்கு அம்மா எண்டுறாள் இன்னும் அதே குழந்தைத்தனம் என்று என்முதுகில் தட்டி விட்டு என் ரீ கப்பையும் வாங்கிக்கொண்டு குசினியை நோக்கிச் சென்றாள்.. என்ன குழந்தைத் தனம்? நான் கேட்டதில என்ன பிழை? இந்தளவு வயதாகியும் கலியாணம் கட்டேலை.. வாரிசு எண்டு சொல்ல ஒரு பிள்ளை இல்லை.. இதில நகைச்சுவைக்கு எங்கே இடம்.. மனம் அடித்துக்கொள்ள்.. நான் மௌனமாக அவளைத் தொடர்ந்தேன்..

மீண்டும் தொலைபேசி அழைத்தது.. இப்போது எல்லாமே எனக்கு கோபத்தைத் தந்தது.. அவளின் ஒவ்வொரு அசைவும் எனக்குள் அசிங்கமாகி.. உன்னிப்பாய் நான் கண்காணிக்க.. ஆங்கிலத்தில் அவள் உரையாடலில் காதல் தெரிந்தது.. இது யார் இன்னுமொருத்தனா? முதலில் நைஜ£ரியக் கறுப்பன் தன்னுடன் வந்து தனியாகத் தங்குவான் என்றாள்.. பின்னர் வெள்ளையனை அணைத்து முத்தமிட்டாள்.. இப்போது யார் சைனாக்காறனா? கடவுளே நல்ல காலம் நான் தனியாக இங்கு வந்தது.. இவர் வந்திருந்தால் இதுதான் உம்மட க்ளோஸ் ப்ரெண்டின்ர லச்சணமோ என்று கேட்டு

என்னையும் தவறாகக் கணித்திருப்பார்.. அவள் தனது தனிமையை முழுமைபெறாத தனது வாழ்க்கையைப் பற்றிக் கதைக்காதது எனக்குள் எரிச்சலை ஏற்படுத்த எப்படியும் ஏதாவது சாக்குச் சொல்லி கெதியாக இங்கிருந்து கிளம்பிவிட வேண்டும்.. இவளோடு தனித்திருந்தால் தெரிந்தவர்கள் பார்வையில் பட்டு வைத்தால்? நானும் கணிக்கப்பட்டு விடுவேன்..

வாய்க்குள் ஏதோ பாடலை முணுமுணுத்தவள்.. நான் அவளையே உற்றுப்பார்த்தபடி நிற்பதைக் கவனித்து விட்டு என்ன? என்பது போல் தலையை ஆட்டினாள்..

நீ எதையோ என்னட்ட இருந்து மறைக்கிறாய்.. நீ இன்னும் கலியாணம் கட்டாமல் இருக்கிறதுக்கு ஏதோ பெரிய காரணம் இருக்க வேணும் சொல்ல விருப்பமில்லாட்டி விடு.. நான் முகத்தை து¡க்கி வைத்துக்கொண்டேன்.. அவள் என்னைப் பார்த்து ஒரு விதமாகச் சிரித்தபடியே.. சரி சொல்லு. நீ சந்தோஷமா இருக்கிறாயா? கேட்டாள்.. ஓம் அதில என்ன சந்தேகம்.. நல்ல அண்டஸ்ராண்டிங்கான புருஷன் நல்ல வடிவான கெட்டிக்காரப் பிள்ளைகள்.. வசதிக்கும் குறைவில்லை.. அதோட என்ர வாசிப்பு எழுத்து எண்டு எவ்வளவு சந்தோஷமா இருக்கிறன்.. இதுக்கு மேல ஒரு பொம்பிளைக்கு என்ன வேணும் சொல்லு என் முகத்தில் அதி உயர்ந்த பெருமை வழிய.. அவள் என்னை உற்றுப் பார்த்தாள்.. அவள் கண்களின் தீவிர ஒளி எனைத் தாக்க நான் பார்வையைத் தாள்த்திக்கொண்டேன்.. என் கைகளைப் பற்றிய படியே அவள் சொன்னாள்.. நீ சந்தோஷமா இருக்கிறாய் எண்டதை முற்றும் முழுதாக நான் நம்பிறன்.. ஏன் கலியாணம் கட்டினனீ பிள்ளைகளைப் பெத்தனீ எண்டு நான் உன்னட்ட எப்பவாவது கேட்டனானா? என் நெற்றியில் முத்தமிட்டவள் தனது கைகளைக் கழுவி விட்டு படுப்பதற்கான ஆயத்தங்களைச் செய்யத் தொடங்கியிருந்தாள்.. நீண்ட நேரமாக என்னால் நின்ற இடத்தை விட்டு அசையமுடியவில்லை..

sbalaram@ieccan.com

karupy01@gmail.com

பதிவுகள் யூன் 2004 இதழ் 54

## 14. வடு! - ரோஸா வசந்த் -

குப்பையை அளைந்தபடியே மறுபடியும் தலைதிருப்பி பார்த்தபோது, அவன் இன்னும் அதே மரத்தடி திண்டில், காவி-வெள்ளையடித்த சிமெண்டுச் சிறு தெய்வத்தினருகில் அவளை பார்த்தபடி குந்தியிருப்பது தெரிந்தது. அவள் பார்பதை உணர்ந்ததும், பார்வையை விலக்கி வானத்தை பார்த்தபடி தன் மந்தமான தாடியை சொறிந்து விட்டு கொண்டான். எதிர்பக்கம் கூடியிருந்த செருப்பு தைக்கும் குடும்பத்திலிருந்து, தமிழ் சினிமா வசனம், சற்று தள்ளி இருவர் புகைத்து கொண்டிருந்த கஞ்சா புகைமணத்துடன் கலந்து, கேட்டுகொண்டிருந்தது. சாலையில் காய்கறி வண்டியுடன் சென்றுகொண்டிருந்த தமிழ் சிறுமியை பார்த்ததும் எழுந்து கைதட்டி அழைத்தான். அவள் இவனை பார்த்ததும் ஒரு கேரட்டை கொண்டு வந்து நீட்டினாள். கேரட்டை கடித்தபடியே, இயல்பானது போல் பவனை செய்தபடி மீண்டும் அவள் பக்கம் பார்வையை செலுத்தி, அவள் இன்னும் பார்த்து கொண்டிருப்பதை அறிந்து பழையபடி வானம்பார்கலானான்.

"பரதேசி நாய்க்கு ரோஷத்த பாரு!" முகத்தை அலட்சியமாய் வைத்தபடி கிளறுவதை தொடர்ந்தாள். சோம்பல் தரும் குளிர்காற்று சோம்பேரித்தனமாய் வீசிகொண்டிருந்தது. வெகுநேரமாய் தள்ளி நின்று யோசித்துகொண்டிருந்த தெருநாய், முகரும் நோக்கத்தோடு சோம்பலான உறுமலுடன் அவள் அருகில் வர, மடித்த காலி அட்டைபெட்டியால் அலட்சியமாய் அதன் முகத்திலடித்தாள். நாய் நொடிபொழுதில் தலையை பின்னுக்கிழுத்து, இரண்டடி பின்னகர்ந்து மீண்டும் புடவையருகே முகத்தை கொண்டுவந்தது.

"சீ.. போ..!" விழுந்த பலமான அடியில் `வவ்'வென்ற சத்தம் செய்துவிட்டு சாலை நடுவே சென்று, சிறிது யோசனைக்கு பின் தலையை உயர்த்தி குரைக்க தொடங்கியது.

"ஸனியனுங்க..! எழவு புடிச்சதுங்க..!" பின் அவள் முணுமுணுத்ததில் சில வசவு வார்த்தைகள் கலந்திருந்தன.

இவளை ரொம்ப நாட்களாக பார்த்து வருகிறேன். இந்த பக்கம் வரும்போதெல்லாம் இவள் கண்ணில் படுகிறாளா என்று பார்கவே, டீயும் சிகரெட்டும் குடித்தபடி காத்திருந்துவிட்டு போவதுண்டு. பார்க்க நேரிடும் போதெல்லாம் கந்தலான தோற்றத்துடனேயே இருந்தாலும், சிறு சிறு சகதிகட்டிகள் போல் முகத்திலும் கழுத்திலும் தெரிந்த வடுக்கள் இல்லையென்றால் அவள் ஒரு பேரழகியாகவே இருப்பாள் என்று தோன்றியது.

எழுந்து புடவையை சரி செய்து, சேகரித்த ப்ளாஸ்டிக் கழிவுகளை சாக்குபையில்

அடைத்து, கிளம்புவதற்காக நிமிரும்போது அவன் அருகே அசட்டு புன்னகையை வரவழைக்க முயன்றபடி நின்றிருந்தான். "என்னா வேணும்?" முகத்தை திருப்பிகொண்டு உருவாக்கிய கோபத்துடன் கேட்டாள்.

"இன்னும் கோவமாவே இருக்கர போல!"

"உனுக்கின்னா வேணும் ஸொல்லு! காசு எதும் என்கிட்ட இல்லை."

"அய்ய... இதபாரு! யாருக்கு வேணும் காசு! காசுக்கா நான் பின்னாடி வரேன்!"

"அப்ப வேலையை பாத்துனு போ, எனக்கு போணம்."

தாடியை சொரிந்து, "இப்ப இன்னா பண்டேன்னு கோச்சுக்கற? ·பேட்ரி போறியான்னு கேக்கவந்தேன், அதுக்குள்ளே.."

"போறேன், போல! ஒனுகின்னா வந்ச்சு? நாதான் எங்கிட்டக்க பேசவேணாம், உனுக்கும் எனக்கும் ஸம்பந்தமில்லேனு ஸொல்டேன்ல! இன்னும் இன்னா பண்ணனுன்னு பின்னாடி அலைஞ்சுனுக்கறே?"

"ஸ¤ம்மா பேசினேக்கிறியே, ஒனக்குதான் பேசதெரியுன்னு பேசறியே! நாதான் எல்லாந்தப்பு மன்னிச்சுருன்னு ஸொல்டேன்ல!"

"ஒண்ணும் ஸொல்லவேணாம் நீ, எதியும் கேக்க தயாராயில்ல நா!" குப்பை மூட்டையை முதுகில் ஏற்ற முயற்சித்தாள். அவன் அவளுக்கு உதவி, " ரெண்டு நாளா ஜொரம் வந்து குளிர்ல நோவுபட்னுக்கிறேன் தெரிமா! ஒரு வார்த்த கேட்டியா!"

" இன்னாத்துக்கு கேக்கணுன்றேன்? எனக்கு நீ பண்ணதுக்கு அன்னிக்கே உன்னைவிட்டு போயாச்சு நா! மேலெல்லா பத்த வச்சுட்டு ஒண்ணும் தெரியாத மாதிரி பேசறான் பாரு! என்னை ஒண்ணும் இல்லாத ஆக்கிட்டியே, பரதேசி!" மூட்டையை கீழே வைத்துவிட்டு கத்தினாள்.

"இன்னும் அதெயே பேசினிக்கிர பத்தியா! ஏதோ ஆயிபோச்சு. அன்னிக்கு மாத்ரம் தண்ணி அடிக்கலன்னா இப்டி ஆயிருக்குமா? இல்ல, நீதான் கண்ரோல்ல இருந்தினா ஆயிருக்குமா? எல்லாம் மறந்துட்டு நல்லா இருக்லான்னுதானே ஸொல்றேன். ஸரி, எங்க போற? ·பேட்ரிக்குதானே, வா, இப்டியே ஜல்தியா போய்ட்லாம்."

" நீ ஒண்ணும் வர தேவயில்ல, போறதுக்கு தெரியும் எனக்கு. இப்ப நீ இன்னாத்துக்கு

ஒட்றேன்னு தெரிது எனக்கு. உன் கிட்டக்க படுக்க தயாராயில்ல நா, ஒனக்கு காசு குடுத்தும் என்னால ஆவாது... எங்கூட வராத நீ!"

"என்னா பேசற நீ! ம்.. எனுக்கு வேலை செய்ய தெரியாதா? கய்யும் காலும் இல்லியா?" அவள் இரக்கத்தை பெறும் முயற்சியாய் முகத்தை வைத்துகொண்டு, "ரெண்டு நாளா ஒடம்பு முடியல. மேலெல்லா நோகுது. கால்ல வேற காயமா போச்சு பாரு!" என்று முடி வளர்ந்த கல் போல் தோற்றமளித்த கால்புண்ணை காட்டினான்.

அவள் கவனியாமல் மீண்டும் மூட்டையை தூக்கி, " ஏன்யா மேலே பேசினே இருக்கற! மான ரோஷம் எதும் இல்லியா? உனுக்கு ஜொரன்னா எனிக்கின்னா வந்ச்சு! போய் எவனுக்காவது ஊம்பி விடு! ஸரியா போகும்." என்று நகர தொடங்கினாள். அவன் புண்படும்படி தாக்கபட்டது ஒரு நொடி முகத்தில் தெளிவாக தெரிந்தது. முகமாற்றத்தை உடனே சாதாரணமாக்கிகொண்டு, " இதோ பார்! போகாத! நான் சொல்றேன் போகாத! உனுக்கு எதுனா வந்ச்சுனா தெரியும்", என்று கையை பிடித்து தடுக்க, " விடு கய்ய, தொடாத என்னெ." கையை உதறி அவன் மேலே சொன்னது காதில் விழாதது போல் சென்றாள்.

திகைத்து போனவன்போல் சிறிது நேரம் அவள் போவதையே பார்த்து கொண்டிருந்தவன், திடீரென கோபம் கொண்டு தரையிலிருந்து காரைகட்டிகளை எடுத்து, "ஒரு நாளில்ல ஒரு நா எரிக்கதாண்டி போறேன் ஒன்ன, பேச்சா பேசர தேவ்டியா!" , என்று அவள்பால் எறிந்தான். சாலையை கடந்து கொண்டிருந்த அவளை தவிர்த்து, ஓடிக்கொண்டிருந்த காரினடியில் நோக்கமற்று சென்றன.

"தேவ்டியா! இவ தொழில் பண்ணினு இருந்தா நான் பாத்துட்டே இருக்கணுமா! மொகம் வெந்து போச்சாம், தொழில் பண்ண முடியலன்னு பாக்கறா! அன்னிக்கே எரிச்சிருக்கணும் இவளெ!" மரத்தடி செருப்பு தைப்பவர்களும், கஞ்சா புகைப்பவர்களும், இப்பொழுதுதான் கவனத்திற்கு வந்தது போல் பார்த்துவிட்டு, வசனம் கேட்பதை தொடர்ந்தனர். அவள் தொலைவில் எதுவும் நடவாதது போல் குப்பை மூட்டையுடன் போய் கொண்டிருந்தாள். அவனுக்கு குளிர்சியையும் மீறி வியர்த்தது.

அனிச்சை செயலாய் இன்னொரு டீ சொன்னேன். பசி வயிற்றில் அமிலமாய் சுரந்து கொண்டிருந்தது. டீயும், சிகரெட்டும் அதை இன்னும் எரிய வைக்க போகிறது. சாலை முனையில் உள்ள தர்ஷினியில் பசியை தீர்த்துகொள்ள முடியும் என்றாலும், டீயை தவிர வேறு எதுவும் உள்ளே போகும் சாத்தியமில்லை. பசியை விட தலைக்குள்ளும், காலிலும் பூரான் ஓடுவது போன்ற இருப்புகொள்ளாமை பெஞ்சில் உட்கார்ந்தபடி காத்துகொண்டிருப்பதை பெரும் சித்ரவதையாய் ஆக்கிகொண்டிருந்தது. தூரத்தில் நின்றிருந்த கான்ஸ்டபிளுக்கு, சூழலுக்கு பொருந்தாமல் நான் இங்கே உட்கார்ந்திருப்பதன்

காரணம் புரியும் என்றாலும் ஏனோ என்னை அணுகவில்லை. அவர் கடமையின் காரணமாக நிற்கிறாரா, மாமுலுக்காக நிற்கிறாரா என்று தெரியவில்லை. முருகன் என்ற காரணபெயரால் அழைக்கப்படும் சிறுவன் வரும் வழியாய் தெரியவில்லை. என்னை போலவே சாலையின் எதிர்பக்கம் காத்திருந்த இருவர் பீடிபற்ற வைப்பதை பார்த்து, தன்னிச்சையாய் சிகரெட் பாக்கெட்டை எடுத்தேன். டீ வந்தது.

அவன் என்னை பார்த்து "நமஸ்காரா ஸார்!" என்றான். நான் கண்டுகொள்ளவில்லை.

"ஒந்து பன்னு அரதா டீ கொடிரீ ஸ்வாமி."

கடைக்காரன் காதில் விழாதது போல் சில்லரை எண்ணிகொண்டிருந்தான். புது ஹிந்தி பாடல் ஒன்று இரைச்சலாய் அலறிகொண்டிருந்தது. இவன் சொன்னதையே மீண்டும் சொல்ல, தலைநிமிராமல் "காசு வச்சிருக்யா?" என்றான்.

"எல்லோஹு¤த்தேனே! கொட்தினி ஸ்வாமி, பன்னு மாத்ர கொடி."

"ஸு¤ம்மா கொடுக்கரதில்லே இங்கே, காசு கொடுத்து வாங்கு."

"ஆமெல கொட்தினி, நம்பிக்கெ இல்லுவா?"

" ஏ...ஹோகப்பா, ஸு¤ம்னே தொந்த்ரோ கொட்தாயிதானே...போ..போ.. இங்கே ஒண்ணும் இல்லே."

கடைக்காரனின் எரிச்சலில் மௌனமாகி, ஆயினும் நகாராமல் சுற்றிலும் பரிதாப பார்வையை படரவிட்டான். நான் திரும்பி முருகன் வருகிறானா என்று பார்தேன். கடைக்காரன் அவன் இருப்பை கவனிக்காமல் முடிந்திருந்த கேஸட்டை மாற்றி போட்டான். எதிர் பெஞ்சில் உட்கார்ந்திருந்த மூன்று பேர் அவனை பார்த்து கொண்டிருந்தனர். கருப்பாக இருந்தவன் தமிழனாகத்தான் இருக்க வேண்டும். நடுவில் பிரதானாமாய் தெரியும் மீசையுடன் அமர்ந்திருந்தவன் நல்ல போதையில் இருப்பதை, தொடங்கியிருந்த பாடலுக்கு அவன் உடல் முழுவதையும் ஆட்டி தாளம் போடும் விதம் சொன்னது.

"ஏனு பேக்கு?" புருவத்தை உயர்த்தி தாளத்தை நிறுத்தாமல் கேட்டான்.

"பன்னு, டீ ஹேளி ஸார்" என்றான் பணிவான சிரிப்புடன்.

"நனகொந்து கெலஸ மாடுத்தியா? ஹேளுத்தினி." (எனக்கொரு வேலை செய்கிறாயா?

சொல்கிறேன்.)
"ஹேளி ஸார்."

குரல் உயர்த்தி, ஏற்ற இறக்கமாய் நடிப்புடன், அவன் தன் வட்டார கன்னடத்தில் சொன்னது இவனுக்கு புரியவில்லை. சொல்லிவிட்டு குதிரைக்கு புரை ஏறியது போல் தலையை ஆட்டி ஆட்டி சிரித்தான். மற்ற இருவரும் தங்கள் கடமை போல் அவனுடன் சிரித்தனர். சிரித்ததில் அவர்களும் போதையிலிருப்பது தெரிந்தது. கடைக்காரன் கவனிக்கவில்லை.

"கொத்தாகில்லா ஸார்." (புரியவில்லை.)

மீண்டும் அதே போல ஏதோ சொல்லி திரும்பவும் சிரித்தான். என்ன செய்வதென்று விளங்காமல் அவர்களை பார்த்தபடி நின்றிருந்தான். தமிழன் போல் இருந்தவன் `இவனிடம் போய் கேட்கிறாயே' என்பதுபோல் தலையிலடித்து, 'போ!போ!' என்று சைகை செய்தான். போகவில்லை.

இரு மாநிற இளைஞர்கள் க்ரீஸ் எண்ணெய் படிந்த உடைகளுடன் உருதுவில் பேசியபடி வந்து, இவனை ஐயத்துடன் பார்த்தபடி, "தோ.. சாய்!" என்றான். விசாரித்த மீசை ஆசாமி பாட்டுக்கு உடலாட்டுவதில் மூழ்கியிருந்தான். இன்னும் சிறிது போதையேற்றினால் நடனமாடுவான் என்று தோன்றியது. எனது இருப்புகொள்ளாமை ஜுரம் தாக்குபிடிக்க முடியாத நிலைமைக்கு சென்றிருந்தது.

"அய்யா... பசிக்குது ஸ்வாமி! ஊட்டா மாடில்லா ஸார்....பசி தாங்க முடியலயே!" வயிற்றை பிடித்தபடி அடித்தொண்டையில் கத்தினான். கண்களில் அழுகைக்கு தயாராய் நீர் திரையிட்டிருந்தது.

"இன்னா பண்ரதுபா! என்கிட்டே கொடுக்கறதுக்கு ஒண்ணும் இல்லே." வந்தவர்களுக்கு தண்ணிர் வைத்தபடி சொன்னான். அவன் குத்துகாலிட்டு அமர்ந்து அழத்தயாரானான். "க்யா ஹுவா?" என்று உருது இளைஞன் விசாரித்தான்.

"அய்யோ.. பசிக்குது...நான் என்ன பண்ணுவேன், வயிறு நோகுதே..அம்மா...!" வார்த்தைகள் தெளிவற்று வெளிவராமல் உள்ளே போய், சத்தமற்ற அழுகையாய் பரிணமித்து, ஒரு எல்லையை தொட்டவுடன் பெரும் சத்தத்துடன் வெளிவந்தது. ஒரு பன்னிற்காக அழுவதை எப்படி விவரிப்பது? வந்த வேலைக்கு போக, தாராளமாய் என்னிடம் பணம் இருந்தது. என்னால் இவனுடைய பசியை தீர்த்துவைக்க முடியும்.

கடைக்காரன் வெளியே வந்து, "ஏய்... போடா! டெய்லி இதே பண்றே நீ, இன்னிக்கு

கொடுக்கறதில்லே... போ!" கூஜாவிலிருந்து தண்ணீரை அவன் மேல் ஊற்றினான். விரட்டபட்ட ஆடு போல் சிறிது நகர்ந்தான்.

"அங்கே போ! அந்த பக்கம் போய் அளு! இங்கே கலீஜ் பண்ணாதே!" முழுசாய் நகற்றி அவனை பெஞ்சிற்கு பின்னால் இழுத்துவிட்ட பின்புதான் உள்ளே போனான். அழுக்கு வேட்டி விலகி அவன் உறுப்பு தெரிந்தது. முழங்கையில் தலை வைத்து, மண்ணில் படுத்த நிலையில், உடைந்த குரலில் குழப்பமான வார்த்தைகளால் அழுதுகொண்டிருந்தான்.

கடைக்காரன் இவன் தினமும் தரும் தொல்லை குறித்து, சிதைந்த ஹிந்தியில் உருது இளைஞர்களிடம் சொல்லிகொண்டிருந்தான். மூக்கை சிந்தி மடங்கியிருந்த கதவில் தடவி, ஒலியெழுப்பி கபம் துப்பிவிட்டு மீண்டும் அழுதான். கடையில் கூட்டம் சேர்ந்து, பல மொழிகள் கலந்த பேச்சு சத்தம், இன்னும் உற்சாகத்துடன் ஒலித்துகொண்டிருந்த பாடலுடன் கேட்டது. கொஞ்சம் கரிசனத்துடன் விசாரித்த உருது இளைஞர்களும் போய்விட்டிருந்தனர்.

சிறிது நேரத்தில் பயனற்ற அழுகை என்பது புரிந்தோ அல்லது அழ தெம்பு இல்லாமலோ, அழுவதை நிறுத்தி தரையில் கோடு போட்டுகொண்டிருந்தான். என்னை பார்த்தான். அவன் சிரிக்க முயற்சிப்பானோ என்று பார்வையை தாழ்தினேன். நிமிர்ந்த போது கோடு போட்ட குச்சியை வைத்தே பல் குத்தியபடி, பார்வையை சுழற்றியவன், மீசை ஆசாமியின் கால்சட்டை பையிலிருந்து எப்போழுதும் விழுந்துவிடும் நிலையிலிருந்த பர்ஸை பார்பதை நானும் பார்தேன். எதிர்பக்கம் காத்துகொண்டிருந்த இருவரும் அவசரமாய் பீடியை அணைத்துவிட்டு எழுந்திருப்பதை பார்த்து, நானும் உஷாராகி முருகன் வந்துவிட்டிருப்பதை அறிந்தேன்.

தெருவிளக்கின் மஞ்சள் வெளிச்சத்தில் பனி தெரிந்தது. நடப்பதற்கும் ஆளற்று வெறிச்சோடிய சாலையில், தன் வர்கத்தை சேர்ந்த அவனைவிட இளையவன் ஒருவனுடன், சாவகாசமாய் வந்து கொண்டிருந்தான்.

"காபா கட மாத்றி யார்ரா ஷீக் குடுக்கறான்! குளிர்லே எப்டி உள்ளெ போச்சு! நாளிக்கு இப்டியே சிவாஜி நகர் போலாம், அங்க காட்றன் பார்."

உடலை சுற்றியிருந்த பழந்துணிகள் போதாதென்றாலும், மிதப்பில் குளிர் தெரியவில்லை. வேண்டுமென்றே முதுகில் எடை இருப்பது போல் கொஞ்சம் குனிந்து, கூட்டத்தை விலக்கி வருவது போன்ற குழம்பிய நடையில் வந்தனர்.

"ஆமா, ஏதுரா காசு உனுக்கு?"

"அப்டி கேளு, அதாண்டா.. காசு வரும் .. போகும்னு வள்ளுவர் சொல்லிகிறார் தெரிமா! தெவ்டியாபசங்க! சில தொறக்கவிடமாட்டேன்றான். பதினஞ்சாம் தேதி ஊர்வலன்னு எழுதி போட்டுக்கரான் பார்!"

"லாட்ரி எதுனா வுளுந்த்சா?"

"லாட்ரி! ஆமா லாட்ரிதான் வுளுந்த்சு!" என்று அட்டகாசமாய் வலிந்து கொண்டுவந்த போதை சிரிப்பு சிரித்து, விழப்போவது போல் போக்குகாட்டி, தெருமுக்கு திரும்பியவனின் சிரிப்பு நொடியில் உறைந்தது. மீசை ஆசாமி அதே சகாக்களுடன் நின்றிருந்தான். அவசரமாய் திரும்பும் முன் பார்த்துவிட்டிருந்தார்கள். சிரிப்பு சத்தம் முன்னமே கவனத்தை ஈர்த்திருக்க வேண்டும்.

"என்னாச்சு?"

"ஜல்தி வா. இப்டி போய்டலாம்."

"ஏன்? என்னாச்சு?"

ஓடத்துவங்கினான். ஆனால் அவர்களின் வலுவான ஓட்டத்திற்கு ஈடுகொடுக்க இயலாமல் அகப்பட்டு, கால் தடுக்கபட்டு தாறுமாறாக சாலையில் விழுந்தான்.

"எல்லி ஹோகுத்தியா... நன் மகனே! நன் கை நல்லி ஆட்டா ஆடுத்தியா!" வயிற்றில் மிதித்தான். தடுத்த கைகளை பற்றி, மிக சாதாரணமாக அவனை தூக்கி, மீண்டும் கீழே போட்டு மிதித்தான். நிதானமான ஆர்வத்துடன், அவன் கைகளை அழுத்தி கொண்டு, தேர்ந்தெடுத்த இடத்தில் மிதித்தான். கூட வந்த இளையவயதினனை காணவில்லை.

"இல்லா ஸார், நானில்லா...!" அரைகுறையான கதறல்கள் விழுந்த அடிகளில் கரைந்தன. அவனை மீண்டும் தூக்கி நிறுத்தி, முரட்டுதனமாய் முகத்திலடித்து, வாசனையை உணர்ந்து, "குடிதுபிட்டு பந்திதானே, காஸ¤ நின் அம்மனா கொட்டது!". போதையையும் மீறி பல இடங்களில் வலி தெரிந்தது.

"தமிள்காரன் மானத்த வாங்க வந்திரிக்கியே, அவ்ளோதான் நீ! கவ்டா போலீஸ்ல விடாத போமாட்டான்!" கூடவந்த தமிழன் சொன்னான். மூன்றாமவன் வெறும் வேடிக்கை மட்டுமே பார்த்துகொண்டிருந்தான்.

அவன் தப்பிப்பதை மறந்து அடிகளை ஏற்றுகொள்ளும் மனநிலைக்கு வந்திருந்தான்.

தொடர்ந்து விழுந்துகொண்டிருந்த அடிகளை தடுக்க கூட முயலாமல் சூழ்நிலைக்கு தன்னை முழுமையாய் ஒப்படைத்திருந்தான். கண்கள் செருகி அப்படியே தூங்கவிடத் தோன்றியது. கெளடா விட்டால்தானே. அம்மாவின் நினைவு வந்தது. அப்பா ராயப்பன் செயலற்றுபோய் பார்த்து கொண்டிருக்க, தங்கராசு அம்மாவை நடு ரோட்டில் போட்டு மிதித்து கொண்டிருந்தான். பாலிஸ்டர் வேஷ்டி வ்¢லகும்படி தங்கராசு புல்லட்டிலிருந்து இறங்கும் காட்சி மனதில் தோன்றும் போதெல்லாம், எத்தனை முறை அவனை போட்டுதள்ளுவதை ஒத்திகை பார்த்திருக்கிறான். இந்த கெளடாவையாவது போட்டுதள்ளினால் என்ன? மனம் விரிவாகி, பெரும் சக்தி நிரம்பியது போல உணர்ந்தான். தன்னை இயல்புக்கு கொண்டு வந்து நிதானமாய் புலன்களை கூராக்கியபோது அடிகள் விழுவது நின்றிருப்பது தெரிந்தது. பேச்சு சத்தம் கேட்டது. அவள்தான்! முன் அனுபவித்தறியாத உணர்வு உடல் முழுவதும் அலையென பரவகண்டான். எப்போது, எப்படி இங்கு வந்தாள் என்று ஊகிக்க முடியவில்லை. மேகங்கள் விலகி திடீரென பெய்யும் வெயில் போல, அவள் அங்கே தோன்றியிருக்க கூடுமோவென எண்ண தோன்றியது.

கெளடா ஏதோ சத்தமாய் சொல்லிகொண்டிருந்தான். அவள் தமிழில் பதில் சொல்லிகொண்டிருப்பதால் கெளடாவிற்கு எரிச்சல் கிளம்புவதை உணர்ந்து தமிழன் அவளுக்கு விளக்க தொடங்கினான்.

"இப்ப இன்னா பண்ணணுன்றான்?" அவன் மெதுவாய் நிமிர்ந்து அவளை பார்த்தான். அவள் இதுவரை அவன் பார்த்திராத ஒரு பொலிவில் தெரிந்தாள். ஆழ்ந்த உறக்கத்திற்கு பின் விழித்து, குளித்து வந்தது போன்ற தெளிவுடன் அவள் கண்கள். அவள் முகத்தில் சிறு சிறு சகதிகட்டிகள் போன்ற அந்த வடுக்கள் இல்லை.

"காசக்கொடுத்தா விட்ருவான். இவன் கிட்டக்க எங்க காசு, அதான் எல்லா குடிச்சு தின்னுட்டு வந்திருக்கிறானே."

அவள் மார்பிலிருந்து பணமெடுத்து, "எவ்ளோ?" என்றாள்.

(* 1994-95 இல் எழுதபட்டு, சுபமங்களாவிற்கு அனுப்பபட்டு வெளிவரவில்லை. சில திருத்தங்களுடன் தட்டச்சு செய்யபட்டு, பதிவுகளுக்கு அனுப்பப்படுகிறது.)

rksvasanth@yahoo.com

பதிவுகள் யூன் 2004 இதழ் 54

**15. பெற்றோர் பருவம்! - நாகூர் ரூமி -**

"புள்ளெ வந்துட்டாளா?"

தனது இரண்டு சக்கர லாரியை போர்ட்டிகோவில் ஸ்டாண்ட் போட்டு நிறுத்திக்கொண்டே கேள்வியை தூக்கி வீட்டுக்குள் வீசினார் அப்துல் காதிர். ஸ்கூலில் இருந்து ட்யூஷனெல்லாம் முடிந்து அருமை மகளார் ஆறுமணிக்கு மேல்தான் வருவாள் என்று அவருக்கும் தெரியும். ஆனால் அலுவலகம் விட்டு வந்து அவர் வீட்டுக்குள் புகுவதற்கு முன் 'புள்ளெ வந்துட்டாளா' என்ற கேள்வி புகுந்துவிடும்.

வீரபத்ரனின் கழுத்தில் லாவகமாக மாட்டியிருந்த அவரது தோள் பையை எடுத்துக்கொண்டு உள்ளே வந்தார். அவர் கேள்விக்கு வீட்டிலிருந்த யாரும் பதில் சொல்லவில்லை. சொல்லவும் மாட்டார்கள். அவர்களுக்குத் தெரியும். அது ஒரு கேள்வியே அல்ல. அது ஒரு பழக்கம். வைத்த நேரத்துக்கு அலாரம் அடிப்பது மாதிரி, வீட்டுக்குள் நுழைந்ததும் அவர் வாயிலிருந்து அந்த கேள்வி புறப்பட்டுவிடும்.

"புள்ளெ வந்துட்டாளான்டு கேட்டேன்" என்று மனைவியைப் பார்த்துக் கொஞ்சம் கடுமையாகச் சொன்னார். அடுப்பங்கரையில் அவருக்காக டீ போட்டுக்கொண்டிருந்த ஹஸீனாவின் இதழோரம் கோணலாக ஒரு புன்னகை ஊர்ந்தது.

"அவ ஆரறை மணிக்கித்தான் வருவான்னு தெரியும்ல, ஏன் சும்மா கேட்டுக்கிட்டே இரிக்கிறீங்க? மணி இப்ப அஞ்சறெதானே ஆவுது?"

மனைவியின் பதில் கேள்வியில் அப்துல் காதிர் அமைதியாகிப் போனார். அவருக்கும் தெரியாமலில்லை. என்றாலும் இப்படி கேட்டு பதில் வாங்காவிட்டால் ஏதோ ஒரு கடமையை செய்யாமல் விட்டமாதிரி இருக்கும். ஏதோ புரிந்துவிட்ட மாதிரி தலையை லேசாக ஆட்டிக்கொண்டு அறைக்குள் சென்றார். பேண்ட் ஷர்ட்டைக் கழட்டி விட்டு கைலியும் கை வைத்த பனியனுமாக ம·ப்டிக்கு மாறி வெளியில் வந்தார். பின் கொல்லைப் புறம் சென்று முகம் கைகால் கழுவிவிட்டு வந்து ஹாலில் இருந்த நாற்காலியில் அமர்ந்து கொண்டார். ஹஸீனா டீயைக் கொண்டுவந்து கொடுத்தாள். வாங்கியவர் அனிச்சையாக சுவரில் இருந்த கடிகாரத்தைப் பார்த்தார். மணி ஆறை நெருங்கிக் கொண்டிருந்தது.

"மவள்னா என்னா பைத்தியமோ"

சொல்லிக்கொண்டே ஹஸீனா உள்ளே போனாள். போகும்போது அவள் முகத்தில் ஒரு பெருமை தெரிந்தது.

டியை உறிஞ்சிக்கொண்டே மகளை நினைத்துக்கொண்டார். கல்யாணமாகி ஏழு வருஷம் காத்திருந்து பெற்ற மகள். ஆறு வருஷங்களாக ஹஸீனாவில் கருப்பையை அடைத்துக்கொண்டிருந்த கட்டியை இனம் கண்டு கொள்ளவே பல காலம் ஆனது. பின் அதை ஆபரேஷன் செய்த பிறகுதான் ஹஸீனாவால் சரியாக மூச்சு விட முடிந்தது. அதற்குள் ஊர் நாக்குகள் குறிபார்த்து வேறுவிதமான பெயர்களையெல்லாம் அப்துல்காதிருக்கு சூட்டிவிட்டிருந்தன.

"தபாரு பீவி, ஆபரேஷன் நல்லபடியா முடிஞ்சிடுச்சுங்கறதுக்கு அடையாளமே நீ அடுத்த வருஷமே ஒரு கொழந்தையெ பெத்து காட்டுறதுதான். நாந்தான் ஒனக்கு பிரசவம் பாப்பேன். நீ போட்டிருக்கியே கல்லுவச்ச மோதிரம், அதே மாதிரி எனக்கு தங்கத்துல செஞ்சு போடணும். செய்வியா?" என்று டாக்டர் சுமதி கேட்டபோது உண்மையில் அவர்களுக்கு சந்தோஷமாகவே இருந்தது. அப்படிப் பிறந்தவள்தான் அர்ஷியா.

குழந்தை பிறந்தபோது பார்த்த எல்லார் கண்ணும் பட்டிருக்கும். ஆஸ்பத்திரி நர்ஸ¤கள், வார்டு பையன்கள் என எல்லாரும் போட்டி போட்டுக்கொண்டு குழந்தையைத் தூக்கி வைத்துக்கொண்டனர்.

"பீவி, ஒனக்கு எவ்வளவு கலரா, எவ்வளவு அழகா ஒரு பொம்புளப் புள்ளெ பொறந்திருக்கு தெரியுமா?" என்று டாக்டர் சுமதியே ஆச்சரியப் பட்டு சொன்னாள்.

அவள் சொன்னது உண்மைதான். அப்துல் காதிரும் ஹஸீனாவும் நல்ல சிவப்பு நிறம்தான் என்றாலும், அர்ஷியாவின் நிறம் பலமடங்கு பெற்றோரை மிஞ்சுவதாக இருந்தது. அகன்ற விழிகளும், நீண்ட மூக்கும், புசுபுசுவென கன்னமுமாக கொள்ளை அழகாக இருந்தாள். அவ்வளவு அழகு ஆபத்தாச்சே என்றுகூட பயப்பட வேண்டியதாக இருந்தது. சொல்லிவைத்த மாதிரி அர்ஷியாவின் அழகுக்குப் போட்டி போல அவள் அறிவும் பேச்சும் இருந்தது.

ஒரு முறை அப்துல்காதிர் ஒரு கல்யாணத்துக்கு மனைவியையும் அர்ஷியாவையும் கூட்டிப் போயிருந்தார். அர்ஷியாவுக்கு அப்போது ஆறு வயது. மாப்பிள்ளைக்கு அன்பளிப்பு செய்வதற்காக, மடியில் இருந்த அர்ஷியாவை ஒரு நண்பரின் பக்கத்தில் உட்காரவைத்துவிட்டு மேடைவரை போய்வந்தார் அப்துல் காதிர்.

"சார், உங்க பொண்ணுங்களா?" என்றார் நண்பர் பக்கத்தில் இருந்த ஒருவர். அவருக்கு நாற்பத்தைந்து இருக்கும்.

"ஆமா சார், ஏங் கேக்குறிங்க?"

"சார், என்னமா பேசுது சார்!" சொன்னபோது ஏதோ உலக அதிசயத்தைப் பார்த்துவிட்டு வந்த மாதிரி முகத்தை வைத்துக்கொண்டார் அவர்.

"ஏன் சார், என்னா சொன்னா?"

"என்ன சார், நல்லா பேசிக்கிட்டிருக்குதேன்னு பிடிச்சுப்போயி, என்னாமா எங்க வீட்டுக்கு வந்துர்றியான்னு கேட்டேன். அதுக்கு என்னா சொல்லணும்? வர்றேன், வரமாட்டேன்னுதானே எல்லா புள்ளைங்களும் சொல்லும்?"

க்ளைமாக்ஸைச் சொல்லாமல் ஒரு சஸ்பென்ஸில் நிறுத்தினார் அவர். தன் மகள் என்ன பதிலைச் சொன்னாள் என்று தெரிந்து கொள்வதில் அப்துல் காதிருக்கு மிகுந்த ஆவல் உண்டானது.

"என்னா சார் சொன்னா?"

"ஏன், உங்களுக்கு புள்ளெ இல்லெயான்னு கேக்குது சார்!" என்று சொல்லிவிட்டு வாய் பிளந்தார். பக்கத்தில் இருந்த நண்பர்கள் அனைவரும் வாய்விட்டுச் சிரித்தனர். அப்துல்காதிருக்கும் சிரிப்பாகத்தான் வந்தது. தன் மகளை நினைத்து பெருமையாகவும் இருந்தது.

"சார், வீட்ல போயி, திருஷ்டி சுத்திப் போடுங்க சார்" என்று ஆலோசனை வேறு வழங்கினார் அவர்.

அவர் சொல்லாவிட்டாலும் ஹஸீனா நிச்சயம் அதை செய்திருப்பாள்தான். முதல் வேலையாக இந்த விஷயத்தை மனைவியிடம் சொல்லி வைத்தார். தன் நண்பர்களிடமும் சொன்னார். ஹஸீனாவும் தன் பங்குக்கு ஒரு ஆயிரம் பேர்களிடம் சொல்லிவைத்தாள். இப்படியாக பெற்றோர்கள் வாயிலாக அர்ஷியாவின் பெருமை பேசும் காண்டம் அந்த கல்யாண மண்டபத்தில் வைத்து எழுதப்பட்டது. இவ்வளவையும் செய்துவிட்டு, காஞ்ச மிளகாயை எடுத்து அர்ஷியா தலையைச் சுற்றிவிட்டு, "துப்பு" என்று அர்ஷியாவை துப்பச் சொல்லி, ஆசையாக அர்ஷியா அதில் துப்பியவுடன் அதை அடுப்பில் போடுவாள். அது வெடித்து எரியும்போது, "பாவி கண்ணு, பரப்பா கண்ணு, கொள்ளி கண்ணு, எல்லாம் அவிஞ்சு போவணும். எம்புள்ளக்கி எத்தினி கண்ணு பாத்திங்களா? எப்புடி எரியுது பாத்திங்களா?" என்பாள்.

"டாடி, இது என்னா டாடி?" என்று ஒரு முறை ஸ்கூலில் இருந்து அவளை கூட்டி வரும் வழியில் தெருவோரம் கைகாட்டிக் கேட்டாள் அர்ஷியா. அவள் உட்காருவதற்காகவே தனது வீரபத்ரன் வண்டியில் ஒரு குட்டி சீட் முன்னால் போட்டு

வைத்திருந்தார். அவள் கைகாட்டிய பக்கம் பார்த்தார். 'போர்' போட்டுக்கொண்டிருந்தார்கள். ராட்சச மிஷின்களிலிருந்து இறக்கப்பட்ட ஸ்டீல் ராடுகள் பூமியைத் துளைத்துக்கொண்டு செல்லும் சப்தம் தெருவையே கலக்கிக் கொண்டிருந்தது.

அவளுக்குச் சொன்னால் புரியுமா? யோசித்தார்.

"அது, ஒன்னுமில்ல கண்ணு, இந்த மிஷின்லேருந்து, பூமி உள்ளக்க தொளை போட்டு, ரொம்ப கீழே போயி, அங்கேருந்து தண்ணி எடுத்து மேலெ கொண்ட்டு வருவாங்க" என்று விபரமாகச் சொன்னார். அதைக் கேட்டுவிட்டு அவள் சொன்னாள்.

"ஓஹோ, போர் ·பிக்ஸ் பண்றாங்களா?"

அதிர்ந்து போனார் அப்துல்காதிர். "ஒனக்குத் தெரியுமா? அப்ப ஏன் எங்கிட்ட கேட்டே?" என்றார்.

"அதா, ஒனக்கு தெரியுமான்னு தெரிஞ்சுக்கத்தான்" என்றாள்.

"வாயாடி" என்று சொல்லி முத்தம் கொடுத்து விட்டு வாயை மூடிக்கொண்டார்.

"என்ன யோஸ்னையா இருக்கிறிங்க?" ஹஸீனாவின் குரல்தான் அவரைக் கலைத்தது.

"ஒன்னுமில்ல"

மேற்கொண்டு மனைவியும் எதுவும் கேட்கவில்லை. அவர் அசைபோடுகிறார் என்று அவளுக்குத் தெரியும்.

மளமளன்னு வளந்துட்டா! பதிமூனு வயசாகுது! இப்ப சுடிதார் போட்டுக்கிட்டு ஸ்கூலுக்கு போய் பத்தாவது படிக்கிறா! நினைக்க நினைக்க அவருக்கே வியப்பாக இருந்தது. எவ்வளவு சீக்கிரம் பெண் குழந்தைகள் வளர்ந்து விடுகிறார்கள்! கடிகார ஒலி அவரை இந்த உலகத்து கொண்டு வந்தது. மணியைப் பார்த்தார்.

மணி ஏழு! இன்னும் ஆட்டோ வரவில்லை!

"மணி ஏழாவுது. இன்னும் ஆட்டோ வரலியே" என்று கத்தினார். அவர் கத்தலில் மிரண்ட ஹஸீனாவுக்கும் கொஞ்சம் பயம் பிடித்துக்கொள்ள ஆரம்பித்தது.

"ஆமா, யா அல்லாஹ், மணி ஏலாவுதே... ஸ்கூலுக்கு ·போன் போட்டு பாருங்களேன்" என்று பதறினாள்.

தொலைபேசி பக்கத்தில் வைத்திருந்த சின்ன புத்தகத்தை எடுத்து ஸ்கூல் எண்ணைத் தேடினார். கிடைக்கவில்லை.

"என்ன எலவு நோட்டு இது? முக்கியமான ஸ்கூல் நம்பரெ மொதோ பக்கத்துல எலுதி வைக்க மாட்டிங்களா சனியனுவளா" என்று கத்தினார்.

ஹஸீனா வாங்கிப் பார்த்தாள். "இந்தோ இந்த நம்பருதான்" என்று எடுத்துக் கொடுத்தாள். உடனே சுற்றினார்.

"ஹலோ, ப்ரசன்டேஷன் கேர்ள்ஸ் ஹைஸ்கூலுங்களா? நா ட்டெந்த் படிக்கிற அர்ஷியாவோட ·பாதர் பேசுறேன். அர்ஷியா இன்னும் ஸ்கூல் வுட்டு வரலெ. ஆட்டோ வந்து கூட்டிட்டு வந்துதுங்களா? இல்லெ, இன்னும் ஸ்கூல்லதான் இருக்காளா? கொஞ்சம் கேட்டு சொல்றிங்களா சார், ப்ளீஸ்". வார்த்தைகள் கோர்வையாக வரவில்லை. சொல்ல நினைத்ததை சரியாக சொல்லிவிட்டோமா என்று அவரால் தீர்மானிக்க முடியவில்லை.

"இல்லிங்களே, எல்லா ஆட்டோவும் வந்து புள்ளங்களை கூட்டிட்டி போயிடுச்சுங்களே. இன்னிக்கு ஸ்கூல் அஞ்சு மணிக்கே வுட்டாச்சு சார். ஸ்கூல்ல இப்ப யாரும் இல்லெ"

இடி விழுந்த மாதிரி இருந்தது. இதயத்தில் படபடப்பு அதிகரித்தது. சப்தம் வெளியில்கூட கேட்கும்போலிருந்தது.

"ஹஸீ, புள்ளெ போகும்போது ·பீ அமானில்லாஹ்னு (இறைவனுடைய பாதுகாவல்) சொல்லித்தானே அனுப்புனே?"

ஹஸீனா பயந்து போனாள். "ஏங்க, என்னா செய்யிது உங்களுக்கு? ஏன் பதட்டப்பட்றீங்க? நா எப்பவும் போல எல்லாம் சொல்லித்தான் அனுப்புனேன். 'லேட்'டாவுனா அவ '·போன்' போடுவா. பயப்புடாதிங்க. நீங்க 'பைக்'குல போயி அவ ஸ்கூல்ல விசாரிச்சுட்டு, பக்கத்துல் அவ தோலி வூடு இருக்கு. அவ பேரு மைவிலி. ஸ்கூலுக்குப் பக்கத்துல உள்ள மூனாவது சந்து. கொஞ்சம் விசாரிச்சிட்டு வர்றிங்களா? அவ வூட்டுல '·போன்' இல்லெ"

மறுபேச்சு பேசாமல் உடனே சட்டையை மட்டும் மாட்டிக்கொண்டு வண்டியைக் கிளப்பிக் கொண்டு பறந்தார் அப்துல் காதிர். "பாத்து போங்க" என்று சொல்லிவிட்டு வாசலையே கொஞ்ச நேரம் வெறித்துப் பார்த்துக்கொண்டிருந்தாள் ஹஸீனா. '·பீ அமானில்லாஹ்' என்று

தன் புருஷனுக்காகவும் ஒருமுறை மனதுக்குள் சொல்லிக்கொண்டாள்.

போனவர் கொஞ்ச நேரத்துக்கெல்லாம் திரும்பி வந்தார்.

"ஸ்கூல்ல அவ இல்லெ. அங்கெ யாருமே இல்ல. ஸ்கூல் அஞ்சு மணிக்கே வுட்டுட்டாங்களாம். ஆட்டோக்கார நாயி இன்னக்கி வரலையாம். மைவிழி வூட்டுலயும் அவ இல்லை. எங்கெ போனான்னு தெரியலெயே" என்று சொல்லி தலையில் கை வைத்துக் கொண்டு உட்கார்ந்தார். நிழல்படத்துடன் தினசரிச் செய்தி, தொலைக்காட்சி சிறப்புச் செய்தி என மனதில் என்னென்னவோ கற்பனைகள் வந்து போயின. ச்சே, நம்முடைய மகளைப் பற்றி நாமே இப்படி நினைப்பதா? என்ன மனசு இது? நினைக்கவே நடுக்கமாக இருந்தது. என் அழகுச் செல்லம் அர்ஷியா! உனக்கு ஒன்றும் ஆகக்கூடாது. யா அல்லாஹ், என் மகளைக் காப்பாற்று. வியர்த்தது அவருக்கு.

"ஏம் பயப்புடுறிங்க..பயப்புடாதீங்க.. அல்லாஹ் நம்பளுக்கு ஒரு கொறையும் வுட மாட்டான். வந்துடுவா" என்று அவர் நெஞ்சைத் தடவி விட்டாள் ஹஸீனா. ஆனால் தாரை தாரையாக விழிகளிலிருந்து வழிந்ததை ஏனோ அவளால் துடைக்கத் தோன்றவில்லை. நண்பர்கள் வீட்டுக்கெல்லாம் ·போன் பண்ணி விசாரிக்கலாமா? போலீஸில் சொல்லலாமா? பல கேள்விகளும் அழுகையின் ஊடே அலசப்பட்டன. எல்லா தோழிகள் வீட்டுக்கும் போய் பார்த்துவிடுவது என்று முடிவுக்கு வந்தபோது மணி
ஏழரையைத் தாண்டிவிட்டிருந்தது.

மறுபடி வண்டியை எடுத்துக்கொண்டு கேட்டைத் திறந்தபோது சைக்கிளுடன் ஒரு பெண் வாசலில் நின்று கொண்டிருந்தாள். அவளைப் பார்த்தவுடன் ஹஸீனா அடையாளம் கண்டுகொண்டுவிட்டாள்.

"வாம்மா ப்ரியா வா. அர்ஷியாவை..."

"அர்ஷியா எங்க வீட்லதான் இருக்கா ஆன்ட்டி. அதெ சொல்லத்தான் நா வந்தேன்" என்று சொல்லிவிட்டு அப்துல்காதிரைப் பார்த்தவுடன் மேற்கொண்டு ஏதோ சொல்லவந்தவள் சொல்லாமல் தயங்கினாள்.

"அர்ஷியாவுக்கு ஒன்னுமில்லையே" என்று பதறினார் அப்துல்காதிர்.

"ஒன்னுமில்லை அங்கிள்" என்றாள் ப்ரியா. அவள் அப்படிச் சொன்னதும்தான் அவரின் இதயப் படபடப்பு அடங்கியது.

"உள்ளவாம்மா" என்று ப்ரியாவை அழைத்துப்போனாள் ஹஸீனா.

கொஞ்ச நேரத்தில் வீட்டுக்குள்ளிருந்து இருவரும் திரும்பி வந்தனர்.

"என்ன விசயம்?" பரபரத்தார் அப்துல்காதிர்.

"இருங்க சொல்றேன். நீ பத்தரமா போவியாம்மா. இரு, நா அங்கிளெ கூடவரச் சொல்றேன்" என்றாள்.

"சரி ஆன்ட்டி" என்று சொல்லிவிட்டு சைக்கிளில் ஏறினாள் ப்ரியா.

"இங்கெ வாங்க" என்று கணவனை அழைத்தவள், "ஒன்னுமில்லெ, ஸ்கூல் வுடுற நேரத்துல வய்சுக்கு வந்துட்டாளாம். யாருட்டயும் சொல்லாம, ப்ரியாட்ட மட்டும் சொல்லி, ஒடம்பு சரியில்லேன்னு அவ வூட்டுக்கு போய்ட்டாளாம். ரொம்ப வய்த்த வலிச்சுச்சாம். ப்ரியா வூட்டுலதான் கவனிச்சு வச்சிருக்காங்க. அவங்க வூட்டுல ·போனும் இல்லெ, வூட்ல யாரும் ஆம்புளயும் இல்லெயாம். அதுனால பாவம் கனியாப் புள்ளெ ப்ரியாவெ சைக்கிள்லெ அவங்க அம்மா இங்கெ தனியா அனுப்பி இருக்காங்க. நீங்க சட்னு போயி, ப்ரியாவெ பத்தரமா வூட்லெ சேத்துட்டு, அர்ஷியாவெ கூட்டிட்டி வாங்க. நா அதுக்குல்ல செய்யவேண்டிய ஏற்பாட்ட செய்யுறேன். அல்லாஹ் பெரியவன்" என்று முடித்தாள்.

வெளியே வந்த அப்துல்காதிர் ப்ரியாவின் பெற்றோரை நினைத்துக் கொண்டார். மனைவிக்கு பதிலாக எதுவும் சொல்லத் தோன்றவில்லை. அவர் மனம் பூரா நன்றியால் நிறைந்திருந்தது.

"அல்ஹம்துலில்லாஹ்" என்று அப்துல் காதிரின் வாய் முணுமுணுத்தது.

பதிவுகள் ஏப்ரல் 2005 இதழ் 64

**16. தூரம் -நாகூர் ரூமி -**

மூன்றாவது நாளாக சிவநேசன் வீட்டுக்கு தூரமாகிப் போயிருந்தான். முதல் நாள் நடந்தது இன்னும் பிசுபிசுவென மனம் பூரா ஒட்டிக்கொண்டிருந்தது. ஆபீஸ¤க்குக் கிளம்புவதற்காக தயாராகிக் கொண்டிருந்தான். கொடியில் வெறுப்போடு அதற்கு முதல் நாள் கழட்டி எறியப்பட்ட குழாயை எடுத்து, லுங்கியைத் தூக்கி தன் வலது காலை அதன் வலது காலுக்குள் செலுத்த முயன்று கொண்டிருந்த போதுதான் அது நடந்தது.
அடி வயிற்றில் திடீரென்று ஒரு இடி. ஒன்றும் புரியவில்லை. அது அடிவயிறென்றே முதலில் அவன் நினைக்கவில்லை. வலது பக்க இடுப்புப் பகுதியில் வலிப்பதாகத்தான் நினைத்தான்.

"அம்மா" என்று அவனையறியாமல் கீழே உட்கார்ந்துவிட்டான். அப்பென் டிசைடிஸாக இருக்குமோ? உள்ளேயே வெடித்துவிட்டதோ? ஒன்றும் புரியவில்லை. ஆனால் ஏதோ வெடித்துச் சிதறிய உணர்வுதான் இருந்தது. இதுவரை அப்படிப்பட்ட ஒரு வலி அவனுக்கு வந்ததேயில்லை. வேற்று கிரகத்து வேதனயாகத் தெரிந்தது அது.

அப்படியே வயிற்றைப் பிடித்துக்கொண்டு குழாயை பாதி மாட்டிய காலுடன் தரையில் உட்கார்ந்து விட்டான்.

அவன் போட்ட 'அம்மா' ரொம்ப புதுசாகவும் சற்று ராட்சசத்தனமாகவும் இருந்ததை உள்ளுணர்வால் உணர்ந்து கொண்ட பார்வதி சமையல் கட்டிலிருந்து ஓடோடி வந்தாள்.

"என்னங்க? என்னாச்சு?" பதறினாள். எப்போதும் போல. அப்படி தரையில் வயிற்றைப் பிடித்துக் கொண்டு அவன் உட்கார்ந்து அவளும் பார்த்ததில்லை. கொஞ்சம் அதிர்ந்துதான் போனாள்.

"சனியனே என்னன்னு தெரியலடி. நீ வேறெ உயிரெ வாங்காதெ" அவன் வழக்கம்போல பதில் சொன்னான். வயிற்றுப் பகுதியைப் பிடித்துக்கொண்டே. அப்போதுதான் அவள் கவனித்தாள்.

அடிவயிற்றுப் பகுதியில் 'அந்த' இடத்தில் லுங்கி பூராவும் ரத்தக்கறையாக இருந்தது.

எய்ட்ஸ் வந்த புள்ளிராஜாவாக தன் கணவன் மாறிவிட்டானா என்ற சந்தேகத்துடன், "என்னங்க, இது என்னங்க?" என்று அவன் கவனத்தை அந்தப்பகுதிக்குத் திருப்பினாள்.

"எங்கெயாவது அடி பட்டுச்சா?"

அப்போதுதான் அவனும் பார்த்தான். அவனுக்கு ஒன்றும் புரியவில்லை.

"சனியனெ, தெரியலெ. நீ வேறெ. அடிபட்டுச்சா கிடிபட்டுச்சான்னு. அதெல்லாம் ஒன்னுமில்ல. இது என்னன்னு பாரு"

அவள் அவனை பாத்ரூமுக்கு அழைத்துச் சென்று பார்த்தாள்.

அதுதான்.

வெள்ளை வெள்ளையாக, திப்பி திப்பியாக, ரத்தக் கட்டிகளுடன் இருந்தது. உறுதியாகிவிட்டது. இருவருக்குமே ஒன்றும் புரியவில்லை. வியப்பும் மௌனமும் இருவர் கண்களிலும் முகத்திலும் வந்து குடியேறிக்கொண்டன. சிவநேசனுக்கு வியர்த்துக் கொட்டியது. ஆள்மாறாட்டம் மாதிரி பால் மாறாட்டமா? பம்பாய்க்குப் போகாமல், ஊசி ஏதும் போடாமல், அறுவை ஏதும் செய்யாமல் என்ன இது? இது உண்மைதானா என்று சந்தேகமாக இருந்தது. இது சாத்தியமா?! பரமஹம்சரைத்தான் கேட்க வேண்டும். அவரும் இப்போது இல்லை. ஒரே குருதியாகவும் குழப்பமாகவும் குத்தலாகவும் இருந்தது.

பார்வதி அறையைச் சாத்தி வைத்தாள். பிள்ளைகள் பார்க்காதவாறு செய்தாள். என்றுமில்லாமல் திடீரென்று அப்பா ஆபீஸ¤க்குப் போகாமல் 'உட்கார்ந்து'விட்டதன் ரகசியம் புரியாமல் வளர்ந்த பிள்ளைகள் குழம்பினர்.

"மெடிகல் லீவு சொல்லிடவாங்க?" மெதுவாகக் கேட்டாள்.

"என்ன எழவு லீவாவது சந்தானத்துக்கு ·போன் பண்ணி சொல்லிடு"

தற்காலிகமாக ஒரு துணியைக் கொடுத்து வைக்கச் சொல்லியிருந்தாள். பாட்டி வைத்தியம். அவனும் வேறுவழியின்றி அவள் தொலைபேசச் சென்ற இடைவெளியில் அதை வைத்துக்கொண்டான். அவனுக்கே வெட்கமாக இருந்தது. சனியன், இதை வைத்துக்கொண்டு எப்படி வேலை செய்ய முடியும்? ஒன்றும் புரியவில்லை அவனுக்கு. பார்வதி வந்து பார்த்துவிட்டு ஒழுங்காக வைத்துவிட்டாள்.

ரொம்ப களைப்பாக வந்தது. கால்களெல்லாம் வலியெடுத்தன. யாரோ அடித்துப் போட்டமாதிரி இருந்தது. அனிச்சையாக தன் கால்களைத் தானே பிடித்து விட்டுக்கொண்டான். மஸாஜ் செய்வது மாதிரி. அப்போது அவனுக்கு பார்வதியின் நினைவு வந்தது.
அவளும் இப்படித்தான் அந்த ஏழு நாட்களும் செய்து கொண்டிருப்பாள்.

"சனியனே எப்பப்பாரு ஒரே மஸாஜ்தானா? ஊர் ஒலஹத்துல யாருக்கும் வர்றதில்லையா? போய் காப்பியெப் போடு"

பார்வதி ஒன்றும் சொல்வதில்லை.

திடீரென்று மறுபடியும் இடி இடித்தது.

"அம்மா" என்று மறுபடியும் வயிற்றைப் பிடித்துக்கொண்டான். படுக்கையில் புரண்டான். முடியவில்லை. வலி உயிர் போய்விடும் போலிருந்தது. பார்வதி மறுபடி வந்தபோதும் அவன் புரண்டு கொண்டிருந்தான். ஆனால் அவள் முன்னெச்சரிக்கையாக மாத்திரைகள் கொண்டுவந்திருந்தாள்.

"அம்மா வலிக்கிதே" மறுபடி கத்தினான். விட்டு விட்டு வலித்தது.

"இதெப் போட்டுக்குங்க. கொஞ்ச நேரத்துல வலி கொறையும்" என்று சொல்லி ஒரு அனுபவமிக்க கைனகாலஜிஸ்ட்டின் தோரணையில் ஒரு காப்ஸ¥லையும் தண்ணீர் டம்ளரையும் கொடுத்தாள்.

ஒன்றும் சொல்லாமல் வாங்கிக் கொண்டான். அந்த நாட்களில் பார்வதியின் வேதனையைக் குறைப்பதற்காக டாக்டர் வசந்தா 'ப்ரிஸ்க்ரைப்' பண்ணிய ஸ்பாஸ்மோ ப்ராக்ஸிவான் காப்ஸ்யூல்தான். சிவப்பு காப்ஸ்யூல். அதுவும் சிவப்பாகத்தானா இருக்க வேண்டும்? ஒன்றும் சொல்லாமல் போட்டுக் கொண்டான். எத்தனையோ முறை அவள் சொல்லிவிட்டும் அவன் வாங்க மறந்துபோகும் காப்ஸ்யூல்.

மறுநாளும் ஆபீஸ¤க்குப் போகமுடியவில்லை. வேதனை அதிகரித்திருந்தது. ரத்தப் போக்கும் அதிகமாக இருந்தது. அதோடு சில நிமிஷங்கள் இருந்தது வலி இப்போது சில மணி நேரங்கள் என மாறிவிட்டிருந்தது. இன்னும் ஒரு வாரத்தில் தான் பார்வதியாகவும் பார்வதி மீசையுடன் கூடிய தானாகவும் மாறப்போகிறோம் என்பது அவனுக்கு உறுதியாகத் தெரிந்துவிட்டது. ஒருவகையான ஆச்சரியமும் எதிர்பார்ப்பும்கூட அவனிடம் வளர ஆரம்பித்தது.

மூன்றாவது நாள் அவனுக்கு ஓரளவு பழகிப் போயிருந்தது. அந்த மாத்திரை வேலை செய்யத்தான் செய்தது. வலி குறைந்த மாதிரி இருந்தது. ஐந்தாம் நாள்தான் ரத்தப்போக்கு குறைந்தது இடியுடன் கூடிய மழை விட்டு தூரல் ஆரம்பித்திருந்தது.

அடிக்கடி யாருமில்லாதபோது லுங்கியை உயர்த்திப் பார்த்துக்கொண்டான். எல்லாம் எப்போதும்போல சரியாகத்தான் இருந்தது. மழையையும் அடிவயிற்று இடியையும் தவிர.

அது ஒன்றுதான் புதுசு. அவனுக்கு ஆச்சரியம் கூடியது. சரி என்னதான் ஆகிறது பார்ப்போமே என்று ஆறாம் நாள் குளிர் விட்டுப் போனது.

இதில் கணவன் மனைவி இரண்டு பேருக்கும் ஒரே ஒரு கேள்விதான் இருந்தது. இது தொடருமா? அப்படித் தொடர்ந்தால் அதன் விளைவுகளைப் பற்றிக் கற்பனைகூட செய்ய முடியவில்லை. எப்படி இதைத்தீர்ப்பது? டாக்டரிடம் காண்பிப்பதா? அதன் பிறகு தொலைக்காட்சிகள், தினசரிகள், வாராந்தரிகளில் ·போட்டோவுடன் கட்டுரை வரும். இந்தியாடுடே தமிழின் அட்டைப்படத்தை அலங்கரிக்க வேண்டிவரும். "ஒன்பதாகிப்போன உலகின் எட்டாவது அதிசயம்" என்று தலைப்பு போடுவார்கள். அதன் பிறகு நிலைமை என்னவாகும்? எப்படி ஆபீஸ் போவது? ஆபீஸை விடு. எப்படி வெளியில் போவது? எப்படி குழந்தைகளை சந்திப்பது தினமும்? சொந்தக்காரர்களை? நண்பர்களை?

எல்லாக் கேள்விகளுக்கும் பதில் ஒன்றாகத்தான் இருந்தது. இந்த நிலையில் தொடர்ந்து வாழ்க்கையைத் தொடர முடியாது என்பது புரிந்தது. ஒரு வாரம் கழித்தும் மழை தொடர்ந்தால் அல்லது அடுத்த மாதமும் இதே நிலை ஏற்பட்டால் என்ன செய்வது என்று யோசித்து யோசித்துப் பார்த்தான். தற்கொலை செய்துகொள்வதுதான் வழி என்பதாகத் தோன்றியது.

"என்ன சனியன் இது?" என்று தன்மீதே ஒரு வெறுப்பு தோன்றியது சிவநேசனுக்கு. அந்த 'சனியன்' அவனோடு கூடப்பிறந்த செல்லச் சனியன். அவனை எப்போதுமே அது விட்டுப்பிரிவதில்லை.

எல்லாக் கேள்விகளையும் அழிப்பதாக எட்டாவது நாள் இருந்தது. மழை சுத்தமாக நின்று நிலம் குளிர்ந்து போனது.

குளித்துவிட்டு அங்கிருந்த கண்ணாடி முன் நின்று தன்னையே பரிசோதித்துப் பார்த்துக் கொண்டான். மறுபடியும் சுத்தமான ஆண்பிள்ளையாகிவிட்டதாகத்தான் தோன்றியது. 'அந்த ஏழு நாட்க'ளுக்கான எந்த அடையாளமும் இல்லை. சந்தோஷமாக இருந்தது. பயமாகவும் இருந்தது. வழக்கம் போல ஆபீஸ¤க்குக் கிளம்பினான். வருவது வரட்டும். ஆனால் தொடர்ந்து வந்த நாட்கள் அவன் பயம் தேவையற்றது என்பதை அவனுக்குப் புரியவைத்தது.

பார்வதி அவனுக்குக் காபி கொடுக்கும்போதுதான் கவனித்தான்.

"ஒடம்பு சரியில்லாயா பாரா?"

பார்வதியின் புருவங்கள் அகன்று மேல் நோக்கி வளைந்தன. அவன் 'பாரா'ன்னு அவளை

அழைத்து எத்தனை வருஷங்களாகிவிட்டது! கல்யாணமான புதிதில் அழைத்தது! மறுபடியும் அதே கரிசனம், அதே தொனியுடன் பாரா!

"என்ன பாரா, பதிலையே காணோம்?"

"ஆமாங்க. இன்னிக்கிதான்..." சந்தோஷத்தால் அவளால் தொடர்ந்து சொல்லி முடிக்கக்கூட முடியவில்லை.

"ரெஸ்ட் எடுத்துக்க. ஒன்னும் சமைக்க வேணாம். நா வரும்போது ஒனக்கு ஸ்பாஸ்மோ வாங்கி வந்துர்றேன்"

அவள் கன்னத்தை தடவிவிட்டு கெஞ்சுவது போலச் சொல்லிவிட்டுப் போனான்.

ruminagore@yahoo.com
பதிவுகள் பெப்ருவரி 2004 இதழ் 50

## 17. ஒரு கதையின் ஸ்டோரி - ரெ.கார்த்திகேசு -

ஆகஸ்ட் மாதத்தில் ஓலைச்சுவடி இதழில் அந்த அதிசயம் நிகழ்ந்தது. ஆனால் அதன் தேதியைத் துல்லிதமாகச் சொல்ல முடியவில்லை. ஆகஸ்டின் முற்பகுதியாகத்தான் இருக்க வேண்டும். அருமையான அச்சு வார்ப்புள்ள அந்த இதழில் அந்தக்கதை தோற்றம் பெற்றிருந்தது. மிகுந்த உயிர்த் துடிப்புடன் இருந்தது அந்தக் கதை. அதன் நடை சுண்டி வசீகரிக்கும் அழகு. அந்தக் கதையை முதன் முதலில் படித்தவர்கள் அது ஒரு பெரும் மாயத் தோற்றம் என்றும் அதன் பின் பெரும் மர்மங்கள் அடங்கியிருப்பதாகவும் நம்பினார்கள். மிகவும் படித்தவர்களும் இலக்கிய ரசிகர்களாக உள்ளவர்களையுமே அந்தக் கதை கவர்ந்தது. அந்தக் கதையைக் கண்டு அதிர்ச்சியடைந்த சிலர் தங்கள் காலண்டர்களைத் திருப்பிப் பார்த்துவிட்டு அந்தக் கதை வெளிப்படுவதற்கு இது சிறந்த மாதமே என்றார்கள். இந்த மாதத்தில்தான் பல காலனித்துவ நாடுகள் சுதந்திரம் அடைந்ததெனவும், அதுவும் பல சுதந்திரங்கள் நள்ளிரவில் பெறப்பட்டன என்றும் அதற்கும் இதற்கும் மிக நெருக்கமான தொடர்புகள் உள்ளன என்றும் அவர்கள் தங்கள் இளைய தலைமுறையினருக்கும் வாசக சகாக்களுக்கும் தெரிவித்துக் கொண்டார்கள். சிலர் அந்தக் கதையைப் படித்து கண்கள் கலங்கினார்கள். இப்படியும் ஒரு கதை இருக்க முடியுமா என அழுது குரல் கம்மிப் பிறருக்குச் சொன்னார்கள். அவர்கள் கண்கள் கதையில் நிலைகுத்தி இருந்ததோடு படபடக்கும் மார்பை வலது கைகளினால் அழுத்திப் பிடித்துக் கொண்டிருந்தார்கள்.

நாளுக்கு நாள் அதைப் படிப்பவர்கள் அதிகரித்துக் கொண்டே இருந்தார்கள். அடைபட்ட கால்வாயினால் வெள்ளம் வீதியில் பெருக்கெடுப்பதுபோல் இண்டு இடுக்கிலுள்ள வாசகர் குழாத்திடையே செய்தி பரவியது. வாசகர்கள் பதறியடித்துக் கொண்டு ஓலைச்சுவடி இதழை வாங்கிப் பார்க்க ஓடினார்கள். அவர்கள் ஓடிய வேகம் சாலை விபத்தைக் காண ஓடுபவர்களின் வேகத்தை ஒட்டியதாக இருந்தது. மோட்டார் சைக்கிள்களிலும் கார்களிலும் விமர்சகர்களும் இலக்கிய இதழ் துணையாசிரியர்களும் பெரும் பாய்ச்சலாக வந்துகொண்டிருந்தனர். எப்படி அவர்களுக்கு அதற்குள் வாசம் எட்டியது எனத் தெரியவில்லை.

"ஐயா, கதையைப் படிப்பதை நிறுத்திவிட்டுக் கொஞ்சம் எங்கள் கேள்விகளுக்குப் பதில் சொல்லுங்கள்" என்று வாசகர்களைப் பார்த்து விமர்சகர்கள் கேட்டுக் கொண்டிருந்தனர். இந்தக் கதையை முதன் முதலாகப் படிக்கக் கொடுத்துவைத்தவர் யார் என்ற தேடலும் கிளம்பிற்று. கண்கள் கலங்கி உடல் வியர்த்திருந்த ஒரு தீவிர வாசகர் அவர்கள் கேள்விகளுக்கு பதில் சொல்லுகையில் அவரது சொற்களில் தானியங்கியாகக் கற்பனையின் ஜிகினாத் துகள்களும் உயர்ந்த செண்ட் வாசனையும் வரத் தொடங்கின. தன்னால் இவ்வாறு கற்பனா வளத்துடன் வருணிக்க முடிவதை எண்ணி அவருக்குப் பெருமிதம் பொங்கிற்று. சொல்தடுமாற்றத்துடன் மட்டுமே பேச முடிந்த அந்த இளம்

வாசகர் இதனால் சிறுவயது முதலே தனக்கு இருந்து வந்த பேச்சுத் தயக்கத்தை மறந்தவராகப் பேசினார். பேச்சு அவருக்குச் சரளமாக வர ஆரம்பித்தது. அவரது பேச்சில் தீர்மானமும் நிச்சயமும் தன்னம்பிக்கையும் இருந்தன.

அவருக்கும் ஆச்சரியமாகத்தான் இருந்தது. ஏன் இத்தனை பேர் இப்படி ஆர்வமாகக் கேட்கிறார்கள்? அவர்கள் படிக்க முடிந்த விடயம்தானே? அதையும் நான் ஏன் விவரித்துச் சொல்ல வேண்டியிருக்கிறது? நான் சொல்வது அத்தனையும் அடுத்த மாதம் எல்லா இலக்கிய இதழ்களிலும் வரப் போகிறதா?

விமர்சகர்கள் அவர்களின் தொழில் தந்திரப்படி அரும்பு விட்டுக்கொண்டிருந்த வாசகரின் கற்பனைகளை நுட்பமான கேள்விகள் வழியாக இதழ் மலர்ச் செய்துகொண்டிருந்தனர். அவர்கள் உருவாக்க விரும்பும் கருத்துக்களை அவர் வாய்வழியே வரவழைக்க முடிந்துவிட்டது அவர்களுக்கு வெற்றிதானே! ஒரு பிரபல இலக்கியப் பத்திரிகையின், பிடரி முடிவளர்த்திருந்த ஒரு இளம் விமர்சகர் - அவரை ஏன் சக விமர்சகர்கள் 'கூகை' என அழைக்கிறார்கள் என்பது தெரியவில்லை - ஆங்கிலத்தில் கேட்டார்: "ஐயா, நீங்கள் முதன்முறையாக இதைப் படித்தபோதும் இதன் கரு இப்படித்தான் மறைந்திருந்ததா?" திடீரென வாசகருக்கும் தனக்குத் தெரிந்த ஆங்கில மொழித் திறனைக் காட்ட வேண்டும் என்னும் ஆவல் உண்டாயிற்று. அவர் தன் தொண்டையைக் கனைத்தபடி ஆங்கிலத்திலேயே பதில் சொன்னார்: "Yes, it is as opaque as a deep coat of tar." இந்த பதிலில் விமர்சகர்கள் மிகுந்த மகிழ்ச்சி அடைந்தனர். அவர் ஆங்கிலத்தில் பேசியது நம்பகத் தன்மைக்கு அதிகப்படியான ஒரு சான்றாகவும் அவர்களுக்குத் தோன்றியது.

அந்தக் கதையின் உச்சம் ஒரு முழுமையான மறைவுதான் என்பது எல்லா மனங்களிலும் பட்டது. மிகுந்த விட்டம் கொண்ட ஒரு இதழில் அக்கதை தன் மொழியை மட்டும் வெளிப்படையாகக் காட்டி நின்றது. சிரியரின் மொழித்திறன் அந்த அளவுக்குத்தான் அவருக்குச் சுதந்திரம் அளித்திருந்தது போலிருக்கிறது.

இறைவா, அந்த மறைவு, படைப்புத் தன் சிகரத்தைக் கண்ட வெற்றியில் கெக்கலித்துக் கொண்டிருக்கிறது. அதன் சிறப்பு அதன் கெட்டியும் திடத்தன்மையும்தான். புரிதல் என்னும் வெளிச்சம் ஊடுருவ முடியாத கருமைதான் அதை ஸ்திரப்படுத்தியிருக்கிறது. பாம்புகளின் கண்களின் கருமையையொத்த ஓர் உண்மையை முற்றாக மறைத்துக் கொண்டு அந்தக் கதை நெருங்கத் துடித்துக் கொண்டிருக்கும் புரிதலை அண்ட விடாமல் காத்தது.

கதை வெளிவந்த முதல் சில நாட்களிலேயே ஓலைச்சுவடிப் பிரதிக்குக் குவியத் தொடங்கிய கூட்டம் தடித்துக் கொண்டே வந்தது. அதன் அடர்த்தியைச் சமாளிக்க முடியாமல் அனைவரையும் கொடுக்குப் பிடித்து நிற்க வைக்கும் முயற்சியும் தோற்றது. அலையலையாகப் பிரதிகள் லாரிகளில் வந்து குவிந்தும் பலர் பொறுமை காக்க

முடியாமல் பிடுங்கிக் கொண்டு ஓடினர். பல பிரதிகள் இழுபறியில் கசங்கிக் கிழிந்தன.

புத்தகக் கடைகளுக்குக் காவல் துறையினரின் உதவி தேவைப்பட்டது. எனினும் அவர்களின் வாகனங்கள் கூட்டத்தை நெருங்க முடியாமல் தெருவிலேயே நிறுத்தி வைக்கப் பட்டன. திரண்டு வந்த கூட்டம் காவல்துறையினரை மதிக்காமல் தள்ளிக் கொண்டு முன்னேறிக் கொண்டே இருந்தது. விமர்சகர்கள் தங்கள் குறிப்புக்களில் இந்தச் சூழல்களையும் குறித்துக் கொண்டனர். விமர்சனம் என்பது உணர்ச்சி பொங்காது எழுதப்படவேண்டும் என்னும் விதியை அறிந்தவர்களாக இருந்தாலும் இந்தச் சூழலின் உணர்வுகள் அவர்களைத் தாக்குவதை அவர்களின் நாளைய எழுத்துப் பிரதிபலிக்கும் என்றே தோன்றியது.

வாசகர் கூட்டம் என்பது விரிவடைந்துகொண்டே போனது. மாணவர்கள், ஜேப்படித் திருடர்கள், சிரியர்கள், திரைப்படத் துறையினர், எத்துவாளிகள், அரசியல்வாதிகள், குண்டர்கள், சாமியார்கள், வியாபாரிகள், முடிச்சுமாறிகள், எழுத்தாளர்கள், வேசிகள், ஓவியர்கள், தொழிலாளர்கள், மாணவிகள், சகல ஊடகங்களையும் சார்ந்த பணியாளர்கள்... யார்தான் அங்கில்லை? அரசாங்கச் சேவகர்களும் கோப்புகளுக்குச் சிவப்பு நாடா கட்டி வைத்துவிட்டு விரைந்து வரத் தொடங்கினர்.

பார்க்கப் பார்க்க அந்தக் கதை ஒரு பிரமைதானோ என்ற சந்தேகம் பலர் மனங்களிலும் முளைத்து வலுப்பட்டு வந்தது. திடத்தன்மை கொண்ட நீரும், இருளும், கரு மேகங்களும் முடை நாற்றமுடைய காற்றும் கல்லும் இணைந்து ரசாயன மாற்றத்தால் இந்தக் கதை உருவாக்கப்பட்டதோ என்று அவர்கள் சந்தேகம் கொண்டனர். இந்தச் சந்தேகம் அடக்கி வைத்துக் கொள்ள முடியாத மன அரிப்பானபோது இவை பற்றிய பேச்சுக்கள் தொடங்கின. இந்தப் பேச்சு பரவத் தொடங்கியதும் அவர்கள் சொன்னவற்றை ஏற்றுக் கொள்ளாதவர்கள் அவர்களுக்குக் கத்தி பதில் சொல்லத் தொடங்கினர். ஒரு காகிதத்தின் மேல் இத்தனைக் கெட்டியான கதையை உருவாக்க முடியுமா என அவர்கள் கேட்டனர். ஆம்! அந்தக் கதையின் கனம் அவ்வப்போதாவது கைகளில் தாங்க முடியாத அளவுக்குக் கனக்கத்தான் செய்தது. தொடர்ந்து கைகளில் தாங்கியிருந்தால் அது கனம் அதிகரித்தும் குறைந்தும் துடிப்பதும் உணரப் பட்டது. அதன் கனபரிமாணம் பற்றி வாதங்கள் வெடித்தன. கத்துதலும் சலசலப்பும் ஏற்பட்டன. அந்தச் சலசலப்பு கைகலப்பாக மாறலாம் என்ற செய்தி வெட்டவெளியில் அச்சுறுத்துவதுபோலப் பரவிற்று.

ஆனால் அந்தக் கனத்துக்கும் அதில் ஒளிந்துள்ள மறைவுண்மைக்கும் யாராலும் விளக்கம் கொடுக்க முடியவில்லை. உளவியல் அறிஅர் ஒருவர் தான் சொல்வது ஒரு ஊகம்தான் என்னும் முன்னுரையுடன் தன் மாணவர்களுக்கு விளக்கம் தந்தார். இப்படி மறைந்துள்ள ஒரு பொருளுக்கு வாசகர்கள் இப்படி சைப்படுவது ஏன் என்பது அந்தக் கதாசிரியருக்கே ஒரு புரியாத புதிராக இருக்கலாம். இப்படி ஒரு கூட்டம் மறை பொருளை

எண்ணிக் கலவரப் படுவது சிரியருக்கு மிகப் பெரிய கேள்வியாகி அது பூதாகரமாக வளர்ந்திருக்கலாம். இதை மனதில் கொண்டு இந்த மக்களுக்கு ஒரு மறை பொருளைத் தெரிந்து கொள்ளும் சை இப்போதுதான் முதன் முறையாகத் தோன்றியிருக்கிறது என்ற தவறான எண்ணத்திற்கு அவர் வரலாம். அந்த ஆசிரியர் மனதில் என்னென்ன எண்ணங்கள் ஓடுகின்றன என்பதை யாராலும் துல்லியமாகச் சொல்ல முடியாது என்று தன் பேச்சை முடித்தார் பேராசிரியர்.

இலக்கிய இதழ்கள் அன்றி நாளிதழ்களும் சினிமா இதழ்களும் பொழுது போக்கு இதழ்களும் காட்டிய ஆர்வத்தில் அந்த அலுவலகங்களில் பதற்றம் கூடிக்கொண்டே போயிற்று. தொலைபேசிகள் இடைவிடாது இயங்கிக் கொண்டிருந்தன. சகல இதழ்களின் நிருபர்களும் குறைந்தது நான்கு பக்கத்திற்கு இதைப்பற்றிய ஸ்டோரி எழுதுமாறு பணிக்கப்பட்டார்கள். அவர்கள் அனைவரும் கதையைப் பத்திபத்தியாகப் பிரித்து அவற்றுள் ஒளிந்துள்ள பொருளுக்கு சமூக/ அறிவியல்/ உடற்கூறு/ ஜோதிட/ இலக்கிய அறிவுறுத்தல்கள் என்ன என்பதைப் பின்னிப் பின்னி எழுதிக் கொண்டிருந்தனர். இதை சிரியர்கள் படித்து ஓகே சொல்லவேண்டும். ரசம் ஊறியது காணாதென்று சிரியர்களுக்குத் தோன்றிவிட்டால் மீண்டும் முழுமையாக எழுதிவிடும்படி கிவிடும்.

ஆசிரியர்களுக்கு இதுபோன்ற ஒரு நாள் விடிந்ததே இல்லை. அவர்களுடைய மூளைகள் கொதித்துக் கொண்டிருந்தன. தமிழ் இலக்கிய வரலாற்றில் என்றும் நிகழ்ந்திராத அதிசயம் இன்று தேடி வந்திருக்கிறது. அதனைப் படிக்கக் கொடுத்து வைத்திருக்கிறார்கள் தமிழ் மக்கள். நாளை உலக இதழ்கள் அனைத்திலும் இக்கதை வெளிவரும். அதனைச் சிறப்பாகப் பயன்படுத்திக் கொள்ளுவது ஒரு சிரியனின் திறனைப் பொறுத்தது; கற்பனையைப் பொறுத்தது. வாய்ப்பு வாசலில் வந்து நிற்கிறது.

மறைப்பு பெரிய விடயமில்லை. ஆனால் அதன் கனமும் இருண்மையும். அந்த அபூர்வ நிலைமைதான் ரத்தத்தைச் சூடேற்றுகின்றது. ஆக அதுதான் ஸ்டோரியின் மையம். இதில் விமர்சகர்களுக்குக் கருத்து வேற்றுமை இல்லை. எப்போது மறைவு மையம் கொண்டுவிட்டதோ அப்போதே அந்த ஸ்டோரிக்குக் கருத்துப் படிமம் எழுத்தைவிட முக்கியமாகிவிடுகிறது. ஆனால் இந்தப் பார்வையில் விமர்சகர்களுக்குக் கருத்து வேற்றுமை இருந்தது. கருத்துப் படிமம் முக்கியம் என்றாலும் எழுத்துத்தான் அதிக ரசத்தை உறிஞ்சும் திறன்கொண்டது என்று அவர்கள் அன்றாடம் சந்திக்கும் பாரில் விவேகமான சில விமர்சகர்கள் வாதிட்டிருக்கிறார்கள். வாழ்க்கையின் சகல மன இயற்கைகளையும் சகல மனப் பிறழ்வுகளையும் பச்சையாகச் சித்திரிக்கும் மாத நாவல்களை விடவும் இடுக்குகளில் கற்பனைத் திறன் கொழிக்கும் தட்டையான எழுத்துக்கள் ஏன் அதிக விமர்சனப் பாராட்டுக்கள் பெறுகின்றன என்று அவர்கள் கேட்டதற்கு யாராலும் பதில் சொல்ல முடியவில்லை.

படைப்பைப் படித்த பலர் - முக்கியமாக இளைஞர்கள் - படைப்பாளரை நோக்கிப் பல கேள்விகளைக் கேட்டார்கள். அவருக்குப் புரியும் மொழி எதுவாக இருப்பினும் அந்தப் பெருங் கூட்டத்தில் அதையும் கற்றுத் தேர்ந்தவர்கள் சிலரேனும் இருந்ததில் ச்சரியப்பட என்ன இருக்கிறது? ஆனால் அந்தப் படைப்பாளர் எந்தக் கேள்விக்கும் பதில் சொல்லாமலும் முகத்தில் எளிய பாவ பேதங்களைக் கூடக் காட்டாமலும் இருந்தார். அன்பு செய்வோரை அலட்சியம் செய்வதாகக் கூட்டத்தினர் புரிந்து கொண்டதைத் தவறு என்று எப்படிச் சொல்ல முடியும்? பொறுமையிழந்த கூட்டத்தினர் முரட்டுத் தனமான கேள்விகளைக் கேட்கத் தொடங்கினர். சொல்லவோ எழுதவோ இயலாத மிக பாசமான சொற்களில் அவரைக் கேலி செய்யவும் சென்சிட்டிவான அவருடைய கற்பனா மனத்தைப் புண்படுத்தவும் தொடங்கிவிட்டார்கள். பாசச் சொற்களை மேலும் தோண்டி பாசமாக்குவதில் கற்பனைத்திறன் கொண்டவர்களிடையே ஒரு போட்டாபோட்டி ஏற்பட்டுவிட்டதை துரதிருஷ்டம் என்றுதான் சொல்லவேண்டும்.

கூகையின் அலுவலகத்தில் நிருபர் தொகுத்துத் தந்த இந்தக் கேள்விகளைக் கூகை பார்வையிட்டுக்கொண்டிருந்தார். ஆணித்தரமான கேள்விகள் என்றாலும் அவற்றை அப்படியே வெளியிட்டால் காகிதம் அழுகத் தொடங்கிவிடும் என்று தோன்றியதால் அவற்றை சிரியரிடம் கொண்டு சென்றார். ஆசிரியர் புரட்டிப்பார்த்துவிட்டு இவற்றை நாம் கவனமாகக் கையாள வேண்டும் என்றார். திடீரென்று தன் நினைவுக்கு வந்ததுபோல் அவர் ஏன் அந்தக் கதை இன்னும் தன் மேஜைக்கு வந்து சேரவில்லையென்று கத்தத் தொடங்கினார்.

கூகை தன் மனதில் உள்ளதைச் சொன்னார். இந்தக் கதையில் சில இடைப்பட்டவர்களின் குறுக்கீடு இருக்கக் கூடும் என்ற தனது சந்தேகம் அடங்குவதாக இல்லை என்றார். இந்தக் கதையைப் பற்றிப் பெண்ணிய விமர்சகர்கள் எவரும் ஒன்றும் சொல்லவில்லை என்று சொன்ன கூகையின் முகம் இறுகிப் போயிருந்தது. விடயத்தை விசாரித்துத் தெரிந்து கொள்ளவேண்டியதுதானே என்றார் ஆசிரியர். தொனி குற்றம் சாட்டுவது போல இருந்தது. "எனக்கு மேல் தகவல் தெரிந்தால் சொல்லுகிறேன் சார்!" என்று அவர் வெளியே வந்தார்.

கூகை மறுபடியும் தன் கையில் இருந்த பிரதியை உற்றுப் பார்த்தார். அதற்குள் அலுவலகம் முழுக்க அதைப் பற்றிச் சலசலவெனப் பேச்சுக்கள் பரவின. மற்றவர்களை அவர் கலந்தாலோசித்தார். அவர்கள் பிரதிகளிலும் அப்படித்தான் இருப்பதாகச் சொன்னார்கள். கையிருப்புத் தீர்ந்து போனதால் ஓலைச்சுவடி புதிய எடிசன் போட்டிருப்பதால் அதில் இந்த விஅயம் சரி செய்யப் பட்டிருக்கலாம் என சிலர் மீண்டும் தங்கள் மோட்டார் சைக்கிள்களை எடுத்துக் கொண்டு புதிய பதிப்பு வாங்க கடைகளுக்கு விரைந்தனர்.

அப்போதுதான் உக்கிரமாக மழை பெய்யத் தொடங்கியிருந்தது. ஆசிரியருக்கு விஅயம் எட்டியவுடன் "ஏன் மழையில் போக வேண்டும்? என் காரைக் கொடுத்திருப்பேனே!" என்றார்.

கூகை தெருவைப் பார்த்தபோது இப்படித் தொடர்ந்து பெய்தால் நெடுஞ்சாலையில் கூடத் தோணியில்தான் போக வேண்டும் என நினைத்துக் கொண்டார். செல்போன் வழியாகத் தன் அலுவலக நண்பர்களைத் தொடர்பு கொள்ள முயன்றார். கிடைக்கவில்லை. சிறிது நேரத்தில் மின்சாரமும் நின்றுவிட்டது. தம்மைச் சிறிது சுவாசப் படுத்திக் கொள்ள அப்படியே ஏணிப்படியில் உட்கார்ந்து விட்டார்.

சிறிது நேர இடைவெளிக்குப் பின் அவரின் செல்போன் கிணுகிணுத்தது. பெரிய ஏமாற்றம் சார் என்று சொன்னார்கள். என்னவென்று கேட்டார். புதிய எடிசன் வந்துவிட்டது. ஆனால் அதில் இந்தக் கதையைக் காணோம் என்று சொன்னார்கள்.

"ஏன், ஏன்?" என்று கத்தினார் கூகை. "தெரியாது சார்! பக்கங்களெல்லாம் சரியாகத்தான் இருக்கின்றன. ஆனால் அந்தக் கதை இடம் பெற்ற 6 பக்கங்களிலும் ஒரு முலையில்லாத சிலையின் கோட்டுச் சித்திரம் மட்டும் திரும்பத் திரும்ப அச்சிடப்பட்டுள்ளது. எழுத்துக்களையே காணோம்! என்றனர். கூகை மீண்டும் கேள்விகள் கேட்க முயன்றபோது தொடர்பு அறுந்துவிட்டது; அல்லது முறிக்கப் பட்டிருக்கலாம் எனவும் அவருக்குச் சந்தேகம் தட்டியது.

கூகை ஏணிப்படிக் கைப்பிடியில் தன் கைகளை வழுக்கியவாறே இறங்கி முதல் தளத்துக்கு வந்தபோது ஆசிரியரின் கத்தல் கேட்டது. கூகை மெதுவாக அவர் அறைக்குள் நுழைந்தார். அடுத்த பதிப்பில் கதை இல்லாதது பற்றியும் கோட்டுச் சித்திரம் மட்டும் இருப்பது பற்றியும் சொன்னார். "பெரிய மர்மமாக இருக்கிறது சார்!" என்றார்.

"இதில் என்ன பெரிய மர்மம்? புதிய எடிசனில் கதை இல்லாதது மர்மமா?" என்றார்.

"இல்லை!"

"கோட்டுச் சித்திரத்தில் பெண்ணுக்கு முலையில்லாதது மர்மமா?"

"இல்லை"

"அப்புறம்?"

"பெண்ணும் முலையும் மையமாக உள்ள இந்தக் கதை முழுவதிலும் ஒரு பெண் கூட

**18.: நீர்மாயம்! - தேவகாந்தன் -**

மேலெல்லாம் கொதித்துக் கொண்டிருப்பதுபோல் இருந்தது. இரவு பெரும்பொழுதும் தூக்கமற்றதாய்க் கழிந்திருந்ததில் விழித்தவளின் இமைகள் கனத்து, கண்களும் எரிச்சலாகியிருந்தன. இரவு எழுச்சி கண்டிருந்த உணர்ச்சி வேறு உள்கனன்றுகொண்டிருந்தது. அடக்கப்படாத் தாபம் எரிச்சலாய், கோபமாய் அவளில் பொங்கியது. அடைந்த மனவலி முக்கியம். அதை வெளிப்படுத்த முடியாததில் அழுகைதான் வரப்பார்த்தது.

சிந்தியா படுத்திருந்த சோபாவிலிருந்து தலையை நிமிர்த்தினாள்.

ஜன்னலூடாக வெளிச்சமடித்துக்கொண்டிருந்தது.

நேரம் என்னவாகவிருக்கும்? பத்து மணிக்கு மேலேயாய் இருக்கும் என வெளிச்சத்தில் ஊகம் கொண்டாள். தலையை இன்னும் கொஞ்சம் திருப்பி சுவர் மணிக்கூட்டைப் பார்ப்பதற்குமான அலுப்பு.

மேலே மாடியில் நடமாட்டத்தின், உடம்பசைவின் மரத்தள அதிர்வினோசை எழுகிறதா என்று கிரகிக்கப் பார்த்தாள். இல்லை, எந்த அசைவின் அறிகுறியும் இல்லை. கணேஷ் அந்தநேரமளவுக்குக்கூட எழுந்திருக்கக்;கூடிய நிலையில் இரவு வந்திருக்கவில்லைத்தான்.

இரவோ பகலோ, காலையோ மாலையோ வேலை செய்வதினூடாகத்தான் புதிதாக மோட்கேஜில் வாங்கிய அந்தப் பிரமாண்டமான வீட்டின் தவணைத் தொகையைச் செலுத்திக்கொண்டிருக்க முடிகிறது. மாதம் இரண்டாயிரத்து நானூறு டொலர் சாதாரணமான தொகையில்லை. அது ஒன்றே மட்டுமெனில் அவளுக்கும் கணேஷ்க்கும் கொஞ்சப் பொழுதெனினும் ஆறுதலாயிருக்க வாய்ப்பிருந்திருக்கும். ஆனால், கார் இன்சூரன்ஸ், ஹைட்ரோ பில், ரெலிபோன் செல்போன் பில்கள், கேபிள் ரீவி, இன்ரநெற் கனெக்சன் பில்கள் என இரண்டுபேர் சம்பளங்கள்கூட பற்றாக்குறையாய் இருக்கின்றன.

அவள் விருப்பத்தில் வாங்கிய வீட்டுக்குத்தான் அப்படி அடிக்கவேண்டியிருந்தது. வாரம் முழுக்க வேலைதான். கணேஷ் இரண்டு வேலைகள் செய்தான். அதிலொன்றில்தான் அவன்மீது அவளுக்குக் குறைசொல்ல இடமில்லாதிருந்தது. மற்ற விவகாரங்களிலும் அதுவரை குறைசொல்ல முடியாதபடியாகவே இருந்துவந்தான்தான். அவளின் எந்த விருப்பத்துக்கு அவன் அனுசரணையின்றி இருந்தான்? அவளும் எட்டு மணி பத்து மணியென்று வேலைசெய்தாள். அவள் படித்துக்

கொண்டிருக்கும்போதுதான் கல்யாணமாகியது. பின்னர் இரண்டு வருடங்களாய்ப் படித்தாள். அவன்தான் பணம் கட்டினான். இப்போது கணினி உதிரிப்பாக நிறுவனமொன்றில் அவள் வேலைபார்க்கிறாள். மணத்தியாலம் பதினெட்டு டொலர்கள். இருந்தும் என்னத்தைப் போதுகிறது?

இப்படி வாரம் முழுக்க கடனுக்காக உழைக்கிற அவர்கள் சனிக்கிழமையை மட்டும்தான் தங்களுக்கானதாக ஒதுக்கிவைத்திருந்தனர்.

மூன்று ஆண்டுகளாகின்றன திருமணமாகி. இன்னும் குழந்தை இல்லை. அவளுக்கு அது நினைப்பு. அவசரமில்லையென்பது அவனுடைய எண்ணம். உண்டானால் வேண்டாமென்று சொல்கிற அளவுக்கு அவன் சிரத்தையற்றவனல்ல. அதுகளிலெல்லாம் அவளால் அவன்மீது குற்றம் சொல்லிவிட முடியாது.

வாரநாட்களில் மனம் சிலவேளை துறுதுறுக்கத்தான் செய்தது. உடம்பு களைத்துப்போயிருக்கும். அதனால் அவர்கள் மனமடங்கியே அந்த இரவுகளைக் கடத்தியிருக்கிறார்கள். வெள்ளி மாலை வந்துவிட்டால் மனமும் உடம்பும் விண்ணென்று பறக்கத் துவங்கிவிடுகின்றன. தூக்க இருப்பையெல்லாம் அன்றைய இரவில் தீர்த்துக்கொண்டு, சனி பகல் நீராடித் தயாராயிருக்க இரவு வந்து எல்லாத் தவனத்தையும் போக்காட்டிக்கொண்டிருந்தது. கட்டிலே சொல்லும் வுh த்ஸாயனக் கதை. அதற்காகத்தானே இருவரும் அந்தத் தொகையிலான வேறு விடயங்களில்போல் பிணங்காது, இரண்டாயிரத்து நானூறு டொலர்க் கட்டிலை வாங்கினார்கள்.

ஆனால் கடந்த மூன்று சனிகளிலும்...

உடம்பு கொதித்துக்கொண்டிருந்தது என்றில்லை. எரிந்துகொண்டிருந்தது. குருதி தீப்பிடித்து மேனியெங்கும் சுழன்றோடிக்கொண்டிருந்தது.

அவன் அந்தச் சனிகளில் தன்னை, தன் நண்பர்களை நினைத்தான், மனைவியாய்த் தானொருத்தி இருப்பதுபற்றி நினைக்கவில்லையே என்பதுதான் அவளது சீற்றத்தின் முதல் காரணம். அந்தச் சனியின் மகத்துவத்தை எப்படி மறக்கமுடியும் அவன்?

கடந்துபோன இரண்டாவது சனியிலும் அவன் தடுமாறிக்கொண்டுதான் வீட்டினுள்ளே நுழைந்தான். சாப்பிடக்கூடச் செய்யாமல் படிகளில் தவழ்ந்து படுக்கையறையை அடைந்தான். இருந்தும்கூட அவள் புறுபுறுத்தபடி போய் கட்டிலில் ஏறி அவனருகே படுக்கத்தான் செய்தாள். என்றைக்காவது சனிக்கிழமைகளில் குடித்துவிட்டு வா, உன்னைக் கொன்றுவிடுவேன் றாஸ்கல்! ஏன்று திட்டவேண்டுமென்று நினைத்திருந்தபடி மறுநாள் காலை திட்டவும் செய்தாள். ஓம் ஓமென்று தலையாட்டிக்கொண்டிருந்தான்.

ஆனால்...மறுபடி நேற்றைய சனிக்கிழமையும்...

அது இலையுதிர் காலத்தின் கடைக்கூறு. வீட்டின் பின்னாலுள்ள குளத்தின் நீர் ஏறக்குறைய மேற்பரப்பு முழுவதும் அலையறுத்து அசலனம் பூண்டிருந்தது. அந்தக் குளமும், பார்வை எப்போதும் மொய்க்கிற ஒரு வாக்கில்தான் ஜன்னல் நேரே அமைந்திருந்தது.

அன்று மாலை ஏழுமணிக்கே குளித்து, மேலெல்லாம் கிறீம் தடவி, இன்னும் அவசியமான இடங்களில் காட்டப்படவேண்டிய கரிசனங்களும் காட்டி ... எத்தனை ஆயத்தங்கள் செய்திருந்தாள்? உற்சவம் நிகழவேயில்லையே!

அய்ந்து மணி மாலையில், இதோ வந்துவிடுகிறேன், இன்று இரவு றெஸ்ரோறன்ரில் சாப்பிடலாம், வெளிக்கிட்டு நில் என்று சொல்லிவிட்டுப் போனவன் எட்டு மணியாகியது, வரவில்லை. பத்து மணியாகியது, வரவில்லை. கடைசியில் பன்னிரண்டு மணிக்கு யாரோ சிலர் வந்து காரையும் அவனையும் வீட்டுக்கு முன்னால் போட்டுவிட்டுப் போனார்கள்.

அப்போதுதான் பாதிப் பேணி பியரை முடிந்திருந்த சிந்திக்கு, கதவைத் திறந்து அவனது நிலைகண்ட மாத்திரத்திலேயே சிரசடித்தது உக்கிரம். அவன் கண்டானா எதையாவது? உள்ளே வந்தான். தடுமாறியபடி நடந்தான். சோபாவில் இடறி விழப்பார்த்தான். அவள் அசையாது பார்த்துக்கொண்டிருந்தாள். அவன் முட்டுக் காலில் தவழ்ந்து தவழ்ந்து மேலே ஏறினான்.

அவன் சென்ற சிறிதுநேரத்தில் கட்டில் இடறுப்பட்டது கேட்டது. பின் கிரீச்... ஒலி எழுந்தது. கட்டிலிலே விழுந்துவிட்டான் என்று நினைத்துக்கொண்டு வெளிக் கதவைச் சாத்தி தாழிட்டுவிட்டு வர, அவன் வாந்தியெடுத்த ஓசை கேட்டது. உவாக்... உவாக்...என்று குடலை அறுத்துக் கொட்டுவதுபோல் ஓங்காளிப்பு.

நாற்றம் படியிறங்கி வந்து நாசியேறுவதுபோல் அருவருப்பு பிறந்தது அவளுக்கு.

அவள் லைற்றை அணைத்தாள். மீதி பியரை முடித்தாள். சோபாவில் வந்து சரிந்தாள். எல்லாவற்றையும் வெறுப்பதுபோல் ஜன்னல் பக்கம் முகத்தைத் திருப்பி வெளியைப் பார்த்தபடி கிடந்தாள். சிறிது நேரத்தில் தூக்கம் வந்ததுபோலிருந்தது. நிறைவான தூக்கமில்லை. எழும்பவோ கண்திறக்கவோ முடியாதவளவுக்கு இருந்ததே தவிர, மனம் தன்னுள் இயங்கிக்கொண்டு தானிருந்தது. கனவுபோல இருந்ததாயினும் கனவில்லை அது. கனவும் உருவகிப்புமான கலப்பினக் காட்சிகள்.

தேகம் ஆவியாகி எழுவதுபோல் ஒருபோது உணர்கையாகியது. திடுக்கிட்டு விழிக்க, கண் நிறைய இருள். அது அவள் இடமில்லை. வீரிட்டுக் கத்திவிட்டாள் பயத்தில். பின்

அப்பியிருந்த இருளில் நிஜம் பிரக்ஞையாகியது. அப்போதுதான் நற...நறவென கணேஷ் பல்லுக் கடிக்கிற சத்தம் கேட்டாள். பற்களைக் கடித்துத் தின்றுவிடுவதுபோல் நொறுமிக்கொண்டிருந்தான். அவளுக்கே தன் பற்களைக் கடிக்கவேண்டும்போல இருந்தது. முரசு உழைந்து, தாடை வலியெடுத்தது.

மறுபடி தூங்க முனையப் பயமாக இருந்தது அவளுக்கு. அந்த உக்கிரத்துடனான பல் நெருமுகையுடன் நித்திரை கொள்ளப்போனால் கனவும் நனவுமாயான ஆவியாய் மறைதல்பற்றிய காட்சிகளே தோன்றக்கூடும். அதைவிட விழித்திருந்துவிடலாம். ஆனாலும் எதிர்பாராத ஒரு தருணத்தில் திரும்பவும் நித்திரை வந்து கவிந்தது. அதுவும் ஒரு அரை நித்திரைதான்.

பின்னால் விடிகிறநேரத்தில் கொஞ்சம் ஆழ்ந்த உறக்கம் கொள்ள முடிந்தது.

எல்லாம் நினைக்க சிந்தியாவுக்கு வெறுப்புவெறுப்பாய் வந்துகொண்டிருந்தது. அன்றைக்கு ஞாயிறு என்ற நினைவு இன்னும் மனத்தை எரிய வைத்தது. நாளை வேலையென்பது நரகமாய்த் தெரிந்தது. ஞாயிறு ஓய்வுநாள், சரி. சனியில் அனுபவித்தால்தானே, ஞாயிறு ஓய்வாகமுடியும். இல்லையேல் கரிநாள். திங்கள் வேலையிடத்தில் அலுப்புநாள். மேலதிகாரிகளிடம் ஒன்றிரண்டு செல்லத் திட்டுகள் வாங்கும் நிலை ஏற்படுவது அத் தருணத்தில் தவிர்க்க முடியாதது.

அவன் இரவெடுத்த வாந்தியில் அறை எப்படி இருக்கிறது, கட்டிலின் நிலபரம் என்னவென்று போய்ப் பார்க்க அவளுக்கு மனம் வரவில்லை. அந்தமாதிரிப் பல் நெருமினானே, என்ன ஆயிற்றென்று பார்க்க்கூட மனத்தில் வாஞ்சை பிறக்கவில்லை.

'எனக்கு என்ன ஆகிவிட்டது? புணர்ச்சி விழைச்சு அடங்காது போனது மட்டும்தானா இந்த மனம் பிரகடனப்படுத்தும் யுத்தத்தின் காரணம்? இல்லை, அலட்சியப்படுத்தியமை என்ற ஒரு காரணமும் இருக்கிறது?'

அவள் குழம்பி, தேறி, மறுபடி குழம்பிக்கொண்ருந்தாள்.

ஏல்லாம் அந்த உடல் தவனம் என்கிற ஒரே அம்சத்தில் மய்யம்கொண்டிருந்தது. அவளே வேடிக்கையாகச் சொல்லியிருக்கிறாள். 'எனக்கு உன் தேவை அதிகம், கணேஷ். ஆர்வம் இழந்துகொண்டு போனாயென்றால் வேறெங்காகிலும் போய்த் தீர்த்துக்கொள்வேன்.'

முகம் இருண்டான் கணேஷ் அக் கணமே. அவள் சமாதானப்படுத்தினாள். 'என் காதல் இருக்கும்வரை என் காமம் உன்னோடுதான்.'

கனடாவில் பிறந்து வளர்ந்த ஆபிரிக்கி அவ்வளவாவது சொன்னாளேயென்று அவன் தேறினான்.

தன் வேடிக்கையை வினையாக்க அவனே முயல்வதுபோலல்லவா இருக்கிறது என சிந்தி நினைத்தாள்.

வெய்யில் இன்னும் மேலே ஏறியிருந்தது. திடீரென்று தன் மேனித் தகிப்பை பிரதிபலிப்பதுபோல் சூரியனும் உறைப்பாய் எறிப்பதாய் எண்ணினாள் சிந்தி. அவளது பார்வை குளத்துப் பக்கம் பரந்தது. நீரில் பளிங்குப் படர்கை. தகதகவென மின்னிக்கொண்டிருந்தது.

அந்தநேரத்தில், அந்தக் கோணத்தில் ரச்மிகள் விரிந்துவந்து அவளை வாரியெடுப்பதுபோல் உணர்கையாகியது. திடுக்கிட்டு, பயந்து ஓடி விலக நினைத்தும் உடம்பு அங்கிருந்து ஒரு சொட்டு அரங்கச் செய்யவில்லை. பிடித்து நிறுத்தி வைத்ததுபோல் இருந்தது.

திடீரென நீர் பாளமாய் மேலெழும்புவதுபோல் தோற்றமாகியது. வளைந்து அலைபோல் நின்று தளும்பியபடி அது. ஒரு இறுமாப்பின் தோற்ற வாகு இருந்ததாய்ப் பட்டது அவளுக்கு. அப்போதோ எதனுடனோ அது தர்க்கிப்பதுபோல் அதன் விளக்கம் வரிகளாய்ப் படர்ந்தது. அதன் வளைவுகளின் அசைவிலும், மினுமினுப்பிலும் மனம் பயமழிந்து மெல்லப் போய் மாட்டியது. அப்படியொரு அழகு! படமெடுத்த பாம்பின் அழகுபோல் அது. பயமும், ஈர்ப்புமான இரட்டுறை நிலை.

சிந்தி தலையை உசுப்பி நிதானத்துக்கு வந்தாள். நிஜம் புரிந்தவளவுக்கு கலக்கமழியவில்லை. இன்னும் அந்தக் காட்சியையே மனம் வளைய வந்துகொண்டிருந்தது. மறுபடி திரும்பப் பார்த்தபோது அந்தக் காட்சி அங்கே இல்லை.

ஆனாலும் மனத்தில் இன்னும் பாரம் இருந்தது. நினைத்துப் பார்த்தபோது அது ஏற்கனவே கண்டிருந்த காட்சிபோல் மனத்தில் ஒரு ஞாபக எறிகை. கடந்த இரவோடு அந்தக் காட்சி பிணைந்தது.

ஆம், சிந்தி கனவு கண்டிருக்கிறாள் முதல்நாளிரவு.

நினைப்பைக் கீழ்மேலாய்ப் புரட்டிப் பார்த்தாள்.

நீர், நிலம்... பஞ்சபூதங்களில் இரண்டு சாட்சிகள்.

கணே~pன் பல் நெருமுகையில் அலறியடித்து எழுந்து மீண்டும் படுத்தபின்னால்தான் அந்தக் கனவு அவளில் வெளிப்பட்டிருக்கவேண்டும்.

அலை எழுந்து நிற்கிறது. அசைகிறது நாகம் படமெடுத்தாடுவதுபோல்.

அப்போது நிலம் சிரிக்கிறது.

நீர் கேட்கிறது, 'என்ன சிரிக்கிறாய்?' என்று.

'நீ என்னில் தங்கியிருக்கிறாய். என்னுள்ளே அடக்கமாகியிருக்கிறாய். இருந்தும் இந்த ஏண்டாப்பு எதற்கு? அதுதான் சிரிப்பு வந்தது.'

'அப்படியேயிருப்பினும் குடிக்கூலிக்கான தங்குகைபோல்தான் அது. நான் உன்னிலும், உன்னுள்ளும் இல்லையேல் நீ ஒரு தரிசு. மலடு. உன் பச்சையெல்லாம் என் பேரருள்.' நீர் இப்போது சிரித்தது. ஜலதரங்கம் வாசித்ததுபோலிருந்தது.

சிந்தி அதைக் கேட்டாள். தெளிவாகவே.

சிலிர்ப்பு வந்தது, நினைவு மீட்டுக்கொண்டிருந்தபோதுகூட.

நிலம் சாம்பிப்போனது, தரிசுபட்டதுபோல். அதன் தொடர் மவுனம் அவ்வாறாகவே பட்டது அவளுக்கு.

'மண்ணே!' என்று மீண்டும் நீர் தொடர்ந்தது: 'நான் உன்னில் தங்கியிருக்கிறேன் என்று பெருமை பேசுகிறாயே, நான் நதியாய் உன்னில் ஊர்வேன். அலையாய் உன்னை விழுங்குவேன். மழையாய் உன்னைக் துளைப்பேன். என் உடல் திரவம்தான். அதனாலென்ன? நான் ஆவியாய் உன்னைவிட்டு நீங்கியும் இருப்பேன். இதோ இம்மாதிரிப் பனிப்பாளமாய் திடவுடலெடுத்தும்கூட உன்னை அமுக்குவேன். உணர்கிறாயல்லவா? உணர்கிறாயல்லவா? மூவடிவமெடுக்க முடிந்த என்னைப் பார்த்து என்ன அருகதையில் சிரித்தாய், சொல்?'

சொல் அழிந்து உருவங்கள் கலைகின்றன.

துயில் தொடர்கிறது.

அவள் பார்வையை வெளியே பரத்தினாள். கீழே தெருவில் சிறுவர்கள் நான்கைந்து பேர் வந்துகொண்டிருப்பது தெரிந்தது. அவர்களை அவளுக்குத் தெரியும். அந்தப் பகுதியில்

முன்பின்னாய் ஓடியிருக்கிற ஏதோ தெருவில் குடியிருக்கிறவர்கள்தான் அவர்கள். அதில் பிருந்தாவனனோடு அவள் பேசியுமிருக்கிறாள். கலகலவென இல்லாமல், ஒரு நிதானிப்பில் பேசுகிற பிள்ளை அவன். அதனாலேயே அவனை அவளுக்குப் பிடித்திருந்தது. விளையாடப் போகிறார்களாயிருக்கும். உதை பந்தாட்ட விளையாட்டுக் காலம் முடிந்துகொண்டிருந்தாலும், இன்னும் எச்சசொச்சமாய் பயிற்சிகளும் போட்டிகளுமாய் நடந்துகொண்டிருந்தன.

திரும்பியவளின் பார்வையில் சட்டெனப்பட்டது குளிர்சாதனப் பெட்டியின் மேலேயிருந்த அந்த பழம்பொருள் சிலை. அது ஒரு மிருகத்தின் மாதிரியாகவிருந்தது. கொம்புகள் அடர்ந்து வெருட்சிகொண்ட தோற்றம். மர நிறத்தில் மிகவும் புராதன அடையாளங்களுடன் அது.

அதை எங்கோ பழைய தளபாடக் கடையில் வாங்கியதாய் போன மாதமளவில்தான் கணேஷ் அதிலே கொண்டுவந்து வைத்தான். அப்போது அவளுக்கும் அது மிகவும் பிடித்துத்தானிருந்தது. அதில் ஒரு கம்பீரம் இருந்ததை அவள் கண்டாள். அந்த வேம்பு மரத்தின் உட்தோல் நிறமும், மிருகத்தின் வெருட்சியும் கொண்ட அச் சொருபம் அவளுக்கு அதன் பழமையுடன் சேர்ந்து இசைந்திருந்ததாய்ப் பட்டிருந்தது. இப்போது உன்னிப்பாய்ப் பார்க்கிறபோதுதான் தெரிகிறது, அது ஒரு மாயத்தின் உட்கசிவைக் கொண்டிருக்கிறதென்று. அது தொல்குடிகளின் வணக்கத்துக்குரியதாய், மந்திரத்தின் உட்பொதிகை கொண்டதாய் இருக்கலாமோ?

அவள் குலைந்தாள்.

கனடாவின் ஆதிகுடிகளான இந்தியர் வாழ்வியலில் அம்மாதிரியான சிலை வணக்க முறைகள் நிறையவிருந்ததை அவள் படித்திருக்கிறாள். மந்திரார்த்தமான வணக்கப்பாடுகளும் அச் சமூகத்தில் இருந்திருக்கின்றனதான். ஜீவன்களும், பிரபஞ்சப்பாடுகளும்பற்றி அவர்கள் நிறைய அக்கறை கொண்டிருந்தவர்கள். அவர்களின் வணக்கத்துக்குரியதாயிருந்த ஒரு சிலையை எக் காரணம்கொண்டும் தன் வீட்டில் வைக்க அவள் அனுமதித்திருக்கக்கூடாதோவென்று அப்போது அவளுக்குத் தோன்றியது.

கணேஷ் அந்தச் சிலையை அங்கே வாங்கிவந்து வைத்த நாளிலிருந்துதான் குடிபோதையில் திரியத் துவங்கியிருந்தான். சனி இரவுகள் வெறுமையாய்க் கழிந்துபோகவேண்டி நேர்ந்ததும் அதனால்தானாய் இருக்கலாம். கணேஷ் பேய் பிடித்தவன்போல் பல் நெருமியதற்கும் காரணம் அதுவே.

அவளுள் தீர்க்கங்கள் விளைந்துகொண்டிருந்தன.

அவை பயங்களாய் மறுவடிவம்பெற்று எழுந்தன.

மேனி குளிரடைவதாய் அவள் உணர்ந்தாள்.

அப்போது குளக்கரையில் சப்தங்கள் எழுந்தன. 'டோன்ற் கோ. கம் பாக்...கம் பாக்...'

சிந்தி வெளியே எட்டிப் பார்த்தாள்.

அலையாய், ஆவியாய் நீரானது நிமிர்ந்து கனவில் நின்றிருந்ததுபோல் தோற்றம். நீர் நெளிந்து...சுழிந்து அசைந்ததுபோல் அப்போதும். அவள் கண்களைக் கூர்த்தாள். ஒரு தடித்த சிறுவன் திண்ணப்பட்டுக்கிடந்த நீர்ப்பரப்புள் அமிழ்ந்துகொண்டிருந்தான்.

அது நொறுங்கக்கூடிய திடமாயிருப்பதில்லை. போன குளிர்கால முன்னிலும் வளர்ந்த சிலரே அதில் நடந்து விளையாடியது கண்டிருக்கிறாள் சிந்தி. அந்த வன்மைதான் நொருங்கி தடித்த சிறுவனை மூழ்கடித்துக்கொண்டிருந்தது.

சிந்தி ஜில்லிட்டாள்.

அப்போது ஒரு ஒல்லியான பையன் அவனைக் காப்பாற்றப்போலும் நீர்த்திடத்தில் இறங்கினான். தடித்த சிறுவன்போல் அதில் நடக்க முனைந்தான். தடுமாறிக்கொண்டு முன்னேறினான்.

'ஏய், பிருந்தாவனா....போகாதே...போகாதே...!சூரியன் கொதிக்கிறான். நீரின் திடம் அழிகிறது. நேற்று இரவு நீர் இட்ட கெலிப்பில், தன்னிலிருந்து வெடித்துப் பிறந்த பூமிப் பந்துக்காய் சூரியன் யுத்தம் தொடங்கிவிட்டான். போகாதே...பிருந்தாவனா...போகாதே!' மனத்துள் கூவுகிறாள் சிந்தி.

கனவில் எழுந்து நின்றிருந்த அலை அமுங்கி அழிந்ததுபோல, பிருந்தாவனன் நீருள் துடித்துத் துடித்து அமிழ்ந்துகொண்டிருந்தான்மறுகணம். ஓட, இயங்க உடம்பும் மனமும் மரத்துப்போயிருந்தன. அப்போதுதான் யாரோ, எப்போதோ சொன்னது ஞாபகமாகியது அவளுக்கு. 'நூற்றைம்பது இருநூறு வருடங்களின் முன் அந்தக் குளத்திலேதான் நானூறு இந்திய ஆதிகுடிகள் வெள்ளையினத்தாரால் கொன்றுபோடப்பட்டிருக்கிறார்கள்.'

அவளுக்குத் தலையைச் சுற்றுவதுபோல இருந்தது.

கொஞ்சநேரம் நின்றபடியே சுவரில் கையைப் பொறுத்தி தலையைச் சாய்த்தாள். அவ்வாறு

நினைவழிந்தவளாய் எவ்வளவு நேரம் அவள் நின்றிருக்கக்கூடுமோ? மீண்டும் அவள் நிமிர்ந்துபார்த்தபோது குளத்தினைநோக்கி ஹெலிகொப்டர் ஒன்று இரைந்தபடி வந்துகொண்டிருந்தது. பிருந்தாவனன் எங்கே? நீர் விழுங்கிவிட்டதா?

திரும்பியவளின் பார்வையில் குளிர்சாதனப் பெட்டியின் மேலிருந்த சிலை. வெகுநேரமாய் அதையே நோக்கிக்கொண்டிருந்தாள். ஒரு அலையாய்க் கிளர்ந்தெழுந்து அது அவளை இழுத்தது. அப்போது காட்சிப் பொறியை மட்டும். இனி எதையெதையோ? புற ன் அவளையுமேகூட?

சிந்தி திடீரென எழுந்தாள். நேரே குளிர்சாதனப் பெட்டியை அணுகி சிலையை எடுத்தாள். தாளெடுத்துச் சுற்றினாள். கதவைத் திறந்துகொண்டு வெளியே ஓடினாள். வீட்டுப் பின்புறம் ஓடிப்போய் சிலையை ஓங்கி தூரவிருந்த குப்பைத் தொட்டியில் விழ வீசினாள். சூழக் கண்ணோடினாள். யாரும் பார்க்கவில்லை. திரும்பி வீடு வந்தாள். ஏககூட்டம் குளக்கரையில். ரோட்டில் வாகன நெரிசல்.

ஏல்லாம் முடிந்துவிட்டதெனத் தெரிந்தது.

அவள் மறுபடி வீட்டினுள் நுழைந்தபோது கணேஷ் அப்போதுதான் மாடியிலிருந்து இறங்கிவந்துகொண்டிருந்தான். குளித்திருந்தான். தெளிந்திருந்தான். லேசாகச் சிரித்துக்கொண்டிருந்தான். அதில் மன்னிப்பின் வரிகளைத் துலக்கமாய்க் கண்டாள் சிந்தி.

அப்போது அவளுக்குக் கோபம் வரவில்லை.

bdevakanthan@yahoo.com
பதிவுகள் யூன் 2007 இதழ் 90

**19. ஒரு சாண் மனிதன்! - செழியன் -**

செழியன் -சாதாரணமாக ஒரு புகையிரத நிலையத்தில் நிகழ்வது போலத்தான் இது நடந்து வந்தது. ஏழு வித்தியாசங்கள் சொல்லலாம் என்றாலும் அதில் முக்கியமானது, இது அங்கு நடப்பது போல, இங்கு தினமும் நடைபெறுவதில்லை. வாரத்திற்கு ஒரு தடவை வருகின்ற புதன்கிழமைகளில் மட்டுமே நடக்கின்றது.

கண் இமைக்கும் நேரத்தில், மிக வேகமாக வருகின்ற புதையிரதத்தில் இருந்து, புகையிரத நிலைய அதிபரின் கைக்கு மாறுகின்ற அந்த வளையம் போல, கணநேரத்தில் இது கைமாறுகின்றது. பார்க்கின்ற போதெல்லாம், ஒரு கைதேர்ந்த சர்க்கஸ்காரர்

நடத்துகின்ற அற்புதமான மாயாஜாலக் காட்சி போல எனக்குள் அதிசயத்தை ஏற்படுத்திக் கொண்டிருந்தது. அதிசயம் மட்டுமல்ல, யாராவது ஆசிரியர்கள் கண்டுவிட்டால் என்ன நடக்குமோ என்ற பெரும் பதைபதைப்பும், நடுக்கமும் எப்போதுமே எனக்குள் இருக்கும்.

புதன்கிழமைகளில் இரண்டாவதும், மூன்றாவதுமான தொடர் பாடமாக எமக்கு வருவது சுகாதாரம். இந்தப் பாடத்திற்காக பத்து- யு வகுப்பில் இருந்து பத்து- ஊ வகுப்புக்கு, எமது வகுப்பில் இருந்த பாதி மாணவர்கள் அணிவகுத்துச் செல்லவேண்டும்.

மிகுதி பாதிப்பேரும் பிரயோக கணிதத்திற்காக பௌதீக ஆய்வு கூடத்திற்குச் சென்று விடுவார்கள்.

இந்தப் புதன் கிழமை எப்போது வரும் என்று வகுப்பு முழுதும் காத்திருக்கும். சிலர் வெளிப்படையாக உணர்ச்சி வசப்பட்டுப் போய் நிற்பார்கள். இன்னும் சிலர் வெளியில் வேண்டா வெறுப்பாக இருப்பது போல காட்டிக் கொண்டு உள்@ர ஆசை ஆசையாக உமிழ்நீர் வடித்துக் கொண்டிருப்பார்கள்.

இதற்கு நியாயமான காரணம் ஒன்று இருந்தது. இது ஒன்றும் பௌதீக விதிகளைப் போல குழப்பமான, விளங்க முடியாத விடயம் ஒன்றும் கிடையாது. இந்தப் பாடநேரத்தின் போது மட்டும் தான் இருபது அழகான மாணவிகளுடன் நாம் ஒன்று சேர்ந்து ஒரே வகுப்பில் படிக்கின்ற வாய்ப்புக் கிடைத்து வந்தது. இத்தனைக்கும் இரு பாலாரும் சேர்ந்து படிக்கின்ற இந்துக் கல்லூரியாம் என்று இந்தக் கல்லூரிக்கு ஒரு மட்டமான பெயர்.

கொழும்பு நாலாம் குறுக்குத் தெருவில் இருக்கின்ற குறுகலான ஒரு சந்து போல இரண்டு அடி அகலமும், பன்னிரெண்டு அடி நீளத்துடன் இந்தக் கல்லூரியிலும் ஒரு சந்து இருக்கின்றது. புதன் கிழமைகளில் இதைக் கடந்துதான் நாம் செல்லவேண்டும்.

அந்த இடத்தில் சற்று அவதானமாக இல்லாது விட்டால் ஒரே சமயத்தில் எதிர் எதிராக வருகின்ற இரண்டுபேர் மோதிக் கொள்ளவேண்டி வரும்.

மோதிக் கொண்டது ஒரு மாணவனுடன் என்றால் அந்த இடத்தில் ஒரு குத்துச் சண்டைக்கு நாம் தயாராக இருக்க வேண்டும். மாணவியுடன் என்றால் பெச்சு மாமா என்று மாணவர்களால் அன்போடு அழைக்கப்படும் உப- அதிபரிடம் பத்து பிரம்படி ஆவது வாங்கிக் கொள்ளவேண்டும். அதைக் கூட சமாளித்து விடலாம். கல்லூரி விட்டதும் வாசலில் காத்திருக்கும் அவளது அண்ணனின் அடியைத் தாங்க முடியாது. அதனால் அந்த சந்தில் வரும்போது மெதுவாகவும், சற்று அவதானமாகவும் வரவேண்டியது மிக அவசியமான விடயமாக எமக்கு இருந்து வந்தது.

யுத்தப்பிரதேசத்தில் செயல்படுகின்ற கண்காணிப்புக் குழு உறுப்பினர்களைப் போல இந்த சந்தைக் கவனிப்பதற்கு என்றே விசேடமாக மாணவ முதல்வர்கள் நியமிக்கப்பட்டிருந்தார்கள். ஆனால் இந்தக் கண்காணிப்புக் குழுவின் கண்ணுக்கே மண்ணைத் தூவுவதைப் போலத்தான் சுப்புறுவின் நடவடிக்கை இருந்தது.

அவன் தான் எங்களுடைய வகுப்பின் பின்வாங்கு உறுப்பினர்களில் மிக முக்கியமான ஆள். பின்வாங்கு உறுப்பினர்களின் தலைவன் என்றும் சொல்லலாம். ஆனால் முன்வாங்குகளிலும் அவனது செல்வாக்கு இருந்தது. அவனுக்கு விருப்பம் இல்லாத எந்த ஒரு முன்வாங்குப் பயலையும், வகுப்புத் தலைவராகக் கூட நியமிக்க முடியாது.

சுகாதார பாடத்திற்குச் செல்வதற்காக நாம் அந்த சந்தைக் கடக்கின்ற நேரம் பார்த்து, எதிர்த்திசையில் இருந்து பத்து -ஊ வகுப்பு மாணவிகள் இருபது பேர் பிரயோக கணிதத்திற்குச் செல்வதற்காக அதே சந்துக்குள் நுழைவார்கள்.

எந்த விதமான தற்பாதுகாப்பு உணர்வும் இன்றி வெகு அட்டகாசமாக அந்த சந்துக்குள் நுழைந்து அவர்கள் வரும் போது, நாம் தான் அவர்களின் அண்ணன்மாரை நினைத்துப் பயந்து சற்று ஒதுங்கிக் கொள்வது வழக்கம். அந்த இடத்தில் தான் இந்தச் சம்பவம் நடந்து வந்தது.

சுப்புறுவின் கையில் அனாயாசமாக இருக்கின்ற கொப்பி ஒன்று வெகு இலகுவாக யோகலட்சுமியின் கைக்கு இடம் மாறும். அடுத்தவாரம் யோகலட்சுமி மார்போடு அணைத்துவரும் கொப்பி சுப்புறுவின் கைகளுக்குள் கண் இமைக்கும் நேரத்திற்குள்மாறிவிடும்.

இந்தக் கைமாற்றத்தின் போது இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொள்ளமாட்டார்கள்

ஆனாலும் குறி பிசகாமல் கொப்பி கைமாறிக் கொண்டே இருந்தது.

நமது வகுப்பின் பின்வாங்குத் தலைவனுக்கும், பெண்கள் வகுப்பின் முன்வாங்குத் தலைவிக்கும் எப்படி உறவு வந்தது என்று பல நாட்களாக எனக்குக் குழப்பமாக இருந்தது. நித்திரை இல்லாமல் பாயில் பல நாட்கள் உருண்டு கொண்டிருந்தேன்.

பிரபஞ்சத்தில் எல்லாவற்றுக்கும் ஒரு ஒழுங்கு இருக்கின்றது. இரசாயனத்திலும் விதிகள் இருக்கின்றது. அந்த ஒழுங்கு முறையின் பிரகாரம்தான், மூலகங்கள் ஒன்று சேரமுடியும்.

ஒன்றுடன் ஒன்று சேரவே முடியாத இரண்டு மூலகங்கள் ஒன்று சேர்ந்தது என்றால், இரசாயனத்தில் எப்படி நம்பமுடியாதோ அது போல நம்பமுடியாத அதிசயமாக இது எனக்கு இருந்தது.

ஒழுங்கு முறையின் படி பார்த்தால் முன்வாங்கு உறுப்பினரான, எனது வகுப்பு மாணவ தலைவன் விக்னாவைத்தான் யோகலட்சுமி காதலித்து இருக்கவேண்டும். அது தள்ளிப்போனால் ரஞ்சித். போகட்டும் என்று அதையும் விட்டால் அடுத்து இருக்கின்றவன் நான். ஒழுங்கு முறை இப்படி இருக்க ஒரு ஆசிரியரின் மகளான யோகலட்சுமி எப்படி தறுதலையான சுப்புறுவைக் காதலிக்க முடியும்?

இந்தக் கேள்விக்கு விடை கண்டுபிடித்தே ஆகவேண்டும் என்று நான் தீர்மானித்து விக்னாவிடம் சென்று கேட்டேன்.

"அடுத்த தடவை இந்த மாதிரி ஏதாவது ஏடா கூடமான விடயத்தைப் பற்றி நீ கதைத்தால் மிஸ்சிஸ் தவரட்ணம் டீச்சரிடம் சொல்லி விடுவேன்" மிரட்டலோடு என்னை விரட்டி அடித்துவிட்டான். வகுப்புத் தலைவனாக அவன் வருவதற்கு ஓட்டுப் போட்டது சுத்த 'வேஸ்ட்'.

ரஞ்சித் ஒரு அற்புதமான ஆள். இப்படி விக்னாவைப் போல முகத்தை முறித்துக் கதைக்க மாட்டான். தன்னால் இயன்ற அளவு நேரம் செலவழித்து எமது சந்தேகத்தை தீர்த்து வைக்கின்ற பேர்வழி. மறு நாள் காலை வகுப்புக்கு வந்ததும் 'எல்லாம் விளங்கி விட்டதா? இன்னமும் ஏதாவது சந்தேகம் இருக்கின்றதா? என்று வெகு அக்கறையாகக் கேட்பான். ஆனால் அவனுடன் கதைப்பதற்குஏதாவது உயிரியல், இரசாயனக் கேள்விகளுடன் போகவேண்டும். பௌதீகத்தில் ஏதாவது சந்தேகம் என்று போனால் கூட ஒரு வாரத்திற்கு முகம் கொடுத்துக் கதைக்க மாட்டான்.

இந்த மாதிரி சமாசாரத்திற்கு, எனக்குப் பக்கத்தில் இருந்து கொண்டு அடிக்கடி ஏதாவது பிரச்சினை பண்ணிக் கொண்டிருக்கின்ற ஸ்கொட் ரவீந்திரன் தான் சரி என்று எனக்குத்

தோன்றியது.

நான் எனது சந்தேகத்தை கேட்ட மாத்திரத்தில், கடந்த ஒரு வருடமாக என்னுடன் இருந்த எல்லாப் பகையையும் ஸ்கொட் ரவீந்திரன் உடனேயே விட்டொழித்துவிட்டான். அபயம் என்று வந்தவனை ஏற்றுக் கொள்கின்ற பண்பு அவனுக்குத்தான் இருக்கின்றது.

ஸ்கொட் ரவீந்திரனுக்கு எங்கள் வகுப்பில் ஒரு செல்வாக்கும் இருந்தது. ஏதாவது பாடத்திற்கு ஆசிரியர்கள் வரவில்லை என்றால் அவனைச் சுற்றி எப்போதும் ஒரு கூட்டம் சேரும். ஸ்கொட் ரவீந்திரன் ஏதாவது கதை சொல்லத் தொடங்கிவிடுவான். இந்தக் கூட்டத்தில் பின் வாங்கு உறுப்பினர்கள் சேரமாட்டார்கள். அவர்களுக்கு வேறு பிராக்கு இருந்தது.

இப்படிக் கதை சொல்லிச் சொல்லியே இவன் களைத்துப்போய்விட்டான். கடைசியில் தனது ரசிகர்களை சமாளிக்க 'ஒரு சாண் மனிதன்' என்ற முடிவே இல்லாத ஒரு தொடர்கதையை ஆரம்பித்து விட்டான். உலகம்; விட்டு உலகம் மாறி வந்த ஒரு சாண் மனிதன் ஒருவனின் கதை அது. ஸ்கொட் கதை சொல்லத் தொடங்கிவிட்டால், வாயைப்பிளந்து கேட்டுக் கொண்டிருப்பார்கள். அதற்குள் ஈ, இலையான் போனாலும் தெரியாது.

எனக்கும் ஸ்கொட் ரவீந்திரனின் கதைகள் பிடிக்கும் என்றாலும் எனக்குப் பக்கத்தில் இவன் இருக்கின்ற படியால் சில சமயம் கூட்டம் கூடி எனக்குப் பெரும் இடைஞ்சலாக இருந்தது. அதனால் எப்போதும் எனக்கும் ஸ்கொட் ரவீந்திரனுக்கும் ஒரு உரசல் இருந்து கொண்டுதான் இருந்தது.

"சுப்புறு மட்டுமல்ல பின்வாங்கில் இருக்கின்ற எல்லாருக்கும், ஒரு மணி நேரத்திற்காவது ஒரு காதலி இருந்திருக்கின்றார்கள்" ஸ்கொட் ரவீந்திரன் என்னிடம் சொன்னபோது எனக்கு அதிர்ச்சியாக இருந்தது.

"இரசாயனத்திற்கு ஒரு விதி, உயிரியலுக்கு இன்னோர் விதி. அது போலத்தான் காதலுக்கு இன்னோர் விதி இருக்கின்றது" என்று ஸ்கொட் ரவீந்திரன் கிசுகிசுத்தான்.

"உனக்குத் தெரியுமா அது?"

"எனக்குத் தெரியாது. ஆனால் சுப்புறுவுக்குத் தெரியும்"

"சுப்புறுவாஸ" அருவருப்பாக இருந்தது எனக்கு.

அத்தோடு அந்தக் கதை முடிந்து போனாலும் இரண்டு மூன்று தினங்களாக என் மனதில், வங்காள விரிகுடாவில் துள்ளி விழுகின்ற மீன்களைப் போல ஆசை துள்ளி விழுந்து கொண்டிருந்தது.

ஸ்கொட் ரவீந்திரன் நல்லவன். என் மனநிலையைப் புரிந்து கொண்டு அதற்கு ஏற்ப மிக பக்குவமாக நடந்து கொண்டான். மகாபாரத யுத்தத்தில் அர்ச்சுனன் பலவீனப் பட்டுப் போகின்ற போது வெகு நிதானமாக கிருஸ்ணர் கீதா உபதேசம் செய்தது போல பல விதமான அறிவுரைகளை எனக்கு எடுத்துச் சொன்னான்.

“வில்வித்தையை துரோணரிடம் தான் கற்றுக் கொள்ளவேண்டும். உயிரியலை நமது பூரணச்சந்திரன் மாஸ்டரிடம் கற்றுக் கொள்ளவேண்டும். தமிழை நவரத்தினம் பண்டிதரிடம் கற்க வேண்டும்ஸ. இந்த மாதிரியான விசயத்தை சுப்புறுவிடம் தான் கற்க வேண்டும்.”

“சரி இந்த வித்தையை சுப்புறு சொல்லித் தருவானா?” எல்லா குழப்பங்களையும், வெறுப்புகளையும் ஆசையால் ஒரே ஊதாக ஊதித் தள்ளிவிட்டுக் கேட்டேன்.

பதில் சொல்லாது சிரித்தான்.

சொன்னதைச் சொல்லிய படி செய்பவர்களும் இருக்கின்றார்கள் என்பதை நீங்களும் கொஞ்சம் நம்பத்தான்வேண்டும். ஸ்கொட் ரவீந்திரனின் பெரு முயற்சியினால், ஒரு நேர்முகப் பரீட்சை நடாத்துவதற்கு சுப்புறு சம்மதித்தான். அது என்னை சிஷ்யனாக ஏற்றுக்கொள்ளலாமா? இல்லையா என்பதற்காக.

இந்த நேர்முக பரீட்சைக்காக, யாழ்ப்பாணம் ஐந்துலாமுச் சந்திக்கு அண்மையில் இருக்கின்ற ‘மொக்கன்’; கடையடியில், புதன் கிழமை இரவு ஏழு மணிக்கு நான் நின்றேன்.

‘மொக்கன்’ கடைக்கான எல்லாச் செலவுகளுக்கும், தயாராக வரும்படி ஸ்கொட் ரவீந்திரன் சொல்லியிருந்தான். இதற்காக சாமி அறையில் சேமிக்கப்பட்டிருந்த செத்தல் மிளகாய் மூட்டைகளில் இருந்து, மேலதிகமாக ஒரு கிலோ இந்த மாதம் எடுக்கவேண்டியதாகிவிட்டது.

பாவத்திற்கு மன்னிப்பு கேட்டு, அந்த மாதம் மேலதிகமாய் ஒரு ரூபாய், உரும்பிராய் கற்பக விநாயகரின் உண்டியளலில் போட்டேன்.

‘மொக்கன்’ கடையில் சாப்பாடுகளை ஓடர் செய்யும் போதே சுப்புறுவின் திறமையை

என்னால் எடை போடமுடிந்தது. புட்டோடு சேர்த்து சாப்பிட மாட்டுக் குருமா, மாட்டீரல் அத்தோடு மாட்டு இரசம் என்று அவன் எடுத்த எல்லாமே மிகச் சுவையாக இருந்தது.

மாட்டு இறைச்சி சாப்பிடுவதா என்று எனக்கு தயக்கமாகத்தான் இருந்தது. "மாட்டு இறைச்சியும், மாட்டு ஈரலும் சாப்பிட்டால், தேகத்தில் ஒரு முறுக்கும், முகத்தில் ஒரு ஜொலிப்பும் வரும். பெட்டையளுக்கு எங்களைப் பார்க்கின்றபோது ஒரு கவர்ச்சி இருக்கும்" காஞ்சிப் பெரியவரைப்போல ஒரு பிரசங்கமே செய்துவிட்டான். சாப்பிட்டால் இனி மாட்டு இறைச்சி மட்டும்தான் என்று முடிவெடுத்தேன்.

"நீ நல்லாய் படிக்கிறனி. பிறகு என்னத்துக்கு உனக்கு இதுகள் எல்லாம்?" சாப்பிட்டு முடிந்ததும் தனது முதலாவது கேள்வியை எடுத்து விட்டான் சுப்புறு.

இந்தக் கேள்விக்கு என்ன பதிலை நான் சொல்வது என்று குழப்பமாகப் போய்விட்டது. எனக்கும் ஒரு இளம் பெண்ணின் சினேகிதம் வேண்டும் என்று பச்சையாக எப்படிச் சொல்வது?

ஆபாத்பாண்டவனாய் ஸ்கொட்ரவீந்திரன் தலையிட்டான்.

" சுப்புறு, இது படிக்கிறது, படிக்காமல் இருக்கின்றது என்ற பிரச்சினைக்குள் அகப்படாத ஒரு கிளுகிளுப்பான விசயம். பெடியளுக்கு ஒரு பெட்டை வேண்டும். பெட்டையளுக்கு ஒரு பெடியன் வேண்டும். நீ என்ன சொல்லுகிறாய்?"

"பெடியளுக்கும், பெட்டையளுக்கும் ஒன்டுதான் வேண்டும் எண்டு சொல்லாதே. அப்படி யாரும் சொன்னாலும் நம்பாதே. பெடியளும், பெட்டையளும் இரண்டு, மூன்று என்று வைச்சிருக்கினம். இப்ப எனக்கு இருக்கிறவள் என்னுடைய ஆறாவது ஆள். அவளுக்கு நான் மூன்றாவது ஆள்."

"பாத்தியே சுப்புறு. ஆளுக்காள் அஞ்சாறு பெட்டையள் என்று வைச்சிருக்கிறான்கள். இவன் இன்னமும், ஒரு பெட்டையோட கூட நேருக்கு நேர் நின்று கதைச்சதேயில்லை. பாவம்." ஸ்கொட் ரவீந்திரன் எனக்காக அழுதுவடித்தான்.

"என்ன? ஒரே பெட்டைக்கு இரண்டு மூன்று காதலர்கள் இருக்கினமோ?" அதிர்ச்சியோடு நான் கேட்க, என்னை பரிதாபமாக சுப்புறு பார்த்தான்.

பதில் சொல்ல விருப்பம் இல்லாமல், தடால் என்று ஒரு மாட்டெலும்பை எடுத்து ஸ்கொட்

ரவீந்திரன் உறிஞ்சிக் கொண்டிருந்தான்.

"நீ நிறைய கதையள் வாசிக்கிறனியோ?" சுப்புறு என்னைப்பார்த்துக் கேட்டான். எனக்கு உற்சாகம் தொற்றிக் கொண்டது.

"குமுதம், ஆனந்த விகடன், கல்கி இதுகளில வாற எல்லாக் கதைகளையும் வாரா வாரம் வாசிக்கின்றனான். அதைவிட ராணி முத்து மாதம் மாதம் வாசிக்கிறனான்."

"அதுகளில கண்ணும் கண்ணும் சந்தித்து, காதல் எல்லாம் வெடித்து கிளம்பி இருக்குமே"

எனக்கு பெரிய அதிர்ச்சியாக இருந்தது. காதலின் தொடக்கமே இந்த கண்கள் தான். கண்கள் இரண்டும் சந்தித்து விட்டால் பிறகு என்ன? புத்தகங்கள் வாசித்தே இருக்கமாட்டான் இந்த சுப்புறு. ஆனால் அவுனுக்கும் இதுகள் தெரிந்துதான் இருக்கின்றது.

பின்ன இதுகள் தெரியாமல் என்னெண்டு இவனால இந்த விசயத்தில கிங்காக வந்திருக்க முடியும்?

"இராமர் காலத்தில் இருந்தே இந்த கண்கள்தான் காதலின் ஆரம்பம்" உணர்ச்சிவசப்பட்டுச் சொன்னேன்.

"இவன் சரிப்பட்டு வரமாட்டான்."

கோப்பையில் கரண்டியை எறிந்தான். கோபம் கடுப்பேற சுப்புறு, ஸ்கொட்ரவீந்திரனைப் பார்த்தான்

சத்தம் கேட்டு கல்லாவில் காசு எண்ணிக் கொண்டிருந்த முதலாளி எங்களை ஒரு முறைபார்த்து விட்டு தனது வேலையைத் தொடர்ந்தார்;.

மொக்கன் கடைக்கு செலவழித்தது சுத்தமாக 'வேஸ்ட்;' என்று எனக்கு அழுகையே வந்துவிட்டது.

"கண்கள், காதுகள், கடிதங்கள் எல்லாம் காதலுக்கு சரியாய் வராது. அதெல்லாம் கதையளில தான்டா."

"நிசமாய் காதலிக்க வேண்டும் எண்டால், அவளவையின்ட மார்பை நீ பார்க்க வேண்டும். அப்பத்தான்டா காதல் வரும்."
"குட் பொயின்;ட்" சூப்பி முடித்த மாட்டுக்காலை கோப்பையில் மெல்லவைத்த படி ஸ்கொட்

ரவீந்திரன் கூறினான்.

அதிர்ச்சியில் உறைந்து போய் வாய்பேச முடியாமல் இருந்தேன்.

கண்களில் இருந்து தொடங்க வேண்டிய காதலை எப்படி மார்பில் இருந்து தொடங்குவது? அசிங்கம்.

"பார்க்கிறதோட நிற்பாட்டுறதில்லை. பிறகு பிடிக்கவேண்டும்." அடுத்த குண்டை எறிந்தான்.

ஒரு கிளாஸ் தண்ணீரை அப்படியே குடித்து முடித்தேன்.

"இன்னும் ஏதாவது வேணுமா?" கடைப்பையன் வந்து நின்றான். அவனது முகத்தில் ஒரு விசமம் தெரிந்தது. ஒட்டுக் கேட்டிருப்பான்.

"பில்" ஸ்கொட் கூறினான்.

"ஒரு சிகரட் பிடிக்கப் போறன்ஸ. பில்லைக் குடுத்திட்டு வாங்கோ"

சுப்புறுவின் தலை மறைந்ததும் ஸ்கொட்டைப் பார்த்தேன்.

"எல்லாமே உனக்குப் புது புது விசயமாய் இருக்குது என்ன?" கண்சிமிட்டினான்.

"சுப்புறு சொல்லுற மாதிரியெல்லாம் என்னால செய்ய ஏலாது. இது பெட்டையளிட்ட செருப்படி வாங்குறதாய் முடியும்".

"செருப்பாலை இல்லை குடையாலைதான் அடிப்பாளவை" சுப்புறு வந்து நின்றான். நெருப்புப் பெட்டி எடுக்க வந்திருந்தான்.

"சைக்கிளில போகேக்கை எதிர்க்க நடந்து வாற பெட்டையளின்ர மார்பை அப்பிடியே ஒரு பிடி பிடிச்சுட்டு போய்கொண்டே இருக்கலாம். அடுத்த தடவை அவளைப் பார்க்கேக்கை கண்டுபிடிக்கலாம். ஆளை அமத்தலாமா? இல்லையாவென்டு".

"இதில ஒரு கவனம் இருக்க வேண்டும். யாராவது குடையோட வாறாளவை எண்டால் உசாராய் இருக்கவேணும்.. குடையாலை கையை முறிச்சுப் போடுவாளவை."

ஓகோ குடைக்கு இப்படியும் ஒரு பயன்பாடு இருக்குது. இது தெரிஞ்சால் குடையளின்ர விலை ஏறிவிடும்.

தனது இடது மணிக்கட்டை தடவியபடி “பில் முப்பது ரூபாய் வருகுது” ஸ்கொட் கூறினான். எங்கயோ குடையாலை அடிவாங்கி இருக்கின்றான்.

செத்தல் மிளகாய் வித்த காசில் எழுபது ரூபாய் மிச்சம். கடையை விட்டு வெளியே வந்தோம்.

“இதே உன்ர சைக்கிள்.”

மாடு வாங்க வந்தவன், மாட்டைச் சுத்திச் சுத்திப் பார்த்த மாதிரி சைக்கிளைத் தடவிப் பார்த்தான்.

“இது என்னடா கெரியல்?”

“ஒரு சைக்கிள்தான் நிற்குது. அப்பர் சந்தைக்கு கத்தரிக்காய் மூட்டை ஏத்துறதுக்;குத்தான் பெரிய கெரியல் போட்டவர்.”

“சந்தைக்கு வாழைக்குலை கட்டிக்கொண்டு போற சைக்கிள்களில திரிஞ்சா உங்களை எவளடா பார்ப்பாளவை.”

“மட்காட் எல்லாம் ஆடுது. புeரிவில் சத்தம் போடுது. நீ நாளைக்கு சைக்கிளை ஒருக்கா கழட்டிப் பூட்டக் கொடுத்திடு. பிறகு வெள்ளிக்கிழமை மத்தியானத்துக்குப் பிறகு சைக்கிளை பள்ளிக் கூடத்தில விடாதே. முன்வீட்டு வளவுக்கை நிற்பாட்டிவை.”

பெரிய தாக்குதல் ஒன்றுக்கு திட்டமிடுகின்ற தளபதியைப் போல சுப்புறு தெரிந்தான்.

“உந்த கெரியலை கழட்டிவைச்சிட்டு வா. கொப்பர் காலையில தானே சந்தைக்குப் போறவர்.”

“நான் வழமையாய் சைக்கிளை பள்ளிக் கூடத்தில தான் விடுறனான்ஸ.”

“வெள்ளிக்கிழமை, நாங்கள் பள்ளிக்கூடம் முடிய பத்து நிமிசம் முந்தியே வெளிக்கிட்டுட வேண்டும்.”

“பள்ளிக் கூட கேட் பூட்டிக் கிடக்குமே.”

“ முன்வழியால இல்லை. பின் மதில் ஏறிக்குதிக்க வேண்டும். குதிப்பை தானே? சைக்கிளை முன்வீட்டில விட்டால்தான் அதை எடுத்துக் கொண்டு போகலாம்.”

“பள்ளிக் கூடம் விட்டதுமே போகலாமே?”

“கோப்பாய் கிறிஸ்டியன் கொலிச் விட்டுப் பெட்டையள் ரோட்டில வாறநேரம், நாங்கள் அங்க நிற்க வேண்டும்.”

“அதுக்கு இஞ்சை இருந்து பதினைஞ்சு நிமிசம் முந்தி வெளிக்கிட்டால் தான் சரி சுப்புறு” ஸ்கொட் கூறினான்.

“பத்துநிமிசம் போதும். இரண்டு தரம் ஊன்றி உழக்க வந்திடும்.”

அங்க அழகான பெண் ஒருத்தியை எனக்கு சுப்புறு அறிமுகம் செய்து வைக்கப்போகின்றான். எனக்கு குதியாட்டமாய் இருந்தது. எப்படி முதலில் கதையை ஆரம்பிப்பது என்று எனக்குத் தெரியேலை. அது தெரியும் தானே என்று நினைத்து, எனக்குச்

சொல்லித்தரமால் விடப்போகின்றான்.

“என்னென்டு முதலில நான் பேசவேண்டும்..?” தயங்கிய படி கேட்டேன்.

“பேச்சு ஒன்றும் கிடையாது. உனக்கு எப்படி இந்த மார்பு பிடிக்கின்றது என்று காட்டித்தாறன்.”

எனக்கு அந்த இரவிலும் வியர்த்துக் கொட்டியது.

இரவிரவாக நித்திரையில் விதம் விதமான மார்புகளும், விதம் விதமான குடைகளும் வந்து வந்து
பயமுறுத்தின.

காலையில் முதல் வேலையாக சைக்கிள் கெரியலை சாவி போட்டு கழட்டி வைத்தேன்.

“டேய் கொப்பர் நாளைக்கு காலை சந்தைக்குப் போகவேண்டுமடா.” ஆச்சி புறுபுறுத்தாள்.

“சும்மா தொண தொணக்காதையன. இரவைக்கு திரும்பவும் பூட்டலாம்.”

சைக்கிளை ஓடும் போது தெரிந்தது. கட கட என்று ஒரே சத்தம். இவ்வளவு நாளும் எனக்கு கேட்காமல் இருந்திருக்கு.

வல்லிபுரம் கடையில் பிரேக் போட்டு நிறுத்தினேன்.

“அண்ணை சைக்கிளை ஒருக்கா கழட்டிப் பூட்;ட வேண்டும்.”

“உதில விட்டு பூட்டித் திறப்பை தந்திட்டுப்போம்.”

“பின்னேரம் எடுக்கலாமே அண்ணை.”

“ பின்னேரமோ? சனிக்கிழமை வந்து பாரும்.”

“அண்ணை அவசரமாய் வேணும். காசைப்பற்றிப் பிரச்சினை இல்லை.”

வல்லிபுரத்தார் ஏற இறங்க ஒருக்காப்பார்த்தார்.

“இருபது கூட வரும். ஓ கேயோ.?”

“ஓ கே அண்ணை.”

“நாளைக்கு மத்தியானம் வாரும். ரெடியாய் இருக்கும்.”

சைக்கிளை விட்டு விட்டு பள்ளிக்கு நடந்தேன்;. இரண்டு புறம் மாணவர்களும் மாணவிகளுமாய்
நடந்து கொண்டிருந்தனர். நடப்பதும் சந்தோசமாகத்தான் இருந்தது.

ஒரு பத்து அடி தூரத்தில் வனிதா போய்க் கொண்டிருந்தாள். அவளை உரசிக் கொண்டு தாண்டுவம்
என்று இரண்டு அடி எட்டு வைத்தேன். நேரம். பார்த்து,அரச வீதியால் வந்து கொண்டிருந்த மிஸ்சிஸ்
தவரட்ணம் டீச்சர் மெயின் ரோட்டுக்குள் ஏறினார்.

அவ எப்பவும் வெகு நிதானமாகத்தான் நடந்து வருவா. நடையில் எந்த அவசரமும் கிடையாது. இன்னமும் எத்தனை காலடி எடுத்து வைச்சால் பள்ளிக்கூட வாசலில் நிற்கலாம் என்று அவவுக்கு தெரியும்.

அங்கை இங்கை என்று எந்தப் பக்கமும் திரும்பிப்பார்க்கிற பழக்கமும் இல்லை. ஆனால் மனுசிக்கு என்னென்ன நடக்கிறது என்று தெரியும்.

"குட் மோனிங் டீச்சர்."

"குட் மோனிங். குட் மோனிங்."

"என்ன சைக்கிளைக் காணேல்லை. நேற்றைக்கு டவுனுக்கு போய் வந்ததில பழுதாப்போச்சுப் போல" ஒரு பார்வை பார்த்தார். அது கண்களை துளைத்து அதில் உள்ளதை படிக்க முயன்றது.

"இல்லைச் டீச்சர். காத்துப் போட்டுது. ஒட்ட விட்டிருக்கிறன்." மனுசி எங்கயோ வழி தெருவில, சுப்புறுவோட வைச்சு என்னைக் கண்டிட்டுது என்று எனக்குப் புரிந்துவிட்டது.

"வீட்டில ஒரு டொக்கிமனை விட்டுட்டன். சைக்கிள் எண்டால் நீர் எடுத்துக் கொண்டு வரலாம்."

"ஓடிப்போய் எடுத்துக் கொண்டுவாறன் டீச்சர்."

"மிக்க உபகாரமாய் இருக்கும். வீட்டில மகள் நிற்கிறா. இண்டைக்கு அவ கொலிச்சுக்குப் போகேல்லை. கதவை கொஞ்சம் ஊண்டித் தட்டும். ஏதாவது கதைப்புத்தகத்தோட இருப்பாள், கேட்காது. எண்ர மேசையில உள்ள பச்சை கலர்; அட்டை போட்டது எண்டு சொல்லும்."

டீச்சர் சொல்லி முடிக்க முதல் பறந்;தேன். டீச்சரின் மகளும் வடிவுதான். இராமநாதன் கொலிச்சில படிக்கிறாள்.

மெல்லமாக கதவைத் தட்டினேன். கதவு உடனேயே திறந்தது.

டீச்சரின் அம்மாதான் வந்தார். தலை மயிர் எல்லாம் நரைத்திருந்தது. முகத்தில் இரண்டு குழி விழுந்திருந்தது. அந்த குழிகளுக்குள் இருந்த கண்களைக் கொண்டு, என்னை ஒரு அசிங்கமான பிராணியைப் பார்ப்பது போல பார்த்தார்.

"என்ன வேணும்?"

"இல்லைஸ. டீச்சர் தன்ர டொக்கிமன் ஒன்றை விட்டுட்டாவாம்ஸ மேசையில பச்சைக் கலர் அட்டை போட்ட படி இருக்கும்ஸ." நான் முடிக்கும் என் முகத்திற்கு நேரே அது நீண்டது.

"ரோட்டில விழுத்தாமல் கொண்டு போடா."

இந்தக் கிழவிக்கு என் மேல் என்ன ஆத்திரம் என்று புரிந்து கொள்ள முயற்சி பண்ணினேன். அதற்குள் பள்ளிக் கூடம் வந்து விட்டது.

ஆசிரியைகளின் அறையடியில் நின்று எட்டிப்பார்த்தேன்.

வாசலில் என்னைக் கண்டதும் டீச்சர் உள்ளே வரும்படி சைகைகாட்டினார்.

பவ்யமாக அந்த டொக்கிமன்டை அவர் கையில் ஒப்படைத்தேன்.

“தாங்யூ சுந்து.”

ஜப்பானியர்களின் ஸ்டைலில் தலை சாய்த்து டீச்சருக்கு மரியாதை செய்து விட்டுக் கிளம்பினேன்.

He is my favourite student .....நல்ல பிள்ளை” மிஸ்சிஸ் தவரட்னம் சொல்லியது எனக்கும் கேட்டது.

பத்திரிகையும் கையுமாக இருந்தவர்கள், தமது கைப்பைக்குள் எதையோ தேடிக் கொண்டிருந்தவர்கள், தங்களுக்குள் ஏதோ வம்பளந்துகொண்டிருந்;தவர்கள் என்று எல்லா டீச்சர்மாரும் என்னை நிமிர்ந்து பார்த்தது என் உள்ளுணர்விற்குத் தெரிந்தது.

கர்வமாக இருந்தது. வகுப்பை நோக்கிப் போனேன். சுப்புறுவும் அப்போதுதான் வகுப்புக்கு வந்து
கொண்டிருந்தான்.

“சைக்கிளை கழட்டிப் பூட்டக் கொடுத்தனியே?”

“ஓம்”

“குட். நாளைக்கு பின்னேரம் மூன்று மணிக்கு மதில் பாயிறம். மறந்து போகாதே.”

“நான் உதுகளுக்கெல்லாம் வரேல்லை.”
சுப்புறு ஆச்சரியமாக என்னைப்பார்த்தான். அண்டம் காகம் கண்ணை உருட்டி விழித்தது போல கோணலாக முகத்தை சரித்து விழித்தான். பிறகு சிரித்தான்.

“உங்களுக்கு ஒரு சாண் கதைதான்டா சரி” திரும்பியே என்னைப் பார்க்கவில்லை, போய்விட்டான்.

அதற்குப் பிறகு என்றைக்குமே என்னை திரும்பிப் பார்த்தது கிடையாது. சுப்புறு நல்லவன், யாரைப்பற்றியும் யாருக்கும் எந்தக் காலத்திலும் சொன்னவன் இல்லை.

பதிவுகள் ஜூலை 2005 இதழ் 67

## 20. வளைந்து போன வீரவாள்! - செழியன் -

மார்கழி மாத விடுமுறை விடவும் மாமா வந்து இறங்கவும் சரியாக இருந்தது. மார்கழி மாத விடுமுறையில் பெரிய பெரிய வசதிகள் எல்லாம் இருக்கின்றது. முப்பது நாட்களுக்கும் குறையாமல் வருகின்ற மிகப் பெரிய பள்ளிக்கூட விடுமுறை இது

என்பதால் பள்ளிக்கூடம் போகாதவர்களுக்கும் கூட முக்கியத்துவம் வாய்ந்த விடுமுறை இது.

இறுதிப் பரீட்சை முடிந்ததின் பின்னர் வருவதால் 'புத்தகத்தை எடுத்துப் படியடா' என்கின்;ற வன்முறைகள் எதுவுமே கிடையாது. அன்டை நாட்டுக்கு எதிரான பெரும் படையெடுப்புக்குத் தயாராவது போல, அடுத்த கட்டப் பயிர்ச்செய்கைக்காக

ஒட்டுமொத்த யாழ்ப்பாணமும் தயாராகின்ற காலகட்டம் என்பதால் 'மிளகாய்ப் பழம் பிடுங்க வாடா', 'கத்தரிக்காயை கழுவிச் சாக்கில் கட்டு' என்கின்ற சிறுவர்கள் மீதான கொடுமைகளும் தற்காலிகமாக ஒத்திவைக்கப்பட்டுவிடும்.

'தம்பியின் கொப்பிப்பேப்பரை கிழித்து விதம் விதமாகக் கப்பல் செய்து விடுவது', 'முழங்காலை நனைத்துக் கொண்டு நின்று, தெருவில் ஓடி வருகின்ற வெள்ளத்தை கரிகாலன் பாணியில் அணை கட்டி வெடிவாணரின் வளவுக்குள்ளை விடுகின்றது'

போன்ற வித்தைகளைக் கற்றிருந்தால் இந்த மார்கழி மழை கூட ஒரு பெரிய பிரச்சனை கிடையாது.

ஒட்டுமொத்தமாகக் கூறுவது என்றால் இடை இடையே வந்து போகின்ற பேச்சுவார்த்தைக் காலகட்ட குதூகலம் போல மார்கழி விடுமுறை இருக்கும். இதிலே வசதி என்னவென்றால் இந்த கண்காணிப்புக் குழு போன்ற பிரச்சனை ஒன்றுமே கிடையவே கிடையாது.

வழமைபோல ஒரு பழைய ச+ட்கேசுடன் மாமா வந்து இறங்கினார். அதற்கு இரண்டு பூட்டு போட்டுப் பூட்டி வைத்திருப்பார். சூட்கேசுக்குள் முகச்சவரம் செய்வதற்கான சவர அலகு, சின்னக் கண்ணாடி மற்றும் தட்டுமுட்டுச் சாமான்களுடன் ஒரு

கால்சட்டையும் இரண்டு மூன்று சட்டைகளுடன் ஒரு கிழிந்த பெனியனும் இருக்கும். நிச்சயமாக சாரம் மற்றும் துவாய் வைத்திருக்க மாட்டார்;. இரண்டு நாளைக்கு ஒரு தடைவை நாங்கள் தான் அவற்றை அவருக்கு 'சப்ளை' செய்ய வேண்டும்.

இந்த சமாசாரங்களுக்கும் அப்பால் ஒரு புத்தம் புதிய கத்தி அல்லது புது மண்வெட்டி, வாள்

அல்லதும் போனால் கூர்மையான ஒரு கோடாலி நிச்சயமாய் சூட்கேசுக்குள் வைத்திருப்பார். பழைய சிங்களப் பேப்பர் ஒன்றில் மிகக் கவணமாகச் சுற்றப்பட்டு, அடிப் பெட்டிக்குள் இது பாதுகாப்பாக வைக்கப்பட்டிருக்கும். யாராவது இதைப் பார்த்தால் மாமா ஏதோ பெரிய சண்டியர் என்று நிச்சயமாக நம்புவார்கள்.

பதினாறு வயதில் அப்புவிடம் அடிவாங்கிக் கொண்டு வீட்டை விட்டு ஓடிப்போனவர்தான் இந்த மாமா. 'முற்றத்துக் கொடியில் காய்ந்து கொண்டிருந்த அப்புவின் கோமணத்தில் முடிந்திருந்த இருபது ரூபாயைக் களவெடுத்துக் கொண்டு ஓடிப் போய்ட்டான்'- ஆச்சி அலுக்காமல் அடிக்கடி இதைச் சொல்லுவா.

டிக்கட்டும் எடுக்காமல் இரயில் ஏறிப் போனவர் சிங்களம், இங்கிலீஸ் எல்லாம் அளவாகப் படித்து இன்றைக்குப் பெரிய ஒரு அரசாங்க உத்தியோகத்தர். இப்போ அநுராதபுரத்தில் இருந்து இருபது மைல் தூரத்தில் இருக்கின்ற ஒரு சிங்களப் பகுதியில் 'பெரும் தெருக்கள் திணைக்களத்தில்' ஸ்டோர் கீப்பராக வேலை செய்கிறார்.

அடிக்கடி வேலை காரண நிமிர்த்தம் அவருக்கு இட மாற்றங்கள் கிடைக்கும். விடுமுறைக்கு வந்து போகிறபோது தவறாமல் புதுக் கத்தி, கரண்டி, கோடரி என்று விதம் விதமாய்க் கொண்டு வந்து அம்மா, பெரியம்மா, சின்னம்மாவுக்கு கொடுத்து, பதிலாக உடைந்து முறிந்த பழைய சாமான்களை அள்ளிக் கொண்டு போய் கணக்குக் காட்டுவதில் ஆள் ஒரு பெரிய கிள்ளாடி. அவருடைய இந்த சேவைக்காக யாழ்ப்பாணம் வரும் போதெல்லாம் மேலதிக உபசரிப்புகள் எப்போதும் அவருக்கு உண்டு.

இது மட்டுமல்லாது 'தடியன்;', 'எருமையன்', 'குத்தியன்' என்று அப்பா, பெரியப்பா மற்றும் சின்னய்யாவை, அவர்கள் இல்லாத சமயமாகப் பார்த்து மாமா திட்டுவதைப்பற்றி மூன்று பெண்களும் கண்டு கொள்வதும் இல்லை.

மாமா வந்தால் எங்களுடைய வீட்டில் தான் தங்குவார். அந்த இரண்டு மூன்று கிழமைக்குள் மாமா நடத்துகின்ற தர்ப்பாரில் அம்மா மனம் கிழிந்து, இட்டிலி அவிக்கின்ற துணிபோல நொய்ந்து போய்விடுவாள்.

"இவருக்குத் தான் ஏதொ ஒரு பெரிய குறு நில மன்னன் என்ற நினைப்பு." ஆத்திரத்தில் அம்மா ஒரு தடைவை வாய் விட்டுக் கூறினாலும் இது மாமாவுக்கு கேட்டு விட்டதோ என்று பயந்து போனாள்.

நல்ல வேளை அது எனக்கு மட்டும் தான் கேட்டது. ஆனால் எனக்கு மாமாவைப் பார்க்கின்ற போதெல்லாம் குறுநில மன்னனைப் போலத் தோன்றியதே இல்லை. கல்கியின் தொடர் கதையில் வருகின்ற வீர பாண்டியனின் நினைவுதான் வரும்.

வீரவாளை இழந்து விட்ட பின்னரும் கம்பீரமாகக் குரல் எழுப்பிப் பாட்டுப் பாடிக் கொண்டு திரிகின்ற சுந்தர பாண்டியன்.

கல்கியின் கதையில் ஒரு வசதி இருக்கிறது. அரசன் பிடிபட்டாலோ அல்லது கொல்லப்பட்டாலும் பிரச்சினை முடிந்து போவதில்லை. இந்த மணிமுடியையும், வீரவாளையும் மட்டும் எங்காவது ஒளித்து வைத்துவிட்டால் போதும். பிறகு சமயம் பார்த்து அந்த வீரவாளையும், முடியையும் யாராவது தூக்கிக் கொண்டு மறுபடி ஆட்சியைப் பிடித்துவிடலாம். நல்லகாலம் இந்த வசதி இப்பபோது கிடையாது. இருந்தால் யாருடைய துப்பாக்கியை யார் எடுத்துக் கொண்டு வந்து நிற்பார்கள் என்று சொல்ல முடியாது.

மாமா வீரவாளை வெகு பவுத்திரமாக எங்கோ ஒளித்து வைத்திருப்பதாகவே எனக்குத் தோன்றும்.

எங்களுக்கும் இந்த மாமாவினால் பெரிய ஆக்கினை. ஏதோ ஆபத்து சமயத்துக்கென்று தயாராக வைத்திருப்பதைப் போல அவர் வைத்திருக்கும் ஒரே பெனியனையும் ஜட்டியையும் நானும் தம்பியும் தோய்த்துக் கொடுக்கவேண்டும். கை படாமல் அதைத் தோய்த்து எடுத்து அலசிக் காயப்போடுவது §யுளுயு வின் புது முயற்சி போன்ற ஒரு அபூர்வமான வேலை.

இதை விட அவருடைய சாப்பாட்டுக் கோப்பை, தேத்தண்ணிக் கோப்பைகளைக் கழுவுவது, கடைக்குப் போய் அவர் சொல்லுற சாமான்கள் வாங்கிக் கொண்டு வருவது, சைக்கிளின் பின்னால் அவர் இருக்க, வேர்வை வழிய வழிய சைக்கிள் மிதிப்பது,

வழியில் திடீரெனச் சைக்கிளை விட்டுக் குதித்து யாருடனாவது வம்பளக்கும் போது மிகப் பொறுமையாக காத்திருப்பது என்று பல விதமான வேலைகளும் எமக்கு இருக்கும்.

எல்லாவற்றையும் தாங்கிக் கொண்டு விடுவோம். மாமா கடைசியாய் யாழ்ப்பாணம் கூட்டிக் கொண்டு போய்க் காட்டுகின்ற படத்துக்குக்காகவும், மலாயன் கடை வடை, தேத்தண்ணிக்காகவும் இன்னும் எத்தனை வந்தாலும் தாங்கிக் கொள்ளலாம்.

“மாமாவுக்கு ஏன் மாமி இல்லை” என்று மிக நீண்ட காலமாக எனக்குள் குடைந்து கொண்டிருந்த கேள்வியை ஒரு நாள் பொறுக்க முடியாமல் அம்மாவிடம் கேட்டு விட்டேன்.

ஒரு தடைவ என்னை முறைத்துப் பார்த்தாள். “ உனக்கு என்னத்துக்கடா?” என்று முறுகல் முறுகி விட்டு “ மாமி செத்துப் போய்விட்டார்” என்று அம்மா சொல்லியதை நான் நம்பவில்லை.

அம்மாவும் பெரியம்மாவும் குசு குசுக்கின்ற போது மிகத் தந்திரமாக ஒட்டுக் கதை கேட்டுத் தம்பி தான் விசயத்தை ஒரு நாள் கூறினான். ஒட்டுக் கதைகள் கேட்டு ஆளுக்கு ஆள் பிரச்சனைகள் உண்டு பண்ணுவது, இவனுக்கு கில்லி விளையாட்டுப் போல ஒரு விளையாட்டு.

இவனைப் பார்த்தால் ஒட்டுக் கதை கேட்கின்றான் என்று யாருமே நம்ப மாட்டார்கள். அயன்ஸ்டீனின் ஏதோ ஒரு கொள்கையை எடுத்து பரீட்சித்துப் பார்ப்பதைப் போல பரபரப்பாக ஏதோ செய்து கொண்டிருப்பான். கைகள் கிறு கிறுவென வேகமாக வேலை செய்யும். நெற்றியையும் கண்களையும் அடிக்கடி சுருக்கியும் விரித்தும் தன்னுடைய மூளை அந்த இடத்தில் இல்லை என்று காட்டிக் கொள்வான், சில சமயம் தன்னுடைய பாட்டில் ஏதோ புலம்புவான். காதுகளை மட்டும் தன்னுடைய இந்த வேலைகளோடு எதுவும் சம்பந்தம் இல்லாமல் தள்ளி வைத்துக் கொள்வான். அதை எத்தனை பாகையில் சரியாக சரித்து வைத்துக் கொள்வது என்பது அவனுக்கு மட்டும் தெரிந்த கலை.

“மாமி எப்பவோ ஓடிப்போய்;டா.”

எனக்குக் கண்ணீர் வந்தது. பாவம் மாமி எவ்வளவு பொறுமையாய் இருந்திருப்பாள். மூவேந்தர்களுக்குள் இருந்திருக்கக் கூடிய அறிவு குறைந்த ஒரு மூட வேந்தனைப் போல் மாமா போட்ட மிக மட்டமான அட்டகாசங்களை எல்லாம் பொறுத்துக் கொண்ட வாயில்லாப் பூச்சி.

அடிக்கடி மாமி கிணற்றுக் கட்டில் குந்தி இருந்து கண் கலங்குகின்ற காட்சி எனக்குள் வந்தது. அவள் கண்ணீர் கலந்த தண்ணீரைத்தான் ச+ழ இருந்த இந்த எல்லாக் குடும்பங்களுக்கும் குடித்திருக்கும். ஆனால் மாமியின் மீது எந்த ஒரு கருணையும் காட்ட மறுக்கின்றது.

“மாமி ஓடிப் போயிருக்க மாட்டா, மாமா தான் துரத்தி விட்டிருப்பார்.” நான் இப்படிச் சொன்னதையும் கேட்டு வைத்துக் கொண்டான் தம்பி. நேராக பெரிம்மா வீட்டுக்குப் போனான். போனவன் சின்னக்காவிடம் போட்டுக் கொடுத்து நல்ல பிள்ளை என்ற பட்டத்தை தொடர்ந்தும் தக்க வைத்துக் கொண்டான்.

தெருவில போன ஓணானை மடியில பிடிச்சுக் கட்டிவைச்ச மாதிரித்தான் என்னுடைய தம்பி. ஒரு மாதிரியான நிலையில் தான் தம்பியுடனான எனது வாழ்கை போய்கொண்டிருந்தது. அடிக்கடி என் காலை வாரிவிட்டு விடுவான்.

“வர வர உன்னுடைய பழக்கங்கள் சரியில்லைஸ. ஒரு இத்துனியாய் இருந்து கொண்டு

பெரிய விசயங்களுக்கை தேவையில்லாம் மூக்கை நுளைக்கின்றாய். குஞ்சப்பாட்;டை சொல்லட்டேஸ" சின்னக்கா மிரட்டினாள்.

அவள் லேசில சொல்லமாட்டாள். சொன்னால் அவள் தாற கடிதங்களைக் குடுக்க இனி வேற ஆளத்தான் அவள் பார்க்க வேண்டும்.

மாமியால் தாங்க முடியாத மாமாவின் அட்டூழியங்களை எல்லாம் என்னுடைய அம்மா என்ன வென்று தலைக்கு மேல்;; தாங்குகிறாள் என்பது எனக்கு அதிசயமாய் இல்லாவிட்டாலும், அது அற்புதங்களில் ஒன்றாக ஆவது இருக்கக் கூடியது என்று தோன்றியது.

ஒட்டுக் கதை மன்னன் இதையும் கண்டு பிடித்துச் சொல்லி விட்டான். எங்களுடைய புது வீட்டைக் கட்டி முடிக்க வட்டியே இல்லாமல் இருபது ஆயிரம் ரூபாய் மாமா கொடுத்த கதை தெரிந்த பின்னர், அம்மா மிகவும் நியாயமாய் நடப்பதாகவே எனக்குத் தோன்றியது. நீதி நியாயங்கள் தெரிந்தவள்.

மாமா இந்த முறை வரும் போது எப்படியாவது எங்களுடைய ரேடியோவைக் கொண்டு வருவார் என்ற நம்பிக்கையோடு நானும் தம்பியும் இருந்தோம். ஆனால் அவர் வழமை போல கொண்டுவரவில்லை. எனக்கும் தம்பிக்கும் சரியான கோபம் வந்தது.

அவருக்கு முன்னால் காட்டிக்கொள்ளவில்லை. அது சாத்தியமான விடயமும் இல்லை.

இந்த ரேடியோப் பிரச்சனை ஒரு நீண்ட காலப்பிரச்சனை. அப்பாவிடம் ஒரு பழைய பிலிப்ஸ் ரேடியோ இருந்தது. ஆறு மாதத்துக்கு ஒரு தடைவ அதற்கு மிகப் பெரிய பற்றி வாங்கிப் போடுவது கட்டுப்படி ஆகாது என்பது கூட பிரச்சனையாக இருந்ததில்லை. வாரத்துக்கு இரண்டு தடைவை மாமரத்துக்கும் புளிய மரத்துக்கும் இடையில் தொடுத்து கட்டியிருந்த ஏரியல் அறுந்து விழ விழ மறுபடியும் ஏறிக் கட்ட வேண்டும் என்பது பெரிய பிரச்சனை. ஒரு தடைவ மாமரத்தில் ஏறும் போது அப்பா சறுக்கி விழுந்தும் விட்டார்.

“இந்தக் குத்தியனுக்கு ஏன் இந்த வேலை?” என்று அம்மாவிடம் மாமா செல்லமாகத் திட்டினார். அம்மா இதுகளையெல்லாம் காதில் விழுந்த மாதிரியே காட்டிக் கொள்வதில்லை.

“இந்த ரேடியோவை நான் முதியான்சேயிடம் கொடுத்து டிரான்சிஸ்டர் ரேடியோவாக மாற்றிக்கொண்டு வருகிறேன்” என்று கூறிக் கொண்டு போனவர் தான் இரண்டு வருடமாயும் திருப்பிக் கொண்டு வரவில்லை. ஒவ்வொரு முறையும் வரும் போது

அடுத்த முறை கொண்டுவருவதாக சளைக்காமல் கூறுவார்.

'கழுவிக் காயப் போடும் போது மாமாவின் கோவணத்துக்குள் காஞ்சோண்டி இலையைப் பூசி விடவேண்டும்.' தம்பி கண்ணி வெடி வைப்பதற்குத் திட்டம் போட்டது போல திட்டம் போட்டான்.

இவனுடன் சேர்ந்து திட்டம் போடுவது காஞ்சோண்டி இலையை நானே பூசிக் கொள்வதை விட மோசமான நிலைமைக்கு என்னைக் கொண்டு போய்ச் சேர்த்து விடும். இது எனக்குத் தெரியும். அதனால் அவனுடைய திட்டம் பிடித்திருந்தாலும் எடுத்த எடுப்பிலேயே நிராகரித்து விட்டேன்.

'சமாதான ரீதியான ஏதாவது திட்டம் போட்டால் தான் சரி' என்று நான் கூறியதை தம்பி சற்று சந்தேகத்துடனேயே பார்த்தான்.

சற்றும் எதிர்பாராமல் அம்மாவே ஒரு திட்டம் போட்டுக் கொடுத்தாள். "டேய் நீங்கள் இரண்டு பேரும் மாமா போகிற போது அவரோடையே போய், வரும் போது ரேடியோவையும் எடுத்துக் கொண்டு, மாமா வாங்கித் தாற அரிசியையும் கொண்டு வாங்கோவன்டா."

மாமாவுக்கும் இந்தத் திடீர்த் திட்டம் பிடித்துக் கொண்டது ஏன் என்று பிறகு தான் எனக்கும் தம்பிக்கும் தெரிய வந்தது. அவர் சில மூட்டைகளை அநுராதபுரத்திற்கு கடத்தல் செய்ய என்னையும் தம்பியையும் நம்பி முழு ஏற்பாடுகளையும் செய்து முடித்தார்.

புது வருடம் முடிந்ததும் மாமாவின் விடுமுறையும் முடிவுக்கு வந்து விட்டது.

வெங்காயம், செத்தல் மிளகாய், பாணிபோட்ட போயிலை சகிதம் இணுவில் ஸ்டேசனுக்குச் சென்று ரெயின் எடுப்பதற்காக நாங்கள் வெளிக்கிட்டோம்.

வேலிக்குப் பின்னால நின்று சர சர என்று சத்தம். பெரியம்மா அவரமாய் ஆனால் பதுங்கிப் பதுங்கி வந்தாள்.

பெரியம்மா முன் வாசல் வழியால் எங்கட வீட்டுக்கு வந்ததை ஒரு நாளும் நான் கண்டதேயில்லை. எப்பவும் அவள் பொழுது விழுந்ததுக்கும் பிறகு: வேலியைப் பொத்துக் கொண்டு, கிணத்தடிப் பக்கமாய் நின்று, திடீரென்று ஒரு மரத்துக்குப் பின்னாலை அல்லது ஆட்டுக் கொட்டிலுக்குள் பதுங்கி இருந்து அதிரடியாய் வந்து தரிசனம் தருவாள். அவளுக்கு என்ன பாதுகாப்புப் பிரச்சனை என்று கரிசனையாய் கேட்டறிய யாருமே யோசித்ததில்லை.

கையில் கட்டுக் கிளுவம் இலையோட வந்த பெரியம்மா தம்பியின்ட காதுக்குள்ளை சொன்னாள் "ஆளுக்கொரு மூட்டையோடை வந்திடுங்கோடா."

அநுராதபுரம் ஸ்டேசனில இறங்கி மாமாவின் குவாட்டசுக்கு போவதற்கான பஸ்சில் ஏறும் வரை பட்டவேதனைகளை சொல்ல முடியாது. என் தம்பிக்கு கை வீங்கியே விட்டது. இரகசியமாய் அழுதிருப்பான் போலவும் தோன்றியது.

குவாட்டசுக்கு அருகிலேயே பஸ் நின்றது. இறங்கியதுமே மாமாவை எதிர்பார்த்துக் காத்திருந்தது போல லொக்கு பண்டா எங்களடிக்கு வந்து விட்டான். அவன் தான் அந்தக் குவாட்டசுக்கு காவல்காரன். இவனுக்கு காவலுக்கு இரண்டுபேரைப் போட வேண்டும் போல எனக்கிருந்தது.

"ஐயா" என்று சிங்களத்தில் பணிவாக அழைத்தவன் தன்னுடைய புத்தாண்டு வாழ்த்துக்களை மாமாவுக்கு தெரிவித்தான். மாமாவும் பதிலுக்கு புத்தாண்டு வாழ்த்துக்களைத் தெரிவித்தார்.

லொக்கு பண்டா எங்களை ஆச்சரியமாகப் பார்த்தான். எங்களை மாமா சிங்களத்தில் அறிமுகம் செய்து வைத்தார்.

"ஓ.." என்று இழுத்தவன் "ஸ்கூல் எல்லாம் லீவு தானே இப்ப" என்று தமிழில் எங்களைப்பார்த்துக் கூறினான்.

மூட்டைகளை வெகு அனாயாசமாகத் தூக்கிக் கொண்டு வந்து இறக்கி வைத்தான். மாமாவின் இருப்பிடம் எனக்கு மிக்க அசௌகரியமாக இருந்தது.

'எங்களுடைய ஆட்டுக் கொட்டில் இதைவிடப் பெரிசு' தம்பி குசு குசுத்தான். அவனுடைய காலில் நான் ஒரு மிதிமிதிக்க அமைதியாகி விட்டான்.

லொக்கு பண்டா காலையில் வருவதாகக் கூறி புறப்படும் போது "பெரிய மாத்தையா வந்து விட்டாரா?" என்று மாமா கேட்டார்.

"மாலையிலேயே வந்து விட்டார்" என்று கூறியபடி இருட்டுக்குள் போய் மறைந்துவிட்டான்.

"மாமா ரேடியோ எங்கே?"

லொக்கு பண்டா போனதுமே ஆவலாய் கேட்டேன். அதை ஒரு தடவையாவது பார்த்துவிட்டால் பட்ட கஸ்டங்கள் நீங்கி விடும் போல இருந்தது.

“இப்ப படுங்கோடா. அதையெல்லாம் காலையில பார்க்கலாம்” என்று கடுமையாகக் கூறினார்.

ஒரே ஒரு மரக்கட்டில் இருந்த அந்த இடத்தில் எப்படி படுப்பது என்று தீவிரமாகத் தம்பி யோசித்தான். மாஜ¢சியன் சர்க்காரைப் போல மாமா ஒரு இடத்தில் கைவைத்து இரண்டு சாக்குகளை எடுத்து  தந்தார்.

“இதிலை படுங்கோ. சாராத்தாலை போர்த்துக் கொள்ளுங்கோ”

எனக்கும் தம்பிக்கும் நித்திரை வரவில்லை. மாமாவின் குறட்டை சத்தம் கேட்டதும் தம்பி துள்ளி எழுந்தான். அந்த இருட்டுக்குள் பரபரப்பாக எதையோ தேடினான்.

கள்ள நாய். இவன் மாமாவின் காசை ஏதும் களவெடுக்கின்றான் போல. எனக்கு ஆத்திரம் வந்தது. ‘மாமாவை எழுப்பிச் சொல்லுவமோ’ என்று நான் நினைக்க, மறுபடியும் என்னருகில் வந்து படுத்தான்.

மெல்ல என்னை சுரண்டினான். நான் ஆத்திரத்தில் பேசாமலே இருந்தேன்.

“ரேடியோ இருக்கிறது” என்று கூறினான். நான் திரும்பவே இல்லை. ஆனால் மனதுக்கு சந்தோசமாக இருந்தது. நின்மதியாக நித்திரை வந்தது.

பரபரப்பாக காலையில் எழுந்த மாமா “இரண்டுபேரும் வெளிக்கிடுங்கோ” என்று அவசரப்படுத்தினார். எங்கு எதற்;கு என்ற எந்த விபரமும் மாமா வழமையாக கூறுவதில்லை.

பாணிபோட்ட போயிலை மூட்டையில் இருந்து நல்லதாய் இரண்டு போயிலை கட்டுகளைத் தேடி எடுத்துக் கொண்டார். யாரையோ முக்கியமாக சந்திக்கப்போகின்றார் என்று நினைத்தேன்.

அந்த குவாட்டசை விட்டு வெளியேறி இன்னொரு குச்சு ஒழுங்கை வழியாக சிறிது தூரம் நடந்தோம். ஒரு சிறு கல் வீட்டுக்கு முன் நின்றார். எங்கள் இருவரையும் பார்த்தார்.

“ஒரு பிரச்சனையும் இல்லாமல் அமைதியாய் இருக்கவேண்டும்” என்று மிரட்டல் தொனியில் கூறினார். இப்படியான சந்தர்ப்பங்களில் என்னுடைய தலை எனக்கும் தெரியாமல் தானாகவே ஆடிவிடும். தம்பி யோசித்துத் தான் ஆட்டுவான்.

“பின்னாலேயே வாங்கோ”

மூங்கிலால் செய்த படலையை திறந்து கொண்டு மாமா அந்த வீட்டு வளவுக்குள் காலடி வைத்தார். எனக்கு ஒரே பரபரப்பாக இருந்தது. சிங்கள மாமியைத் தான் சந்திக்கப் போகின்றோமோ?

வீட்டுக் கதவைத்தட்ட ஒரு பெண்மணி கதவைத்திறந்தாள். அழகான பெண்மணிதான். மாமியா ஏற்பதற்கு எனக்கு ஒரு பிரச்சனையும் இல்லை நான் தயார்.

“நோனா” சிங்களத்தில் மாமா கூறினார்.

“ஓ! யாப்பண இரிந்து வந்ததா?........ உல்லுக்கு வந்தி கொஞ்சம் இரிங்க.”

அந்தப் பெண் உள்ளே சென்று விட்டார். நானும் தம்பியும் ஒருவரை ஒருவர் கண்களால் பார்த்துக் கொண்டோம். தம்பியின் முகத்தில் பெரும் விசமம் கொப்பளித்துக் கொண்டிருந்தது.

மாமா போயிலையை இரண்டு கைகளாலும் ஏந்தி ஒரு வீரனைப்போல தயாராக நின்று கொண்டிருந்தார்.

இரண்டு நிமிடத்தில் யாரோ வரும் காலடிச்;சத்தம் கேட்க மாமா பரபரப்பாகினார்.

வெறும் மேலுடன், கண்ணாடியும் சாரமும் அணிந்த ஒரு மனிதர் வர தடாலென்று மாமா சரிந்து விழுந்தார்.

மாமாவுக்கு என்ன? நான் திடுக்கிட்டேன்.

“மாத்தையா! புத்தாண்டு வாழ்த்துக்கள்” மாமாவின் குரல் பாதாளத்தில் இருந்து கரகரப்பாக கேட்டது.

“ஓ. கே. நட்ராஜ¡” மாத்தையா கட்டைக் குரலில் கூறினார். அவர் தான் மாமாவின் மேலதிகாரி.

ஏதோ ஒரு வளையில் மாட்டிக் கொண்ட கரடியைப் போல், மிக மெல்லமாக, கஸ்டப்பட்டு எழுந்த மாமா, சளைக்காமல் தனது முதுகை வளைத்து குனிந்து மாத்தையாவிடம் பாணிப் போயிலையை நீட்டினார்.

பாணிப்போயிலையைக் கண்டதும் மாத்தையாவின் விரிந்த முகம் அகலப்பக்கமாக இன்னமும் விரிந்தது.

தம்பியைப் பார்த்தேன். காணக் கூடாததைக் கண்டதைப் போல் அதிர்ச்சியில் நின்று கொண்டிருந்தான். மறுபடி அநுராதபுரம் புகையிரத நிலையத்தில் இருந்து, இரயில் வண்டி புறப்படும் வரை எதைப்பற்றியுமே அவன் மூச்சே திறக்கவில்லை.

இப்போதெல்லாம் மாமாவைப் பார்க்கின்ற போது எனக்கு பாண்டியனின் நினை வருவதேயில்லை. வளைந்து போன ஒரு வாளின் நினைவு மட்டும் மறுபடி மறுபடி வந்து தொலைக்கின்றது.

* [ஜேர்மன் 'பூவரசு' இதழ் நடாத்திய சிறுகதைப் போட்டியில் முதல் பரிசு பெற்றது]

chelian@rogers.com
பதிவுகள் ஆகஸ்ட் 2005 இதழ் 68 -

## 21. ' ஒரு மோதிரமும் சில பேய்க்கனவுகளும்' - - ஆபிதீன் -

- ஆபிதீன் -வாப்பா தன் கடைசி காலத்தில் அணிந்திருந்த மோதிரம் பற்றி எழுதினால் என்ன என்று தோன்றிற்று. (உலகத்தில் வேற விஷயமே இல்லை , பாருங்கள்!) மோதிரத்தை எங்கே வாங்கினார்கள் , யாரிடம் கொடுத்தார்கள் என்று குறிப்பிட்டிருக்கிறார்களா என்பதற்காக அவர்களின் டைரி ஒன்றை புரட்டினேன். வருடா வருடம் எழுதும் டைரி அல்ல அது. கிழிந்துபோன வாழ்க்கை மொத்தத்திற்கும் ஒன்று. ஊரில் பால் பண்ணை வைத்து சொந்தக்காரர்களால் ஏமாந்தது, நாகப்பட்டினத்திற்கு கப்பலில் வந்து இறங்கிய காலத்தில் திமிர் பிடித்த கஸ்டம்ஸ்காரன் போட்ட டூட்டி, பினாங்கில் வாங்கிய தொப்பித் துணி சாயம் போயிருந்தது , பூட்டியா ஆயிஷாம்மா கனவில் சொன்ன சில செய்திகள் பின் உண்மையாகிப் போனது, குணங்குடியப்பாவின் எக்காலக்கண்ணி ஒரிரண்டு, கையானம் காய்ச்சுவது எப்படி?, நான் பிறந்தபோது அசல் சீனாக்காரன் சாயலில் இருந்தது, 'கடவுள் மனது வைத்தால் கழுதை கூட குஸ்தி போடும்' என்ற கனைப்புகள் என்று பலதும் அதில் இருக்கும். மோதிரம் பற்றி மட்டும் இல்லை. 'கமர் பஸ்தா ஹோனா' என்று தலைப்பிட்டு , எந்த ஆலிம்ஷாவோ பேசியதை பேசியதுபோலவே எழுதி அடிக்கோடிட்டும் வைத்திருந்த 786 வது பாரா மட்டும் என்னைக் கவர்ந்தது. 'மாக்கான் வருவான்' என்று பிள்ளைகளுக்கு - நாலு வருடத்திற்கு ஒருமுறை ஊர் வந்து- பூச்சாண்டி காட்டிய வாப்பா பயந்ததின் அடையாளங்களில் ஒன்று.

'நாம பயப்படுறதுலெ 99.99% நடக்குறதில்லை. எது நடந்துடுமோண்டு நினைக்கிறோமோ அது நடக்காது. பயம் வருதுல்லெ? ஒரு தாள்லெ எழுதி வச்சுக்குங்க. இப்படி ஒரு பயம் வருது...இப்படி ஆயிடுமோண்டு தோணுதுண்டு குறிச்சி வச்சிக்குங்க. அப்புறமா அதை எடுத்துப் பாருங்க. ஒண்ணும் நடந்திருக்காது!. இப்படி உள்ள பயம்தான் நம்ம லை·ப்லெ முக்காவாசி நேரத்துலெ செஞ்சிட்டு வரோம்ட்டு புரியும்..வேற வார்த்தையிலெ சொன்னா உங்க லை·ப்லெ இதே மாதிரி முட்டாள்தனமான காரியத்துக்குத்தான் டைம் செலவு பண்ணியிருக்கீங்கண்டு புரியும். 'புள்ளக்கி அம்மை வாத்துடுமோண்ட நினைப்பு..அந்த நினைப்புலெ சோறு உண்ண முடியாம போறது...பேச வேண்டிய செய்தியை பேசாம போறது..·போன் call-ஐ அட்டென்ண்ட் பண்ண முடியாம ஆயிடுறது...நல்லா பேசுறாவங்கள்ட்டெ கூட தூக்கியெறிஞ்சி பேசுறது..இந்த reaction லாம் வரும். எழுதிவைங்க. அப்பவே பயம் பாதி குறைஞ்சி போயிடும்!'

இதை மட்டும் எழுதிய வாப்பா தனது பயங்களை ஏன் எழுதி வைக்கவில்லை; எல்லா சபராளிகளுக்கும் அது பொதுவென்றா என்ற கேள்விகள் எழுந்தன. அடுத்த நிமிடம் தூக்கில் போடப் போகிறவனிடமோ அல்லது உயிரைத் துச்சமாக நினைத்து களத்தில் நிற்கிற போராளியிடமோ, ரிபோர்ட்டரிடமோ 'எழுதி வை; ஒன்றும் நடக்காது' என்று சொன்னால் அறிவுரை சொன்ன அந்த ஆலிம்ஷாவைப் பற்றி அவர்கள் என்ன நினைப்பார்கள் என்ற கவலையும் வந்தது.

ஆளாளுக்கு அறிவுரை சொல்ல ஆரம்பித்து விட்டதால்தான் 'ஷைத்தானுக்கு அஞ்சாதீர்கள்; எனக்கே அஞ்சுங்கள்' என்று கட்டளையிடும் ஆண்டவன் பயந்துகொண்டு வெளியில் தலைகாட்டுவதில்லை என்று பட்டது. அப்படியும் சொல்ல முடியாது. பயத்தைச் சொன்னால் , 'பயப்படாதீங்க. எல்லாம் சரியாப் பொயிடும்' என்று மூக்குப்பொடி அடைத்த தாயத்து போடுபவர்களுக்கு அந்த ஆலிம்ஷா எவ்வளவோ தேவலைதான். தாயத்து பற்றி எழுதும்போது நண்பன் பாஸ்கரனின் ஞாபகம் வருகிறது. சூலமேந்திய சிவனுக்கும் துர்க்கைக்கும், வெட்டரிவாளோடு திரியும் வால்முனீஸ்வரனுக்கும் பயப்படாதவன் ('டேய் அமீரு... இதெல்லாம் எங்கள்ட்டேர்ந்து அவங்களை பாதுகாக்கடா..!') மேலவாஞர் போய்விட்டு இரவில் திரும்பும்போது இரத்தம் கொட்டும் கண்களை உடைய ஒரு வெண் உருவத்தை , காந்திமேடைப் பக்கத்தில்-பார்த்து பயந்து போனான். அது இடிப்புகளின் இன்னல் தெரிந்த தேசப் பிதாவாகக் கூட இருக்கலாம். வீட்டையே சுட்டெரிக்கும் அகோரக் காய்ச்சல். வாசலில் வேப்பிலை. 'ரரரர ரரரர ரரரர ரரர ரிரிரிரி ரிரிரிரி ரிரிரிரி ரிரிரி...' - தேவராய சுவாமிகள் அருளியதெல்லாம் காக்கவில்லை. எஜமானின் தர்ஹாவுக்கு போகலாமா?

'தேனே யுறுதி வையவர் பேரிலே - யவர்
தானே யுதவு வாரினு நேரிலே'

தானாகவே கையால் 'பூட்டு' பூட்டிக் கொண்டு தலை விரித்தாடும் எத்தனை பேய்கள் வந்து திரும்புகின்றன அங்கே! சாபுமார்களின் 'சாவி' காரணமா அல்லது அவர்களின் அத்தனை கடைகளையும் மீறி முற்றத்தில் புகுந்து கொட்டும் அருள் காற்றா?

'போவாதீங்க....சாம்பிராணியோட 'ஹாஹ¥வ்ஹ்.'ண்டு  புரியாத பாஷையிலெ பேசி கூடவே மொட்டையும் அடிச்சிடுவாங்க...' என்ற லூயிஸ் சார் கடற்கரை சர்ச்சுக்கு கூட்டிப் போனார். அன்பைக் கொட்டுவார் சார். அன்பு , நியாயப்பிரமாணத்தின் நிறைவேறுதலாயிருக்கிறது; அது திரளான பாவங்களை மூடும். பயப்படத்தான் வேண்டும். சர்ச்-இல் 'நாம் எதையாகிலும் அவருடைய சித்தத்தின்படிகேட்டால், அவர் நமக்குச் செவிகொடுக்கிறாரென்பதே அவரைப் பற்றி நாம் கொண்டிருக்கிற தைரியமெ'ன்று சொன்னதும் பாவி பாஸ்கரனின் அதைரியம் கூடிப் போனது. . கடைசியாகத்தான் வண்ணாந்தெரு நாராயணசாமியார். அங்கேதான் தாயத்து கட்டப்பட்டது. ஆனால் குணமாகக் காணோம். ஆஜாத்பட்டறையில் வேலையில் பார்க்கும் அவன் தி.க. மாமா தாயத்தை உடைத்துப் பார்த்தால் பால்டின் தகரத்தில் (வெள்ளி!) ஒரே ஒரு கீறல்! பாஸ்கருக்கு கொஞ்ச நாளில் தானாகவே - மனநல மருத்துவர் மஸ்தான் மரைக்காயரிடம் காட்டியும் கூட - சரியாகிவிட்டது. பிறகும் குழப்பம் குறையாத அவன், நல்ல சீடனாக அந்த தகட்டை எடுத்துக் கொண்டு போய் சாமியாரிடமே காட்டியிருக்கிறான்.

'அது கோடல்ல மகனே. நான்! நான் போட்ட கோடு!' - என்ன ஒரு சூ·பிஸ்ட் டச்! ஊர் அப்படி!

பாஸ்கர் இங்கேதான் புத்திசாலியாக மாறினான். ஒரு பெரிய கோட்டை சாமியார் வீட்டு வாசலில் போட்டு அதற்கப்புறம் அதைத் தாண்டவே இல்லை!

இப்போது ஊரில் பெரிய அரசியல்வாதியிருக்கும் அவனுடைய துணிச்சல் எனக்குக் கிடையாது.

'Tora! Tora! Tora' என்று என் சின்ன வயதில் ஒரு சினிமா வந்தது. 'Tora' என்றால் புலி என்று அர்த்தமாம் . இதை 'துரத்தித் துரத்திக் கொலை' என்று மொழிபெயர்த்திருந்தார்கள் போஸ்டரில்! எப்படி பார்க்க முடியும் ? பயத்தை விரட்ட , இரத்தம் சீறிப்பாயும் புடைத்த செந்'தலை' காட்டி ஒருவர் நிர்வாணமாகி விடும் சிறுகதை ( திரு.அஞ்சாநெஞ்சன் எழுதியது என்று நினைக்கிறேன்) ஒன்றை ஒரு இணைய தளத்தில் போனவருடம் படித்துவிட்டு - நடை நன்றாக இருந்தாலும் - வெலவெலத்துப் போனேன். பெண் பேயோ? பெரும் நோயோ? அற்புதமாக எழுதும் பெண் எழுத்தாளர் வனமோகினியின் எந்தப் பட்டியலிலும் இடம்பெறும் அவரது 'பின்னே ஒரு பிசாசு'வை அந்தத் தலைப்பாலேயே இதுவரை படிக்கவில்லை. சமயங்களில்
சில கவிஞர்கள்...

பெர்முடா முக்கோணப் பேயின் ரகசியத்தை எனக்குச் சொன்ன கவிப்புலி வீரமுத்து துணிந்து துப்புவதாவது:

'ஆசையைத் துப்பு.
ஞானம் வரும்.
அச்சம் துப்பு.
வீரம் வரும்'

கெட்டகனவு வந்தால் இடதுபுறமாக துப்ப வேண்டும் என்று ஹதீஸை எப்படி புதுப்பிக்கிறார்! உலகம் , 70.8% தண்ணீராலானதா? யார் சொன்னது?

எச்சில் ஐயா, எச்சில்!

உப்பத் தெரிந்தும் துப்பத் தெரியாத கவியரசனோ , 'கருவினில் வளரும் மழலையின் உடலில் தைரியம் வளர்ப்பாள் தமிழன்னை ஆ....ஆ...ஆ.....' என்கிறான் . மரைக்கான் வீட்டுப் பெண்கள் , தமிழச்சி அல்லவோ? எனது பயங்கள் , முகம் பார்த்து தாய்ப்பால் கொடுத்த (அந்த காலம்!) தாயாரிடமிருந்துதான் ஆரம்பித்தன. 'மஹரி

நேரத்துலெ போவாணாம்...ரூஹ்ரூஹானி வரும்டா முருவம்..!' என்று வீரத்தை முளையிலேயே கிள்ளுகிற அச்சுறத்துலையும் மீறி தெருவில் விளையாடும் 'ஹராங்குட்டிகளி'ன் ஊளைகளும் , மறக்காமல் அத்தனை விளக்குக் கம்பங்களின் நிழல்களையும் அகலக்கால் வைத்து தாண்டியபடி வரும் வாவூர் குடிகாரர்களின் அலறல்களும் 'ஆவுசம்..ஆவுசம் போச்சு' என்றுதான் குறிப்பிடப்படும். ஆவுசம் என்றால் ஜின்..அது உண்மையிலேயே இருக்கிறது என்று தனி அத்தியாயமே ஒதுக்கியிருக்கிறது இறைமறை. ஜின்கள், மறைவாக இருக்கும் மேற்படியான்கள். கண்ணுக்குத் தெரிந்தால் தாங்களும் தீவிரவாதியாக சித்தரிக்கப்பட்டு விடுவோமென்ற பயமோ? இதில் 'ஏன்?' என்று கேட்டவர்கள் கெட்ட ஜின்கள்!

'ஆவுசமாம் ஆவுசம்; எல்லாம் வேஷம்' என்றார் ஒரு சஹர் பாவா - தாழ்ந்த குரலில் , சுற்றுமுற்றும் பார்த்துக்கொண்டு!

உண்மை தெரியாமல் வீட்டுக்குள் உறங்கும் பெண்கள் தெருவிற்கு வந்து எட்டிப் பார்த்தால் அல்லவா தெரியும் , 'ஆவுசம்' எந்த சபராளி வீட்டு நாச்சியாரிடம் கொசறுகிறது அல்லது எந்தத் திண்ணையில் எந்த சின்னப் பையன்களின் பின்பக்கத்தோடு ஒட்டிக்கொண்டு மூச்சிரைக்க உருளுகிறதென்று... என்னை ஒண்ணுக்கு கூட சரியாகப் பேய விடாத தாயாரால் நான் வளர்ந்தேன். அதட்டி, 'பேயிடா..' என்றால்!

'பயப்படுறவங்களை பார்த்தா எனக்கு ரொம்ப பயம்' என்று அடிக்கடி இருட்டறையில் கிசுகிசுப்பார் எனக்கு புகைப்படம் எடுக்கக் கற்றுக் கொடுத்த (1/15 sec at f22 = 1/30 sec at f16... ) ஒருவர். ஹைதர் காலத்து கேமராவில் அவர் எடுத்த Double Exposure ல் மினாராவில் பறக்கும் பாவட்டத்தின் அசைவுகளில் ஒரு சிறு மாறுதல் கூட தெரியாதது அப்போதைய ஆச்சரியம். சாதாரண ISO 100 speed ·பிலிமில் Shutter Speed 1 sec வைத்து (aperture f2.8) அவர் எடுத்த தர்ஹாவின் வாண வேடிக்கை ·போட்டோவும் ஊரில் மிகவும் பிரபலமானதுதான் . அதற்காக அவர் கைகள் என் மானியில் அடிக்கடி உரச வேண்டுமா? இப்படி செய்வதின் அர்த்தம் என்ன என்று எனக்குத் தெரிவதற்குள் வாழ்வை எப்போதும் பயமுறுத்தும் சாவுக்கு இரையானார்.

ஒழுங்காக வாழ்ந்தால் சாவு ஏன் பயமுறுத்துகிறது ? 'ஆண்டவனே, என்னுடைய அடிப்பாகத்திலிருந்தும் நான் தாக்கப்படுவதிலிருந்தும் உன்னிடத்தில் பாதுகாப்பு தேடுகிறேன்' என்ற 'துஆ' , அர்த்தத்தோடுதான் கொடுக்கப் பட்டிருக்கிறது!.

பேய்க்கதை மன்னனின் கதைகளில் வருவது போல 'கும்ம்ம்ம்' இருட்டோடு இருக்கும் என் வீட்டின் பெரும் நடுக்கட்டு... கரும் பிசாசுகளாய் மாறிவிடும் நெல் பத்தாயங்கள்... மறைந்து மறைந்து தெரிந்து பயமுறுத்துவதற்காகவே உயிர்விட்டுக்

கொண்டிருக்கும் ஒரு முட்டை விளக்கு.... 'பித்தம் படபடங்குது பீக்குழா தெறிக்கப் பாக்குது' என்பார்களே..அப்படி வரும். முகச்சதை 'ஜிவ்'வென்று இழுத்துக் கொள்ளும் . கல்யாணமாவதற்கு முன்பு வரை கூட ஏதாவது வேகமாகப் பாடிக் கொண்டோதான் ஓடிக் கடந்திருக்கிறேன். எல்லா ஒலிம்பிக் ரிகார்டுகளும் அவுட்! . சமயத்தில் அந்தப் பாட்டே ஆந்தை முழியுடன் பயமுறுத்தும். 'பயமெனும் பேய்தனையடித்தோம்...ஜயபேரிகை கொட்டடா-கொட்டடா...!' தமிழ் சினிமாக்களில் திகில் காட்சிகள் வந்தால் (ராஜேந்தர், ராமநாராயணன் படங்கள் தவிர தமிழ் சினிமாவே ஒரு திகில்! ) கண்களைப் பொத்திக் கொண்டு விரலிடுக்குகளின் வழியாகத்தான் வீரத்தோடு பார்த்து முடிப்பது. பாடிவரும் பேய்களை இன்றுவரை நெஞ்சம் மறப்பதில்லை! 'யா அலி.. என்னைக் காப்பாற்றுங்கள்..!'. இந்த லட்சணத்தில் நான் அப்போது பெரியார் பக்தன் ! ஐயாவுக்கும் பயம் கிடையாதா என்ன? இப்போது வந்து அவர் சீடர்களைப் பார்க்கச் சொல்லுங்களேன் பார்ப்போம்.

யார்தான் , எதுதான் பயப்படவில்லை? கார்கில் வீரராயிருந்தால் கருந்தேளுக்கு பயப்பட மாட்டாரா என்ன? கணினிக்கு வைரஸ் பயம். காலாகாலத்துக்கும் வறுமை பயம். தவளைக்கு பாம்பு பயம். பாம்புக்கு கீரி பயம். ஒரு நிமிடம் நின்று உற்றுப் பார்த்தால் சின்னஞ்சிறு கல் கூட தன் ஆதித்தோற்றத்தையும் மாற்றத்தையும் கதைகதையாய் சொல்லி பயமுறுத்துகிறது.

பயத்தின் மூலத்தைப் பார்க்க , Hypnotic Regression செய்யத் தெரிந்தவரிடம் நம்மை ஒப்படைத்து , 'அஞ்சல குஞ்சம் ஆறுமுக தாடி ஏழு பளிங்கு எட்டண கொட்டை துளாங்கு ராஜா தூசிக்கு ராஜா' விளையாடிய நிலைக்கும் கீழே சென்று , இதையும் தாண்டி தாயின் வயிற்றிலிருந்து வெளியேறும்போது நமக்கு ஏற்பட்ட உணர்ச்சிக்கும் கீழே போய் பார்த்து உண்மையை கண்டு பிடிக்கலாமாம். அவர் அங்கே தன்னையே பார்ப்பதற்கும் வாய்ப்பு உண்டுதான். ஆனால் அப்படி கண்டு பிடிப்பவருக்கு நேற்று போட்ட வண்ணான் பில்லோ பகல் ஆக்கிய வவ்வால் மீன் பொரியலோ நினைவில் இருக்கும் என்பதற்கு சாட்சி இல்லை.

மண்ணறைப் புழுக்கள் நெளியாத மனமோ இந்த பாழாய்ப்போன பிரபஞ்சம் எழுப்பும் கேள்விகளில் குழம்பாத இனமோ உண்டா? இறைவனை நெருங்கினால் எல்லா மர்மமும் புரியும் என்று ஹஜ்ரத் உவைஸ் கர்னீ கூறுகிறார்கள். அது எப்படி என்று கிலோமீட்டர் கணக்கு பார்த்து காலம் செலவழிப்பதை விட பெரியவர்கள் செய்வதற்கும் சொல்வதற்கும் ஒரு அர்த்தம் இருக்கும் என்று நம்பிப் போவது நல்லது.

ஒருமுறை, 'உள்ளூர் மையத்தாங் கொல்லைக்கும் வெளியூர் ஆற்றுக்கும் பயப்படனும்' என்று ஒரு பெரியவர் சொல்லும்போது, எனது பயங்களைப் பழிக்கும் சுல்தான் என்னைப் பார்த்து ஏளனமாகச் சொன்னான்: 'பறக்குற பிளேன்லெ ஏறி மனுஷன் நிக்கிற காலத்துலெ பொன்னப்பயலுங்களுக்கு பேப்பயம்! நான்லாம் நடு ராத்திரிலெ கூட சுடுகாடு போயி

வந்திக்கிறேன், தெரியுமா? ஆம்புளைண்டா பயப்படக்கூடாதுடா!'

எப்போதுமே எல்லா விளக்குகளையும் போட்டுக் கொண்டு தூங்கும் என்னைப் பார்த்து அந்த 'ஹிம்மத்வாலா ' வேறொன்றும் சொன்னான். ஜெயிலில்தான் அப்படி தூங்குவார்களாம். நம் நாட்டு ஜெயில் அல்ல. அங்கு எங்கே விளக்குகள் இருக்கின்றன? சௌதி ஜெயில். இவனுக்கு எப்படித் தெரியும் ? 35 லட்சம் ரியால் கம்பெனி காசை திருடியதாக தவறாக சந்தேகப்பட்டு போலீஸ் ஜெயிலில் வைத்து விட்டதில் வந்த அனுபவம். சௌதி அரபிகள் முட்டாள்கள். முழு மூடன்கள். சுல்தான் திருடியது முப்பத்து நாலே முக்கால் லட்சம் மட்டும்தான். எப்படியோ அவனுடைய அண்ணன்காரன் பணத்தை தோது பண்ணிக் கொடுத்து ( இதற்கு வேறு அரபி!) ஊர் போய் , அங்கே ஒரு ஆளை போட்டுத் தள்ளி விட்டு துபாய். கழிந்து கொண்டு பேய்கள் ஓடாமல் என்ன செய்யும் ? அஞ்சுவ தஞ்சாமை பேதமை என்கிறார் செந்நாப் போதார் எனும் நபி.

சிற்றிதழ்களில் எழுதிக் கொண்டிருந்து விட்டு பின் அதன் size பெரிதானதும் கோபித்து தினசரிப் பத்திரிக்கையில் எழுத ஆரம்பித்து விட்ட எழுத்தாளர் வீரத்தெருமகன், 'Taking a new step, uttering a new word, is what people fear most....ஸம்சயாத்மா விநச்யதி' என்றார். கீதாவ்ஸ்கி! 'பயம் என்பது வியாதி' என்று சொல்லிக் கொண்டே பைத்தியக்காரனாகவும், பிச்சைக்காரனாகவும், துறவியாகவும் மாறி மாறி நடந்து போகும் (இந்த நொடியில் தான்ஜானியாவின் வடபுறத்திலுள்ள Kilimanjaro விலோ பெருவின் Machu Picchu விலோ இருக்கிறார்.) இருக்கும் இவரிடம் தன் படைப்புகள் எதையும் கொடுக்க நண்பர்கள் பயப்படுகிறார்கள். ஆனாலும் அவர் நடந்து கொண்டே....

வீ.தெ, 'இருட்டை விரட்ட டார்ச்லைட் தேவை' என்று துணிவானந்தா போல எளிமையாகச் சொல்லி கூடவே ரீசார்ஜபிள் பேட்டரிகளும் அனுப்பி இருந்தால் உபயோகமாக இருந்திருக்கும். ஞானத்தின் திறவுகோலான அந்த டார்ச்லைட்டும் சபராளிகளுக்கு உதவும் என்ற உத்தரவாதம் இல்லை. நானும் கல்யாணபின் பேயை விட மனைவிக்கே அதிகம் பயப்பட்டேன். பாட்டனாவின் இரத்தம்! உம்மா வீட்டிலிருந்து என் புகுந்த வீடு (எங்கள் ஊர் வழக்கம்) இருக்கும் ஜீயான் தெரு போவதற்குள் 'அஸ்மா வூடு வரைக்கிம் வரவா தம்பி?' என்று அப்போது ஊர் வந்திருந்த வாப்பா கேட்பார்கள்.

வாப்பாவின் உண்மையான கரிசனத்திற்கு , மரங்கள் விரித்த கூந்தலுடன் ஆடும் , தெருவின் திருப்பத்திலுள்ள இருட்டுப் பள்ளிக் கூட மைதானம் காரணமாக இருக்காது . அப்போதெல்லாம் மோதிரம் போட்டிராத வாப்பாவின் தைரியம் தெரிந்ததுதான். '----காரனாலெ கலவரம் அடிக்கடி நடக்குது இப்பல்லாம். கல் வேகமா எரியிறானுங்க. ஜன்னல் கண்ணாடிலாம் நொறுங்கி முத்தத்துக்கு வந்து வுழுது' என்று படித்த என் தங்கச்சி மூலமாக உம்மா போட்ட கடிதத்திற்கு, அழகான நீண்ட திண்ணைகள் உள்ள வாசல் பக்கத்தை இடித்துவிட்டு கண்ணாடி துண்டுகள் பதித்த (நொறுங்கி விழுந்தவைகளே

இப்போது உதவின. Recycling!) பெரும் சுவரை உடனே எழுப்பச் சொன்னவர்கள். பயணத்தில் இருந்தால் எதுவும் சொல்லலாம்!

இருட்டு எனக்கு எப்போதும் பயத்தை தரும். அதை விரட்ட வரும் அஸ்மாவின் - என் மனைவி - துணிச்சல் அதை விட.... நடு இரவில் வயிற்றைப் புரட்டும்போது கொல்லைக்குப் போனால் எனக்கு பாதுகாப்பாக வரும் அவள் ( என் உம்மாவின் வேண்டுகோள்) நான் கழுவிவிட்டு வெளியே வரும்வரைசமையல் கட்டு பின்புற வாசலில் தனியாக உட்கார்ந்த்திருப்பாள். கொல்லையைப் பார்த்தாற்போல் இருக்கும் சமையற்கட்டு ஜன்னல் , மூங்கில் சட்டங்களிலான பெருக்கல் குறிகள் கொண்டது. உள்ளிருந்து ஜன்னல் வழியாகக் கசிந்து பக்கவாட்டிலும் மெல்லப் பரவும் வெளிச்சமும் இருளும் அவளது வெள்ளை முகத்தில் போடும் கோடுகளின் நெளிச்சல் - இதை அதிகரிக்க அவள் ரொம்ப சாலிஹ்-ஆன பெண்ணாய் தலையை மறைத்திருப்பது - மற்றும் 'நடு ஜாமத்தில் வந்தேனே....' பாட்டு... மறுமுறையும் நான் கழுவ ஓட வேண்டியிருக்கும். தூங்கும்போதோ அவளுக்கு முழு இருட்டு வேண்டும். நான் எதிர்த்ததால் ஒரே ஒரு சிவப்பு விடி லைட்.....வேண்டுமென்றே செய்கிறாள் இந்தக் கச்சடா..!

அஸ்மாவுக்கு பயமே கிடையாதா ? 'இன்னும் கொஞ்சம் இன்னுங்கம்மா' என்று முதுகில் கால்போட்டு இறுக்கிப் பிணைத்த வண்ணம் என்னைக் கொஞ்சுவதற்குப் பின்னே அது இருக்கிறது. ஊர்லே இருக்க மாட்டாஹலே மச்சான்..!. ஆனால் மச்சான் ஊர்லேயே இருந்துடுவாஹாண்டும் பயம்...!

முதல் வளைகுடா யுத்தத்தின்போது 'இங்கே குண்டு போட்டுக்கிட்டிக்கிறான் புள்ளெ..' என்று ஒரு சௌதி மாப்பிள்ளை சொன்னதற்கு 'அப்படித்தான்மா சும்மா பொய் சொல்வாஹா. நீங்க அங்கேயே இரிங்க' என்று 'தொதல்' சொன்னதாம். அப்படி வீண் தைரியம் சொல்பவள் அல்ல அஸ்மா. ' ஊருக்கு வந்துருங்க மச்சான், அல்லா இக்கிறான் நமக்கு' என்றாள் அப்போது துபாய்க்கு பிழைக்க வந்த என்னிடம். ஆனால் கூடவே மறக்காமல் ஒரு குண்டைத் தூக்கிப் போட்டாள். கார்ட்டூனிஸ்ட் மதன் எழுதியதை மாற்றிச் சொன்னால் 'அஸ்மா' என்கிற வார்த்தைக்குள் உள்ள 'ஸ' என்ற எழுத்தின் மேலுள்ள புள்ளியில் உட்கார வைக்க முடிகிற நானூறு கோடி அனுக்களில் ஒன்றை மட்டும் எடுத்துப் பிளந்தால் வரும் குண்டு.

'இங்கெ நீங்க வந்துட்டா நம்ம புள்ளங்கெ கதி?' என்றாள்.

சதி!

வேலைக்கு என்று அரபுநாடு வந்த காலத்திலிருந்து எப்போ அரபி திருப்பி அனுப்பி

விடுவானோ என்ற பயம்தான் தினமும் வதைக்கிறது. வேலையே செய்யாமல் அரபியையே பயமுறுத்திக் கொண்டிருப்பவர்களை விட்டு விடுவோம். 'ஏ நாயே, பார். தூசி!' என்று அரபி , சுட்டுவிரலால் தொட்டு நீட்டினான் என்றால் தன் சுட்டுவிரலை தூசியில் தொட்டு நடுவிரலை அவனுக்கு காட்டும் எமகாதகன்கள். ஆனால் என்னைப்போன்ற சோதாக்களுக்கு அலுவலகத்தில் காலை வைக்கும்போதுதான் 'அப்பாடா, இன்னும் வேலையில் இருக்கிறோம்' என்ற நம்பிக்கை வரும். ஆனால் நாளை? அது அனைவரையும் பயமுறுத்துவதற்கென்றே இருக்கிறது. அச்சங்களின் தலைக்காவிரி அது. 'இன்றி'ல் வாழ்ந்து விட முடியும். நாளை எனும் குன்றில் வாழ துணி(வு) வேண்டும். அலுவலகத்தில் உள்ள முக்கியமான ஒருவர் விடுமுறைக்குப் போவதாகச் சொன்னால் அந்தத் துணியும் பறந்து நாணக் கேடாகிவிடும்.

மேனேஜர் அ·ப்தாப் ஹஸன் , அமெரிக்காவுக்கு (பிள்ளைகள் வேலை பார்ப்பதால் அந்நாடு இப்போதெல்லாம் அவர் மதத்தைக் கருவறுக்க நினைப்பதில்லை! ) விடுமுறையில் போவதாகச் சொன்னதும் அடிவயிறு கலங்கிற்று.

விடுமுறை காலங்களில் அவர் துபாயை விட்டு எங்கும் போனவரல்ல. விடுமுறை சம்பளம், டிக்கெட்டுக்கு உண்டான பணத்தை எடுத்துக் கொண்டு இங்கேயே இருந்து விடுவார். ஒரு ஒரே முறை தன் தாயார் மௌத்திற்கு ஒன்றரை நாள் கராச்சி போய் வந்தார். அவர் தாயும் என் பயத்தைப் புரிந்து கொண்டு வியாழன் காலை வ·பாத்தாகியிருந்தது. வெள்ளி விடுமுறை. தப்பித்தேன்.

இந்த முறை இரண்டு மாதம் கச்சிதமாக என்னை சாகடிக்கப் பார்க்கிறார்.

உதவி மேனேஜர், Personnel Dept. வேலை பார்க்கும் ஒரு குமாஸ்தா, பியூன் மூவரையும் கம்பெனி 'ஆப்பம்' என்று வேதனையுடன் கிண்டலடிக்கப்படும் oneway ல் அனுப்பியிருந்ததால் கம்ப்யூட்டர்களில் கணக்கும் அவைகளின் பிணக்கும் பார்க்கும் கடன்காரன் நான்தான் அவர் வேலைகளையும் பார்க்க வேண்டும்.

அவர் வேலைதான் என்ன? I..C சம்பந்தமான கடிதங்கள் எழுதுவது, அரசாங்கப் பண்ணைகளுக்கான கொட்டேஷன் மற்றும் அங்குள்ள ஊழியர்களுக்கு கொடுக்கும் லஞ்சம் (Sales Promotion Code : 5201001) சம்பந்தமாக பிரிட்டிஷ்காரர்களுடன் பேசுவது, Bank Rreconciliation. இதர நேரங்களில் தனக்கு கம்பெனி கொடுத்திருக்கும் சீறிப்பாயும் 'ஜாகுவார்'க்கு செலவுகள் வைப்பது. கார் , அமெரிக்காவிலுள்ள பிள்ளைகளுடன் சதா மொபைலில் பேசும்.

விதவிதமாக சூட்களும் போடும்.

கார் ஓட்டுவது தவிர்த்து மற்ற வேலைகள் அனைத்தையும் நானும் செய்துவிட முடியும். ஆனால் பலுச்சிகளான அர்பாப்களிடம் அவர்களுக்கு விளங்குமாறு கரிக்கோடு போட்டுச் சொல்லும் கணக்கும், அவர்களின் கொடூரமான குதறல்களுக்கு தகுந்தாற்போல் தைரியமாக அவர் சமாளிக்கும் விதமும் எனக்கு அறவே வராது. தவிர தேசிய மொழியான மலையாளத்துடன் போட்டிபோடும் ஹிந்தியோ எனக்கு தடுமாறும்.

மூத்த முதலாளி வந்தால், 'என்றும் சாகாத பின்லேடன் புகழ் வாழ்க'. நடு முதலாளி வந்தால், 'ஒட்டகத்திற்கு எப்படி நகம் வெட்டுவது?'. இளைய முதலாளி வந்தால், 'லெபனான்காரிட முலைதான் டாப்'.

அற்புதம். இந்தா Golden Sand ல் Central A/c யோடு Fully furnished 3 Bedroom Flat!

இத்தனை வசதிகளுக்குக் காரணமாக அவர் சொல்வது ராவல்பிண்டியில் பார்த்த ஒரு ·பகீரை! அங்கே அவர் பேங்க் கிளர்க்காக வேலை பார்த்தபோது நடந்த சம்பவம்.

'உதறவைக்கும் குளிர்...கம்பளி போர்த்தி, கால் பக்கம் ஹீட்டர் வைத்துக் கொண்டு உறவுக்காரரின் இல்லத்தில் வாசலைப் பார்த்தபடி உட்கார்ந்திருக்கிறேன் - கடுமையாக மழை பெய்கிறது....நனைந்து கொண்டே வாசலில் ஒரு ·பகீர் போனார். அவரை அந்த ஊரில் நான் பார்த்ததே இல்லை. நேரே என்னிடம் வந்தார். உடல் தெரியும்படி வெறும் ஒரு மெல்லிய உடை...சும்மா வந்து நின்றார். மற்றவர்கள் அவரைப் பார்த்துக் கொண்டிருக்க நான் மட்டும் 'ச்சாய்' வேண்டுமா என்று கேட்டு கொடுத்தேன். குடித்தார். 'அடுத்த மாதம் நீ இங்கிருக்க மாட்டாய். உனக்கு எல்லா வசதிகளும் வரும்' என்று சொல்லிவிட்டு போய்விட்டார். எனக்கு ஒன்றுமே புரியவில்லை. யார் இவர்? 20 கி.மீ தூரத்தில் கோல்ரா ஷரீ·ப் என்று இருக்கிறது. அங்கேதான் இப்படிப்பட்ட ஆட்கள் - நேக் ஆத்மிலோக் - சுற்றுவார்கள்...நான் வெளியில் வந்து பார்த்தேன். யாரும் இல்லை..மறைந்து விட்டார்! அடுத்த மாதம் துபாய்க்கு வந்து விட்டேன். எது சொன்னாலும் கேட்டுக் கொள்ளும் முதலாளி... என் வாழ்க்கையே மாறி விட்டது. தனக்கென்று எதுவும் கேட்காதவர்கள் பிறருக்காக கேட்கும் 'துஆ' பலிக்கத்தான் செய்கிறது..!' - ஹஸனுக்கு இன்னும் வியப்பு மாறவில்லை.

ஹஸன் எனக்கென்று கேட்டாலும் பலிக்கும். ஆனால் அவர் இப்போது ·பகீர் அல்ல. எனவே நான் ஒரு நல்ல ·பகீராக , அல்லது நல்ல ·பகீருக்காக காத்திருக்க , அலுவலகம் இருக்கும் குடவுனிலேயே - புல்கட்டுகளுக்கு பக்கத்தில் - தனியாக ஒரு பழைய போர்டபிள் கேபினில் தங்க சிபாரிசு செய்திருக்கிறார். ·பகீர் வந்தாலும் வருவார். மழை வராது. புழுதிக் காற்றுதான் எப்போதும். எல்லா வசதியானவர்களுக்கும் பின்னால் ·பகீர்கள் இருக்கிறார்கள்.

·பகீரைப் பார்க்கப் போய் அந்த ·பகீரிடமிருந்தே வாங்கித் தின்ன ஆரம்பித்தவர்களின்

கதையும் எனக்குத் தெரியும். ஃபகீரை நினைக்கும்போதெல்லாம் மேனேஜர் நினைவுதான்.

மேனேஜர் இந்தமுறையும் இங்கேயே இருந்திருப்பார்தான். மகளுக்கு இவர் போனால்தான் பிரசவமாகும் என்பதில்லை. ஆனால் கம்பெனி இருக்கிற சூழ்நிலையில் இப்போதே Gratuity காசை கொஞ்சம் கொஞ்சமாக பலமாதிரி எடுத்தால்தான் உண்டு. அர்பாப்களை பயமுறுத்தும் Staff Loan போட்டுச் சென்றார்.

எப்படி சமாளிக்கப் போகிறோம் ? பெரும் உருவம் என்னை இறுக்கிக் கட்டிப் பிடித்தது.

'நாம யார்ண்டு தெரியிறதுக்கு சரியான சான்ஸ்ங்கனி இது!' என்று ஆன்மீகம் பேசினார் ஒரு அன்பர். நாமூஸின் வருகையால் திடீரென ஒளிவெள்ளமும் அதைத் தொடர்ந்து dts ல் இடிமுழக்கம் போன்ற எதிரொலியும் எழுந்து அலையெனைப் பரவிய குகை... 'அதுக்கு கண்ணாடிலெ பாத்தா போதாதா ? ஏன், என்னைப் பாருமேன் நீம்பரே இப்ப' என்று சொல்லிவிட்டு நகர்ந்து விட்டேன். 'தட் தட்'டென்று காலடி மெள்ள வைத்தவண்ணமோ, 'சர சர' என்று சருகுகளின் மீது ஊர்ந்த வண்ணமோ இனம் தெரியாத விலங்குகள் என்னைத் தொடர அனுமதிக்கக் கூடாது.

அது பயத்தை இன்னும் அதிகப்படுத்துகிறது. இருக்கிற குழப்பங்கள் போதும்.

ஹஸனுக்கு அசாத்திய தைரியம். Mazen Dana வாகவோ மனித வெடிகுண்டாகவோ மாறியிருக்கக் கூடியவர். 'உலகம் முழுதும் நம்மவங்கள் மேல் நடத்தப்படும் தாக்குதல்களுக்கு பயம்தான் அடிப்படை' என்பார். யாருடைய பயம்? 'நம்மவங்கள்'தான் உலகமா ? 'பரஸ்பர நம்பிக்கையின்மையால் அல்லவா?' என்று கேட்டேன். 'ஜாடு !' என்று ஒற்றுமையை விளக்குமாறால் அடித்துவிட்டு ஒரு 'கானா கராப் கரேகா' பார்வை பார்த்தார் பாருங்கள்....

இப்போது நினைத்தாலும் 'வெதக் வெதக்' என்றிருக்கிறது.

அவர் பார்வை பற்றிய என் பார்வை சரிதானா?

அறியாமைதான் பயத்தின் விஷ விதையென்றால் அதைத் தோண்டி எடுத்துவிட்டு தெளிவெனும் மலர் தூவ வேண்டிய வேண்டிய கனவுகளோ தீங்கனவுகளாக வந்து தொலைக்கின்றன. துரத்தி வரும் பேய்கள் நெஞ்சின் மேலேறி நின்று குரல்வளையை மிதிக்கும். வற்றி வரண்டு கிடக்கும் அணையின் தெரியும் ஒரே ஒரு சொம்பு தண்ணீரில் நூறு நரகல்கள். கொதிக்கும் கல்லில் வைக்கப்பட்டும் விறைத்து நிற்கும் குறியை யானையின் பாதமென்று மிதித்துக் கூழாக்கும். Greome ன் 'Solomons_Wall' பாதிப்பில் நான் வரைந்திருந்த பெருஞ்சுவர், கேன்வாஸிலிருந்து குதித்து

வெளியேறி பிள்ளைகள் மேல் சரியும். ...ஐயோ, ஒலுவுடன் ஓதிப் படுத்தும் ஓடவில்லை என் பயம். அபயமளி ஆயத்துல் குர்ஸியே!

'யா முதகப்பிரு' என்று 21 தடவை தினமும் ஓதிவந்தால் கெட்டகனவு வராது' என்று அஸ்மாவுல் ஹ¥ஸ்னா (இறைவனின் திருநாமங்கள்) வில் போட்டிருக்கிறது. இது உண்மையாக இருக்க வாய்ப்பில்லை. இருந்தால் ஈராக் ஜனங்கள் பயன்படுத்தி இருப்பார்களே....! பிஸ்மில்லா ஹில்லதி லா யளுற்று மஅ அஸ்மிஹ் ஷைஉன் வஹ¤வஸ் சமீஉல் அலீம்' என்று ஓத வேண்டுமோ?

'தூங்கும்போது பயமுறுத்தும் கனவுகள் வந்தால் என்ன செய்ய வேண்டும் சாப்?' - மேனேஜரிடம் ஒருநாள் கேட்டேன். மார்க்கமும் அதிகம் தெரியும் அவருக்கு.

'உடனே முழித்து விட வேண்டும்!' - டுமீல்!

கரைத்துத்தான் குடித்திருக்கிறார். Electroencephalograph ஐயே இவர்தான் கண்டு பிடித்தாரோ? பாதாளத்திலிருந்து புறப்பட்டு வரும் பேய்களை சாந்தப்படுத்தவும், சந்தோஷப்படுத்தி விரட்டவும் முன்னேறிய தைவான்காரர்கள் ஆடும் நிர்வாண நடனம்கூட இவர் சொல்லிக் கொடுத்ததாகத்தான் இருக்கும்.

இவரிடம் கேட்டிருக்கக் கூடாது. ஒரு பொறுப்பை ஏற்றுக் கொண்டால் தானாகவே எல்லாம் தெரியும். 'மந்தூக்' என்று அழைக்கப்படும் கம்பெனியின் P.R.O ஊர் போயிருந்த சமயம் கம்பெனி டிரைவர்-ஐத்தான் P.R.O வேலையை பார்க்கச் சொன்னார் முதலாளி. அவன் பயந்தான். முதலாளி சொன்னார்: ' சாதி கே பெஹ்லே தும்கோ மாலும் தா? bபாத் 'காம்' அச்சீதரா(ஹ்)ஸே மாலும் ஹோகயானா?!'

அதாவது முதலிரவில் மனைவியோடு சேர்வதற்கு ஒத்திகையா பார்த்து கொள்கிறோம் என்று....ஒன்றும் தெரியாமல் பூந்து (தெரியாமல் பூந்தால்தானே சுவாரஸ்யமே!) விளையாடுவதற்கும் நிஜமான வேலையின் பிரச்சனைகளுக்கும் வித்யாஸம் இல்லையா?

நான் மானேஜரிடம் கண்டிப்பாகச் சொன்னேன்: 'உங்கள் இடத்தில் சசி-ஐ வைத்து விட்டுப் போங்கள்.' சசி, அர்பாபின் வேறொரு அலுவலகத்தில் இவர் பார்க்கும் அதே வேலையை குறைந்த சம்பளத்தில் பார்க்கும் மலையாளி. பத்மராஜனை நான் பார்த்துக் கொண்டிருக்கும்போது பாக்யராஜைப் பார்ப்பவன். அதிசயமாக இவன் கொடுத்த மலையாள கேஸ்ஸட்டில் ஒரு ஆவி, இன்னொரு ஆவி தன்னைத் தொடும்போது பயந்து போய் திரும்பும்!

இந்த மலையாளிகளின் நகைச்சுவையே தனிதான்...!

சசிக்கு என் மீது பிரியம் பிறந்தது Customer Statement Report க்கும் Receivable Listing க்கும் தொகைகளில் வேறுபாடு வரும்போது அதை கண்டுபிடித்து master dbf ·பைலில் தானாகத் திருத்தம் செய்யும் சின்ன ·ப்ரோக்ராமை எழுதிக் கொடுத்ததால். இவனுக்கும் தெரியாத விஷயமே இல்லை. பிளேன் கூட ஓட்டத் தெரியும் ! ரொம்ப சுலபம்தான் அது. வால் பக்கம் நின்று கொண்டு வேகமாக தள்ளிக் கொண்டே போனால் 'டக்'கென்று பறந்து விடும். அந்த சமயம் நாம் உள்ளே குதித்து உட்கார்ந்து விட வேண்டும். அவ்வளவுதான்! 'சம்ச்சா' மட்டும் தனக்கு அதிகம் வராது என்று சொல்லிக் கொள்வான்.

பரவாயில்லை. 'மஸ்கா' தெரிந்தவன் ஓரிரு நாளில் அதை கற்றுக் கொள்ள முடியும். சாதி கே பெஹ்லே...

'அக்கௌண்ட்ஸ¤க்குத்தான் நீ இருக்கிறாயே.. L.C க்களை அவன் ஆ·பீஸில் இருந்தே சசி பார்த்துக் கொள்வான். அந்த 'ஜமானா' எல்லாம் இப்ப எங்கேப்பா? கொட்டேஷன் மட்டும் அப்பப்ப அடிச்சி கொடுத்துடு. Cheque/Cash PV போடுறதுக்கு
காசிம்-ஐ இங்கே வச்சிடுறேன்'

யா 'ரப்'பே... அவரா? ஊர் 'பிஸாது' தவிர அவருக்கு வேறு என்ன தெரியும்?. எந்தத் துப்பட்டி எவன் தொட்டு அழுக்கானது என்று 'கபர்' கொடுத்துக் கொண்டிருப்பார் எப்போதும்...இவருக்கு ஒரு ரசிகர் மன்றமே இருக்கிறது சிக்கத்-அல்-ஹைல் ரோடில். என் தயக்கத்தைச் சொன்னேன் மேனேஜரிடம்.

'முக்கியமாக இந்த 'நஹயத் bபேவகூ·கள்'-ஐ சமாளிக்கத் தெரியும்'

அர்பாப்களைத்தான் அதி முட்டாள்களென்று சொன்னார். அறிவாளிகளை வேலை வாங்குபவர்கள் முட்டாள்களா? சரியென்று வைத்துக் கொண்டாலும் அப்படி அவர்கள் இருப்பதால் அல்லவா இன்னும் வேலை வாய்ப்புகள் இருக்கின்றன! 'வழிச்சி நக்கிட்டு போனப்புறம் வந்திக்கிறீங்களே' என்று சிலர் சொல்வதெல்லாம் சும்மா.

காசிம் காக்கா வந்தார். தேஜஸ் பொங்கும் ஹஸன் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்த எனக்கு தேரைக்கு முடி முளைத்தாற்போல இருக்கும் புது முகம் எப்படியோ இருந்தது. எங்கள் குடவுன் ஒன்றின் சூப்பர்வைசர்-ஆக இருக்கும் அவரது முகம் பரிச்சயமானதுதான். ஆனால் இந்த இடத்தில் பொருத்திப் பார்க்க மனம் வரவில்லை.

அவருக்கும் இது தற்காலிக இடம் என்று தெரிந்துதான் இருந்தது. ஆனாலும் மேனேஜர் வேலை தெரியாத இந்த மேனேஜருக்கு கம்பீரம் கூடவே வந்து முகத்தில் உட்கார்ந்து

கொண்டது. நாற்காலியின் சக்தியோ ? எங்கள் ஊரிலேயே அதிகம் படித்து உயர்நீதிமன்ற நீதிபதியான ஒருவரின் ஞாபகம்.... நீதிபதி, அந்த சமயம் தமிழக கவர்னர் இறந்ததால், தற்காலிக கவர்னராக நியமிக்கப்பட்டார். அடுத்த நாள் கவர்னராகவே ஊருக்கு பந்தாவாக வந்து அலம்பல் பண்ணிவிட்டுப் போனார். ஒருவாரம் அவரை எல்லோரும் கவர்னர் என்றுதான் அழைத்தார்கள். அதுபோல இப்போது 'முதீர்' என்றால் இந்த முதிர்ந்த காக்காதான்.

'ஆடிஓடி அலிபாதுஷாவை கொலுவுலெ வச்ச மாதிரிலெ நம்மளை வச்சுப்புட்டாஹா!' என்றார் என்னிடம் பெருமையாக.

'அலி பாதுஷாவா?'

'அந்தக்காலத்துலெ அப்பாஸ் நடகம்டு, நம்ம ஊர்லெ ஒன்னு போட்டாஹா. அதுலெ வர்ரவறு..'

அந்த அலிபாதுஷாவே இவர் முன்னால் எலிபாதுஷா ஆகிவிடுவார் போலிருந்தது. காக்கா அத்தனை அழகாக அர்பாப்களின் குருட்டுக் கேள்விகளை சமாளித்தார்.

'நாம ஆபீஸ் வேலை செய்யாக்காட்டி கூட பரவால்லே. இவனுங்களுட அஹடம்புஹடம் வேலைலாம் கரெக்டா செஞ்சிடனும்' என்றார். அர்பாப்களின் ஈரான் சொந்தக்காரர்களுக்கு மாறிமாறி transit visa எடுப்பது, அவர்களின் அமானத் கணக்கில் (உலகத்தில் எங்குமே இல்லாத ஒரு வினோத கணக்கு!) இருக்கிற நண்பர்கள் அனைவருக்கும் Dewa, Etisalat பில்கள் மறக்காமல் கட்டுவது, குடவுனில் வளர்க்கப்படும் ஆடு கோழிகளுக்கு தீவனம் வாங்கிப் போடுவது...

Sign Authority யாக உள்ள பெரிய முதலாளி Sponser ஆக இருக்கும் இன்னொரு கம்பெனியின் பார்ட்னருக்கு , கப்பியும் கயிறுமாய் இணைந்த கூட்டாளியாக இருந்தார் காக்கா. ரொம்ப நல்லதாகப் போயிற்று எனக்கு. அர்பாப்களின் தொந்தரவாவது பரவாயில்லை, இந்த அஜியா டிரேடிங் தொந்தரவு.. அல்ஜன்-ல் உள்ள மராய் பண்ணையிடமிருந்து செக் வந்துவிட்டதா என்று நாள் முழுவதும் உயிரை எடுத்து விடுவார்கள். அங்கேயுள்ள சூடானி அக்கௌண்டன்டிடம் கேட்டபடி சொல்லிக் கொண்டிருக்க வேண்டும் - இத்தனை டன் அல்·பால்·பா (ஒரு வகை புல்) போனது வந்து என்று. போகாமலேயே போடப்படும் இன்வாய்ஸ¤க்கும் அதற்கான செக்குக்கும் தனி கணக்கு..! கணக்குக்கு நான். கமென்ட்ரிக்கு காக்கா. காக்கா , அஜியா டிரேடிங் தவிர (மாட்டிவுட்டுடவான் மரைக்கான்!) மற்ற கம்பெனிகளின் எந்த விசாரணக்கும் பதில் கொடுப்பதில்லை. 'டர்ர்ர்' என்று கிழிக்கும் சத்தம் வந்தால் எங்கிருந்தோ ·பேக்ஸ் வந்திருக்கிறது என்று அர்த்தம்.

'ஸ்பெயின் கம்பெனிக்கு 24000 டன் பெல்லட்ஸ் ஆர்டர் கொடுத்தோமே , என்னாயிற்று?'

'அர்பாப், குறைந்தது ரெண்டு லட்சம் டன் எடுக்க வேண்டும் என்கிறார்கள்' என்பார் ·பேக்ஸை பார்த்தார் போல. ஈமெயில் பார்க்கும் நான் 'காக்கா' என்று குரல் கொடுத்தால் ' 'ஆமா, அந்த ஸ்டேட்மென்ட்தான். பிரிண்ட் எடுங்க' என்று திசை திருப்புவார். 'சப் கஸ்டமர்ஸே பாக்கி வசூல் கர்ணா அபி ஜரூரி ஹை' - இது அர்பாபுக்கு. என் அருகே வந்து ' எல்லா 'பலா'வையும் தாடி வந்து பாத்துக்குவான்..நீங்க பயப்படாம இரிங்க. இவனுங்க தரையிலெ நீந்தச் சொன்னா நாம தரைக்கு அடியிலே நீந்துறமாதிரி பாவ்லா காட்டனும்' என்றார்.

நவீன தீயணைப்புக் கருவிகளை உடனே குடவுனில் பொருத்தச் சொல்லி Defence அலுவலகத்திலிருந்து ஒருநாள் ·பேக்ஸ் வந்தது.

'டர்ர்ர்ர்ர்'

நான் பதறினேன்.

'அட, சும்மா இரிங்க அமீர்தீன். இவன்லாம் இப்படித்தான் பயமுறுத்துவான். எந்த இங்கிலீஸ் கம்பெனியாச்சும் இவனுங்களை பயமுறுத்தியிருப்பான். அதான்...! இப்படித்தான் முன்னாலே ஒரு ஷார்ஜா கம்பெனிலே வேலைபாக்கும்போது வர்றதையிலாம் கிழிச்சிப் போடுவேன். ரொம்ப கெடுபுடியான

·பேக்ஸா இருந்தா மட்டும் என் முதலாளிட்டெ - தங்கமானவன் அந்த அரபி - கொடுக்குறது'

'அப்பாடா..'

'குஷ் ஹ¥ம்மக்......' ண்டு அவன் கிழிச்சிப் போட்டுடுவான்!

இதைத்தான் அண்டர்ஸ்டாண்டிங் என்கிறார்கள். அந்த அரபி, 'காசிம் மௌஜூத்?' என்று கரகரத்த குரலில் காக்காவின் பெண்டாட்டியிடம் கேட்டால் ' அஹ பாத்ரூம்லெ குளிச்சிக்கிட்டிக்கிறாஹாம்மா..' என்று பதில் சொல்லுமாம். அரபிக்கும் புரிந்துவிடும்! புரிந்து கொண்டு, பயங்களை வேரறுத்தால் முன்னுக்கு வந்து விடலாமோ? என் சம்பளமே வாங்கும் காக்கா குடும்பத்தை வரவழைத்திருக்கிறார்.

வாடிக்கையாளர்கள் குடவுனில் இவரிடம் கொடுக்கும் பணம் குறைந்தது மூன்று மாதத்திற்குப் பிறகுதான் - தான் ஒரு ஹாஜியாரென்ற நினைப்பு வந்தவுடன் - RV யாக

மாறும். ரொட்டேஷனுக்கு சைட் பிஸினஸாக 'உண்டியல்'. களிமண் கண்டவனெல்லாம் உண்டியல் செய்கிற துபாயில் இவருடையது உடையாதது. ஆயிரம் ரூபாய்க்கு 50 ·பில்ஸ் (பைசா) மட்டும் எனக்கு டிஸ்கவுண்ட். பிற அனுகூலங்களும் கிடைத்தன.

ஆபீஸ் கம்ப்யூட்டரை upgrade செய்கிறேன் என்று ஊரிலுள்ள கம்ப்யூட்டருக்கு தேவையானதையெல்லாம் வாங்கிவிட்டேன். Light Pen , DVD Writer, Web Camera..பழைய மேனேஜர் போல ஏன், எதற்கு என்று கேட்காமல் உடனே செக்! நான் ஏனோ எனது வெகுநாள் கனவான IBM Thinkpad வாங்கிக் கொள்ளவில்லை..!

'அமீர்தீன், நாம ரெண்டு பேரும் ஒரே ஊர்க்காரனா இக்கிறதுக்கு...மனசுவச்சா என்னா வேணும்லாம் செய்யலாம். அஞ்சு நாளைக்கி ஒருமுறை இவனுங்க வூட்டுக்கு தலைக்கி ஆறாயிறம்டு போவுது. கையெழுத்து வாங்கிட்டு அறுபதாயிரம்டு மாத்துனா இந்த மடையனுவளுக்கு தெரியவா போவுது ?' என்றார் ஒருநாள்.

என் முகம் வெளிறியது.

'ஆனா நாம ஈமான்தாரிங்க.. அப்படிலாம் செய்ய மாட்டோம்' என்றார் 'வத்துகல்லிமுனா அய்தீஹ¤ம் வ தஷ்ஹது அர்ஜுலுஹ¤ம் பிமாகானு யக்சிபூன்' என்று சூரா யாஸீன் ஓதும்போது நெஞ்சம் நடுங்குபவர். கைகளும் கால்களும் மறுமை நாளில் சாட்சி சொல்லுமாம். தோலே சொல்லுமே வேதத்தில்!

சாட்சி சொன்னால்தான் இறைவனுக்கும் தெரிவதை எண்ணி நடுங்கத்தான் வேண்டும்...!

'சூரத் யாசீன் பொருட்டாலே
சொர்க்கம் தருவாய் ரஹ்மானே'

தினமும் பட்டான் ரெஸ்டாரெண்ட்டில் மணக்கும் புலாவும், தள தளவென்ற 'நிஹாரி'யும் , கூடவே இரவுக்கான பார்சல்களும் கிடைத்தன. மலையாளி கடையில் இரவுக்கு ஏதாவது கறி வாங்கி அதை மூன்று வேளை வைத்துக் கொள்கிற எனது பிசுக்குத்தனம் எங்கே போயிற்று? காலையில் வரும்போதே காக்கா , காசுபிடுங்கும் கராமா ஹோட்டல்களிலிருந்து சுதியான டி·பன் வேறு வாங்கி வருகிறார். சரவணபவன் தோசைக்கு கராச்சி தர்பார் கடாய்கோஷ்தான் சட்னி!

ஹர்ஜ் புல்கட்டுகள் வாங்க Imprest Account ல் காக்காவிற்கு கொடுத்திருந்த 25000 திர்ஹத்திற்கு, வாங்கிவிட்டதாக ஒரு Purchase Voucher (SRV யுடன் சேர்த்து) போட்டால் என் Staff Advance , ஒரு JV மூலம் , முதலாளி
போலவே கையெழுத்திட்ட காக்காவால் காணாமல் போகும்..

'ஆடிட்டர்ண்டு ஒத்தவன் இக்கிறான் காக்கா...'

'கொடுக்குற காசுக்கு ரிபோர்ட் எழுதுறவன்தான் தம்பி துபாய்லெ ஆடிட்டர் !அவனுவளும் பொழைக்கத்தானே வந்திக்கிறானுவ..'

'..... .... .....'

'மிஞ்சி மிஞ்சி என்னாவும்? சௌதி மாதிரி காட்டான் ஊரா இது , தலைவெட்ட ? காசையிலாம் செலவு பண்ணிட்டேண்டு சொன்னா கொஞ்சநாள் ஜூமைரா ஜெயில்லெ வச்சிட்டு ஊருக்கு ஒரேயடியா அனுப்புவான். மயிறு ஒண்ணாச்சு. நமக்கு நல்லதுண்டு எடுத்துக்கப் போறோம் !' என்ன துணிச்சல்! ஊர்க்காரர்களின் குறைகளையெல்லாம் ஒன்று விடாமல் தமாஷாகச் சொல்லி எப்படியெல்லாம் இறுக்கத்தைக் குறைக்கிறார்! என் பயத்தை எழுதிவைக்கவில்லை என்றாலும் ஆலிம்ஷா எழுதியிருந்தது சரிதான் என்று பட்டது. நாம்தான் வீணாக பயப்படுகிறோம்.

'தனிச்சிறியேன் சிறிதிங்கே வருந்தியபோ ததனைத்
தன்வருத்தம் எனக்கொண்டு தரியாதக் கணத்தே
பனிப்புறும்அவ் வருத்தமெலாம் தவிர்த்தருளி மகனே
பயம்உனக்கென் என்றென்னைப் பரிந்தணைத்த குருவே..'

ஒரு மாதம் ஓடிய சுவடே தெரியவில்லை. தீய கனவுகளும் வரவில்லை! பயங்கரமான தைரியம். சான்றாக , ஒரு நாள் விடுமுறை போட்டுவிட்டு எல்லா மெகா சீரியல்களையும் பார்த்ததைச் சொல்லலாம். ஒரே ஒரு பிரச்சனை , அடுத்த நாள் நான் ஒரு அடி எடுத்து வைக்க அரை நாளாயிற்று, அவ்வளவுதான்!

இன்னும் மூன்று வருடத்தில் நடக்கப் போகிற மகளின் கல்யாணத்திற்கும் பயப்பட வேண்டியதில்லை போலிருக்கிறதே... வேலையில்லாமல் ஊருக்கு விரட்டியடிக்கப்பட்டாலும் கூட வீட்டுத் திண்ணையில் ஒண்டிக் கொள்வதெற்கென்று ஒரு நசுங்கிய அலுமினிய குவளையை வாங்க வேண்டிய அவசியமும் இல்லைதான். செல்லும் என் வாய்ச் சொல்.... வாப்பா போல கடைசி காலத்தில் பயந்து சாக வேண்டியதில்லை.

வாப்பா மலேசியாவில் எல்லாவற்றையும் முடித்து விட்டு ஊரோடு வந்த போதுதான் அந்த தங்க மோதிரம் போட்டிருந்தார்கள். சிலபேரைப்போல கையை விடப் பெரிதாக கல் வைக்காமல் மிகச் சிறியதாக ஒன்று பதிந்திருந்தது. ‘பைரோஸ் என்று நினைக்கிறேன். மோதிரத்தில் முத்திரையெல்லாம் இல்லை. இருந்திருந்தால் 'காதர்ஷா'

'முஸ்லிம்' 'சபராளி' என்று மூன்று வரிகள் இருக்கலாம். ஆனால் பயணம் முடிந்த சபராளி கிழவர்களுக்கு முத்திரையால் பயன் என்ன?

மோதிரம் எப்படியும் இரண்டு பவுன் இருக்கும். புதியது மாதிரி தெரியவில்லை. ஆனால் பாலிஸ் பண்ணப்பட்டு பளபளப்பாகவே இருந்தது. நான் ஆசைப்பட்டதற்காக ஒருநாள் எனக்கு மாட்டிக்கூட பார்த்தார்கள் வாப்பா. தொளதொளவென்று இருந்தது. கொஞ்சநாளைக்கு பிறகு எனக்கு சரியான அளவில் வந்து விடும் என்றார்கள். இத்தனை நாள் இல்லாமல் இப்போ மட்டும் என்ன...பட்டும் தங்கமும் ஆண்களுக்கு விலக்கப்பட்டதல்லவா என்று ஆளாளுக்கு கேள்வி. 'நாயகம் ரசூலே கரீம் ஸல்லல்லாஹு¥ அலைஹிவஸல்லம் போட்டார்கள்- போடவில்லை- போட்டவரை கடிந்தார்கள்- வெள்ளி முலாம் பூசிய இரும்பு - இல்லை வெள்ளியேதான்' என்று குழப்பினாலும் அது ஹராம் என்பதில் சந்தேகமே இல்லை அவர்களுக்கு. எடு ஹதீஸ்களை!

தன்னை நெருப்பு வளையத்தில் இறக்கியவர்களுக்கு பதில் சொல்லாமல் வாப்பா சிரித்துக் கொள்வார்கள். கேட்பவர்களின் தங்கப்பல் நினைத்தோ?

'ஊண்டி நடக்குற வயசுலெ ஊண்டு கேக்குதோ ஒன் மாப்புள்ளைக்கி? இன்னுமா மஹண்டுபோயி கெடக்குறாஹா?!' என்று கிழத் தோழிகள் வீட்டில் கேலி செய்வதை பொறுக்காதவர்களாய், 'வாதனை...கலட்டித்தான் என்னெட்ட கொடுங்களேன்....' என்று உம்மா கேட்டதற்கும் அதே சிரிப்பு. வாப்பாவின் நண்பர்கள் - நெய்னா மாமா, செல்லமாலிமார் போன்றோர் - கடைசி காலத்தில் மனைவி பிள்ளைகளால் தூக்கியெறியப்பட்டு பரம்பைசா இல்லாமல் கிழிந்த கைலியும் பரட்டைத் தலையுமாய் தர்ஹா வாசலில் போவோர் வருவோரிடம் காசு வாங்கித் தின்றதை நினைக்கிறார்களா ? 'ஒதவும்....கையிலெ ஏதாச்சும் இருக்கனும்..' என்று முணுமுணுப்பது மட்டும் கேட்கிறது.....

சௌதியில் இருக்கும்போது வாப்பா மௌத்தான செய்தி... 'சந்துக்'-இல்தான் எடுத்தார்களாம். இப்போதும் வாப்பாவை நினைத்தால் மோதிரக் கையோடுதான் நினைக்கத் தோன்றுகிறது. கஜ்ஜாலி மரைக்காயர் தெரு முனையில் , சைக்கிள்கடை ஜப்பாரின் கேலிகளை காதில் வாங்கிக் கொள்ளாமல் அங்கேயுள்ள உடைந்த நாற்காலியில் உட்கார்ந்து பேப்பர் படித்துக் கொண்டிருக்கும் வாப்பா.....பேப்பரை பிடித்துக் கொண்டிருக்கும் சுருங்கிய கைக்கு பொருந்தாத மோதிரம்....அது கடைசியில் என்னாயிற்று என்று உம்மாவிடம் கேட்க எனக்கு பயம்.

மோதிரத்தை விற்றுவிட்டார்களா அல்லது மாப்பிள்ளை பவுனாக மருமகன்களுக்குப் போயிற்றா? துணிந்து ஒருநாள் கேட்டதற்கு , வாப்பா தோட்டத்தில் குளித்துக் கொண்டிருந்தபோது கிணற்றில் தவறுதலாக போட்டு விட்டார்கள்; ஆட்களை இறக்கித்

தேடியும் கிடைக்கவில்லை என்று சொல்லிவிட்டு உம்மா என்னை வெறுப்பாகப் பார்த்தார்கள். 'பெரீய ரசூலுல்லா மோதிரம் பாரு..' என்று முணுமுணுத்தார்கள். தெரியாமல் சொன்னாலும் அதற்கும் ஒரு ஹதீஸ் இருக்கிறது! மூன்றாம் கலீ·பாவான உதுமான் (ரலி) , ஒரு கிணற்றில் 'தவறுதலாக' ரசூல் (ஸல்)ன் முத்திரை மோதிரத்தை நழுவ விட்ட சம்பவம். மூன்று நாட்கள் தேடியும் கிடைக்கவில்லையாம். விட்டுவிட்டார்கள். முடியையும் நேசிப்பவனுக்குத்தான் தெரியும் மோதிர நஷ்டம். உம்மா சொன்னதில் நம்பிக்கை வரவில்லை. எனக்குள் வார்த்தைகள் புரண்டன...

கனவுகள் ஊறும் பச்சைக்கிணற்றில்
ஏணியிருக்கும் இறங்கிப் போக
ரத்தப் பூக்கள் எட்டிப் பார்க்கும்
பக்கச்சுவர்கள் குத்திக் கிழிக்க
ஆழம் போனால் காலம் நீளும்
வானம் ஏணி தூக்கிப் போகும்!

இதேபோலத்தான் நான் ஹைஸ்கூல் படிக்கும் சமயத்தில் உம்மாவின் தங்க வளையல் ஒருமுறை காணாமல் போயிற்று. 'பால்கிதாப்' பார்த்த தைக்கால்சாபு, அது கிணற்றில் விழுந்துவிட்டது என்று சொல்லியதால் மொத்தக் கிணற்றுத் தண்ணீரையும் சேறையும் வெளியில் கொட்டினார்கள்.

வளையல் அகப்படவில்லை.

'தேடிப் பார்த்தோம்; காணவில்லை என்று சொல்லி விட்டு வா' என்று உம்மா சின்னமாமாவை அனுப்பினார்கள். சின்னமாமாவுக்கு சாபுவை பிடிக்காது.

எந்த அவுலியாக் குஞ்சுகளையும்தான். ஆனாலும் போனார் என்னையும் அழைத்துக் கொண்டு. சொன்னபேச்சைக் கேட்காவிட்டால் சோறு கிடைக்காதென்ற பயம். அங்கே ஒரே பெண்கள் கூட்டமாக இருந்தது பார்க்க வித்தியாசமான இருந்தது. சாபுக்கு ஒரு பெண்மணி மிக மரியாதையாக சிகரெட் பற்ற வைத்துக் கொண்டிருந்தாள். ' இந்த ---ளுவ மாப்புள்ளைக்கி ஒரு கிளாஸ் தண்ணி கூட கொடுத்திக்க மாட்டாடா....பாத்துக்க' என்றார்

மாமா குசுகுசுவென்று. இதை சாபிடம் சொல்ல அவரால் முடியாது. செவுனை செய்து விட்டால்?!. என்னைப் பார்த்ததும் 'யாரு...சின்னாச்சி மவனா?' என்று சிரித்துக் கொண்டே கேட்ட சாபு மறுபடியும் கணக்கு போட்டு ,'வெளிலே வந்துட்டேங்குதே...! அள்ளிப்போட்ட சேத்தையெல்லாம் தோண்டிப்பாக்கச் சொல்லு' என்றார்கள் மாமாவிடம்.

சேற்றில்தான் இருந்தது! அந்த சாபு இப்போது உயிரோடு இல்லை. பால்கிதாபை விட

படைத்தவன்கிதாப் மர்மமானது. ஆயிரம் ஐந்த்ரி வந்தாலும் அளக்க இயலாதது.

வாப்பாவை மோதிரத்தோடு அடக்கியிருக்கவும் மாட்டார்கள். அது எங்கோ இருக்கிறது தேடிக்கொண்டு - முழுதாகவோ வடிவம் மாறியோ..

அமெரிக்காவிலேயே பழைய மேனேஜர் தங்கி விட்டால் அந்த மாதிரி மோதிரம் நூறு வாங்க முடியும் என்னால். என் வாழ்க்கை வடிவம் மாறிவிடும்தான்.... அப்போதுதான் அவரிடமிருந்து மெயில் வந்தது : 'நான் இங்கே ஜன்னத்திலே இருக்கிறேன். க்யா ஜபர்தஸ்த் மால்ஹை! ஆமாம்,

அங்கே பிரச்சனை இருக்கிறதா?'

'மொபைல் எடுத்துக் கொண்டு போங்க சாப்... ஏதும் பிரச்சனை இருந்தால் கேட்கிறேன்' என்று போகும்போது நான் சொன்னதற்கு 'தொந்தரவு எல்லாம் செய்யாதே...அவசியம் இருந்தால் மட்டும் ஈமெயில் செய்' என்று கறாராகச் சொன்ன மேனேஜரின் நெஞ்சுக்கு என்னாயிற்று?

ஏ தாடி, நீ வந்தால்தான் பிரச்சனை... சொர்க்கப் பூங்கா உனக்கு மட்டுமா? இப்போதெல்லாம் கனவுகளில் என் இரு இருபக்கங்களிலும் விக்டோரியாவும் நயாகராவும் கொட்டுகிறது. மடியில் குழந்தைகள்.
எதிரே தெரியும் மானசரோவர் சுத்தமான பாலால் நிரம்பியிருக்கிறது. அதில் மேடைபோட்டு நான் மயங்கும் குலாம் அலி கச்சேரி நடக்கிறது. 'துக் கிலஹர்னே ச்சேடா ஹோகா' கஜலில் அவன் வேறுபடுத்திக் காட்டும் லஹர் (Wave) களில் ஒரு லஹர் , எனக்காகவே ஹார்மோனியத்திலிலிருந்து புரண்டு வந்து காலை நனைக்கிறது! நுரையாக சாரங்கி.... பாடியே என் பயம் போக்கும் குலாம் அலிக்கு பாப்·போபியா! புனிதமான மேடை , குட்டிக்கரணம் அடிப்பதற்கு அல்ல என்பான். இருந்தாலும் நமது எல்லா பயங்களையும் மட்டுமல்ல எல்லை பயங்களையும் போக்கும் நிஜக் கலைஞன். நான் அவனது கஜலில் திளைக்க என் மனைவியோ அவள் பாட்டுக்கு 'பியார் கியாதோ டர்னா க்யா...' என்று குஜல் பாடிக் கொண்டிருக்கிறாள் உற்சாகமாக. ஆமாம் என் விலா எலும்பே...!

'ஒரு பிரச்சனையும் இல்லை ' என்று ஹஸனுக்கு பதில் அனுப்பிய அடுத்த நாள் கனவின் தன்மை மாறிவிட்டது. பிரமாண்டமான கக்கூஸ் பேஸினில் பாதி உயிரோடு மிதந்தேன். என் மனைவி எத்தனை முறை Flush செய்தும், வாளி வாளியாக தண்ணீர் ஊற்றியும் தொட்டிக்குள் போகாமல் சுற்றிச் சுற்றி வந்தேன். நகங்களை முடிகளாகக் கொண்ட ஒரு தடித்த ஆணின் கை (ஆனால் வளையல் போட்டிருந்தது) எங்கிருந்தோ நீண்டு வந்து அவளை அறைந்து தள்ளிற்று. என்னைப் பிடித்துத் தூக்கி,

மூத்திரம் ஆறாய் ஓடும் தரையில் போட்டு உற்றுப் பார்த்தது... திடுக்கிட்டு எழுந்து ஒன்றன்பின் ஒன்றாக சிகரெட்களை ஊதித்தள்ளினேன். துற்சொற்பனம் நீங்க வீரகவிராஜ் இராமசாமி எழுதிய அருட்ப்பா புகையிடையே தெரிந்தது. என்றோ படித்து மறந்து புதைந்த ஒன்றை வேரோடு பிடுங்கி , சரியான சமயத்தில் கொடுக்கும் நமது சக்தியே ஒரு பயம்தான்....

'மீரான்ற னிணையடியை மறவாவிம் மனத்தினிலே மேவுகாட்சிப் பேரான கனவில்வரும் பெண்ணாசை யுறமேவும் பிணியை நீக்கி...'

அறைக் கதவு மெள்ளத் தட்டப்படும் சப்தம்.... பயந்து போனேன். இந்த அதிகாலையில் யாராக இருக்கும்? திறந்து பார்த்தால் அங்கே யார் நிற்பார்கள் ?

'எதுக்கும் பயப்படக் கூடாது தம்பி...உத்துப் பாருங்க...பிரச்சனையை நேரா மோதனும்..' என்று மெளத்தான வாப்பாவின் குரல் கேட்பதுபோன்ற உணர்வு.... நிஜமாகவே என் சீதேவி வாப்பா வந்து விட்டார்களா ? 'காணாமல் போன' மோதிரத்தோடு இருப்பார்களா?

தைரியமாகக் கதவைத் திறந்தால் நாத்தூர் நின்றான். சுபுஹ் தொழுவதற்கு இரண்டு மணி நேரத்திற்கு முன்னாலேயே தயாராகி விடுபவன். இறையச்சம் மிக அதிகம்.

'க்யா பீர்பக்ஷ்?'

'ஹஸன் சாப் வாபஸ் ஆகயா ஜீ' வந்திறங்கியதுமே விமான நிலையத்திலிருந்து அவனுக்கு தகவல் தெரிவித்திருக்கிறார். நரகத்தில் இறங்க ஜனங்கள் மிகவுமே அவசரப்படுகிறார்கள்...'இத்னி ஜல்தீ க்யூங் ?' - அமைதியாகக் கேட்டுவிட்டு கொஞ்ச நேரம் படுத்தேன். உறக்கம் வரவில்லை. காசிம் காக்காவுக்கும் தகவல் தெரிந்திருக்கும். அவர் இனி நேராகவே ஆபீஸ் வராமல் குடவுனுக்கு போய் விடுவார். குளித்து விட்டு சீக்கிரமே அலுவலகம் போனேன். எனக்கு முன்னால் ஹஸன் இருந்தார் - எல்லா ·பைல்களையும் , வவுச்சர்களையும் புரட்டிப் பார்த்தபடி.

புஷ்ஷ¥க்குப் புதிதாக முளைத்த முடிகள் பற்றி ஹஸன் பேசாதது குறித்து ஆச்சரியம்தான். சீக்கிரமே அன்று வந்த அர்பாப்களிடம்தான் மெல்லிய

குரலில் ஹிந்தியில் என்னமோ பேசினார். மஹ்ரிப் முடிந்ததும் என்னிடம் தன்மையாக அடுத்த வாரம் oneway-ல் ஊர்போக தயாராக இருக்குமாறு கூறினார். அதிர்ந்துபோய் நின்ற என்னிடம் 'நகல் க·பாலத்' (Visa Transfer) கொடுக்க முடியாததும், 'ஹர்மான்' (6 month Ban) ஐ தவிர்க்க முடியாததும் தன்னை மிகவும் துன்பத்தில் ஆழ்த்துவதாகச் சொன்னார்.

பதினைந்து வருடம் சேர்ந்து வேலைபார்த்த என்னை மறக்க முடியாது என்று தழுதழுப்பான குரலில் கூறியவர் முதலாளி , தனது நினைவாக வைத்துக் கொள்ளச் சொல்லிக் கொடுத்ததாக ஒரு பழைய மோதிரமும் கொடுத்தார். வாப்பா அணிந்திருந்த அதே மோதிரம்....!

அருஞ்சொற்பொருள்:
கமர் பஸ்தா ஹோனா - Be Courageous
எஜமான் - இறைநேசர் சாஹ¥ல் ஹமீது பாதுஷா
துஆ - பிரார்த்தனை
சபராளி - வெளிநாடு போய் வருபவர்
சஹர் - நள்ளிரவிலிருந்து அதிகாலை பாங்கு சொல்லும் வரை உள்ள நேரம்
மஹரி / மஹ்ரிப் - அந்தி நேரத் தொழுகை நேரம்
ஹராங்குட்டி - சைத்தானுக்கு பிறந்தவன்
ரூஹ்ரூஹானி - பேய்
மைய்யாத்தாங்கொல்லை - அடக்கஸ்தலம்
மௌத் / வ·பாத் - இறப்பு
தொதல் - தடியானவர்களை கிண்டலாக சொல்வது
அர்பாப் - முதலாளி
நாமூஸ் - ஜிப்ரயில் (அலை)
நேக் ஆத்மிலோக் - பக்திமான்கள்
ஆயத்துல் குர்ஸி - குர் ஆன் 2 வது அத்தியாயம் 255 வது வசனம்
சம்ச்சா / மஸ்கா - காக்கா பிடிப்பது
ரப் - இறைவன்
கபர் - செய்தி
பிஸாது - வதந்தி
குஷ் ஹ¥ம்மக் - ஆபாசமான திட்டு
மௌஜூத்? - இருக்கிறானா?
கானா கராப் கரேகா - வயிற்றலடிப்பேன் என்று சொல்வது
முதீர் - மேனேஜர்
b பலா - பிரச்சனை
ஈமான்தாரி - (மார்க்கத்தைப் பேணும்) நம்பிக்கையானவர்
சூரா யாஸீன் - குர் ஆனின் இதயம் என்று சொல்லப்படும் 36 ஆம் அத்தியாயம்.
ரஹ்மான் - இறைவன்
சுதியான - பிரமாதமான
வாதனை - வேதனை
மஹண்டு - மகிழ்ந்து மயங்கி
நாயகம் - நபி (ஸல்)

ஹராம் - (மார்க்கத்தில்) விலக்கப்பட்டவை
ஹதீஸ் - நபி (ஸல்) அவர்கள் சொன்னது/செய்தது/அங்கீகாரம் கொடுத்தது
சந்துக் - மைய்யத்துப் பெட்டி
பால்கிதாப் - 'ரமல்' போல அரேபிய எண்கணித சோதிட முறைகளில் ஒன்று
ஜந்த்ரி - பஞ்சாங்கம்
செவுனை - செய்வினை
அவுலியாக்குஞ்சு - இறைநேசர்கள் போல் நடிப்பவர்
ஜன்னத் - சொர்க்கம்
கனியாப் பெண்கள் - கன்னிப் பெண்கள்
நாத்தூர் - Watchman

பதிவுகள் அக்டோபர் 2003 இதழ் 46

## 22. உயிர்த்தலம்! - ஆபிதீன் -

-தொடையில் ஓங்கி ஒரு அடி...!

வலியில் , வஹாப் - என் தம்பி - எழுப்பிய சத்தம் மனதை அறுத்தது. இது வலி என்றோ அது எந்த இடத்திலென்றோ அல்லது அடித்தது தன் லாத்தாதான் என்றோ அவன் உணர்வானா ? பார்வை , எப்போதும் வானத்தை மறைக்கும் முற்றத்துப் பந்தலின் ஏதாவது ஒரு மூங்கிலில் பட்டு நிதானமில்லாமல் அலைய, எச்சில் வடிகிற கோணல் வாயில் மொய்க்கும் ஈக்களை விரட்டத் தெம்பில்லாத தன் திருகிய கைகளைத் தொட்டியில் அடித்துக் கொண்டு இருப்பவன் அவன். தொட்டியின் கம்பிகளைச் சுற்றிப் பிணைந்துள்ள அவன் சூம்பிப் போன கால்களுக்கு என்ன தெரியுமோ அதுதான் அவன் மூளைக்கும் தெரியும். மூளை இருக்கிறதா ? உடலின் எந்த பாகங்களுக்கும் வித்யாஸம் தெரியாத ஒரு பிறவியை குழந்தையென்று சொல்வது பொருந்துமா ? இப்போது அவன் பேண்டிருக்கும் மலத்தின் நாற்றம் கூட அவனுக்குத் தெரியவில்லையே...

நாற்றமெல்லாம் நமக்குத்தான்.

எல்லோரும் தாழ்வாரத்தில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்கும்போது குபீரென்று கிளம்பும். அது ஒன்றுமில்லை என்பதுபோல பாவனை காட்டுவார்கள் பெரியவர்கள். அவர்களில் ஒருவர் பிசுக்கி விட்டிருப்பதற்கும் வாய்ப்பு இருக்கிறதே... இல்லை, இது வஹாப் செய்த வேலையேதான். தொள தொளவென்று தொங்கும் அரை நிஜாரின் வழியே தொடைப் பக்கத்தில் புடைத்துக் கொண்டு மலம் கண்ணுக்குத் தெரிய ஆரம்பித்து விட்டது...வயிறு சரியில்லாத சமயங்களில் சத்தத்துடன் பிய்த்துக் கொண்டு தொட்டியின் இடுக்களின் வழியே தாழ்வாரத்தில் ஊற்றும்.

சுத்தம் செய்ய தாழ்வாரத்துத் தொட்டிதான் வசதி. வஹாபின் கழிவுகள் எல்லாம் முற்றத்தில் பாய்ந்து அப்படியே அதன் ஓரத்தில் இருக்கும் சாராக்குழியின் வழியாக தெருவுக்கு ஓடிவிடும். டெட்டால் வாசம் வீட்டில் மணத்தாலே வஹாபு வெளிக்கிப் போயிருக்கிறான் என்று அர்த்தம். லாத்தாதான் கொஞ்சமும் அருவருப்பு படாமல் கழுவும். நாற்றமே தெரியாது லாத்தாவுக்கு. சின்னப் பிள்ளையாக இருக்கும்போது அவனோடு மாக்குவலி போட்டுக் கழுவிய உம்மா , தூக்கிச் சுமக்க முடியவில்லை என்று பொறுப்பை இப்போது லாத்தாவிடம் ஒப்படைத்து விட்டார்கள். கழுவுவதாவது பரவாயில்லை, வஹாபின் சாமானைப் பிடித்து ஒரு கிளாஸில் விட்டு அவனை ஒண்ணுக்குப் பேய வைப்பதற்கு கனியாப்பிள்ளையான என் லாத்தாவை தொழத்தான் வேண்டும்.

'நான் செய்றேனே லாத்தா..' என்று உதவிக்குப் போனால் 'அவன் எனக்குத்தான்

அடங்குவான்டா' என்பாள் லாத்தா. அதுவும் உண்மைதான். அவளது கையின் வலிமை அவனுக்குத்தான் தெரியும். உம்மாவிடமிருந்து வந்த வலிமை.

அவர்களைத் தப்பும் சொல்ல முடியுமா? திடீர் திடீர் என்று வரும் ஜூரத்தின் உச்சத்தில் வெட்டு வந்து அடங்கிய பிறகு இரண்டு மூன்று நாளைக்கு வஹாபின் பிடிவாதம் தாங்காது. எதையும் வாயில் வைக்காத பிடிவாதம். நன்றாக இருக்கும்போது கொடுப்பதே ஆடிக் கொண்டேயிருக்கும் கோணவாயின் உள்ளே போகாமல் பாதி சட்டையில் சிந்துகிறது... இப்போதோ , பேச்சும் வராமல் 'வ்வாஆ ஆ..' என்று கத்திக் கொண்டே உடம்பை அஷ்ட கோணாலாய் புழுவென வளைப்பதில் , உணவென்ற பெயரில் கொடுக்கும் பிசைந்த இட்லியும் உணர்வூட்டக் கொடுக்கப்படும் மருந்துகளும் தொட்டிக்குத்தான் போகிறது.

வஹாப் பிறந்த இரண்டு வருடத்திற்குப் பிறகு இந்த தொட்டிதான் அவன் வீடு என்று சொல்ல வேண்டும். பலவீனமான உத்தரத்தில் தொங்கும் வீடு. எப்போது அறுந்து விழும் என்று யாருக்கும் தெரியாது..

இந்தத் தொட்டிக்கு வரும் முன்பு அவன் இருந்த துணித் தொட்டில் அழகு - அவனைப் போலவே. கூட்டுப் புருவம் வைத்துக் கொண்டு , கொழுகொழுவென்று...'உம்மாட சீன புக்கான் மூக்கும் வாப்பாட தலையும்!' என்று கிண்டல் செய்யப்பட்டாலும் பார்க்க அம்சமாகத்தான் இருந்தான் - 'ஒங்க வூட்டு புள்ளையிலுவளுக்கு சிக்லாவை ரெண்டு பக்கமும் கவுத்து வச்சாப் போல ஒரு கன்னம்..!' என்ற குடும்ப அடையாளத்தோடு.

தலை மட்டும் நிற்காமல் ஆடிக் கொண்டே இருந்தது. எப்போதும் அது அவனது மார்பின் துணையைத் தேடியது. 'நரம்புக் கோளாறு; சரி செய்து விடலாம்' என்றுதான் ஜமால் டாக்டர் சொன்னார். என்னென்னமோ மருந்து மாத்திரைகள். தலை போகட்டும், போலியோ வந்து போன பிறகு நிற்க முடியவில்லையே என்று காலுக்கு எல்லா வகை வைத்தியமும் பார்த்தார்கள். கடைசியில் காசு செலவு இல்லாத , மண்ணில் புதைத்து வைக்கும் மருத்துவமே சரியென்று கண்டார்கள்.

வஹாபின் இடுப்பு அளவுக்கு வாசலில் குழி தோண்டப்பட்டது. வேலைக்காரன் நாவப்பாதான் கூடவே இருப்பான். பெண்கள் வாசலுக்கு வர முடியாது. உம்மாவும் லாத்தாவும் கண்ணீரோடு ஜன்னலில் பார்த்துக் கொண்டு இருப்பார்கள். ஓரிரு மணி நேரம்தான். நான் கடைக்கு ஏதாவது சாமான் எடுக்க வீட்டுப் பக்கம் வரும்போது சமயத்தில் பார்ப்பதுண்டு. என்னைப் பார்த்ததும் வஹாபுக்கு அப்போதெல்லாம் புன்சிரிப்பு வரும். புரிந்து கொண்டதன் அடையாளமாகத்தான் இருக்கும் என்று நினைக்கிறேன்.

மண்ணின் கீழுள்ள அவன் கால்களைப் பற்றியும் புரிந்திருப்பானா ?

'இந்தோ அந்தோ' என்று நம்பிக்கையாய் எதிர்பார்த்து அது பொய்த்துப் போனதும் தொட்டிலோடு அடக்கி விட்டார்கள். நானா சௌதி போகும்போதெல்லாம் கூட இப்போதுள்ள அளவு மோசமில்லை. ஒரு பெரும் ஜூரத்தில் காலும் கையும் முறுக்கிக் கொண்டு கண் மேலே பார்க்க ஆரம்பித்து விட்டது. 'எப்படி இருக்கிறான் வஹாபு?' என்று நானாவிடமிருந்து கடிதம் வரும்போதெல்லாம் சமாளிப்பாக பதில் எழுதிக் கொண்டிருந்தார்கள். வாப்பாவிடமிருந்து சரியாக பணம் காசு வராத நிலையில் அவரும் கோபித்துக் கொண்டால் என்னாவது ? பயந்து, நேர்ந்து கொண்டு தர்ஹாக்களுக்கு போவதைக் கூட மறைத்தார்கள். கடைசியில் நானாவுக்கு விஷயம் தெரிய வந்தபோது அவர் ஒன்றும் கோபித்துக் கொள்ளாதது எனக்கு ஆச்சரியம். நம்பிக்கையால் குணமானால் நல்லதுதான் என்று எழுதி விட்டார். வஹாபுக்கு காசு செலவு பண்ணத் தயங்கித்தான் இந்த மழுப்பல் என்று வீட்டில் பேச்சு வந்தது. வஹாபை ஏதோ ஒரு மரக்கட்டையை பார்க்கிற மாதிரி பார்க்கும் அஸ்மா மச்சியை நினைக்கும்போது அது உண்மையாக இருக்கலாம் என்றுதான் தோன்றுகிறது.

நானாவின் மகன், 'வகாபு சின்னாப்பா' என்று பிரியத்தோடு தொடப்போகும்போது ' 'ஏ' இக்கிம். போவாதே..' என்று அதட்டும் மச்சியை எனக்கு பிடிக்கவில்லை. 'சூ.சு' என்று ஒரு பட்டப் பெயர் வைத்திருக்கிறேன் அவர்களுக்கு . அர்த்தம் என்னைத்தவிர யாருக்கும் தெரியாது. மச்சியைப் பிடிக்காதே தவிர நானாவின் மகன் அனீஸை எனக்கு ரொம்பவும் பிடிக்கும். என்னைப் போலவே ரஜினி பிரியன். ரஜினி சண்டை போட்டால் 'என் லை·ப்லெ இந்த மாதிரி சண்டை பாத்ததில்லை ' என்பான் அந்த மூணு வயது வால்! வீட்டிற்கு வரும் சமயங்களில் கடைத் தெருவுக்கு கூட்டிப் போய் ஏதாவது வாங்கிக் கொடுத்து அவனை சந்தோஷப் படுத்தலாம் என்றால் மகனை இலேசில் வீட்டுக்கு அனுப்ப மாட்டேன்கிறது மச்சி...

எங்கள் வீடு முழுக்க மல நாற்றமாம்!

மச்சியின் அலட்சியத்தைக் கழுவாத நானாவையும் இப்போதெல்லாம் பிடிக்கத்தான் இல்லை. தவிர , இவரால் அல்லவா லாத்தாவும் நானும் படிக்க முடியாமல் போனது! நானாவின் படிப்பால் வாப்பாவுக்குக் கடன் சுமை. அவர்களால் செலவுக்குச் சரியாக அனுப்ப முடியாமல் போனதில் நான் காலேஜ் போக முடியாமல் காடம்படி ITயில் காக்கிச் சட்டையோடு பொருமினேன். லாத்தா , வயசுக்கு வரும் வரை -குடும்பத்தின் எதிர்ப்போடு- படித்தாள். 'நம்ம சமூகத்துலெ பொம்பளைப் புள்ளைங்க படிச்சாச்சான் தன்னோட புள்ளைங்களை சபர் செய்ண்டு பேயா விரட்டாது' எனும் வாப்பாதான் அவளுக்கு ஆதரவு. புரியாத புத்தகங்களையெல்லாம் புரிந்த மாதிரி பந்தாவாக படிக்கும் நானாவும் ஆதரவுதான். ஆனால் அப்போது அவர் சௌதி போயிருக்கவில்லை. 'பயணம் போவாத பண்டி' எப்படி ஆதரவு கொடுக்க முடியும் ? காலேஜ் படிப்பை முடித்து விட்டு தர்ஹாலைனிலுள்ள சிங்கப்பூர் கடையில் வேலை பார்த்துக் கொண்டிருந்தார். வேலை

விஷயத்தில் நானும் அவரும் ஒன்றானது அந்த சமயத்தில் எனக்குப் பெருமையாகத்தான் இருந்தது. ஆனால் படிச்சவன் பயணம் போவட்டும் என்று அவருக்கு மட்டும் உம்மா பல தர்ஹாக்களுக்கும் நேர்ந்து கொண்டிருந்ததில் அந்தப் பெருமை தொலைந்தது. ஒரே நேரத்தில் எனக்கும் நானாவுக்கும் நேர்ந்தால் அவுலியாவுக்கு பிடிக்காது போலும். 'நீ நேந்துக்கிறதுனாலேதான் எனக்கு விசா கிடைக்க மாட்டெங்குது' என்று நானா கோபப்படுவார்.

நானா பெரிய அவுலியா எதிரி. ஒருமுறை , ஏதோ ஒரு வீட்டுக் கல்யாணத்துக்காக எழுபதடிபாவா அடங்கியுள்ள ஊர்ப் பக்கம் போய் , பாவாவின் கபுருக்கு பக்கத்தில் இருந்த மிக உயரமான பனை மரத்தைப் பார்த்து விட்டு ' பாவா , ஜட்டியை காயப் போடுறதுக்கா இது?' என்று கேட்டு அடி வாங்கியவர் ! இப்போது மட்டும் எப்படி மாறினார்? அந்தப் பனைமரம் அங்கேயேதான் அப்படியே இருக்கிறது.

வஹாபைக் கூட்டிக் கொண்டு ஒரு பாவாவின் தர்ஹாவுக்குப் போகும்போது நானும் உடன் போயிருந்தேன். நாய்பாவா தர்ஹா. கூத்தானூர் குளத்துப் பக்கம் இருக்கிறது. வாலையில் இரண்டு நாள் இருந்தோம். வஹாபைப் போல எத்தனையோ பேர்... யாருக்கும் குணமான மாதிரி தெரியவில்லை. ·பாத்திஹா ஓதுபவர்கள்தான் திடகாத்திரமாக இருந்தார்கள். பாவாவோடு அலைந்த நாய்கள் இப்போது வருவதில்லையாம். பாவா உயிரோடு இருக்கும்போது வஹாபைக் கொண்டு போயிருக்க வேண்டும்.

நாய்பாவாவை நான் பார்த்ததில்லை. வீட்டில் அவர்களின் ஒரு பழைய ·போட்டோ மட்டும் இருக்கிறது பூச்சி அரித்துப் போய் . பாவா இன்னும் நாயோடு இருக்கிறார்கள் என்பது சேச்சிமாவின் நம்பிக்கை. சேச்சிமா என் பாட்டியா. 'நம்புனா எல்லாம் குணமாவும்' என்பார்கள். 'அப்படிண்டா அல்லாவை நம்ப வேண்டியதுதானே ?' என்று நானா கேட்பார் எகத்தாளமாக. படித்தவர் இல்லையா ? 'அல்லாதான் அவுலியாவை நம்பச் சொல்றான்' என்று வாதம் பண்ணும் சேச்சிமாவிடம் நானாவின் விஞ்ஞான விளக்கம் எல்லாம் செல்லுபடியாகாது. 'போடா போடா பொக்கப் பயலே' என்று புறமொதுக்கிவிடும். அந்த நாய்பாவாவின் ஹந்தூரி ரொம்ப விசேஷம். ஊரே ஒற்றுமையாகத் திரண்டு , மத பேதம் பார்க்காமல் , வரும் பக்தர்கள் அனைவருக்கும் சோறு போடுவது பெரிய விஷயம். தண்டவாளத்தை ஒட்டிய திடலில் நடக்கும் விருந்து. தான் போகாமல் இருந்தாலும் யாரிடமாவது சொல்லி அந்த சீராணியின் ஒரு பருக்கையையாவது , 'அஹட சோத்துக்கு ஒரு தனி மணம்..' என்று வாயில் வைக்கும் வரை சேச்சிமாவுக்கும் தூக்கமே வராது. இதை அவர்கள் சொல்லும்போது 'சோ', 'சூ'வாக ஒலிப்பதில் மற்ற பெண்களுக்கும் தூக்கம் வராது!

நாய்பாவா என்றால் சேச்சிமாவுக்கு அவ்வளவு பிரியம். ஒருசமயம் பெரிதாகச் சிரித்துக் கொண்டே சேச்சிமாவை தன் மடியில் இறுக்கிக் கொண்டு கொஞ்ச நேரம் இருந்தார்களாம்

பாவா. இது பாட்டிமார்கள் பிஸாதில் இடம்பெறும்போது 'பாவாட வப்பாட்டியா இக்கிறதுக்கு கொடுத்து வச்சிருக்கனுமே..!' என்று சேச்சிமா சொல்லி எல்லோர் வாயையும் அடைத்து விடும். சேச்சிமாவின் மூத்த பையனான சேத்த காக்காவை பாவா அல்லவா நடக்க வைத்தார்களாம்..! 'ஒங்க ஊருலே ஒரு புலியை வச்சிக்கிட்டு இங்கே ஏண்டி வந்தே கச்சடா சிறுக்கி' என்று சேச்சிமாவை திட்டியபடி சேத்த காக்காவின் தொடையில் ஓங்கி ஒரு அடி - இப்போது வஹாபுக்கு லாத்தாவும் உம்மாவும் செய்கிற மாதிரி. இது தொந்தரவின் விளைவு. அதுவோ உயிர் மேல் உள்ள கருணை. நாய்களுக்குக் கருணை காட்டியவர்கள் மனிதர்களுக்கு காட்ட மாட்டார்களா?

'அடிச்ச அடிலெ புள்ளெ சுருண்டுட்டான்.. 'போ ஊருக்கு திரும்பி'ண்டாஹா. வந்த மூணே நாளுலெ நடக்க ஆரம்பிச்சிட்டான்..!' என்றார்கள் சேச்சிமா வியப்புடன். சேத்த காக்கா நடப்பதற்குப் பெயர் நடையா ? கோணல் மாணலாகப் புதையும் கால்களின் ஒவ்வொரு அசைவும் அல்லாஹ்வைக் கேலி செய்வது போல இருக்கிறது. வேகமாக வீசிப்போகும் கைகளோ - காற்றோடு கூடிக்கொண்டேயிருந்து - குத்தும் ஊரின் கேலி அணுக்களை விலக்கி விலக்கிக் கொண்டு.... ஆனாலும் உயிர் நடப்பதென்பது அழகு.

வஹாப் நடக்க முடியாது. கனவில் வந்தாலும் தொட்டியில்தான் சுருண்டிருப்பான். வேகமாக ஓடிவந்த நாயின் இரைப்பும் காளையின் சீற்றமும் கலந்த ஒரு சப்தம் வெளியாகிக் கொண்டிருக்கும். வீட்டுக் குழந்தைகளை யார் அடித்தாலும் வெளிப்படும் மாறாத உறுமல்...

உம்மா , 'கொடுத்தவன் நேராக்குவான்..' என்று இன்னும் கொஞ்சம் நம்பிக்கை வைத்திருந்தார்கள். ' நீ மச்சானுக்கு அளவுக்கு மீறி கொடுத்ததனாலதான் கோணலாச்சு ' என்று மாமி சொல்லும் உம்மாவிடம். 'கொடுத்தது' என்று சொல்லும்போது குரலில் ஒரு குஷி. 'வாங்குன பொறவு வயித்துக்கு மாத்திரை போட்டா வர்றது வயிறெரியிற மாதிரிதான் வரும்' என்று 'வ'னாவிலேயே வாரவும் செய்யும். மாமியும் நானா வைத்திருக்கும் புத்தகங்களை படிப்பார்களோ என்னவோ... நானா படிக்கும் புத்தகங்கள் எல்லாம் அவரது பரு வெடித்த முகம் மாதிரிதான் பைத்தியக்காரத்தனமாக இருக்கும். அவரது நண்பர்களோ..எல்லாம் லூசுகள்! தன் அத்தை பெண்ணிடம் 'பூந்து பொறப்பட' ஆசைப்பட்ட சிவகுரு என்ற லூசு , 'சுகாதாரம் மட்டுமல்ல. நல்லா செய்யலாம்' என்ற நானாவின் பேச்சைக் கேட்டு சின்னத்து செய்து கொண்டு தன் வீட்டுக்குள் பூற முடியாமல் எங்கள் வீட்டிலேயே கொஞ்சநாள் கிடந்தது.

அந்த லூசுகள் படிக்கும் வெளிநாட்டு எழுத்தாளர்களின் பெயரெல்லாம் 'ஸ்கி', 'ஸ்கி' என்று முடியும். அல்லது அப்படிப்பட்ட பெயரைப் பார்த்துத்தான் படிக்கிறதோ என்னவோ.... 'தமில்லெ யாருமே இல்லையாண்ணே? என்று ஒரு லூசிடம் கேட்டதற்கு 'ஒனக்கு இது போதும்' என்று வண்ண நிலவன் என்பவரின் கதை ஒன்றை படிக்கக்

கொடுத்து 'திருந்துடா!' என்று வேறு சொன்னது. என்ன திமிர் பாருங்கள் ! தலைப்பு, எஸ்தரோ புஸ்தரோ.. கதை சொன்ன விதம் புதுமையாகவும் எனக்குப் பிடித்தும் இருந்ததுதான். ஆனால் கதை என்றால் குடும்பப்பத்திரிக்கை 'அல்லி'யில் வருவது போல பிரச்சனையில்லாததாகவும் எளிமையாகவும் இருக்க வேண்டாமா ? 'அல்லி..அலஹான பொம்பளை. ஆனா பின்னாலெ செய்யத்தான் லாயக்கு!' என்று நானா கிண்டல் செய்வதை விடுங்கள், அந்தக் கதை என்னை ரொம்பவும் பயமுறுத்தியது. பஞ்சம் பிழைக்க வெளியூர் போகும் குடும்பத்தின் பொம்பளை ஒருத்தி , சாகக் கிடக்கும் கிழவியை கழுத்தை நெறித்து கொன்று போடும் பயங்கரம்... அதைப் படித்து ரொம்ப நாள் உம்மாவும் வஹாபைச் சாக அடித்து விடுவார்கள் தொந்தரவு தாங்காமல் என்று மிகவும் பயந்தேன். மழை சீசனில் வஹாபைத் தொட்டிலோடு நடுவூட்டு அறையில் போடுவார்கள் . தொட்டியிலிருந்து தனியே பிரித்து தூக்கி எடுத்து வைப்பது சிரமம் என்றுதான் இப்படி. தவிர தரையின் சில்லிப்பு ஏறி அவனுக்கு வெட்டு வந்து விடும் என்றும். முற்றத்தில் படுக்கும் நான் , அறையிலிருந்து காலையில் உம்மா வெளி வரும்போதே வஹாபின் மவுத் செய்தியைச் சொல்லி விடுவார்களோ என்று அவர்களின் முகத்தையே 'உர்...'ரென்று பார்ப்பேன்.

இதுவரை அப்படி ஒன்றும் நடக்கவில்லை. அவ்வளவு பெரிய பஞ்சத்தில் எங்களை வாப்பாவும் நானாவும் வைக்காததுதான் காரணம். பஞ்சம் இல்லாவிட்டால் என்ன, 'மொட்டைப் பூலான்களைக் கருவறுப்போம்' என்று வெளிப்படையாகவே வெறுப்பைக் கரைத்து எழுதி , பழைய பஸ் ஸ்டாண்ட் சுவரில் - பக்கத்திலுள்ள போலீஸ் ஸ்டேஷனைக் கண்டு கொள்ளாமல் அல்லது அவர்களின் ஆசியோடு - துணிச்சலாக வைப்பவர்களால் அந்த நிலைமை வந்து விடுமாம் - மூட்டிவிடுகின்றன சில அரசியல் கட்சிகள். செம்படபுரத்திற்கும் பெருமாவீதிக்கும் இடையே , கிடுக்கிப் பிடியில் அல்லவா எங்கள் தெருக்கள் மாட்டி இருக்கின்றன! உண்மையில் , ஆட்டுவதா நீட்டுவதா என்று அடித்துக்கொண்டிருக்கும் இந்த கட்சிகளுக்கிடையில்தான் நாங்கள் மாட்டிக்கொண்டிருப்பது தெரியாமல் பயம்...உம்மாவோ லாத்தாவோ தப்பி ஓடினால் அந்தக் கதையில் வரும் சம்பவம்போல நடந்தும் விடலாம்தான்...

ஊனமுற்ற ஊர்பாட்டுக்கு ஊர். அதோடு ஓடிக்கொண்டே நம் ஊனங்களை நாமே சரிசெய்துகொள்ள வேண்டும். 'லகத் க kh லக்னல் இன்ஸான ·பி அஹ்ஸனி தக்ரீம்' என்கிறது இறைமறை. நம்பிக்கையின் அர்த்தம் : நிச்சயமாக அல்லாஹ் மனிதனை மிக அழகிய அமைப்பில் படைத்துள்ளான். அத்தியின்மீதும் ஜெய்த்தூனின்(olive) மீதும் சத்தியமாக!

வஹாப் விஷயத்தில் உம்மா செய்வார்களோ இல்லையோ, இல்யாஸ் மாமா செய்து விடுவார் போலிருந்தது. மாமா அதிகம் படித்தவர் அல்ல. ஆனால் விஷய ஞானம் உண்டு. நிறைய பத்திரிக்கைகள் படிப்பார். euthanasia என்று ஒன்று இருக்கிறது என்று அவர்தான் அடிக்கடி சொல்வார். தவிர வஹாப் ரொம்ப நாள் உயிரோடு இருக்க மாட்டான் என்று

அவன் பிறக்கும்போதே டாக்டர் அவரிடம் சொன்னாராம். அதிக பட்சம் 16 வருஷம் என்றாராம் . இப்போது வஹாபுக்கு பதினேழு நடக்கிறது. நாள் குறித்த டாக்டர் உயிரோடு இல்லை!

எல்லோருக்கும் நல்ல பெயரைக் கொடுக்க , நக்கரித்துக்கூடப் போகத் தெரியாத வஹாப் தற்கொலைதான் செய்து கொள்ள வேண்டும் போலும். ஆனால் அவனுக்குத் தன்னையே தெரியாதே... சின்னம்மா மகன் மஹதி அப்படித்தான் ஹொத்துவா பள்ளி கிணற்றில் விழுந்து தற்கொலை செய்து கொண்டான். என்னை விட ஒரு வயதுதான் சிறியவன். பார்க்க சேட் வீட்டு பிள்ளை மாதிரி இருப்பான். வெடிப்பாகப் பேசுவான். நாலு வருடங்களுக்கு முன் மூளைக் காய்ச்சலில் மாட்டி காது சுத்தமாகக் கேட்காமல் போய் விட்டது. சென்னையில் வைத்து நிறைய செலவு செய்தும் பலனில்லாமல் போனதில் வெறுத்து விட்டது அவனுக்கு. வெறுக்க வைத்து விட்டார்கள் என்பேன். தான் சொல்வது மற்றவர்களுக்கு சரியாகக் கேட்காது என்று அவனாகவே ஒரு கருத்தை ஏற்படுத்திக் கொண்டு ரொம்பவும் சத்தமாக இழுத்து இழுத்து பேசுவதைப் பார்த்து எல்லோரும் சிரிக்கிறார்களே...! சிரிப்பவர்கள், தாங்கள் சொல்வது மஹதிக்கு கேட்காது என்பதற்காக கையை அதிகமாக அசைத்தும் முகத்தின் தசைகளையெல்லாம் ஒரே சமயத்தில் இயக்கியும் பதிலுக்கு விளக்குவதில் அவனுக்கு வேறு ஏதோ ஒன்று விளங்கி விட்டது...முதல் முறை , வீட்டுக் கிணற்றில் விழுந்து தப்பித்துக் கொண்டான். இரண்டாம் முறைதான் பள்ளிக் கிணறு. துல்லியம். தொழுகை நடக்கும்போது 'யா அல்லாஹ்..' என்று வெளியில் ஒரு குரல் கிளம்பி அடுத்து 'தொளக்...' என்ற நீரின் பெரும் சப்தமும் வெளியில் கேட்பதை யாரும் கண்டு கொள்வதில்லை. ஆனால் மின்விசிறி நின்று போனால் மட்டும் புழுங்கி விடும்!

'அல்லா ஜல்ல ஜலாலஹு¥த்தஆலா தந்த உசிரை மனுசன் அவனா போக்கிக்குறதுக்கு உரிமை கிடையாது. தற்கொலை செய்றவங்க எப்படி அதை செஞ்சாங்களோ அதே மாதிரிதான் நரகத்துலெ இருப்பாங்கண்டு நாயஹம் சொல்லியிருக்குகின்றா¡ர்கள் ' என்று கொஞ்ச நாள் , கேட்டவர்களின் உயிரையெல்லாம் இறுக்கினார்கள் ப♭யானில். நரகத்தில் பள்ளிக் கிணறும் இருக்குமா ? என்னதான் அங்கே இல்லை ? அங்கே இல்லாதது ப♭யான் மட்டும்தான்.

நீங்கள் உங்களையே கொலை செய்து கொள்ளாதீர்கள்- குர்ஆனில் வரும் வசனம்...

'ஹாலந்து கோர்ட்லெ வேதனை தாங்காத நோயாளிக்கு சாக அனுமதி கொடுத்திருக்காங்க !' என்று இல்யாஸ் மாமா வேதம் ஓதினார் வாயாலெ சாபுவிடம். எதாவது நாம் வினோதமாகச் சொன்னால் ,'உங்க வாயாலெ சொல்லாதீங்க..' என்று ஒரு விதமான ராகத்தில் சொல்வதால் சாபுவுக்கு அந்த பெயர்.

'ஏடா கூடமா எதையாவது சொல்லாதீங்க... சாக கெடக்கும்போது ஹராமான பொருளைக் கூட சாப்புட  நம்ம மார்க்கம் அனுமதிக்குது - உசிரு பொழைக்கிறதுக்கு. ஆனா சாவுறதுக்காக எதைச் செய்யவும் நமக்கு அனுமதி கொடுக்கலே ரப்புல் ஆலமீன்' என்று பதில் சொன்னார் சாபு.

'சாவு ! உங்களுக்கு என்னா தெரியும் ? எந்த கேள்வியும் கேக்காம அல்லாட பாதையிலெ போர் செய்யுங்கண்டு எங்களை சாவ சொல்லிட்டு  நீங்க போவ மாட்டீங்க! ' - மாமா ஆழம் பார்த்தார்.

'அடடே..தப்பா புரிஞ்சிக்கிட்டிங்களே..!. அந்த சின்ன ஜிஹாத் - ஜிஹாதுல் அஸ்கர்- முடிஞ்சி போச்சி. ஜிஹாதுல் அக்பர் - மனசோட போராட்டம் நடத்தி ஜெயிக்கிற பெருசு- தான் இப்ப வேணும்டு சொல்றோம். அப்படி ஜெயிச்சவங்கதான் சிராத்துல் முஸ்தகீன் பாலத்தைக் கடக்க முடியும்'

'நான் ஏன் அந்த பாலத்தை கடக்குறேன் ? அடுத்த பக்கம் போவாம கீழே குதிச்சிடுவேன் !'

'மார்க்கத்துலெ விளையாடக் கூடாது' - வாயாலெ சாபு காதைப் பொத்திக் கொண்டு முடிவாகச் சொன்னார். வாயாலெதான் !

மற்றவர்கள் அவர் முன் அப்படிப் பேச முடியாது. என் வீட்டுக்கு நெருக்கமான சாபு என்பதால் மாமாவுக்குத் துளிர் விடுகிறது. வீட்டில் ஏதாவது ·பாத்திஹாக்கள் நடத்தும் போது வாயாலெ சாபுதான் வருவார்.  ஊருக்கு ஒரு 'அதாரிட்டி' மாதிரி இருக்கிற சாபு எங்கள் வீட்டுக்கு வருவதில் எங்களுக்கு பெருமைதான்.

வாயாலெ சாபு மேல் எனக்கும் பிரியம் உண்டு. வீட்டுக்கு வந்தால் எப்போதும் வஹாப் அருகில் போய் தொட்டிக் கட்டையில் உரசு உரசி நிரந்தரமாகப் புண்ணாகிப் போயிருக்கிற அவன் நாடியை அன்போடு தடவிக் கொடுப்பவர் அவர். 'அல்லாஹ் ஏன் இப்படி சிலருக்கு வேதனை கொடுக்குறாண்டு தெரியலேயே..' என்று அலுத்துக் கொள்வார். எப்பேர்ப்பட்ட மேதைக்கும் கிடைக்காத பதில் சாபுக்கு மட்டும் கிடைக்கும் முனகலாக : 'ம்... எதுக்கோ கொடுக்குறான்!'

நேற்று வந்த சாபு மறுபடியும் அலுத்துக் கொண்டபோது , 'துஆ செய்யுங்க சாபு..' என்று உம்மா சொன்னார்கள் . தழுதழுத்த குரல்.

'உங்க வாயாலெ அதை சொல்லாதீங்க. மாப்புளெ இந்த தடவை வரும்போது எல்லாம் சரியாப் போயிக்கிம் , இன்ஷா அல்லாஹ். தொட்டியை விட்டு வஹாபுதம்பி இறங்கிடுவாரு பாருங்களேன்..'

'இவனோட தொசங்கட்டி மாளலே..அல்லா கருணை காமிக்கட்டும்..'

'எளியவன் மேலே நீங்களும் காட்டணும். ரெண்டு முழுத் துப்பட்டி சொல்லியிருந்தேன். இதுவரைக்கிம் அனுப்பலே ஒங்க மாப்புளே..'

'எலுதுறேன் சாபு..மறந்திருப்பாஹா வஹாபுட கவலையிலெ...'

'ஆங்.. வஹாபுண்ட ஒடனே ஞாபகம் வருது. சின்னத்து செஞ்சிடுங்க அவனுக்கு'

'ஆவு! ஒங்க வாயாலெ சொல்லாதீங்க சாபு..' - உம்மாவுக்கு கண் கலங்கியது.

நானா இருந்தால் எதாவது சாபுவிடம் கேட்பார். மகனுக்கு சின்னத்து பண்ணும்போது அவன் அழுத அழுகையைப் பார்த்து , 'வுட்டுடுங்க..அவன்ற வாப்பாட மாதிரியே இந்துட்டு போவட்டும்' என்று ஒரு உம்மா சொல்வதாக ஒரு 'தமாஷ்' சிறுகதை எழுதியவர். 'சொர்க்கத்தின் சாவி தொழுகை என்றால் பூட்டு எது?' என்று வித்யாசமாகக் கேட்டவராயிற்றே! ஆனால் அவர்தான் 'அல்லா இக்கிறானா?' என்ற என் கேள்விக்கு 'இக்கிறானா இல்லையாண்ட கேள்வியே இக்கிறதுனாலேதானே வருது! 'உலகில் இல்லதற்கு இல்லை பெயர்'ண்டு தொல்காப்பியம் சொல்லுதுப்பா' என்று , தோல்காப்பியம் மட்டும் தெரிந்திருந்த எனக்குத் தெளிவு தந்தவர். அவருடைய அந்தக் கதையால் நானும் சில விஷயங்களை தெரிந்து கொண்டிருக்கிறேன்.

சின்னத்து, ஆரம்பத்தில் யூதர்களின் பழக்கம்; இன்றும் அது அவர்களுக்கு ·பர்ளும் கூட; ரசூலுல்லாவுக்கு , பிறக்கும்போதே அப்படி பண்ணப்பட்டு இருந்தது; சின்னத்து செய்வதால் ஆண்குறியின் முன்புறமுள்ள 'மாவு' (அழுக்கு ) நீக்கப்பட்டு தொழ ஏதுவாக உடல் சுத்தமாகிறது etc... சில ஆப்பிரிக்க நாடுகளில் இன்றும் பெண்களுக்கு செய்யப்படும் வக்கிரமான FGM பற்றியும் அறிந்து அதிர்ந்தேன். 'ஒரசுனா ரொம்பக் கேக்கும்டு 'நோனி'லெ பண்ணுனாஹா. உம்அதியா சொல்ற ஹதீஸ் கூட அபுதாவுதுலெ இக்கிது. ஆனால் அது லாயி·ப் ' என்று ஒரு பாத்திரம் சொல்லும் வரிகூட ஞாபகம் இருக்கிறது. விஷயம் எனக்கு முழுக்கப் புரியாவிட்டாலும், தைப்பது போன்ற சித்திரவதைகளையும் சொல்லிச் செல்லும் கதை.

ஆனால் இப்போதைய பிரச்சனையில் நான் என்ன சொல்வது?

மனிதர்களுக்கு , அவர்கள் மனிதர்களாக இருக்கிறார்கள் என்ற ஒரு அடையாளம் மட்டும் போதாதா - 'கடைசி அடையாளம்' வரை என்று எனக்குள் கேட்டுக்கொண்டிருந்தேன். எனக்கும் சிந்தனை வருமாக்கும்! ஒரே ஒரு சந்தேகம், அத்தனை அற்புதமான ஒழுங்கோடு உடலைப்படைத்த நாயன் 'அங்கே' மட்டுமா மறந்து போயிருக்க முடியுமா

என்பதுதான். மறந்தானென்றால் அது இறையின் ஊனமல்லவா? ஹ¥ம், என்னை யார் கேட்கிறார்கள்?

எப்போதும் கையில் sharpner வைத்திருப்பவர் மாதிரி மாமா மட்டும் தீர்க்கமாய் சொன்னார் : 'அந்த காலத்துலெ இபுறாஹிம் அலைஹிஸ்ஸலாம் எம்ப்ளது வயசுலெ தனக்குத்தானே சின்னத்து பண்ணிக்கிட்டாஹலாம், தெரியுமா ? பாக்க அலஹ¥ மட்டுமில்லேங்கனி.. சீவுன பென்சில்தான் எழுதும் !'

பேனாவினால் எழுத வேண்டியதுதானே..? ஓ, அப்போதும் மூடியைத் திறக்க வேண்டியிருக்குமோ...?! கடைத்தெருக் கூட்டாளி ஒருவனிடம் சந்தேகம் கேட்டேன். 'டேய்..ஒனக்கு பண்ணியாச்சா இல்லையாண்டே சந்தேஹமா இக்கிது..கடற்கரைக்கி வா!' என்றான் அந்த முட மசுரு முளைத்தவன். 'குஞ்சமா இருந்து தலைப்பாக்கட்டா மாறிய'தைப் பார்க்க அத்தனை ஆர்வம்! நான் போகவில்லை. 'அவுத்துப் பார்த்தா இவனுங்க யாருண்டு தெரிஞ்சிடும்' என்று 'யாருக்கும் தெரியாத' வழி சொல்லும் முனிரத்னஹாசன் படம் , பாதுஷா திரையரங்கத்தில் ஓடக் கூடாது என்று உண்ணாவிரதம் நடத்திய வேறொரு கூட்டாளியிடமும் கேட்டேன். அவனோ கம்ப்யூட்டர் கொஞ்சம் படித்தவன். format செய்ததை unformat செய்ய முடிகிற மாதிரி ஒரு புது டெக்னாலஜியை நாசுவர்கள் கண்டு பிடித்து விட்டால் பிரச்சனை இருக்காது நமக்கு என்றான்.

பஜாரில் இப்போதெல்லாம் படித்தவர்களாகப் போய் விட்டார்கள். எனக்கு அவன் சொன்னது சரியாக விளங்கவில்லை. இப்போது சாபு சொல்வது மட்டும் விளங்குகிறது.

' இப்ப, பொறந்து ஒரு வாரத்துக்குள்ளெ எல்லா ஆம்புளைப் புள்ளைக்கிம் அரபு நாட்டுலெ பண்ணிடுறாஹா.. மவுத்து- ஹயாத் எல்லாத்துக்கும் இக்கிது. இவனும் இப்பவோ அப்பவோண்டு கிடக்குறான்லெ?...' என்றார்

'மொஹத்துலெ பிளேடு பட்டாவே அவனுக்கு கொப்பளம் கொப்பளமா வருதுண்டுதான் தாடி மீசையெல்லாம் வளந்து மிஸ்கீன் மாதிரி இக்கிறான் . இப்ப 'மானி'லேயா ? வெட்டு வந்து பொரக்கணையில்லாம போயிடுவான் சாபு ..டாக்டர் வாணாண்டுக்கிறாரு. வாணாம்.' என்றது லாத்தா தீர்மானமாக.

'எந்த டாக்குடர்ர்ரூ..? ஒண்ணுக்குப் போயிட்டு கழுவாதவனாயிக்கிம்..!'

'கழுவுறவனுவ மட்டும் காசு வாங்காமத்தான் வைத்தியம் பண்ணுறானோ?' - லாத்தா அவரது திமிரை அடித்தாள்.

'முஸ்லீம் பேரை வச்சிட்டு முஸ்லீம் புள்ளையாவே போய் சேருறதுதான்

நல்லது..பண்ணிடுங்க உடனே... இது வாஜிபு.! ' என்று தீர்மானமாக உம்மாவிடம் சொல்லி விட்டு ஏதோ அனுமதி வாங்குவது போல 'என்னங்கனி...மஜ்குத்தா பண்ணி காக்காக்கு கொஞ்சம் பிச்சிக் கொடுப்போமா ?' என்று வஹாபிடம் வேறு கேட்டார் வாயாலெசாபு. வாஜிபுதானா? இருக்கலாம்; இல்லை. தீர்மானமாக யாருக்குத் தெரியும்? இல்யாஸ்மாமா பாங்காக் போயிருக்கும் இந்த சமயத்தில் மார்க்கம் தெரிந்தவர் வாயாலெசாபுதான். ஆயிரத்தெட்டு ஹதீஸ் தொகுப்புகளையும் அவரால்தான் புரட்ட முடியும். லாத்தா துடைக்கத் துடைக்க வஹாபின் வாயிலிருந்து தொடர்ந்து வழியும் வாணியைக்கூட கவனிக்கவில்லை சாபு. வஹாப் ஏதோ முனகியதைக் கேட்டு , ' இப்ப பண்ணலேண்டா அப்புறம் நாசுவன் அரிவாளை எடுத்துட்டு வர்ற மாதிரி ஆயிடும்குறாறு வஹாபுதம்பி..' என்று அனைவருக்கும் விளக்கம் சொன்ன சாபு இன்னொன்றும் சொன்னார்.

சாதாரண சமயத்தில் அது சிரிக்கக் கூடியதுதான். அலங்கரிக்கப்பட்ட உரலில் , அசைய முடியாமல் தொடைகள் விரிக்கப்பட்டு , 'தயாராக' உட்கார்ந்திருந்த ஒரு வளர்ந்த பையனின் குறியைப் பார்த்து (குலவை சத்தத்தில் எனக்கெல்லாம் உள்ளே போய்விட்டது அன்று!) ஒரு நாசுவன்...வேண்டாம் , ரொம்பப் பச்சையாக இருக்கும். ஒவ்வொரு சின்னத்துகல்யாணத்தின் போதும் சொல்லப்படும் அந்த 'ஜோக்'கால்தான் எல்லா இளங்காய்களும் பழுக்கின்றன என்று மட்டும் சொல்லி நகர்ந்து விடுகிறேன். இது சிரிக்கும் சமயமல்ல.

சாபு சொன்னபோது , கொல்லை சமையல்கட்டுப் பக்கத்தில் அமைதியாக அமர்ந்திருந்த உரல்தான் ஞாபகம் வந்தது. வஹாப் உட்காரப்போகும் சமயத்தில் ஜிகினா பேப்பரெல்லாம் ஒட்டப்பட்டு அலங்காரமாகிவிடும் அது, நெருங்கி வரும் மவுத்தின் அடையாளமாகப் பட்டது. இந்த மவுத்துதான் எத்தனை வடிவங்கள் எடுக்கிறது! உரலில் வைத்துத்தான் செய்வார்களா அல்லது தொட்டியில் வைத்தே கதையை முடித்து விடுவார்களா? வாப்பா , நானா இதற்கு அனுமதிப்பார்களா ? அல்லது 'பிரமிடு' தவிர்க்கும் பெரியாஸ்பத்திரிக்கு போகச்சொல்வார்களா? நேர்த்திக்குறைவை விடுவோம், அங்கே மவுத் வராதென்பதற்கும் என்ன உத்தரவாதம்? கத்தியால் முடியாவிட்டாலும் புத்தியாலாவது அதை வரவழைத்துவிட மாட்டாரா காதர்ஒலி டாக்டர்? எல்லாவற்றுக்கும் முடிவைத் தரத்தானே இந்த மவுத்தும் இருக்கிறது...

'மவுத் என்பதே உயிரை சின்னத்து செய்வதுதான்' என்பார் என் நானா கண்ணைச் சொருகிக் கொண்டே . சமயத்தில் தலைக்கு மேலே மிதக்கும் தன் இரு கண்களை எடுத்துப் பொருத்திக்கொண்டு. என்ன அர்த்தம் இதற்கு ? எனக்கு ரொம்பக் குழப்பமாக இருக்கும்.

வஹாபுக்கு ஒரு குழப்பமும் இல்லை. அற்ப விஷயத்துக்குப் போய் ஜனங்கள் இப்படி பயப்படுகிறார்களே என்று நினைத்திருப்பானோ என்னவோ...

பயங்காட்டும் பெரும் ஒலியை அவன் எழுப்பினான். அது சிரிப்பா , அழுகையா ? யாருக்கும் தெரியாது. அந்தச் சத்தத்தில் வெளியேறிய பீ மட்டும் அனைவரது கண்ணுக்கும் தெரிந்தது. ஒரு புட்டு மொத்தத்திற்குக் கறுத்த புழுவாக நெளிந்தபடி அது அவனது சிறுவார் வழியாக வெளியேறியது. உம்மா உட்பட எல்லோரும் மூக்கைப் பொத்திக் கொண்டு கொல்லைக்கு நழுவினார்கள் மெல்ல. ' உம்மாடி.. தாங்கலையே.. எப்பவும் இல்லாத அளவுக்குலெ இக்கிது ' என்று தண்ணீர் எடுத்து வரப்போனாள் லாத்தா. வஹாபின் பக்கத்தில் நின்றிருந்த சாபு , 'அல்லாஹ்வே...பெரிய அல்லூறாவுலெ இக்கிது - ஆலத்தையே பொரட்டிப் போடுற மாதிரி..! ' என்று தொட்டியை வேகமாக தள்ளி விட்டு விட்டு வெளியே ஓடினார் பொறுக்க முடியாமல்.

நிலை குலைந்து ஆடும் தொட்டியையே பார்த்துக் கொண்டிருந்தேன்.

**அருஞ்சொற்பொருள்**

லாத்தா - அக்கா
மாக்குவலி போடுதல் - மல்லுக்கட்டுதல்
கனியாப்பிள்ளை - ('குமர்' என்று சொல்லப்படும்) கன்னிப்பெண்.
சிக்லா - சிறிய மண்கோப்பை
நானா - அண்ணன்
சபர் - ச·பர். பிரயாணம்
அவுலியா - இறைஞானி
வாலை - தர்ஹாவில் பக்தர்கள் தங்குமிடம்
·பாத்திஹா - இறந்தவர்களுக்காகவும், அவுலியாவை முன்வைத்தும் இறைவனை இறைஞ்சுதல்
சீராணி - பிரார்த்தனைக்குப் பின் பகிர்ந்தளிக்கப்படும் இனிப்பு
பிஸாது - அவதூறு
பbயான் - மார்க்கப் பிரசங்கம்
தொசங்கட்டியடித்தல் - தொடர்ந்து துன்பம் தருதல்
·பர்ளு - அவசியமான கடமை
மவுத்து ஹயாத் - இறப்பும் வாழ்க்கையும்
சிராத்துல் முஸ்தகீன் - (இஸ்லாமிய நம்பிக்கையின்படி) நேரான வழி மற்றும் மறுமை நாளில் சொர்க்கத்து இட்டுச் செல்லும் ஒரு பாலம். வாளைவிடக் கூர்மையாகவும் ரோமத்தை விட மெலிதாகவும் இருக்கும் இதில் நடக்கும் நம்பிக்கையற்றோர் தவறி நரகத்தில் விழுவர்
சின்னத்து - ஆண்குறியின் முன்தோலை அகற்றும் ('கத்னா' என்கிற) மார்க்கச் சடங்கு. நபி (ஸல்) அவர்களின் வாழ்வையும் வாக்கையும் பின்பற்றும் 'சுன்னத்' என்பதன் மரூஉ
நோனி- யோனி

லாயிஃப் - பலவீனமான
மானி - ஆண்குறி
பொரக்கணை - பிரக்ஞை
வாஜிபு - கடமை
மஜ்குத் - மஜ்பூத். சிறப்பாக
அல்லூறு - கொடும் சாக்கடை நாற்றம்
ஆலம் - பிரபஞ்சம்

பதிவுகள் ஏப்ரல் 2005 இதழ் 64

## 23. போனாலும்... - மீண்டும் ஒரு சஃபர் கதை - ஆபிதீன் -

- ஆபிதீன் -RESCUE' என்று சிவப்பு ஸ்டிக்கரில் பெரிதாக எழுதியிருந்த அரசாங்க வாகனம் ஒன்று , பிரதான சாலையான ஷேக் ஜாயித் ரோட்டின் ஓரத்தில் தலைகுப்புறக் கவிழ்ந்து கிடந்தது. பார்த்ததும், என்னை உருட்டித் தள்ளிய எங்கள்வீட்டுப் பொடியனின் கேள்விதான் ஞாபகத்திற்கு வந்தது. எவ்வளவோ தடவை நான் விழுந்திருக்கிறேன். எவ்வளவுதான் நீங்கள் அடித்துச் சொன்னாலும் அதை நம்பாமல் , புத்திசாலியென்று என்று என்னை நினைத்துக்கொண்டு நான் எடுக்கிற முடிவுகள் உதைக்கிற அபாரமான உதைகளால் அடிக்கடி விழுவேன் . 'என்னய்யா எழுதுறே நீ , இக்கிது புக்கிதுண்டு..' என்று எகிறுவார் ஓர் எழுத்தாளர். 'மன்னிச்சிடுங்கண்ணே' என்றபடி மல்லாந்து விழுவேன். 'இவ்ளோ வருஷமா அரபுநாட்டுல இருக்கியே அத்தா... என்ன சேர்த்தே?' என்று அடிப்பார் பயணத்தைப் பணயம் என்று குறிப்பிடும் பயில்வான். 'கடன்' என்று சொல்லிக் கண்ணீருடன் விழுவேன். நொடிதோறும் விழுவேன்ஆபிதீன் 'RESCUE' என்று சிவப்பு ஸ்டிக்கரில் பெரிதாக எழுதியிருந்த அரசாங்க வாகனம் ஒன்று , பிரதான சாலையான ஷேக் ஜாயித் ரோட்டின் ஓரத்தில் தலைகுப்புறக் கவிழ்ந்து கிடந்தது. பார்த்ததும், என்னை உருட்டித் தள்ளிய எங்கள்வீட்டுப் பொடியனின் கேள்விதான் ஞாபகத்திற்கு வந்தது. எவ்வளவோ தடவை நான் விழுந்திருக்கிறேன். எவ்வளவுதான் நீங்கள் அடித்துச் சொன்னாலும் அதை நம்பாமல் , புத்திசாலியென்று என்று என்னை நினைத்துக்கொண்டு நான் எடுக்கிற முடிவுகள் உதைக்கிற அபாரமான உதைகளால் அடிக்கடி விழுவேன் . 'என்னய்யா எழுதுறே நீ , இக்கிது புக்கிதுண்டு..' என்று எகிறுவார் ஓர் எழுத்தாளர். 'மன்னிச்சிடுங்கண்ணே' என்றபடி மல்லாந்து விழுவேன். 'இவ்ளோ வருஷமா அரபுநாட்டுல இருக்கியே அத்தா... என்ன சேர்த்தே?' என்று அடிப்பார் பயணத்தைப் பணயம் என்று குறிப்பிடும் பயில்வான். 'கடன்' என்று சொல்லிக் கண்ணீருடன் விழுவேன். நொடிதோறும் விழுவேன். விழுவதற்காகவே நொடியில் எழுவேன்.

சரிந்து விழுவதற்காக நான் சிரமப்படவும் தேவையில்லை. 'பொத்தசுரைக்கா' மாதிரி ஓர் உடல்வாகு. என் முயற்சியல்ல, 'இந்தா' என்று குடும்பம் தூக்கிக் கொடுத்தது. புகழ்பெற்ற எங்கள் வீட்டுச் சண்டை ஒன்றை கவனித்துக்கொண்டிருந்த ஒரு மரைக்கார் இப்படிச் சொன்னார்: 'நீங்களுவ அருவா, கம்புண்டு தூக்கிக்கிட்டு அடிச்சுக்கவே தேவையில்லை. சும்மா யார் மேலெயாவது வுளுந்தாவே போதும், மவுத்..'. இவ்வளவு பெருமைமிக்க பின்னணியுள்ள நான் , என்னைப் பாடாய்படுத்துகிற அரபி முதலாளி மேல் விழுந்து அவனை நசுக்கிவிடலாம் என்று பார்த்தால் நான் சாய ஆரம்பிப்பதற்குள் ஒய்யாரமான ஓர் ஒட்டகத்தைத் தூக்கி என் மேல் வைத்து விடுகிறான். என்ன செய்ய? அந்த காலத்தில், அவன் கம்பெனியில் வேலைக்கு சேர்ப்பதற்காக என்னை அனுப்பிய எங்கள் ஊர் ஆள் ,'தம்பியை அனுப்பிக்கிறேன், ரொம்ப படிச்ச புள்ள, பாத்து ஏதாச்சும் வேலை குடுங்க' என்று சிபாரிசு செய்தார். அந்த மூதேவி மானேஜர் என்ன சொல்லலாம்? 'தம்பியா, ஒரு மலையே சரிஞ்சி இருக்கு இங்கெ' என்றிருக்கிறான்.

ராஸ்கல். உண்மையைச் சொல்கிறான்.

அன்றிலிருந்து நான் விழும் வேகம் அதிகரித்தது. சிறு குன்றாக மாறிப்போனேன். அதற்கும் ஒரு வெடிகுண்டு வைத்து தகர்த்து விட்டானே இந்தப் பயல். என்ன டாப் கிளாஸ் கேள்வி.. அதிர்ந்து விட்டேன்.

அந்தக் கேள்வியை எழுதுவதற்கு முன்பு , சிலமாதங்களுக்கு முன்பு படித்த ஒரு புத்தகத்தைப்பற்றியும் ஓரிரு வரி எழுதிவிடுகிறேன். இல்லையேல் மறந்து விடும். 'கடவுள்' என்ற புத்தகம். 170 ரூபாய் கடவுள். கடவுள்தான் கொடுத்தார் அந்தப் புத்தகத்தை. காசு எங்கே என்னிடம்? தவிர, புத்தகத்தில்தான் கடவுளும் இருப்பார். ஓரிரு இலைக்கு மேல் அதிகம் பறிக்கப்பட்டால் 'டானின்' என்கிற வஸ்துவை அதிகம் சுரந்து 'குடு' என்ற மிருகத்திற்கு உணவு குடுக்காமல் விரட்டும் அதிசய ஆப்பிரிக்க மரத்தைச் சொல்லும் சுஜாதாஸ்யமான புத்தகம். அதில் காணப்பட்ட , 'எப்படி உலகம் உருவானது என்பதைவிட ஏன் உருவானது?' என்பது போன்ற , விஞ்ஞானிகள் குழம்பும் மெகா கேள்வியெல்லாம் அல்ல இப்போது இவன் கேட்டது. ரொம்ப ரொம்ப சாதாரண கேள்விதான். ஆனால் பொடிப்பொடியாய் என்னை உதிர்த்து விட்டானே.. அல்லாவே, உன் முதுகில் கொஞ்சம் சாய்ந்து கொள்ளவா? 'சாய்ந்திருப்பது என் முதுகுதான் என்றுகூட தெரியாத முட்டாளாக இருக்கிறாயே' என்று நீயும் எட்டி உதைக்காதே.

பதில்தான் சொன்னான். கேள்வி போன்ற பதில்.

ஒன்றுமில்லை, சும்மா ஒரு பொய்க்கோபம், அவனைப் பயமுறுத்துவதற்காக. ஊருக்குப் போயிருக்கும்போது அந்த நாலு வயசுப் பொடியனைப் பார்த்து நரம்புகள் புடைக்க கத்தினேன். 'வூடாடா இது? நரஹம். நரஹம்டா நரஹம். எப்பப் பாரு, அதை ஏன் வாங்கிட்டு வரலெ, இத ஏன் வாங்கிட்டு வரலெ, அதுக்கு காசு தாங்க, இதுக்கு காசு தாங்கண்டு.. ஒரு நிமிஷம் மனுஷன் நிம்மதியா இருக்க முடியுதா இங்கே? ஒரு பாட்டு கேட்க முடியுதா? அட, கொஞ்சம் படிக்கத்தான் முடியுதா? போறேண்டா..போறேன். துபாய்க்கு இப்பவே போறேன்' என்று வீடே கிடுகிடுக்க கத்திவிட்டு , போவது போல் ஓர் 'ஆக்ட்'டும் கொடுத்துவிட்டு, நைசாக திரும்பிப் பார்த்தேன்.

குழப்பமான பார்வையுடன் அவன் என்னைப்பார்த்து மெதுவாகக் கேட்டான் : 'சூட்கேஸை எடுத்துட்டு போவலெ?'

கடகடவென்று சிரிக்கும் சப்தம் கேட்கிறது. சூட்கேஸ் சிரிக்கிறதா? அதுவுமா? இல்லை. அஸ்மா. மாப்பிள்ளை விழுவதைப் பார்த்து ரசிப்பவளுக்குத்தான் மனைவி என்று பெயர்.

'நாந்தான் அப்பவே சொன்னேனே மச்சான், அவன்ட்டெ உஷாரா பேசுங்கண்டு' என்கிறாள்.

உண்மைதான். சொன்னாள்தான். வந்த முதல்நாளே பட்டேன்தான். தான்.. தான்.. வருஷங்கள் கழித்து வீட்டில் நுழைந்ததுமே 'அடியை கொடுங்க' என்று அஸ்மா கேட்கிறாளே என்று அசட்டுதனமாக இளிப்புடன் அவளை நோக்கினால் 'ச்சீ.. அவனுக்கு அடியை போடுங்கண்டு சொன்னேன்' என்று ஜக்கரியாவைக் காட்டினாள். 'போன தடவை இருந்தப்ப பேச்சே வரலையே இந்த படுவாவுக்கு? ரொம்ப விஷமம் பண்ணுறான் போலக்கிதே இப்ப' என்று சொல்லிக்கொண்டே - தோசைமாவு இருந்த பாத்திரத்தில் மண்ணைக் கலக்கிக் கொண்டிருந்த ஜக்கரியாவை நெருங்கினேன், முத்தமிட . பிள்ளைகளை முத்தமிடுவது எங்கள் நபிப் பெருமானுக்குப் பிடித்தமானது. 'அன்பு காட்டாதவர் அன்பு காட்டப்பட மாட்டார்' என்ற அண்ணல். 'பேயன் பைத்தியக்காரன் மாதிரி செய்யாதீங்க. ஏண்டா செஞ்சாண்டு முதல்லெ அதட்டுங்க அவனெ' - அஸ்மா அதட்டினார் அன்போடு. மரியாதைக்கு மறுபெயரும் மனைவிதான்.

'ஏண்டா செஞ்சே?'

'அப்படித்தான் செய்வேன்' - மின்னல் வேகத்தில் வந்தது பதில். மின்னல் என்ன வேகம், தெரியுமா?

'வீணை யின்பக் குரலே வா
வீட்டின் இன்பச் சுடரே வா
தேனைப் பழித்த சுவையே வா
தேடும் நீண்ட விழியே வா'

- சேய்ச் செல்வத்தை இப்படித்தான் புகழ்ந்தார் புலவர் ஆபிதீன் காக்கா. பிறகு , 'ஏங்கிமுகம் வீங்கிமிக ஏழையவன் தானழுதால் ஏனென்றுங் கேட்கஒரு பேயுமில்லை எம்மவரே' என்று கொழும்பு சென்று குமுறினார் - குடும்பத்தைப் பிரிந்து. அவர் எங்கே பிரிந்தார்? ஊரில் இருந்தால், அதுவும் எழுத்தாளனாக இருந்தால், உதைத்து அனுப்பிவிட மாட்டார்களா? துபாயில் மட்டும் என்ன வாழுது? வேலை கொடுக்கிற மாதிரி இருந்த எங்கள் ஊர்க்கார முதலாளி நான் எழுதுவேன் என்று - யார் மூலமாகவோ - தெரிந்ததும் பதறித்தான் போனார். 'நல்லவேள சொன்னிங்க தம்பி.. தப்பிச்சேன். எழுதுறவன்லாம் பெரிய சோம்பேறியாவுலெ இருப்பானுவ' என்றாராம். ஊர்ப் பேயன்களுக்கு, மன்னிக்கவும், பேய்களுக்கு அரபியே பரவாயில்லை என்று முடிவெடுத்தேன். அதலபாளத்தில் விழுந்தேன். விரிவாகச் சொல்ல அலுப்பாக இருக்கிறது.

அட , வெட்டிப்பேச்சு விருதாப்பேச்சையெல்லாம் விடுங்கள், இப்போது நான் என்ன செய்ய வேண்டும்? குழம்பிப் போனேன். இதென்ன வேடிக்கை, கொஞ்சம் நடுங்கினால் அதைவைத்து நாலு வார்த்தை வேகமான வசனம் பேசலாமென்றால் முதலிலேயே தூக்கி வீசி விடுகிறானே பயல். எதிர்வீட்டு ராவியாபேகத்திற்கு பேய் பிடித்தபோது அவள்

மாப்பிள்ளை, 'டியே... யார் வூட்டுலேர்ந்து வந்திக்கிறா நீ?.. இப்பவே உன்னை அடிச்சி வெரட்டுறேன் பாரு தர்ஹாக்கு' என்று - சுற்றிலும் பொம்பளைகள் உட்கார்ந்திருந்ததால், பந்தாவாக - அதட்டியபோது 'பெண்' சொன்னது : 'போடா தடியா'. பறந்துபோய் பாங்காங்கில் விழுந்தார் அவர். அந்த மாதிரியல்லவா இருக்கிறது.

'என்னா புள்ளே இவன்..' என்று அஸ்மாவிடம் பரிதாபமாகக் கேட்டேன். 'அப்படித்தான் பேசுறான் இப்ப..' என்று பெருமையாகச் சொல்லிக்கொண்டே அவனைப் பாசத்தோடு கட்டிக்கொண்டாள். என் பிள்ளைகளும் 'ஜக்கரியா மச்சான் படலம்' பாடின.

எப்போதும் அவன் இருப்பது எங்கள் வீட்டில்தான். எங்கள் வீடு என்றால் அஸ்மாவின் வீடு. அவள் நானா (அண்ணன்) வீடு , இதே தெருவில் வெகுதூரத்தில் இருக்கிறது. ஆமாம், பக்கத்து வீடு. இதேவீட்டின் பகுதியாகத்தான் அது முதலில் இருந்தது. கொல்லைவரை நடுவில் சுவரெழுப்பி , நன்றாக வாழப்போகிறோம் என்று 'ஒற்றுமையாக'ப் பிரித்து விட்டார்கள். இவன் ஏன் இங்கேயே இருக்கிறான் என்றால் மாமி மேல் அத்தனை பாசம். பிறந்ததிலிருந்து மாமிதான் அவனை தூக்கி வைத்துக்கொண்டிருக்கிறாள். ராத்திரி படுக்க மட்டும் அவன் வீட்டுக்குப் போவான் தன் உம்மா-வாப்பாவின் தொணதொணப்பு தாங்காமல். அங்கேயும் தொந்தரவுதானாம். அசந்து மறந்து ஜோடிகள் கட்டிப்பிடித்துக் கொண்டால், 'என்னா வாப்பா, காதல் பண்ணுறீங்களா?' என்று கேட்கிறானாம். என் மச்சினன் அதுமட்டுமா பண்ணுகிறான்? பேசுகிறான் என்றால், எல்லாம் இந்த பாழும் டி.வி. செய்வது. அவனை ஏமாற்றி , வீட்டார் பார்க்கும் 'மானாட மானோட கொட்டையாட' விளைவிக்கும் விபரீதம். 'உம்மா.. இங்கே பாரு... பாலுலாம் டிங்குடிங்குண்டு ஆடுது..'

தூங்கி எழுந்ததும் நேராக மாமி வீடு -> ஸ்கூல் -> மாமி வீடு. ஸ்கூலிலும் டீச்சர் கேட்கிற கேள்விக்கு அதேமாதிரி பதில்தானாம். 'ஏண்டா, பக்கத்து பையனை அடிச்சே?'. 'அப்படித்தான் அடிப்பேன்'. யு.கே.ஜி. டீச்சர் ஏன் மறு கேள்வி கேட்கிறாள்? 'UKG is carrying 10 KGS' என்று வருத்தப்படும் டீச்சர் அவள். என் பிள்ளைகள் சிரித்துக்கொண்டே எல்லா ரகளைகளையும் சொன்னார்கள். அவர்கள் மட்டும் பேசவே தெரியாத பிள்ளைகள் போல. எஸ்ஸெல்ஸி படிக்கிற மகன் அனீஸிடம் வாத்தியார் கேட்டிருக்கிறார்: 'முஹம்மது - அனீஸ் - மரைக்கார். மூணு பெயர்.. முஸ்லீம் பையங்க ஏண்டா இப்படி பேரு வச்சிருக்கீங்க'

'நீங்க மட்டும் அட்டல் - பிஹாரி - வாஜ்பாயிண்டு வச்சுக்கலாமா?'

எப்படி? குரலும் கர்ணகடூரம். 'காண்டாமிருகம் மாதிரி இக்கிதுடா உன் குரல்' என்று சொன்னேன் , ·போன் பேசும்போது. 'உங்க குரல் மாதிரியே இருக்குண்டு எல்லாரும் சொல்றாஹா வாப்பா' என்றான். 'சரியாகக் கேட்கவில்லை' என்று வைத்துவிட்டேன்

மகள் அஸ்ராவும் 'வெடுக்'தான். அஸ்மாவின் மகளாயிற்றே.. பிள்ளைகளுக்காக ஹந்திரி கடையில் வாங்கிய புல்லாங்குழலை வாசித்துக் கொண்டிருந்தேன் ஒருநாள். விற்றவன் , ராஜாவின் 'எனக்குப் பிடித்த பாடல் உனக்குப் பிடிக்குமே'-ஐ பிய்த்து உதறினானே... ரவீந்திரனின் 'வார் முகிலே...'வை ரகளை பண்ணினானே.. எனக்கு மட்டும் ஏன் , காற்று மட்டும் - அதுவும் 'பா...ங்..' என்று - வருகிறது? இஸ்லாமிய இன்னிசை வேந்தரை முயற்சிக்கலாமா? 'மவுத்தையே நீ மறந்து..' - குழலின் துவாரங்கள் அடைத்துப்போய் காதுகள் வழியாக காற்றெல்லாம் வெளியேறியதுதான் மிச்சம். சே, ஒன்றுமே சரிவரவில்லையே..

'அவன் தெரிஞ்சி செய்றான், நீங்க தெரியாம செய்றீங்க வாப்பா' என்று வாரினாள் அவள். கரெக்ட். தெய்வத்தின் குரல். குழந்தையும் தெய்வமும் ஒன்று - குழி பறிப்பதில். விழுவுதற்கு காரணமெல்லாம் தெரியாமல் போய் விழுவதால்தான். இனி தெரிந்தே விழுகிறேன் தேன் மகளே.. உன் கல்யாணத்திற்காக நிறைய விழ வேண்டியிருக்கிறது.

வளர்ந்த இவர்களிம் பேசுவதை விட ஜக்கரியாவுடன் பேசிக்கொண்டிருக்கலாம். கொடகொடவென்று எதையாவது மழலையில் சொல்லிக்கொண்டிருப்பான். 'ர' எல்லாம் 'வ' ஆகும். போனமாசம் மஸ்கட் போன பொறையார் மாமா அவனுக்கு பயணக்காசு கொடுக்கவில்லையாம். இவன் கேட்டபிறகுதான் கொடுத்தாராம். 'கள்ளப்பயல பாவுங்க..' என்று அவர் எல்லோரிடமும் சொன்னதற்கு, 'கேட்டாத்தான் கொடுப்பிங்களா?' என்று பதிலுக்கு இவன் கேட்டானாம். எல்லோரும் சிரித்தார்களாம். அப்புறம்.. வீடு மாறும்போது கொல்லையிலுள்ள மரங்களை வெட்டிவிட்டது அவனுக்குப் பிடிக்கவில்லை. அழுகை அழுகையாக வந்ததாம்... நானும் எதையாவது சொல்லிக்கொண்டிருப்பேன், அவனுக்கு விளங்குமா இல்லையா என்பதுபற்றியெல்லாம் பொருட்படுத்தாமல். நான் எழுதும் விதமே அப்படித்தானே?

'நாக மரங்கள் அதிகம் இருந்ததால் மட்டும் நம்மூருக்கு நாகவூர் என்று பெயர் வரவில்லை - 'நானிலம் போற்றிடும் நாகவூர் தர்ஹா' புத்தகங்கள் சொல்வதுபோல. நம் வீட்டுப் பக்கத்திலுள்ள நாகநாத சுவாமிகள் கோயிலாலும்தான் அந்தப் பெயர் வந்ததுடா ஜக்கரியா. அதன் ஸ்தல புராணம் கேள். முன்பொரு காலத்திலே சம்புபத்தன் என்னும் பிராமணன் தன் குடு....'

எவ்வளவு அருமையாக நான் சொல்வதை கேட்டுக்கொண்டிருக்கிறான் என்று பார்த்தால் பயல் தூங்கிக்கொண்டிருக்கிறான். சரி என்று நகர்ந்து போனால் அவன் கால் ஜோராக ஆடுகிறது.

யாரும் கேட்காவிட்டால் என்ன, தெருக்கள் தோறும் ஊரில் வழிந்து ஓடும் துவேஷத்தை ஒழிக்க சொல்லிக்கொண்டிருப்பேன். உங்கள் மார்க்கம் எங்களுக்கு; எங்கள் மார்க்கம்

உங்களுக்கு - புகழ்ந்து சொல்ல. இதுதான் சரி. உதாரணம் சொல்லவா? நான் சிரிப்பாக எழுதுவதாக ஒருவர் சொல்கிறார் என்று வைத்துக் கொள்ளுங்கள். என்ன, அப்படியெல்லாம் சொல்லியிருக்க மாட்டாரா? அட, சொல்கிறார். பொய்தான். ஆனால், ஜிலுஜிலுவென்று இருக்கிறதே. சொன்னவர் மேல் அன்பும் பெருகிறது. நானும் சொல்கிறேன், நீங்களும்தான் என்று. அவருக்கு சந்தோஷம். இலக்கியம் தொலையட்டும், உறவு வளர்கிறதா இல்லையா? அதுவல்லவா முக்கியம்?

ம்.. சொல்லலாம். ஊரோடு இருந்தால் , பிறசமூகத்தின் பெருமைகளை சொல்லிச் சொல்லி பிள்ளைகளை வளர்க்கலாம். ஆவேசமும் , 'உலகை மாற்றப்போகும் ஒரே மத'ப் பெருமையும் அவர்களுக்குக் குறையும் . அத்தனை தூரத்திற்கு விட்டுப்பிரிந்துவிட்டு, எப்படி , யாரால் இவர்கள் மாறுவார்களோ என்ற பதட்டமல்லவா எப்போதும் ஆட்டிப் படைக்கிறது? ஏன், என் வாப்பாவும் - எத்தனையோ வாப்பாக்கள் போல - பிரிந்துதான் இருந்தார்கள் மலேயாவில். மொத்த வாழ்க்கையில் 313 நாட்கள்தான் குடும்பத்தோடு ஊரில் இருந்துவிட்டுப் போனார்கள். ஆனால் , நான் அடங்கித்தானே வளர்ந்தேன்? வாசிப்பா , நட்புக்கு இலக்கணம் வகுத்த நண்பர்களா (இப்ப எதுக்கு சிரிக்கிறீங்க?) , வாப்பாவின் ஆசையா? அவர்களின் ஆசையாகத்தான் இருக்கும். 'எல்லாரும் நமக்கு வேணும்ங்கனி' என்பார்கள். சொந்தங்களைப் பார்க்க அறந்தாங்கி , ஏம்பல் போகும்போதெல்லாம் ஆவுடையார்கோயிலில் இறங்கி ,கோயிலில் நுழைந்து, ஒவ்வொரு சிலையாக விவரித்து வளர்த்த வாப்பா... கல்லிலும் தெய்வம் காண்பவர்கள் கபடமில்லாதவர்கள் என்று சொன்ன வாப்பா.. 'எல்லாப் பறவைகளுக்கும் அத்திபழமே உணவாக இருக்க முடியாது' என்று சொன்ன மௌலானா ரூமியை நேசித்த சீதேவி வாப்பா..

எல்லாம் சரிதான், கொஞ்சம் பிழைக்கத் தெரியாத ஏமாளியாகப் போய்விட்டேனே வாப்பா...

'கொஞ்ச நஞ்சமா?' என்பாள் அஸ்மா.

'ஊரோட வர்ரவன் பணக்காரனா இக்கிறாண்டா, வரும்போதே அவன் அரபியை 'போட்டுட்டு' வர்றான். சூப்பர்மார்கெட்டா தொறக்குறான். உமக்கு அது புடிக்கலெ, கஷ்டப்படுறியும். ஓய், போடுறதா இருந்தா நம்ம நாட்டுலெயே நல்லா போடலாம், வந்துடுறியுமா?' என்பார் ஜப்பார்நானா. அவர் சொல்வது சரிதானா? முஸ்லீம் கட்சிகளே நூறு நூறாகப் பிரிந்து ஆளுக்கு ஓர் உண்டியல் வைத்துக்கொண்டு அள்ளுகின்றனவா? ஜப்பார் நானா என் உஸ்தாத் போன்றவர். ஹஜ்ரத்தின் மவுத்திற்குப் பிறகு அவர்தான் ஆறுதலுக்கு. அவர் சொல்வது எனக்கு விளங்குவதில்லை. உஸ்தாதின் கேள்விகள் விளங்கினால் நான் ஏன் கதை சொல்லிக்கொண்டு இருக்கிறேன்? அதையும் சரியாகச் சொல்கிறேனா? ஜக்கரியாவை விட்டுவிட்டு எங்கெங்கோ அலைகிறேன். என் அலைச்சல் எழுத்தையும் விட்டுவைக்கவில்லை, உங்களையும் விட்டுவைக்கவில்லை.

ஜக்கரியாவால் ஊரில் பொழுது போனது.

12

34

56

78

910

என்று , நேர்கீழான வரிசையில் சுவரில் அவன் கிறுக்கியிருந்ததைப் பார்த்தேன். கோணல்மாணலான எண்கள். புத்தியுள்ளவன்தான், சந்தேகமில்லை. Permanent Marker ல் பிரமாதமான கிறுக்கல். Arabic Calligraphy க்காக நான் வாங்கி வைத்திருந்தது. கடுப்பு வந்தது. கூடவே கண்ணையும் சுழற்றியது. ஓர் இழவும் விளங்கவில்லையே... என்ன கணக்கு இது? கூட்டல் போட்டிருப்பானோ? ஐந்தோடு ஐந்து கூட்டினால் பதினொன்று என்று என் மகள் இரண்டு கைவிரல்களையும் வைத்துக்கொண்டு வினோதமான ஒரு கணக்கு சொல்வாள் சின்னவயதில். 10,9,8,7,6 என்று இடது கை விரல்களை - பெருவிரலிலிருந்து ஆரம்பித்து - மடித்துக்கொண்டே வருவாள். 'இப்ப ரைட் ஹேண்டில் அஞ்சு வெரல் இக்கிதா? 5+6=11' என்பாள். பதினோரு விரல்களாலும் தலையைப் பிய்த்துக்கொள்வேன், ஏதோ எனக்கு முடி இருப்பது மாதிரி. அந்தக் 'கணக்கு' அவளது டீச்சர் சொன்னதாம். இப்போதும் எனக்கு புரியமாட்டேன் என்கிறது. அதேபோல் , ஜக்கரியாவின் வகுப்பில் எதாவது சொல்லிக் கொடுக்கிறார்களா? முஸ்லீம் பாடசாலைகளுக்கென்று தனியாக ஒரு கணக்கு இருக்கத்தான் செய்யும். ஆனால் இப்படியா? ம்ம்.. வரிசையில் மட்டும் ஏதோ ஓர் ஒழுங்கு தெரிகிறதே.. மிஸ்டர் ராமானுஜம், கொஞ்சம் உதவிக்கு வருகிறீர்களா? மகனிடம் கேட்டேன். 'அட, ஒண்ணு, ரெண்டு, மூணுதான் வாப்பா. அப்படி அளகா - பக்கத்து பக்கத்துல - எழுதி வச்சிக்கிது புள்ள' என்றான். இல்லை, இது சரிவராது, இடிந்து விழாத ஒரே ஒரு சுவரிலும் இப்படிக் கிறுக்கினால் இடிதான் தலையில் விழுமென்று ஓவியத்திற்கு மாற்றினேன். கிறுக்கர்களுக்கு ஓவியம் இயல்பாக வரும். க்ரையான்கள் கொடுத்தேன். கப்பல் ஒன்றை வரையச் சொன்னேன்.

கப்பலின் முனையில் கப்பலின் நீளத்தை விடப் பெரிதாக ஒரு பெரிய கரண்டியை வரைந்திருந்தான்.

'இது எதுக்குடா?' என்றால் போகும்போதே மீன் பிடித்துக்கொண்டு போகுமாம். அதைவிட வேடிக்கை அந்தக் கப்பல் , வீடு என்கிற இரண்டு கோடுகளின் மேல் உட்கார்ந்திருந்தது. கப்பலுக்கு ஒரு காதும் இருந்தது. சந்தேகமில்லை, இவன் வான்கோவேதான். கந்தூரியெல்லாம் அதிகம் பார்த்தால் அப்படித்தான் கற்பனை வருமென்று கடற்கரைக்கு

கூட்டிப் போனேன். நான் பெற்ற மகனுக்கு சாயந்தரமானால் உசேன்போல்ட் ஞாபகம் வந்து விடும். உதறிக்கொண்டே கலெக்டர் ஆ∴பீஸ் ஓடுவான். அங்கேதான் ஸ்டேடியம் இருக்கிறது. பள்ளி மைதானம் பத்தாது என்று இதுவேறு. தினம் தினம் ஒரு விளையாட்டு. 'என்னடா இது? ∴புட்பால், பேஸ்கட்பால்ண்டு எதாச்சும் ஒரு விளையாட்டுல ஸ்பெஷல் அட்டென்சன் கொடுக்காம எல்லாத்தையும் போட்டு ஒழப்பிக்கிட்டு.. கேவலாமாவுலெ இக்கிது' என்றால் 'இதை விட கேவலம் ஒண்ணு இக்கிது வாப்பா' என்கிறான் என்னவாம்? ஸ்கூல் சார்பாக போட்டிகளுக்குப் போகும் எல்லா ஊர்களிலும் கிடைக்கும் தோல்விதான். தாளாளர் சொல்வதை தட்டாமல் கேட்கும் பி.டி வாத்தியார் துணை. ஆனாலும் துவளாதவன் என் மகன். அஸ்ரா? கனவு மிதக்கும் கண்களோடு எப்போதும் படிப்பு. கணிதம் படிக்கிறாள் கல்லூரியில். 5+5= பத்து சூர்யா.

அஸ்மாவோடு போகும்போது ஐடியல் துணை ஜக்கரியாதான். ஸ்கூட்டர் என்ற பெயருள்ள என் புராதன கூட்ஸ்வண்டியில் , முன்னால் அவன் நின்று கொள்ள பின் சீட்டில் பேரழகி - பூதம் போன்ற புர்க்காவோடு. ஆனால் அவளுடையது உரசும்போதே, புர்க்காவைச் சொல்கிறேன் , கிளம்பிவிடும் - ஸ்கூட்டர். சரியாக, கடற்கரைக்கு 3 கி.மீ தூரத்தில் நின்றுவிடும். நாங்கள் புறப்பட்ட இடம் அதுதான். அஸ்மா வீடு. சே, என்று ஆட்டோ பிடித்து சேர்வோம். அவனை அங்கே விளையாட விட்டுவிட்டு வஞ்சித்தோப்பு ஓரமாக அலைகளையும் அவனையும் பார்த்தபடி நாங்கள் இங்கே விளையாட ஆரம்பிப்போம். எல்லாம் பேச்சுதான். 'முதல்லெ மாதிரி முடியல புள்ளே.. மூச்சு வாங்குது' . 'முதல்லெ சிகரெட்டை வுடுங்க'. 'அங்கேயா ? சுடும்டி'. 'சீ.. கோணப்பேச்சுக்கு மட்டும் குறைச்சலில்லெ'. 'உன் மவள்ட்டெயும் சொல்லிவை.. திடீர்திடீர்ண்டு அறையிலெ நுழைஞ்சுடுறா'. 'அத சொல்லிக்கிட்டே ஏன் கை இங்கே நோண்டுது? ச்சூ..யாரும் பாத்துடப் போறாஹா'. 'பாக்க மாட்டாஹா, பயணத்துலேர்ந்து வந்திக்கிறாண்டு தெரியும்'. 'ம்..'

நிறுத்திவிடுகிறேன். 'ஏண்டா இதெல்லாம் எழுதுறே?' என்று ஈ-மெயில் வருகிறது. கடவுளாகத்தான் இருக்கும்.

கடவுளை அறிய புத்தகமா வாங்குவார்கள்? சும்மா கடலைப் பார்த்துக்கொண்டிருந்தாலே போதுமே... மனம் நிறைந்து விடும். எவ்வளவு பெரும் கருணை.. தன் வரம்பு மீறாமல் , குழந்தைகளைப் பார்த்துக்கொண்டிருக்கிற தர்ஹா யானை போல கம்பீரமாயும் அடக்கத்தோடும்.. துலாவித் தழுவும் அலைகளை தும்பிக்கைகள் எனலாமா? பார்க்கப்பார்க்க அலுக்காத பரவசம். கொல்லையில் தேங்காய் பறித்துக்கொண்டிருக்கும்போது உம்மாதான் சொல்வார்கள், 'யார் தலையிலெயும் வுழாது தம்பி. ஒரு சத்தியத்துக்கு கட்டுப்பட்டு நிக்கிது மரம்லாம், தெரிஞ்சுக்க' என்று. நினைவுக்கு வரும். அது போலத்தான் கடலும். நாலுவருஷத்துக்கு முன்னால் சும்மா லே...சா கொஞ்சம் சிணுங்கியது. எங்கள் ஊரில் மட்டும் நாலாயிரம் பேர் புதைந்தார்கள். இன்னும்

அதன் வீச்சம் காற்றில் பரவி நிற்கிறது. இ·தென்ன கருணையா? என்று நடுக்கத்துடன் கேட்டால், ஆம். 'எதிரி' நாடுகளை அழிப்பதற்காக பரிசோதனைகள் என்ற பெயரில் எங்கெங்கோ தன் அடியில் குண்டுகள் நீங்கள் வைத்ததற்கு இந்த அளவாவது விட்டுவைத்ததே அது.

'மச்சான், எப்படியோ வருதும்மா... ராத்திரி பாத்துக்கலாம்'

அட, கொஞ்சம் இயற்கைக் காட்சியை சித்தரிக்க விடமாட்டாளே.. 'கைப்பிடியளவு கடலாய் இதழ்விரிய உடைகிறது மலர் மொக்கு' என்கிறாண்டி கவி பிரமிள். இரு, அப்படியே நாசர்மாமா பற்றியும் இங்கே சொல்லிவிடுகிறேன். அறுபது வருடமாய் சிங்கப்பூர் சபராளியாக இருந்து - ஊரோடு போய் தன் குடும்பத்தோடு இருக்கலாம் என்று வந்த எழுத்தாளர். 'சுள்ளடி' என்று நாங்கள் அழைக்கும் கடற்கரைக்கு தவறாமல் வருவார். பேசிக்கொண்டிருப்பேன். இங்கே, இதே இடத்தில்தான் என்னிடம் அழுதார். 'தம்பி.. தயவு செய்து அந்த மாதிரி பேத்தனமா முடிவு எடுத்து ஊரோட வந்துடாதீங்க. சல்லிக்காசுக்கு மதிக்க மாட்டாளுவ.. 'மச்சான்..மச்சான்'டு இருந்தா என் பொண்டாட்டி - என்னெட்டேர்ந்து காசு வந்த வரைக்கிம். இப்ப தன்னோட புள்ளைங்க சம்பாதிக்க ஆரம்பிச்ச உடனே என்னய தூக்கி எறிஞ்சிட்டா.. வேலைக்காரன வுட இப்ப கேவலமா பொய்ட்டேன் தம்பி.. ப்ளீஸ், வெளில யார்ட்டெயாச்சும் சொல்லிடாதீங்க..' என்றார்.

கண்கலங்கி விட்டது எனக்கு. மதநல்லிணக்கக் கூட்டங்களில் முன்நின்று செயல்படும் முக்கியமான ஆள். 'பைத்துல்மால்' எனும் பொதுநிதிக்கான அமைப்பு எங்கள் ஊரில் ஏற்படக் காரணமாக இருந்தவர். அவருடைய நகையுணர்வும் ரொம்பவும் ரசிக்கத்தக்கது. சென்ற முறை, ஈகைப்பட்டினத்தில் அவர் தலைமையில் நடந்த கூட்டத்திற்கு போய்விட்டு , வரும் வழியில் சரவணா ஹோட்டலில் ஏதோ டி·பன் வாங்கினேன். வாசலில் அவர் நின்றுகொண்டிருந்தார். ஊர் போவதற்காக யார் வண்டிக்காகவோ காத்திருக்கிறார் போல. என் ஸ்கூட்டரிலேயே அவரையும் கூட்டிக்கொண்டு போகலாம் என்ற எண்ணம். அவருக்கும் ஒரு நெய்தோசை பார்சல் வாங்கிக்கொண்டேன். பார்சல்களை அவர்கையில் கொடுத்து, 'ஊர் வர்ற வரைக்கிம் இத கையில் வச்சிக்கிட்டு பின்னால உக்காந்துக்குங்க மாமா, தப்பா எடுத்துக்காதிங்க' என்றேன். 'அட நீங்க ஒண்ணு தம்பி, தோசை வாங்கி கொடுத்திருக்கீங்க. ஒரு சிமெண்ட் மூட்டைய தோள்ல வச்சாக்கூட தூக்கிக்கிட்டு வருவேன்' என்றார்.

கஷ்டப்படுறவனுக்கெல்லாம் நகைச்சுவை சும்மா பொங்குகிறது.

அவரைப்போல எவ்வளவோ பேர் ஊரில். இவராவது வந்து அடிவானத்தைப் பார்த்துக்கொண்டிருக்கிறார், எப்போது அதில் இணைவோம் என்பது போல. பலபேர்

வீட்டுத்திண்ணையிலேயே முடங்கி விடுவார்கள் , அதுநாள்வரை அவர்களின் ரத்தம் உறிஞ்சிய மனைவியும் மக்களும் தினந்தினம் தலையில் கொட்டுகிற அவமானத்தைத் தின்றுகொண்டு. சங்கிலி போடாதவரை சந்தோஷம்தான்.

நானும் அப்படித்தான் ஆவேன், சந்தேகமேயில்லை. 'உங்கள யாரு போவ சொன்னா? இங்கேயே சம்பாதிங்களேன்..' என்று இப்போதும் அஸ்மா சொல்கிறாள். சம்பாதிக்க முடியாது, மூதலீடில்லாமல் என்று தெரிந்த பிறகுதான் ஆனந்தமாக ஆறுதல் சொல்லலாமே.. ரொம்பவும் வீறாப்போடு பணம் கொண்டுபோனவனெல்லாம் அதிகபட்சம் ஒரு வருடத்திற்குள் மூளை குழம்பிப்போய் திரும்ப வந்து தொலைவதைப் பார்க்கும்போது எப்படி முடிவு எடுப்பது? என் மூலதனமோ ஒரு புத்தகமாக இருந்து தொலைகிறது.

Recession-இல் மாட்டிக்கொண்டு விழிக்கிற துபாயின் நிலைமையோ கவலைக்குரியதாக இருக்கிறது. வலையுலகில் சில மாதங்களுக்கு முன்பு உலாவிய அலிபாபா ஜோக்கை படித்தீர்களா? இப்போது 'அலிபாபாவும் 30 திருடர்களும்' மட்டும்தானாம். மீதி 10 பேர்? அவர்களுக்கு வேலை போய்விட்டது. நீங்கள் படிக்கும் இந்த நேரத்தில் அலிபாபா மட்டும்தான் இருப்பான். அநேகமாக கடவுள் பற்றி தன் 'ப்ளாக்'கில் எழுதிக்கொண்டிருப்பான் என்று நினைக்கிறேன். அவனிடம் இந்த செய்தியைச் சொல்லவும்: 'மூணு பேர் செய்ற வேலையை ஒரே ஆளா செய்றவனையெல்லாம் ஊருக்கு அனுப்பு' என்றது ஒரு கம்பெனி. முட்டாள் எனக்கு ஆச்சரியம். நண்பர்தான் உடைத்தார். அதாவது, 'பத்து பேர் செய்ற வேலையை ஒரே ஆளா செய்றவங்களை வச்சுக்க' என்று அர்த்தமாம். Gone are the days....

அமெரிக்காவுக்கு விழுந்த அடியில் இங்கே ஆயிரம் 'ப்ராஜக்ட்'கள் நின்று போனாலும் ஆடம்பரங்களை குறைத்துக் கொள்ளாத அரசாங்கம். வெள்ளியில் முக்கிய நரகல் போல விறைத்து நட்டிக்கொண்டு நிற்கும் ஒரு குறி. பெயர் 'புர்ஜ் துபாய்'. 'புர்ஜ்' என்றால் Tower. உலகிலேயே உயரமாம். உலகு எவ்வளவுப்பா உயரம்? அப்புறம்.. சொகுசு மெட்ரோ. Dream Train. 28 பில்லியன் திர்ஹத்தை இதுவரை விழுங்கி விட்டதாம். நாள்குறித்து, நாலே வருடங்களுக்குள் 'கமுக்கமாக' பாதிவேலையை முடித்தது சாதனை. இதற்காகவே நாலுதடவை அது நிற்கலாம். அலுவலகம் அருகேயுள்ள ஸ்டேஷன்களைப் பார்த்து , 'எப்படித்தான் அடியில் இப்படித் தோண்டினார்களோ?' என்று வியந்ததற்கு , 'இதைவிடப் பெரிய குழியை முதலாளி அபு கலி஀பா நமக்கு தோண்டி வைத்திருக்கிறார் யா ஹபீபி' என்றான் ஆறிய கம்பெனியின் 'சூடானி'. அப்படியாவது நாடு முன்னேறினால் சரிதான். இந்த செலவையெல்லாம் யார் தலையில் கட்டுவார்கள்? 'பிஸ்மி' சொல்லி, பஸ் கட்டணத்தை மூணு மடங்கு கூட்டு; 'அட்டை'யாக உறிஞ்சு. ஆச்சா?

'Guardian'ஐ மேற்கோள் காட்டி , 'துபாயில் கஞ்சித்தொட்டி' என்று ஒரு நண்பர் போட்ட

பதிவைப்பார்த்த அன்று எனக்கு தூக்கமே வரவில்லை, தெரியுமா? 'அட நீங்க ஏன் கவலைப்படுறீங்க? துபாயத்தான் அபுதாபிட்ட வித்துட்டாரே நம்ம ஷேக்கு..' என்று வேறு திகில் காட்டுகிறார்கள். அரபு நாடுகளை உலகபோலீஸ்களிடம் விற்றுவிட்டதை விடவா திகில்? ஈரானை வைத்து விளையாடும் இன்னொரு 'விளையாட்டு'ம் காத்திருக்கிறது தலைமேல் கத்தியாக. 'போங்கடா எல்லாரும்' என்று எந்த நிமிடம் விரட்டுவானோ? கொஞ்சிக் குலாவிய வெள்ளைக்காரன்களையே 'உங்கள் தேனிலவு முடிந்துவிட்டது' என்று கெஞ்சி அனுப்பிக் கொண்டிருக்கிறார்கள். 'ஹிந்தி'யும் பாகிஸ்தானியும் எந்த மூலைக்கு? அதிகம் பேசினால் 'புர்ஜ் துபாய்'-இன் கூர்முனையில் வைத்து பிளந்து விடுவார்கள் பிளந்து.

நிலைமை ரொம்ப மோசம். பார்க்க: டபுள்யூடபுள்யூடபுள்யூ...

பத்துக்கு ஒன்பது வாடிக்கையாளர்களின் காசோலைகள் எங்களுக்கு 'பவுன்ஸ்' ஆகின்றன. அபு கலி:ஃபாவின் மூஞ்சு அசல் குரங்காக இருக்கிறது. 'மாலிஷ்' (பரவாயில்லை), அல்லா மாலிக்' என்று அவன் சொல்கிறான். ஏனென்றால் ரியல் எஸ்டேட் மன்னனான அவனது காசோலைகளின் கதியும் அதுதான். இந்தநிலையில் எப்படி 'மாஷ்' (சம்பளம்) கொடுப்பான்? மாசி சம்பால்தான் கொடுப்பான் - மாசி வாங்கிக்கொடுத்தால். 'அரபி வாலுலெ தீப்பிடிச்சி' என்கிறான் 'innocent' குரலில் செக்ரடரி. சேட்டா, தீயணைப்பு வண்டிகள் நெருப்பில் சிக்கிக்கொள்கின்றன. பரவாயில்லையே, முந்தைய வரியையே தலைப்பாக இந்தக் கதைக்கு வைத்துவிடலாம் போலிருக்கிறதே. அன்றைக்குக் கூட 'படக்' என்று ஒரு வரி வந்தது. 'சரியான சமயத்தில் வரும் / out of service பஸ் '. ம்.. கம்பெனியால் காசு வருகிறதோ இல்லையோ கச்சிதமாக 'பஸ்க்கூ' வருகிறது. அதையா அஸ்மாவுக்கு அனுப்ப முடியும்? உதைப்பாள், நாலு கால்களால்.

போனமுறை ஊர்போனதே பெரும்பாடு. சொந்த டிக்கெட்டில்தான் போய் வந்தேன். நொந்த உள்ளத்திற்கு ஜக்கரியா மட்டும் ஊரில் இருந்திருக்காவிட்டால் ரொம்பவும் பாடாகத்தான் போயிருக்கும். அவன் உதவியால் கார்ட்டூன்கள் பார்த்து கவலையை மறந்தேன். யாரையும் பார்க்க விடமாட்டான். கெஞ்சிக்கெஞ்சி , பரவாயில்லை ரகமான 'ஜனங்க டி.வி'யில் செய்திகள் பார்த்தேன். 'அடக்குங்க வாப்பா, பார்க்கவே வெறியாவுது' என்பான் அனீஸ்.

'இல்லடா.. நல்ல ப்ரோக்ராம்லாம் இருக்கு இதுலெ.. 'நில்லு, தமிழ்ச் சொல்லு'ண்டு ஒண்ணு. ரொம்ப நல்லாருக்கும். பனியனுக்கு சுத்தமான தமிழ் என்னா தெரியுமா? மெய்யொட்டி. நல்லாருக்கில்லெ?'

'அப்ப ஜட்டிக்கு என்னா, 'கீழ் மெய்யொட்டி'யா? சரியான லூசு வாப்பா நீங்க' - பொரிவான். சீரியல் பார்க்க இயலாத எரிச்சலில் சிரிப்பாள் அஸ்மா, என் மாமியாரோடு. 'மாப்புள வந்து

ரெண்டு மாசத்துக்கு மேல ஆவுதே..பயணம் போவலையா? ' என்று கவலைப்படும் மாமியார். அவர்கள் என்னிடம் நேரடியாக சொல்ல மாட்டார்களாம். வெட்கம். உம்மா அப்படிக் கேட்டதாக அஸ்மா சொல்வாள். வெட்கங்கெட்ட நானும் கேட்டுக்கொண்டிருப்பேன். அங்கே, என் வீட்டிலோ , 'ஹை.. Pig மாமா வந்துடிச்சி' என்று என்னைக் கூப்பிடுகிற தன் மகள் வயிற்றுப்பேத்தியின் வாயில் அடிக்காமல் , 'வந்து நாளாச்சே தம்பி..' என்று வம்பளக்கும் உம்மா.. எல்லார் வீட்டு அடுப்பங்கரை ரகஸ்யங்களையும் பேசி முடித்துவிட்டு, 'ம்ம்.. நமக்கு ஏன்மா வீண் பொல்லாப்பு?' என்று முடிப்பார்களாம் என் உம்மா - என் மகள் சொல்வாள். அவ தனி. அவதானி.

'அடுப்பங்கரை ரகஸ்யம்' என்றால் என்னவா? 'நம்ம மச்சான் ரொம்ப நல்லஹதான். ஆனா, ராத்திரி ஒம்பது மணிக்கு மேலெ பேய் புடிச்சிடுது' என்று - அடுப்பங்கரையில் - பேசிக்கொள்ளப்படும் விஷயங்கள்தான். பிடிக்காவிட்டால் இவர்களுக்கு 'பார பைத்தியம்' பிடித்து ஆட்டுகிறதே.. எச்சிப்பிசாசு மாதிரி ஏறி அமுக்குகிறார்களே... அதைமட்டும் ஏன் மறைக்கிறார்களாம்?

நம்ம கதைக்கு வருகிறேன். லூசு என்னை லூசு என்று சொல்லிய அவனை ஓங்கி அறையலாம் என்று வந்தது. கோர்ட்டுக்கு போய்விட்டால் என்னாவது? 'இந்தகாலத்து பிள்ளைகள் தன் வாப்பாக்களிடம் எவ்வளவு ·ப்ரீயாகப் பேசுகிறார்கள்' என்று சமாதானப்படுத்திக்கொண்டேன். என் வாப்பாவிடம் நான், என் தம்பிகள் தங்கச்சிகள் அப்படிச் சொன்னதேயில்லை. பயணத்திலிருந்து அவர்கள் வந்தாலே எங்கள் வீடு 'கப்சிப்' என்றாகிவிடும். கண்டிப்பல்ல, மரியாதை. எதிரில் வந்தால் நைஸாக நகர்ந்து விடுவோம். வலிய அவர்கள் எங்களை இழுத்து வைத்து பேசினால்தான் உண்டு. கடைசி சபருக்கு முன்பு வரை அவர்கள் கொண்டுவந்த சாப்பாட்டு ஐட்டங்களைத்தான் மறக்க முடியுமா? டப்பாவில் அடைக்கப்பட்ட பழங்கள்...அப்புறம் , கறுப்பு நிறத்தில் ஒருவித அரிசி... பிசினரிசி என்போம். உம்மா அதை அவித்துச் சமைக்கும் விதம் அற்புதம். காலைப் பசியாறலின்போது அந்தப் பழங்களும் பிசினரிசியும் ரவாவில் செய்த'துல்லிசோறு'ம் கண்டிப்பாக இருக்கும். அதெல்லாம் வாப்பா தினமும் மலேயாவில் சாப்பிடுவது போலிருக்கிறது என்று நினைத்துக்கொண்டிருந்தால் வாப்பாவின் நண்பரான ஆதம்காக்காதான் என்னிடம் - நான் வேலைதேடி அந்தப்பக்கம் சென்ற சமயம் - சொன்னார்: 'சூப்பு வித்துப் பொளச்சாரு உம்ம வாப்பா இங்கே. மூணு வேளையும் காஞ்சிப்போன ஆப்பம்... எப்பப்பார்த்தாலும் உங்களுவ நெனப்புதான். நீம்பரு எளுதுன காயிதம்லாம் காமிப்பாருங்குனி ரொம்ப பெருமையா..'

ஊரில் காலூன்ற எடுத்த முயற்சிகள் அத்தனையும் சொந்தங்களின் துரோகங்களால் தோற்றுப்போக, தன் பிள்ளைகளாவது பிறந்த மண்ணில் பெருமையோடு வாழ நினைத்த வாப்பா.. ஆனால் பணரீதியாக அவர்களால் எனக்கு உதவ முடியவில்லை. படித்துமுடித்த நானும் சென்னையில் முயற்சித்திருக்கிறேன். வெறும் 150 ரூபாயும் ஒரு

டேபிளும் கொண்டுபோய் விளம்பர ஏஜென்ஸி வைத்திருக்கிறேன். முக்கியமான வேலை , கம்பெனி கம்பெனியாக ஏறி இறங்கி மானோக்ராம் ஆர்டர்கள் பிடித்து செய்வது. எந்த ஆங்கில எழுத்துக்களைப் பார்த்தாலும் அவைகளை விதவிதமான வடிவத்தில் சேர்த்துப் பிணைத்து வரைவேன். அப்போது உதவவில்லை. ஆனால் அஸ்மாவுடன் சேரும்போது உதவிற்று, பல சுளுக்குகளுடன். எங்கோ போகிறேனே, மண்ணடி மாமேதைகளோடு மாரடித்து சாக்கடையாக சஃபரில் விழுந்த கதையை பிறகு சொல்கிறேன்.

ஜப்பார் நானா சொல்வார் : 'எல்லாம் உம்ம தப்புங்கனி.. ஆண்டவன் ஒமக்கு தனீயா ஒரு தெறமை தந்தான். வரையறது. எங்களாலெ முடியுமா? ஹஜ்ரத்தை வரைஞ்சியுமெ.. எவ்வளவு பெரிய ஆர்ட்டிஸ்ட்லாம் டிரை பண்ணியிக்கிறான்.. ஆனா நீம்பர் வரைஞ்சதுதான் பெஸ்ட்'

'ஏன்?'

'அது ஹஜ்ரத் மாதிரியே இந்திச்சி'

'வேற ஆளை வரைஞ்சிப்பேன் போலக்கிது'

'உம்மை கெடுக்குறதே இந்த எடக்கு பேச்சுதான். அத முதல்ல விட்டுத் தொலையும். இங்கேயே அளகா வளராம.. அரபுநாட்டுக்கு ஓடிட்டியுமே.. - கம்ப்யூட்டர்லெ புடுங்கப் போறேண்டுட்டு'

'அப்ப எனக்கு யாரும் சப்போர்ட் பண்ணல நானா. சொல்லமுடியாத கஷ்டம் , அவமானம் '

'கொஞ்சம் பொறுத்துப்பார்த்திருக்கலாம் நீம்பரு. நம்ம ஊருலேர்ந்து ரெண்டுபேரு ஒரேசமயத்துலெ சினிமாவுக்கு வசனம் எழுதப்போனானுவ. பயங்கரமா கஷ்டப்பட்டானுவ. ஒத்தவன் திரும்பிட்டான் முடியாம. ஏன்? அவனுக்கு ஊர்வந்தா சோறு இந்திச்சி. வராம, அங்கேயே நிண்டான்லெ இன்னொருத்தன், அவன்தான் ஜெயிச்சான்'

'யாரு, இந்த குதிரை, நாய்க்குலாம் வசனம் எழுதி சம்பாதிச்சாரே, அவர்தானே?'

'அவனேதான். ஒரு தட்டுல சோத்தை வச்சிட்டு அந்த ப்ரொடியூசர் சொல்வானாம் 'அடேய் சாயபு.. பீய வச்சிருக்கேன் தட்டுல, தின்னு'ண்டு. திண்டிருக்கான் அழுவிக்கிட்டே. ஆனா இண்டஸ்ட்ரிலெ பெரிய ஆளாயிட்டான். பொறுக்கனும், வளர்றதுக்கு'

இதையெல்லாம் எடுத்துச் சொன்ன அவர் ஏன் வளரவில்லை என்று கேட்கச் சொன்னது

என் மண்டைப்பூச்சி. பிறக்கும்போதே பிறந்தது. பொறு என்றேன். வேறு என்ன சொல்ல? வளரவேண்டுமே..

கை நடுங்குகிற இந்த வயதில் இனிமேல் என்ன செய்வேன்? நடக்காததை எழுதிப் பிரயோசனம் இல்லை. 'அடுத்த மாசம் துபாய் போயாகனுமே, இந்த மாசத்தை ஓட்டப் பணம் வேணுமே' என்று இந்த கடங்கார வாழ்க்கையை நினைத்து கவலைப்பட்டு தலைசாய்ந்திருந்த நேரத்தில், ஸ்கூலிலிருந்து திரும்பிய ஜக்கரியா இன்னொரு கேள்வி கேட்டான். வீசினான் என்பதுதான் சரி.

'இன்னும் போவலெ மாமா?' - குழந்தை.

'குழந்தைகள் உங்கள் மூலமாக வந்திருக்கிறார்கள், உங்களிடமிருந்து அல்ல' என்று ஒரு ஞானி சொன்னானே, அதே குழந்தை. 'கழிச்சல்ல போவான், மாமாவ அப்படிலாம் கேக்கக்கூடாது. அஹலுக்கு தெரியாது எப்ப போவனும்டு?' என்று அஸ்மா கடுகடுத்தாள். 'அவனை ஏன் திட்டுறா புள்ளே?' என்றதற்கு 'அப்படித்தான் திட்டுவேன்' என்றாள். ஓ, இவள்தான் வில்லா? உனக்கு ஜக்கரியாவே தேவலாம்டி.. உன்னைத் தெரியாதா? என்னையும் சேர்த்து 'மொத்தமாக' நாலு பேர் இருந்த ஒரு புகைப்படத்தைக் கொடுத்து ,'இணையத்தில் போடப்போகிறேன், தலைப்பு சொல்லு புள்ளே' என்றதற்கு 'மூணு அறிவாளிகள்' என்றவள் நீ. மனைவி மக்களோடு ஊரில் வாழ்பவர்கள் அறிவாளிகள். ரொம்ப கரெக்ட். யாரால் நான் முட்டாள் ஆனேன்?

நிச்சயமாக உங்கள் மனைவியரிலும், உங்கள் மக்களிலும் உங்களுக்கு விரோதிகள் இருக்கின்றனர் என்கிறான் அல்லாஹ். எச்சரிக்கை எண் : எட்டுலட்சத்து ஒண்ணு, நிச்சயமாக. விரோதிகளை ஏன் படைத்தான் என்று கேட்டு விரோதியாக வேண்டாம். விரோதிகள் எதற்கு? சகித்துக்கொள்ளத்தான்.

நெஞ்சைப் பிடித்துக்கொண்டு சாய்ந்தேன். ஒன்றும் ஆகவில்லை - அஸ்மாவின் நெஞ்சு. கவலை வந்தால் அவள் மார்புதான். வராவிட்டாலும் அவள் மார்புதான் என்பது சஃபர் குறிப்பு. எங்கே தொட்டாலும் பால்கோவா போல இனிப்பவள். 'எல்லாம் உங்க குலாப்ஜானுக்குத்தான்' எனும் அஸ்மா நரை தெரியும் இந்த வயசிலும் பேரழகு. ஐஸ்வர்யா அழகாக இருந்தால் எப்படி இருப்பாளோ அப்படி இருக்கிறாள் , இன்னமும். இத்தனை மொபைல் வசதிகள் இருக்கிறதே, மனைவி , பிள்ளைகள் பேசும்போது அவர்களின் மணம் வீசுவது போல ஒன்று கண்டுபிடித்தால் என்னவாம்? அஸ்மாவின் மணம் அன்னாசி, இல்லை, டொரியான் பழம். டொரியான்பழத்தை நீங்கள் சாப்பிட்டதில்லையே? வாப்பா கொண்டுவருவார்கள் அப்போதெல்லாம். குடலைப் புரட்டும் மலநாற்றம் அடிக்கும் முதலில். சகித்துகொண்டு சாப்பிட ஆரம்பித்துவிட்டால் சுவையில் சொக்கி விடுவீர்கள் சொக்கி.

பிள்ளைகளுக்கு என்ன மணம்? அவர்களே மணம்தான். இந்த அரபுநாட்டு வாசம் மட்டும் அடிக்கக்கூடாது. போதும் பட்டது. ஆனால், இயலுமா? ஒரே ஒரு முறை வாப்பா என்னை வழியனுப்பி வைத்திருக்கிறார்கள். நாகவூர் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து
வீடு வரை பொங்கிப்பொங்கி அழுதார்களாம். கண்ணெல்லாம் சிவந்து போய்விட்டதாம். உம்மா சிரித்துக்கொண்டே இதைச் சொல்லும்போதெல்லாம் என் கண்கள் சிவக்கும். கண்களால் அவ்வளவுதான் செய்ய முடியும்.

இந்த ஜக்கரியா என்னாவான் ? பத்தாவது முடிப்பதற்குள் வந்து 'பைக் மெஸ்ஸஞ்ச'ராகப் போவானா அல்லது 'ETA'வில் ('எல்லாம் தமிழ் ஆட்கள்' என்பதன் சுருக்கம்) இன்ஜினியர் ஆவானா? என் மகனும் சபராளிதானா? எங்கே? பாத்ரூம் வாசலில்
பழியெடுக்க வைக்கும் 'பளபளா' துபாயா? அல்லாவே, வேண்டவே வேண்டாம். சவுக்கடி பட்டாலும் சவுதியே பெட்டர். அதிகாலை 3 மணியிலிருந்து 8 மணிவரை ஆளுக்கு 15 நிமிடங்கள் - காலைக்கடனுக்காக - தரப்படுகிற ஒருவரின் 'தேறா' அறையில்
ஒரு வேடிக்கை நடந்தது. நிலைமை புரியாமல், புதிதாக விசிட்விசாவில் வந்த ஒருவருக்கு முதல்நாள் 20 நிமிடம் கொடுக்கப்பட்டது. அடுத்தநாளும் அதே 20 நிமிடங்களை அவர் எடுத்தவுடன் பெரிய சண்டை. 'இன்னொரு ஆளோட 5 நிமிசத்தை கடன்
வாங்கிதான் நேத்து கொடுத்தோம் - இண்டர்வ்யூ போறீங்களேண்டு. இன்னமே முடியாது , இடத்த காலி பண்ணுங்க'. எனக்கும் இதுபோன்ற அனுபவங்கள் ஏராளம் உண்டு. பார்க்கிறீர்களா என் பின்பக்கத்தை? இப்போதுதான் தப்பித்திருக்கிறேன், இந்த விஷயத்தில் மட்டும். அலுவலகம் இருப்பது அல்-ரிகா ரோடு என்றாலும் தங்கியிருப்பது அல்-கூஸ். சோனாபூர் மாதிரிதான் இந்தப் பகுதியும். 'Oasis' மாதிரி ஓரிரண்டு 'கேம்ப்'கள் இருந்தாலும் மற்றதெல்லாம் ஆடுமாடுகளுக்கான 'மஜ்பா' (பண்ணை)
போன்றது. பல்லாயிரக்கணக்கான தொழிலாளர்கள் - படுக்கையில் bedpan வைக்காத குறையுடன் - அடைபட்டுக் கிடக்கும் இடம். நான் தங்கியிருப்பது , சாக்கடைகள் கருநிறத்தில் மலத்துடன் வழிந்தோடும் ஏரியா. எப்போதும் டேங்கர்களின் உறுமல். கழிவு வெளியேற்ற காசு வசூலித்த அரசாங்கம் கண்மூடியிருப்பதாலும் , காசு வாங்கிக்கொண்டு டேங்கர்களில் அள்ளும் பட்டான்கள் அதை அல்-அவீர் சென்று வெளியேற்றாமல் நைஸாக - அபராதத்திற்கு பயப்படாமல் - இங்கேயே கலந்துவிடுவதாலும்
உருவாகும் நரகம். ஐந்து நிமிட மழைக் காலத்திலோ சொல்லவே வேண்டாம். தாங்க இயலாதவர்கள் துணிந்து வீதிக்கு வந்து போராடுவதும் அவர்களைக் கொத்தாக 'cancel' செய்து அனுப்புவதும் நடக்கிறது. இந்த 'அல்-குஸ்'ஸில்தான் எனக்கு
தனியறை - நின்றுகொண்டே தூங்க. கம்பெனி உபயம். இதேபோன்ற நிலையில்தான் பத்துவருடம் நான் தங்கியிருந்த ராஸ்-அல்-கோர் பகுதியும் இருந்தது. அங்குள்ள சாக்கடையும் சகதியும் சரியானதும் இங்கே வந்திருக்கிறேன். ரூமை விட்டு வெளியே வந்து நின்றால் வெகு தூரத்தில் கண் சிமிட்டும் ஏழு நட்சத்திர 'Burj-al-Arab'. ஏன் இத்தனை

இடைவெளி?

அன்று 'பர்துபாய்' நண்பரின் அறைக்குப் போயிருக்கும்போதுகூட ஒருவன் மூக்கைச் சுளித்துக்கொண்டு சொன்னான், 'இங்கே யாராச்சும் அல்-கூஸ் ஆளு வந்திக்கிறாங்களா?'.

என் கதைகள் நாறுவதற்கான காரணத்தை இப்போது தெரிந்து கொண்டிருப்பீர்கள் என்று நம்புகிறேன்.

கடவுளே, வழியே பிறக்காதா என் தாய்த் திருநாட்டில்? வயதாகி, ஊரோடு ஒரேயடியாகப் போகுபவர்களுக்கு அரசாங்கம் உதவித்தொகை கொடுத்தால் என்ன? மானத்தோடு மரணம் வர மனமிரங்குவானா ஆண்டவன்? பல கேள்விகள்... ' வெறும் ஐநூறு திர்ஹம் சம்பளத்திற்காக பொசுக்கும் வெயிலில் ரோடு போடுகிற, கட்டிடம் கட்டுகிற ஜீவன்களைக் காட்டிலும் உன்னை நல்ல நிலையில்தானே வைத்திருக்கிறேன் , என்னை வணங்கு' என்று கடவுள் சொல்லக்கூடும். தெரியாமல்தான் கேட்கிறேன், வணங்கிய அவர்களை ஏன் அவர் கைவிட்டார்? வணங்கு... இப்படி கேட்டுப் பெறுவது பற்றியே பல கேள்விகள் இருக்கின்றன எனக்கு. 'கேட்காதது கிடைக்காது. கேட்பதும் முறைப்படி கேட்காவிட்டால் கிடைக்காது' என்பார்கள் ஹஜ்ரத்.

'ஏன் என்ற கேள்வி என்று கேட்காமல் வாழ்க்கை இல்லை'.. ரொம்ப நல்ல பாட்டு. படம் , ஆயிரத்தில் ஒருவனா? ஏன் இதைக் கேட்கிறேன் என்று தெரியவில்லை. பத்தாயிரத்தில் ஒரு சபராளிக்கு குடும்பத்தோடு வாழும் கொடுப்பினை - ஒரு ·ப்ளாட்டிலிருந்து இன்னொரு ·ப்ளாட்டுக்கு மாறிமாறிப் போய் ஊர் வதந்திகள் பரப்பும் திருக்கூட்டத்தில் 'சங்கம'மாக. லட்சத்தில் ஒரு சபராளிக்கு மட்டும் கேள்வி கேட்காத , கேட்காமலேயே அடுத்தவனுக்கு அட்வைஸ் பண்ணுகிற வாழ்வு. பெருமைக்கு எருமை மேய்க்கும் மற்றவனெல்லாம்? செத்தான். வாடி வாடி வாடி வாடி மாண்டு போன மாந்தர்கள் கோடி கோடி கோடி கோடி எண்ணிறந்த கோடியே.. - சிவவாக்கியார். இவர் எப்போ Gulf க்கு வந்தார்டி?

நான் கேட்ட , கேள்விப்பட்ட கேள்விகளை வைத்து கோடிப் பக்கங்கள் எழுதலாம். எதற்கு, எரிக்கவா? நாளாயிற்றே என்று சிறுகதை எனும் பெரும் வதை தந்தேன், அவ்வளவுதான். ஆமாம், கேள்விகளோடு நிப்பாட்டினால் போச்சா? தலைக்குப்புற என்னை விழவைத்த ஒரு பதிலையும் எழுதவேண்டாமா முடிவாக? எல்லாக் கேள்விகளுக்கும் பதில்களும் உண்டு. என்ன ஒன்று, நமக்கு அது தாமதமாகத் தெரியும். சமயத்தில், இறந்துபோனபிறகு தெரியலாம். அது எப்படி தெரியும்? என்று கேட்காதீர்கள். அதுதான் சொன்னேனே... வேண்டுமானால் நீங்கள் இங்கே வாருங்கள்.

அந்த பதிலால் நான் அடைந்த அதிர்ச்சிக்கு நிகராக 'மூலம்' சம்பவத்தைச் சொல்லலாம். என்னுடையது அப்புறம், இது வேறொருவருடையது. அப்போது நான் 'கராமா'விலுள்ள ஒரு

'வில்லா'வில் தங்கியிருந்தேன். பழைய அரபி வீடு. அதிலுள்ள நாலு அறைகளில் கிட்டத்தட்ட நூறுபேர் தங்கியிருந்தோம். வாடகைக்குப் பிடித்து அதை நடத்திக்கொண்டிருந்தவரின் ரூமில்தான் நான் இருந்தேன். 'குரங்காட்டி வீடு' என்றால் எல்லோருக்கும் தன் குடும்பத்தைத் தெரியும் என்று பெருமையாகச் சொல்வார். இந்தப் பெருமை எதிலெல்லாம் வருகிறது என்று ஆச்சரியப்பட்டு , பட்டப்பெயரை யாராவது கிண்டல் செய்தால் 'ஆமா.. ஊர்ல உள்ளவன்லாம் குரங்குங்க. நாங்கதான் ஆட்டி வைக்கிறோம்' என்பார். எங்களையும் இங்கே ஆட்டிவைத்துக் கொண்டிருந்தார் - வாடகை விசயத்தில். அதை விடுவோம், வேலைமுடிந்து களைப்பாக நான் ஒருநாள் ராத்திரி வந்தபோது அறையில் யாரும் இல்லை, அவரைத் தவிர. சோகமாக இருந்தார். வயதான குரங்குதான் வந்துவிட்டதே, என்ன சோகம்? 'பட்டக்ஸ்லெ சின்ன கட்டி மாதிரி இந்திச்சிங்க.. மலையாளி டாக்டர்ட்டெ போனேன். 'பைல்ஸ்'ண்டு சொல்லிட்டான்..' என்று சொன்னார். தரையில் அமர்ந்த நான் அசுவாரஸ்யமாக கேட்டுக்கொண்டிருக்கும்போதே.. அவர், அந்த குரங்காட்டி.. 'பாருங்க பாய்' என்று சடாரென்று வழித்து...

அமீரகமே இருளில் விழுந்ததில் அதிர்ச்சியடைந்து சுதாரிப்பதற்குள் - நான் ஏதோ சந்தேகப்படுகிறேன் என்று நினைத்துக்கொண்டு - அடுத்த நொடியில் வேறொன்றும் செய்தார். என் கையை எடுத்து 'அதில்' வைத்துவிட்டார். அடப்பாவி...

இதேபோல அதிர்ச்சியும், அருவருப்பும், பயமும் தந்த பதில். அது கேள்வியா பதிலா? தெரியவில்லை. கேடு கெட்ட சபரில் அதை கேட்டுத்தான் ஆகவேண்டும்.

'பாடாவதி சபர்' என்று சொல்வார்கள். ரொம்ப வருடங்களாக ஊருக்கே போகாதவரை அப்படிச் சொல்வார்கள். பத்திருபது வருடங்கள் கழித்துப் போனால் ஓர் உலக்கையைப் போட்டு அவரை தாண்டச் சொல்லும் ஊர்களும் உண்டு. என்னமோ ஒரு சம்பிராதயம். உலக்கையால் சாத்தாதவரைக்கும் நல்ல சம்பிரதாயம். உள்ளேபோன பிறகு அடிப்பார்களோ என்னவோ. திரும்ப இல்லம் வந்து சேர உதவுவதற்காக , இறைவசனமான 'இன்னல்லதீ ·பர்ள அலைக்கல் குர்ஆன ளராதுக இலா மஆத்'-ஐ , வெற்றிலையால் சுவற்றில் எழுதி (தாளில் எழுதி ஒட்டிவிட்டு, ஒவ்வொருமுறையும் அதை 'டிக்' அடித்துச் செல்லும் சுறுசுறுப்பான ஆட்களும் உண்டு) விட்டுப் போன கணவர் , அத்தனை வருடங்கள் கழித்து - அரை மைய்யத்தாக - வந்தால் அடிக்கவேண்டியதுதான். எதையுமே முழுசா செய்யனும், இல்லையா? ஆறு மாதத்திற்கு மேல் மனைவியைப் பிரிவதே ஹராம். இது ஹதீஸ் அல்ல, காமம் தாங்காமல் படுக்கையை திட்டிப் பாடிக்கொண்டிருந்த ஒரு பெண்ணைக்கண்டு அதிர்ந்து , இரவில் நகர் உலா சென்ற கலி∴பா உமர் ரலியல்லாஹ் அவர்கள் , வெளிநாட்டிலிருந்த தன் படைகளுக்குப் போட்ட உத்தரவு - ஆயிரத்து முன்னூத்தி சொச்சம் வருடங்களுக்கு முன்பு. தனது மகளும் ரசூல் (ஸல்) அவர்களின் மனைவியுமான அன்னை

ஹ·ப்ஸா அவர்களிடம் கேட்டபிறகுதான் அந்த ஆறு மாதக் கணக்கு தெரிந்ததாம் உமருக்கு. என் அஸ்மாவே சொல்கிறாளே, 'ஆறு மாசத்துக்கு மேல தாங்கலம்மா...' என்று.

'இஸ்லாமிய' நாடுகளுக்கு இதெல்லாம் தெரியாதா? தெரியும். ஆனால் 'தொழில்வளம்' பெருக வேண்டுமே... அதனால்தான் , துள்ளும் எங்கள் துபாய் 'இங்கேயே தணித்துக்கொள்வீராக' என்று தெருவுக்கு நாலு 'ஹோட்டல்கள்' வைத்திருக்கிறது. கோடம்பாக்கம் மஜூதித்தெரு கிராக்கிகள் ஒரு லட்ச ரூபாய் ஒப்பந்தத்தில் வந்து குத்தாட்டம் போடுவதெல்லாம் அங்கேதான். கொஞ்சம் மிஞ்சுதையும் குடியோடு அங்கே கொட்டுகிற, அல்லது அரபி வீடுகளில் வேலைக்கு வந்து சாகும் பல்வேறு ஆசிய இனப் பெண்களை அப்படியே 'செட்-அப்' செய்து விழுந்து கிடக்கிற மசுரான்கள் - ஐய்யய்யோ , இப்படிலாம் வெளிப்படையா எலக்கியத்துல எளுதலாமா? - ஊர் எப்படிப் போகமுடியும்? உயிரைத்தான் விடமுடியும். இழுத்து மூடப்படும் கம்பெனிகளால் வேலை இழப்பு என்கிற வெலவெலப்பு வேறு... மனநோயாளிகளாகி, தற்கொலைகளும் அதிமாகிவிட்டன என்பதால், இந்தியத் தூதரகத்தோடு இணைந்து - ஓர் இஸ்லாமிய அமைப்பு இங்கே 'கவுன்ஸிலிங்' மையம் தொடங்கிற்று சென்றமாதம் - 'உண்மை உணர்' என்ற பெயரில். இந்த மாதம் உண்மையிலேயே எண்ணிக்கை கூடிவிட்டது. மையங்களைச் சொன்னேன்.

வாழ்பவர்கள் பக்கம் வருகிறேன். பொறுப்பு, கடமைகள் என்று என்று தன்னை அடக்கிக்கொண்டு பல கனவுகளோடு வாழும் சில 'பாடாவதி'க் கேசுகள் பக்கம்.

30 வருடமாக ஊருக்கே போகாதவர்களில் ஒருவர் அவர். எந்த ஊர்க்காரர் என்பது முக்கியமல்ல, இங்கே அவர் இருக்கும்போது ஊரில் அவருக்கு ஏழெட்டு பிள்ளைகள் பிறந்தது முக்கியம். தன்னால் இயலும்போது - குப்பை பொறுக்கியாவது - மனைவிக்கு பணம் அனுப்புகிறார் இப்போதும். 'புள்ளைங்க என்ன பாவம் செஞ்சிச்சி தம்பி?' என்று அவர் கேட்கும்போது அழுகை வந்துவிடும் - அவருக்கும் , நமக்கும். பெரும்பாலும் அவரைப் பள்ளிவாசலில்தான் பார்க்கலாம். ·பாத்திஹா ஓதும் இடங்களிலும் பார்க்கலாம். 'வத்னி மரைக்கார்' என்று கேலியாக அவரைச் சொல்வார்கள். மண்ணின் மைந்தனான அரபியைத்தான் 'வத்னி' அல்லது 'லோகல்' என்று சொல்வது வழக்கம். விசாவெல்லாம் காலாவதியாகி எத்தனையோ வருடங்களாகி , எந்த 'லேபர்' அதிகாரிகளிடமும் மாட்டாமல், ஷார்ஜா, அல்-ஐன், அபுதாபி என்று என்று இங்கேயே - இறைவனின் அளப்பரிய கருணையால் - உழன்றுகொண்டு வரும் இவருக்கும் அந்தப் பெயர். இருக்கட்டும், 'ஏர்போர்ட்டுலேந்து நே..ரா நை·ப் ரோட்டுக்கு வந்து இறங்குனவன் அத்தனை பேரும் அவுட்' என்று கிண்டலாக சொல்லப்படும் நை·ப் ரோட்டில் ('மதறாஸி'கள் கூடும் இடம்) அந்த வத்னி மரைக்காரிடம் ஒருவர் கேட்டார்: 'ஏன் ஊருக்கே போவலெ நீங்க?'. 'ப்ச்.. வுடுங்க தம்பி'. 'ஏன்?'

24. **வேஷங்கள்! - -சந்திரவதனா செல்வகுமாரன் (ஜேர்மனி)-**

காலைப்பொழுதுக்கே உரிய அவசரத்துடன் ஜேர்மனியின் கிராமங்களில் ஒன்றான அச் சிறு கிராமத்து வீதி இயங்கிக் கொண்டிருந்தது. கோடை என்றாலும் குளிர்ச்சியான காலை. பச்சையாய், பசுமையாய் மரங்களும், பூக்களுமாய் ஜேர்மனி அழகாகத்தான் இருந்தது. சிக்னலுக்காக காரில் காத்துக் கொண்டிருந்த உமாவின் மனது மட்டும் அந்தக் காலைக்குச் சிறிதும் பொருந்தாது புழுங்கிக் கொண்டிருந்தது. கோபத்தில் தகித்தது என்று கூடச் சொல்லலாம்.

"எப்படி அவனால் முடிந்தது...! எப்படித் துணிந்து சொன்னான்...!" காலையில் சந்துரு சொன்ன செய்தியில் கொதிப்படைந்த அவள் கோபத்தை அக்சிலேட்டரில் காட்டினாள்.

சந்துரு வேறு யாருமல்ல. அவள் கணவன்தான். 15 வருடத் திருமண வாழ்க்கை. அன்புக்குச் சின்னமாக நிலாவினி அவர்களின் செல்ல மகள்.

"நேற்று இரவுவரை அன்பாகத்தானே இருந்தான்...! நடித்தானா...?" காலையில் இப்படி ஒரு குண்டைத் தூக்கிப் போடுவான் என அவள் கனவில் கூட நினைக்கவில்லை.

"உமா உம்மோடை நான் கொஞ்சம் கதைக்கோணும்." காலையில் தேநீருடன் சென்ற உமா, படுக்கையிலிருந்த அவனை எழுப்பிய போது குழைந்தான். அவனது வார்த்தையின் பரிவில் நெகிழ்ந்து, அப்படியே அவனருகில் கட்டில் நுனியில் அமர்ந்து, அவன் மார்பின் சுருண்ட கேசங்களைக் கோதியபடி "சொல்லுங்கோ" என்றாள் மிக அன்பாக.

"நீ அழக் கூடாது."

"சும்மா சொல்லுங்கோ."

சில கணங்கள் நிதானித்து "உமா நான் இண்டையிலையிருந்து முன்சனில் தங்கப் போறன்."

"ஏன்....?" மிகவும் திடுக்கிட்டவளாய்

"ஒவ்வொருநாளும் பயணஞ் செய்யிறது சரியான கஸ்டமாயிருக்கு."

"இவ்வளவு நாளும் செய்தனிங்கள்தானே! இப்ப மட்டும் என்ன வந்தது..?"

"பார்த்தீரே..! இப்பவே ரென்சன் ஆகிறீர். நான் இன்னும் விசயத்துக்கே வரேல்லை. "

" ....... "

சந்துருவின் புதிருக்கு மௌனமாக தனக்குள் விடை தேடினாள்.

"உமா உமக்குத் தெரியுந்தானே என்னோடை அந்தச் சக்கி என்ற செக்கொஸ்லாவியப் பொம்பிளை வேலை செய்யிறது..?"

"ஓமோம். புருசன்காரன் விட்டிட்டுப் போயிட்டான் எண்டு சொன்னனிங்கள். அவள்தானே......! பாவம்...... அவளின்ரை மகன் எப்பிடி இருக்கிறான்?"

"அது வந்து...... உமா..! அவளின்ரை மகன் சரியான சுகமில்லாமல் இருக்கிறான். அவளுக்கு என்ரை உதவி தேவைப் படுது. அதுதான் என்னை வந்து.... "

"வந்து...... "

"தன்னோடை இருக்கச் சொல்லிக் கேட்கிறாள். "

"அதுக்கு.....! "

"அதுதான் அவளோடை போய் கொஞ்ச நாளைக்கு இருப்பமெண்டு தீர்மானிச்சிருக்கிறன்."

விக்கித்துப் போன உமா விருட்டென்று கட்டிலில் இருந்து எழுந்து விட்டாள். ஒரு கணம் துடிக்க மறந்த அவளது இதயம் மீண்டும் அவசரமாகத் துடிக்கத் தொடங்கியது. வார்த்தைகள் வெளி வர மறுத்தன.

"யோசிக்காதையும். நான் உம்மட்டையும் வந்து வந்து போவன். உமக்கென்ன குறை இஞ்சை இருக்கு. ஊரிலை போலை அடுப்பை ஊதி... உடுப்பைக் கல்லிலை அடிச்சுத் தோய்ச்சு... இப்பிடி ஒரு கஸ்டமும் இல்லைத்தானே... எல்லா வசதிகளும் இருக்குத்தானே. "

"இதெல்லாம் நீங்களாகுமோ..? நீங்கள் அவளை விரும்பிறீங்களோ...?"

"இல்லை... இல்லை... அவள்தான் என்னை உயிருக்குயிராய் விரும்புறாள். நான் இல்லையெண்டால் அவளுக்கு ஒரு துணையும் இல்லை. "

"நானும் அம்மா அப்பா சகோதரங்களையெல்லாம் விட்டிட்டு வந்திருக்கிறன். இந்தப் பெரிய ஜேர்மனியிலை உங்களையும் நிலாவினியையும் விட்டால் எனக்கும் வேறை ஆர்

இருக்கினம்?" இப்போது அவளிடம் அழுகை பொங்கியது.

"ஏன் இப்ப அழுறீர்? நான் உம்மட்டையும் வருவன்தானே. நீர் படிச்ச பொம்பிளை இதை அனுசரிச்சுப் போகோணும். ஊருலகத்திலை நடக்காத விசயமே இது...!"

"நோ... என்னாலை ஒரு நாளும் இதுக்கு ஒப்புக் கொள்ளேலாது."

உமா கோபமாக முன்னேறி மூர்க்கத்தனமாக அவனது மார்பில் குத்தினாள். நுள்ளினாள். முகமெல்லாம் பிறாண்டினாள். அவன் அவளைத் தள்ளி விட்டு "பொம்பிளை மாதிரி நடந்து கொள்ளும்." என்று கத்தினான். அவனது இடது கன்னத்தில் இவளது நகம் பட்டு இரத்தம் துளிர்த்து நின்றது. வலியோடு அதைத் தடவியவன் கையில் பட்ட இரத்தத்தை அவளிடம் காட்டி, "இங்கை பாரும் எனக்கு இரத்தக் காயம் வர்ற அளவுக்கு பிறாண்டியிருக்கிறீர். இதுக்கு மேலை என்னைத் தொட்டீரோ..! நடக்கிறது வேறை. நானும் சும்மா இருக்க மாட்டன். என்ரை முடிவு முடிவாகீட்டுது. ஒத்துப் போனீர் எண்டால் உமக்கும் நல்லது. எனக்கும் நல்லது. நிலாவினிக்கும் நல்லது. இல்லாட்டி நீர்தான் கஸ்டப் படுவீர். நிலாவினிக்கு இதொண்டும் தெரியத் தேவையில்லை."

உமாவுக்கு மலைப்பாக இருந்தது. தனது மூர்க்கத் தனமான செய்கையில் எரிச்சலாகவும், வெட்கமாகவும் இருந்தது. "என்னவெல்லாம் இவன் சொல்கிறான்" என்று கலக்கமாகவும் இருந்தது. சக்கியைப் பற்றி சந்துரு ஏற்கெனவே சொல்லியிருக்கிறான். அவளுக்காக உமாவும் பரிதாபப் பட்டிருக்கிறாள். அதுக்காக சந்துருவே போய் சக்கிக்கு வாழ்க்கை கொடுப்பதென்பது எந்த வகையில் நியாயமானது? "இவன் சொல்வதெல்லாம் உண்மைதானா அல்லது தன்னைச் சீண்டி விட்டு வேடிக்கை பார்க்கிறானா" என்று குழம்பினாள்.

நிலாவினியும் வீட்டில் இல்லை. பாடசாலை ரூர் என்று போய் விட்டாள். திரும்பி வர இன்னும் எட்டு நாட்களாகும்.

"நீங்கள் சும்மா பகிடிக்குத்தானே சொல்லுறிங்கள்...?" ஒரு நப்பாசையோடு கேட்டாள்.

"இல்லை உமா. சீரியஸாத்தான் சொல்லுறன். எனக்கு உம்மையும் விருப்பம்தான். ஆனால் இப்ப சக்கிக்கு என்ரை உதவி தேவை. "

இயலாமை என்ற ஒன்று இப்போ உமாவை ஆக்கிரமித்தது. "ஓ....." வென்று குழறினாள்.

"ஏனப்பா இப்படிக் குழறுறீர்? பக்கத்து வீட்டுச் சனத்துக்கெல்லாம் கேட்கப் போகுது. என்ன நினைக்குங்குள். ஊரெண்டு நினைச்சீரே. ஏதோ மூண்டாந்தர குடும்பங்கள் மாதிரிக்

கத்திரீர்!"

"ஆர் என்ன நினைச்சாலும் எனக்குப் பரவாயில்லை. நீங்கள் செய்யத் துணிஞ்சது மட்டும் முதலாந்தரமா இருக்கோ..?"

வார்த்தைகள் மிகச் சூடாக அநாகரிகமாக நீண்டு... ஒன்றோடொன்று மோதி.. உமாவுக்கு, சந்துரு முரட்டுத்தனமாக அடிக்க, உமா தன்னைக் காத்துக் கொள்ள எண்ணி, இழுத்துப் பறித்து கதவில் இருந்த திறப்பையும் இழுத்து எடுத்துக் கொண்டு வெளியில் ஓடினாள். கொஞ்ச நேரம் என்ன செய்வதென்று தெரியாமல் நின்றவள்... காரையும் எடுத்துக் கொண்டு இலக்குத் தெரியாமல் ஓடி.. சிவப்பு லைற்றில் தரித்து நின்றாள்.

சிக்னல் பச்சையாக, பின்னிருந்த காரோட்டி கோன் அடித்து "தூங்குகிறாயா...?" என்று சைகை காட்டிச் சினக்க.. சிந்தனையிலிருந்து தற்காலிகமாக விடுபட்டு..... மீண்டும் பலம் கொண்ட மட்டும் அக்சிலேட்டரை அழுத்தி சீறிக் கொண்டு பறந்தாள்.

ஒரு பாடசாலையின் முன் ஒரு குழந்தை வீதியைக் கடப்பதை கடைசி செக்கனில் கண்டு அவசரமாக பிறேக்கை அழுத்தினாள். "கடவுளே...! நான் என்ன செய்கிறேன். அந்தப் பிள்ளை அடிபட்டிருந்தால்...?" என்று முனகினாள். அப்படியே போனவள் வழியில் உள்ள மைக்கல் தேவாலயத்தின் அருகில், காரை நிறுத்தி விட்டு தேவாலயத்துக்கான படிகளில் ஏறி ஓரிடத்தில் அமர்ந்தாள். அடக்க முடியாமல் அழுதாள். திடீரென்று நிர்க்கதியாகப் போய் விட்டது போல உணர்ந்தாள். பைத்தியம் பிடித்தவள் போல அரற்றினாள். யோசிக்க முடியாமல் மூளைப்பகுதி நொந்தது. கண்களின் முன்னே மெல்லிய புகைமண்டலம் போல எதுவோ மறைத்தது. எதையும் சரியாகச் சிந்திக்க முடியாமல் திண்டாடினாள்.

சந்துருவுக்கும் அவளுக்கும் இடையில் அடிக்கடி சின்னச் சின்னச் சண்டைகள் சச்சரவுகள் என்று வரத் தவறுவதில்லைத்தான். சண்டைகள் கருத்து வேறுபாடுகள் இல்லாத குடும்பங்களா..? சில சமயங்களில் சந்துருவின் மேல் சந்தேகங்களும் வந்து பொங்கியிருக்கிறாள்தான். அவையும் சந்துரு கூறும் பொய்ச் சமாதானங்களில் பொங்கிய வேகத்தில் அடங்கியும் போயிருக்கின்றன. ஆனால் இந்தளவுக்கு தன்னை அப்படியே விட்டு விட்டுப் போய் இன்னொருத்தியுடன் வாழத் துணிந்த அவன் துணிவும், அதை மிகச் சாதாரண விடயம் போல அவள் ஏற்றுக் கொள்ள வேண்டுமென்ற அவன் வேண்டுகோளும், இவளை நிலைகுலைத்து விட்டன. தன்னவன் இன்னொருத்திக்குச் சொந்தம் என்று தெரிந்தால் எந்தப் பெண்ணால்தான் நிலைகுலையாமல் இருக்க முடியும்.

தேவாலயம் உயர்ந்து கம்பீரமாக நின்றது. உல்லாசப் பிரயாணிகள் உள்ளே சென்று அதன்

உச்சிக்கு ஏறிக் கொண்டிருந்தார்கள். சிலர் உச்சியில் நின்று நகரின் அழகை ரசித்துக் கொண்டிருந்தார்கள். இவளுக்கும் ஒரு விபரீத ஆசை வந்தது. தானும் போய் ஏறினாள். அதிக எண்ணிக்கையான வளைந்து வளைந்து செல்லும் படிகளில், ஒவ்வொன்றாக ஏறும் போது மனச்சோர்வுடன் உடற் சோர்வும் சேர்ந்து கால்கள் தடுமாறின. தலை சுற்றியது. ஆனாலும் ஏறி விட்டாள். மூச்சு வாங்கியது. மேலே நின்று பார்த்தாள். எதுவும் தெளிவில்லாமல் ஏதோ ஒரு மெல்லிய புகைமண்டலம் முன்னே தெரிந்தது. பச்சை மரங்கள் கூட புகை போர்த்தி வெண்மை பேர்ந்த பச்சைகளாகத் தெரிந்தன. யாரும் எதிர் பார்க்காத ஒரு கணத்தில் எம்பிக் குதித்தாள்.

அங்கு நின்ற எல்லோருமே அதிர்ச்சியில் அவலக்குரல் எழுப்ப அவள் இரத்தமும் சதையுமாய் தேவாலயத்தின் படிகளில் சிதறினாள். ஒரு கணம் ஸ்தம்பித்து நின்ற அந்த இடத்தை பொலிஸ்வாகனங்களும் அம்புலன்ஸ் வண்டியும் அல்லோல கல்லோலப் படுத்தின. சிவப்பும் வெள்ளையும் கலந்த தடுப்பு நாடாக்கள் கட்டப்பட்டு அந்த வீதியிலான போக்குவரத்துக்களும் மக்கள் நடமாட்டமும் தடைப்படுத்தப் பட்டது.

இது மூன்றாவது சாவு. முதலில் 14 வயது நிரம்பிய ஒரு யேர்மனிய மாணவி. அடுத்து ஒரு இந்தியத் தமிழ்ப்பெண். இப்போ இலங்கைத் தமிழ்ப்பெண். தேவாலய உச்சிக்கு இனி யாருமே ஏற முடியாது என்ற அறிவித்தலோடு தேவாலயத்தினுள்ளே இருந்த உச்சிக்கு ஏறும் படிகளை மறித்து கேற் போட்டு பெரிய மாங்காய்ப்பூட்டு போடப் பட்டது.

விசாரரணைகள் தொடர்ந்து... சாக்கில் அள்ளிக் கட்டப் பட்ட உமாவின் உடல் என்று சொல்லப் பட்ட சதைத் துண்டுகள் அடக்கம் செய்யப்பட்டு இரண்டு கிழமைகள் ஓடி விட்டன. சந்துருவைத் துக்கம் விசாரிக்க உறவினர்கள் என்ற பெயரில் சிலரும், நண்பர்களும் வந்து வந்து போய்க் கொண்டிருந்தார்கள்.

சந்துரு சோகமாய் தாடியை மழிக்காமல் தேவதாஸ் வேடம் போட்டிருந்தான். யார் வீட்டுக்கு வந்தாலும் ஒரு சோகப் பாட்டுள்ள இசைத்தட்டை சுழல விட்டு தன் சோகத்தை இன்னும் பலமாக மற்றவர்களுக்குக் காட்டினான். அழுவாரைப் போல இருந்து "அவ பாருங்கோ சரியான நல்லவ. ஆனால் யேர்மனியிலை இருக்கிற எல்லாப் பொம்பிளையளுக்கும் உள்ள அதே பிரச்சனைதான் அவவுக்கும். தனிமைதான் எல்லாத்துக்கும் காரணம். தாய் தகப்பன் ஊரிலை. சொந்தம் எண்டு சொல்லிக் கொள்ள ஒருவரும் பக்கத்திலை இல்லை. நானும் வேலையோடை. மகள் நிலாவினி பள்ளிக்கூடம் ரூர் எண்டு திரிவாள். இவ நாள் முழுக்க வீட்டிலை தனியத்தானே. அதுதான் அவவுக்கு சரியான மனஅழுத்தம். எப்பவும் சும்மா இருந்து அழுறதும்....." சொல்லிக் கொண்டே இருந்தான்.

chandra1200@yahoo.de பதிவுகள் மார்ச் 2005 இதழ் 63 -

**25. காதலினால் அல்ல! - சந்திரவதனா செல்வகுமாரன் -**

காதலினால் அல்ல... புள்ளிகளை மட்டுந்தான் எங்களால் போட முடிகிறது. எந்தெந்தப் புள்ளிகள் இணைந்து எந்த வடிவில் வாழ்க்கைக் கோலம் அமையப் போகின்றது என்பதை யாரும் முற்கூட்டியே உணர்ந்து கொள்வதாகவோ அறிந்து கொள்வதாகவோ எனக்குத் தெரியவில்லை. புள்ளிகளை மட்டுந்தான் எங்களால் போட முடிகிறது. எந்தெந்தப் புள்ளிகள் இணைந்து எந்த வடிவில் வாழ்க்கைக் கோலம் அமையப் போகின்றது என்பதை யாரும் முற்கூட்டியே உணர்ந்து கொள்வதாகவோ அறிந்து கொள்வதாகவோ எனக்குத் தெரியவில்லை. நேற்றுத்தான் போலிருக்கிறது. நீ ஜேர்மனிக்கு வந்தது. நான்கு வருடங்களின் முன் வந்திருந்தாய். பார்த்துப் பேசும் பாக்கியம்தான் எனக்கில்லாமற் போய் விட்டது. பார்க்காமலே இருந்து விடுவோம் என்றாய். பால்ய காலத்து முகங்களையே மனங்களில் வார்த்திருப்போம் என்றாய்.

இன்றைக்கு ஏன் இதெல்லாம் என் நினைவில் வருகின்றதென்றே எனக்குத் தெரியவில்லை. இரவின் நிசப்தங்களைக் குலைக்கும் ஒவ்வொரு சப்தங்களும் எனக்குக் கேட்கின்றன. ஆழ்ந்து உறங்கிப் போகும் நான் ஏன் இப்படி அர்த்த ராத்தரியில் அர்த்தமற்று விழித்திருக்கிறேன் என்று புரியவில்லை. மனசு குழம்புகிறது. எதையோ இழந்தது போலத் தவிக்கிறது.

´எனக்குப் பிரியமான யாருக்கும் ஏதாவது ஆகியிருக்குமோ..?´ இருட்டுக்குள் நடந்து வரும் போது தூரத்தே தெரியும் வேப்பமரத்தில் ´பேய் இருக்குமோ!´ என்ற நினைவு வந்தவுடன் குடல் தெறிக்க ஓடும் சின்னப்பிள்ளை போல, கேள்வி தோன்றிய மாத்திரத்தில் மனசு சில்லிடுகிறது. ´வேண்டாம், எந்த அசம்பாவிதங்களும் வேண்டாம். இதற்கு மேல் யாரையும் இழக்கவோ, யாரும் எதையாவது இழந்து விட்டார்கள் என்று கேட்கவோ இந்த மனசுக்குத் திராணியில்லை.´ நினைவுகளிலிருந்து விலகி ஓடுகிறேன். வேப்பமரத்துக்குப் பயந்து ஓட, வளைவில் தெரியும் முடக்குக் காணிக்குள் விருட்சமாய் விரிந்திருக்கும் புளியமரம் மீண்டும் பேயை நினைவு படுத்துவது போல் எனக்குள்ளும் வேண்டாத நினைவுகள் வந்து என்னைப் பயமுறுத்துகின்றன. குடல் தெறிக்க ஓடுகிறேன்.

´இல்லை, யாருக்கும் ஒன்று நடந்து விடாது. எனக்கு நித்திரை வராததற்கான காரணம் வேறாக இருக்க வேண்டும்.´ இரவிலே உடற்பயிற்சி செய்வது அவ்வளவு நல்லதல்ல, என்று ராகினி பலதடவைகள் சொல்லியிருக்கிறாள். இருந்தும் வேலை முடிந்த பின் ரெட்மில்லரில் 45 நிமிடங்கள் ஓடிவிட்டுத்தான் வீட்டுக்கு வந்தேன். அதனால்தான் நித்திரை கொள்ள முடியவில்லைப் போலும்.

என்னதான் சமாதானம் செய்தாலும், ஏனோ சில நாட்களாகவே மனம் குழம்பித்தான்

இருக்கிறது. இன்று கொஞ்சம் அதிகப் படியாக. என்னவென்று புரியாத உணர்த்தல்கள். அடிக்கடி விழிப்பு. படுத்ததும் தூங்கி விடும் என் இயல்பு நிலையில் இருந்து விலகியிருக்கிறேன். ஏதோ ஒரு யோசனை என்னை அழுத்துகிறது. ஏன் இந்த உணர்வுகள் என்ற கேள்வி இந்தச் சில நாட்களுக்குள் பலதடவைகள் எனக்குள் எழுந்து விட்டது. ஆனாலும் ஐரோப்பிய அவசரங்களினூடு என் நாட்களும் விரைகின்றன.

ம்.. மீண்டும் நீ... ஏன் என் நினைவுகளில் வருகிறாய். மனத்திரையில் வலம் வரும் பலநூறு முகங்களுக்கு இடையில் நீ கொஞ்சம் அதிகமாகவே வருகிறாய் போலிருக்கிறது. அடிக்கடி வருகிறாய். இந்தச் சில நாட்களுக்குள் உன்னை இன்னும் அதிகமாக நினைக்கிறேன் போல இருக்கிறது. இரண்டு மூன்று நாட்களுக்கு முன் ஏதோ ஒரு உந்துதலில் உனது மகளுக்கு ஒரு மின்னஞ்சல் எழுதினேன். உனதும், உன் மனைவியினதும் புகைப்படம் ஒன்று எனக்கு அனுப்பும் படி. அவள் பதிலுக்காக இன்னும் என் மனம் காத்திருக்கிறது. ஏனோ, உன்னைப் பார்க்க வேண்டும் போல மனதுள் ஆவல் எழுகிறது. மனங்களின் தொடுகைகளைத் தவிர வேறெந்தத் தொடர்பும் இல்லாத தூரத்தில் நீ. உறவினன் என்பதையும் தாண்டிய ஏதோ ஒரு பிரியம் உன் மேல். எனக்கு உன் மேல் இருக்கும் பிரியத்தை விட உனக்கு என் மேல் இருக்கும் பிரியம் அதிகம் என்பதை நான்கு வருடங்களின் முன் நீ ஜேர்மனிக்கு வந்த போது தொலைபேசியில் பேசிய போதுதான் உணர்ந்தேன். அப்போதும் கூட நாம் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொள்ளவில்லை. தொலைபேசி என்ற ஒரு சாதனம் இருந்ததால் பேசிக் கொண்டோம்.

அன்று மிகச் சாதாரணப் பெண்கள் போலவே நூறில் ஒன்றாய், இல்லையில்லை ஆயிரத்தில் ஒன்றாய், அதை விடப் பொருத்தமாய் உலகத்தில் ஒன்றாய்... சமையல் முடித்து, சாப்பாடு முடித்து, கொஞ்சம் முன்னேற்றமாய், மினுக்கிக் கழுவி மினைக்கெடாமல் பாத்திரங்களை டிஸ்வோசரில் போட்டு விட்டு, துடைப்பத்துக்குப் பதிலாக வக்கும் கிளீனரை எடுத்த போதுதான் உனது தொலைபேசி என்னை அழைத்தது. யாராவது தொல்லை பேசுபவர்கள்தான் அழைக்கிறார்களோ என்ற யோசனையில் மனசுக்குள் சலனித்து விட்டுத்தான் எடுத்தேன்.

என்னை முழுமையாகச் சலனப்பட வைக்க என்றே கனடாவில் இருந்து வந்தாயோ! என்னமாய் பேசி விட்டாய். மீண்டும் மீண்டுமாய் எனக்குள்ளே அவை ஒலித்துக் கொண்டே இருக்கின்றன. நினைவுகளில் மிதக்கின்றன.

அதுக்காக காதல், கத்தரிக்காய் என்று விபரீதமாய் ஏதும் கற்பிதம் பண்ணி விடாதே. நான் இன்னொருத்தன் மனைவி. நீ இன்னொருத்தியின் கணவன். சத்தியமாய் உன் மேல் எனக்குக் காதலில்லை. ஆனாலும் என்னைச் சலனப் படுத்துகிறாய். சற்று சஞ்சலப் படுத்துகிறாய். ஒரு வேளை உன் காதலை அன்றே நீ சொல்லியிருந்தால் நானும்

உன்னைக் காதலித்திருப்பேனோ, என்னவோ..!
எனக்கென்ன தெரியும்? நீ என்னைக் காதலித்தாய் என்று நான் எங்கு கண்டேன்? பனங்கூடல் தாண்டி, அப்பாவோடு நான் உன் வீட்டுக்கு வரும் போதெல்லாம், மச்சான் நீ என்றும், உன்னை மணப்பது நான் என்றும் அப்பாச்சி சொல்லும் போதெல்லாம் எனக்கேதோ மரப்பாச்சி விளையாட்டுப் போலத்தான் இருக்கும்.

திருமணத்தின் அர்த்தமோ, காதலின் சந்தமோ தெரியாத அந்த வயதில் அரைக் காற்சட்டைக்கு வெளியே அரைநாண் கயிறு எட்டிப் பார்க்க விளையாடிக் கொண்டிருக்கும் உன் மீது எனக்கு எந்த ஈடுபாடுமே வரவில்லை. காதல் மட்டும் எப்படி வரும்? அப்படியிருக்க அப்பாச்சியின் வார்த்தைகள் உன்னுள் ஆழப் பதிந்து போனதையும், நான் உனக்குத்தான் என்ற ஆசை உன்னுள் வேரூன்றி வளர்ந்து விட்டதையும் நான் எப்படி அறிவேன். ஒரு தரமாவது... நான் வளர்ந்த பின்னாவது நீ எனக்குச் சொல்லியிருக்கலாமே.

நான் பள்ளிக்கூடத்துக்குப் போகும் நேரங்களில் நீ சந்திக் கடையின் முன் ஒற்றைக்காலைத் தரையில் ஊன்றிய படி, மற்றக்கால் தொங்கிக் கொண்டு நிற்க சைக்கிளில் தவமிருந்தது எனக்காகத்தான் என்று நான் நினைக்கவேயில்லை. நீ சொன்ன போதுதான் நீ சந்தியில் நின்றதைப் பற்றியே நினைத்துப் பார்க்கிறேன்.

நீ கப்பலில் போய் விட்டாய் என்ற போது மாமியின் கஸ்டங்கள் தீர்ந்து விடும் என்று மனம் மகிழ்ந்தேனே தவிர வேறெந்த உணர்வும் எனக்கு வரவில்லை. நீ மட்டும் எப்படி உனக்குள் அப்படியொரு கனவை வளர்த்துக் கொண்டு திரும்பி வந்தாய். அங்கிருந்தாவது உன் விருப்பத்தை, ஆசையை, காதலைச் சொல்லி ஒரு கடிதம் எழுதியிருந்திருக்கலாமே!

ம்;.. அதற்கு நான்தான் அவகாசம் தரவில்லையோ!

சில வருடங்கள் கழித்து, நீ கப்பலில் இருந்து திரும்பி வந்த அன்றே என்னைப் பார்க்க என்று ஓடி வந்ததாய் சொன்னாயே! அப்போது கூட "மாமி..." என்றுதானே கூப்பிட்டுக் கொண்டு வந்தாய். அம்மா மீது உனக்கு அத்தனை பாசம் என்றுதான் நினைத்தேனே தவிர, உன் வரவு எனக்குள் எந்த சந்தத்தையும் ஏற்படுத்தவில்லை. நான் என்பாட்டில் என் குழந்தையை மடியில் வைத்து பால் கொடுத்துக் கொண்டிருந்தேன். அந்தக் காட்சியில் உன் மனம் நொருங்கிப் போனதைக் கூட நீ யாருக்கும் அன்று சொல்லவில்லையே!

இத்தனை வருடங்கள் கழித்து, நான் பேரப்பிள்ளையையும் கண்ட பின் இதையெல்லாம் நீ என்னிடம் சொன்ன போது எனக்கு ஏதோ சினிமாப் படத்துக்கான கதையொன்றைக் கேட்பது போன்ற பிரமைதான் வந்தது. என்ன..? ஒரு வித்தியாசம். வழமையான

கதைகளில் நான் வாசகியாய் அல்லது ரசிகையாய் இருப்பேன். இந்தக் கதையில் நானே கதாயநாயகியாய்...

நீ ஜேர்மனிக்கு வந்திருந்த போதும், நான் வர முடியாது போன அந்தக் குடும்பச் சந்திப்பில் ஒவ்வொரு அழைப்பு மணியின் போதும் நான்தான் வருகிறேன் என்று எதிர்பார்த்து ஏமாந்தாயாமே! அங்கு வந்திருந்த உறவுகளில் சிலர் என்னிடம் பின்னர் சொன்ன போது நியமாகவே நான் வருந்தினேன். வந்திருக்கலாமே என்று மனசுக்குள் ஆதங்கப் பட்டேன். ஆனாலும் பார்க்காமலே இருந்து விடுவோம் என்றும், பால்ய காலத்து முகங்களையே மனதில் வார்த்திருப்போம் என்றும் நீ சொல்லிச் சென்றதை
நினைத்து மனத்தை ஆற்றிக் கொண்டேன்.

எனது 18 வயதுக்குப் பிறகு உன்னைச் சந்தித்துக் கொண்டதாய் எனக்கு ஞாபகம் இல்லை. எனது அந்த வயது முகத்தைத்தான் உனக்குத் தெரியும். அதே போல நான் கடைசியாகச் சந்தித்த உனது அந்த 23 வயது முகத்தைத்தான் எனக்கும் தெரியும்...

இப்போதும் கூட உன் மனைவி வேலைக்கும், மகள் பாடசாலைக்கும் சென்ற பின்னான தனிமைப் பொழுதுகளில் நீ என்னைப் பற்றிய நினைவுகளில் மூழ்குவாய் என்று சொன்னாயே! அது அவ்வப்போதான தனிமைப் பொழுதுகளில் என் நினைவுகளைச் சீண்டுவதை நான் உணர்கிறேன். அதற்காக எனக்கு உன்மேல் காதல் இருக்கிறது என்று மட்டும் நினைத்து விடாதே. இப்போதும் சொல்கிறேன், சத்தியமாக உன் மேல் எனக்குக் காதல் இல்லை.

ஆனாலும் வாழ்க்கை பற்றிய விடை கிடைக்காத சில பல கேள்விகள் என்னுள் எழுகின்றன. பெரியவர்கள் போட்ட புள்ளிகள் உன் மனதில் மட்டும் கனவுக் கோலமானது ஏன்? என்னை நீ நினைத்ததையும், என்னை நீ காதலித்ததையும் உணராமலேயே நான் வேறொருவனைக்: காதலித்து, கல்யாணம் செய்து... என்பாட்டில் வாழ்ந்திருக்கிறேனே! சின்ன உணர்த்தல்கள் கூட என்னிடம் இல்லாமற் போனது எப்படி?

மீண்டும் மீண்டுமாய் இந்த உன் பற்றிய நினைவுகள் ஏன் வருகின்றன என்று தெரியாமலே நான் தூங்கி விட்டேன் போலிருக்கிறது.

விடிந்த பொழுதிலும் மனசு குழம்பித்தான் இருக்கிறது. எனக்குப் பிரியமான யாருக்கும் ஏதாவது ஆகியிருக்குமோ? நினைக்கும் போதே வாயில் வைக்கக் கொண்டு போன உணவு நழுவி விழுந்து விடுகிறது. என் மேல் பிரியமான யாருக்காவது...? கேள்விகள் தோன்றுவதும் வழமை போலவே எனக்குள்ளேயே அமுங்கிப் போவதுமாய் பொழுது அவசரத்தோடு விரைகிறது.

வேலையிலும் மனதில் அமைதியில்லை. வேளைக்கே வீட்டுக்கு வந்து விட வேண்டும் போல மனசு அந்தரிக்கிறது. வந்து விட்டேன். அப்போதுதான் அந்த அழைப்பு… நீ;; ஒரு மருத்துவமனையில் கடுமையான நோயில் வீழ்ந்திருக்கிறாய் என்ற செய்தியோடு.

ஒரு கணம் திக்குமுக்காடி விட்டேன். எப்படியாவது உன்னோடு பேச வேண்டும் என்று மனம் துடிக்கிறது. நன்றாகக் கதைத்துக் கொண்டுதான் இருக்கிறாய் என்றும் மருத்துவமனை என்பதால் இரவு பேச முடியாது என்றும் காலையில் பேசும் படியும் சொல்கிறார்கள். சிறிது நேரத்தில் மருத்துவமனைக்கான தொலைபேசி இலக்கத்தைத் தருகிறோம் என்கிறார்கள்.

ஆசிரியர் சந்திரவதனா செல்வகுமாரன்மனசுக்குள் அலை புரள்கிறது. விழிகளில் நீர் திரள்கிறது. ஆனாலும் உன்னோடு பேசலாம் என்ற நம்பிக்கை என்னுள் பலமாக இருக்கிறது. அதிகம் காத்திருக்க வைக்காமல் தொலைபேசி அழைக்கிறது. எடுத்த போது, எனது நம்பிக்கைகள் தவிடு பொடியாகின்றன. நீ போய் விட்டாயாம். அப்போதுதான், அந்தச் சில நிமிடங்களுக்குள்தான்… என்னோடு பேசாமலே போய் விட்டாயாம். சொன்னது போலவே பார்க்காமலே போய் விட்டாய். ஒப்பாரி வைத்து அழுகின்ற அளவுக்கு நான் இல்லை. ஆனாலும் அவ்வப்போதான தேற்றுவார் இன்றிய தனிமைகளில் ஆற்றாமையில் கொட்டி விடுகிறது கண்ணீர்.

9.10.2007

chandra1200@gmail.com

பதிவுகள் நவம்பர் 2007 இதழ் 95

**26. ராகவன் - சந்திரவதனா செல்வகுமாரன் (யேர்மனி) -**

ராகவன் ஏன் அப்படி நடந்து கொண்டான் என்று எனக்கு இன்று வரை தெரியாது. அன்று பிரயோககணித வகுப்பு முடிந்ததும் 'ஓர்கானிக் கெமிஸ்ட்ரி' தொடங்கியது. பதினோராம் வகுப்புக்கான மாஸ்டர் வரவில்லையென்பதால் அந்த வகுப்பு மாணவர்களையும் எமது 12ம் வகுப்புக்குள் விட்டார்கள். பெப்பே தான் அவசரமாக வாங்கில் மேசைகளை ஒழுங்கு படுத்தி விட்டது. அது யார் பெப்பே...! என்ற யோசனை உங்களுக்கு வரலாம். அது பாவம். நாங்கள் பெண்கள் எல்லோருமாகச் சேர்ந்து அதுக்கு வைத்த பெயர்தான் பெப்பெ. அதென்ன அஃறிணையில்... என்று நெற்றியைச் சுருக்குகிறீர்களா? அவனெண்டு சொல்ல முடியவில்லை. வயதில் மூத்தது. அவர் என்று சொல்ல முடியாத படி பெப்பே. நாங்கள் ரியூற்றறிக்குள் நுழையும் போது கதவைத் திறந்து விடுவதிலிருந்து கரும்பலகையைச் சுத்தமாக்கி... என்று எல்லாவற்றையும் செய்து வைப்பதுதான் பெப்பேயின் வேலை.

யாரோ நாங்கள் பெப்பே என்று சொல்வதை அதுக்குச் சொல்லி, ஒரு நாள் இடைவேளை நேரம் அது வந்து அதன் அர்த்தம் என்ன? ஏன் தனக்கு அப்பிடிப் பெயர் வைக்க வேண்டும் என்று கேட்க எங்களுக்குப் பாவமாகி விட்டது. பெயர் வைப்பதில் மும்முரமாக நின்ற சந்திரப்பிறேமா மட்டும் நைஸாக நழுவி விட்டாள்:

மனசுக்குள் கனவுகளை வளர்த்துக் கொண்டு மன்மத நினைப்பில் பெண்களுக்கு நடுவில் வேலை செய்து கொண்டிருந்த பெப்பே இப்போதெல்லாம் எங்களைக் கண்டால் ஏறெடுத்தும் பார்ப்பதில்லை.

சில பதினொன்றாம் வகுப்பு மாணவர்கள் உதவி செய்ய, பெப்பே முகத்தைத் தொங்கப் போட்ட படி வாங்கில்களை அடுக்கிக் கொண்டிருக்கவே ஆண் மாணவர்கள் சிலர் தடால் புடால் என்று ஓடிவந்து அமரத் தொடங்கினார்கள். இடங் காணததால் பக்கப் பாடாகவும் வாங்கில்கள் போடப் பட்டன.

வகுப்பு தொடங்கி விட்டது. பெப்பே அவசரமாய்ப் புதுச் சோக்குகளை கொண்டு வந்து மேசையில் வைத்து விட்டு வெளியேறி விட்டது.

மணியம் மாஸ்டர் வழக்கம் போல 'ஓர்கானிக் கெமிஸ்ட்ரி'யை இரட்டை அர்த்தம் தொனிக்க விளக்கிக் கொண்டிருந்தார். சிரிப்பலைகளின் நடுவே அவசரமாய் நோட்ஸ் எடுத்துக் கொண்டிருந்தோம். திடீரென்று என் காலில் ஏதோ தட்டுப் பட்டது. திடுக்கிட்டுக் குனிந்து பார்த்தேன். ஒரு கால் நீண்டிருந்தது. அது பக்கப் பாடாக எனக்கு வலது பக்கமாக வைக்கப் பட்டிருந்த வாங்கிலில் இருந்த ராகவனின் கால். நிமிர்ந்து பார்த்தேன். அவன் குனிந்த தலை நிமிராமல் நோட்ஸ் எடுத்துக் கொண்டிருந்தான்.

என்னை விட இளையவன். 11ம் வகுப்பு மாணவன். எனக்குப் பிரயோககணிதம் படிப்பிக்கும் இரத்தினவேல் மாஸ்டரின் மகன். இரத்தினவேல் மாஸ்டர் கடமையே கண்ணானவர். அவர் வகுப்புக்குள் நுழைந்து விட்டால் ஆர்முடுகல், அமர்முடுகல், வேகம், நேரம், கரும்பலகை, சோக், டஸ்ரர்,........ இவைகள் தவிர வேறெதுவும் எம் சிந்தனையில் செல்லாது. 'கெமிஸ்ட்ரி'யில் மாதிரி பிரயோககணித வகுப்பில் நிறையப் பெண்களும் இருக்க மாட்டார்கள். ஏதோ பெண்கள் கணிதம் படிக்கத் தகுதியில்லாதவர்கள் என்பது போல டொக்டர், ரீச்சர் கனவுகளோடு உயிரியலும், தாவரவியலும் படிக்கச் சென்று விடுவார்கள். நானும் கீதாவும் இன்பியும்தான் கணிதம் படிப்போம். மிச்ச எல்லாம் பெடியன்கள்தான்.

எங்களுக்குத்தான் சின்னதாகக் கூடப் பெண்களின் பக்கமாகச் சிரிக்காமல் சீரியஸாகப் படிப்பிக்கும் இரத்தினவேல் மாஸ்டரின் ஆசிரியத் தன்மையும், திறமையும் தொ¢யும். அதனால் நாங்கள் மூவரும் அவர் மகன் ராகவனையும் மற்றைய மாணவர்கள் போல சாதாரணமாக எண்ணாது சற்று எட்டவே வைத்திருந்தோம்.

இதென்னடா...? வாங்கிலுக்குக் கீழே தவறுதலாக ஒரு கால் பட்டதுக்கு இத்தனை ஆரவாரமா என உங்களுக்கு ஒரு சிரிப்பான யோசனை வரலாம். அந்தக் காலம் என்ன உதட்டோடு உதடுரசிக் ஹலோ சொல்லும் இன்றைய காலமா.? ஓன்றாகப் படிக்கும் மாணவனுடன் கூட ஒரு வார்த்தை பேசாது, ஆண் பெண் என்று பிரித்து, பிரித்து வைத்து.. கண்கள் சந்தித்துக் கொண்டாலே பாவம் என்பது போல தலைகுனிந்து திரியும் இற்றைக்கு 28 வருடங்கள் முந்திய காலமல்லவா அது..!

பார்வையே தொடக் கூடாது. புன்னகை.. அது தெரியாமல் கூட ஆண் மாணவர்கள் முன் பெண் மாணவர்களுக்குப் பூக்கக் கூடாது. இந்த நிலையில் ஒரு ஆண் மாணவனின் கால் பெண் மாணவியின் காலில் படுவதென்பது சும்மாவா..?

ராகவன் தலை கவிண்ட படியே எழுதிக் கொண்டிருந்தான். யாராவது அவதானித்திருப்பார்களா என்று அறிந்து கொள்ள மெதுவாகப் பார்வையைச் சுழற்றினேன். எல்லோரும் நோட்ஸ் எடுப்பதிலேயே கவனமாக இருந்தார்கள். யாரும் கண்டு கொள்ளவில்லை என்பதில் எனக்குப் பெருநிம்மதி. இருந்தாலும் ஏதோ அவமானப் பட்டுப் போன மாதிரியான ஒரு உணர்வு. முன் வாங்கிலில்தான் நான் இருந்தேன். எனக்கு நேரெதிரே கரும்பலகைக்கு முன் நின்று படிப்பித்துக் கொண்டிருக்கும் மணியம் மாஸ்டர் கண்டிருப்பாரோ என்று மனசுக்குள் ஒரு சின்ன உறுத்தல்.

ராகவன் தலையை நிமிர்த்தியதை நான் காணவில்லை. அவன் நோட்ஸ் எடுக்கும் விதத்தைப் பார்த்தால் அவன் என் காலில் தட்டுப் பட்டதையே உணராதவன் போலத்

தெரிந்தான். தெரியாமல்தான் நடந்திருக்கும். அவன் நல்ல பெடியன். என் மனசுக்கு நான் கூறிக் கொண்டேன்.

வகுப்பு முடிந்து வெளியில் வந்த போதும் யாரும் இது பற்றி எந்தக் கேள்வியும் கேட்க வில்லை. எனக்கு இப்போ துணிச்சலான நிம்மதி. யாரும் காணவில்லை.

அடுத்த வாரம் பாடசாலைக்குச் சென்ற போது எனது நிம்மதி பாடசாலை மதில்களில் கரிக்கட்டியால் குலைக்கப் பட்டிருந்தது. ராகவன் என்று எழுதி பக்கத்தில் கூட்டல் அடையாளம் போட்டு எனது பெயரும் எழுதப் பட்டிருந்தது. என்னையும் ராகவனையும் இணைத்தும் நான் ராகவனின் காலைத் தட்டினேன் என்றும் அரசல் புரசலான கதைகள் பாடசாலைச் சுவர்களில் எதிரொலித்தன.

எனது கால் மாஸ்டரை நோக்கித்தான் நீள முடியுமே தவிர எனக்கு வலது பக்கமாக இருந்த ராகவனின் பக்கமாய் நீள முடியாது. அவனாக வேண்டு மென்று என் பக்கம் நீட்டினானோ..? அல்லது தவறுதலாக நடந்ததோ எனக்குத் தெரியாது. ஆனால் அதை ஒரு தவறான கதையாக ஊருக்குள் உலாவ விட்டு விட்டான்.

ஏன்ரா இப்படி ஒரு கதையை உருவாக்கினாய் என்று அன்று அவனிடம் சென்று கேட்க ஆண் பெண்ணுக்கிடையில் அன்றிருந்த இடைவெளி இடம் தரவில்லை. அதனால் இன்றுவரை ராகவன் ஏன் அப்படி நடந்து கொண்டான்..? என்ற கேள்வி என்னை விட்டு அகலவும் இல்லை.

chandra1200@yahoo.de
பதிவுகள் அக்டோபர் 2003 இதழ் 46

## 27. "டோபா டேக் சிங்' - உருது மூலம் ஸதத் ஹஸன் மண்ட்டோ! - ஆங்கிலம் வழித் தமிழில் ராகவன் தம்பி -

இந்தியா, பாகிஸ்தான் பிரிவினையின் ஓரிரு ஆண்டுகளுக்குப் பிறகு, சிறைக் கைதிகளைப் போல, இருநாடுகளின் பைத்தியக்கார விடுதிகளில் விடப்பட்ட பைத்தியங்களையும் தங்களுக்குள் பரிமாற்றம் செய்து கொள்ள வேண்டும் என இருநாடுகளும் முடிவெடுத்தன

இந்தியா, பாகிஸ்தான் பிரிவினையின் ஓரிரு ஆண்டுகளுக்குப் பிறகு, சிறைக் கைதிகளைப் போல, இருநாடுகளின் பைத்தியக்கார விடுதிகளில் விடப்பட்ட பைத்தியங்களையும் தங்களுக்குள் பரிமாற்றம் செய்து கொள்ள வேண்டும் என இருநாடுகளும் முடிவெடுத்தன.இந்த முடிவு சரியானதா இல்லையா என்று சொல்வது சற்றுக் கடினமான காரியம்தான். ஆனால் . இந்த முடிவுக்கு வருவதற்கு, இருநாடுகளின் மிக முக்கியமான உயர் அதிகாரிகள் பல ஆலோசனைக் கூட்டங்களை ஏற்பாடு செய்து, பலமுறை கூடி மிகக் கடுமையாக ஆலோசித்தும், விவாதித்தும் எடுக்கப்பட்ட முடிவு இது என்பதை மட்டும் தெளிவாகச் சொல்ல முடியும். இந்த முக்கியமான பரிமாற்றம் செயல்படுத்தப்படும் இறுதிநாள் மற்றும் பிற முக்கியமான விபரங்களும் மிகவும் கவனத்துடன் முடிவு செய்யப்பட்டது. இந்தியாவில் வசிக்கும் உறவினர்களைக் கொண்ட முஸ்லிம் பைத்தியங்களை எவ்விதத் தொந்தரவும் இன்றி அங்கேயே வசிக்க விடுவதென்றும், மற்ற பைத்தியங்களை பரிமாற்றத்துக்காக எல்லைக்குக் கொண்டு செல்வதென்றும் இந்திய அதிகாரிகள் முடிவு செய்தனர்.

பாகிஸ்தானிலோ, இந்து மற்றும் சீக்கியர்களின் மக்கள் தொகை முழுக்கவும் ஏற்கனவே இந்தியாவுக்குக் குடிபெயர்ந்து விட்டதனால், நிலைமை சற்று மாறுபட்டு இருந்தது. முஸ்லிம் அல்லாத பைத்தியங்களை பாகிஸ்தானில் வைத்துக் கொள்ளலாமா வேண்டாமா என்பது போன்ற சிக்கல் அங்கு எழவில்லை. இரு அரசுகளின் இந்தத் தீர்மானத்துக்கு இந்தியாவில் என்னவிதமான எதிர்வினை இருந்தது என்று தெரியவில்லை. ஆனால் லாகூரின் பைத்தியக்கார விடுதிகளில் செய்தி பரவியதுமே அது மிகவும் பரபரப்பினைக் கிளப்பியது.

இத்தீர்மானம் குறித்து லாகூரின் அனைத்துப் பைத்தியக்கார விடுதிகளிலும் பரபரப்பான விவாதங்கள் சூடு கிளம்பின. லாகூரின் தீப்பொறி பறக்கும் "ஜமீன்தார்' தினசரியினை தவறாமல் வாசிக்கும் ஒரு பைத்தியத்திடம் கேட்கப்பட்டது þ ""பாகிஸ்தான்" என்பது என்ன? அதற்கு அந்தப் பைத்தியம் சொன்ன பதில் þ ""இந்தியாவில், கழுத்தை அறுக்கும் கூர்மையான சவரக்கத்திகளைத் தயாரிக்கும் ஒரு இடத்தின் பெயர்".இந்த ஆழமான கருத்து பலராலும் மிகவும் வெளிப் படையாக ஒருவகைத் திருப்தியுடன் ஏற்றுக்கொள்ளப்பட்டது. ஒரு சீக்கியப் பைத்தியம் இன்னொரு சீக்கியனைக்

கேட்டது þ சர்தார்ஜி! நாம் ஏன் இந்தியாவுக்கு அனுப்பப்படுகிறோம்? அங்கு என்ன பாஷை பேசுகிறார்கள் என்பது கூட நமக்குத் தெரியாதே!" அதற்கு அந்த இன்னொரு சீக்கியர் புன்சிரிப்புடன் சொன்னது

"எனக்கு ஹிந்துஸ்தானியர்களின் மொழி தெரியும். அந்த ராட்சதர்கள் எப்போதும் தாங்கள்தான் இப்பூவுலகின் அதிபதிகள் என்பது போல எப்போதும் ஆர்ப்பாட்டம் செய்து கொண்டிருப்பார்கள்".

ஒரு முஸ்லிம் பைத்தியம் குளித்துக் கொண்டிருக்கும்போது "பாகிஸ்தான் ஜிந்தாபாத்" என்று கொஞ்சம் உணர்ச்சிவசப்பட்டு மிகுந்த உற்சாகத்துடன் முழக்கமிட்டது. உணர்ச்சி வேகத்தில் குளியல் அறையிலேயே கால்வழுக்கி விழுந்து பலமணிநேரம் நினைவு தவறிப்போய்க் கிடந்தது. அந்த விடுதியில் இருக்கும் அனைவருமே பைத்தியங்கள் கிடையாது. சிலர் மிகவும் தெளிவாக இருந்தார்கள். தெளிவான அந்தச் சிலரில் பலர் கொலைகாரர்கள். தூக்குமேடைக் கயிற்றுக்குப் பயந்து இப்படிப் பைத்தியங்கள் போல இந்த விடுதிகளில் தங்கியிருந்தார்கள். இதற்காக இந்தக் கொலைகாரர்களின் உறவினர்கள் மேலதிகாரிகளுக்கு நல்ல லஞ்சம் கொடுத்து இவர்களை பைத்தியங்களாக அங்கு தங்கச் செய்திருந்தார்கள். இவர்களுக்கு இந்தியா ஏன் இரண்டாகப் பிரிக்கப் பட்டது என்றும் பாகிஸ்தான் என்றால் என்னவென்றும் சூசகமாகத் தெரிந்திருந்தது. ஆனால் இவர்களுக்கும் அங்கு இருந்த நிலவரத்தைப் பற்றிய முழுமையான விபரங்கள் ஏதும் தெரிந்திருக்கவில்லை என்றுதான் சொல்லவேண்டும்.செய்தித் தாள்களும் அத்தனை உதவிகரமாக இல்லை. அந்த விடுதிகளின் காவலர்களும் ஒன்றும் அறியாதவர்களாக இருந்தார்கள். அவர்களுக்கு அத்தனை படிப்பறிவும் இல்லை. அதனால் இவர்களுடைய பேச்சுக்களை ஒட்டுக் கேட்பதனால் ஒன்றும் எதையும் அதிகமாகத் தெரிந்து கொள்ள முடியாது. முகமது அலி ஜின்னாவோ காய்த்þஏþஆஜம் என்பவேரா யாரோ ஒருத்தர், தனியாக ஒரு நாடு, "பாகிஸ்தான்' என்ற பெயரில் அமைத்திருப்பதாக யாரோ பேசிக் கொண்டிருந்தார்கள்.

இந்தப் பாகிஸ்தான் எங்கிருக்கிறது என்று லாகூரின் அந்த விடுதியில் இருக்கும் எந்தப் பைத்தியத்துக்கும் எதுவும் தெரியவில்லை. அதனால் அங்குள்ள முழுப்பைத்தியங்களுக்கும் அரைப் பைத்தியங்களுக்கும் தான் பாகிஸ்தானில் இருக்கிறோமா அல்லது இந்தியாவில் இருக்கிறோமா என்று எதுவும் தெளிவாக விளங்கவில்லை. தாங்கள் இந்தியாவில் இருப்பதாக வைத்துக் கொண்டால், அந்த இழவு பாகிஸ்தான் எங்கு உள்ளது?

பாகிஸ்தானில் இருப்பதாக இருந்தால் நேற்று வரை அது இந்தியாவாக இருந்தது எப்படி? எந்தப் பைத்தியத்துக்கும் தெளிவாகவோ அரைகுறையாகவோ கூட அது விளங்கவில்லை. ஒரு பைத்தியம், இந்த இந்தியா, பாகிஸ்தான், பாகிஸ்தான்,இந்தியா என்ற சுற்றி அடிக்கும் பேச்சுக்களால் கொஞ்சம் அதிகமாகப் பாதிப்படைந்து, ஒருநாள், தரையைப் பெருக்கிக்

கொண்டிருக்கும் போது தன்னுடைய உடைகளையெல்லாம் களைந்து ஒரு உயரமான மரத்தின் உச்சியில் மிகவும் வசதியான ஒரு கிளையில் அமர்ந்து கொண்டது.

பாகிஸ்தான்þஇந்தியா பிரிவினை குறித்த அதி நுட்பமான பிரச்னை குறித்து தொடர்ச்சியாக இரண்டு மணிநேரத்துக்கும் அதிகமாக சொற்பொழிவாற்றியது. விடுதியின் காவலர்கள் அந்தப் பைத்தியத்தைக் கீழே இறங்குமாறு கேட்டுக் கொண்டார்கள். அந்தப் பைத்தியம் மரத்தை விட்டுக் கீழே இறங்காமல் இன்னும் உயரமான மற்றொரு கிளையில் ஏறி உட்கார்ந்து கொண்டது. காவலர்களின் மிரட்டல்கள் தண்டனையாக உருமாறியபோது, ""எனக்கு இந்தியாவும் வேண்டாம், பாகிஸ்தானிலும் வாழவேண்டாம். இந்த மரக்கிளையிலேயே நான் மிகவும் வசதியாக இருப்பேன்" என்று அறிவித்தது. ஒருவழியாக கீழே இறக்கப்பட்டதும் தன்னுடைய இந்து மற்றும் சீக்கியத் தோழர்களை கண்ணீர் மல்க ஆரத் தழுவிக் கொண்டது. அவர்கள் தன்னை விட்டுப் போய்த்தான் ஆகவேண்டும் என்று தனக்குத் தானே ஆறுதல் சொல்லிக் கொண்டது.

அந்த விடுதியில் எம்.எஸ்.சி பட்டம் பெற்ற ஒரு ரேடியோ இன்ஜினியர், யாருடனும் பேச்சு வார்த்தைகள் வைத்துக் கொள்ளாது. மிக நீளமான ஒரு சாலையில் நடப்பதைப் போன்ற பாவனையில் எப்போதும் விடாது நடந்து கொண்டே இருக்கும். விடுதியில் இடைவிடாது நடந்து கொண்டிருக்கும் இந்தியா பாகிஸ்தான் விவாதங்களால் பாதிப்படைந்து ஒரு நாள் தன்னுடைய உடைகளையெல்லாம் கழற்றி விடுதியின் காவலனிடம் பெரிய பந்தாகச் சுருட்டிக் கொடுத்து விட்டு விடுதியின் தோட்டத்தில் முழுநிர்வாணமாக ஒடிக் கொண்டே இருந்தது.சானியத்திலிருந்து வந்த ஒரு முஸ்லிம் பைத்தியம் அந்த விடுதியில் தங்கியிருந்தது. பைத்தியமாவதற்கு முன் அகில இந்திய முஸ்லீம் லீகின் தீவிரமான தொண்டனாக இருந்திருக்கிறது. ஒரு நாளைக்குக் குறைந்தது பதினாறு முறையாவது குளிக்கும் பழக்கத்துக்கு அடிமையாக இருந்தது. ஒரு நாள் திடீரென்று குளிப்பதையே நிறுத்திவிட்டு தன்னுடைய பெயர் ""முகமது அலி" என்றும், தான்தான் காய்த்þஏþஆஜம் என்று அழைக்கப்படும் முகமது அலி ஜின்னா என்றும் அறிவித்தது. இதைக் கேட்டதும் விடுதியின் இன்னொரு சீக்கிய பைத்தியம் தன் பெயர் சீக்கியர்களின் தலைவர் ""மாஸ்டர் தாராசிங்" என்று அறிவித்தது.

இவை போன்ற செயல்களால் அந்த விடுதியில் மிகவும் தீவிரமான மதக்கலவரங்கள் ஏற்படும் சூழல் நிலவுவதை உணர்ந்த விடுதி நிர்வாகம் இவர்கள் இருவரையும் தனித்தனி கொட்டடிகளில் அடைத்து வைத்து அந்த இருவரையும் மிகவும் ஆபத்தானவர்கள் என்று அறிவிப்பு வெளியிட்டது. காதல் தோல்வியினால் பாதிக்கப்பட்டு பைத்தியமான லாகூரைச் சேர்ந்த ஒரு வழக்கறிஞனும் அந்த விடுதியில் சேர்க்கப்பட்டிருந்தான். அவனுடைய காதலி அமிருதசரஸில் வசிக்கிறாள். அமிருதசரஸ் இந்தியாவின் ஒரு பகுதியாக அறிவிக்கப்பட்டது என்று யாரோ சொன்னதும் உடனே அவன் மிகுந்த மனச்சோர்வுக்கு ஆளானான். பைத்தியமான போதும், அவன் காதலி அமிருதசரஸில் இருக்கும் விஷயத்தை

மட்டும் அவனால் மறக்க இயலவில்லை. அன்று அவன் இந்தியாவை இரண்டாகப் பிளந்து வைத்த அனைத்து இந்து, முஸ்லிம் தலைவர்களையும் வாய்க்கு வந்தபடித் திட்டினான்.

தன் அருமைக் காதலியை இந்தியப் பெண்ணாகவும், தன்னை பாகிஸ்தானியாகவும் பிரித்து வைத்த சண்டாளர்கள் அவர்கள் என்று ஏசினான். இருநாடுகளுக்கு இடையிலான பரிமாற்றத்தைப் பற்றிய செய்தி கிடைத்ததும் விடுதியிலுள்ள தோழர்கள் அவனுக்கு வாழ்த்துத் தெரிவித்தார்கள். அவன் தான் நேசிக்கும் இந்தியாவுக்கே அனுப்பப்படுவது குறித்து தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்தார்கள். ஆனால் அமிருதசரஸில் தன்னுடைய வக்கீல் தொழில் அவ்வளவாகத் தழைக்காது என்பதால் தான் லாகூரை விட்டு வெளியேறப் போவதில்லை என்று அவன் அறிவித்தான். ஐரோப்பியர்களுக்கான வார்டுகளில் இரண்டு ஆங்கிலோ இந்திய பைத்தியங்கள் தங்கி இருந்தார்கள். அவர்களிடம், பிரிட்டிஷார் இந்தியாவுக்கு சுதந்திரம் அளித்துவிட்டு இங்கிலாந்துக்குத் திரும்பிச் செல்வதாகத் தெரிவித்ததும் மிகக் கடுமையான அதிர்ச்சிக்கு ஆளானார்கள். சுதந்திரத்துக்குப் பிறகு தங்களுக்குக் கிடைக்கப் போகும் அந்தஸ்து குறித்து அவர்கள் கவலைப்பட ஆரம்பித்தார்கள். தொடர்ச்சியாக தங்களுக்குள் இதுகுறித்து மிகுந்த கவலையுடன் கிசுகிசுவென்று ஆலோசித்துக் கொண்டார்கள். இந்த விடுதியில் சுதந்திரத்துக்குப் பின் ஐரோப்பிய வார்டு தொடர்ந்து செயல்படுமா அல்லது கலைக்கப்படுமா? தங்களுக்கான ஐரோப்பிய காலை உணவு பறிமாறப்படுமா அல்லது கேவலமான இந்திய சப்பாத்திகள் பறிமாறப்படுமா என்பது குறித்து அவர்கள் மிகவும் கவலைப்பட்டார்கள். கடந்த பதினைந்து ஆண்டுகளாக இந்த விடுதியில் அடைக்கப்பட்ட இன்னொரு சீக்கிய பைத்தியம் ஒருவன் இருந்தான். அவன் எப்போதும் பேசிக் கொண்டிருப்பான். ஆனால் அவன் பேசும் எந்த வார்த்தையும் யாருக்கும் புரியாது. தொடர்ச்சியாக ஒரே வாக்கியத்தை கடந்த பதினைந்து வருடங்களாகத் திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டிருந்தான்.

"உப்பேர் தி குர்குர் தி அனெக்ஸி தி பே த்யானா தி மூங் தி தால் ஆ ஃப் தி லால்டின்"

என்று ஒன்றும் புரியாத உளறலைக் கடந்த பதினைந்து வருடங்களாக அந்த விடுதியின் காவலர்கள் அவன் சொல்லக் கேட்டு வருகின்றனர். அவன் கடந்த பதினைந்து வருடங்களாக ஒரு நொடி கூட இமைகளை மூடித் தூங்கியதில்லை என்று அந்தக் காவலர்கள் கூறுவார்கள்.

எப்போதாவது ஒருமுறை விடுதியின் சுவற்றின் மீது சாய்ந்து கொள்வான். மீதி நேரமெல்லாம் எப்போதுமே நின்றுகொண்டுதான் இருப்பான். தொடர்ச்சியாக நின்று கொண்டே இருந்ததனால் இருகால்களும் நிரந்தரமாக வீங்கியே இருந்தன. இதனால் பாதிக்கப் பட்டதாக அவன் என்றும் காண்பித்துக் கொண்டதில்லை. இப்போதெல்லாம் அவன் இந்தியா பாகிஸ்தான் இருநாடுகளுக்கு இடையே பைத்தியங்களைப் பறிமாற்றம்

செய்து கொள்ளும் திட்டத்தைப் பற்றி விடுதியில் யாராவது பேசிக் கொள்ளும்போது தீவிரமாகக் காது கொடுத்துக் கேட்கத் துவங்கினான். அதைப் பற்றி அவனுடைய அபிப்ராயத்தை யாராவது கேட்டபோது மிகவும் பணிவுடனும் பயபக்தியுடனும் சொன்னான்.

"உப்பேர் தி குர்குர் தி அனெக்ஸி தி பே த்யானா தி மூங் தி தால் ஆ.்ப் தி கவர்ன்மெண்ட் ஆ.்ப் பாகிஸ்தான்."எப்படி இருந்தாலும் அவனைப் பொறுத்த அளவில் இப்போது பாகிஸ்தான் அரசு என்பது டோபா டேக் சிங் அரசாக பெயர் மாற்றம் அடைந்திருந்தது.

டோபா டேக் சிங் என்பது பஞ்சாப் மாநிலத்தின் ஒரு சின்னஞ்சிறிய கிராமம். அது அவனுடைய சொந்த ஊர். அவனும் இப்போதெல்லாம் இந்த டோபா டேக் சிங் எந்த நாட்டுடன் சேரும் என்று கேட்கத் துவங்கியிருந்தான். ஆனாலும் அது இந்தியாவில் இருக்கிறதா அல்லது பாகிஸ்தானிலா என்று அந்த விடுதியில் உள்ள யாரும் தெளிவாக அறிந்திருக்கவில்லை. இந்த மர்மத்தை விடுவிக்க முயற்சி செய்த சிலரும் மொத்தமாகக் குழம்பிப் போனார்கள். ஏனென்றால், பஞ்சாப் மாநிலத்தின் சியால்கோட் முன்பு இந்தியாவில் இருந்தது.

அது இப்போது பாகிஸ்தானுக்குப் போய்விட்டது. இது அவர்களை வெகுவாகக் குழப்பியது. இப்போது பாகிஸ்தானில் உள்ள லாகூர் எந்த நேரத்திலும் சரிந்து இந்தியா பக்கம் போய்விட வாய்ப்பு இருக்கலாம் என்று அந்த விடுதியில் இருந்தவர்கள் ஊகிக்கத் தொடங்கினார்கள். முழு இந்தியத் துணைக்கண்டமும் பாகிஸ்தானாக மாறவும் வாய்ப்பு இருக்கிறது என்றும் இந்தியாவும் பாகிஸ்தானும் என்றாவது ஒருநாள் உலக வரைபடத்திலிருந்தே காணாமல் போய்விட்டாலும் ஆச்சரியப் படுவதற்கு இல்லை என்றும் பேசிக்கொண்டார்கள்.அந்த சீக்கியக் கிழவனுக்கு முடியெல்லாம் கொட்டிப் போயிருந்தது. இருந்த கொஞ்சமான முடியும் அவனுடைய தாடியின் ஒரு பகுதியாக மாறிப்போனது. இது மிகவும் விநோதமாகவும் சமயத்தில் பார்ப்பவர்களுக்குக் கொஞ்சம் அச்சம் தருவதாகவும் இருந்தது. இருந்தாலும் அவன் மிகச் சாதுவாகவும் யாருடனும் சண்டை போடாதவனுமாக இருந்து வந்தான். அவன் டோபா டேக் சிங் கிராமத்தின் வளமான நிலச்சுவான்தாராக இருந்தவன். திடீரென்று பைத்தியமாகிப் போனான். முன்பெல்லாம் மாதம் ஒருமுறை அவனைப் பார்க்க அவனுடைய உறவினர்கள் சிலர் வந்து கொண்டிருந்தார்கள். பஞ்சாபில் மதக்கலவரங்கள் தீவிரம் அடைந்தபிறகு உறவினர்கள் வருவது திடீரென்று நின்றுபோனது. அவனுடைய நிஜப் பெயர் "பிஷன் சிங்".

எல்லோரும் அவனை கேலியாக "டோபா டேக் சிங்" என்று அழைத்துக் கொண்டிருந்தார்கள். அவன் தானே உருவாக்கிக் கொண்ட ஒரு அகவுலகில் வாழ்ந்து கொண்டிருந்தான். அந்த விடுதியில் அடைத்ததில் இருந்து தான் இருப்பது எந்த இடம், என்ன தேதி, என்ன நேரம் என்பதைப் பற்றிய எந்த பிரக்ஞையும் அவனுக்கு கிடையாது. ஆனால் அவனுக்குள் ஒரு

ஆறாவது அறிவை வளர்த்துக் கொண்டிருந்தான். அவனைப் பார்க்க விடுதிக்கு அவனுடைய உறவினர்கள் வருகை தரும் நாட்களில் மட்டும் அவன் மணக்க மணக்க சோப்பு தேய்த்துக்குளிப்பான். தலைக்கு எண்ணெய் வைத்துக்கொள்வான்.

தலைமுடியையும் தாடியையும் படியப் படிய சீவித் தன்னை அலங்கரித்துக் கொள்வான். உறவினர்களின் வருகையின் போது அவர்களை சந்திக்கும் வேளையில் ஒன்றும் அதிகமாகப் பேசமாட்டான். அவனுடைய வழக்கமான ""உப்பர் தெ குர்குர் தெ அனெக்ஸி தெ பே த்யானா தெ மூங் தி தால் ஆஃப் தி லால்டின்" மட்டும் தொடரும். அவனை இந்த விடுதியில் அடைக்கும்போது ஒரு சிறிய அழகான பெண்குழந்தையை கிராமத்தில் விட்டு வந்திருந்தான். அப்பெண் குழந்தை எப்போதாவது உறவினர்களுடன் இவனைப் பார்க்க வரும். இப்போது அப்பெண்ணுக்கு பதினைந்து வயது. இப்போதும் எப்போதாவது ஒருமுறை வருவாள். வரும்போதெல்லாம் அவன் முன் நெடுநேரம் அமர்ந்து கொண்டு கன்னங்களில் கண்ணீர் வடிய மௌனமான விசும்பல்களுடன் அவனையே உற்றுப் பார்த்துக் கொண்டிருப்பாள். அவனுடைய விந்தையான உலகில் அவன் காணும் பல முகங்களில் தன் மகளின் முகமும் ஒன்றாக அவனுக்கு இருந்தது. இந்த இந்தியாþபாகிஸ்தான் பிரிவினை மற்றும் இருநாடுகளுக்கிடையிலான பைத்தியங்களின் பரிமாற்றம் குறித்த பேச்சுக்கள் ஆரம்பித்ததிலிருந்து "டோபா டேக் சிங்' இப்போது எங்கிருக்கிறது என்று விடுதியில் எதிரில் வந்தவர்களிடமெல்லாம் கேட்க ஆரம்பித்தான். யாரிடமிருந்தும் அவனுக்குத் திருப்தியான பதில் கிடைக்கவில்லை. ஏனென்றால் யாருக்கும் அது குறித்து ஒன்றும் தெரியவில்லை. அவனைப் பார்க்க வரும் உறவினர்களின் வருகையும் திடீரென நின்று போனது. நாளடைவில் அவனுடைய பதட்டம் அதிகரித்து வந்தது. அதற்கும் மேலாக அது குறித்து, அவனுடைய ஆர்வம் பிரம்மாண்டமாக வளர்ந்து வந்தது. உறவினர்கள் வருகை நாளன்று அவனை எச்சரிக்கை செய்யும் அவனுடைய ஆறாம் அறிவு சார்ந்த எச்சரிக்கை உணர்வும் மெல்ல மெல்ல பலமிழக்கத் துவங்கியது. குடும்பத்தின் பிரிவு அவனை மெதுவாக வாட்டத் துவங்கியது. வருகைகளின் போது உறவினர்கள் அவனுக்காகக் கொண்டு வந்த பரிசுப் பொருட்களையும், அவர்கள் பேச்சில் கனிந்திருந்த பரிவையும் நினைத்து கொஞ்ச நாட்களாக ஏங்கத் துவங்கியிருந்தான்.அவர்களையாவது கேட்டிருக்கலாம். "டோபா டேக் சிங்' இப்போது இருப்பது இந்தியாவிலா அல்லது பாகிஸ்தானிலா என்று கேட்டிருக்கலாம். இந்த விடுதிக்குக் கொண்டு வருவதற்கு முன்பிருந்த டோபா டேக் சிங் கிராமத்திலிருந்து வருபவர்கள் தான் அவர்கள் என்ற ஒரு ஊகம் அவனுக்குள் மெல்ல உருவாகத் தொடங்கி இருந்தது. அந்த விடுதியில் இருந்த ஒரு பைத்தியம் தான் ஒரு கடவுள் என்று அறிவித்தது. பிஷன் சிங் அவனிடம் ஒருநாள் சென்று அது கடவுளாக இருக்கும் பட்சத்தில் அவனுடைய சொந்த ஊரான டோபா டேக் சிங் தற்போது இருப்பது இந்தியாவிலா அல்லது பாகிஸ்தானிலா என்று மிகவும் பவ்யமாகக் கேட்டான். அதற்கு அந்தப் பைத்தியம்,

"உன் டோபா டேக் சிங் இப்போது இந்தியாவிலும் இல்லை þ பாகிஸ்தானிலும் இல்லை. ஏனென்றால் அதைப்பற்றிய ஆணையை இன்னும் நான் பிறப்பிக்க வில்லை என்று கொக்கரித்தது.

அவனுடைய பிரச்னைக்கு உடனடித் தீர்வாக, தேவையான ஆணையை உடனே பிறப்பிக்குமாறு "கடவுளை' மிகவும் பவ்யத்துடன் வேண்டினான் பிஷன் சிங். ஆனால் அவனுக்கு ஏமாற்றம்தான் மிஞ்சியது. ஏனென்றால் அந்தக் "கடவுள்' கவனம் செலுத்துவதற்கு வேறு பல முக்கியமான பணிகள் இருந்ததால், டோபா டேக் சிங் பற்றிக் கவலைப்பட அதற்கு நேரம் கிடைக்கவில்லை. இறுதியில் பிஷன் சிங் அந்தக் கடவுளிடம் மிகவும் கோபத்துடன் ""உப்பர் தெ குர்குர் தெ மூங் தெ தால் ஆ்ப் குருஜி தா கால்ஸ ô அண்ட் குருஜி கி ்பதேஹ்... ஜோ போலே ú ஸ ô நிஹால்... ஸத் ஸ்ரீ அகால்..." þ அவன் சொல்ல வந்தது என்னவென்றால், ""என்னுடைய பிரார்த்தனைகளுக்கு நீ பதில் சொல்ல வில்லை. ஏனென்றால் நீ ஒரு முஸ்லிம் கடவுள். நீ ஒரு சீக்கியக் கடவுளாக இருந்திருந்தால் எனக்கு சரியான விடை கிடைத்திருக்கும்".

இருநாடுகளுக்கிடையயோன பைத்தியங்களைப் பரிமாற்றம் செய்யப் படுவதற்கு ஒரு நாளைக்கு முன் டோபா டேக் சிங் கிராமத்தை சேர்ந்த முஸ்லீம் நண்பர்களில் ஒருவன் இந்தப் பதினைந்து வருடங்களில் முதல் முறையாக பிஷன் சிங்கை சந்திக்க விடுதிக்கு வந்திருந்தான். பிஷன் சிங் அவனைப் பார்த்துவிட்டு சடாரென்று முகத்தைத் திருப்பிக் கொண்டான். விடுதியின் காவலன் அவனைக் கூப்பிட்டு

"வந்திருப்பது உன்னுடைய சிறுவயதுத் தோழன் ்பஸ÷ல் உத்தீன். அவ்வளவு தூரத்திலிருந்து உன்னைப் பார்க்க வந்திருக்கிறான். அவனைப் பார்த்து இப்படி முகம் திருப்பிக் கொண்டால் எப்படி?"

என்று உரிமையுடன் கடிந்து கொண்டான். பிஷன் சிங், மெல்ல ்பஸ÷ல் உத்தீன் பக்கமாகத் திரும்பி எதையோ புரியாதவண்ணம் முணுமுணுக்க ஆரம்பித்தான். ்பஸ÷ல் உத்தீன் அவனிடம், ""உனக்கு இந்த செய்தியைக் கொண்டு வரவேண்டும் என்று ரொம்ப நாட்களாக எண்ணிக் கொண்டு அதற்கான சந்தர்ப்பம் வாய்க்காமலே போனது. உன்னுடைய குடும்பத்தினர் எல்லோரும் நலமாகவும் பாதுகாப்புடனும் இருக்கிறார்கள். அவர்கள் எவ்வித ஆபத்தும் இன்றி இந்தியா திரும்பி விட்டார்கள். ஒரு நண்பனாக உனக்கு என்னால் என்ன செய்ய முடியுமோ அதைச் செய்து விட்டேன். உன்னுடைய மகள் ரூப் கவுர் மட்டும்... என்று தயங்கி, ரூப் கவுர் கூட இந்தியாவில் மிகவும் பாதுகாப்பாகத்தான் இருக்கிறாள்" என்று அவசரமாக முடித்தான். பிஷன் சிங் அமைதியாக இருந்தான். ்பஸ÷ல் உத்தீன் தொடர்ந்தான்.

"நீ நலமாக இருப்பதை உறுதிப்படுத்திக் கொள்ளுமாறு உன் குடும்பத்தினர் என்னைக் கேட்டுக் கொண்டார்கள். மிக விரைவில் உன்னையும் இந்தியாவுக்கு அனுப்பி விடுவார்கள். சகோதரன் பல்பீர் சிங், சகோதரன் வதாவா சிங் மற்றும் சகோதரி அம்ரித் கவுருக்கும் இந்த ஏழை சகோதரனை நீ நினைவு படுத்தவேண்டும் என்பதைத் தவிர இப்போதைக்கு உனக்குச் சொல்ல எனக்கு ஒன்றும் இல்லை. அல்லாஹ்வின் அருளால் ஃபஸ÷ல் உத்தீன் நலமாக இருக்கிறான் என்று சகோதரன் பல்பீர் சிங்கிடம் போய் நீ சொல்லவேண்டும். அவர்கள் விட்டுப்போன பழுப்பு நிற எருமைகள் இரண்டும் நன்றாக இருக்கினறன. அவையிரண்டும் கன்றுகளை ஈன்றிருக்கின்றன. துரதிருஷ்டவசமாக அவற்றில் ஒன்று, ஆறு நாட்களுக்குப் பின் இறந்து போனது. அவர்களை நான் அடிக்கடி நினைத்துக் கொள்கிறேன் என்று அவர்களிடம் சொல். இந்த ஏழை சகோதரனின் உதவி எதற்காவது தேவைப்பட்டால் உடனே கடிதம் எழுதச் சொல்" என்றான்.

"இதோ உனக்காகக் கொஞ்சம் அரிசியும் கொண்டு வந்திருக்கிறேன்" என்றான். பிஷன் சிங் ஒன்றும் பேசாது ஃபஸ÷ல் உத்தீன் கொண்டு வந்த சிறிய அரிசி மூட்டையை வாங்கி அங்கு நின்றிருந்த காவலனிடம் கொடுத்தான்.

"எல்லாம் சரி இப்போது டோபா டேக் சிங் எங்கே இருக்கிறது?"

என்று கேட்டான்.

"டோபா டேக் சிங்கா? ஏன்? அது அங்கேயேதான் அது எப்போதும் இருந்த இடத்திலேயேதான் இப்போதும் இருக்கிறது!""இந்தியாவிலா? பாகிஸ்தானிலா?"

இந்தியாவில்... இல்லை... பாகிஸ்தானில்...பிஷன் சிங்,

மறுவார்த்தை எதுவும் பேசாது முகத்தை உடனே திருப்பிக் கொண்டு

""உப்பேர் தெ குர்குர் தெ அனெக்ஸி தெ பி தெ மூங் தெ தால் ஆஃப் தி பாகிஸ்தான் அண்ட் ஹிந்துஸ்தான் துர் ஃபிட்டே"

என்று முணுமுணுத்துக் கொண்டே வேகமாக விடுதிக்குள் ஓடிப்போனான்.அதே நேரத்தில் ஏற்கனவே தீர்மானித்தபடி இருநாடுகளுக்கு இடையிலான பைத்தியங்களைப் பரிமாறிக் கொள்ளும் ஏற்பாடுகளும் நாளுக்கு நாள் தீவிரமடைந்து வந்தன. இரு நாடுகளின் பைத்தியக்கார விடுதிகளில் அடைக்கப் பட்டிருக்கும் பைத்தியங்களின் பெயர்ப் பட்டியலும், பரிமாற்றத்துக்கான தேதியும் மற்ற விபரங்களையும் இருநாடுகளும் பரஸ்பரம் பரிமாறிக் கொண்டன. ஒரு கடுமையான குளிர்காலத்து மாலையில், இந்து

பைத்தியங்களையும் மூத்த அரசு அதிகாரிகளையும் நிரப்பிக் கொண்டு பேருந்துகள், ஆயுதங்கள் ஏந்திய போலீஸ் காவலுடன், லாகூர் பைத்தியக்கார விடுதியை விட்டு, இந்தியாþ பாகிஸ்தானைப் பிரிக்கும் எல்லைக்கோடான "வாகா" எல்லையை நோக்கிக் கிளம்பின.

இருநாடுகளின் தரப்பிலிருந்தும் மூத்த அதிகாரிகள் பரிமாற்ற ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டனர். இரு தரப்பிலிருந்தும் அந்தப் பைத்தியங்களை பேருந்து களிலிருந்து இறக்கி, மூத்த அதிகாரிகளிடம் ஒப்படைக்கும் பணி சாதாரணமானதாக இல்லை. அதிகாரிகளுக்கு உயிர் போய் உயிர் வந்தது. சில பைத்தியங்கள் பேருந்தை விட்டு இறங்க மாட்டேன் என அடம் பிடித்தன. மிகவும் பிரயத்தனப் பட்டு இறக்கப்பட்ட பைத்தியங்கள் திசைக்கு ஒன்றாக பிய்த்துக் கொண்டு ஓட்டம் பிடித்தன. சிலர் உடைகளைக் கிழித்து எறிந்து முழு நிர்வாணமாக நின்றனர்.

அவர்களுடைய நிர்வாணத்தை மூட முயன்ற அதிகாரிகளின் முயற்சிகள் பலிக்கவில்லை. சில பைத்தியங்கள் அந்த அதிகாரிகளின் உடைகளையும் கிழித்தெறிந்து அவர்களையும் நிர்வாணப் படுத்தி நிறுத்தினர். சிலர் உரக்கப் பாடிக்கொண்டும் சிலர் மிகவும் உரக்க, மிகவும் கெட்ட கெட்ட வார்த்தைகளில் எல்லோரையும் திட்டிக் கொண்டும் இருந்தனர். சிலர் உரக்க அழுது கொண்டிருந்தனர். மற்ற பைத்தியங்களுடனும் அரசு அதிகாரிகளுடனும் சண்டை போட்டுக் கொண்டிருந்தனர். சுருங்கச் சொன்னால், அங்கு உச்சகட்ட குழப்பம் நிலவியது. பரிமாற்றம் செய்ய அழைத்து வரப்பட்டிருந்த பைத்தியங்களில் பெண்களும் இருந்தனர். அவர்களும் உச்சக்குரலில் கூச்சலிட்டுக் கொண்டிருந்தனர். பற்கள் கிட்டித்துப் போகும் அளவுக்கு இருந்த வெடவெடக்கும் குளிரிலும் யாரும் கூச்சல் போடுவதை நிறுத்த வில்லை. பெரும்பான்மையான பைத்தியங்கள் அந்தப் பரிமாற்றத்தினை மிகவும் கடுமையாக எதிர்த்தனர். இருந்த விடுதிகளிலிருந்து தங்களை வலுக்கட்டாயமாக வெளியேற்றி எதுவும் புரியாத ஒரு புதிய இடத்தில் தங்களை அடைப்பதை அநேகமாக எல்லாப் பைத்தியங்களும் கடுமையாக எதிர்த்தனர். அங்கங்கு கோஷங்களும் எழத் தொடங்கின. சில பைத்தியங்கள், பாகிஸ்தான் ஒழிக எனக் கூச்சலிட்டன. சிலர் இந்தியா ஒழிக எனக் கோஷம் போட்டனர். இந்தக் கோஷங்களைத் தொடர்ந்து பைத்தியங்களுக்குள் அங்கங்கு மிகவும் கடுமையான சண்டைகளும் கிளம்பின. பிஷன் சிங் பேருந்திலிருந்து இறக்கிவிடப்பட்டு அதிகாரிகளிடம் அழைத்து வரப்பட்டான். பேரேட்டில் அவனைக் கைெயழுத்திடுமாறு அதிகாரிகள் கேட்டுக் கொண்டதற்கு அவன் அவர்களிடம் கேட்ட ஒரே கேள்விþ ""டோபா டேக் சிங் எங்கே இருக்கிறது? இந்தியாவிலா? பாகிஸ்தானிலா? அந்த அதிகாரி மிகவும் அருவெருப்பான வகையில் உரக்க சிரித்து ""பாகிஸ்தானில்" என்றான். பிஷன் சிங் தன்னை விடுவித்துக் கொண்டு மிக வேகமாக ஓட்டம் பிடிக்க ஆரம்பித்தான். பாகிஸ்தான் போலீசார் அவனை விரட்டிப் பிடித்து குண்டுக்கட்டாகத் தூக்கி இந்தியாவின் எல்லைக் கோட்டுக்கு அப்பால் தூக்கி எறிய முயற்சித்தனர். பிஷன் சிங்

அசைந்து கொடுக்க வில்லை. ""இதுதான் டோபா டேக் சிங்" என்று கடுமையான பிடிவாதத்துடன் நகர மறுத்துப் போராடினான்.

பிறகு ""உப்பேர் தெ குர்குர் தெ அனெக்ஸி தெ பி தியானா மூங் தெ தால் ஆ்ஃப் டோபா டேக் சிங் அண்ட் பாகிஸ்தான்" என்று உரக்க அறிவிப்பது போல கூச்சலிட ஆரம்பித்தான். டோபா டேக் சிங் ஏற்கனவே இந்தியாவுக்குப் போய்விட்டது என்று அவனுக்குப் புரிய வைக்க அவர்கள் எடுத்த கடுமையான முயற்சிகள் அனைத்தும் பயனில்லாமல் போனது.

அந்த இடத்தை விட்டு அவனை நகர்த்த முடியவில்லை. இருநாட்டுக்கும் பொதுவான எல்லைக் கோட்டில் தனது வீங்கிய கால்களுடன், பிரம்மாண்டமான ராட்சத சிலையைப் போல அவன் நின்று கொண்டிருந்தான். அப்பாவியான கிழவனாக இருந்ததால் அவனை இந்தியாவின் பக்கம் நெட்டித் தள்ள அந்த அதிகாரிகள் முயற்சிக்க வில்லை. பைத்தியங்களின் பரிமாற்றம் தொடர்ந்து கொண்டிருந்தது. அவன் நின்று கொண்டிருந்த இடத்திலேயே நின்று கொண்டிருக்க அவனை அனுமதித்தனர். இரவு கரைந்து கொண்டிருந்தது.

சூரிய உதயத்துக்குச் சற்று முன், கடந்த பதினைந்து வருடங்களாக எப்போதும் நின்று கொண்டேயிருந்த அந்த மனிதன் பெரும் கூச்சலுடன் அலறினான். அதிகாரிகள் அவனை நோக்கி விரைந்தபோது தரையில் தலைகுப்புற சரிந்து விழுந்தான். தரையில் முகம் புதைந்திருக்க அசைவின்றிக் கிடந்தான். அங்கு, மின்சாரம் பாய்ச்சிய கம்பிகளால் அமைக்கப்பட்ட பாதுகாப்பு வேலிக்கு அந்தப்பக்கம் இந்தியாவுக்கு அனுப்பப் பட்ட இந்தியாவின் பைத்தியங்கள் நின்று கொண்டிருந்தன. வலுவான மின்சாரம் பாய்ச்சிய கம்பிகளால் பாதுகாக்கப்பட்ட வேலிகளுக்கு வேறுபுறத்தில் பாகிஸ்தானுக்கு அனுப்பப்பட்ட பாகிஸ்தான் பைத்தியங்களும் நின்று கொண்டிருந்தன. தலை இந்தியாவை நோக்கியும் பாதங்கள் பாகிஸ்தான் அமைந்த திசையிலும் அசையாது கிடந்தான் பிஷன் சிங். மிக வலுவாக அமைக்கப்பட்ட இரண்டு பாதுகாப்பு வேலிகளுக்கு இடையில் அவன் முகம் புதைத்துச் சரிந்திருந்த சிறு துண்டு நிலத்துக்கு எந்தப் பெயரும் இல்லை. அது,

"டோபா டேக் சிங்".

பதிவுகள் ஜூன் 2008 இதழ் 102

## 28. . போர்நாய்! - உருது மூலம் ஸதத் ஹஸன் மண்ட்டோ! - ஆங்கிலம் வழித் தமிழில் ராகவன் தம்பி

பல வாரங்களாக வீரர்கள் பதுங்கு குழிகளில் தயார் நிலையில் காத்திருந்தார்கள். ஒன்றும் நடக்கவில்லை. எந்த சண்டையும் நிகழவில்லை. யாரும் யாரையும் சுட்டு வீழ்த்தவில்லை. ஏதோ சடங்குக்காக செய்வது போல, சில ரவுண்டுகள் இருபுறமும் தினமும் பரஸ்பரம் வானத்தை நோக்கிச் சுட்டுக் காண்பித்துக் கொண்டார்கள்.

காட்டுப் பூக்களின் அடர்ந்த வாடையுடன் காற்று சற்றுக் கனமாக இருந்தது. அடர்ந்த புதர்களிலும் பதுங்கு குழிகளிலும் ஒளிந்து காத்துக் கொண்டிருந்த வீரர்களைப் பற்றி அந்தக் காற்று எதுவும் கவலைப்படவில்லை. எப்போதும் போலப் பறவைகள் கானம் பாடிக் கொண்டிருந்தன. மலர்கள் மலர்ந்து மணம் வீசிக் கொண்டிருந்தன. வண்டுகள் ஒருவிதமான சோம்பேறித் தனத்துடன் ரீங்கரித்துக் கொண்டு அங்குமிங்கும் பறந்து கொண்டிருந்தன.

எப்போதாவது வெடிக்கும் துப்பாக்கி சத்தம் கேட்டவுடன் இசைக் கலைஞனின் வாசிப்பில் சடாரென்று ஏதோ அபஸ்வரம் தட்டியது போல பறவைகள் ஒருவிதமாகத் திடுக்கிட்டுக் கிளம்பி பிறகு அமைதியாகத் தங்கள் இடங்களில் அமர்ந்தன. அது செப்டம்பர் மாதம் முடிவடையும் நேரம். ஏதோ கோடையும் குளிர்காலமும் சமாதான உடன்படிக்கை செய்து கொண்டதைப் போல சூடாகவும் இல்லாமல் குளிரும் அடிக்காமல் ஒருவிதமான மந்த நிலையில் இருந்தது. நீலவானில், பருத்திக் குவியலைப்போன்ற மேகங்கள், தொங்கு பாலங்களைப் போல அங்கங்கு சோம்பேறித்தனத்துடன் மிதந்து கொண்டிருந்தன.

எந்த முடிவுக்கும் வராது, எதுவும் நடக்காது போய்க்கொண்டிருந்த அந்த முடிவிலாப் போர் தந்த அயர்ச்சியில் இரு தரப்பிலும் வீரர்கள் களைத்துப் போகத் துவங்கினார்கள். அவர்கள் பதுங்கியிருந்த இரு குன்றுகளும் ஒரே உயரத்திலும் ஒன்றையொன்று நேர் எதிர்ப்பார்வையில் நிமிர்ந்து பார்த்து நின்றிருந்தன. கீழே, பள்ளத்தாக்கில், ஒரு தெளிய நீரோடை நெளிந்து செல்லும் பாம்பினைப் போல, வளைந்து சுழித்துச் சென்றது.

இந்தச் சண்டையில் வான் படையை ஈடுபடுத்தவில்லை. இருபுறமும் மிகவும் கனரகமான ஆயுதங்களோ பீரங்கிகளோ இல்லை. இரவில் அவர்கள் பிரம்மாண்டமான தீயை மூட்டுவார்கள். இருபுறமும் சிப்பாய்கள் உரத்துப் பேசிக்கொள்வது இரவுகளில் இருபுறமும் குன்றுகளில் எதிரொலிக்கும்.

கடைசி வட்டம் தேனீரை அப்போதுதான் குடித்து முடித்திருந்தார்கள். தீ தணிந்திருந்தது. வானம் தெளிவாக இருந்தது. காற்றில் சிலிர்ப்பு கூடியிருந்தது. காற்றில் கதிர்ச் சருகுகள் கருகும் வாடை கூடியிருந்தது. இரவுப் பாதுகாப்பில் இருந்த ஹர்நாம்

சிங்கைத் தவிர மற்ற வீரர்கள் எல்லோரும் ஏற்கனவே தூங்கிப் போயிருந்தார்கள். இரவு இரண்டு மணிக்கு அடுத்த ஆளாகப் பணியை ஏற்றுக் கொள்வதற்காக கண்டா சிங்கைத் தட்டி எழுப்பி விட்டு நெட்டி முறித்துவிட்டுக் கால் நீட்டிப் படுத்துக் கொண்டான் ஹர்நாம் சிங். ஆனால் தூரத்தில் தென்படும் நட்சத்திரங்களைப் போல, தூக்கம் அவனை விட்டு வெகுதொலைவில் விலகியிருந்தது. உறங்குவதற்கு முயற்சித்தான். ஒரு பஞ்சாபி நாடோடிப் பாடலை மெல்லிய குரலில் பாடத் துவங்கினான்.

எனக்கொரு ஜோடி செருப்பு வாங்குஎன் அன்பே நட்சத்திரங்கள் பதித்த ஒருஜோடி செருப்பைஎனக்காக வாங்கு என் அன்பே...உன் எருமையை விற்க வேண்டுமென்றாலும்எருமையை விற்றுநட்சத்திரங்கள் பதித்த ஒருஜோடி செருப்பைஎனக்காக வாங்கு என் அன்பேஅந்தப் பாட்டு இதமாக இருந்தது அவனுக்கு. அவனை சற்று உணர்ச்சி வசப்படவும் வைத்தது. எல்லோரையும் ஒவ்வொருவராக எழுப்பினான். எல்லோருக்கும் இளையவனான பன்டா சிங், ஹீர் ராஞ்சாவின் காதல் பாடலைப் பாடத் துவங்கினான். அது பஞ்சாபி மொழியின் அமரத்துவம் பெற்ற, சோகமும் காதலும் நிறைந்த அமரக் காவியம். அடர்ந்த சோகம் அனைவரையும் கவ்விக் கொண்டது. அந்தப் பாடல் சுமந்த சோகத்தின் பரப்பை அந்தக் குன்றும் உள்வாங்கி அமைதியாக நின்று கொண்டு
இருந்தது போல இருந்தது.

அங்கு கவ்வியிருந்த சோகமானதொரு மனநிலையை ஒரு நாயின் குரைப்பு சிதற வைத்தது.

"இந்த நாய்க்குப் பொறந்தது எங்கிருந்து முளைச்சது"? என்று ஜமேதார் ஹர்நாம் சிங் உறுமினான்.

நாய் மீண்டும் குரைத்தது. அந்தக் குரைப்பு வெகு அருகிலிருந்து கேட்பது போல இருந்தது. புதர்கள் சலசலக்கும் ஓசை கேட்டது. பன்டா சிங் புதர்களுக்குள் தேடிக்கொண்டு சென்றான். சிறிது நேரத் தேடலுக்குப் பின் கையில் ஒரு நாய்க்குட்டியோடு வெளிவந்தான். அது மிகவும் பரபரப்பாக வாலை ஆட்டிக்கொண்டு இருந்தது.

"இவனை நான் அந்தப் புதருக்குப் பின்னால் கண்டுபிடிச்சேன். சார் தன்னோட பேரு ஜ÷ன்ஜ÷ன் னு சொல்றார்." எல்லோரும் குபீரென்று சிரித்தார்கள்.

நாய் ஹர்நாம் சிங்கை நோக்கி வாலை ஆட்டிக் கொண்டு சென்றது. அவன் தன்னுடைய பையிலிருந்து ஒரு பிஸ்கெட்டை எடுத்து அதனை நோக்கி வீசினான். நாய் முகர்ந்து பார்த்து உண்ணப் போகும் நேரம், குனிந்து வெடுக்கென்று பிஸ்கெட்டைப் பறித்துக் கொண்டான்.""இரு... நீ பாகிஸ்தானி நாயாக இருந்தாலும் இருக்கலாம்"

எல்லோரும் சிரித்தார்கள். பன்டா சிங் நாயைத் தடவிக் கொடுத்து ஹர்நாம் சிங்கிடம், ""ஜமேதார் சாஹிப், ஜ÷ன் ஜ÷ன் ஒரு இந்திய நாய். எங்கே உன் அடையாளத்தை நிரூபி?" என்று நாய்க்கு ஆணையிட்டான். நாய் அவனை நோக்கி வாலை ஆட்டிக் கொண்டு நின்றிருந்தது.

""பாரு. இப்படி வாலை ஆட்டறதெல்லாம் அடையாளம் ஆகாது. எல்லா நாயாலேயும் வாலாட்ட முடியும்" என்றான். நாயின் வாலுடன் விளையாடியபடியே பாவம். இது ஒரு ஏழை அகதியாக இருக்கலாம் என்றான் பன்டா சிங்.ஹர்நாம் சிங் தன் பையிலிருந்து இன்னொரு பிஸ்கட்டை எடுத்துத் தரையில் வீசினான். எல்லா பாகிஸ்தானிகளையும், நாய்கள் உட்பட எல்லோரையும் சுடப்போகிறேன்."ஒரு சிப்பாய் உரக்கக் கூவினான், ""இந்தியா ஜிந்தாபாத்."

பிஸ்கட்டில் வாய் வைக்கப்போன நாய் மிரண்டு போய் பின் வாங்கியது. வாலைத் தொடைக்குள் சொருகிக்கொண்டு மருண்ட பார்வையுடன் அதே இடத்தில் உறைந்து நின்றது.

""உன்னோட சொந்த நாட்டுக் காரங்ககிட்டேயே பயப்படுவியா? இந்தா... ஜ÷ன் ஜ÷ன் இன்னொரு பிஸ்கெட் சாப்பிடு."இருட்டறையில் யாரோ சுவிட்சைத் தட்டி விட்டது போல, பளீரெனக் காலைப்பொழுது புலர்ந்தது. குன்றுகளிலும் தித்வால் பள்ளத்தாக்கிலும் வெளிச்சம் படர்ந்தது. அந்தப் பள்ளத்தாக்கு அப்படித்தான் அழைக்கப்பட்டது.மாதக்கணக்கில் போர் தொடர்ந்து கொண்டிருந்தது. ஆனால் இருதரப்பிலும் யார் வெற்றி பெற்றார்கள் என்பதைத் தீர்மானிக்க முடியாமல் இருந்தது.

பைனாகுலர் வழியாக அந்தப் பகுதியை நோட்டம் விட்டுக்கொண்டிருந்தான் ஹர்நாம் சிங். எதிர்த் தரப்பில் புகை எழும்புவதை அவனால் பார்க்க முடிந்தது. இவர்களைப் போலவே எதிரிகளும் காலை உணவைத் தயாரித்துக் கொண்டிருக்கிறார்கள். பாகிஸ்தான் ராணுவத்தின் ஹிம்மத் கான் தன்னுடைய மிகப்பெரிய மீசையைத் திருகிக் கொண்டே தித்வால் பகுதியின் வரைபடத்தை ஆராய்ந்து கொண்டிருந்தான். அவனுக்கு அருகில் வயர்லெஸ் ஆபரேட்டர் உட்கார்ந்து தங்கள் பிளாட்டூன் கமாண்டரிடம் ஆணைகளைப் பெற்றுக் கொள்ள முயற்சித்துக் கொண்டிருந்தான். சில அடிகள் தள்ளி, தனக்கு முன்னால் துப்பாக்கியை செங்குத்தாக நிறுத்தி வைத்துக் கொண்டு பாறையில் சாய்ந்து உட்கார்ந்திருந்தான் சிப்பாய் பஷீர். அவன் ஒரு பாடலை முணுமுணுத்துக் கொண்டிருந்தான்.நேற்றிரவை எங்கே கழித்தாய்?என் அன்பே, என் நிலவேநேற்றிரவை எங்கே நீ கழித்தாய்?தனக்குத் தானே ரசித்து மிகவும் உரத்துப் பாடத் துவங்கினான். வரிகளை மீண்டும் மீண்டும் ரசித்துப் பாடினான்.

சுபேதார் ஹிம்மத் கான் உரக்கக் கூச்சலிடுவது சற்று தூரத்தில் கேட்டது.""நேத்து ராத்திரி எங்கே பொழுதைக் கழிச்சே"?ஆனால் இது பஷீரை நோக்கிக் கேட்கப்பட்ட கேள்வியல்ல. ஒரு நாய்க்குட்டியைப் பார்த்து அப்படி சத்தம் போட்டுக்கொண்டிருந்தான் அவன். அந்த நாய்க்குட்டி சிலநாட்களுக்கு முன்பு எங்கிருந்தோ வந்து இவர்களுடன் ஒண்டிக்கொண்டது. பிறகு ஒருநாள் திடீரென்று எங்கோ காணாமல் போய் மீண்டும் இப்போது செல்லாக்காசு போல எங்கிருந்தோ திரும்பி வந்திருக்கிறது. பஷீர் புன்னகையுடன் நாயைப் பார்த்துப் பாடினான் -நேற்றிரவை எங்கே கழித்தாய்?என் அன்பே, என் நிலவேநேற்றிரவை எங்கே நீ கழித்தாய்?நாய் பதில் ஒன்றும் சொல்லாது வெகுவேகமாக வாலை ஆட்டிக்கொண்டிருந்தது. ஹிம்மத் கான் நாயை நோக்கி ஒரு கல்லை விட்டெறிந்தான். ""முட்டாள் நாயே"... வெறுமனே வாலாட்டிக்கிட்டு இருக்கத்தான் உன்னால முடியும்"".""அது கழுத்துலே என்ன மாட்டியிருக்கு?" பஷீர் கேட்டான். ஒரு சிப்பாய் நாயைப் பிடித்து அதன் கழுத்தில் கட்டியிருந்த பட்டையைக் கழற்றினான். பட்டையில் ஒரு அட்டைத் துண்டு ஒன்று கட்டியிருந்தது. ""அதுலே என்ன எழுதியிருக்கு?" அவ்வளவாகப் படிக்கத் தெரியாத சிப்பாய் ஒருவன் ஆர்வத்துடன் கேட்டான்.பஷீர் ஒரு எட்டு முன்னே சென்று அதில் எழுதியிருப்பதைப் படித்துக் காட்ட முயற்சி செய்தான். ""அதுலே... எழுதியிருக்கு... ஜ÷ன்ஜ÷ன்."சுபேதார் ஹிம்மத் கான் அவனுடைய மீசையை ஒருமுறை திருகிவிட்டு ""இது ஏதாவது ஒரு சங்கேதமாக இருக்கணும். உனக்கு ஏதாவது புரியுதா பஷீர்?" என்று கேட்டான்.""ஆமாம் சார். அது சொல்லுது... ""நான் ஒரு இந்திய நாய்."""அப்படின்னா என்ன அர்த்தம்?" சுபேதார் கேட்டான்.""ஒருவேளை ஏதாவது போர் ரகசியமாக இருக்கலாம்" குசுகுசுவென்று சொன்னான் பஷீர்.""இதுலே ஏதாவது ரகசியம்னு இருந்தா... அந்த வார்த்தை ஜ÷ன்ஜ÷ன் லே தான் ஏதாவது ரகசியம் ஒளிஞ்சிருக்கணும்."ஒரு சிப்பாய் குருட்டாம்போக்காக அடித்துப் பார்த்தான்.மிகுந்த கடமையுணர்வுடன், முகத்தை மிகவும் தீவிரமாக வைத்துக்கொண்டு பஷீர் மீண்டும் உரக்கப் படித்தான். ""ஜ÷ன்ஜ÷ன்" - இது ஒரு இந்திய நாய்.சுபேதார் ஹிம்மத் கான் உடனே வயர்லெஸ் சாதனத்தை எடுத்துத் தன்னுடைய பிளாட்டூன் கமாண்டரைத் தொடர்பு கொண்டு பரபரப்புடன் பேசத்துவங்கினான். ஒரு நாய் தங்கள் பதுங்கிடத்தில் திடீரெனப் பிரவேசித்ததையும் அதே போல இங்கிருந்து சொல்லாமல் கொள்ளாமல் இரவெல்லாம் எங்கோ சென்று மீண்டும் சொல்லாமல் கொள்ளாமல் திரும்பி வந்ததைப் பற்றியும் சொல்லத் துவங்கினான்.""என்ன சொல்ல வர்றே?" பிளாட்டூன் கமாண்டர் எரிச்சலுடன் கேட்டான்.சுபேதார் ஹிம்மத் கான் மீண்டும் வரைபடத்தை மிகவும் கவனமாகப் படிக்கத் துவங்கினான். பையிலிருந்து ஒரு சிகரெட் பாக்கெட்டை எடுத்து அதில் ஒன்றை எடுத்து பஷீரிடம் கொடுத்தான்.இப்போ இதுலே அந்த சீக்கியர்களோட பாஷையான குர்முகியிலே எழுது""என்ன எழுதட்டும் சார்" பஷீருக்கு ஒருவகையான உத்வேகம் பிறந்தது. ஷ÷ன்ஷ÷ன்... ஆமாம்.. அதுதான் சரி. இந்தியாவின் ஜ÷ன்ஜ÷ன் னுக்கு இந்த ஷ÷ன் ஷ÷ன் தான் சரியான பதிலடியாக இருக்க முடியும்.""பிரமாதம்" ஆமோதிப்பதைப்போல சொன்னான் சுபேதார் ஹிம்மத் கான். ""அப்புறம் இதையும் சேர்த்துக்கோ - இது ஒரு பாகிஸ்தான் நாய்."சுபேதார் தானே அந்தக்

காகிதத்தை ஒரு கயிற்றில் கோர்த்து நாயின் கழுத்துப் பட்டையில் கட்டிவிட்டான். ""இப்போ நீ உன் குடும்பத்தோட போய் சேர்ந்துக்கோ."அந்த நாய்க்கு சிறிது சாப்பிடக் கொடுத்து விட்டு அதனைத் தடவிக்கொண்டே இது பாரு தோஸ்த்... துரோகம் மட்டும் கூடாது. இங்கே துரோகத்துக்குத் தண்டனை மரணம் மட்டுமே... தெரிஞ்சிக்கோ...

நாய் வாலாட்டிக்கொண்டே சாப்பிடுவதைத் தொடர்ந்தது. பிறகு சுபேதார் ஹிம்மத் கான் இந்தியப் படைகள் பதுங்கியிருந்த திசையைக் காண்பித்து உரக்கக் கத்தினான்...

""நம்முடைய எதிரிகளுக்கு இந்த செய்தியை எடுத்துப்போ. ஆனா திரும்பி வந்துடணும். இது உன்னுடைய படைத் தளபதியோட கட்டளை... போய் வா..."

நாய் வாலை ஆட்டிக்கொண்டே இரு குன்றுகளையும் பிரிக்கும் பள்ளத்தாக்கை நோக்கி பலத்த காற்று வீசும் அந்த மலைப் பாதையில் விரைந்து ஓடத் துவங்கியது. சுபேதார் ஹிம்மத் கான் தன்னுடைய துப்பாக்கியை எடுத்து திடீரென்று வானத்தை நோக்கி சுடத்துவங்கினான்.மறுபக்கம் பதுங்கியிருந்த இந்தியப் படை வீரர்கள் குழம்பிப்போனார்கள். எப்போதும் இல்லாது இன்று இத்தனை காலையிலேயே இப்படி ஒன்று நடப்பது அவர்களைக் குழப்பியது. ஏற்கனவே அயர்ச்சி அடைந்திருந்த ஜமேதார் ஹர்நாம் சிங் உரக்கக் கூச்சலிட்டான் ""நாமும் திருப்பிக் கொடுப்போம்."

இருதரப்பும் சுமார் அரைமணி நேரத்துக்கு தேவையற்ற குண்டு வீச்சைப் பரஸ்பரம் பறிமாறிக்கொண்டன. ஜமேதார் ஹர்நாம் சிங் ஒரு வழியாக எல்லாவற்றையும் முடித்துக் கொள்ள உத்தரவிட்டான். தன்னுடைய நீளமான முடியைக் கண்ணாடியைப் பார்த்து வாரிக் கொண்டான். ஞாபகம் வந்தது போல, பன்டா சிங்கைப் பார்த்துக் கேட்டான் ""அந்த ஜ÷ன் ஜ÷ன் நாய் எங்கே?"""ஒரு பழமொழி இருக்கே... இந்த நாய்களாலே வெண்ணெயை ஜீரணம் பண்ணிக்க முடியாது" தத்துவார்த்தமாக பதிலளிக்க முயற்சித்தான் பன்டா சிங்.

காவல் பணியில் இருந்த சிப்பாய் ஒருவன் உரக்கக் கத்தினான். ""அதோ அங்கே வருது பாரு"""யாரு?"

அது பேரு என்ன? ஜ÷ன்ஜ÷ன்?

""அது இங்கே என்ன பண்ணுது" என்றான் ஹர்னாம் சிங்.

பைனாகுலரில் நோட்டமிட்டுக் கொண்டே, ""நம்மைப் பார்த்து இங்கே வருது" என்றான்.

சுபேதார் ஹர்னாம் சிங் அவனிடமிருந்து பைனாகுலரைப் பிடுங்கிக் கொண்டான்.

ஜ÷ன்ஜ÷ன்தான். சரி. அது கழுத்துலே ஏதோ பட்டை கட்டி இருக்கு. ஆனா... ஒரு நிமிஷம்... அது அந்த பாகிஸ்தான் பகுதியிலே இருந்து இல்லே வருது... மாதர்சோத்...

கோபத்துடன் துப்பாக்கியை எடுத்து குறி பார்த்து சுட்டான். துப்பாக்கிக் குண்டு நாய்க்கு மிக அருகில் உரசிச் சென்று ஒரு பாறையில் மோதியது. நாய் சடாரென்று நின்றது.

அந்தப் பக்கம் சுபேதார் ஹிம்மத் கான் வெடிச்சத்தம் கேட்டு தன்னுடைய பைனாகுலரை எடுத்து நோட்டம் விட்டான். நாய் இவர்கள் இருக்கும் பக்கம் நோக்கித் திரும்பி ஓடிவந்தது. ""வீரர்கள் எப்போதும் போர்க்களத்தை விட்டு ஓடுவதில்லை.
முன்னேறிப்போய் உனக்குக் கொடுத்த வேலையை செய்து முடி" என்று உரக்கக் கூச்சலிட்டான். நாயை பயமுறுத்துவதற்காக ஏதோ ஒரு திசையை நோக்கி சுட்டான். ஹர்னாம் சிங்கும் அதே நேரம் நாயை நோக்கி சுட்டான். மீண்டும் நாயை மிக நெருக்கமாக உரசிக்கொண்டு சென்றது துப்பாக்கிக் குண்டு. நாய் காதுகளை விறைப்பாகத் தூக்கி வைத்துக்கொண்டு பிடறியில் கால்பட ஓடத் துவங்கியது. இந்தப் பக்கம் சுபேதார் ஹிம்மத் கான் மீண்டும் சுடத் துவங்கினான். அவனுடைய துப்பாக்கிக் குண்டுகள் நாய் ஓடும் பாதையில் அங்கிருந்த பாறைகளைத் தாக்கிய வண்ணம் சிதறி வெடித்துத் துரத்தின.

இது மெல்ல, இருதரப்பு சிப்பாய்களுக்கும் இடையேயான விளையாட்டாக மாறத் துவங்கியது. நாய் மரண பீதியில் வட்டமடித்து ஓடிக்கொண்டிருந்தது. ஹிம்மத் கானும் ஹர்நாம் சிங்கும் இருதரப்பிலும் நின்றுகொண்டு இடிபோல சிரித்துக்கொண்டிருந்தார்கள். நாய் ஹர்நாம் சிங்கை நோக்கி ஓடத் துவங்கியது. அவன் மிகப் பெரிய வசவு ஒன்றை உரக்கக் கத்தி விட்டு நாயை நோக்கிச் சுட்டான். துப்பாக்கிக் குண்டு நாயின் காலைத் தாக்கியது. நாய் வலியில் ஊளையிட்டது. மரண வேதனையில் கத்திக்கொண்டே ஹிம்மத் கான்இருக்கும் திசை நோக்கி ஓடியது. அந்தத் தரப்பில் இருந்தும் குண்டு மழை பொழிந்தவாறு இருந்தது. ""தைரியமான ஆம்பளையா இருக்கணும். இந்தப் போரிலே காயம் பட்டா அது உன்னுடைய தைரியத்தை இழக்க வைக்கக் கூடாது. உன்னுடைய கடமைக்குக் குறுக்காலே எந்த மரண பயமும் இருக்கக் கூடாது. போ. இன்னும் முன்னேறிப் போ" என்று கர்ஜித்துக் கொண்டே நாயை நோக்கி சுடத்துவங்கினான்.

நாய் ஓட்டத்தை நிறுத்தித் திரும்பியது. அதனுடைய ஒரு கால் செயலிழந்து போனது. ஹர்னாம் சிங் இருக்கும் திசை நோக்கித்தவழத் துவங்கியது.

ஹர்னாம் சிங் மிகக் கவனமாகக் குறி பார்த்து சுட்டான். நாய் செத்து மடிந்தது.

சுபேதார் ஹிம்மத் கான் வருத்தத்துடன் முகத்தைத் தொங்கப்போட்டுக் கொண்டான். ""வீர

மரணம் தழுவி நாட்டுக்காகத் தன்னை அர்ப்பணித்துக் கொண்டது" என்று வருத்தத்துடன் தெரிவித்தான்.

ஜமேதார் ஹர்னாம் சிங் இன்னும் சூடாக இருந்த அந்தத் துப்பாக்கியின் குழலைத் தடவிக் கொடுத்துக்கொண்டே, ""நாய்க்குப் பிறந்தது நாய்ப்பாடு பட்டு செத்துத் தொலைஞ்சது" என்றான்

raghavanthambi@yahoo.co.in
பதிவுகள் ஜூன் 2008 இதழ் 102

## 29. வெளிச்சம் பழகட்டும் கண்களுக்கு! - - திலகபாமா -

சின்னஞ்சிறிய வீடுதானென்றாலும் தனிமை வீட்டை நிறைத்து என்னையும் அழுத்திக் கொண்டிருந்தது. .தனிமை தவிர்க்க நினைத்து தொலைக்காட்சியைப் போட்டு விட நிகழ்ந்து கொண்டிருந்த எந்தவொரு நிகழ்வும் திருப்தி தராததால் தானியக்கி மூலமாக எல்லாவற்ரையும் ஓட விட்டேன். எல்லாவற்றிலும் கும்பல் கும்பலாக வந்து ஆடினார்கள் அழுதார்கள், சிரித்தார்கள் தேவையில்லாது பேசினார்கள். மொத்தத்தில் வெறுப்பு பற்ற ஓங்கி அழுத்தி நிறுத்தி விட்டு சாப்பாட்டு மேசையில் அமர்ந்தேன். கவனத்துடன் செய்திருந்த சமையல் மேசை மேல் இருந்தது. நேற்று வரை வீட்டில் இருந்த விருந்தினர் கலவரம் நேற்று மாலையோடு காணாமல் போயிருக்க காலையிலெல்லாம் வீட்டை ஒதுங்க வைத்தபடி இருந்தேன். கல்யாண மண்டபத்திலிருந்து கொண்டு வந்து போட்டிருந்த சாமான்கள் அப்போதைக்கு என்று சம்பந்தமில்லாத இடங்களில் உட்கார்ந்திருந்தது.. அப்போதைக்கு எனறு தீர்மானிக்கப் படுகின்ற நிகழ்வுகளின் வலிகள் எனக்கு மட்டுமே தெரியும். என்பதால் உடனே சரிப்படுத்திவிட மனது துடித்தது.

இதையாவது சரிப்படுத்தலாமே என்றும். உறவினர்கள் உதவி செய்ததாய் சொல்லப் பட்டு மாறி மாறி திணிக்கப் பட்டிருந்தது எரிச்சல் தந்தது. சடாரென பார்க்கையில் பளீரென தெரிந்த வீடு , அலமாரிகளுக்குள் தெளிவில்லாது குழைந்து கிடந்தது.. எது எங்கே இருக்கு என்று கண்டு பிடிக்கவே குழப்பமாக இருந்தது. .இடம் மாறி இருந்தது பொருட்கள் மட்டுமல்ல. உதவிகள் என நினைத்தது உபத்திரவமாய் மாறி இருப்பது மீண்டும் மீண்டும் உறுத்தியது. எவர் சிலவர் பாத்திரங்களுக்கு இடையில் வைக்கப் பட்டிருந்த சீர் கொண்டு சென்ற தட்டுகள் எடுத்து தனியாக அதற்கென இருந்த உயர அலமாரியில் வைக்க, ஒரு மூடையில் எல்லா காய்கறிகளும் கலவையாக இருக்க பிரித்து ஒதுக்கி பைகளில் போட்டு பத்திரப் படுத்தினேன். இன்னொரு மூடையில் சமையலுக்கு பயன்படுத்திய பலசரக்குகள் ஒன்றோடொன்று கொட்டி கலந்து கிடக்க தனது ஆச்சியின் நினைவுகளோடு சொளகில் தட்டி கடுகு, உளுந்து ,சீரகம் எனப் பிரித்து அடுக்கினேன்.

ஐந்து குடும்பங்கள் ஒன்றாய் இருந்த கூட்டுக் குடித்தனத்தில் வசிக்க நேர்ந்த ஆச்சி வீட்டில் பெண்கள் சும்மா இருந்தால் பிரச்சனை வருமென்று அவரது மாமனார் கடுகு, உளுந்து, சீரகம், வெந்தயம் எல்லாம் ஒன்றாய்த் தட்டி பிரித்து வைக்கச் சொல்லிப் போனதாய் ஆச்சி பேசியது நினைவுக்கு வந்ததை நினைத்துக் கொண்டாள். தனக்கும் அந்தப் பயிற்சி உதவும், தனியே இருப்பதை மறக்க அதுபோல் பலமுறை தானும் கலந்து பின் , பிரித்து வைக்கலாம். மாறிப் போன சூழலின் பின்னும் மாறாத நடவடிக்கைகள் காரணங்களோ வேறு, நினைக்க பெருமூச்சு உதிர்ந்தது .

நினைவுகளை தட்டி விடும் போது எல்லாம் ஒதுக்கி முடித்திருந்தேன் . வேலைகளில்

மூழ்கி இருந்தவரை ஒன்றும் தோன்றவில்லை. இப்போ எல்லா வேலையும் முடிந்த பிறகு அடுத்து என்ன செய்யப் போகிறோம் என்கிற மலைப்பில் தனிமை என்னுடனிருப்பதை உணரத் தொடங்கினேன். தொடங்கிய சில மணி நேரங்களிலேயே என்னுள் அவஸ்தை ஆரம்பமானது

குளிர்சாதனப் பெட்டியின் மேலேயிருந்த மகள் தீபாவின் படம் என்னைப் பார்த்து சிரித்துக் கொண்டிருந்தது. இனிமேல் அதுதான் தீபா. இதுவரை படமாயிருந்த நிழற்படம் இனிமேல் அதுதான் மகளாயிருக்குமோ? படத்தில் இருந்த தீபா சிரிப்பது போல் தோன்றவே தலையை உலுக்கிக் கொண்டேன்.

".சே இது ஒன்றும் அவ்வளவு பெரிய பிரிவில்லையே." தீபாவின் திருமணம் பெரியதொரு பிரிவையோ, தனிமையையோ கொண்டு வந்து விட முடியாது என்று மனதைத் தேற்றிக் கொண்டாலும் ஏதேதோ நினைவுகள்.

நினைவுகள் 20 வருடங்களுக்கு பின்னால் என்னை இழுத்துச் செல்ல அந்த இருட்டு அறையில் இருந்து வந்த அழுகை ஒலியும் , தொடர்ந்து நான் தோள் தொட , வெளி வந்த மழலைக்குரல் இன்று போல் ஒலித்தது.

"கல்யாணம் பண்ணிக்கப் போறியா அம்மா ?" ஏற்கனவே நடந்து கொண்டிருந்த குழப்பங்களில் திணறிப் போயிருந்த நான் இப்போழுது சடாரென முடிவுக்கு வர இந்த கேள்வி ஒரு காரணமா ஆயிட்டது

"இல்லைம்மா , அம்மா கல்யாணம் பண்ணிக்கப் போறதில்லை '

சொன்ன பதிலைத் தொடர்ந்து அவள் என் கழுத்தைக் கட்டிக் கொள்ள நான் திணறினேன்.

எல்லாவற்றையும் துறந்து விட்டதாய் மனசு வைராக்கியத்தைச் சுமந்து நின்றாலும் ஸ்பரிசங்களுக்காக ஏங்கிய உடல் ஒன்று விழித்துக் கொண்டு இருப்பதை மகளின் பிஞ்சு ஸ்பரிசங்கள் சொல்லிப் போக நானும் இழுத்து அணைத்துக் கொண்டேன்.
உள்ளே கொழுந்து விட்டெரிந்த ஜுவாலை ஒன்று என்னையே எரித்துக் கொண்டிருந்தது..

வீட்டில் எழுந்து கொண்டிருந்த விவாதங்களுக்கு மகளின் கேள்வி அப்போதைக்கு விடை தந்தது போல் தோன்றினாலும் , தொடர்ந்து நிறைய சிக்கல்கள் வரப் போவதை அறியாது அப்போதைக்கு அந்த பிரச்சனைகளிலிருந்து தற்காலிகமாக விலகியிருந்தேன். கழுத்தை கட்டிக் கொண்டு மகள் தூங்கிப் போயிருந்தாள். ஏதேதோ மனம் தேடிக் கொண்டிருக்க தூங்க முடியாது நான் , தேடல்களின் நுனி கிடைக்காது தடுமாறியபடி இருந்தேன்.

ஓடிப் போயிருந்த காலங்கள் நினைவில் வந்து குத்தத் தொடங்கி இருந்தன .பாடங்கள் ,படிப்பு பற்றி அதிக அக்கறை எடுத்துக் கொண்டவளில்லை. நான். கல்லூரிப் படிப்பு கௌரவமாகக் கருதப் பட்டிருந்த கால கட்டத்தில் இருந்தேன் அப்போது. கல்யாண வரனோ, வயசோ வருகிற வரை காத்திருக்கும் இடமாக கல்லூரி மாறியிருந்தது. எனக்கே படிப்பு மீதான நம்பிக்கைகள் தொலைந்து போயிருந்தன.

கல்யாண வரனும் சரி, வயசும் சரி வந்து வந்து போய்க் கொண்டு இருந்தன. செவ்வாய் தோசமும் தோற்றப் பொலிவின்மையும் என் வயதைக் கூட்டிக் கொண்டிருந்தன. கல்யாணக் கவலை தோன்றாத என்னுள் தோன்ற வைக்க சுற்றியிருந்தவர்கள் பிரயத்தனம் எடுத்துக் கொண்டிருந்தார்கள். துர்க்கையம்மன் கோவிலில் இட்ட எலுமிச்சை விளக்கோ, மார்கழி மாதத்தில் அரசரடிப் பிள்ளையாருக்கு எடுத்து ஊத்திய மஞ்சத் தண்ணியோ வரனை கூட்டி வந்ததாக எல்லாரும் சொல்லிக் கொண்டிருக்க, தந்தையின் பணம் எல்லாவற்றையும் சரிக்கட்டியது நிதர்சனமாய் தெரிந்தாலும், தெரியாததாய் எல்லோரும் காட்டிக்கொண்டார்கள். நானும் கல்யாணப் பெண்ணானேன் .என்ன காசுக்கேத்த நல்ல பொருள்தானா என்று ஒடித்தோ உரசியோ பார்க்க முடியாதிருந்தது. எல்லாரையும் போல எல்லாவித சந்தோசங்களும் கற்பனைகளும் நிறைந்த மனதுடன் திருமணம்  முடிந்து மறுவீடு போய் வளைகாப்பு நடக்கும் வரை எல்லாம் சந்தோசமாகத்தானிருந்தது.

பிரசவத்திற்காக நான் வந்திறங்கிய அம்மாவீடே காலமெல்லாம் எனக்காக என்று மாறிப் போகும் என்று நினைத்திராது சந்தோசமாகத் தான் வந்து சேர்ந்திருந்தேன். பிள்ளை, கயிறு கட்டி, கையிலெடுத்து  நான் வாசலில் நிற்க எடுத்த ஆரத்தியில் சூடு அப்போது நான் அறியாதிருந்தது. வைத்த பொட்டு கறையாக மாறுமென்பது உணராததாயிருந்தது. ஆரம்பத்தில் மாற்றங்கள் கண்ணில் புலப்படவில்லை என்றாலும் தொடர்ந்து என்னையும் அவர்களால் முட்டாளாக்க முடியாததாயிருந்தது வீட்டிற்கு அடிக்கடி வந்து போன அவரது அத்தை மகள் நான்கு மாதங்களில் நான் விட்டுச் சென்றிருந்த இடத்தை நிரப்பியிருந்தாள்

அதிர்ச்சியில் நான் அதிர்ந்து கேட்க “ ஆமாம் அனுசரிச்சு போகப் பழகிக்கோ” பதில்கள் நெருப்புத் துண்டங்களாய் விழுந்தன. நெருப்புத் துண்டங்களை அணைய விடாது ஊதி நெருப்பாக்கி எரிந்தாள்.  இருவீட்டார் மோதலில் எனக்கு அம்மா வீடே நிரந்தரமானது.. வசதிகளுக்கு குறைவில்லாத வாழ்வென்றாலும் எங்கோ தனிமை எனை வெறுமையாக்கிக் கொண்டிருந்தது. அவங்க வீட்டிலிருந்து எல்லாமும் எடுத்து வர என் வீட்டார் போராடி ஜெயித்தனர். ஜெயித்ததாக சொல்லிக் கொண்டனர். இடைஞ்சல்கள் இல்லாது எனது கணவராயிருந்தவரின் வாழ்க்கை ஆரம்பமாக  என் வாழ்க்கை பற்றிய கேள்வி அண்ணன்களிடம்.

“ஏன் தங்கச்சி தனியா இருக்கனும். கல்யாணம் கட்டி வைக்க எங்களால முடியும்” முடியுமென நிரூபிக்க அவர்கள் களத்திலிறங்கிய போதுதான் தீபாவின் கேள்வி எல்லாரையும் நிராயுதபாணியாக்கி அடித்து வீழ்த்தியது.. இல்லையென்றால் எனக்கும் திருமணமாகி இவர்கள் வீரத்தை காட்டி வென்றவர்களாயிருப்பார்கள். கல்யாணப் பேச்சு நின்று போக தீபாவோடு என் வாழ்க்கை பயணமாகியது

மூத்த தலைமுறைகள் சரிந்து இளைய தலைமுறைகள் பொறுப்புக்கு வர எனைப்பற்றிக் கவலைப் பட்டிருந்த தாத்தா என் மேல் சொத்துகள் எழுதி வைத்த திருப்தியில் போய்ச் சேர, தம்பிமார்களுக்கு கல்யாணமாகி அம்மா காலம் வரை அவர்களோடு இருந்து அம்மா காலத்திற்கு பிறகு தனியா வீடமர்த்தி , தீபா படிப்பில் கவனமாக இருக்க கற்பித்து காலங்கள் சென்றன.

அப்படித்தானொரு நாள் அம்மாவோடு இருந்த காலங்களில் தங்கையை காண வந்த அவளது தோழி. அவர்களுக்கு காப்பி போட அடுக்களை போனேன். திரும்பி வர எனைப் பற்றி பேச்சு ஓடிக் கொண்டிருந்தது, தெரிய கால்கள் ஸ்தம்பித்து நின்றன. வந்தவள் கேட்டுக் கொண்டிருந்தாள் “ அக்காவுக்கும் ஆசாபாசங்கள் இருக்கும் தானே அதை பத்தி ஏன் நீங்கள் யாரும் நினைக்கவே இல்லை?”

“என்ன செய்யறது சாந்தி? . தீபா உடையுறதை எப்படி சமாளிக்க, ? இன்னைக்கு அக்காவுக்காக கல்யாணம் செய்யலாம். அடுத்த தலைமுறை பாதிக்கப் படாதா? அவளுக்காக வாழ்ந்த அம்மாவுக்காக அவள் என்றும் நன்றியோட இருப்பாள் காலமெல்லாம் நினைப்பாளே.”

“நினைப்பை வைத்து என்ன செய்ய? அக்காவை வேலைக்காவது அனுப்பலாம்தானே. வெளியே போய் வர பலபேரை சந்திக்கும் வாய்ப்பிருந்தாலாவது தனக்கான வாழ்வு பற்றிய சிந்தனை வருமே”

“வேலைக்கு போக வேண்டிய தேவை வரலியே. பார்ப்போம். பேசிக் கொண்டே வாசலில் என் நிழலாட என் சம்பந்த பேச்சை முடித்தனர். அவர்கள் முடித்த இடத்திலிருந்து என் சிந்தனை ஓடியது. எனக்கு ஆசாபாசங்கள் இருக்கிறதா? கேள்வியை சிந்திக்க விடாது குக்கர் சத்தம் கொடுத்து வைக்க இன்று நினைத்து பார்க்கிறேன் ஏன் மேற்கொண்டு அதை சிந்திக்காமல் போனேன்

அன்றொரு நாள் தீபாவிடம் நடத்திய விவாதங்களும் வந்து போனது . நினைவில். இதுவரை அடுத்தவரோட பிரச்சனையை விவாதிச்சோமுன்னு நினைச்சிருந்ததெல்லாம் இப்ப என்னுடையதாய் எனக்கானதாய் தோன்ற ஆரம்பிப்பது ஆச்சரியமாய் இருந்தது எனக்கு. தீபா கல்லூரி இரண்டாவது படித்த வருடம் சாப்பாட்டு மேசையில்

வழக்கம் போல் பலதும் பரிமாறிக் கொண்டிருந்தோம்.

“இன்னைக்கு கல்யாண் குமாரை பார்த்தேன்மா.”

அவள் சாப்பாட்டை பார்த்தபடியே சொன்னாள் எனக்குள் ஒரு திடுக்கிடல். நடந்திருந்த விசயங்கள் எனக்கும் அரசல் புரசலாக காதில் விழுந்திருந்தது. எதுவுமறியாதது போல் “அப்படியா?” என்றேன்.

“ஆமாம்மா ரெண்டு வாரத்துல ரொம்ப ஒடைஞ்சு போயிட்டான். குடிக்க ஆரம்பிச்சுட்டதா அவன் நண்பர்கள் சொன்னாங்க.”

நேரில் பார்த்தவுடன் “ஏன் இப்படி ஆயிட்டேன்னு?” கேட்டேன்.

எனக்கு நடந்த விசயங்களும் , நடந்து கொண்டிருந்த விசயங்களும் தெரிந்திருந்தாலும் தீபாவுக்கு தெரிய வேண்டியதில்லாத விசயம்ன்னு நான் நினைச்சிருந்ததை நினைத்து “ முட்டாளே “ என்று மனசு சொல்லிக் கொண்டது.

என்ன சொன்னான்” அதே அழுத்தங்களுடன் கேட்டேன். ரொம்ப நேரம் அமைதியா இருந்தான். “அழுகிறான்மா’. அழுவதற்கு என்ன இருக்கிறது என்கிற தோரணையில் தீபா சொல்லவும் எனக்குள் பீறிட்டது.

“அழுகாம என்னமா செய்வான்? அவன் அம்மா ஓடிப் போனது தப்பில்லையாம்மா? . ஆம்பிள்ளை எவ்வளவு மனசு உடைஞ்சு போவான் ? தாங்க முடியுமா?”

தீபா தலை தூக்கி பார்த்தாள் இப்போழுது தான் எனை. என் கோபம் கண்களில் அவளுக்கு தெரிந்திருக்க வேண்டும். நெத்தி முடிச்சிட யோசனையுடன் தலை சாய்த்து நாடியில் கைவைத்து என்னையே பார்த்தாள்

“ஆம்பிள்¨ளை உடைஞ்சு போயிடுவான் அப்படிங்கறதுக்காக்க அந்தம்மா தன் மனக்காதலை மறைச்சு வச்சிருந்தா எல்லாருமே சந்தோசமா இருந்திருப்போம் . இருந்திருப்பாங்க இல்லையா?”

“இது காதலா? ரெண்டு பிள்ளைக்கப்புறம் அதுவும் தோளுக்கு மேல் வளர்ந்த பிள்ளைங்க.. .. .. ..”
‘உடம்பு திமிர் எடுத்து ஓடினா என்ன செய்ய?”

கோபத்தில் என் வார்த்தைக்கள் தடிக்க பேச்சை நிறுத்தினேன் அத்தோடு. எனக்குள்ளிருந்து

வந்த பெருமூச்சு என் கோபத்தைப் பேசியது.

“பிறகு எதும்மா காதல்? காதல்னா கல்யாணத்துக்கு முன்னாடி மட்டும் தான் வரணும்மாம்மா? கழுத்தில் தாலி போட்டவுடன் இனிமே காதலே வராதுன்னு எப்படி முடிவு பன்றது? காதல் ஒரு உணர்வு தானேம்மா. நேசம் கூடக் கூட வரத்தானே செய்யும் . ரெண்டு பிள்ளைக்கப்புறம் வராதா? வரக்கூடாதுன்னு ஏன் எப்படி நினைக்கிறிங்க?. மனசு சேர்ந்தப்புறம் உடல் பற்றிய பிரக்ஞை ஏன் வருது/ மனசு சேராம உடல் சேர முடியுமா”. அந்தம்மா தன் உணர்வுகளை மறைச்சு சாகடிச்சு வாழ்ந்திருந்தா எல்லாரும் சந்தோசமா இருந்திருப்போம். பத்தினின்னு சொல்லியிருப்போம் இல்லையா? உணர்வுகளை ஒளிக்காம சொல்லும் போது ஏன் சிதைஞ்சு போயிடறோம்? பெரிசு படுத்துறோம்.”

“அப்போ ஓடிப் போனது சரிங்கரியா?” கேள்விகளில் என் குழப்பம் எனக்கே தெரிந்தது

“தப்புன்னு சொல்றது சரியான்னு யோசிக்கிறேன். சரியா முடிவெடுக்க முடியாம போக நாமளும் காரணமோன்னு”

அவங்களோட உணர்வுகளை அந்த குடும்பத்தார் சரியா புரிந்து கொள்ள அல்லது பகிர்ந்து கொள்ள தவறிட்டாங்களோன்னு கோபத்தை , வருத்தத்தை பகிர்ந்து கொள்வது போல் காதலை ஏன் பகிர்ந்து கொள்ள முடியாது போகிறது.? காதல் ஒரு அதீத அன்புதானே அம்மா. உங்களால் பகிர்ந்து கொள்ள முடியாத எத்தனை அந்தரங்க உணர்வுகளை அழுத்தி வைத்திருப்பீங்க அதுதான் பத்தினித்தனம் என்று இருந்திருப்பிர்கள்? எல்லாவறையும் மறைத்து வைத்துக் கொண்டால் நல்லவர்களா?
வெளிப்படையா கல்யாண்குமார் அம்மா மாதிரி சொல்றவங்க நல்லவங்களா எனக்கும் புரியலைம்மா?

“ ஏம்மா தனியாஇருந்த இத்தனை காலம் உங்களுக்கு யார் மேலேயும் காதலோ பிரியமோ வரவே இல்லையா? தாலி , உங்க காதல் உணர்வை தடுக்க முடிகிறதா?”

அவளுக்கு தெரிந்திருந்தது அவள் கேள்விகள் நான் தாங்கமாட்டேன் என்பதும் என்னிடம் பதில் இல்லை என்பதும். எழுந்து போய் விட்டிருந்தாள் நான் அதிர்ந்து போய் உட்கார்ந்திருந்தேன். கல்யாண்குமார் அம்மாவின் குணங்களுக்கு பொருந்தாத அவர் கணவர் முகம் , முக்க என்பது வெறும் கண் காது வாய் மட்டுமல்லவே . அந்த மனிதனை பிரதி பலித்த அவரது முகம் வந்து போனது தீபாவின் பேச்சை யோசிக்க வைக்க “ எனக்கு ஏன் காதல் வரலை? . தாலி !.. தங்கச் சங்கலியாயிருந்த தாலியா
என் உணர்வுகளைத் தடுத்தது. இனி தடுக்காது. பதில் சொல்ல மனது இந்த தனிமையைப் தவிர்க்க முயற்சி எடுக்காமல் போனது. தன் தப்பா? ஒரு வேளை வேலைக்கென்று

போயிருந்தால் பரந்த உலகில் என் நேசத்திற்குரியவர் இருந்திருக்கலாம் என்று தோன்றியிருக்கலாமோ? நான் எல்லாவற்றையும் தவிர்த்து சிறையிருந்துவிட்டேனோ? அறையுள்ளிருந்து வெளிவந்தாள் கண் கூசத் துவங்க கை நெற்றிப் பொட்டுக்கு போகப் போனதை தடுத்தாள் வெளிச்சம் பழகட்டும் கண்களுக்கென்று.

mathibama@yahoo.com

பதிவுகள் அக்டோபர் 2004; இதழ் 58

**30. நுடம்! - ஜெயந்தி சங்கர் (சிங்கப்பூர்) -**

ஜெயந்தி சங்கர் (நேஹாவின் போக்கு எனக்குப் புரியவே வெகு நாட்கள் ஆயின. என் சொந்த மகளே எனக்குப் பல சமயங்களில் புரியாத புதிராய் தான் இருந்தாள். சமீபகாலமாய் சிறுமியின் போக்கில் அதிகமான தீவிரம். இத்தனையிலும் வேதனை என்னவென்றால் சிந்திக்கவும் சில நிமிடங்கள் கிடைக்காத என் வேலை. ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு கட்டாயம். பொருளாதாரம் காரணமாய் இல்லாமல் படித்து விட்டதன் ஒரே காரணமாய், கிடைத்த நல்ல வேலையை விட மனம் இல்லாமல் நான் வேலையை உடும்புப்பிடியாய் பிடித்திருந்தேன். இயல்பாகவும் எனக்கு வீட்டு வேலைகள் செய்ய துளியும் பிடிக்காது. பணிக்குச் சென்று பொருளீட்டுவது என்பது எனக்குப்பேருவகை கொடுத்து வந்திருக்கிறது. நேஹாவின் நினைவில் ஆழ்ந்து விடும் இம்மாதிரித் தருணங்களில் மட்டும் நான் என் வேலையை வெறுப்பதுண்டு. இந்த மனவேதனையைக்கூட கணவருடன் பகிர்ந்துகொள்ள மனம் இடம் கொடாது. இதே சாக்காக வைத்துக்கொண்டு 'வேலையை விட்டுடு' என்ற பல்லவியை ரம்பித்து மூளைச் சலவை செய்து விட்டாலோ? என்ற பயம். அம்மாவிடமோ கேட்கவே வேண்டாம்.

ஆறு வயதிற்குச் சற்று அதிகமாக முரட்டுத்தனமும் பிடிவாதமும் நேஹாவிற்குச் சமீபகாலமாய் இருப்பதாய் எனக்குத் தோன்றுகிறது. நேற்று அவள் வகுப்பு சிரியை அவசரமாய் அழைத்துத் தொலைபேசியில் பேசியதிலிருந்து இந்த நிமிடம் வரை மனதைக்குடைகிறது. யோசிக்கவென்று வலுவில் தேடிக்கொண்ட இந்தத் தனிமைக்கு நான் கொடுத்தவிலையோ என் மதிய உணவு. ¦அண்டன் வேயின் அந்த சந்தடி மிக்க உணவங்களில் என்னால் யோசிக்கவே முடியாது என்று தெரிந்து தான் தனிமையான அந்த மரத்தடியைத் தேடிச்சென்றேன்.

காலையில் நான் செய்த வேலைகளில் ஒரு தவறும் இல்லாமல் இருந்தால், நிச்சயம் அது இமாலையச் சாதனையே. கைகளும் கண்களும் தங்கள் வேலைகளைச் செய்த வண்ணமிருக்க மனம் மட்டும் தன் போக்கில் பிடிவாதமாய் அசை போட்டவண்ணம் இருந்தது. மதியம் போய் தான் சரி பார்க்கவேண்டும்.

குற்றம் குறைகளைக் கூறி விட்டு, அவள் நன்றாகப் பாடுகிறாள், பேசுகிறாள், மற்ற பிள்ளைகளோடு அருமையாகப் பழகுகிறாள் என்றெல்லாம் ஆசிரியை கூறிய போதிலும் முதலில் கூறிய குற்றப் பத்திரிக்கையைத் தானே என் மனம் மீண்டும் மீண்டும் அலசுகிறது. நிச்சயம் அது குற்றமாகச் சொல்லப்பட்டதால் அல்ல. தீர்வே காணாமல் மூன்று வருடங்களாய் என்னைக் குழப்பும் அவள் போக்கும் அது அடைந்திருக்கும் தீவிரம் தான் மனதைச் சஞ்சலப்படுத்துகிறது.

ஆசிரியையிடம் எதிர்த்து வாயாடுகிறாளாம். எது சொன்னாலும், தயாரான பதில். அதுவும்

துடுக்கான இடக்கான பதில் தயராய் வைத்திருந்தாள்.நேற்று வகுப்பில் அவரவர் குடும்பத்தாரின் படத்தை வரைந்து வண்ணம் தீட்டச்சொல்லியிருக்கிறார் ஆசிரியை.இவள் எல்லாவற்றையும் செவ்வனே செய்து,வழக்கம் போல் தாயாருக்கு --அதாவது எனக்குக் கால்கள் வரையவில்லை. முழங்கால் வரை மிக அழகாக வைரைந்திருந்தாளாம்.

எல்லொரையும் தாத்தா,பாட்டி கமலா உள்பட எல்லோரையும் வரைந்து வண்ணமும் நன்றாகத்தீட்டி முடித்தவள், எவ்வளவு சொல்லியும் நேஹா கால்கள் வரைய மறுத்திருக்கிறாள்.அதன் பிறகு அவள் ' நான் எப்பொதுமே இப்பிடித்தான் வரைவேன், வேற மாதிரி வரைய மாட்டேன் ,' என்று பிடிவாதமாய் கூறியது தான் சிரியைக்கு எரிச்சலைத்தந்தது போலும். நேஹாவைப்பற்றி அவர் முழுமையாக இன்னும் அறியவில்லையே. வருடம் தொடங்கி ஓரி மாதங்களே ஆகியிருந்தன. பாலர் பள்ளி ஆசிரியர்கள் புரிந்து கொள்ள இரண்டு வருடம் எடுத்தனரே, அதே போல தொடக்கப்பள்ளியிலும் ஆகுமல்லவா?!

பெற்ற தாயான எனக்கே அவளின் சில செயல்கள் பழகிவிட்ட போதிலும் புதிராய்த்தானே இருக்கிறது. னேஹா பிறந்ததிலிருந்து, வருடக்கணக்கில் வீட்டில் பணிபுரியும் கமலாவிற்கும் பழகிவிட்டது. ஆனால் புரிய மட்டும் இ¢ல்லை.நடுத்தர வயதான காரணத்தாலோ என்னவோ கமலா பொறுமையாக நேஹாவைச் சமாளிக்கிறார் இல்லையென்றால் வெகுவாகச் சிரமப்பட்டிருப்பேன்.

நேற்றிரவு பேசியதில் அவளை ஒரு மனோதத்துவரிடம் காண்பிக்கலாம் என்று கணவரின் லோசனை ஓரளவு சரியெனப்பட்டது. அதே சமயம் நிலைமையின் தீவிரமும் புரியவில்லை. மருத்துவரின் உதவிதேவையா என்றே புரியவில்லை. ஒரே குழப்பம்.

மூன்று வயதில் பாலர் பள்ளியிலேயே ஆங்கிலப்பாடமும் சரி தமிழ் பாடமும் சரி தானாய் அனாயாசமாய்ச் செய்யக் கூடிவள் தான். இருப்பினும் அம்மாவை வரைச்சொன்னால் காலில்லாமல் தான் வரைவாள். ஆரம்பத்தில் பெரிய விஅயமாகப்படாத போதிலும் தொடர்ந்து நேஹா அப்படியே வரைவது என் மனதை உறுத்தவே செய்தது. ' ஏம்மா அம்மாக்கு காலில்லேன்னா எப்பிடி நடப்பேன்? நேஹாக் குட்டி அம்மாவுக்கும் கால் வரையியாம்' என்று நைச்சியம் செய்தலோ போனால் போகிறதென்று சிறிது மனமிரங்கி, ஒரு சக்கர நாற்காலியில் என்னை உட்காரவைக்கத் தயாராய் இருந்தாளே தவிர எனக்குக்கால்கள் மட்டும் அவள் வரையத்தயாராய் இல்லை.

போன வருடம் டான் டோக் செங் மருத்துவமனையில் நண்பர் ஒருவரை காணச்சென்றிருந்தோம் நானும் என் கணவரும் நேஹாவும் எங்களுடன் வந்திருந்தாள்.அங்கு ஒரு பெண் காலில் எலும்பு முறிவால், நடக்க முடியாத காரணத்தால்

சக்கர நாற்காலியில் அமர்ந்திருந்தாள். அதைப் பார்த்த நேஹா அங்கேயே சில நிமிடங்கள் அதைப் பார்த்தபடி மேற்கொண்டு நடக்காமல் நின்று விட்டாள். வைத்தகண் வாங்காமல் அந்த சக்கர நாற்காலியையே பார்த்தபடி நின்றவளை கிட்டத்தட்ட உலுக்கி இழுத்துக்கொண்டு தான் நாங்கள் மேற்கொண்டு நடந்தோம். அவள் வெகு தூரம் சென்றும் கூட தன் பார்வையை அந்நாற்காலியை விட்டு அகற்றாமல் கழுத்தைத்திருப்பிப் பார்த்துக்கொண்டே வந்தாள்.

அன்று மாலை திடீரென்று நேஹா, 'அப்பா, நாம ஹொஸ்பிடல்ல பாத்தோமே வீல் சேர், அதே மாதிரி அம்மாவுக்கும் ஒண்ணு வாங்கிடலாம்பா ' என்ற போதும் எங்களுக்கு குழப்பம் தான்.அவள் முகத்தில் துளியும் சிரிப்போ சந்தேகமோ இல்லை. தீர்மானமான தொனி வார்த்தைகளில் இருந்தது. ' நடக்கமுடியாட்டாதான் வீல் சேர் வேணும்மா. அம்மாவுக்குதான் நடக்க முடியுமே,' என்று அவர் சமாளித்தாலும், எனகள் இருவர் மனங்களிலும் அடித்த குழப்ப அலைகளை அப்போது எங்கள் முகங்கள் காட்டின.

இதைப்பற்றி நிறைய பேசி அலசியிருக்கிறோம். கணவரும் சரி என் அம்மாவும் சரி என் வேலைக்கு உலை வைக்கத் தயாராய் இருந்தனர்.எல்லா பேச்சும் தீர்வில்லாமலேயே முடிந்து வந்தது. வேலையை விடத்தான் நான் தயாராய் இல்லையே. எத்தனை பெண்கள் வேலைக்குப்போகிறார்கள்.ஊருல உலகத்துல வேலைக்குப் போறவங்களுக்கெல்லாம் பிரச்சனையே வருவதில்லையா என்ன? சமாளிக்க வேண்டும் , சமாளிப்பேன் என்ற மன உறுதி என்னை வேலையுடன் வலுவாய் பின்னிவிட்டது.

மற்ற நேரங்களில் எல்லாப்பிள்ளைகளையும் போலவே தான் இருப்பாள் இந்த ஒரு விஅயம் தவிர. அம்மாவிடம் ஆசை, பாசம் எல்லாம் சற்று அதிகமாகவே உள்ளவள் தான். அப்பாவிடமும் ஒட்டுதல் அதிகம். இரக்க குணம் அதிகம். நாய் பூனை இவைகளைக்கண்டால் கண்களில் மகிழ்ச்சி மின்னும்.

' உங்களுக்கு நான் சமைக்கஹெல்ப் பண்ணவாம்மா ? ' என்று பெரிய மனுஅ¢யைப்போல் அடிக்கடி கேட்பாள். 'அப்பா உங்க காடிய நாம ரெண்டு பேருமா வாஷ் பண்ணுவோமா' என்றுஅப்பாவையும் கொஞ்சிக் கொஞ்சி அழகாய் கேட்பாள். அம்மா அப்பாவிடம் கோபமும் நேஹாவுக்கு வரும் அடிக்கடி.

காலில் செருப்பு அணியாமல் இருக்க அவளுக்கு ஏனோ ஆர்வம் அதிகம்.வெறும் காலுடன் நடக்க அவள் மிகவும் ஆசைப்படுவாள். நான் வீட்டில் காலணிகள் அணியாத நேரங்களில் என் கால்களை அவள் ரசிப்பதை நான் பார்த்திருக்கிறேன். அந்த நேரங்களில் அவள் முகம் பிரகாசமாய் இருக்கும். கண்ககள் ஆனந்தத்தில் ஜொலிக்கும். நான் காலணியணிந்தால், உடனே அவள் முகம் மாறி விடும். அவளுடைய போக்கும் மாறும். என் காலணிகளைக்

கண்டாலே அவள் செய்கை வினோதமாகி விடும். புத்தம் புதிய விலை உயர்ந்த காலணியை ஆசையாய் முதல் நாள் தான் வாங்கி வந்திருப்பேன். வீட்டுக்கு வந்து நான் போட்டுப்பார்த்துக் கொண்டிருக்கும் போது நேஹாவின் பார்வையில் தீவிரம் தெரியும்.

அதன் பொருள் புரியாமல் இந்நாள் வரை நானும் பலமுறை யோசித்துச் சலித்ததுண்டு. ' நேஹாவுக்கும் அம்மாவோட அ¥ மாதிரி வாங்கிடலாமா? உனக்கு என்ன கலர்ல வேணும்' என்று கேட்டாலும் பதில் ஒரு முறைப்பாய்த் தானிருக்கும். பேசவே மாட்டாள். மகத்தில் வேறு எந்த விதமான பாவமும் இருக்காது. இறுகிப் போன முறைப்பு மட்டுமே பிடிவாதமாய் படர்ந்திருக்கும்.

விசயம் அத்துடன் முடிந்துவிட்டால் பரவாயில்லை. ஆனால், சற்று நேரம் சென்று நேஹாவின் சத்தமே இல்லையே என்று தேடினால் என் புது காலணியை வைத்துத் தன் கத்தரிக்கோலால் பலம் கொண்டமட்டும் போராடிக் கிழித்துக் கொண்டிருப்பாள். முகத்தில் தீவிரம் பளிச்செனத் தெரியும். வாய்ப்பு கிடைத்தால் விடாமல் பயன் படுத்திக்கொண்டாள். கோபமும் எரிச்சலும் வந்தாலும் சிரமப்பட்டுக் கட்டுப்படுத்திக் கொண்டு விடுவேன். அதையும் மீறி ஓரிரு கடும் சொற்கள் வரவே செய்யும் என் வாயிலிருந்து. மற்ற சமயங்களில் சட்டென்று அழுது விடும் நேஹா இந்த மாதிரி நேரங்களில் சலனமே இல்லாமல் இருப்பது தான் ச்சரியம். சாதாரணமாய் ஏசுவதற்கும் முன்னால் அழுதுவிடும் நேஹாவா இவள் என்று எனக்கு ஆச்சரியமாக இருக்கும். அவள் கண்களில் வெற்றியின் பெருமிதம் தான் தெரியும்.

பொதுவாய் எந்தப் பொருளையும் அழிக்கும் சுபாவம் அவளுக்கு இல்லை. காலணிகள், அதிலும் என் காலணிகள் தான் அவளை ஏனோ வெறுப்படைய வைத்தன. இது ஏனென்று நான் பல முறை யோசித்ததுண்டு. என் கேள்விகளுக்கு பதில் மட்டும் கிடைத்ததே இல்லை.

சரி,பெண் குழந்தைகளுக்கு ஆடை அணிகலன்களில் இருக்கும் மோகம் தான் போலும் நேஹாவிற்கும் என்று நினைத்தேன். தாயானாலும் என்ன, என்னிடம் பொறாமையோ என்று நினைத்து, நேஹாவுக்கும் அது போல காலணிகள் வாங்கிக் கொடுக்கலாம் என்றும் முயற்சித்தேனே. னால் அவற்றை அவள் பிடிவாதமாய் அணிய மறுத்துவிட்டாள்.ஏன் கையில் எடுத்துக்கூடப் பார்க்கவில்லை.

இதன் பலனாய் எங்கள் வீட்டில் காலணிகள் நேஹாவின் கைக்கு எட்டாத உயரத்தில் தான் வைப்பது வழக்கமாகிவிட்டது.என்னிடம் நேஹாவுக்குக்கோபம் வந்தால் நாற்காலியில் ஏறி எடுத்தாவது என் காலணிகளை கிழித்துவிடுவாள்.

யோசித்து யோசித்து யாசம் மட்டுமே மிஞ்சிய வேளையில், அம்மாவிடம் பேசினால் என்ன

என்று தோன்றவே, கையடக்கத் தொலைபேசியை உயிரூட்டி,அ ஹலோ, அம்மா,எப்பிடி இருக்கீங்க, அப்பா எப்பிடியிருக்காரு.நேஹாவோட டீச்சர் கூப்பிட்டுப் பேசினாங்கம்மா. ஆமா, ஆமா அதே பழைய பிரச்சனையே தான்.ம்,,.. இல்ல இல்ல. ஐயோ அம்மா, இப்போ தானே ப்ரைமரி ஒன்ல இருக்கா. இப்பவே என்ன நீங்க இப்பவே அவ பீயெஸேல்ஈ எழுதப் போற மாதிரி பேசறீங்க? ஆமா,.. நாங்க அவள சைக்கியாட்ரிஸ்டு கிட்ட கூட்டிட்டுப்போகபோறோம். ம்ம்...மாம். அதுல என்னம்மா தப்பு. என்ன,..ம். சரி,.. .. ஐயோ,.அம்மா, அதுக்கும் இதுக்கும் என்னம்மா சம்பந்தம்? ம்ம்.....இல்ல, மத்த படி நல்லாதான் இருக்கா. சரி, சாயந்தரம் மறுபடி போன் அடிக்கிறேன் வச்சிடறேன்.அ

அம்மா அபிப்பிராயப்படி நான் வேலைக்குப்போவது நேஹாவுக்குப் பிடிக்கவில்லை. அதே அவளுக்கு மனதில் சொல்லத்தெரியாத வருத்தத்தைக் கொடுத்திருக்கிறது. அதனால் நான் வேலையை விட்டுவிடுவது நல்லது. என்ன பிரச்சனை வந்தாலும் என் வேலையைக் காரணம் காட்டுவதே அம்மாவின் வழக்கம். இதே இந்த மூன்று வருடங்களாக விடாமல் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள்.

அம்மாவிற்கு இப்போது ஒரு புதிய காரணம் கிடைத்திருக்கிறது. நாளிதழ்களில் கொட்டை எழுத்தில் போட்டிருக்கிறார்களே. வீட்டிலே இருக்கும் பிள்ளைகள் படிப்பில் சிறப்பாகச் செய்கிறார்கள் என்று. நாளிதழ்களுக்கும் விவஸ்தை என்பதே இல்லை. பள்ளிச் சிறார்களுக்கு நாளிதழ் வாசிக்கும் பழக்கம் பெறுகி இருக்கும் இச்சமயத்தில் இப்படிப்போட்டால் தேர்வில் அவர்கள் மோசமாய் செய்தால் அம்மாவைக் காரணமாக்கவே வழி செய்கிறார்கள்.

இதோ இப்போது அம்மாவே அதைச் சுட்டிக் காட்டித் தானே என்னை மடக்கப்பார்கிறார். நேஹா படிப்பது ஒன்றாம் வகுப்பு, ஆனால் நாளிதழைப் படித்து விட்டு அம்மா இப்போதே அவள் தொடக்க நிலை இறுதி ஆண்டில் படிப்பது போல பேசுகிறார்.

அடுத்த நாள் மனோதத்துவரீதியாய் பற்பல கேள்விகள் எங்களையும் அதி முக்கியமாக நேஹாவையும் கேட்ட மருத்துவர். அவளை சில படங்கள் வரைச்சொன்னார். மரம், வீடு என்று பல படங்கள். கடைசியில் அம்மாவை வரைச்சொன்னார். வழக்கம் போல நேஹா அம்மாவை நொண்டியாக்கினாள்.

"ரெண்டு மூணு வயசுல இருந்தத விட தீவிரம் கூடியதற்கு காரணமே, அவள் வளர்வது தான். இத்தகைய பிரச்சனைகளை முளையிலேயே கிள்ளி எரிந்தால் எளிது. இல்லையென்றால் அவள் வளர வளர அதுவும் உடன் வளரும். இப்பவும் தாமதமாகல, நீங்க சரியான நேரத்துல தான் வந்திருக்கீங்க. இந்த நிலையை நாங்க டெலிஅன் பரேஅன்(deletion operation) என்றோ அரைகுறையாக காண்பது(incomplete seeing) என்றோ கூறுவோம். இதை சரி செய்வது சுலபம் தான்.செய்தால்,

நேஹா பள்ளியில் இன்னும் சிறப்பா செய்வா. இரண்டு நாட்களாய் பேப்பர் பார்த்திருப்பீர்களே. வீட்டிலிருக்கும் தாய்மார்களில் குழந்தைகள் பள்ளியில் சிறப்பாகச்செய்வதாய் கணக்கெடுப்பு காட்டுகிறது. இது கணக்கெடுப்புத் தானே தவிர முற்றிலும் ஏற்கக்கூடியதன்று. இருந்தாலும் ஓரளவு உண்மை இல்லாமலில்லை. இது உண்மையா பொய்யா என்று வாதிடல் அவசியமே இல்லை. அவரவர்கு அவரவர் குழந்தை சிறந்து விளங்கவே விருப்பம் இல்லையா? யாருமே அதை தவறென்று நிரூபிக்கவேனும் வேலையிலிருந்து கொண்டு சவாலாய் பிள்ளையை வளர்க்கலாம். ஆனால் அவர்கள் தோற்றால் அந்த வருடங்கள் திரும்ப அவர்களுக்குக்கிடைக்காது. அதை விட அந்தக் குழந்தைக்குக் கிடைக்காது. வென்றால் மகிழ்ச்சிதான்.

பெரும்பாலும் தாய் வேலைக்குப் போவது பிள்ளைகளைப் பாதிக்கலாம் என்றாலும் ஒரு சில குழந்தைக்கு அதிகமாகம் மனம் பாதிப்படைகிறது. இது விதிவிலக்கு தான். விதிவிலக்கு நம் வாழ்வில் வரும் பட்சத்தில் நாம் அதிக கவனமும் தியாகமும் செய்யவேண்டும் என்பதைத் தவிர வேறு வழில்லை. உண்மையை உணர்ந்த பின்னும் அதை விட்டு ஓட முற்படுவது மடமை. உண்மையைச்சந்திப்பது தான் புத்திசாலித் தனம். வயதாக ஆக நேஹாவின் தீவிரம் கூடும் என்பதால் இப்பவே இதை நாம குணப்படுத்தணும். கால்ல அ¥ போட்டுகிட்டு அம்மா போனா அப்பறம் ரொம்ப நேரம் கழிச்சுத்தான் அம்மாவப் பார்க்கமுடியும்னு அவமனசுல ஆழமாப் பதிஞ்சிடிச்சு. ரெண்டு வயசிலேயிருந்து அவங்கம்மாவ அவ மிஸ் பண்ணியிருக்கா.ஏங்கியிருக்கா.அதுனால அம்மவோட கால் மேலயும் காலணி மேலயும் நேஹாவுக்கு வெறுப்பு.காலும் காலணியும்இல்லாம அவ அவம்மாவ பார்க்க நினைச்சு அதையே தன் மனசுல ஆழமா பதிச்சு வச்சிருக்கா.இதனாலேயே அம்மாவ காலில்லாம அவ வரையறா. தவிர காலணிகளக் கண்டா கூட வெறுக்கறா. அப்படி வரையும் போது அவளுடைய ஏக்கத்துக்கு மருந்து கிடைக்கிது. இது ஒரு நிலை தானே ஒழிய வியாதி இல்லை. அதனால நீங்க பயப்படாம எப்பவும் போல அவ கிட்ட நடந்துக்குங்க. ஆறு வயசுல சுலபமா அவள மறக்க வைக்க முடியும். வேலைய நீங்க விட்டுட்டு அவகூடவே இருந்து, அவளுக்கு மட்டும் முக்கியத்துவம் கொடுங்க. நிச்சயம் அவ மறப்பா. மாறுவா. இத இப்பிடியே விட்டா பதின்ம வயது ஆக ஆக அவளுக்கே ஏன்னு தெரியாம சில வெறுப்புகள் அவளிடத்துல வளரும். உங்க மகள விட வேல ஒண்ணும் பெரிசுன்னு எனக்குத்தோணல. நிச்சயமா நீங்களும் அதேதான் நினைப்பீங்கன்னு தெரியும். அதிகம் யோசிக்காம வேலைய விட்டுட்டு ஆறு மாதம் தொடர்ந்து கண்காணிச்சுட்டு வந்து என்ன பாருங்க", விடை பெற்றுத் திரும்பிய என் மனம், வேலையை விடத் தீர்மானித்தது.

நேஹாவின் தேவைகளை மையமாய் வைத்து நான் யோசிக்கவில்லையோ. இத்தனை நாள் அவளை இரண்டாம் நிலையிலும் வேலையை முன்னிலையிலும் வைத்தே நான் யோசித்திருப்பது புரிய ஆரம்பித்தது. நேஹாவின் இடத்திலிருந்து நான் சிந்திக்கத் தவறி விட்டிருந்தது புரிந்தது. இதையே அம்மா சொன்னபோது ஏன் மனம் ஏற்க வில்லை? என்று

நினைக்காமல் இருக்க முடியவில்லை. மனோதத்துவம் என்று அறியாமலேயே அனுபவத்தில் அம்மா பற்பலவற்றைக் கற்றிப்பதை எண்ணி மனம் வியந்தது.

வீட்டிற்குச்சென்றதுமே முதல் வேலையாக அம்மாவைத் தொலை பேசியில் அழைத்தேன். தீர்மானத்தைக் கூறியதுமே அம்மா மகிழ்ச்சியில் மலர்ந்தது தொலைபேசியானாலும் என்னால் உணர முடிந்தது. குரலில் நெகிழ்ச்சியுடன் தன் சந்தோஅத்தை வெளிப்படுத்தினார். முழு மனதுடன் அடுத்ததாக என் ராஜினாமாக் கடிதத்தை கணினியில் தட்ட ஆரம்பித்தேன். நண்பர்களும் உடன் வேலை செய்பவர்களும் நிச்சயம் அருமையான வேலையை உதறுகிறாயே என்று தான் சொல்வார்கள். அதற்கெல்லாம் சலனமே படக் கூடாதென்று என் மனதிற்கு விடாமல் சொல்லிக்கொண்டிருந்தேன். வேலையை விட்டதும் மனதிற்கு வருத்தமாகத் தானிருக்கும். என் வருத்தத்தை மறக்க காலம் நிச்சயம் எனக்கு உதவும்.நேஹாவின் நினைவில் நான் நொண்டியாவதையோ இல்லை அவள் வாழ்க்கையையே நொண்டியாக்குவதையோ தாயான என் மனம் எப்படி ஏற்கும்?

sankari01sg@yahoo.com
பதிவுகள் ஆகஸ்ட் 2004; இதழ் 56.

**31. குறுநாவல்: 'தூதர்கள்' - ஆசி. கந்தராசா -**

டிஸ்கோ பண்டா, பேர்ளின் சுரங்கவண்டி நிலைய வாங்கொன்றில் அமர்ந்திருந்தான். அவன் அருகில் நிறை வெறியில் சில்வா! டிஸ்கோ பண்டாவின் வாயிலிருந்தும் அல்ககோல் நெடி வீசியது. அவன் போதையில் தடுமாறவில்லை. நிதானமாகவே புகையை உள்ளுக்கு இழுத்து வளையம் வளையமாக வெளியே ஊதிக் கொண்டிருந்தான். அவர்கள் இருவரதும் வாழ்க்கை தடம்மாறி, தள்ளாட்டத்துடன் உருண்டு கொண்டிருப்பதை அவர்களுடைய தோற்றங்கள் வெளிப்படுத்தின. இருவரும் ஒரு காலத்தில் என்னுடன் படித்த கலாசாலை மாணவர்கள். ஜேர்மனியில் படித்த காலத்திலே டிஸ்கோ பண்டா எனக்கு அறிமுகமானான். ஜேர்மனி, கிழக்கும் மேற்குமாக இரண்டு நாடுகளாகப் பிரிந்திருந்த காலத்தில் இது நடந்தது. பண்டா அப்போது கிழக்கு ஜேர்மன் பல்கலைக்கழகத்தில் பொறியியல் துறையில் பட்டப்படிப்பு படித்துக் கொண்டிருந்தான். இடையில் ஒரு வரலாற்றுக் குறிப்பு! 1949 ஒக்டோபர் மாதம் ஏழாம் திகதி தொடக்கம், 1989 நவம்பர் மாதம் ஒன்பதாம் திகதிவரை நாலு தசாப்தங்கள் ஜேர்மனியின் கிழக்குப்பகுதி, கம்யூனிச ஆட்சியின்கீழ், ஜேர்மன் ஜனநாயகக் குடியரசு என்ற பெயருடன் விளங்கிற்று. அந்தக் காலங்களில், வளர்முக நாடுகளிலுள்ள கம்யூனிசக் கட்சிகள,; தங்கள் ஆதரவாளர்களின் பிள்ளைகளுக்கு புலமைப் பரிசுகள் வழங்கி கம்யூனிச நாடுகளுக்கு அனுப்பிவைத்தன.

இந்தவகையில் கிழக்கு ஜேர்மனிக்கு வந்து சேர்ந்தவன் தான் பண்டா. கிராமத்து விவசாயியான அவனுடைய மாமா கம்யூனிசக்கட்சியின் தீவிர அங்கத்தவர். அவருக்கு கட்சியில் இருந்த செல்வாக்கு காரணமாகவே பண்டாவுக்கு கிழக்கு ஜேர்மனி வரும் அதிர்ஷ்டம் வாய்த்தது.

மாமாவுக்கு ஒரு அழகான பெண் இருப்பதாகவும், அவளையே படிப்புமுடிய கல்யாணம் செய்து கொண்டு இனிதே வாழப்போவதாகவும் பண்டா வந்த புதிதில் இலங்கை மாணவர்கள் மத்தியில் சொல்லித்திரிந்தான்.

பண்டா மகியங்கனை காட்டின் அயலிலுள்ள சிங்கள கிராமத்தில் பிறந்து வளர்ந்தவன். ஆங்கில மொழி அறிவு குறைவு. ஜேர்மனிக்கு விமானம் ஏறுவதற்குத்தான் அவன் முதன்முதலிலே கொழும்பு வந்தவன் என சில்வா எப்போதும் அவனுக்குப் பழிப்புக்காட்டுவான். பண்டா அதனை பொருட்படுத்துவதில்லை.

ஜேர்மனியில் ஆங்கில மொழி ஒரு செல்லாக் காசு. சகல அலுவல்களும் அங்கு ஜேர்மன் மொழியில்தான். படிக்க வரும் மாணவர்களுக்கு ஒரு வருடம் தீவிர ஜேர்மன் மொழிப்பயிற்சி தரப்படும். அதன்பின் அவர்கள் பல்கலைக் கழகத்தில் ஜேர்மன் மொழியிலேயே கல்வி கற்கவேண்டும். தண்ணீரில் குதித்தால்தான் நீந்தப்பழகலாம் என்பார்களே. இதை மொழிப்பயிற்சியில் அவர்கள் கடைப்பிடித்தார்கள்.

ஜேர்மனிக்கு பண்டா வந்த அதே மாணவர் குழுவில் வந்தவன்தான் சில்வா. அவனுக்கு தான் கொழும்பு 'கறுவாத்தோட்டத்தான்' என்கிற கெறு. அந்தப்பகுதியில் பரம்பரை பரம்பரையாக பணக்காரர்களே வாழ்ந்தார்கள். அவனுடைய தந்தைக்குப் பணத்தினாலே சம்பாதிக்க முடிந்த அரசியல் தொடர்பும் இருந்தது. இதனால், கொழுத்த வருவாய்தரும் அரச கூட்டுத்தாபனம் ஒன்றின் சகல அதிகாரங்களும் கொண்ட பொது முகாமையாளராகப் பவனிவந்தார்.

சில்வாவின் தகப்பனுக்கு கிழக்கு ஜேர்மன் தூதுவருடன் இருந்த நட்பால், நேரடியாகப் புலமைப்பரிசில் பெற்று பல்கலைக்கழகத்துக்குப் படிக்க வந்தான் சில்வா. அவன் மேட்டுக்குடிச் சிங்களவனின் கொழுப்புடன் வளர்ந்தவன். ஜேர்மனிக்கு வந்த பின்னரும் சிறிது காலம், அந்தக் கொழுப்புக் கரையாத மிடுக்குடன் வாழ்ந்தான்.

உண்மையைச் சொன்னால், பண்டாவின் நெற்றியில் கிராமத்தான் என்று எழுதி ஒட்டியதுபோலவே தோன்றினான். சகசிங்கள மாணவர்களுக்கு அவனுடைய கிராமியத்தை கேலி செய்வது இன்பமான பொழுது போக்காக இருந்தது. அவனுக்கு முன்னாலேயே அவனை மையமாக வைத்துப் பல மோசமான மோடிக் கதைகள் புனைந்து பரிகசிப்பார்கள். அதிக காலம் இந்த நிலமை நீடிக்க பண்டா விட்டுவிடவில்லை.

தோல்வியை ஒப்புக்கொள்ளாத கிராமத்துப் போராளி அவன். இந்தக் கேலிகளை ஒரு சவாலாக ஏற்று, கிராமத்தானிடம் இயல்பாக உள்ள ரோச உணர்ச்சியுடன் ஜேர்மன் மொழியை வசப்படுத்தி விறுவிறுவென முன்னேறினான். அந்தக் காலங்களில் அங்குள்ள பல்கலைக்கழக மாணவர்கள் அதற்கான விடுதியில்தான் தங்க வேண்டும். பெண்கள் ஆண்கள் அனைவருக்கும் ஒரேவிடுதிதான். விடுதி அறைகள் புறாக்கூடு போன்று சிறியவை. மேலும் கீழுமாக இரட்டைத் தட்டுக் கட்டில் போட்டிருப்பார்கள். அறையில் வெளிநாட்டு மாணவன் தங்கியிருந்தால், அவனுடன் ஜேர்மன் மாணவன் ஒருவனை இணைத்திருப்பார்கள். அந்தவகையில்; பண்டாவின் அறையிலே எரிக் குடியிருந்தான்.

அறையில் வசிக்கும் சகா பெரும்பாலும் கொம்யூனிச கொள்கையில் பிடிப்புள்ளவனாக இருப்பான். இது ஒரு வகையில் மூளைச்சலவை செய்யும் தந்திரம் அல்லது கண்காணிப்பு நடவடிக்கை என்று அந்நிய மாணாக்கர் குசுகுசுக்கவும் செய்தார்கள். எது எப்படியிருந்தாலும், பல்கலைக்கழக விடுதிகளில், கேளிக்கைகளுக்கு குறையிருக்கவில்லை. புதன், வெள்ளி, சனிக்கிழமைகளில் இரவிரவாக விடுதியின் மேல்மாடி கிளப்பில் 'டிஸ்கோ' நடைபெறும்.

இந்த மூன்று நாட்களையும் பண்டா தவறவிடுவதில்லை. தன் கௌரவத்தை நிலைநாட்டிக் கொள்ள டிஸ்கோ நிகழ்ச்சிகளை அவன் மகா கெட்டித்தனமாகப் பயன்படுத்திக்

கொண்டான். முயற்சி பயன் தந்தது. அவனது பெயருடன் 'டிஸ்கோ' ஒட்டிக்கொண்டு நாளடைவில் அவனது பெயர் டிஸ்கோ பண்டா எனப் பிரபலமடையலாயிற்று.

கிராமத்தில் பண்டா கண்டிய நடனத்தை முறைப்படி பயின்றவன். கொண்டாட்ட நாட்களிலே போர்த்துக்கேயர் ஆட்சியின் சின்னமாகச் சிங்களவருடன் ஒட்டிக் கொண்ட 'பைலா' ஆட்டங்களிலும் சிரத்தையுடன் கலந்து கொள்பவன். இவை கைகொடுக்வே, மேல் நாட்டு டிஸ்கோ நடனங்களைச் சிரமமின்றி பழகி ஒரு வருடத்துக்குள் சிறந்த ஆட்டக்காரன் என புகழும் பெற்றான். ஜேர்மன் பல்கலைக்கழக பெண்களும் இவனுடன் போட்டி போட்டுக் கொண்டு ஆடத் தொடங்கவே, ஜேர்மன் மாணாக்கரிடையே பண்டா மிகவும் பிரபல்யமாகிவிட்டான். அவனைக் கேலி செய்த சிங்கள சகாக்கள் இதைக்கண்டு வாயைப்பிளந்து வீணீர் வடிக்காத குறைதான்.

பல்கலைக்கழகத்தின் இரண்டாம் ஆண்டு முடிவில் டிஸ்கோ பண்டா பட்டிக்காட்டுச் சிங்களவனல்ல. அவன் ஒரு 'மொடோன்' சிறீலங்கன்! அவனது ஆங்கில மொழி அறிவின்மை, ஜேர்மன் மொழி பயில்வதற்கு வசதிசெய்திருக்கலாம். ஒரு குழந்தை தாய் மொழியை எப்படி நேரடியாகக் கற்கிறதோ அதே போல பண்டாவும் ஜேர்மன் மொழி பயின்று ஒறிஜினல் ஜேர்மன்காரன்போல் பேசினான். ஜேர்மன் மொழியிலேயே பண்டா சிந்திக்கத் துவங்கியது, பல்கலைக்கழக படிப்பில் முன்னிலைக்கு வருவதை இலகுவாக்கியிருக்கலாம்.

ஆரம்ப நாட்களிலே பண்டாவை கேலி செய்த சகாக்கள் ;அப்பே சகோதரய' என இப்போது பவ்யமாக பழக ஆரம்பித்தார்கள். சில்வா அவனுடன் வலிந்து நட்பு பாராட்டத் துவங்கிய காலத்திலே, பண்டாவின் உதட்டில் ஓர் அர்த்தமுள்ள புன்னகை முகிழ்ந்து மறைவதை நான் அவதானித்திக்கத் தவறவில்லை.

கொம்யூனிச ஆட்சியில் ஆடம்பரப் பொருள்களை 'முதலாளித்துவச் சீரழிவு' என்று ஒதுக்கும் மனோநிலை வளர்க்கப்பட்டது. அத்தியாவசியப் பொருள்கள் கிடைப்பதில் மட்டும் மனித மனம் திருப்திப்படுகிறதா?

மேற்கு ஜேர்மனியில் அமோகமாக உலவிய ஆடம்பரப் பொருள்களை ஏன் கிழக்கு ஜேர்மன் மக்கள் இழக்கவேண்டும் என்கிற ஆதங்கம் காலப்போக்கிலே அதி வளர்ச்சி காணலாயிற்று.

கிழக்கு ஜேர்மன் மக்கள் மேற்கு ஜேர்மனிக்கு செல்லுதல் மிகவும் சிரமமாக்கப்பட்ட நிலையிலும் வெளிநாட்டு மாணாக்கர்கள், அங்கு தங்கு தடையி;ன்றி சென்று வந்தார்கள். இது சர்வதேச சமூகத்தில் நல்லபிப்பிராயம் சம்பாதிக்கும் உத்தியே. இதனைப் பயன்படுத்தி வெளிநாட்டு மாணாக்கர் மேற்கு ஜேர்மனி சென்று ஆடம்பரப் பொருட்களை

கிழக்கு ஜேர்மனிக்கு கொண்டுவந்து சேர்த்தார்கள்.

கிழக்கு ஜேர்மன் பணம் மேற்கு ஜேர்மனியில் செல்லாது. ஆனால் சில்வாவுக்கோ, கிடைக்கும் புலமைப்பரிசில் பணத்துக்கு மேலதிகமாக அவனது தந்தை இலங்கையில் இருந்து அமெரிக்க டொலர்களை கிரமமாக அனுப்பி வந்தார். இதனால் அவன் ஒரு கொம்யூனிச நாட்டில், முதலாளி என்ற திமிருடன் வாழமுடிந்தது.

குடும்பத்தின் பரம்பரைச் செல்வாக்கில் சில்வா மேல்தட்டு வாழ்க்கையைச் சுகித்தவன். தனித்திறமை எதுவுமில்லை. ஜேர்மன் மொழியின் கடினமான இலக்கணத்தையும் அவனால் கிரகித்துக் கொள்ள இயலவில்லை. மொh ழிச் சிக்கலினால் சில்வாவின் பல்கலைக்கழகப் படிப்பும் சில்லெடுப்பாக மாறத் துவங்கியது.

ஜேர்மன் இளம் பெண்களுடன் பண்டாவுக்கு இருக்கும் செல்வாக்கைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்த விரும்பிய சில்வா, இப்பொழுது பண்டா எதைச் சொன்னாலும் கேட்கும் நிலமைக்கு மாறிவிட்டான். இதெல்லாம் சகஜம் ‘மச்சாங்’ என்பது சில்வாவின் சமாதானமாக அமைந்தது. இருவரும் அடிக்கடி மேற்கு ஜேர்மனி சென்று அமெரிக்க டொலரில் ஆடம்பரப் பொருள்களை வாங்கிவரத் துவங்கினார்கள்.

பண்டா கொண்டுவரும் ஆடம்பரப் பொருள்கள், அவனது டிஸ்கோ ஆட்டம், ஜேர்மன் மொழிப் புலமை எல்லாம் ஜேர்மன் நாட்டின் வெள்ளைக்காரக் ‘குட்டிகள்’ மத்தியிலே அவனுடைய செல்வாக்கை அசுர வேகத்தில் வளர்க்க உதவின.

பண்டா என்னதான் ‘மொடோனாக’ மாறினாலும் சாப்பாட்டு விடயத்தில் கிராமத்துச் சிங்களவன்தான். அவனுக்கு சோறு வேண்டும். சிரமம் பாராமல் நன்றாகச் சமைப்பான்.

மேசை கதிரை இருந்தாலும் பீங்கானிலே சோற்றைப் போட்டு ஒரு கையில் ஏந்தி, மறுகையால் உதறி உதறி குழைத்துச் சாப்பிடுவான்.

சனி ஞாயிற்றுக் கிழமைகளில் அவன் சமைக்கும் சோறும், பருப்பும், தேங்காய் சம்பலும், மிரிஸ் மாலுக் கறியும் அங்கு படித்த இலங்கை மாணாக்கரிடையே மிகவும் பிரசித்தம். சிங்கள மண்ணின் சமையல் கலையை ஐரோப்பிய மண்ணிலே நிலை நாட்டியதாக அவனைப் புகழ்ந்து தள்ளினார்கள்.

நாங்கள் அனைவரும் வார இறுதியில் சாமான்களை வாங்கிக் கொண்டு பண்டா முன் ஆஜராவோம். எல்லோருக்கும் சேர்த்து பண்டாவே சிரமம்பாராது சமைப்பான். நாங்கள் அவனுக்கு தொட்டாட்டு வேலைகள் செய்வோம். அவனது அறையில் வசித்த ஜேர்மன் சகா ‘எரி’க்கும் இப்போது கறி சோறு சாப்பிடப் பழகிவிட்டான். சமையலுக்கு தன்

பங்காக அவன் திறமான கோழி இறைச்சி வாங்கிக் கொண்டு வருவான்.

மாலை ஆறுமணியானதும், பண்டா குளித்து 'சென்ற'; அடித்து டிஸ்கோவுக்கு கிளம்பி விடுவான். நாங்களும் அவனுடன் சேர்ந்து போனாலும், அவனுக்கு வாய்க்கும் அதிஸ்டம் மற்றவர்களுக்கு கிடைப்பதில்லை. பெண்கள் கூட்டத்தின் மத்தியில் பண்டாவுக்கு இருந்த செல்வாக்கைப் பார்த்து நாங்களெல்லாம் பொறாமைப்பட்டது உண்மைதான். ஆனால் அதை வெளியில் காட்டிக் கொள்வதில்லை.

கறுவாத் தோட்டத்து மேட்டுக்குடிப் பிறப்புக் கர்வம் சில்வாவை உலுக்கி எடுக்கவே, 'இந்தா நானும் ஒரு பெட்டையை பிடிக்கிறன்' என்று அமெரிக்க டொலர்களை விசுக்கி எறிந்தான். இறுதியில் ஒருநாள், ஒரு பெண்ணைக் கூட்டிவந்து, அவள் தன்னுடைய சிநேகிதி என்றும் அவள் பெயர் 'மோனிக்கா' என்றும், அறிமுகப்படுத்தினான். அவளுக்கு சில்வாவிலும் பார்க்க, குறைந்தது ஐந்து வயதாகிலும் அதிகமாக இருக்கும் என்பது, அவளுடைய முதிர்ந்த முகத்தைப் பார்த்ததுமே தெரிந்தது. மோனிக்காவுடன் ஒரு சிறுவனும் வந்திருந்தான்.

தன்னுடைய முந்திய சிநேகிதனுக்கு பிறந்த மகன் என்று கூச்சப்படாமல் அறிமுகம் செய்து வைத்தாள்.

சிரிப்பை நான் என்னுள் அடக்கிக்கொண்டேன்.

'என்ன சில்வா, கண்டோடை மாட்டை அவிட்டிருக்கிறாய்' என ஜேர்மன் மொழியில் அருகில் நின்ற பரமசிவம் கேட்டான். அவன் இயல்பாகவே ஓர் 'ஓட்டைவாயன்'!

பரமசிவம் ஜேர்மன் மொழியில் கேட்டது சில்வாவுக்கு கொதியைக் கிளப்பவே 'போடா தமிழ் நாயே' எனக் கத்தினான்.

'என்னடா...?' என கோபத்துடன் எழும்பினான் பரமசிவம். தமிழ் மொழி, தமிழ்; இனம் என்ற விடயங்களில் அவன் எப்போதும் உணர்ச்சி வசப்படுவான். கொம்யூனிச கட்சியின் வீ பொன்னம்பலம் உதவியுடன் கிழக்கு ஜேர்மனிக்கு படிக்க வந்தவன். சுண்ணாகத்தில் விவசாயம் செய்த ஏழை கமக்காரனின் மகன். மண்வெட்டி பிடித்து உரம் பாய்ந்த கைகள். அவன் அடித்தால் சில்வா நொருங்கிப் போவான்.

இனரீதியாக நிலமை திசை திரும்பும் விபரீதத்தை புரிந்து கொண்ட பண்டா, அசலான கொம்யூனிச பரம்பரையில் வளர்ந்தவன் என்கிற தோரணையில் 'இனிமேல் சாப்பிட வருவதென்றால் இங்கு தமிழ் சிங்கள துவேசம் இருக்கக்கூடாது' எனக் கண்டிப்புடன் கூறினான்.

பண்டாவின் சாப்பாட்டுச் சுவை இருவரையும் பெட்டிப் பாம்பாக அடக்கிவிட்டது.

எரிக்கிக்கு தமிழ் சிங்கள அரசியல் அவ்வளவாகப் புரியாது. கிழக்கு ஜேர்மனிக்கு அப்போது மேற்கு நாடுகளின் சஞ்சிகைகள் பத்திரிகைகள் இறக்குமதியாகாததால், வாசித்து அறியும் வாய்ப்பும் குறைவு. அங்கு படித்த பதினேழு சிறீலங்கன் மாணவர்களுள் நானும் பரமசிவமும் மாத்திரமே தமிழர்கள் என்பதால், அரசியல் விசயத்தில் அடக்கியே வாசித்தோம். இருப்பினும் சில்வாவின் சிங்கள திமிர்க் கதைகளுக்கு பரமசிவம் பொங்கி எழுவான். உணர்ச்சிகளின் கெம்புதலினால் எதுவும் நடக்கமாட்டாது என்பதை விளக்கி பரமசிவத்தை ஓரளவு அடக்கி வைத்திருந்தேன்.

எரிக் நாளடைவில் தமிழ் சிங்களப் பிரச்சனையின் ஆதிமூலத்தை எப்படியோ அறிந்து கொண்டான். சில்வா துவேஷம் பேசும் போதெல்லாம், எரிக் அவனைக் கண்டிப்பான். பண்டா எரிக்குக்கு துணை நிற்பான்.

சில்வா கிடைக்கும் பணத்தில் பெரும்பகுதியை மது குடிப்பதில் செலவழித்துவிடுவான். இலங்கையில் அரசாங்கம் மாறியதால் சில்வாவின் தந்தை வகித்த பதவியும் பறிபோனது. ஆதிகார துர்ப்பிரயோகம் செய்தவர் என புதிய அரசால் குற்றம் சாட்டப்பட்டார். அவருடைய செல்வாக்கும் ஆடம்பரமும் சுருங்கின. இதனால் வீட்டில் இருந்து வந்த டொலர்களின் வரத்தும் குறைந்தது.

நாங்கள் படித்த காலத்தில கிழக்கு ஜேர்மன் இளம் பெண்கள் மத்தியிலே ஒரு 'போக்கு' இருந்தது. அவர்கள் வெளிநாட்டுப் பிரஜையைத் திருமணம் செய்தால் கணவனின் நாட்டுக்கு செல்ல சட்டப்படி உரிமையுண்டு. 'கணவன் நாட்டுக்குச் செல்கிறேன்' எனச் சாக்குச் சொல்லி எல்லையைக் கடந்து மேற்கு ஜேர்மனிக்கு வந்ததும், பெரும்பாலான பெண்கள் தற்காலிக கணவனைக் கழற்றிவிட்டு, புதிய இடத்தில் புதுவாழ்க்கையைத் துவங்குவதற்கு அலைவதும் வழக்கமாகிவிட்டது.

இந்த உத்தியை மோனிக்கா நன்கு அறிந்திருந்தாள். மேற்கு ஜேர்மனி சென்று புதிய வாழ்க்கை ஒன்றினை அமைப்பதுவே அவளுடைய திட்டம். இதற்காக அவள் சில்வாவின் சபலத்தினை முறையாகப் பயன்படுத்தி அவனுடன் தொற்றிக் கொண்டாள்.

சில்வா படிப்பில் கெட்டிக்காரன் அல்ல. ஆடம்பரச்செலவாலும், குடியாலும் சில்வா படிப்பில் கோட்டைவிட பல்கலைக்கழகம் அவனை வெளியேற்றியது. படிக்காவிட்டால் கிழக்கு ஜேர்மனியில் வசிக்க முடியாது. இதனால் மோனிக்காவை சட்டப்படி மணம் முடித்து, மாடும் கன்றுமாக கிழக்கு ஜேர்மனியை விட்டு வெளியேறிவிட்டான்.

அவனுக்கிருந்த மேட்டுக்குடி திமிர் காரணமாக அதன்பிறகு அவனைப்பற்றி அவனது

சகாக்களும் அதிகமாகக் கவலைப்படவில்லை.

டிஸ்கோ பண்டா படிப்பும் டிஸ்கோவுமாக சுற்றித் திரிந்தான். அவனது 'மன்மத செல்வாக்கு' அவனுடன் கூடப்படித்த போலந்து நாட்டுப் பெட்டையின் வயிற்றில் விளைந்தது. இருவரும் பல்கலைக்கழகப் படிப்பின் இறுதியாண்டில் படிக்கும் போது, பண்டாவின் ஆண் குழந்தையைப் போலந்து பெண் பெற்றெடுத்தாள். அதற்குப்பின் பண்டா அடங்கிவிட்டான். அந்தப் பெண்ணுடனும் குழந்தையுடனும் அவன் வேறொரு விடுதியிலே தங்கியிருந்தான். நாங்களும் தேவையில்லாமல் அவர்களுக்கு தொந்தரவு கொடுப்பதைத் தவிர்த்துக் கொண்டோம்.

'மாமன்ரை பெட்டையின்ரை நிலை என்ன? என்று பண்டாவைக் கேக்கட்டோ' என பரமசிவம் என்னை இடையிடையே கேட்பான்.

'சும்மா இரு. உள்ளதுக்கை நல்ல சிங்களவன் அவன்தான். அவனையும் விரோதியாக மாற்றிவிடாதே' என பரமசிவத்தை வழக்கம் போல தடுத்து வைத்திருந்தேன்.

துள்ளுற மாடு பொதி சுமக்கும் என்பார்கள். அது பண்டாவின் விஷயத்திலும் நடந்தது. படிப்பு முடிய போலந்து நாட்டுப்பெண் நாடு திரும்ப வேண்டும். போலந்து நாட்டின் அப்போதைய கம்யூனிச அரசும் பெண்ணின் உறவினர்களும் பண்டாவை ஏற்கத் தயாரில்லை. அவள் போலந்து நாட்டுக் கடவுச்சீட்டு வைத்திருப்பதால், ஜேர்மன் பெண்களைப்போல மேற்கு ஜேர்மனிக்குச் செல்லும் வாய்ப்பு இருக்கவில்லை. போலந்துப் பெண் ஒரு நாள் திடீரென்று காணாமல் போய்விட்டாள். கொம்யூனிச அரசின் கெடுபிடிகளினால் அவள் தனது சொந்த இடமான முசயமமழற நகருக்கு குழந்தையுடன் சென்று விட்டதாக மற்றைய போலந்து நாட்டு மாணவர்கள் பேசிக் கொண்டார்கள். அந்தக் கூற்றின் உண்மையை உறுதி செய்வதற்கு எங்களுக்கு வாய்ப்புக் கிடைக்கவில்லை. இந்த சம்பவத்தின் பின்னர், பண்டா சில நாள்கள் நாயோட்டம் பேயோட்டம் என்று அலைந்தான். பின்னர் படிப்படியாக மனம் தேறியவனாக பழைய டிஸ்கோ பண்டாவாக மாறினான்.

இறுதி ஆண்டின் இறுதி பரீட்சையை நெருங்கிக்கொண்டிருந்தோம். எங்கள் எல்லோரது படிப்பும் நிறைவுறும் தறுவாயிலிருந்ததால், மற்றவர்கள் வாழ்க்கையைப்பற்றி அக்கறைப்பட நேரமில்லாத அவதி. ஒவ்வொருவரும் தத்தமது எதிர்காலங்களைத் திட்டமிடும் தியானத்திலே மூழ்கினார்கள். ஊரிலிருந்து கலியாணம் பற்றிய நெருக்குதல்களும் வந்தன. புதிய சூழ்நிலைக்கு எப்படித் தயாராவது என்கிற கவலைகளும், பரபரப்புகளும் எல்லோரையும் தனிமைப்படுத்தின.

ஈற்றில் நானும் புலம்பெயர்வு என்கிற அலைகளிலே எற்றுண்டு அவுஸ்திரேலியா வந்து

குடும்பஸ்தனாக சிட்னியில் வாழத் தலைப்பட்டேன்.

பண்டாவின் அறை நண்பன் எரிக்குடன் என் நட்பு தொடர்ந்தது. நாங்கள் படித்த காலத்தில் எரிக் பலருக்கும் பலவிதத்திலும் உதவியவன். நானும் பரமசிவமும் சிறுபான்மை இனத்தவர்கள் என்ற காரணத்தால் சிங்களவர்கள் துவேஷம் பேசிய போழுது தமிழரின் உரிமைக்கு குரல் கொடுத்தவன். கம்யூனிச தத்துவத்தை உண்மையாக நேசிப்பவன். மனதில் பட்டதை வெளிப்படையாகப் பேசுவான். இதனால், அவனுடன் நட்பு பாராட்டி வாழ்வதை நான் பெருமையாகக் கருதினேன். என் நட்பினைத் தொடர்வதில் அவனும் அக்கறை காட்டினான்.

அரசியல் நிர்ப்பந்தங்களினால் பிளவுபட்டிருந்த ஜேர்மனி 1989 ம் ஆண்டு ஒன்றிணைந்தது. இந்நிகழ்வு எரிக்கின் வாழ்க்கையிலும் பல மாற்றங்களை ஏற்படுத்தியது. அவற்றை விரிவாக கடிதங்களில் எழுதுவான். கட்டுப்பாடுகள் அறுபட்ட சு10ழலிலே அவன் தன் மனைவி மேரியுடன் விடுமுறை ஒன்றிற்கு அவுஸ்திரேலியா வந்தான்;. நான் அவர்களை வற்புறுத்தி என் வீட்டில் தங்கும்படி செய்து உபசரித்தேன்.

ஒரு நாள்!

இரவு உணவு உண்ணும் போது பழைய நண்பர்கள் பற்றிய கதையில் மேய்ந்தோம். அப்போது பண்டாவைப் பற்றிக் கேட்டேன். அவன் மீது எப்போதும் எனக்கு அபிமானம் இருந்தது. சிங்கள இனவாதத்துக்கு அப்பாலாக அவன் தமிழர்களுடன் நல்லுறவு பேணியமை இதற்கு காரணமாக இருக்கலாம்.

போலந்து நாட்டுப் பெண் போனபின்னர் ஒரு ஜேர்மன் பெண்ணொருத்தியை, மணம் முடித்து பண்டா வசதியான வாழ்க்கைதேடி அப்போதே மேற்கு ஜேர்மனி சென்றுவிட்டதாகவும், அதன்பின் அவனுடன் தனக்குத் தொடர்பு அறுந்து விட்டதாகவும் எரிக் கூறினான்.

'உனக்குச் சில்வாவை ஞாபகம் இருக்கிறதா?, அவன் கதை பெரியகதை....!' என எரிக் துவங்க, வேண்டாம் என்பதுபோல அவன் மனைவி மேரி சைகை காட்டினாள்.

'பரவாயில்லை அவன் சொல்லட்டும், தடுக்காதே மேரி' என்று நான் அவசரமாகக் குறுக்கிட்டேன்.

எரிக் சட்டம் படித்தவன். ஒன்றிணைந்த ஜேர்மனியில் தற்போது பேர்ளினில் அரச சட்டத்தரணியாக பணிபுரிகிறான். நீதிமன்றத்தில் அரசு சார்பில் ஆஜரானபோது மோனிக்கா ஒரு நாள் குற்றம் சுமத்தப்பட்டவளாக வந்திருந்த சம்பவத்தை எரிக் கூறினான்.

'என்ன குற்றம் செய்தாள்? சில்வாவும் வந்திருந்தானா….?' என ஆவலை அடக்க முடியாமல் கேட்டேன்.

என் ஆர்வத்தைக்கண்ட மேரி 'மற்றவர்களின் வாழ்க்கை அவலங்களை அறிவதற்கு ஆண்களும் இப்படிப் பறப்பார்களா? என்று நமட்டுச் சிரிப்புடன் கேட்டாள்;.

அவளுடைய குறுக்கீட்டை நாங்கள் பெரிதுபடுத்தாது தொடர்ந்தோம்.

'பேர்ளினில் மோனிக்கா அனுமதியின்றி விபசாரம் செய்தமைக்காக கைது செய்யப்பட்டு நீதிமன்றம் கொண்டுவரப்பட்டாள்'

'ஐயொ பாவம். மோனிக்காவிடம் பேசினாயா….?'

'சில்வா பற்றி விசாரித்தேன்… அவள் எதுவும் கூறவில்லை. ஏன் என் விஷயத்தில் நீ தலையிடுகிறாய் என்பதுபோலப் பார்த்துவிட்டு அவள் சென்றுவிட்டாள். மோனிக்கா கிழக்கு ஜேர்மனியில் இருந்த காலத்திலேயே சட்டவிரோதமான முறையில் விபசாரியாக இருந்திருக்க வேண்டும்…' என்று ஏதோ சொல்ல எத்தனித்த எரிக்கை இடைமறித்த மேரி 'அநுமானங்களை வைத்துக் கொண்டு ஒரு பெண்மீது பழி சுமத்தாதே' என்று பெண்ணுரிமைக்குக் குரல் கொடுத்தாள். அத்துடன் கிழக்கு ஜேர்மன் நண்பர்கள் பற்றிய எங்களுடைய கதை தொடராமல் அந்தரத்தில் தொங்கிற்று. சிறிது நேரம் நாம் எதுவும் பேசவில்லை. எங்களுடைய நனவிடை தோய்தலை நிறுத்திவிட்ட குற்ற உணர்வில் மௌனத்தைக் கலைத்தாள் மேரி.

'உன் நாட்டின் தற்போதைய நிலைமை என்ன? சமீபத்தில் சிறீலங்கா சென்றாயா….?' எனக்கேட்டு நமது கதையைத் தொடர வைக்க முயன்றாள்.

'எதைச் சொல்வது, எதைவிடுவது' என்கிற அந்தரத்தில் குழம்பிப்போய் அவளைப் பரிதாபமாகப் பார்த்தேன். 'நான் அரசியல் விஞ்ஞானம் படித்ததவள்;. இலங்கை இனப்பிரச்சினைபற்றி நிறையவே வாசித்தறிந்துள்ளேன். நீங்களெல்லோரும் இனப்பிரச்சனையை மேலெழுந்தவாரியாக மட்டும் பார்க்கிறீர்கள். சிங்களவர்கள் இலங்கையில் பெரும்பான்மையினமாக வாழ்கிறார்கள். இருந்தாலும் இந்திய துணைக்கண்டம் என்கிற பிராந்தியப் பூகோள அமைப்பில் சிங்களவர்கள், தாங்கள் தமிழர்களிலும் பார்க்க குறைந்த எண்ணிக்கையில் வாழ்வதான எண்ணம் அவர்களை அறியாமலே அவர்கள் உள்ளத்தில் வளர்ந்துள்ளது, அல்லது வேண்டுமென்றே அரசியல்வாதிகளினால் வளர்க்கப்பட்டுள்ளது. பெரும்பான்மை இனத்துக்கு இருக்கக்கூடாத சிறுபான்மை உணர்வும், அதனால் ஏற்படும் தாழ்வுச்சிக்கலும்தான் சிங்களர் அரசியல்

தலைமைத்துவத்தை ஆட்டிப்படைக்கும்  பிரச்சனையின் ஆணிவேர்' என மேரி ஒரு அறிவியல் பிரசங்கம் நிகழ்த்தி முடித்தாள்.

'உண்மைதான். மேரியும் நானும் இதுபற்றி நிறையவே பேசியுள்ளோம். சோறுகறிச் சாப்பாட்டில் எனக்கிருக்கும் மோகத்தால் மேரி என்னை 'அரைச் சிறீலங்கன்' என்றே அழைப்பாள். நாங்கள் படித்த காலத்தில் சில்வா ஒருவன்தான் இனத்துவேசம் பேசியவன். குடும்பச் செல்வாக்கை தக்கவைத்துக் கொள்ள மேட்டுக்குடிச் சிங்களவருக்கு அது அவசியமாக இருந்திருக்கலாம். ஆனால் பண்டாவை நினைத்துப்பார். அவன் எப்போதும் நடுநிலையாக சிந்திப்பவனாகவே கணிக்கப்பட்டவன். சிறுபான்மை இனம் என்கிற தாழ்வு மனப்பான்மை எப்படி பொரும்பான்மை இனச் சிங்களவரின் பலவீனமோ, அப்படியே 'மந்தைப் புத்தியுடன்' நியாய அநியாயங்களை சீர்தூக்கிப் பார்க்காது இனக் கலவரங்களின்போது செயற்படுதலும், சிங்களவருடைய இன்னொரு குணமாகும். ஒருவகையில் அவர்கள் அவுஸ்திரேலிய செம்மரியாடுகளைப் போன்றவர்கள்தான். ஒரு ஆடு சென்றால் மறு ஆடு யோசிக்காது பின் தொடரும்' என்று கூறிச் சிரித்தான் எரிக்.

'இதைத்தான் அரசியல் விஞ்ஞானத்தில் 'ஆழடி ஆநவெயடவைல' என்பார்கள். ஆளும்வர்க்கம் இதையே தனது அரசியல் மேட்டிமைக்கான மூலதனமாகப் பயன்படுத்திக் கொள்கிறது' என்று விளக்கம் சொன்னாள் மேரி.இலங்கை இனப்பிரச்சினை விடையத்தில் மேரியின் அணுகுமுறையிலே தொனித்த நியாயம் என்னை வியப்படைய வைத்தது.

-2-

பதினைந்து வருடங்களின்பின் டிஸ்கோ பண்டாவை கொழும்பில் சற்றும் எதிர்பாராத விதமாகச் சந்திக்க நேர்ந்தது. உல்லாசப் பயணிகள் தங்கும் ஐந்து நட்சத்திர ஹோட்டலிலே, தான் முகாமையாளராகப் பணியாற்றுவதாக சொன்னான். தான் படித்த துறையில், தனக்கு போதிய தொழில் அநுபவம் இன்மையால் நல்ல உத்தியோகம் பெறமுடியவில்லை என்றான். இருப்பினும் தான் பயின்ற ஜேர்மன் மொழி அறிவே தனக்கு கைகொடுத்து உதவியுள்ளதாகவும் சொன்னான்.

பரஸ்பரம் விசாரணைகள் முடிந்ததும், மறுநாள்  இரவு உணவுக்குத் தனது ஹோட்டலுக்கு வருமாறு வற்புறுத்தி, ஹோட்டல் வாகனத்தை எனது இருப்பிடத்துக்கு அனுப்புவாதாக் கூறி, என் முகவரியையும் பெற்றுச் சென்றான். மறுநாள் காலை என் அலைபேசியிலே தொடர்பு கொண்டு நமது சந்திப்பை உற்சாகத்துடன் நினைவு படுத்தியதுடன், வாக்குத் தவறாது மாலையில் சொகுசு வாகனத்தையும் என்னை அழைத்துவர அனுப்பியிருந்தான்.

ஹோட்டல் அலுவலகத்தில் பண்டாவைச் சந்தித்தபோது, 'எத்தனை காலம்' என என்னை ஆரத்தழுவி வரவேற்று அன்புடன் உபசரித்தான். 'உன்னுடைய பிரசித்தி பெற்ற தேங்காய் சம்பல் இங்கே கிடைக்குமா....?' என பகடியாகக் கேட்டேன். 'அதை மறப்பேனா...? உனக்காக மாசிக் கருவாடும் சின்ன வெங்காயமும் போட்ட அசல் தேங்காய் சம்பலும், காரமான 'கட்ட' சம்பலும் செய்யுமாறு ஓடர் கொடுத்துள்ளேன்' என்றவன், தொலைபேசியில் யாரையோ அலுவலகத்துக்கு வருமாறு அழைத்தான். சிறிது நேரத்தில், கரையோரச் சிங்களத்திகள் பாணியிலே சேலை அணிந்த ஒரு பெண் அங்கு வந்து சேர்ந்தாள். அவளை பண்டா தன் மனைவி என்று அறிமுகப்படுத்தியது நான் சற்றும் எதிர்பார்க்காததொன்று.

'ஆயுபோவான் மாத்தையா' என்று குனிந்து கைகூப்பி அவள் வணக்கம் சொன்னாள்.

அப்போது ஹோட்டலின் தலைமை சமையல்காரர் 'உணவு ரெடி' என்று தகவல் அனுப்பினார். ஹோட்டல் சாப்பாட்டு மண்டபத்தின் வசதியான மூலையில் நாம் மூவரும் அமர்ந்தோம்.

ஊபசரிப்புக்கு பஞ்சமில்லை. ஹோட்டல் மேலாளரின் விருந்தினரல்லவா நான்!

பண்டாவும் நானும் ஜேர்மன் பல்கலைக்கழக நாள்களின் நினைவலைகளில் மிதக்கலானோம். பண்டாவின் சிங்கள மனைவிக்கு ஆங்கிலம் புரியாது என்பதைச் சிறிது நேரத்தில் தெரிந்து கொண்டேன். பண்டாவுக்கு இன்னமும் ஆங்கிலம் அரைகுறைதான். எனக்கோ சிங்களம் 'கொஞ்சங் கொஞ்சங்@ டிக்க டிக்க புளுவாங்'...!

இதனால் ஜேர்மன் மொழியில் உரையாடுவது எங்களுக்கு இலகுவாகவும் சந்தோசமாகவும் இருந்தது.

அருகில் இருந்த சாப்பாட்டு மேசையில் தம்பதிகளாக உணவருந்திக் கொண்டிருந்த ஜேர்மன் உல்லாசப் பயணிகள் எங்கள் அருகில் வந்து ஆச்சரியமாகப் பார்த்தார்கள்.

இரண்டு இலங்கையர்கள், சொந்த மொழியை விடுத்து, ஜேர்மன் மொழியிலே கொழும்பில் உரையாடுவது விசித்திரமாக இருக்கிறது எனச் சொல்லிச் சிரித்தார்கள். உண்மைதான். உள்நாட்டின் மொழிப்பிரச்சினை இந்த நாட்டின் இரண்டு குடிமக்களுக்கு அந்நிய மொழி ஒன்றினைப் பொது மொழியாக்கிய விசித்திரம் சடுதியாக மின்னலைப்போல என் மூளையிலே பளிச்சிட்டு மறைந்தது.

பண்டாவின் சிங்கள மனைவிக்கு நாம் உரையாடுவது எதுவுமே புரியப் போவதில்லை என்ற தைரியத்தில், 'உனது மாமாவின் மகளா இவள்?' எனக் கேட்டேன்.

'இல்லை மச்சான். உன்னைப் பேல நானும் மாமாவின் மகளை முதலிலேயே கட்டியிருந்தால் இப்ப சந்தோசமாக இருந்திருப்பன். எல்லாம் விதி' எனச்சொல்லி வருத்தப்பட்டான்.

அப்போது பரிசாரகன் போலந்து வொட்கா போத்தல் ஒன்றையும், கண்ணாடிக் கிண்ணம் நிறைந்த பனிக்கட்டிகளையும் கொண்டுவந்து வைத்தான். பண்டா எழுந்து சென்று வொட்கா குடிப்பதற்கு ஏற்றவகையில் உறை குளிரில் வைக்கப்பட்ட வெட்கா கிளாஸ்களைக் கொண்டுவந்தான்.

டிஸ்கோ பண்டா ஜேர்மனியில் வாழ்ந்த காலத்திலெயே ஒரு வொட்காபிரியன். போலந்து வொட்கா உலகப்பிரசித்து பெற்றது. கிழக்கு ஜேர்மன் பணத்தை கறுப்புச் சந்தையில்மாற்றி எல்லை கடந்து போலந்து சென்று வொட்கா வாங்கிவருவான். பண்டாவின் முதல் காதலியும் போலந்து போய்த் திரும்பி வரும் போதெல்லாம் விலை உயர்ந்த வொட்கா வாங்கி வருவாள். அந்த வொட்கா போத்தலுக்குள் நீண்டதொரு புல்லிலை இருக்கும். அதுவே அந்த போலந்து வொட்காவின் சிறப்புச் சுவைக்கான காரணமென்பார்கள். அது என்னவகை புல்லு என அறியும் முயற்சியில் அதிதீவிரமாக முயன்றும் இன்று வரையில் என்னால் அந்த இரகசியத்தை அறியமுடியவில்லை! குளிர்ந்த வொட்கா, சிறிதுசிறிதாக வயிற்றுக்குள் இறங்க, மனமும் உடலும் சில்லிட்டது. கொழும்பு வெக்கைக்கு அது இதமாகவும்

இருந்தது. மெதுவாக அவனுடைய போலந்து காதலி பற்றியும், அவளுக்கு பிறந்த மகனைப்பற்றியும் விசாரித்தேன். வொட்கா மயக்கத்திலும் பண்டாவின் முகத்தில் கவலை தோன்றியது.

முன்னாலிருந்த புதிய கிளாஸில் வொட்காவை வாத்து எதுவும் கலக்காமல் பச்சையாக குடித்த பண்டா, சிறிது நேரம் கண்களை மூடி மௌனமானான். பின்னர் தன்னை சுதாகரித்துக் கொண்டு, எவ்வளவோ முயன்றும் அவளைத் தொடர்பு கொள்ள முடியில்லை என்றும், மகனின் எண்ணம் தனக்கு அடிக்கடி வருவதாகவும் சொல்லி வருத்தப்பட்டான். பூராயம் புடுங்கும் ஆர்வம் என்னை விடவில்லை. 'நீ பின்னர் ஜேர்மன் பெட்டை ஒன்றை மணம் முடித்து மேற்கு ஜேர்மனி சென்றதாக அறிந்தேன்' என எரிக் சொன்ன தகவலை, மூலத்தை அறிவிக்காமல் அவிழ்த்தேன்.

பண்டாவின் முகம் சிவந்து கோபம் பொங்கியது.

'அவள் பட்டை வேசை' மேற்கு ஜேர்மனிக்கு போவதற்காக என்னைக் கட்டினவள். புதிதில் ஒழுங்காக இருந்தாள். கிழக்கும் மேற்கும் இணைந்த பின்பு, அவளின் ஜேர்மன் குணத்தைக்

காட்டிவிட்டடாள். என்னை விவாகரத்துச் செய்துவிட்டு இன்னொரு ஜேர்மன்காரனைக் கலியாணம் செய்து, இப்போது பேர்ளினில் வாழ்கிறாள்' என்றவன் ஜேர்மன் பாசையில் உள்ள அத்தனை ஊத்தையான தூஷண வார்த்தைகளையும் ஒன்றுதிரட்டி அவளைத் திட்டித்தீர்த்தான்.

எங்கள் உரையாடல்களுக்கு மத்தியில், பண்டாவின் மனைவி, கலவரமடைந்த முகத்துடன் எதுவும் பேசாமல் பரிதாபமாகப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

பண்டா தனது பழைய கிளாசில் மீதமாக இருந்த வொட்காவை ஒரே மடக்காக் குடித்துத் தன்னைச் சகஜமாக்கினான். 'அவளைக் கட்டினதாலை வந்த ஒரேயொரு நன்மை, எனக்கு ஜேர்மன் பாஸ்போட் கிடைத்ததுதான். எல்லாம் விதி. நான் கனக்கப் பிழைகள் விட்டிட்டன் மச்சான். உன்னையும் பரமசிவத்தையும் போல கட்டுக்கோப்பாய் இருந்து இலங்கைப் பெட்டையைக் கட்டியிருக்கவேணும்' என ஈற்றில் ஞானம் பெற்றதான சுருதியிலே முடித்தான்.

'வெள்ளைத் தோலுக்கும் வெந்தையக் குழம்புக்கும் ஒருசேர ஆசைப்படக்கூடாது பண்டா' என பகிடியாகச் சொன்னேன். அதைக்கேட்டு கவலைகளை மறந்து வாய்விட்டுச் சிரித்தவன், 'நீ சொல்வதில் பாரிய உண்மை இருக்கு மச்சான்' எனச் சொல்லியபடியே சிறுநீர் கழிக்கவென எழுந்து சென்றான்.

நாம் என்னதான் ஜேர்மன் மொழியில் உரையாடினாலும், பண்டாவின் மனைவி முகத்தில் பலவித உணர்ச்சிகள் தோன்றி மறைவதை நான் அவதானிக்கத் தவறவில்லை. பண்டாவின் மனைவி என்முன்னே அமைதியாக உட்கார்ந்திருந்தாள். அவளுடன் எதுவும் பேசாமல் இருப்பது பண்பல்ல. மொழி தெரியாத எனது கையாலாகாத நிலைமையை எண்ணி இலங்கையின் அனைத்து அரசியல்வாதிகளையும் ஒருதடவை மனசுக்குள் சபித்துக் கொண்டேன்.

பண்டா இன்னமும் வரவில்லை. நிலைமையை சுமூகமாக்க அவளைப்பார்த்துப் புன்னகைத்தேன்.

பண்டாவின் மனைவி, 'லொக்கு மாத்தையா (பெரிய கனவானே)' என அழைத்து கண்கலங்கினாள். தனக்குத் தெரிந்த ஆங்கிலச் சொற்களையும், பண்டாவிடம் படித்த சில ஜேர்மன் சொற்களையும் கலந்து சிங்களத்தில் பேசத்துவங்கினாள். அவள் சொன்னவை முழுவதும் எனக்குப் புரியாவிட்டாலும் அதன் சாராத்தை ஓரளவு கிரகித்துக் கொண்டேன்.

பண்டாவின் கிராமத்துக்கு அயலிலுள்ள ஒரு கிராமத்தில் பிறந்தவள் அவள். அவளுடைய

குடும்பம் பாரம்பரியமாக சிங்கள சுதேச வைத்தியம் செய்பவர்கள். ஆயுர்வேதக் கல்லூரியில் படித்தவள். இப்பொழுதும் அவள் 'வெதமாத்தையா'வாகப் பணியாற்றுகிறாள; சடுதியாகப் பண்டாவின் லீலைகள் பற்றி தொடர்ந்தாள். அப்போது அவளின் கண்களில் திரண்ட கண்ணீரை நான் கவனிக்கத் தவறவில்லை. முகத்தை சுத்தம் செய்வதுபோல, மேசையில் இருந்த ரிசுப் பேப்பரால் கண்ணீரைத் துடைத்தபின் மீண்டும் தொடர்ந்தாள். 'நான் முதிர்கன்னி என்பதை தெரிந்து கொண்டே, பண்டா என்னை மணம் முடித்தார். பண்டாவுக்கு இந்த வயதிலும் உள்ள காமவேட்கையை என்னால் தணிக்க முடியாது என்பதை அவர் முன்னமே எண்ணிப் பார்த்திருக்க வேண்டும். பண்டாவுக்கு என்னால் 'அந்த விஷயத்தில்' ஈடுகொடுக்க முடியாது என்பது உண்மைதான். என்றாலும் இங்குவரும் உல்லாசிகளுடன் என் முன்னாலேயே அவர் கூடிக்குலாவுவதை சிங்களப் பெண்ணான என்னால தாங்கமுடியவில்லை அண்ணா. எனது உணர்வுகளை சொஞ்சமேனும் அவருக்கு புரியும்படி எடுத்துச் சொல்லுங்கள்' எனகச் சொல்லி அழுதாள்.

'மாத்தையா' என்று பண்டாவின் அலுவலகத்தில் அழைத்தவள், 'அண்ணா' என்று உறவு கொண்டாடி அழைத்தது என் மனதை உலுக்கியது.

'கவலைப்படாதே அவனுக்கு நான் சகலதையும் எடுத்துச் சொல்கிறேன்' எனச் சொல்லி மானசீகமாக அவளைத் தேற்றினேன்.

'சொல்கிறேன' என்பது மட்டும் பாத்றூமிலிருந்து திரும்பிய பண்டாவுக்கு அரைகுறையாகக் கேட்டிருக்க வேண்டும் 'என்ன சொல்லப் போகிறாய்.....? நாங்கள் கிழக்கு ஜேர்மனியில் படித்த கார்ல் மார்க்ஸின் தத்துவத்தையா?' எனச் சொல்லிச் சிரித்தான். உணவு பரிமாறப்பட்டது. உண்மையைச் சொல்லவேண்டும். அசல்சாப்பாடு. நான் விரும்பி உண்ணும் உணவு வகைகளை ஞாபகம் வைத்து, பண்டா தனது ஹோட்டல் சமையல்காரர்களுக்கு ஓடர் கொடுத்திருக்க வேண்டும். நானும் பண்டாவின் மனைவியும் மௌனமாக சாப்பாட்டில் கவனம் செலுத்தினோம். பண்டாவோ, உல்லாசிகளாக ஹோட்டலுக்கு வரும் பெண்கள் மத்தியில் தனக்கிருக்கும் 'மவுசு' பற்றி அட்டகாசமாகச் சொல்லிக்கொண்டே சாப்பிட்டான்.

அப்போது நான் அதிகம் பேசவில்லை. எனது உரையாடலை பண்டாவின் மனைவி அரைகுறையாக விளங்கக்கூடும். அது தவறான அர்த்தங்களைக் கற்பிக்கலாம். பண்டா தன் மனைவியுடைய அப்பாவித் தனத்தை பரிகசிப்பதுபோல் நடந்து கொள்வதை தவிர்ப்பதற்காக அவர்களிடமிருந்து விடைபெறுவதில் அவசரம் காட்டினேன்.

பண்டாவின் மனைவி இறுதிவரை மிகவும் கண்ணியமாக நடந்து கொண்டது அவள் மீதிருந்த மதிப்பைக் கூட்டியது. பண்பைத் துலைக்காது வாழும் அவள் மிகவும் அபூர்வமானவளாகவே எனக்குத் தோன்றினாள். ஹோட்டல் வாசல்வரை அவளும்

பண்டாவுடன் நடந்து வந்தாள்.

வாசலில் வெளிநாட்டு உல்லாசப் பயணிகள் இலங்கைப் பெண்களுடன் கூடிநின்றார்கள். அவர்களுக்கு கிடைத்த வாடகைக் காதலிகளே அவர்கள். பண்டாவே அவர்களை ஒழுங்கு செய்திருக்கலாம். உல்லாசிகள் தங்கள் இலங்கைக் காதலிகளுக்கு முத்தம் கொடுத்துக் கொண்டிருந்தார்கள். இந்தச் சோரங்களும் இணைந்ததுதான் இலங்கையின் உல்லாசப பயணம் என்பதை நேரில்பார்த்து சங்கடப்பட்டேன்.
பண்டாவின் மனைவியைப் பார்த்தேன். இவற்றை அவள் கண்டு கொள்ளாத லாவகத்திலே சிங்களப் பெண்மையைக் காப்பாற்றி நின்றாள்.

நான் அவர்களிடமிருந்து விடைபெற்று, வாகனத்தில் ஏறும் போது, 'போமஸ்துதி ஐய' (வணக்கம் அண்ணா) என குனிந்து வணங்கி விடைதந்தாள்.

-3-

கொழும்பிலே டிஸ்கோ பண்டாவைச் சந்தித்து பல ஆண்டுகளாகிவிட்டன.

என்னுடைய தொழில் சார்ந்த விஜயம் ஒன்றினை மேற்கொண்டு, பேர்ளின் நகருக்குச் சென்றிருந்தேன். பணிகள் இனிதே நிறைவேறின.

அடுத்த நாள் சிட்னி திரும்புவதாக என் பயண ஏற்பாடு இருந்தது.

எரிக்கையும் அவன் மனைவி மேரியையும் ஒன்றாக இரவு உணவு உண்ண அழைத்திருந்தேன். அந்தச் சுரங்க வண்டி நிலையத்தில் அவர்களை நான் சந்திப்பதாக ஏற்பாடு. அங்கிருந்து நல்ல உணவு விடுதிக்கு செல்வது எமது திட்டம். அவர்களுக்காக நான்
காத்திருந்த பொழுதுதான், டிஸ்கோ பண்டாவையும், சில்வாவையும் ஒன்றாக மேற்படி கோலத்திலே சுரங்கவண்டி நிலைய வாங்கொன்றில் அமர்ந்திருப்பதைப் பார்க்க நேர்ந்தது.

சில்வாவின் முகத்தில் வயதுக்கும் மீறிய முதுமை தெரிந்தது. பல நாள் சவரம் செய்யாத முகம். தலை மயிர்களும் தாடியின் சில பகுதிகளும் ஆங்காங்கே நரைத்துக் காணப்பட்டன. ஆவனுடைய சேட்டில் ஊத்தை அப்பியிருந்தது. சேட்டின் கீழ்ப் பொத்தான்கள் அறுந்து தொலைந்த நிலையில், பியர் குடிக்கும் பழக்கத்தினால் பருத்திருந்த அவன் வயறு துருத்தித் தெரிந்தது.

அவர்களை நான் பார்த்துக் கொண்டு நின்ற நிலையில், சுரங்கவண்டியில் வந்திறங்கிய எரிக்கும் மேரியும் என்னுடன் சேர்ந்து கொண்டார்கள். சில்வாவின் இந்தக் கோலம்

அவர்களுக்கு எத்தகைய ஆச்சரியத்தையும் ஏற்படுத்தவில்லை. படிப்பும் இன்றி, தொழிலும் இன்றி அலையும் அவன், அல்கஹோலிக்காக மாறுவான் என்பது எதிர்பார்த்த ஒன்றுதான். பெற்றோரும் இறந்து, உறவினரும் கைவிடடுவிட்ட பரிதாப நிலை.

வெளிநாடுகளில் வாழ்ந்து, சிங்கள ஆட்சியை 'அப்பே ஆண்டுவா' கோஷம் எழுப்பி ஆதரிக்கும் தூதுவர்களுள் சில்வாவும் ஒருவனாக இருக்கலாம்.

ஆனால் பண்டா.....?

பண்டாவை நான் கொழும்பில் சந்தித்த விபரத்தையும், அங்கு அவன் வசதியாக ஒரு முதிர்கன்னியை மணம்முடித்து வாழும் வர்த்தமானத்தையும் எரிக் தம்பதியினருக்கு முன்னரே சொல்லியிருந்தேன். அத்தகைய பண்டா எப்படி பேர்ளினிலே சில்வாவுடன் கூட்டுச் சேர்ந்தான்? என்னால் ஆச்சரியத்தை அடக்கமுடியவில்லை.

'பண்டா, இது என்ன கோலம்? நீ எப்பொழுது மீண்டும் ஜேர்மனிக்கு வந்தாய்?...' உண்மையான பரிவுடன் கேட்டேன்.

பண்டா பதில்கூற முன், சில்வா முந்திக் கொண்டு சத்தம் போட்டான்.

'கோலத்தில் என்ன பிழை? நல்லாத்தான் இருக்கிறம். நாங்கள் சிங்கங்கள். சிங்களச் சிங்கங்கள். புலியை அடக்கிவிட்டோம் பார்த்தாயா...?

இந்த வெற்றிச் செய்தியை உலகெங்கும் பறைசாற்றும் தூதுவர்கள் நாங்கள்....'

சுரங்க வண்டி நிலையத்திலுள்ள அந்த வாங்கினை அரசியல் மேடையாக்கிக் கத்தினான்.

எரிக்கம் மேரியும் சங்கடத்தில் நெளிந்தார்கள். சில்வா பேசும் அரசியலை இப்பொழுது எரிக் நன்றாக அறிவான். எனவே அங்கிருந்து செல்வதற்கு அவசரப்பட்டான்.

பண்டா எதுவும் பேசவில்லை. பண்டாவைப் பார்த்து 'வருகிறேன்' என்று மெதுவாகச் சொன்னேன். கொழும்பில் அவன் தந்த ராஜ வரவேற்பும் விருந்துபசாரமும் இன்னமும் என் நெஞ்சில்; பசுமையாக இருந்தன. மூவரும் நகரத்துவங்கியதும், பண்டா சடுதியாக 'பசிக்கிறது' சாப்பாடு வாங்கித் தருவாயா?' என்று கேட்டான். அந்தக் கேள்வி என்னை நிலைகுலைய வைத்தது.

ஜேர்மன் பல்லைக் கழகத்தில் படித்துக் கொண்டிருந்த காலத்தில், இலங்கையின் பிரத்தியேக சுவையைப் பேணி, நான் பரமசிவம் உட்பட எல்லோருக்கும் சமைத்துப்

போட்ட பண்டா, என்னைக் கொழும்பிலே சந்தித்த பொழுது, பழைய நட்புறவு சற்றும் குறையாது, ராஜ விருந்தளித்து என்னை அசத்திய அதே பண்டா, இப்பொழுது பிச்சைக்காரனைப் போல 'பசிக்கிறது' என்று கேட்பது என்னை வேருடன் சாய்த்தது.

எரிக் என்னுடைய தர்ம சங்கடமான நிலையை ஊகித்திருக்க வேண்டும்;. என்னுடைய விருப்பத்துக்கு ஒத்திசைவாக நடக்க முன்வந்தமை எனக்கு ஆறுதலாக இருந்தது.

சுரங்க வண்டி நிலையத்தின் வெளியே, நடக்கக்கூடிய தூரத்தில் இத்தாலிய ரெஸ்ரோரெண்ட ஒன்று இருந்தது. அது சற்றே பிரபலமானதும்.

நிலமைகளை உத்தேசித்து அங்கு உணவு சாப்பிடலாம் என்று எரிக்கே முன்மொழிந்து என்வயிற்றில் பால் வார்த்தான்.

'வா...., அந்த இத்தாலிய றெஸ்ரோரெண்டுக்கு போகலாம்' என பண்டாவைப் பார்த்து அழைத்தேன். சில்வா எழுந்து நிற்கவே சிரமப்பட்டான். பண்டா அவனைத் தாங்கிக் கொண்டான். பண்டாவின் அணைப்பிலே சில்வா எங்களைப் பின் தொடர்ந்தான்.

இருவரிடமிருந்தும் பலநாள் குளிக்காததற்கு அடையாளமாக ஒருவகை 'துர்நாற்றம்' வீசியது.

அவர்களுடைய கோலமும், அவர்களைச் சாப்பாட்டுக்கு அழைத்ததும் மேரிக்கு பிடிக்கவில்லை என்பதை அவளுடைய முகபாவம் துல்லியமாகக் காட்டியது. இருந்தாலும் எங்களுடைய உணர்வுக்கு மதிப்பளிக் வேண்டுமென்று பொறுத்துக் கொண்டாள். றெஸ்ரோரெண்ட மனேஜர் சில்வாவையும் பண்டாவையும் உள்ளே அனுமதிக்க முதலில் மறுத்தான். ஆனால் எரிக் அவனிடம் விஷயங்களை விளக்கியபிறகு, முணுமுணுத்துக் கொண்டே அனுமதித்தான்.

சில்வா, நுழைந்ததும் நுழையாததுமாக ரொயிலெற்றைத் தேடிச் சென்றான்.

நீண்ட நேரமாக என் மனசைக் குடைந்து கொண்டிருந்த கேள்வியை பண்டாவிடம் கேட்டேன். 'உன் சிங்கள மனைவி எங்கே....?'

என்பதுதான் என் கேள்வி. இந்தக் கேள்வியை அவனுடைய நிலையில் அவன் எதிர்பார்ததிருக்க மாட்டான் போலும். சற்று நேர மௌனத்திற்குப் பின்னர், 'அவள் தற்கொலை செய்து கொண்டாள்' என்று கூறி என் முகத்தை ஏறிட்டுப் பார்க்க விரும்பாதவனைப் போல வேறு திசையிலே பார்த்தான். அவளுடைய மரணத்துக்கு தானே

காரணம் என்ற குற்ற உணர்வு அவனுடைய குரலிலே புரையோடிக் கிடந்தது. அந்தச் சம்பவத்தை மறப்பதற்கு கஸ்டப்படுபவன் போல உடைந்தான். அவன் அழுது கொண்டிருக்கிறான் என்பதை என்னால் உணரமுடிந்தது.

ரொயிலெற்றால் திரும்பிக் கொண்டிருந்த சில்வா, பண்டா அழுவதைப் பார்த்திருக்க வேண்டும். 'ஏண்டா மச்சான் அழுகிறாய்?' என்று சிங்களத்தில் ஆவேசமாகக் கேட்டான்.

'ஒன்றுமில்லை மச்சான்' என்று மழுப்பினான் பண்டா.

அதற்கிடையில் எங்கள் மேசைக்கு பரிசாரகன் வந்து சேர்ந்தான். சில்வா தனக்கு விருப்பமானதெல்லாம் தாராளமாக ஓடர் செய்யத் துவங்கினான். எங்களுக்கு என்ன விருப்பமாக இருக்கக்கூடும் என்பதைப்பற்றி அவன் அக்கறைப்படவில்லை. காசு கொடுக்கப் போவது நான் என்பது அவனுக்குத் தெரியும். அதனை அங்கீகரிக்கும் இங்கிதம் கூட அவனிடம் இருக்கவில்லை. மேரிக்கு என்ன விருப்பம் என்று கேட்பதின் மூலம், குறைந்தபட்ச மேசை நாகரிகத்தையாவது பேண நான் முயன்றேன். சாப்பாடு வந்ததும், நாங்கள் மௌனமாகச் சாப்பிடத் துவங்கினோம். ஆனால் சில்வாவோ இறுதி யுத்தத்திலே புலிகள் தோற்றுப்போனது பற்றி அட்டகாசமாகப் பேசினான். 'சாப்பிடும்போது ஏன் வீண் அரசியல்' என்று எரிக் நாகரீகமாகச் சொன்னான். 'வீணான தர்க்கத்திலே ஈடுபட வேண்டாம்' என்று என்னை எச்சரிக்கவும் செய்தான்.

நான் சில்வாவின் கேள்விகளைச் சட்டை செய்யாது, இரவுச் சாப்பாட்டினை சுமுகமாக முடிவுக்கு கொண்டுவருவதில் முனைப்புக் காட்டினேன். சாப்பாட்டிற்கான பில்வந்தது. நான் அதற்கான பணத்தைச் செலுத்திக் கொண்டிருந்தேன்.

சில்வாவின் பேச்சை நான் சட்டை செய்யாதது அவனுக்கு எரிச்சலைக் கிளப்பியிருக்க வேண்டும்.

'இப்ப தமிழன் அரசியல் பேசமாட்டான்தான்.... ஏன் தெரியுமா....? நாங்கள் அவங்களுக்கு மண்டையிலை அடிபோட்டு, கோவணம் கட்டிஅல்லோ அனுப்பி வைச்சனாங்கள்...' என்று மீதமிருந்த மதுவை ஊற்றிக் குடித்துக் கொண்டே கேலி பேசினான். எனக்கு கோபம் எல்லை தாண்டியது. என்னை அறியாமலே எழுந்து சில்வாவின் சேட்டைப் பிடித்து உலுப்பினேன். அடுத்த கணமே, என் தவறை உணர்ந்தவனாக சமாதானமடைந்து, பில்லுக்கான பணத்தினைச் செலுத்தினேன். எல்லோரும் எழுந்தோம். அப்போ பண்டா சொன்ன வாசகம் என்னை உறைநிலை அடைய வைத்தது. 'இஞ்சை பார். சிங்களவன் ஆளப்பிறந்த இனம். தமிழன் எங்கிருந்தாலும் எங்களுக்கு அடிமையாக இருக்கப் பிறந்தவன். அவன் எங்களுக்கு கப்பம் செலுத்தி வாழவேண்டும்'
என வெறியில் பிதற்றிக் கொண்டிருந்தான்.

நான் சாப்பாட்டு மேசையை விட்டு, றெஸ்ரோரென்றுக்கு வெளியே வந்தேன். எரிக்கும் மேரியும் என்னைப் பின் தொடர்ந்து வந்தனர்.

என்னை சாந்தப்படுத்தும் வகையில் எரிக் என் தோள்மீது ஆதரவாகக் கையை வைத்தான். 'பன்றியுடன் சேர்ந்து மாடும் சாக்கடையில் புரளுகின்றது' என்றாள் மேரி. எரிக் என் கைகளைப்பற்றிக் கொண்டு 'இப்பொழுதுதான் இலங்கைப் பிரச்சனையின் முழுப்பரிணாமமும் எனக்குப் புரிகிறது' என்றான். சாதாரண எரிக்கிற்கு சமாச்சாரம் புரிகிறது! இது சர்வதேச சமூகத்துக்கு புரியுமா…? சில்வா பண்டா போன்று புலம்பெயர்ந்த நாடுகளிலே 'தூது'வர்களாக வலம் வருவோரினால், சர்வதேச சமூகத்தின் அபிப்பிராயம் உருவாக்கப்படுகின்றதா? சிதைவிலிருந்து எழுந்து நிற்கும் பேர்ளின் நகர வீதியிலே, நான் இடிந்துபோய நின்றேன்.

ak105@aub.edu.lb\

பதிவுகள் ஜூன் 2008 இதழ் 102

**32. எமனுடன் சண்டையிட்ட பால்காரி! - சி. ஜெயபாரதன் (கனடா) -**

பால்காரி பொன்னம்மா சோர்ந்து போய் கூரையைப் பார்த்துக் கொண்டிருந்தாள். மத்தியானம் சாப்பிடுவதைக் கூட மறந்து மரணப் படுக்கையில் கிடந்த புருசன் அருகே தலையில் கைவைத்த வண்ணம் பேயடித்தவள் போல தூணில் சாய்ந்திருந்தாள். பத்து நிமிஷத்துக்கு முன்புதான் புருசனின் மூச்சு நின்று போனது. இப்போது என்ன செய்வ தென்று தெரியாமல் தடுமாறினாள். நீண்ட பெரு மூச்சை விட்டு பொன்னம்மா எழுந்தாள்! அவள் கண்களிலிருந்து ஒரு சொட்டுக் கண்ணீர் கூட விழவில்லை. புருசன் முகத்தைப் பார்க்காமல் சுவரில் தொங்கிய ஒரு குழந்தையின் படத்தைப் பார்த்தாள். புன்முறுவல் பூத்த அந்தப் பாசமலர் அவள் நெஞ்சில் ஈயத்தைக் காய்ச்சி ஊற்றியது! மெதுவாக ஜன்னல் வழியே எட்டிப் பார்த்தாள். உடனே திடுக்கிட்டு பரபரப்புடன் கதவைத் திறந்து கொண்டு வீதிக்கு ஓடினாள்.

"போகாதீங்க, நில்லுங்க! நில்லுங்க! என்று கூச்சலிட்டாள், பொன்னம்மா. எருமை மாட்டின் மீது ஏறிச் சவாரி செய்யப் போன எமதர்மன், உட்கார்ந்து கொண்டே பின்னால் திரும்பினான்.

"சரித்திரம் மீள்கிறதா? பின்னாலே வராதே பெண்ணே! உன் புருசன் உயிரைக் கொண்டு போறதுக்கு நான் மிகவும் வருந்துறேன்".

"நானே வருந்த வில்லை! நீங்க ஏன் வருத்தப் படணும்? உங்க வேலைய நீங்க செய்றீங்க.... என்னை பெண்ணேன்னு சொல்லாம, பொன்னம்மான்னு கூப்பிடுங்க!"

"பொன்னம்மா, பேசாமல் போயிடு! என் பின்னாலே வராதே சாவித்திரி மாதிரி! நான் முதல் தரம்தான் ஏமாந்தேன். இரண்டாம் தடவை தப்பு பண்ணப் போறதில்லே! உன் புருஷன் உயிரை மட்டும் கேட்காதே"

"என் புருசன் உயிரைக் கேட்க நான் வரவில்ல. அது போறதுதான் நல்லது! எமராசா, நான் ஒன்னும் சாவித்திரி இல்லே!"

"அட ஆச்சரிய மாயிருக்கே! ஏம்மா! நீ கண்ணகி பிறந்த நாட்டுக்காரி! கல்லானானும் கணவன், புல்லானாலும் புருசன் என்று கும்பிட குலமாச்சே! காலம் மாறிப் போச்சு! நீ பெண்ணல்ல என்னு சொன்னது இப்போதான் ஞாபகம் வருது!"

"கண்ணகி குல தெய்வம் மாதிரி! ஆனா என் புருசன் குலத் துரோகி! நான் வாழ்றதிலே புண்ணியமில்ல, எம ராசா!"

"பொன்னம்மா! என்ன கவலை உனக்கு? பால் வியாபாரத்திலே உனக்கு பண நொடிப்பா?"

"எம ராசா! கையெடுத்துக் கும்பிடறேன். ஒரேதா என் உயிரையும் கொண்டு போயிருங்கோ!"

"நீ செத்துப் போக இன்னும் நாற்பது வருசஷமிருக்கே, நான் எப்படி உன் உயிரைக் கொண்டு போறது? அது பெரிய தப்பாச்சே"

"தனியா எப்படி நாப்பது வருசம் வாழ்றது, எம ராசா! புருசன் இல்லாம, பிள்ளை, குட்டி இல்லாம?"

"இந்தா வந்துட்டயே! இது பழைய சாவித்திரி உத்தி! முதல்லே பிள்ளை வேணும் என்பே! பிள்ளைக் கொடுத்தா, எப்படிப் பிள்ளை பிறக்கும், புருசன் இல்லாம என்னு, புருசன் உயிரையும் வாங்கத் தந்திரம் பண்ணுவே!"

"இத்தன நாளாய் என் புருசன்தான் என் உயிரை வாங்கிக் கிட்டிருந்தான்! எமலோகம் போற என் புருசன் உயிரை நீங்க தந்தாலும், நான் திரும்ப அங்கே அனுப்பிடுவேன்! அவனும் வேணாம்! அவன் கொடுக்கிற பிள்ளையும் வேணாம்!"

"கதை வேற மாதிரிலே போவுது! புரியலையே பொன்னம்மா! குழப்புறயே!"

"எம ராசா! பெண்ணுக்கு உத்தம புருசன் ஒருத்தன்தான் வேணும்! ஆனா ஆம்பிளைக்கு அப்படி யில்லே. சில ஆம்பிளைக்கு மூனு பொம்பளை வேணுமின்னு ஆசையிருக்கு! கண்ணைக் கவரும் ஆடகியோ, காதில் இனிக்கும் பாடகியோ ஒருத்தி! கட்டில்லே ராத்திரி பக்கத்திலே படுக்க செதுக்கின சிலை போல இன்னொருத்தி! அப்புறம் கல்லானாலும் கணவன், புல்லானாலும் புருசன்னு, வீட்டுலே காத்து கிடக்க மூனாவது ஒருத்தி!"

"பொன்னம்மா நீ என்ன சொல்றே? புதிர் போடாமல் புரியும் படி பேசு"

"என் புருசன் ஊர்க் காளை மாடு மாதிரி! நாலாவது வீட்டு ரங்கம்மாவுக்கு ஒரு பிள்ளையை கொடுத்து, அது கழுதையாய் மண்ணுலே புரளுது! அவன் பிறந்த ஊர்லே குப்பம்மாவுக்கு இன்னோர் பிள்ளை கொடுத்து, அது கொண்டி மாடாய் ஊரைச் சுத்துது! இந்தா பாருங்கோ, என் புருசன் படுக்கிற கட்டிலிலே, நான் படுக்கிறதே இல்ல. அந்தப் பிள்ளைகளுக்கே அவன் அப்பனாக தொலையட்டும். என் பிள்ளைக்கு அவன் அப்பனா இருக்க வேணாம். அடுத்துப் பிறக்கிறது பன்றியாத்தான் இருக்கும்!"

"அப்ப பிள்ளை வரத்தை எப்படிக் கொடுக்கிறது, சொல்லு?"

".... மூனாவது குடிசையிலே வாழ்ற .... கார் டிரைவர் கந்தசாமி மேலே .... எனக்கு ஒரு கண்ணு. கந்தசாமிக்கு என் மேலே .... இரண்டு கண்ணு"

"இது தப்புத் தாளமாச்சே! புருசன் இருக்கும் போது அடுத்தவனை பார்க்கிறது ... அதர்ம மாச்சே!"

"ஆமா! பொன்னம்மா வீட்டிலே இருக்கும் போது, என் புருசன் ரங்கம்மா கட்டில்லே ஒருநாளும், குப்பம்மா பாயிலே அடுத்த நாளும் படுக்கிறது என்னவாம்?"

"அதுவும் அதர்மம்தான்"

"அதைப் பெண்டாட்டி துரோகம் என்னு முதல்லே சொல்ல, ஆம்பிளை உங்க வாயிலே வரலையே!"

"இரண்டும் தவறுதான். சரி நீயே போய் கந்தசாமியை கட்டிக்க வேண்டியதுதானே. நான் என்ன செய்யணும்?"

"எம ராசா! நான் கேட்க வந்தது, கந்தசாமிக்கு எப்படி ஆயிசு? நீண்ட ஆயிசு தானே?'"

"என் கிட்டே கந்தசாமியின் ஜாதகம் இல்லே. ஆயுள் கையேடும் இல்லே. எப்படி ஆயிசுக் கணக்கிடறது?"

"ஏதோ காலன், தூதன், சித்திர குப்தன் என்னு சொல்றாங்க, எங்கே போயிட்டாங்க அவுங்க?"

"இரு காலனைக் கேட்கிறேன். அவன் கிட்ட போர்டபிள் கம்பியூட்டர் ஒன்னு இருக்கு. சீக்கிரம் பார்த்துச் சொல்லிருவான்"

"சீக்கிரம் சொல்லுங்க எம ராசா! என் நெஞ்சி பக்பக்கென்னு அடிக்குது"

எமதர்மன் பெரு மூச்சு விட்டு ஆயுளைச் சொல்லத் தடுமாறினார். இரு கைகளையும் பிசைந்து கொண்டு மேலே நோக்கினார்.

"என்னங்க எம ராசா, ஏன் வானத்தைப் பார்க்கிறீங்க? ஆயுசு எப்படின்னு சொல்லுங்க?"

"பொன்னம்மா! பார்த்ததுதான் பார்த்தையே, நீண்ட ஆயுசு ஆளாப் பார்த்துப் பிடிச்சிருக்கலாமே"

"என்ன சொல்றீங்க எம ராசா? கந்தசாமி \அற்ப ஆயுசா? "

"கண் கலங்காதே, பொன்னம்மா! கந்தசாமி வீட்டுக்கு .... நான் சீக்கிரம் .... வருகிறதாயிருக்கு"

"அட கடவுளே! .... இன்னும் எத்தனை வருசம் அவரு.....?"

"கந்தனுக்கு அற்ப ஆயசுன்னு ... காலன் சொல்றான்"

"காலன் சரியாப் பார்த்துதான் சொன்னானா? சில கம்பியூட்டர் சரியா வேலை செய்யாதாமே? என் பிள்ளை கொஞ்ச நாள்தான் தகப்பனை பார்க்குமா? எமதர்மா, இது ஞாயமில்லே! அவருக்காவது நீண்ட ஆயுசைக் கொடு! உன் காலிலே விழுந்து கும்பிடுறேன்!"

"என் காலிலே விழறேன்னு, எருமைக் காலைப் போய் கும்பிடறே! .... அற்ப ஆயிசு கந்தசாமியை விட்டு, வேற ஆளைப் பாரு, பொன்னம்மா! அது தான் புத்திசாலிப் பெண் செய்யுற காரியம்"

"உத்தம ஆம்பளை கந்தசாமி போல எத்தனை பேர் இருக்கான்? ஒழுக்கம் கெட்ட பயல்கள் தான் எங்க ஊரில அதிகம். ஆமா கந்தசாமிக்கு ... எப்போ ... ஆயுசு ... முடியுது, அதைச் சொல்லுங்க முதல்லே"

"அடேடே கந்தசாமிக்கு தம்பி இருக்கானாமே! அவனுக்கு ஆயசு பலமா இருக்காம்! 80 வயசு வரை தெரியுதாம். காதிலே காலன் முணுமுணுக்கிறான்".

"அந்த ஒற்றைக் குச்சி பொன்னுலிங்கம் ஒரு குடிகாரப் பயல்! அவனை வச்சி துடைக்க என் வீட்லே ஒட்டடை கூட இல்லே! ராத்திரி ராத்திரி குடிச்சிபிட்டு வந்து பெண்டாட்டியை போட்டு அடிப்பான். காலையிலே நடு வீதியிலே தூங்கிக் கொண்டு கிடப்பான்! குடிக்கப் பண மில்லேனா என் மாட்டைக் கொண்டு போய் சந்தையிலே வித்துட்டு, சாராயக் கடைக்கும் சர்க்காருக்கும் சம்பாரிச்சு கொடுப்பான்! எம ராசா! அயோக்கியப் பயலுக்கு அதிக வயசையும், உத்தம ஆம்பளைக்கு அற்ப ஆயுசையும் தலையிலே எழுதி வைக்கறீங்களே, இது என்ன ஞாயம்? சொல்லுங்கோ அவருக்கு ...ஆயுசு எதுவரை?"

"பொன்னம்மா! அற்ப ஆயுசு ஆளுங்க பூமியிலே இல்லாம போனால், எங்கள் ராஜியத்திலே பலருக்கு வேலை யில்லாம போயிரும்! அப்புறம் என் பட்டாளங்கள் கொடியைத் தூக்கிட்டு அரண்மனைக்கு முன்னாலே ஆர்ப்பாட்டம் செய்து பட்டினி கிடப்பாங்க!"

"சொல்லுங்க கந்தசாமிக்கு ஆயுசை! என் மனசு துடிக்குது! சொல்லுங்க எம ராசா!"

"உன்னைப் படைச்ச கடவுளே அதை மறைச்சு வச்சிருக்கான். அதை முன்னாலே நான் சொன்னா நீ மயக்கம் போட்டு விழுந்திடுவே. இல்லே திடீரென்னு உன் நெஞ்சு நின்னுட்டா, பிறகு என் மேலே புகார் வந்திடும். உன் உயிரை நான் எடுத்து போகவும் முடியாது. இங்கே விட்டுட்டு போகவும் முடியாது. அது அப்புறம் அந்தரத்திலே பேயாய் அலையும்! உயிரை திருப்பி உடம்புல ஒட்ட வைக்கிற உத்தியும் எனக்கு தெரியாது! அது என் வேலை இல்லே. பிரம்மா படைப்பு வாரியத்தைச் சேர்ந்தது"

"சும்மா சொல்லுங்க எமராசா! நான் ஒன்னும் வெண்ணையில்ல, உருகிப் போக. என் மனம் தேக்கு மரம் போல. ... என்ன கந்தசாமி இன்னும் ... அஞ்சி வருசம் இருப்பாரா?"

"உம் .... அத்தன நீண்ட ஆயுள் இல்ல ... கந்தனுக்கு"

"சரி அஞ்சில்லே. மூனு வருசமாவது அவர் .... உயிரோட இருப்பாரா?"

"அதுவும் .... இல்லே! ... பொன்னம்மா! ... ஏன் கண்ணிலே கண்ணீர் குபுகுபுன்னு பொங்குது?"

"அப்படீங்களா? ...". பொன்னம்மா கண்களைத் துடைத்துக் கொள்கிறாள். "சரி ஒரு வருடமாவது மனுசன் ... உயிரோடிருப்பாரா?"

"அதை நான் சொல்ல முடியாது, பொன்னம்மா! உனக்குப் பிள்ளை பிறந்து, கந்தன் கொஞ்ச காலம் இருப்பான்"

"எனக்குப் பிள்ளை பிறந்து, கந்தசாமி ஒரு வருசமாவது உயிரோடு இருக்கணும். அதுக்கு வரம் தருவீங்களா, எம ராசா? உங்களைக் கெஞ்சி கேக்கிறேன்"

"அந்த வரத்தை நான் தர முடியும், பொன்னம்மா!"

"நிச்சயமா சொல்றீங்களா எம ராசா?"

"ஆமாம்! உனக்கு பிள்ளை பிறந்து, கந்தன் ஒரு வருசம் உயிர் வாழறது உறுதி. அதுக்கு வரம் தருவதிலே எனக்கு எந்த ஆட்சேபணையு மில்லே! ..... ஏன் பொன்னம்மா! ... நயாகரா

மாதிரி கொட்டின கண்ணீ ரெல்லாம் ... சினிமாவில் திருப்பி ஏறுற மாதிரி உன் கண்ணு மேலே ஏறுதே"

"என் வயிற்றுலே பசும் பாலை வார்த்திட்டீங்க எம ராசா! அந்த உத்தரவாதம் போதும் எனக்கு!" ஆனந்த கண்ணீர் இப்போது கொட்டி வடிய, பொன்னம்மா வீட்டை நோக்கி ஓடினாள்.

"இப்போ எனக்கு பிள்ளை வேணாம் எம ராசா! ... நீங்க நீண்ட நாள் வாழணும்" என்று சிரித்துக் கொண்டு கதவை மூடினாள், பொன்னம்மா. எமனுக்கு மண்டையில் ஏறிப் புரிபட சற்று நேரம் பிடித்தது!

"அடி பாதகி! இரண்டாம் தடவையும் ஏமாந்துட்டேன்!"..... கீரிடத்தைத் தூக்கி விட்டெறிந்து தலையில் நாலடி அடித்துக் கொண்டு எருமை வாகனத்தை முடுக்கினான், எம ராஜன்.

"போகாதீங்க! நில்லுங்க! நில்லுங்க!" என்று அலறிக் கொண்டு மறுபடியும் பொன்னம்மா ஓடி வந்தாள். பின்னால் திரும்பிய எமனுக்குக் கண்கள் சிவந்து கோபக் கனல் பறந்தது. பற்களை நறநற வென்று கடித்தான். கைகளைத் தூக்கி ஆங்காரம் கொண்டான்.

"இன்னும் ஏன் பின்னாலே வர்றே! போதும் உன் உபத்திரம்! போ! போ! போ! ஒழிஞ்சு போ!"

"என் வயிற்றிலே மண்ணைப் போட்டு போறீங்களே, எம ராசா! நான் முக்கியமானதை விட்டிட்டேனே!"

"புரியும்படி சொல்லித் தொலை!"

"நீங்க ஏறிப் போறது, என் எருமை மாடு! தினம் எனக்குப் பால் கறக்கிற எருமை! பால் எருமைக்கும் ஆண் எருமைக்கும் வித்தியாசம் தெரியாம, என் மாட்டை பத்திட்டு போறது சரியா? மாட்டைப் பிடிக்க வந்தவ, புருசன் கிடைச்ச சந்தோசத்திலே அதை மறந்துட்டேன்!"

எம ராஜனின் சினம் பட்டெனத் தணிந்தது!

"அட ஆமா, உன் எருமைதான் இது! ...முதல்லே அதை சொல்லி யிருக்கலாமே! .. அதானே பார்த்தேன்! தெற்கு நோக்கிப் போறதுக்கு பதிலா வடக்கிலே போவுதே, ஏன் என்னு எனக்கு தெரிய வில்ல! ..... எங்கே என் மாட்டைக் காணோமே?" .. எருமையை விட்டு மெதுவாக கீழே எமன் இறங்கினான்.

"புல்லுத் தின்ன போயிருக்கும், எம ராசா! .. இன்னைக்கு காலையிலே அது வயித்துக்கு ஏதாவது போட்டீங்களா? ... எருமை மாட்டிலே வித்தியாசம் கண்டு பிடிக்க முடியலையே, நீங்க எடுத்துட்டுப் போற உயிர்கள் எல்லாம் சரியானதா? ...ஆட ஆண்டவா! .. எம ராசனுக்கும் வயசாகுதில்லே! கண்ணு மிரளுது! ... எம ராசா! மாடு தேடிறதுக்கு முந்தி முதல்லே ஒரு கண்ணாடி வாங்கி மாட்டிக்கங்க...! எருமை மாறாட்டம் மாதிரி, ஆள் மாறாட்டம் ஆனா என்ன ஆகுறது?"

பொன்னம்மா மாட்டை தட்டிக் கொண்டு கொட்டத்துக்குள் நுழைந்தாள். திருதிரு வென்று விழித்த எமன், விழிகளை மூட மறந்து, கீழே கிடந்த கிரீடத்தை தலையில் வைத்துக் கொண்டு, வேகமாக வாகனத்தை தேடிப் போனான்.

பதிவுகள் நவம்பர் 2003 இதழ் 47

**33. ஏன் அழுதாள்? - பிரியா (ஆஸ்திரேலியா) -**

ரிவியில் மதிய நேரத்தில் வரும் Days of our life என்ற அமெரிக்க தொடர் நாடகம் ஓடிக்கொண்டிருந்தது. நாடகத்தில் ஆணிடம் இளம்பெண் பலமாக விவாதிக்கிறாள். விவாதத்தின் முடிவில் கட்டி அணைத்து பலமாக உதட்டில் முத்தமிடுகிறாள். இந்த முத்தக் காட்சி சாதாரணமாக எந்த மானிடருக்கும் சலனத்தை உருவாக்கும். உருவாக்க வேண்டும் என்பதே நாடகத் தயாரிப்பாளரின் நோக்கமாகும். ஆனால் அவள் ரிவிக்கு முன்பான கதிரையின் ஒருபக்கமாக அடித்து போட்ட பாம்பை போல் உடலில் பலநெளிவுகளுடன் முகத்தில் எந்தவித சலனமும் இல்லாமல் சாய்ந்திருந்தாள். எலிசெபத்துக்கு காதுகள் சத்தத்தை கிரகிப்பதால் கண்கள் ரிவியை நோக்கி இருந்தன. எந்த காட்சியையும் கிரகிக்கவோ அதை ஞாபகப்படுத்தும் சக்தி அவளது மூளைக்கு கிடையாது. இப்படியான அவளது மனத்தில் எந்த காட்சியும் சலனத்தை ஏற்படுத்தாதது ஆச்சரியமில்லை.

15 வருடங்களுக்கு முன்பு (Alzheimers) அல்சைமர் என்னும் ஞாபகமறதி அவளது மூளையை தாக்கியது. விலை உயர்ந்த புத்தகத்தின் அட்டையை தாக்கிய கரையான் இறுதியில் முழுப் புத்தகத்தையே தின்றுவிடுவது போல் கடந்த 15 வருடங்களாக அல்சைமர் அவளது மூளையைத் தாக்கி அழித்துவிட்டது.

ஜெர்சி கழுவிய திராட்சைப்பழங்களை எடுத்துக்கொண்டு வந்து எலிசெபத் அமர்ந்துள்ள கதிரையில் கைகளில் அமர்ந்து ஒவ்வொரு பழமாக மெதுவாக ஊட்டினான். இடைக்கிடை பழங்கள் வாயில் இருந்து நழுவி விழுந்தன. விழுந்தவற்றை மெதுவாக எடுத்து முன்னால் இருந்த பழைய பத்திரிகையின் மேல் வைத்தான்.

எலிசெபத்தின் வாய் அசைந்தாலும் கண்மட்டும் ரிவியை நோக்கி இருந்தது, ஜெர்சி திராட்சை பழங்கள் முடிந்தவுடன் சிறிய துணியால் எலிசெபத்தின் வாயை துடைத்துவிட்டு தனது அறைநோக்கி சென்றான். ஜெர்சி பஞ்சாப்பில் லூர்தியானா பல்கலைக்கழகத்தில் உதவிவிரிவுரையாளனாக இருந்தபோது எதிர்பாராமல் கொழும்பு திட்டத்தின் கீழ் அவுஸ்திரேலிய அரசாங்கத்தின் புலமைப்பரிசில் கிடைத்தது, குடும்பத்தில் ஒரே ஆண்பிள்ளை அதுவும் இரண்டு அக்காமார்களுக்கு பின்பாக சிலவருடம் காத்திருந்து பெற்றபிள்ளை. அக்காமாருக்கு திருமணம் முடிந்துவிட்டது.

ஒரு பொறுப்பும் இல்லாதபடியால் திருமணம் செய்யாமல் முப்பது வயது வரையும் இருந்துவிட்டான். அவுஸ்திரேலிய புலமைப்பரிசில் கிடைத்தவுடன் தாய் அழுது கதறியபடி திருமணம் செய்யும்படி வற்புறுத்தினார். தந்தை தனது உறவில் திருமணம் செய்யும்படி வற்புறுத்தினார். ஜெர்சியின் தாய் தந்தையர் பஞ்சாப்பில் விவசாய குடும்பத்தில் பிறந்து வளர்ந்தவர்கள். மேலும் உறவுகளை வலுப்படுத்த மகனை பாவிக்க எண்ணினார்கள். கடைசியில் அவுஸ்திரேலியாவில் இருந்து ஒரு வருடத்தில்

திரும்பிவந்து திருமணம் செய்வதாக உறுதியளித்துவிட்டு விமானம் ஏறினான்.

மெல்பேன் வந்து இறங்கியதும் ஆங்கிலம் கற்பதற்காக ஆங்கில வகுப்புக்கு செல்லவேண்டி இருந்தது. ஜெர்சிக்கு ஆங்கிலம் கற்பது கடினமில்லை. பல்கலைக்கழகத்தில் விஞ்ஞான விரிவுரையாளராக இருந்தவன் ஆங்கில வகுப்புகள் இலகவாக மட்டும் அல்ல இனிப்பாகவும் இருந்தன. அங்குதான் எலிசபத் ஆங்கிலம் கற்பித்தாள். எலிசெபத்தின் ஆங்கிலம் அவனைக் கவர்ந்தது. எலிசெபத் ஸ்கொட்லாண்டில் இஇருந்து வந்தவள். எலிசெபத்தின் உச்சரிப்பில் தன்னை மறந்தான். சிலவேளையில் எலிசெபத்தின் வகுப்பில் கண்களை மூடியபடி இருப்பது ஜெர்சியின் வழக்கம். எலிசெபத் ஜெர்சியைவிட பத்துவயது மூப்பானவர். ஆரம்பத்தில் ஜெர்சியின் வெட்க சுபாவம் அவளை ஈர்த்தது, மிக முயற்சி செய்து ஜெர்சியை சங்கோசம் என்னும் கூண்டில் இருந்து வெளிக்கொணர்ந்தாள். ஆசிரியர் மாணவன் நட்பு என ஆரம்பமாகி பின்பு நண்பர்களாக்கியது. மெல்பேனின் பொட்டனிக்கல் தோட்டம், ஆட்சென்ரர் லைப்ரரி என்பனவற்றில் எலிசெபத்துடன் பலமணிநேரம் கழித்தான்.

எலிசெபத் தன்னைவிட வயதில் மூத்தவளாக, திருமணம் செய்து விவாகரத்து பெற்றவளாக இருந்தும், ஆரம்பத்தில் தொண்டையில் சிக்கிய சிறிய மயிர்போல் ஜெர்சிக்கு கரகரத்தது. எலிசெபத் ஆங்கில ஆசிரியை மட்டும் அல்லாமல் சினிமாப்பட விமர்சகராகவும் இலக்கிய புத்தகங்களை விமர்சிப்பவளாகவும் பிரபலமான பத்திரிகைகளுக்கு எழுதிவந்தாள். இப்படியான புத்திஜீவித்தனம் பலமுறை ஜெர்சியை தாழ்வு மனப்பான்மை கொள்ளவும் வைத்தது. காலங்கள் செல்ல மெல்பேனின் குளிரும் இருவரின் தனிமையும் புரிந்துணர்வும் பதிவுத்திருமணத்தில் முடிந்தது.

ஜெர்சி இந்தியாவில் இருந்துவந்தாலும் இந்திய சாஸ்திர சங்கீதத்தின் அரிச்சுவடு தெரியாமல் வளர்ந்தான். லதாமங்கேஸ்கர், முகமட்ராவியின் இந்திபட பாடல்கள் மட்டுமே இந்திய சங்கீதமாக நினைத்தான். இந்திய மத்திய தரத்துக்கே உரிய படிப்பு பின்பு பல்கலைக்கழகம் இடைக்கிடை “இளம்பெண்களை கேலி செய்தல்“ என்பனவற்றில் அவனது இளமை கரைந்தது.

ஆரம்பத்தில் எலிசெபத்துக்காக ஒப்பரா எனப்படும் சங்கீத நாடகங்களுக்கு சென்று வந்தான். காலப்போக்கில் ஒப்பராவின் தந்தையான ரிச்சாட் வாக்னரை பற்றி விவாதிக்கும் அறிவைபெற்றான். மேற்கத்திய சங்கீதத்தை ரசிக்க தொடங்கிய போது மொய்ராட் பாச் போன்றவர்களின் சங்கீத மெட்டுகளை வேறுபடுத்தி பார்க்க தொடங்கினான். ஐகுடி மெனுகிடின் பியானோ இசைதட்டுகளை கேட்டான்.

எலசெபத் மேற்கத்தைய சங்கீதத்துடன் இந்திய சங்கீதத்தையும் ஜெர்சிக்கு அறிமுகப்படுத்தினாள். இந்துஸ்தானியை ரசிக்க தொடங்கியவன் அதில் உள்ள மற்றும் அராபிய கலப்பை உணர்ந்தான். இந்தகாலத்தில் தென்னாட்டு கர்நாடக சங்கீதம்

வேற்றுநாட்டு கலப்பற்ற பாரதநாட்டின் கலைவடிவம் என உணர்ந்த போது தென் இந்திய கலைஞர்களை அவுஸ்திரேலியாவுக்கு அழைத்து அவர்களின் சங்கீத திறமையை மற்ற இனத்தோரும் கேட்கவைப்பதை தனது கடமையாகச் செய்தான். இதில் தன்னை மறந்தான்.

சந்தோசமான இவர்கள் வாழ்க்கையில் இடியோ புயலோ திடீரென வரவில்லை. சிறிதுசிறிதாக இருந்து மெதுவாக பெரிதாகி உயிரை எடுக்கும் புற்றுநோய் போல் துன்பம் வந்து சேர்ந்தது, எலிசெபத் தனக்கே உரிய அமைதியான தன்மையை இழந்தாள். சிறிய விடயங்களுக்கெல்லாம் எரிந்து விழுந்தாள். சிறிதுநேரம் பிந்தி வீடு திரும்பினாலும் தாம் து¡ம் என குதித்தாள். எலிசெபத்தின் 50 வயது பிறந்தநாளுக்கு பரிசாக M.S சுப்புலட்சுமியின் இசைதட்டை பரிசளிக்க விரும்பி சென்னையில் இருந்து ஒரு நண்பன் மூலம் வரவழைத்தான். இசைத்தட்டு பார்சலை எலிசெபத்திடம் கொடுப்பதற்காக படுக்கை அறைக்கு சென்றபோது விம்மி விம்மி அழுதாள். பலமுறை கேட்டும் காரணம் கூறவில்லை. பிறந்தநாளில் உணர்ச்சிவசப்பட்டு விட்டாள்.

அதிலும் பெண்கள் வயது போவதை விரும்புவதில்லை என நினைத்துக்கொண்டு கட்டி தழுவி அவளை சுவாசப்படுத்தினான். மறுநாள், பாத்திரத்தை நிலத்தில் போட்டு உடைத்துவிட்டாள். என்ன நடந்தது என வினவிய போது கையில் சுட்டுவிட்டது என்றாள்.

வழக்கமாக தடிப்பான கைஉறை போட்டு மிக அவதானமாக வேலைசெய்யும் எலிசெபத்துக்கு இப்போது என்ன நடந்தது என தன்னை கேட்டுக்கொண்டான். சிறிய விடயங்களை விவாதிக்கும் போது தன்மை மறந்து கோபமடைந்தாள். முன்பெல்லாம் தனது வாதங்களை தாரத்துடன் வழக்கறிஞர்போல் விவாதிக்கும் எலிசெபத் இப்பொழுது இல்லை. ஆரம்பத்தில் வழக்கமான மாதவிலக்கு நிற்கப் போவதால் வரும் Pre Menoposal Syndrome (PMS) என நினைத்தான்.

எலிசெபத் வேலையை ராஜினாமா செய்தாள். புத்தகம், சினிமாவுக்கு செய்யும் விமர்சனங்களை நிறுத்தினாள். ஒருநாள் உள்பாவாடை அணியாமல் வெளிகிளம்பினாள். இதைப் பார்த்த ஜெர்சிக்கு அதிர்ச்சியாகிவிட்டது.மனோதத்துவ டாக்டரிடம் அழைத்துச் சென்றான்.

எலிசெபத் கேட்டும், இவன் உள் செல்லவில்லை. ஒரு மணி நேரத்தின் பின் டாக்டர் அழைத்தார்.

என்னை மன்னிக்கவேண்டும். உமக்கு இந்த செய்தி அதிர்ச்சிதரும். எலிசெபத்துக்கு அல்சைமர் என்ற ஞாபகமறதி நோய் வந்துள்ளது.

எதற்கும் மூளை ஸ்கானுக்கு (Brain Scan) அனுப்புகிறேன்.

நான் ஓரளவு அனுமானித்தேன், ஆரம்பகாலமான படியால் வீட்டில் வைத்து கவனிக்கலாம். பின்பு நேர்சிங் கோமுக்கு அனுப்பவேண்டிவரும். நாள் ஒருகாலமும் எலிசெபத்தை நேர்சிங் கோமுக்கு அனுப்பமாட்டன்.

இவ் வருத்தத்திற்கு தொடர்ச்சியான கவனிப்பு தேவை. உம்மால் எப்படி கொடுக்க முடியும்? நான் கடந்தவாரமே என்வேலையையும் விட்டுவிட்டேன். முழுநேரமும் எலிசெபத்தை கவனிக்க போகிறேன். மிக்க நல்லது. அடுத்தமுறை சந்திப்போம். சமையல் வேலை, துணிதோய்தல், மற்றும் வீடுபெருக்கல் போன்ற எல்லாவேலைகளையும் ஜெர்சி செய்தான். ஆரம்பத்தில் கஷ்ட்டமில்லை. தனது வேலைகளை எலிசெபத்தால் செய்யமுடியும். இக்காலத்தில் தனக்கு கிடைக்கும் ஓய்வு நேரத்தில் தென் இந்தியாவில் இருந்து பல சங்கீத வித்துவான்களை வரவழைத்து பலநகரங்களில் கலைநிகழ்ச்சிகளை நடத்தினான். சேர்த்து வைத்திருந்த பணம் கரைந்தது, ஜெர்சி கவலைப்படவில்லை. காலங்கள் உருண்டோடின. காலதேவன் எலிசெபத்தின் உடலைமட்டுமல்லாமல் அவளது மூளையையும் தனது கொடுமைக்குஉள்ளாக்கினான். Cat Scan எனும் எஸ்ரேயில் எலிசெபத்தின் மூளையை பார்க்கும் போது மருத்துவ அறிவில்லாதவனுக்கும் அல்சைமர் என்ற கறையான் அரித்த அழகிய ஓவியத்தை அடையாளம் காணமுடியும்.

அன்று நாற்பது டிகிரியில் அனல்காற்று வீசியது. எர்கன்டிசன் வேலை செய்தாலும் எலிசெபத் வெப்பத்தால் கஸ்ரப்படுவது தெரிந்தது. மெதுவாக யன்னல் ஓரமாக வந்தவளை கதிரையில் இருத்திவிட்டான். ஈரத்துணியால் முதுகைத் துடைத்துவிட்டான். மெதுவாக சட்டையை தளர்த்திவிட்டு மார்பகத்தை துடைக்க முயற்சித்தபோது ஜெர்சியின் கைகளை பற்றிக் கொண்டாள். கண்களில் இருந்து அருவியாக கண்ணீர் கொட்டியது.

துடைப்பதை நிறுத்திவிட்டு எலிசெபத்தை பார்த்தான். அவள் கண்களில் இருந்து ஏதாவது புரிந்து கொள்ள முயற்சித்தான். அழகாக இருந்த தன் உடல் இப்படியாகிவிட்டதை நினைத்தாளா? புத்தகங்களையும் சினிமாக்களையும் விமர்சித்த தனது மூளை இப்படி செல்லரித்துவிட்டதே என கவலைப்படுகிறாளா? தன்னை திருமணம் செய்ததற்காக ஜெர்சி இப்படி கஸ்ரப்படுகிறானே என நினைத்து வருந்தினாளா? ஆமாம், பேசும் சக்தியை எலிசெபத் இழந்துவிட்டாள்.

பதிவுகள் ஜூலை 2002 இதழ் 31

**34. சொந்தக்காரன் - வ.ந.கிரிதரன் -**

கடந்த இருபத்தி நான்கு மணித்தியாலங்களாக விடாமல் உறை பனி (snow) மழை பொழிந்து கொண்டிருந்தது. வீதிகளெல்லாம் உறை பனி படிந்து, படர்ந்து ..போதாதற்குக் குளிர் வேறு. சோமசுந்தரம் மணியைப் பார்த்தார். இரவு மணி பத்தை நெருங்கிக் கொண்டிருந்தது. அவரிற்கு இந்தக் குளிரிலை, கொட்டுகின்ற உறை பனி மழையில் நனைந்தபடி வேலைக்குச் செல்லவே விருப்பமில்லாமலிருந்தது.

ஊரங்கிக் கிடக்கும் இந்தச் சமயத்தில் சாமத்துக் கோழியாக அலைய வேண்டியிருக்கிறதே என்று நொந்து கொள்ளத்தான் முடிந்தது. ஊரிலை அவர் ஒரு பெளதிக ஆசிரியர். அவரிடம் பயின்ற எத்தனை மாணவர்கள் 'டாக்டர்கள்', 'எஞ்சினியர்கள்' என்று வந்திருக்கின்றார்கள்..ஆனால் ..இங்கோ அவரோ ஏழு நாட்களும் வேலை செய்து கனடாவின் பொருளாதாரத்தினைக் கட்டியெழுப்பும் நல்லதொரு 'இமிகிரண்ட்'. வார நாட்களில் தொழிலாளி; வார இறுதி நாட்களில் தொழிலாளியைக் கண்காணிக்கும், முதலாளிக்கு ஏவல் புரியும் ஒரு கடமை தவறாத பாதுகாவலன். சற்று முன்னர் அவரது மேலதிகாரி ஜோ குறோபட் தொலைபேசியில் கூறியது நினைவிற்கு வந்தது.

"சாம். இன்று உனக்கு நகர மண்டபப் பாதாள வாகன தரிப்பிடத்தில் தான் வேலை ( City hall Under ground parking lot).கடந்த ஒரு வாரமாக நிறைய முறைப்பாடுகள் ...பல வாகனங்களிலிருந்து பொருட்கள் பல களவாடப் பட்டிருக்கின்றன... பல 'வீதி மக்கள்' இரவு நேரங்களில் அங்கு படுத்துறங்குவதாகப் பலர் முறைப்பாடுகள் செய்திருக்கின்றார்கள்... எனக்கு உன்னில் நிறைய நம்பிக்கையுண்டு. கடமை தவறாத கண்டிப்பான பாதுகாவலன் நீ...யாரும் அங்கு அத்துமீறிப் பிரவேசிக்காதபடி பார்த்துக் கொள்ள வேண்டியது உனது பொறுப்பு.."

'இந்தப் உறை பனிக்குளிரிற்குள் இந்தப் 'பார்கிங் லொட்டில்' போய் வேலை செய்யச் சொல்லுகிறானே'டென்று ஜோவின் மேல் எரிச்சல் கூடத் தோன்றியது. வழக்கமாக அவர் வேலை பார்ப்பது வாசனைத் திரவியங்கள் செய்யும் தொழிற்சாலையொன்றில் தான். சுகமான வேலை. 'ரிஷெப்ஷ'னில் அமர்ந்திருந்து , தொலைபேசி அழைப்புகளிற்கு பதிலிறுப்பது, மணித்தியாலத்திற்கொருமுறை தொழிற்சாலையை, தொழிலாளர்களை ஒருமுறை சுற்றிப் பார்ப்பது....கட்டடத்திற்குள்ளேயே அதன் கணகணப்பில் சுகமாகக் காய்ந்து கொண்டிருக்கலாம். 'என்ன செய்வது ஆட வெளிக்கிட்டாச்சு. ஆடத்தானே வேண்டும்'

வார இறுதி நாட்களிலாவது ஓய்வெடுக்கலாமென்று பார்த்தால் ..முடிகிறதா? அவரது தர்மபத்தினி அகிலாண்டேஸ்வரி குழந்தைகளை அணைத்தபடி ஆனந்தமாகத் தூங்கிக் கொண்டிருந்தாள். அவளைப் பார்க்கப் பார்க்கப் பொறாமையாகவிருந்தது. அவள்

கனடா வந்ததிலிருந்து, கடந்த பத்து வருடங்களாக அவர் அவளை வேலைக்குப் போவென்று வாய்திறந்து கூறியது கூடவில்லை. குழந்தைகளைப் பார்க்கிறாளே, வீட்டைக் கவனிக்கிறாளே... பாவமென்று அவள் மேல் பரிதாபம்தான் கொண்டிருந்தார். ஆனால் அவளென்னடாவென்றால்..."நீங்களும்தான் கனடா வந்து இத்தனை வருடமாச்சு..என்னத்தைச் சேர்த்து வைத்தீர்கள்...ஆளிற்காள் வீடு வாசலென்று இருக்கிறார்கள்...நீங்களோ..'வீடு' 'வீடு' என்று உங்கடை வீட்டாருக்கே எல்லாம் செய்து போட்டீங்கள்...என்னைத்தைக் கண்டனீங்கள்....உங்கடை வீட்டாரே இப்ப உங்களை மதிக்கினமா..." அகிலாண்டேஸ்வரி வாயைத் திறந்தால் அவ்வளவுதான்..அவளது தொணதொணப்பை அவரால் தாங்கவே முடியாது. "இஞ்சேரும்..சும்மா வாயைத் தொணதொணகாதேயும்..நீர் இங்கை வந்து இவ்வளவு வருஷமாய் உமக்கு நான் என்ன குறை வைத்தனான்.."என்று இவர் பதிலிற்குக் கேட்டு வைத்தாலோ ..அவ்வளவுதான்."என்னத்தைச் செய்து கிழித்தனீங்கள்... நீங்களில்லையென்றால் நான் 'வெல்வெயர்' எடுத்துச் சுகமாகவாவது இருந்திருப்பேனே...." என்று அவள் இளக்காரமாகப் பதிலிறுப்பதைத்தான் இவரால் தாங்கவே முடிவதில்லை. ஊரில் பாடசாலையொன்றில் உயர்தர வகுப்பிற்கான பௌதிக ஆசிரியராகவிருந்த அவர், இந்த வயதில் நாற்பது மணித்தியாலங்கள் முதுகு முறிய, முறியவென்று ஒரு தொழிற்சாலையில் வேலை செய்து உழைத்துக் கொண்டு வாடுகின்ற அவரது உழைப்பை எவ்வளவு துச்சமாக அவள் மதித்து வைத்திருக்கின்றாள். அதைத் தான் அவரால் தாங்க முடிவதில்லை. பொங்கிவரும் ஆத்திரத்தை வெகுவாகச் சிரமப்பட்டு அவர் அடக்கிக் கொள்வார். அப்பொழுதெல்லாம் எங்காவது கண்காணாத இடத்திற்கு ஓடிப்போய் விடலாமாவாவென்றிருக்கும். குழந்தைகளின் மேல் அவர் வைத்திருக்கின்ற பாசம் அவரைக் கட்டிப் போட்டு விடும். அவளது 'தொணதொண'ப்பிலிருந்து தப்புவதற்காகவே அவராகத் தேடிக்கொண்ட வார இறுதி வேலைதான் இந்தப் 'பாதுகாவலர்' உத்தியோகம்.

"அப்ப நான் போயிட்டு வாறன். கதவை உள்ளுக்குள்ளாலை பூட்டி வையும். என்ன.."என்று மனைவிக்குக் குரல் கொடுத்து விட்டு வெளியில் வந்த பொழுதுதான் சூழலின் யதார்த்தம் அவரிற்கு உறைத்தது. வீதியெல்லாம் மலை போல் உறை பனி குவிந்து கிடந்தது. வாகன நடமாட்டம், ஆள் நடமாட்டமின்றி உறை பனி பொழிந்து கொண்டிருக்கும் அந்த இரவு ஒரு வித மோனத்தில் ஆழ்ந்திருந்தது. ஒரு மாதிரி 'பஸ்' பிடித்து, பாதாள ரயிலேறி வேலைக்கு நேரத்திற்கு வந்து சேர்ந்து விட்டார். கடமை தவறாத பாதுகாவலனல்லவா அவர். மற்றவரென்றால் காலநிலையினைச் சாட்டாக வைத்து ஆறுதலாக ஆடிப் பாடி வருவார்கள். இதனால் தான் ஜோ அவரை அனுப்பி வைத்திருந்தான். சோமசுந்தரத்தை நம்பி அனுப்பலாம் என்று அவனிற்குத் தெரியும்.

தமக்குரிய 'பூத்'தில் 'காஷியர்கள் தங்களது வேலையினை ஆரம்பித்து விட்டார்கள். அவர்களிற்கு முகமன் கூறிவிட்டுத் தன் அறையினுள் நுழைந்தார் சோமசுந்தரம். இரவு 'பார்க்கிங் லொட்'டினைத் துப்புரவு செய்யும் தொழிலாளியான போலந்து நாட்டுக்

கிழவன் இவரிற்கு முகமன் கூறினான்.சோமசுந்தரம் இதற்கு முன்னரும் சில தடவைகள் இங்கு தற்காலிகமாக வேலை செய்திருக்கின்றார். அதனால் போலந்து நாட்டுக் கிழவனை அவரிற்குத் தெரியும். வாயில் நுழைய முடியாத நீண்டதொரு பெயர்.நல்லவன். இரண்டாம் உலக மகா யுத்தத்தில் இராணுவத்தில் கடமையாற்றியவன்.அவனது புதல்வர்களிருவரும் நகரில் 'வான்கூவரில்' மருத்துவர்களாகக் கடமை புரிகின்றார்கள். போர்க் காலக் கதைகள் பலவற்றினை அவன் கூறுவான். ஒருமுறை தரைக் கண்ணி வெடியில் சிக்கிப் பல நாட்கள் அவன் அவஸ்த்தைப் பட்டிருந்திருக்கின்றான். நிலத்திற்குக் கீழுள்ள நான்கு தளங்களையும் கூட்டித் துப்புரவு செய்வது தான் அவனது பிரதான கடமை. அவனுடன் கதைத்த படியே சோமசுந்தரத்தின் பொழுது போகும். கிழவனிற்கும் தனிமையில் கிடைத்த துணையாக இவர் விளங்கினார். அத்துடன் அவ்வப்போது யாராவது அத்து மீறி நுழைந்தால் சோமசுந்தரத்திற்குத் தகவல் தந்தும் அவன் உதவி புரிவான். "ஏ! நண்பனே! யாராவது எங்காவது படுத்திருப்பதைப் பார்த்தால் தகவல் தர மறந்திடாதே என்ன?" என்று அவனிற்கு ஒருமுறை நினைவூட்டி விட்டுத் தன் வேலையினைத் தொடர்ந்தார் சோமசுந்தரம். ஜோ வேலை தொடங்கியது அழைக்கக் கூறியிருந்தது நினவிற்கு வந்தது. அழைத்தார். ஜோ பெரிதும் மகிழ்ந்து போனான்."சாம்! கூடிய விரைவில் உனக்குச் சம்பள உயர்வு பெற்றுத்தர முயல்கின்றேன்." என்று உறுதியளித்தான். இவ்விதம் பல உறுதிகளை அவர் ஏற்கனவே ஜோவிடமிருந்து அவர் கேட்டிருக்கின்றார்.

ஒரு மாதிரி பாதி நேரத்தினைத் தாண்டியாகி விட்டது. ஒரு குறிப்பிடத்தக்க சம்பவங்களும் நடக்கவில்லை. மணிக்கொருமுறை நான்கு பாதாளத் தளங்களையும் சுற்றிப் பார்ப்பதும், இருபத்து நான்கு மணிநேர தமிழ் வானொலியில் நிகழ்சிகளைச் செவி மடுப்பதுமாகப் பொழுது போய்க் கொண்டிருந்தது. வெளியில் உறைபனி மழை இன்னும் பொழிந்து கொண்டேயிருந்தது. உறைபனி படர்ந்து கிடக்கும் வீதிகளைத் துப்புரவு செய்வதற்காகன கனரக வாகனங்கள் தங்கள் வேலையினைச் செய்யத் தொடங்கிவிட்டிருந்தன. முதியவர்களிற்கான நிகழ்ச்சியொன்றின் மறு ஒலிபரப்பு வானொலியில் சென்று கொண்டிருந்தது. ஒரு வயதான பெண்மணி தனக்கு மிகவும் பிடித்தமான ஆசிரியர் ஒருவரிற்காக ஒரு பாடலைக் கேட்க விரும்பினார். அதற்காக அவர் கேட்க விரும்பிய பாடல்: "எங்கிருந்தாலும் வாழ்க.." அதற்கு அந்நிகழ்ச்சியினை நடாத்திக் கொண்டிருந்த அறிவிப்பாளர் "அம்மா! அந்தப் பாட்டின் முதல் வரி தவிர அதன் அர்த்தமே வேறாச்சே" என்று கூற பதிலிற்கு அந்த அம்மா "அதையே போடுங்கோவென். அந்தப் புண்ணியவான் எங்கிருந்தாலும் வாழ்க.."என்று மிகவும் அப்பாவித்தனமாகக் கூறியதைக் கேட்ட பொழுது சோமசுந்தரத்திற்குச் சிரிப்பாகவிருந்தது. 'வயது ஏற ஏற முதியவர்கள் குழந்தைகளாகித் தான் விடுகின்றார்கள்' என்று தனக்குள் ஒருமுறை நினைத்துக் கொள்ளவும் செய்தார்.

நேரம் மூன்றை நெருங்கிக் கொண்டிருந்தது. போலந்துக் கிழவன் ஓடி வந்தான்.

"என்ன விசயம்.... இப்படி ஓடி வருகிறாய்.."

கிழவன் ஓடி வந்ததில் சிறிது களைத்துப் போயிருந்தான். நின்று சிறிது நிதானித்தான்.

"நான்காவது தளத்திலை ஒருவன் படுத்திருப்பதைப் பார்த்தேன். என்னுடன் வந்தாயென்றால் காட்டுகிறேன்" என்றான். வானொலியினை நிறுத்தி விட்டு சோமசுந்தரம் அவனுடன் நான்காவது தளத்திற்குச் சாய்தளப் பாதை வழியாகக் கீழிறங்கினார். கிழக்கு மூலை வாசலிற்கண்மையில் அவன் படுத்திருந்தான். ஐம்பதை எட்டிய தோற்றம். கந்தல் உடை. அருகில் நெருங்கிய பொழுது 'வைன்' வாசனையுடன் கூடிய பல நாட்கள் குளிக்காத உடம்பு வாசனை, துவைக்காத அழுக்கான கந்தல் வாசனை என்பனவும் மூக்கைத் துளைத்தன.

அவன் ஒரு பூர்வீக இந்தியன். படுத்திருந்த அந்தப் பூர்வீக இந்தியனிற்கு சோமசுந்தரம் வருவது தெரிந்து தானிருந்தது. தெரியாதது போல் படுத்திருந்தான். இவரைப் போல் எததனையோ பாதுகாவலர்களை அவன் பார்த்திருப்பான் போலும். இதற்கிடையில் அவன் எழும்பாமலிருப்பதைக் கண்ட போலந்துக் கிழவன் அவன் தோள்களை உசுப்பி எழுப்பி விட்டான். ஏதோ முணுமுணுத்தபடி அந்தப் பூர்வீக இந்தியன் எழும்பினான். தூக்கத்தினைக் கெடுத்து விட்ட கோபம் முகத்தில் தெரிய அவன் இவர்களைப் பார்த்தான்.

"மகாராஜாவிற்கு வருகின்ற கோபத்தைப் பார்" என்று போலந்துக் கிழவன் கிண்டல் வேறு செய்தான். சோமசுந்தரத்திற்கு வெளியில் கொட்டிக் கொண்டிந்த உறை பனி மழை ஞாபகத்திற்கு வந்தது. பூர்வீக இந்தியன் மேல் சிறிது பரிதாபம் கூட வந்தது. இதற்கிடையில் போலந்துக் கிழவன் "இவர்களால் தான் சரியான தொந்தரவு. படுத்திருப்பார்கள். யாருமில்லையென்றால் வாகனங்களை உடைத்துத் திருடி விடுவார்கள்" என்றான். அவனது மேலதிகாரி ஜோ அவனிடம் யாரையும் அத்து மீறிப் பிரவேசித்து விடாதபடி பணித்திருந்ததும் நினவிற்கு வந்தது. இந்தப் பூர்வீக இந்தியனைப் பார்த்தால் அப்படியொன்றும் திருடுபவனாகத் தெரியவில்லை. இன்னும் சில மணித்தியாலங்களில் அவரது வேலை முடிந்து விடும். பொழுதும் புலர்ந்தும் விடும். ஆனால் அது மட்டும் இவனைத் தங்க அனுமதிக்க அவரிற்கு அனுமதியில்லை. போதாதற்கு இந்தப் போலந்துக் கிழவன் வேறு அருகில் நிற்கிறான். இவனிற்கு இந்தப் பூர்வீக இந்தியர்கள் மேல் அவ்வளவாக நல்ல அபிப்பிராயம் கிடையாது. குடிப்பதும் திருடுவதும் தான் இவர்களது வாழ்க்கை என்று கருதுபவன். வைத்தி வைத்து விடுவான். சோமசுந்தரம் இக்கட்டான நிலையிலிருந்தார். என்ன செய்யலாமென்று சிந்தித்துப் பார்த்தார். முதலில் போலந்துக் கிழவனை அங்கிருந்து அனுப்பினால் நல்லதென்று பட்டது. அவனிற்கு நன்றித் தான் இவனைக் கவனிப்பதாகக் கூறி அனுப்பி வைத்தார்.கிழவனிற்கு நகர விருப்பமேயில்லை. 'விடுப்பு' பார்ப்பதென்றால் யாரிற்குத் தான் ஆசையில்லை.

போலந்துக் கிழவன் சற்று அப்பால் நகர்ந்ததும் அந்தப் பூர்வீக இந்தியன் மீண்டும் படுப்பதற்கு ஆயத்தமானான். சோமசுந்தரம் சிறிது கண்டிப்பை முகத்தில் வைத்துக் கொண்டார்.

"எதற்காக இங்கு வந்து படுத்திருக்கிறாய். இங்கு படுக்க உனக்கு அனுமதியில்லையென்பது உனக்குத் தெரியுமல்லவா. விடுதிகளிலேதாவதொன்றில் போய்ப் படுப்பது தானே " என்றார்.

"எல்லா விடுதிகளும் நிறைந்து விட்டன. இன்னும் சிறிது நேரம் படுக்க அனுமதியளித்தால் போதும். நான் ஒரு பிரச்னையும் உனக்குத் தர மாட்டேன்" என்று அவன் பதிலிறுத்தான். சோமசுந்தரத்திற்கு அவனை இந்த வகையான காலநிலையில் வெளியேற்றுவதும் நல்லதாகப் படவில்லை. ஆனால் அவரது உத்தியோகத்தில் இவற்றையெல்லாம் பார்க்க முடியாது. கண்டிப்பான, கடமை தவறாத அதிகாரி அவர்.

"பூமிப் பந்தின் இன்னுமொரு கோடியிலிருந்து நான், சொந்த மண்ணை விட்டுத் துரத்தப் பட்டு அகதியாக ஓடி வந்திருக்கின்றேன். நீயோ சொந்த மண்ணிலேயே அதனையிழந்த இந்த மண்ணின் சொந்தக்காரன்". சோமசுந்தரத்திற்கு உண்மையில் அந்தப் பூர்வீக இந்தியன் மேல் ஒருவித தோழமை கலந்த உணர்வு தோன்றியது.

"நானோ அன்னிய நாட்டிலொரு அகதி. இவனோ சொந்த நாட்டிலேயே அகதியாகிப் போனவன்."

ஒரு காலத்தில் இவனது இனத்தவர்கள் அமெரிக்கக் கண்டத்தில் கொடி கட்டிப் பறந்தவர்கள். இயற்கையினைப் பேணுவதில் அன்றே பெரிதும் ஆர்வம் காட்டியவர்கள். இவர்கள் சடங்குகள், தத்துவங்களெல்லாம் இயற்கைச் செல்வத்தைப் பேணுவதை முக்கிய நோக்காகக் கொண்டவை.

சோமசுந்தரம் கடமை தவறாத, கண்டிப்பான, நிறுவனத்திற்குப் பெயர் வாங்கித் தரும் பாதுகாவல் அதிகாரிதான். ஆனால் சோமசுந்தரம் மனிதாபிமானத்தை இழந்த பாதுகாவலனல்லவே.

"நான் உன் வார்த்தைகளை நம்புகின்றேன். ஆனால் விடிந்ததும் போய் விட வேண்டும்" என்று கூறி விட்டுத் திரும்பி நடந்தார் சோமசுந்தரம். முதலாவது தளத்தினைத் துப்புரவு செய்து கொண்டிருந்த போலந்துக் கிழவன் சோமசுந்தரத்தைக் கண்டதும் கேட்டான்: " என்ன அவனைத் துரத்தி விட்டாயா?".

"ஒரு மாதிரி அவனைத் துரத்தி விட்டேன். துரத்துவதற்குள் போதும் போதுமென்றாகி விட்டது" என்று பதிலிறுத்தார் சோமசுந்தரம்.

"இந்தக் கொட்டும் உறை பனி மழையிக்குள் அவன் எங்கு போவானோ? பாவம்" என்று இரக்கப் பட்டான் போலந்துக் கிழவன். "பாவம் புண்ணியம் பார்த்தால் இந்த வேலை செய்ய முடியாதே" என்றவாறு சோமசுந்தரம் கடமையில் மூழ்கியவாறு மேலே நடந்தார்.

- நன்றி 'கணையாழி' (கணையாழி டிசம்பர் 2000 'கனடா சிறப்பிதழிலிருந்து..-)

பதிவுகள் தை 2000 இதழ்-13

**35. நின்னைச் சில வரங்கள் கேட்பேன்! - பாரதி (ஜேர்மனி) -**

எந்தன் மனையும் மண்ணும் மகவும்
எல்லாம் தொலைத்து ஏதிலியாகி
எந்தக் காட்டில் எரிந்தபோதும் ....
அழிந்து போமோ? அத்தனை துயரமும்.
அனலில் பொங்கும் உலையாய் மனது.
அருவி நீரிலும் அணையா நெருப்பாய்.
மரணம் என்பது உடலுக்கு மட்டும்.
என் மனசும் உணர்வும் மண்ணகம் எங்குமாய்.

பதிவுகள் சிறுகதைகள் - 2 அம்மா அம்மா என் கழுத்தை இறுக்கமாகக் கட்டிக்கொண்டு கன்னத்தில் மென்மையாக முத்தமிட்டபடி காதோரம் கிசுகிசுப்பாய். மீண்டும் அம்மா அம்மா என்ற அழைப்பு. இது இது என் சின்னமகளின் செல்லச் சிணுங்கல் அல்லவா? என் செல்வமே நான் அழைப்பது எனக்கே கேட்கவில்லையே? ஏன்? ஏன்? என் குரல் எழும்பவில்லை. என் கண்மணியைப் பார்க்கும் துடிப்புடன் கண்களை விழித்துப்பார்க்க முனைகிறேன். ஐயோ கடவுளே இதென்ன கொடுமை. ஏன் என் கண்கள் து¡க்கத்திலேயே இருக்கின்றன.என் செல்வமே உன் குரல் மட்டும் என்னுள் ஒலித்தபடியே. என்னால் உன்னைக் கண்குளிரப்பார்க்க முடியவில்லையே என் தங்கமே. இதயம் துடிக்க அழுகிறேன். ஓரு வாரமாக படுத்த படுக்கைதான். சாப்பாடு கூடஇல்லை. கண்களிலிருந்து கண்ணீர் பெருக உதடுகள் மட்டும் அடிக்கடி அசைகின்றன.

முத்தவள் சுவேதா யாரிடமோ என்னைப்பற்றிச் சொல்கிறாள். ம் ...மனசுக்குள் என்னென்ன கவலைகளோ? எத்தனை நினைவுகளோ? இன்னொரு பரிச்சயமில்லாத குரல் மெதுவாகச் சொல்வது கூட எனக்குக் கேட்கிறது. நான் கதைப்பது மட்டும் ஏன் இவர்களுக்குக் கேட்கவில்லை. பிள்ளைகளைப்பெற்று வளர்த்து வாழ்ந்த வீட்டிலேயே கண்முடவேண்டும் என் ஆறு பிள்ளைகளும் மருமக்கள் பேரப்பிள்ளைகளுடன் அருகிலிருந்து எல்லாக்காரியங்களையும் செய்து வழியனுப்ப வேண்டும். என் ஊர் சுடுகாட்டில்தான் என்னுடல் வேகவேண்டும் என்று அம்மா அடிக்கடி சொல்லிக்கொண்டிருப்பா. நாட்டில் யுத்தமேகம் சூழ்ந்தவுடன் சுமந்து பெற்றவர்களை மறந்து வளர்ந்த மண்ணைத் துறந்து தங்கள் உயிரைக் காப்பதற்காக என்னைத்தவிர எல்லோரும் ஓடிவிட்டார்கள் அன்றி, நானும் என்னால் முடிந்தவரை அம்மாவை வசதியாக வைத்திருந்தாலும் தான் வாழ்ந்த ஊரை தன் வீட்டைப்பிரிந்த ஏக்கம் கொள்ளிபோட ஆண்பிள்ளைகள் அருகில் இல்லாத கவலை. எல்லாவற்றையும் விட கடைக்குட்டி நிவேதா என்றால் அம்மாவுக்கு உயிர். அவளது திருமணத்தைக் காணவில்லை. மருமகனைத் தெரியாது. பேரப்பிள்ளைகளையாவது ஒரே ஒரு முறை பார்த்துவிடவேண்டும் என்று ஒருநாளைக்கு ஆயிரம் தடவையாவது சொல்லிக் கொண்டே இருப்பா.

எல்லாக்கவலைகளும் சேர்ந்து அம்மாவைப் படுக்கையில் விழுத்திவிட்டது. போதாக்குறைக்கு இந்த வன்னிவெய்யிலும் நுளம்பும் வேறு அடிக்கடி காய்ச்சல் கொடுக்க வாடிப்போய்விட்டா. அன்ரி கொஞ்சநாளாக அம்மாவுக்கு மனதில் பயம். சுவேதா என்ரை பிள்ளைகளைக்காணாமலே நான் சாகப்போகிறேன் போலிருக்கு. அப்பாவை எ¡¢த்த இடத்தில் என் உடலும் எரியவேண்டும் என்ற என் நினைவு கனவாகப்போய்விடுமோ? என்றெல்லாம் கவலைப்பட்டபடி சொல்வா அன்ரி. முத்தவள் சுவேதா சொல்வதையெல்லாம் கேட்டபடி படுத்திருக்கிறேன். என் இதயம் இரத்தக் கண்ணீர் வடித்தபடி துடிக்கிறது.

மெல்ல மெல்ல பேச்சுக்குரல்கள் தேய்ந்து அடங்க மனசு மட்டும் விழித்தபடி மெதுவாக என்னை நிதானமாக்கிட முனைகின்றேன். அப்போ.. அப்போ.. கொஞ்ச நேரத்துக்கு முன் என்னைக் கட்டியணைத்து வாஞ்சையுடன் அம்மா என அழைத்தது..என் நிவேதாக்குட்டி இல்லையா? அப்போ நிவேதா நீ சொன்னதெல்லாம் பொய்யான வார்த்தைகளா? இந்த அம்மாவை ஏமாற்ற எப்படியம்மா உனக்கு மனம் துணிந்தது?.நினைவு நெருப்பு தீக்கங்குகளால் மறுபடி தீண்டிப்பார்க்கப்படும் வேதனை எனக்குள்.

எனது உள்ளமெல்லாம் பார்த்துப்பார்த்து நாங்கள் கட்டிய வீடுவளவையும் பிள்ளைகளையும் சுற்றிச்சுற்றி வருகிறது. ஐந்தாவது மகனும் பிறந்து இவன்தான் கடைசிப்பிள்ளை என்று நினைத்திருந்த நேரத்தில் நீண்ட இடைவெளியின்பின் பிறந்தவள்தான் நிவேதா. முத்தவர்கள் ஐவரும் கல்யாணமாகி வேலை என்று வேறிடங்களில் வாழத்தொடங்கிய நேரம்அது. கணவரும் வியாபாரநிமித்தம் வெளியிடங்கள் சென்றுவிட நானும் நிவேதாவும் மட்டும் வீட்டில் தனியாக இருக்கும் நாட்கள்தான் அதிகம். சகோதரர் களுக்கும் அவளுக்கும் உள்ள வயது இடைவெளி அதிகம் என்பதாலோ என்னவோ அவர்களுடன் மனம்விட்டுப்பழக அவளால் முடியவில்லை. என்னோடுமட்டும் அருமையான சிநேகிதியாய்ப் பழகும் அவளது இயல்பு எனக்கு நிறையப்பிடித்திருந்தது.

வீ£ட்டின் பின்புறம் உள்ள பெரிய படிக்கட்டில் இருந்து கிணற்றடியில் குலைகளைச் சுமந்தபடி நிமிர்ந்து நின்றிருக்கும் தென்னை மரங்களை ரசித்தபடி மணிக்கணக்காகத் தனித்திருப்பாள். அந்தி சாயும் நேரம் குங்குமம் பூசிய வானத்தைப் பிரமிப்புடன் பார்த்திருப்பாள்.

தென்னங்கீற்றூடாக வானத்தையும் வாரியிறைத்த விண்மீன்களையும் பார்ப்பது தனியழகு. இந்த அற்புதமான காட்சியை விட்டுவிட்டு அடுப்படியில் என்ன பண்ணுகிறீங்க? என்றபடி என்னை இழுத்துச்சென்று படிக்கட்டில் இருத்திவிடுவாள். நிலவொளியில் மணல் கும்பியில் என் மடியில் தலைவைத்துப்படுத்தபடி சீதையையும் சாவித்திரியையும் மாதவியையும் கேட்டு ரசிப்பாள். ம் இவற்றையெல்லாம் விட்டுப்பிரிந்து எவ்வளவு

துயருற்றிருப்பாள் என் குழந்தை. பாயில உறங்கிப் பழக்கமில்லை நிவேதாவுக்கு. சின்ன வயசிலிருந்தே கட்டிலில்தான் து¡ங்குவாள். ஆனால் வெய்யில்கால மாலை நேரங்களில் புழுக்கம் தணிய காற்றோட்டமாகப் பின்கததவைத் திறந்துவிட்டு சிமென்ற் தரையில் என் சேலை ஒன்றை விரித்து அதன்மேல் படுத்திருப்பாள். பாய்போட்டுப்படு என்றால் இந்தச் சேலையில் வீசும் அம்மாவின் அற்புதமான சுகந்த வாசனை பாயில் வருமா? தலையை ஆட்டியபடி புத்தகத்தில் ஆழ்ந்துவிடும் என் மகளை தாய்மையுடன் பார்ப்பேன். என் மனம் அந்தக் கணங்களில் புல்லா¢த்துப் பூரிக்கும். தாயைமட்டுமல்ல தாய்மண்ணையும்கூட  மாறாக்காதலுடன் நேசித்த என் மகளை அப்போது ஏன் புரிந்துகொள்ளாமல் போனேனோ?

அம்மா நான் உங்களையும் அப்பாவையும் மட்டுமல்ல. இந்த வீட்டை என் கிராமத்தை எல்லாம் பிரிந்து இருக்கமாட்டேன் அம்மா. அண்ணாவை அக்காவை எல்லாரும் கல்யாணம் செய்தவுடன் எல்லாவற்றையும் மறந்துபோன மாதிரி என்னால் போகமுடியாது. எனக்குக் கல்யாணமே வேண்டாம். நான் உங்களுடனேதான் இருப்பேன். உங்கள் தலைசாயும்போதும் என் மடிதானம்மா தாங்க வேண்டும். ஊரில் யாராவது இறந்ததுபற்றிக் கதைக்கும்போதெல்லாம் இப்படிச்சொல்வாள்.

நிவேதா படிப்பை முடித்து கணக்காளராக அலுவலகம் ஒன்றில் வேலைபார்க்கத்தொடங்கிய நேரம் அது. அப்போதுதான் மண்மீட்புப்போராட்டத்தில் இளைஞர் கூட்டமும் வெடித்துப்பொங்கி எழுந்த காலம். ஆங்காங்கே புரட்சிப்பொறிகள் வெடித்து எழ எழ அந்நியரால் அடக்குமுறையும் அராஜகமும் அவிழ்த்துவிடப்பட நாளாந்த வாழ்வே போராட்டமாய்ப்போன காலம்.   இயல்பிலேயே மண் மீது மாறாத பாசம் கொண்ட நிவேதா கொடுமைகள் கண்டு கொதித்தாள். அரசின் அட்டுழியம் கண்டு ஆயதம் எடுத்துப் போராட முனைந்த பிள்ளைகளுக்கு சின்னச்சின்ன உதவிகள் செய்ய ஆரம்பித்து நீண்ட நேரங்களை அதற்காகவே ஒதுக்கத்தொடங்கியபோது ... எனக்குப்பயம் தோன்ற ஆரம்பித்தது. என் மகளைப்பற்றி மட்டும் கவலைப்பட்ட எனக்கு அஸ்தமனத்தில் இருக்கும் நேரம்தான் மண்ணின் அருமை எழுவது வேடிக்கையாக இருக்கிறது. இதைத்தான் சுடலைஞானம் என்பார்களோ?

அம்மாவைச் சுற்றியே தன் உலகத்தை அமைத்துக்கொண்டு வாழ்ந்த என் மகள் ஆயுதத்தை அணைக்கப்போகிறாளோ? என்ற பயத்தில் உறவினர் வீட்டுத்திருமணத்துக்கு கொழும்புக்குச்சென்று வருவோமென அவளை அழைத்துச்சென்று விமானத்தில் ஏற்றியபோது அவள் வடித்த கண்ணீரை இப்போதும் நினைக்கிறேன். என் நெஞ்சுக் குழியிலிருந்து விம்மல் வெடித்தெழுகிறது.

அம்மா நிவேதா உன் விருப்பத்துக்கு மாறாக அந்நிய மண்ணுக்கு அனுப்பிய கோபத்தில் எனக்குக் கடிதம் போடாமல் ஒரு வருடமாக மௌனமாய் இருந்து என்னை

அழவைத்ததைக்குட நான் மறந்துவிட்டேன். ஆனால் .. இப்போ... மகளே... நீ அடிக்கடி சொல்வாயே.. அம்மா உங்களுக்கு முன்பு அப்பா இறந்தால் அவரை எரித்த இடத்திலேயே உங்களையும் அடக்கம் செய்வேன்.ஆனால் நீங்கள் சாகும்போது உங்கள் வைரத்தோடும் முக்குத்தியும் எனக்குத் தான் தரவேண்டும் என்பாயே. உனக்குத் தருவதற்காக காத்திருக்கிறேன் மகளே.. வாம்மா..வந்து பெற்றுக்கொள்ள மாட்டாயா?

மகளே.. இந்த வன்னியில் வாடகை வீட்டில் நான் செத்தால் ஒருசொட்டுக்கண்ணீர் சிந்தக்கூட யாருமில்லை அம்மா.. மூத்தமகள் இருக்கிறாளே என்று நினைக்கிறாயா? உன் அக்கா சுவேதா யாழ்ப்பாணத்திலிருந்து ஊர் ஊராக வீடு மாறிமாறி அலுத்துவிட்டதில் நானும் அவளுக்கு ஒரு சுமையாகப் போய்விட்டேன் என்பதால் இந்த வயதான அம்மா செத்திட்டேன் என்றால் அவளுக்கு அழுகை வராது.

ஆறுதல் பெருமுச்சுத்தான் வரும். என்னசெய்வது? நாட்டு நிலைமை மனிதர்களை மாற்றிவிட்டதம்மா. தொ¢யாத முகங்கள் பா¢ச்சயமில்லாத மனிதர்கள். எந்தக் காட்டில் என்னை எரிக்கப் போகிறார்களோ? எந்தக் கடலில் என்னைக் கரைக்கப் போகிறார்களோ?.

எனக்குப் பயமாக இருக்கிறது மகளே. இப்போது இந்தக் கணங்களில் ..நீ.. என்னை வந்து பார்க்காவிட்டால் .. இனி எப்போதுமே பார்க்க முடியாதம்மா. என்னுடல் எரிந்த இடத்தைக்காட்டக்குட எந்தத்தெரிந்தமுகமும் இருக்காமல் ஒருநாளைக்கு நீ தேடித் தேடி அழுவாய் என்று நினைக்கும்போது .. உனக்காக வேதனைப்படுகிறேன் மகளே.மரண தண்டனை நிறைவேற்றப்படும் சமயத்தில் குற்றவாளியைக்கூட கேட்பார்கள் உன் கடைசி ஆசை என்ன? என்று. எனக்கும் ஓர் ஆசை. பிறந்தமண்ணைவிட்டு என்னைப் பலவந்தமாகப் பிரித்து அனுப்பிய குற்ற உணர்வுடன்தான் உன் அப்பாவும் இறந்தார். அப்பா எரிந்த இடத்தில் என்னையும் எரிக்கவேண்டும். மகளே..உன் விழியிலிருந்து வழிந்து என் முகத்தில் படப்போகும் துளிநீருக்காகத் துடிக்கிறேன் நாங்கள் எரிந்த இடத்தில் உன் பாதம் பட்டால் ராமர் பாதம்பட்டு சாபவிமோசனம் பெற்ற அகலிகை போல எங்கள் மனம் நிறைந்து விடும்.மகளே.. உதிரத்தையே உணவாக்கித் தந்த எனக்கு ஒரு மிடறு நீராவது தந்து என் தாகங்களைத் தீர்க்க வருவாயா? மகளே. ஓங்கிக்குரலெடுத்து அழுகின்றேன். என் குரல் இந்த மனிதர்களுக்கு இப்போதும் கேட்கவில்லைப் போலும். என் வாயை மெதுவாக மூடுகிறார்களே. மகளே. மண்ணே மதியே காற்றே. உங்களுக்குக் கூடவா என் குரல் கேட்கவில்லை?

பதிவுகள் டிஸம்பர் 2003 இதழ் 48

## 36. பெண் ஒன்று கண்டேன் - குரு அரவிந்தன் -

"பிடிச்சிருக்கா?"

அவன் அந்தப் புகைப்படத்தைத் திருப்பித் திருப்பிப் பார்த்தான். கல்யாணத்தரகர் கொண்டு வந்த ஆல்பத்தைப் பார்த்து அலுத்துப் போயிருந்த அவனுக்கு ஒரு கவரில் அவர் பிரத்தியேகமாய் எடுத்து வைத்துக் கொண்டு வந்து காட்டிய அந்தப் படங்களைப் பார்த்ததும் பிரமித்துப் போய் விட்டான். இப்படி ஒரு அழகா? முழு உருவமும் தெரியும் அந்த ஆரேஞ்ச் நிறத்தில் சேலை உடுத்தி நெற்றியில் சின்னதாக ஒரு கறுப்புப் பொட்டு வைத்திருந்தாள். அன்றலர்ந்த தாமரை போன்ற சிரித்த முகமும், மல்லிகைச் சரம் சூடிய நீண்ட கூந்தலும், கண்களிலே ஒரு வித சாந்தமும் எல்லாமே அவனுக்குப் பிடித்துப் போயிருந்தன. இன்னொரு குளோசப் படத்தில் சூரிதாரில் தலையை ஒரு பக்கம் நளினமாய் சாய்த்தபடி வெட்கப்பட்டுச் சிரிப்பது போலச் சிரித்துக் கொண்டிருந்தாள். இரட்டைப் பின்னலில் ஒன்றை முன்னால் சரிய விட்டு சுருட்டை முடியில் அவள் செருகியிருந்த ஒற்றை ரோஜாவும் அவன் மனதை கொள்ளை கொண்டன. முகத்திலே தெரிந்த அடக்கமும் அமைதியும் அவன் இதுநாள்வரை காத்திருந்தது இவளுக்காகத் தான் என்று சொல்லாமல் சொல்லுவது போல இருந்தது.

"தம்பிக்குப் பிடிக்கும் என்று தெரிந்து தான் இந்தப் படத்தை வேறு ஒருவரிற்கும் காட்டாமல் கொண்டு வந்திருக்கிறேன். பார்ப்பதற்கு நல்ல குடும்பப் பாங்கான பெண்ணாய்த் தெரிகின்றா. அது மட்டுமல்ல நல்ல ஜோடிப் பொருத்தமாயும் இருக்கிறது."

சந்தர்ப்பம் பார்த்துத் தரகர் அவனது காதில் போட்டு வைத்தார்.

"என்னண்ணா படத்தைப் பார்த்து அப்படிப் பிரமித்துப் போய் நிற்கிறாய்? " தங்கை சாந்தி அருகே வந்து அவனது கைகளில் இருந்த படத்தைப் பறித்துக் கொண்டு தாயாரிடம் ஓடினாள்.

"வாவ்...!" இப்படியும் ஒரு அழகா? நிச்சயமாய் அண்ணாவிற்கு ஏற்ற ஜோடிதான். அம்மா அண்ணியைப் பாருங்களேன்." அவள் சமையலறையில் காபி தயாரித்துக் கொண்டிருந்த தாயாரிடம் ஓடிப் போய்ப் படத்தைக் காட்டினாள்.

"நல்ல நீண்ட சுருண்ட கறுப்பு முடியம்மா, பொட்டு வைச்சு பூ வைச்சு மகாலட்சுமி மாதிரி இருக்கிறா...த வே ஷீ றெஸ்..! எனக்கு நல்லாப் பிடிச்சிருக்கு! உங்களுக்கு பிடிச்சிருக்காம்மா?"

"பிடிச்சிருக்கு" என்று தலையசைத்த தாயார் "எங்க குடும்பத்திற்கு ஏற்ற பெண்ணாய்த்

தெரிகின்றா, எதற்கும் முதலில் அண்ணாவிற்குப் பிடிக்கணுமே!"

"பிடிக்கணுமா? அங்கே வந்து அண்ணாவின் முகத்தைப் பாருங்களேன்! படத்தைப் பார்த்து என்னமாய்ப் பிரமிச்சுப் போய் இருக்கிறான்!"

அவள் மீண்டும் துள்ளிக் கொண்டு அண்ணனிடம் ஓடினாள்.

"என்ன அண்ணா மயங்கிப் போனியா? காபி கொண்டு வரட்டுமா?"

"ஏய்! நீ பேசாமல் இருக்க மாட்டியா?"

"அண்ணா எங்கள் எல்லோரிற்கும் பிடிச்சிருக்கு! அண்ணி ரொம்ப அழகாய் இருக்கிறா. வேண்டாம் என்று மட்டும் சொல்லிடாதே!"

"அண்ணியா?"

"ஆமா! நாங்க முடிவெடுத்திட்டோம்! இவர்தான் இந்த வீட்டிற்கு மருமகள். வலது காலை எடுத்து வைத்து வரப் போகிறா?"

"நீ சும்மா இருக்க மாட்டியா. எதுக்கும் அப்பாவைக் கேட்ட்டுத்தான் சம்மதம் சொல்லணும்!"

அப்பா வேலையால் வந்து டிபன் சாப்பிடுக் களைப்புத் தீர சாய்மனைக் கதிரையில் சரிந்து பத்திரிகை படித்தார். அம்மாதான் அருகே வந்து தரகர் கொண்டு வந்ததாகச் சொல்லி அந்தப் படங்களைக் காட்டினார்.

"எங்க குடும்பத்திற்கு ஏற்ற பெண்ணாய்த் தான் தெரிகின்றா. எதற்கும் நீங்களும் பார்த்து பிடிச்சிருக்கா சொல்லுங்கோ."

அவர் படித்துக் கொண்டிருந்த செய்தித் தாளை மடித்து மடியில் வைத்துவிட்டு அந்தப் புகைப்படத்தை வாங்கி நிதானமாக அவதானித்துப் பார்த்தார்.

"புகைப்படத்தைப் பார்த்து குணத்தைச் சொல்ல முடியாதம்மா! மகனுக்குப் பிடிச்சிருக்கா?"

"அவனுக்கு மட்டுமென்ன சாந்திக்கும் பிடிச்சுப் போச்சு. படத்தைப் பார்த்ததும் அண்ணி என்று உறவு சொல்லுறாள்."

"அவளுக்கென்ன சொல்லுவாள், சின்னப் பெண்ணு, அவனுக்குப் பிடிக்கணுமே! போன

தடவை கூட ஒரு போட்டோவை பார்த்து இதென்ன அழுமூஞ்சி இதுகளுக்குச் சிரிக்கவே தெரியாதா? என்று கொமண்ட் அடிச்சானே மறந்து போனியா?"

"தெரியும் தரகர் காட்டின படங்களைப் பார்த்து 'இவை என்ன ·பாஷன் ஷோவா காட்டுகினம்? இவையும் இவையின்ற உடுப்பும் தலைவெட்டும்! ரேக்கி என்று எல்லாம் நக்கலடிச்சவன் தான். ஆனால் இந்தப் படத்தைப் பார்த்திட்டு ஒன்றும் சொல்லவில்லை!"

"ரேக்கியோ? அப்படியென்றால் என்ன?"

"வான்கோழியாம்! இந்த நாட்டிலை நிறைய இருக்குத்தானே. அதைத்தான் சொல்லுறானாக்கும்"

"அதற்கும் இதற்கும் என்னா தொடர்பு?"

"எனக்கென்ன தெரியும்? கேட்டால் கானமயிலாடக் கண்டிருந்த வான்கோழி என்றுப் பாட்டுப் பாடுறான்"

"இந்த வயதிலை இவை இப்படித்தான் பாடுவினம். அவையவைக்கு என்று வரும்போது தான் தெரியும். கல்யாணம் என்பது ஆயிரம் காலத்துப் பயிரம்மா. எதற்கும் சம்மதம் சொல்லுமுன் ஒரு தடவை என்றாலும் பெண்ணை நேரே பார்த்து நாங்கள் பேசுவது நல்லது என்று நினைக்கிறேன்!"

"பெண்ணோட மாமா முறை உறவினர் இங்கே இருக்கிறார்கள். பெண்ணை அங்கே சென்று பார்க்கலாமாம். இல்லாவிட்டால் விசிட் ரேஸ் விஸாவில் பெண்ணை இங்கே வரவழைக்கலாமாம். உங்களுக்கு எது விருப்பமோ அப்படியே செய்யலாம் என்று சொன்னார்கள்!"

"அப்படியென்றால் நாங்கள் எல்லோரும் பெண் பார்க்க அங்கே போவதை விட பெண் இங்கே வருவதுதான் நல்லது. எல்லாம் நல்லப்டியாய் நடந்தால் நிச்சதார்த்தத்தையும் இங்கேயே வைச்சிடலாம்."

அவர்களது விருப்பம் கல்யாணத் தரகருக்கும் உறவினருக்கும் தெரிவிக்கப் பட்டு சுரேனின் போட்டோ ஒன்றும் அங்கே அனுப்பி வைக்கப் பட்டது. அதைத் தொடர்ந்து மனப்பெண் இந்த நாட்டிற்கு வருவதற்கான ஏற்பாடுகளும் செய்யப் பட்டன. அன்று இரவு விமானத்தில் மணப்பெண் வருவதாக இருந்தது. சுரேஷ் மட்டும் தனது நண்பனோடு விமான நிலையத்திற்குச் சென்றிருந்தான். நண்பனின் ஆலோசனைப்படி அவளுக்குக்

கொடுப்பதற்காக ரோஜாமலர்க் கொத்து ஒன்றும் வாங்கி வைத்திருந்தான்.

அவள் சுங்கப் பரிசோதனை முடிந்து வெளியே வந்ததும் திடீரென அவள் முன்னால் சென்று மலர்க் கொத்தைக் கொடுத்து அவளை ஆச்சரியத்தில் மூழ்கடித்து, அவள் வெட்கப்படும்போது அதைப் பார்த்து ரசிக்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டான். இந்த நாட்டுப் பெண்களுக்கு வெட்கப்படவே தெரியாது என்பது அவன் நினைப்பு.

புகைப்படத்தில் பார்த்தெள போலவே இருப்பாளா? இல்லை நேரிலே பார்க்கும் போது இன்னும் அழகாய் இருப்பாளா? என்ன நிற சேலையில் வருவாள்? மல்லிகைச் சரம் சூடியிருப்பாளா அல்லது ஒற்றை ரோஜாவைத் தலையில் செருகியிருப்பாளா? ஒருவேளை சுடிதாரிலும் வரலாம். அந்த அழகுத் தேவதை எப்படி வந்தாலென்ன? எந்த நிறத்தில் எதை அணிந்தாலும் அவளுக்கு அழகாய்த் தான் இருக்கும் என்று கற்பனையில் கனவு கண்டு கொண்டு அவள் வருகைக்காக லொபியில் காத்திருந்தான்.

மொனிட்டரில் விமானம் சரியாக 7.05 க்கு வந்து விட்டதாகத் தெரிந்தது. ஒவ்வொருவராக வெளியே வந்து கொண்டிருந்தனர். இளம் ஜோடிகள், வயது போன தம்பதிகள், இளைஞர்கள் என்று பலவிதமானவர்களும் வெளியே வந்து கொண்டிருந்தனர்.
பார்த்துப் பார்த்துக் கண் பூத்துப் போனதுதான் மிச்சம். இவர்கள் எதிர்பார்த்த மணப்பெண் வரவேயில்லை. என்ன நடந்திருக்கும் என்று குழம்ப்பிப் போனவர்கள் கடைசியாக வெளியே வந்த வயோதிபத் தம்பதிகளீடம் சென்று விசாரித்தனர்.

"மன்னிக்கணும்! உங்களோடு விமானத்தில் வந்த எல்லோரும் போய் விட்டாங்களா? அல்லது யாராவது உள்ளே நிற்கிறாங்களா?"

"இல்லையே எல்லோரும் போய் விட்டாங்க. எங்க சூட்கேஸ் எங்கேயோ மறுபட்டுப் போச்சு. அதனாலேதான் நாங்க தாமதிக்க வேண்டி வந்தது. வேறுயாரும் உள்ளெ இருப்பதாய் தெரியவில்லை! நாங்கதான் கடையாக வந்தோம்." என்றனர்.

அவர்களுக்கு அருகே யாரையோ தேடிக்கொண்டு நின்ற ஒரு பெண் சட்டென்று இவர்களைத் திரும்பிப் பார்த்தாள். இவனது நண்பன் முதுகிலே இடித்தான்.

"பாரடா அவளின்றை தலை வெட்டையும் உடுப்பையும்! இங்கே நின்றமென்றால் இவள் எங்களை லிப்ட் கேட்டாலும் கேட்பாள் போல் இருக்கு. ஏனிந்த வம்பு? வா நாங்கள் மெல்ல மாறுவம்."

சொல்லிக் கொண்டே நண்பன் மெல்ல நகர்ந்தான்.

"எக்ஸ்யூஸ் மீ"

சுரேஷ் நிமிர்ந்து பார்த்தான். அந்தப் பெண் அருகே வந்தாள். நண்பன் சொன்னது சரிதான். ஏதோ உதவி கேட்கப் போகிறாள்!

"நீ..ங்க சுரேஷ் தானே?"

இவளுக்கு எப்படி என்னுடைய பெயர் தெரியும்? சுரேஷ் திகைத்துப் போய் அவளைப் பார்த்தான்.

"ஹாY! என்னைத் தெரியலையா? நான் தான் நிவேதா!"

அவள் ஆவலோடு அவனருகே நெருங்கி வர அவன் மருண்டு போய் ஓரடி பின்னால் நகர்ந்தான்.

எந்..த நிவே.....தா?

அவனுக்கு சட்டென்று ஏதோ புரிந்தது!

என்ன இது படத்திலே வேறு ஒரு பெண்ணைக் காட்டித் தரகர் என்னை ஏமாற்றி விட்டாரோ? எதிரே தரகர் நின்றால் அவரின் முகத்தில் ஓங்கி அறைய வேண்டும் போல் இருந்தது அவனுக்கு.

நீண்ட கூந்தலில் பூ வைத்த , பொட்டுப் போட்ட, சேலையில் சுடிதாரில் பார்த்த அந்த அழகுத் தேவதை எங்கே, ஒட்ட வெட்டிய தலைமுடியும் லூஸ்டாப்ஸ¤ம், டை பாண்டும் போட்ட இவள் எங்கே?

அவன் ஒருகணம் தயங்கினான். கொண்டு வந்த மலர்க் கொத்தை அனிச்சையாக பின்னால் மறைத்தான்.

"என்ன என்னைப் பார்த்ததும் திகைத்துப் போயிட்டீங்களா> எப்படி இருக்கேன்? மொட்டாய் இருக்கா? வெஸ்ரேணுக்குப் பொருத்தமாய் இருக்கிறேனா?"

"நீங்க..! " அவன் வார்த்தைகளை மென்று விழுங்கினான்.

"எல்லாம் இங்கே இருக்கிற ஆண்டியின் அட்வைஸ்தான். ஹெயர் கூட டை பண்ணிக் கொண்டு வரச் சொன்னாங்க. நேரம் கிடைக்கலே. அதை இங்கே தான் செய்யணும், எப்படி

உங்களுக்குப் பிடிச்சிருக்கா?" விரல்களால் தலையைக் கோதி ஒரு மொடலிங்
செய்யும் பெண்ணைப் போல்

·போஸ் கொடுத்தபடி வார்த்தைகளை அடுக்கிக் கொண்டே போனாள்.

அவனது கனவுத் தேவதையைப் பார்த்துச் சிரிப்பதா அழுவதா என்று தெரியாமல் அவன் அதிர்ந்து போய் நின்றான். இந்த நாட்டு மண்ணுக்கு அப்படி ஒரு மகிமை உண்டு! கானமயிலைக் கூட வான் கோழியாக்கி விடும்.

பதிவுகள் ஆகஸ்ட் 2001 இதழ்-20

**37. தீப்பூக்கும் வாகை! - திலகபாமா (சிவகாசி) -**

குமார் தின்று எரிந்த அந்த கொட்டை குப்பைத் தொட்டியில் விழுந்து சப்தமெழுப்பி ஓய்ந்தது. எச்சங்களை தனக்குள் எரிந்து கொண்டிருக்கும் என் வீட்டாரிடமும் சப்தமெழுப்பி, சப்தமெழுப்பி ஓய்ந்து போனதை நினைத்துக் கொண்டபடி சாப்பிட்டு முடிந்தவைகளை ஒதுங்க வைத்துக் கொண்டிருந்தாள் தீபா. மேசை சுத்தமாகிக் கொண்டிருந்தது மீண்டும் அழுக்காகப் படவென்று மேல் வீட்டின் தளத்தில் நடந்து கொண்டிருந்த வேலைகள், கட்டிடம் பிரசவ வலிகளாய் சப்தமெழுப்பி கொண்டிருக்க, சில பேரால் எதையும் லட்சியம் செய்யாது என் மாமியை போல் தூங்க முடிவதை வியந்தபடி செங்களில் விழுந்த ஒவ்வொரு அடியும் , தட்டலும் அதிர்வலைகள் என்னுள் தோற்றுவித்துக் கொண்டிருக்க, பூச்சு வேலைகளின் தீவிரம்,எதையும் பூசி விட முடியாது அவளுள்ளும் உறைந்து கிடைந்த நிகழ்ச்சிகள் வந்து போயின.

கண் மூடிக் கிடந்த சூரியன்,மேகம் தன் கனத்த மனத்தையெல்லாம், துளிகளாக்கி புவியோடு பகிர்ந்து கொண்டிருக்க, காங்கிரீட் போடவெண்று வாசலில் நின்ற கூலி ஆட்கள் குளிருக்கும், இன்று சம்பளமில்லாது போகக் கூடுமோ என்கிற பயத்துளுள்ளும் நின்று கொண்டிருக்க வந்திருந்த ஆட்களில் அவள் மட்டும் விடைத்து க் கொண்டு கற்பாறைகளுக்கு நடுவே வேர் விட்டிருந்த ஆல் செடியாய் தலையுலுக்கி க் கொண்டு நின்றாள்.

" என்ன செய்ய? தண்ணி செமக்க வேண்டியதில்லை என்று சந்தோசப்படவா? சித்திக்காரி சம்பளப் பணமெங்கேன்னு கேட்பான்னு வருத்தப் படவா? ....சே இன்னிக்கு சம்பாத்யத்தை மழை வந்து அடிச்சுட்டு போகுதே,"

சலித்தபடி நின்றிருந்த அவள் தோற்றம் தந்தது சந்தோசமா இல்லை ஏக்கமா? விதிர்த்து விறைத்து நிற்கும் அவளை வியந்து, பற்றிக் கொள்ளும் சந்தோசம்,பணிந்து பணிந்து பயந்து , நயந்து பேசிக் கடக்கும் எனக்கான ஏக்கமும் ஆக மொத்தத்தில் ரெண்டு பேரும் ஒரே இடத்துல முளையடிச்சு வைச்ச கன்னுக் குட்டிதானோ சந்தோசம் கரைந்து போக நடந்து கொண்டிருந்த வேளையில் என்றல்லாது அவள் மேல் கவனம் பயணிக்க ஆரம்பித்திருந்தது. தூரல் விட்டிருக்க வந்திருந்த வேலையாட்களில் இவள் ஒருத்திதான் பெண் என்றாலும் பெண் என்பதை மறந்து, மறுத்து நின்று கொண்டிருந்தாள். கைகளில் உறையிட்டு சிமெண்ட் கலவைத் தட்டுகள் காற்று வேகத்தில் பறக்க, பிடித்து திரும்ப அடுத்த ஆள் கை பார்த்தெறிந்து வேகத்திற்கு ஈடு கொடுக்கவென்று காலகட்டி நின்றிருந்தாள்...

அன்றொரு நாள் அடுப்படி வேலையில் மும்முரமாக நானிருந்த நேரம்...எட்டி பாத்திரம் சாமான் எடுக்கவும்....அடுப்பு வேலைகளை துரிதமாக பார்க்கவும் என்று காலகட்டி

நின்றிருந்த போது குமார் வந்து என் காலுக்குள் தன் காலால் தட்டி விட்டு " பொம்பளை நிக்கிற லட்சணத்தை பாரு" என்று விரட்டியதும் தடுமாறி , கொதித்து கொண்டிருந்த எண்ணைக்குள் விழப்பார்த்து சுதாரித்து கொண்டதும் கண்ணுக்குள் வந்து போக தூத்தெறி" என்ன ஆம்பி¨ளைங்க நீங்க" எறிந்த தட்டுகளோடு தெறித்து விழுந்த அவளது வார்த்தைகள்..... என் மனதுக்குள் ஓடிய நிகழ்வுக்கா பதில் சொல்கிறாள்..

"ம்ம் ...ம்ம் வரிசை பின்னாடி போகட்டும்", கூவிய ஆள் அவளை குறிப்பாகக் காட்டி

"ஏம்மா முனிமா பின்னாடி போ", என்றதும், தொடத் தொட சிணுங்கும் செடிகளைப் பார்த்ததுண்டு, இவளோ சீறும் பாம்பாக, " பின்னால வைப்பிரேட்டர் இருக்கிறது தெரியலை அது கிட்ட நிக்கிறதும் உங்கிட்ட நிக்கிறதும் ஒன்னு, அதுவும் சேலையை உருவிப்பொடும்....போய்யா நகர முடியாதுய்யா, " ஒழுங்கா ஈஸ்வரின்னு கூப்பிடு , பாத்துக்க" அவள் அதட்டலில் வீழ்ந்து கொண்டிருந்த சாரல் மூர்ச்சித்து நின்று, இடியோசைக்கு பயப்படாத நானா இவளோசைக்கு பயந்தேனென சுதாரித்து மீண்டும் தூறத் துவங்கியது.

எலும்புக்கூடாய் இருந்த தளம் மெல்ல மறைத்து முழுதாக்கும் பிரம்மாவாய் இருந்தனர் ஆட்கள்.

கலவை வரும் வேகம் குறைய, " யோவ் வேகமா அனுப்புங்கய்யா....சும்மா நின்னா கூதலடிக்குது ....புகையிலையை குதப்பிய வாயுடன் பேசிக்கொண்டேயிருந்தாள் ஏதாவது. அவளின் முரட்டு முகம் தந்த எரிச்சல் நேரம் போகப் போக எனையறியாது மனதில் ஏறி உட்கார்ந்து கொண்டது ஆச்சர்யமே.

சரிவான கூரை பிடிமானமில்லாதிருந்ததை விட ஒற்றைக் கால் பலத்தில் நின்று வேலை செய்ய வேண்டிய இடம் .அதோடு கலவையும் வாங்கி கடத்தணும். நான் மாட்டேன், நீ மாட்டேன்னு போட்டி "சரிதான் தள்ளுங்க ஆம்பிள்ளைகளா, நான் நிக்றேன்",

தள்ளி விடாத குறையாக முன்னேறிச்சென்று நின்றாள்.

"தங்கச்சி விழுந்திடப் போற, பிறகு தாங்கிப் பிடிக்க நாந்தேன் வரணும்", எகத்தாளமாய் ஒரு பதில் தன்னால் இயலாததை அவள் செய்துவிட்டாளே என்று.

"சரிடா அண்ணா ..எறிந்த தட்டுடன் எறிந்த அந்த வார்த்தைகள்.

" அப்படித்தான் போன வாரம் உந் தங்கச்சி விழுந்திட்டா நாந்தான் பிடிச்சு தூக்கி விட்டேன்".

சிரிப்பில் சில்மிசம் தெரிந்தது. தவிர்க்க எண்ணி என் பார்வை அங்கிருந்த வேப்ப மரத்தில் விழுக, காத்துக்கு மரம் அசையுதா, மரம் அசையிறனால காத்து அங்கு தோன்றியதா குழப்பமாகத்தான் இருந்தது........

"அப்படியா அண்ணா யாரடா அவ என் சக்களத்தி என எறிந்த தட்டோடு அவனையும் எறிந்து இறங்கி வந்தாள். சூரியன் மெல்ல மறைய, அவளும் கூரையை விட்டு இறங்கி வர சரியாக இருந்தது. கால் கை கழுவ நின்ற கூட்டத்திலிருந்து தனித்து நின்றிருந்தாள்.

"என் சித்திக்காரி என்ன அழகா துவைச்சு கொடுத்த சேலை இப்படி அழுக்கா

போயிடுச்சே.யாரடி இது?" ன்னு கேட்கும். தானாய் பேசிக் கொண்டு சென்றவளை என் கேள்வி நிறுத்த " உன் பேர் என்ன ஈஸ்வரியா, முனியம்மாவா?"

"முனீஸ்வரிக்கா, ஈஸ்வரின்னு கூப்பிடுவாங்க"

"அப்படியா, கழுத்திலே காதுல ஏன் ஒன்னையும் காணோம்?"

அதுவரை எரித்துக் கொண்டிருந்து எட்டா உயரத்தில் பறந்து கொண்டிருந்த அவள் கண்களும் செய்கையும் தரை இறங்குவதை சகிக்க முடியா உணர்வுடன் நான் உணர்ந்து கொண்டிருக்க, வீட்டுக்காரர் இல்லைக்கா" அதிர்ந்த என் மனது நிலைக்குவர நேரம் பிடித்தது.

"உனக்கு வயது என்ன?"

"இருவத்தஞ்சு"

"என்னாச்சு உன் வீட்டுக் காரருக்கு? குழந்தைகள்?" கேள்வியை முடிக்காது நிற்க அவள் தொடர்ந்தாள்.

"பொண்ணு ஒன்னு இருக்குக்கா வீட்டுக்காரரை போலீஸ் பிடிச்சுட்டு போயிட்டாங்க.."..

"ஏன்?"

"கொலை பண்ண முயற்சி பண்ணினதா, செயில்ல இருக்குக்கா"

"ஏன்? நீ போய் அதைப் பார்க்கலையா?"

"சீ......அதையாரு போய்ப் பார்ப்பா..எனைய வேண்டாமுண்ன்னு 40 பவுனு ரொக்கம் தரான்னு அவ அத்தை மகளை இழுத்துட்டு ஓடிப்போச்சே... அதை ஏன் நான் போய் பாக்கனும்?

"சும்மாவா விட்டே?". விடுகிற ஆளாய் அவளில்லையே என்று என் மனதில் பட கேள்வி வந்து விட்டது. "ஓடுன ஆள என்ன செய்ய சொல்லுறீங்க? கால்லேயா விழுக....'

அவளுக்குள் மௌனமாய் ஒன்று கொதித்துக் கொண்டிருந்ததை ஒரு குரூர முகமூடி போட்டு , முகமூடி ரணத்தில் அவள் வலி மறைக்கப் பார்த்திருந்தாள். ஆனால் இங்கு எல்லோரும் அப்படித்தனோ? என்னையும் சேர்த்து. ஓடும் நினைவுகளோடு,வலியை வலியால் மறைப்பதா?...புரியாது பார்க்கிறேன். மனதுக்குள் விழுந்த அழுத்தங்களில் கணங்களில் மூழ்கிய மனது வார்த்தையை வெளியெ விடாது தகர்க்க..

"பிறகு ஏன் ஒண்ணும் போடாம இருக்க?"

"போட்டா சித்தி வையும் எவன மயக்கன்னு எதுக்கு இந்த பல்லு போட்டு பேசுற ஜோலி? ன்னு விட்டுட்டேன்."

"யாருக்காகவும் எதையும் ஏன் விடனும்? உனக்கு பிடிச்சா போட்டுக்கிட வேண்டியதுதானே?"

என் கேள்வி எனையே பார்த்து சிரித்தது... நான் என் நாத்தனாருக்கு போடக் கொடுக்காததுனால என் நகை அடகுக் கடையில் வைக்கப் பட்டு இன்னும் கேட்க முடியாமல்..... ஒரு வித குற்றவுணர்வு அழுத்த அவள் முகம் பார்த்தேன் பதிலுக்காக அவள் வெறுமனே உச்சு கொட்ட "ஆமா சித்தியா யாரது?"

"எங்கப்பா புதுசா ரெண்டாம் கல்யாணம் பண்ணிட்டு வந்திருக்கு "...

" அது சரி உனக்கு கல்யாணம் பண்ணும் நினைப்பு இல்லையாக்கும் உங்கப்பாவிற்கு/"

"அப்பாவை விடுங்கக்கா...எவனுக்கு அந்த நினைப்பு வரும்?...எல்லாம் பச்சிலையா

தலைவலிக்கு கசக்கித் தடவி போட்டு போற ஆட்கள்கா ...அவன் வலி தீர்ந்தவுடன் நாம உதிர்ந்திடனும்ன்னு நினைப்பான்களே ,ஒழிய, யாரு நம்ம வலிக்கு மருந்தா இருக்கப் போறா?.....பிள்ளைகளோட எவன் கட்டிக்கிறேங்கறான் பிறகெதுக்கு இப்படி அகராதியா பேசுறேன்னு நினைக்கிறீங்க...அன்பாவும் ஆசையாவும் பேச நினைப்பு இருக்குதான்.எவன் மனுசியாப் பாக்கிறான் .எல்லாம் பொம்பிளையாய் பாக்குற கூட்டம்,

கொஞ்சம் அசந்தா ரோட்டோரத்தில மல்லாத்திப்பொடுவான்க..போகச் சொல்லுங்க"

மனசுக்குள் கேல்வி எழுந்தது.. ..உண்மை சொல் கௌதமா? நீதான் கல்லாய் போக சாபமிட்டாயா , இல்லை, இவளைப் போல அகலிகையும் தானே கல்லாகினாளா?.. நிகழ்கால நிஜம் தோளைத் தொட விழித்தெழுந்தேன் மழை பார்த்து காத்துக் கிடந்த செம்மண் வரிகளாய் அவள் ரணப்பட்டு கிடப்பது தெரிந்தது... என்ன செய்ய ? ஒவ்வொருத்தரும் ஒவ்வொரு படியிலிருந்து அடுத்த படிக்கு போக போராடிக்கிட்டு இருக்கோம். படிகள் இருந்தும் அடுத்த படி ஏறுவதற்கு சண்டையடிக்க வேண்டியிருக்கு...

.மெல்ல அவள் மனது சிந்தனைக்குள் ஆழ...தன் பேரில் இருக்கும் பணத்தை கேட்டு, பிள்ளைகள் பேரில் டெபாசிட் செய்ததுக்காக இன்னும் அம்மா வீடு அனுப்பாது இருப்பதைத் தண்டனையாய் தந்திருக்கும் தன் வீட்டாள்களின் நினைப்பு வர......முகமூடிகளின் உணர்வுகள்தான் வேறயே ஒழிய.....மொத்தத்தில் எல்லாரும் ஒழிந்து கொண்டிருப்பது வெளிச்சமாக...அவளுக்குள்ளும் ரணங்கள் முகமூடி பேசியது......

"சொல்ல முடியாது ஈஸ்வரி உன் மனசுக்கு திருப்தியா யாராவது தென்பட்டா தயங்காத.....அதுக்காக துணையில்லேன்னு மருகவும் செய்யாத. கழுத்து காதுல போட்டுக்க...உனக்கான வாழ்க்கையை நீயே அமைச்சுக்கிட்டேன்னு சந்தோசமா இரு. அடிக்கடி எனை வந்து பாரு எனக்கு அதிக எதிர்பார்ப்பைத் தந்து கொண்டிருக்கும் வாசலில் நின்ற வாகை மரம் தீப்பற்றி அது பூப்பூக்க ஆசைப்பட்டு கன்று வாங்கி வைத்தேன். ஆண்டுகள் பலவாகியும் இன்னமும் பூக்க மனமில்லாது, முதிர்ந்து பழுத்து கொப்புகளில் தாளாது காற்றுக்கு ஊசலாடி தரை பூராவும் விரிப்பாகிக் கிடக்க , தனித்து நின்ற கொப்புகளில் புதிய தளிர்கள் நம்பிக்கையாய் வந்திருந்ததை கவனித்த மாலைப் பொழுதில் மீண்டும் வந்தாள் ஈஸ்வரி. புன்னகையோடு கொஞ்சம் பொன்னகையும் தாங்கியிருந்தாள்...

"என்ன ஈஸ்வரி சித்தி வையலையா......?"

"ஒரு மாதிரி பார்த்துச்சு. ப்ரெண்ட் வீட்டுக்குபோறேன்னு கடுப்பாக்கி விட்டு வந்திருக்கிறேன்...உங்ககிட்ட காமிக்கனும்ன்னு."

" சந்தோசம் ஈஸ்வரி" வேறு என்ன பேசலாம் என்று வார்த்தைகளைத் தேடியபடி வாகை செந்தணலாய் தீப்பற்றி பூப்பூக்கும் நாளும் வரும் என்று உதிர்ந்தும் , துளிர்த்தும் இருக்கும் வாகை மரத்தைப் பார்த்தபடி .....பரணிலிருந்து என் பெட்டி எடுத்தேன் ..அம்மாவை பார்த்து வரவென.

எங்கே என்பதாய் விழியுயர்த்திய குமாருக்கு

"அத்தை வந்தா சொல்லிடுங்க,அம்மா வீட்டுக்கு போயிட்டு வருகிறேன்னு."

பதிவுகள் ஆகஸ்ட் 2004 இதழ் 56

**38. புரிந்திருந்தால்... - துஸ்யந்தி பாஸ்கரன் --**

இரவு பத்தரை மணி. வீதியில் போகும் வாகனங்களின் இரைச்சல் இன்னும் குறைந்தபாடில்லை, ராகுலுக்கு து¡க்கமே வரவில்லை. அருகில் உறங்கிக்கொண்டிருக்கும் மனைவியைப் பார்க்கின்றான். எந்தவித சலனமும் இல்லாது அயர்ந்து து¡ங்கிக்கொண்டிருக்கிறாள். ராகுலுக்கு மட்டும் ஏனோ இப்போதெல்லாம் து¡க்கமே வருவதில்லை. நிறைய பிரச்னைகள் அவையெல்லாவற்றையும் விட காலையில் வீட்டு வாசலில் வந்து நிற்கப்போகும் சண்முகசுந்தரத்திற்கு என்ன பதிலைச் சொல்வதென்பதே அவனது தற்போதைய பலமான யோசனை. ராகுல் கொழும்பில் ஒரு தனியார் நிறுவனத்தில் கணக்காளராக வேலை பார்க்கின்றான். மனைவி, இரண்டு பெண் குழந்தைகள்.

அளவான அழகான குடும்பம். மனைவியும் பிள்ளைகளும் யாழ்ப்பாணத்தில்தான் இரண்டு வருடங்களுக்கு முன்பு இருந்தார்கள். அப்போதெல்லாம் தனது எண்ணாயிரம் ருபா சம்பளத்தில் மூவாயிரம் ருபாவை எடுத்துவிட்டு மிகுதி ஐயாயிரம் ருபாவையும் மனைவிக்கு அனுப்பிவிடுவான். அவர்களது மேலதிக தேவைகளுக்கு வீட்டு வளவில் காய்க்கும் தேங்காய் மாங்காய்களை விற்றாலே போதுமானதாக இருந்தது. அப்போது ராகுல் எந்தவித பிரச்னைகளும் இன்றி நிம்மதியாகவே இருந்தான். அதன்பின்னர் யாழ்ப்பாணத்தில் யுத்தக்கெடுபிடிகள் அதிகமா¡க, மனைவி பிள்ளைகளையும் அழைத்து வந்து கொழும்பிலேயே செட்டிலாகிவிட்டான்.

தன்னுடைய மாதச் சம்பளம் வீட்டு வாடகை, பிள்ளைகளின் படிப்புச்செலவு, சாப்பாட்டுச்செலவு, என்பவற்றிற்கே போதவில்லை. அவன் தனது மனைவிக்கு சீதனமாக கொடுக்கப்பட்ட பணம் வங் கியில் இருந்தது. அதை எடுத்துதான் வீட்டிற்கு முற்பணமாகக் கொடுத்திருந்தான். ஆனால் ஒரு வீட்டில் அவன் மனைவி ஆறு மாதங்கள் கூட இருந்ததில்லை. அறை சின்னன், வெளிச்சம் வருதில்லை, சந்தை கிட்ட இல்லை, வாடகை கூட என்று ஏதாவது ஒரு காரணம் சொல்லிக்கொண்டே இருப்பாள். இப்போது கூட வேறு வீடு பாருங்கோ பிள்ளைகளுக்கு பள்ளிக்கூடத்திற்கு கிட்டவாக பாருங்கோ நான் நாலரை மணிக்கே எழும்ப வேண்டியிருக்கு" என்று தினமும் ஏதாவது சொல்லிக்கொண்டே இருப்பாள். ஆனால் ராகுலுக்கோ அலுவலகம் பக்கத்தில். பாடசாலைக்கு அருகில் வீடு எடுத்தால் அவன் பாடசாலை போக்குவரத் து செலவிற்கு கொடுக்கும் பணத்தை விட மூன்று மடங்கு அதிகம் கொடுக்கவேண்டி வரும். ஏற்கனவே அவன் குடும்பச்செலவை சமாளிக்க படாத பாடு பட்டுக்கொண்டிருக்கிறான். இதையெல்லாம் அவன் மனைவி விளங்கிக்கொண்டதாகத் தொ¢யவில்லை அதுமட்டுமில்லாமல் அவளது உறவினர் வீடுகளில் எதையெல்லாம் பார்த்தாளோ அவற்றையெல்லாம் வாங்கித்தருமாறு பிடிவாதம் பிடித்து வீடு முழுக்க வாங்கிப்போட்டு நிறைத்திருந்தாள்.

இவற்றையெல்லாம் அவன் கடன் பட்டு செய்தமையால் ராகுலின் சம்பள பணத்தில் குறிப்பிட்ட தொகையை கழித்துக்கொண்டுதான் கொடுப்பார்கள். அப்படி வரும் சிறுதொகையில் அவன் வீட்டு அடிப்படைச் செலவையே ஈடு செய்ய முடியாத போது கிழமைக்கு ஒரு விருந்தினராவது வந்துவிடுவார்கள். இப்படியெல்லாம் அவன் திண்டாடுவதே தினசரி வாழ்க்கையாகிவிட்டது. இப்படித்தான் ஒருநாள் அவனது தாயார் கடும் சுகவீனமுற்று சத்திரசிகிச்சை செய்யவேண்டிய கட்டாயம் ஏற்பட்டபோது அவன் கையில் ஐந்து ருபா கூட இருக்கவில்லை. அலுவலக நண்பர்களிடம் கூறியபோது தங்களிடமும் பணமில்லை என்று சொல்லி வட்டிக்கு பணம் கொடுப்பவரான சண்முகசுந்தரத்தை அறிமுகப்படுத்தி வைத்தார்கள். அவரிடம் ருபா ஒரு லட்சம் வட்டிக்கு வாங்கிக் கொண்டு மாதா மாதம் வட்டியை கொடுத்து வந்தான் ராகுல்.

திடீர் என்று சண்முகசுந்தரம் தனது மகளுக்கு திருமணம் அதனால் பணத்தை உடனடியாக திருப்பித்தருமாறு ராகுலை வற்புறுத்தினார். அலுவலகத்தில் இருக்கும் கடனையே இன்னும் கட்டி முடியாமல் இருப்பதால் அங்கு மீண்டும் கடன் கேட்க முடியாத நிலை. தன் மனைவியிடம் இருந்த தங்க நகைகளை வேறு வழியில்லாமல் கேட்ட போது, அவளோ இது அம்மா தந்தது அது பாட்டி தந்தது என்று சென்ரிமென்ட்டாக ஏதோ எல்லாம் கூறிவிட்டு அமைதியாக து¡ங்கிக்கொண்டிருந்தாள். அவளின் கண்களைப் பார்த்தபடியே காலையில் வந்து கதவைத் தட்டப்போகும் சண்முகசுந்தரத்திற்கு என்ன பதிலைக்கூறுவதென்று யோசித்தபடியே அவனும் து¡ங்கிப்போனான்.

காலையில் மனைவி என்ன.. எழும்புங்கோ வேலைக்கு நேரமாகுதல்லே என்று து¡க்கத்தைக் கலைத்தபோதுதான் அவசரமாக எழுந்து நேரத்தை பார்த்துவிட்டு தன் காலைக் கடமைகளை முடித்து அலுவலகத்திற்கு புறப்படும் போது காஸ் முடியப்போகுதப்பா ஒரு ஆயிரம் ருபா தந்திட்டு போங்கோ என்றவுடன் பர்ஸ்ஸில் இருந்து ஐநு¡று ருபாவை எடுத்துக் கொடுத்துவிட்டு உன்னிடம் மிச்சம் இருக்கும் தானே என்று சொல்லிவிட்டு மனைவி தயார் செய்து வைத்திருந்த மதிய உணவுப் பார்சலையும் எடுத்துக்கொண்டு வெளி வாசலுக்கு வர சண்முகசுந்தரமும் வந்தகொண்டிருந்தார்

வாங்கோ அண்ணை.. உங்களிட்ட மத்தியானம் வரவேணும் எண்டு நினைச்சனான் என்றபடியே வரவேற்றான். என்ன தம்பி ரேடி பண்ணீற்றீரோ என்ற சண்முகசுந்தரத்திடம் இல்லை அண்ணை.. இன்னும் ஒரு கிழமை ரைம் தாங்கோ. திடீர் எண்டு கேட்டதால் ஒண்டும் செய்ய முடியேல்ல இதற்கு சண்முகசுந்தரம் என்ன சொல்லப் போகிறாரோ என்று அவரது முகத்தையே ஏறிட்டான் ராகுல். நான் அவசரம் எண்டபடியாதான் கேக்கிறன் என்ர பிள்ளையின்ர கலியாண விசயம் தம்பி இல்லையெண்டால் இப்பிடி அவசரப்படுத்த மாட்டன்.. சா¢ சா¢ அடுத்த திங்களுக்கிடையில கட்டாயம் வேணும் ரெடி பண்ணி வையும் அப்ப வரட்டே. என்று சொல்லிப் புறப்பட்ட

சண்முகசுந்தரத்திற்கு வழியனுப்பக்கூட தோன்றாமல் நின்றவனின் சிந்தனையை என்னப்பா நீங்கள் போகேல்லையா என்று கேட்ட மனைவியின் குரல் கலைத் தது. ஹா? ம்.. ஒண்டுமில்லை..நான் வாறன் என்று கூறிவிட்டு ஒழுங்கையால் இறங்கி காலி வீதிக்கு வந்தடைந்தான்.

அவன் நின்ற திசைக்கு எதிர்த்திசையில்தான் அவன் பஸ் எடுக்கவேண்டும். சண்முகசுந்தரத்திற்கு இன்னும் ஒரு கிழமைக்குள் பணம் திரட்டவேண்டுமே என்ற மனக்குழப்பத்தோடு அந்த வீதியை கடக்க முற்பட்டவேளை வேகமாக வந்த மினி வான் ராகுலை அடித்து து¡ரத்தில் து¡க்கியெறிந்தது.

உச்சி வெயிலில் அனைத்து புடவைகளையும் துவைத்து கொடியில் காயப்போட்டுவிட்டு களைத்துப் போனவளாய் குளிர்சாதனப் பெட்டியில் கரைத்து வைத்த எலுமிச்சம் பானத்தை கையில் எடுத்தபடியே ¡¢வியை ஓன் பண்ணினாள். போட்ட மாத்திரத்தில் செய்தியில் விபத்து பற்றிய விபரம் அறிவித்துக்கொண்டிருப்பது அவள் காதில் விழ, ¡¢வியின் ஒளி கொஞ்சம் கொஞ்சமாக மிளிர்ந்து முழுமையடைந்ததும் அந்தச்சின்னத்திரையில் காணப்பட்ட அடையாள அட்டை அவளை அந்த இடத்திலேயே அவளை மூர்ச்சித்து விழ வைத்தது.

பதிவுகள் மே 2004 இதழ் 53

**39. சிறகு! - சாரங்கா தயாநந்தன் -**

வெண்மை என்றால் அப்படி ஒரு வெண்மை. மென்மினுக்கத் தூய்மை. உயிர்த்துடிப்பான கண்கள். பார்ப்பவர் கண்களை வலிந்து சிறைப் பிடிக்கத்தக்க அழகு. மெல்ல மெல்லத் தத்தி நடக்கும்போது அப்படியே கைகளில் அணைத்தெடுத்து தூக்கி மடிமீது வைத்துக் கொள்ளத் தோன்றும் எவருக்கும். அவனுக்குப் பார்க்கப் பார்க்கச் சந்தோஷமாக இருந்தது. வீட்டுக்கு எவர் வந்தாலும் அவர் கவனம் திருப்பி ஒருமுறை தன்னைப் பற்றிக் கதைக்க வைக்காமால் விடாது அந்த வெள்ளைப் புறா.

கூடென்று ஏதுமில்லை. வீட்டினுள் பலகாலம் வசித்து வருவதில் தனது வாழ்விடம் அதுவென்று அதற்குப் படினப்படுத்தப் பட்டிருக்க வேண்டும்.அவ்வகையில் அது முட்டாள்தனமுடையதாக இருப்பினும் கூட சிலபொழுதுகளில் இந்தப் புறாவே உலகிலுள்ள சகல புறாக்களிலும் அதி புத்திசாலியெனத் தோன்றும் அவனுக்கு. அதன் சில செயல்களைப் பார்க்கும் போது எப்படி இத்தனூண்டு சின்னப் பறவைக்குள் இத்தனை அறிவு வந்ததோ என்று வியப்பான் . ஒருவேளை அவ்வெண்ணம் 'காக்கைப் பொன்குஞ்சோ' என்னமோ?

இந்தப் புறா அவனுக்குக் கிடைத்த விதம் இப்போதும் அவனது நெஞ்சில் நிற்கிறது. வாடகைக்கிருந்த பக்கத்து வீட்டுக்காரர் வேறு வீடு மாறிப் போகும் போது விற்கமுடியாது தேங்கிப்போன பொருட்களாக நல்ல தமிழ் இலக்கண நூல்களும் ஒரு புறாக்கூண்டும் அவரிடம் மிஞ்சியிருந்தன. அவற்றை அவனிடம் அவர் கொடுத்தார் என்பதற்காக அவன் புறாவை வாங்கவில்லை. புறாவானது ,அவனது குடும்பத்தில் ம்மதியைத் தீர்மானிக்கும் காரகளில் ஒன்றாய்ப் போய்விட்டதனால் அவன் அதை வாங்கினான்.

பக்கத்து வீட்டுக்காரர் தன் தனிமை போக்க ஒரு புறாவை வளர்த்து வந்தார். கறுப்பும் வெள்ளையுமான அந்தப் புறாவில் சொல்லமுடியாத பிரியம் அவருக்கு. புறாவும் கூட்டினுள் அப்பாவித்தனமாய்த் தன் முகத்தை வைத்துக் கொண்டு அவர் கொடுக்கும் உணவுகளை உண்டுவிட்டு அல்லது உண்பதாகப் பாவனை பண் விட்டு வாழ்ந்து வந்தது. பெரும்பாலான மென்மாலைப் பொழுதுகளில் அவர் அதனைத் திறந்து விடுவார். திறந்து விடும் பொழுதுகளில் தோட்டத்துக் கதிரையிலிருந்து புத்தகம் படித்தபடி, புறாவிலும் ஒருகண் வைத்தபடி இருப்பார். புறா அவரது காலடியில் இருந்து ஏதாவது தானியத்தைப் பொறுக்கி உண்டபடி இருக்கும். அவர் அந்தப் புத்தகத்தை மூடிஎழும்பப் புறா தானாகவே போய்க் கூட்டருகே நிற்கும். அதைக் காணும் போதெல்லாம் தானாகவே சிறைப்பட விரும்பும் பறைவைகளும் உலகில் வசிப்பதை எண் அவனுக்கு வியப்பாக இருக்கும். பறக்கும் நோக்கமற்ற சிறகுகளைக் கொண்ட அந்தப் புறா பின்னேரப் பொழுதுகளில் குழந்தை ரம்யாவின் குறும்புகளைக் குறைக்கப் பெரிதும்

உதவியாக இருந்தது.

சிலநாட்களின் பிறகு ஒருநாள் அந்தப் புறாவின் நளினமாகக் கொத்தியுண்ணும் நாடகம் தோட்டத்தில் அரங்கேறவில்லை. அவன் வியப்போடு மதிலெட்டி விசாரித்தபோது அந்தப் புறா அவரிடம் மிகுந்த வசவுகளை வாங்கிக் கட்டவேண்டியிருந்தது. அதன் உடல் மனம் சகலமும் அலசிய அந்த வசவுகளின் முடிவில், ஒரு தரக்குறைவான புறாவுடன் அது பறந்து போய் விட்டதாக அவர் சொன்னார்.

அத்துடன் பெண்களையும் புறாக்களையும் நம்பக்கூடாது என்று அவனுக்கு இலவச ஆலோசனையும் வழங்கினார். அது அவரது வழக்கம் தான். பெண்களின் சகவாசமே அற்று 'பிரமச்சாரியாக' வாழ்ந்து வருகின்ற அவர் இல்லறவாதிகளையும் விட அதிகமாகப் பெண்களையும் அவர்களின் உணர்வுகளையும் நடையுடை பாவனைகளையும் விமர்சித்து வருவது பற்றி அவனுக்கு ஆச்சரியமாக இருக்கும்.

இல்லறவாதிகளின் நடப்பியல் வாழ்வின் மீது இரகசியமாய் அவர் கொண்டுள்ள ஈர்ப்புத்தான் அவரது உணர்வுகள் முழுவதையும் பெண்களின் உலகம் மீது குவியப்படுத்தி எந்நேரமும் அவர்களை 'அலச' வைக்கிறதோ என னைத்தாலும் அதனை நேரடியாகக் கேட்டுவிடாத சமூகத்தில் ஒருவனாகவே அவனும் இருந்தான். பலவருடங்களாக மனங்கலந்திருந்து, இதய அன்பின் சுவைபிழிந்து மணம்முடித்த அவனே மனைவி என்ற பெண்மூலமாய் அறிந்து கொள்ள முடியாதிருக்கும் அவர்களின் உடலியல் ஆசை பற்றிய உள்மனக்கொதிப்புக்களை அவர் தன் மனக்கண்ல் கண்டு அதைப் பிறருடன் பகிர்ந்து கொள்வதென்பது சாதாரண விடயமல்லத்தான்.

எப்படித்தான் இது அவருக்கு முடிகிறதோ? எதுஎப்படியிருந்தாலென்ன, அது அவனுக்குத் தேவையும் இல்லை. குழந்தைக்குப் 'புறாக் காட்டப் போகும்' பொழுதுகளில் அவரது 'பெண்களின் உலகு பற்றிய ஆராய்ச்சிகளைக்' கேட்கும் சகிப்புத்தன்மை மட்டும் இருந்தால் போதும்.

சுதந்திரவாழ்வின் பால் ஈர்க்கப்பட்டுத் துணையோடு பறந்தோடிவிட்ட அந்தப் புறாவின் யாயங்களை அயல் வீட்டுக்காரர் புரிந்து கொள்ளாது இருந்தது போலவே ரம்யாக்குட்டியும் புரிந்து கொள்ளவில்லை. 'புறா பார்க்கப் போவோம்' என்று அவள் பிடிக்கும் பிடிவாதம், வேறு எந்தப் போக்குக் காட்டலிலும் மறைந்து போகாதபடியிருந்தது. அந்தப் புறா பறந்து போய் விட்டதாகச் சொல்லி ,குழந்தையின் மேலதிக விளக்கத்துக்காகத் தூரப் பறந்து பார்வையிலிருந்து விலகும் ஒரு காகத்தைக் காட்டினான் அவன்.
அந்தப் பொழுதுக்கு குழந்தை அமைதியானாலும் மறுநாள் வீட்டுமுற்றத்தில் அமர்ந்திருந்த காகத்தைக் காட்டி அதுபோலப் புறா எப்போது திரும்பி வரும் என்று பிடிவாதம் பிடிக்கத்தொடங்கிவிட்டாள். வேறொரு புறா வாங்கித் தருவதாகப் பேரம்பேசிக்

குழந்தையுடன் சமாதானம் ஆகியாற்று. ஆனால் பிறகு தினமும் இவன் அலுவலகம் போகும்போது எதிர்பார்ப்பைத் தேக்கி ஏமாந்து போகத் தொடங்கினாள் குழந்தை. அது அவனது நிம்மதியைக் குலைத்தது. அது போதாதென்று அவன் அதைப் புரிந்துகொள்ளவே இல்லையென்று மனைவியும் குற்றம் சாட்டத் தொடங்கிவிட்டாள். அலுவகத்தால் களைத்து வருபவனை வார்த்தைகளால் உலுக்கினாள். "ரம்யாக்குட்டி எங்கை?" கேட்டபடி வருவது அவன் இயல்பு.

"ரம்யாவும்... குட்டியும்...பெரிய பாசந்தான்..."

"என்னப்பா... என்ன சொல்லுறீர் நீர்...?"

"என்ன சொல்லுறது...? என்ரை பிள்ளை எந்தநாளும் புறா வருமெண்டு நினைச்சு ஏமாந்து போகுது..."

பெண்கள் தான் எவ்வளவு வேகமாகப் பிள்ளைகளை முற்றும் தமது உரிமையாக்கி விடுகிறார்கள். அவனும் முயற்சிக்காமல் இல்லை. ஆனால் குழந்தையின் ஏமாற்றத்தின் முன்பாக அவனது எந்த நடைமுறைப் பிரச்சினைகளையும் பொருட்படுத்த மனைவி தயாராக இல்லை.

"கொஞ்ச நேரம் சிலவழிச்சுப் பிள்ளையின்ரை சிரிச்ச முகத்தைப் பார்க்க விருப்பம் இல்லை... "

அவனது 'தந்தைமை'யைத் தாக்கும் அவளது வார்த்தைகளில் றையவே காயப்பட்டுப் போனான். தொடர்ந்து வந்த சனிக்கிழமையில் புறா வாங்கியே விடுவதென்ற தீர்மானத்தோடு ஊரின் ஒதுக்குப் பக்கமாயிருந்த 'கொலனிப்பக்கம்' போனான். சேரிக்குடிகளின் பிள்ளைகள் கூட்டமாய் விளையாடிக் கொண்டிருந்தார்கள். இவனது சிவப்புற மோட்டார் சைக்கிளின் உறுமல் ஒலியில் இலகுவாய்க் கவனம் திரும்பி, இவன் மோட்டார் சைக்கிளை நிறுத்தியதும் ஓடிவந்து குழுமினார்கள். இடுப்பில் நிற்காத காற்சட்டையைக் கைகளால் பிடித்தபடி ஓடிவந்த அவர்களைப் பார்த்த அவன் மனம் பரிதாபப் பட்டது.

"தம்பியவை...இஞ்சை புறா ஒண்டு வாங்கலாமோ...?"

"என்னவாமெடா...?"

சற்றே பெரிய பையன் ஒருவன் கூட்டத்திலிருந்து வெளிப்பட்டு முன்னால் வந்தான்.

"ஒரு புறா தேவைப்படுது தம்பி..."

"என்னமாதிரிப் புறா அண்ணே..."

பையன் இயல்பாய் உறவு கொண்டாடினான்.

"வெள்ளைப் புறா எண்டால் நல்லது. என்ன விலையெண்டாலும் பறவாயில்லை..."

"கொஞ்சம் நில்லுங்கோண்ணை..."

பையன் காற்றாய்ப் பறந்தான். திரும்பி வந்தபோது அவனது கையில் தேமேயென்று உட்கார்ந்திருந்தது வெள்ளைப்புறா. ஆனால் கூர்ந்து பார்த்தால் புறாவின் கால்களில் ஒன்றைப் பையன் தன் விரலிடுக்கில் கொடுத்திருந்தது தெரியும். சில புறாக்களின் லை அப்படித்தான். வெளியே தெரியாமல் நுட்பமாய்ச் சிறைப் பிடிக்கப்பட்டிருக்கும். புறாவை லத்தில் விட்டான்.

"அண்ணைக்கு வணக்கம் சொல்லு..."

பையனின் வார்த்தைக்குப் புறா தன் மூக்கு நிலத்தில் படப் பந்து முதுகுப்புற வெண்சிறகை இருபக்கமும் பரத்தியது. பையன் சொன்ன விலையைச் சந்தோஷமாகக் கொடுத்தான்.

"ஒற்றைப்புறா போதுமே அண்ணை... "

பேரம் பேசாத ,விலையில் வாக்குவாதப்படாத நல்ல மனிதனைக் கண்டுகொண்ட சந்தோஷத்தில் பையன் மெய்க்கரிசனத்தோடு கேட்டான்.

"மகள் விளையாடத்தானே... போதும்..."

"சோடிப்புறா தேடி வரச் சொல்லி 'புறா எறியிற வேலை' வைச்சிடாதேங்கோண்ணை..."

இவன் மோட்டார் சைக்கிள் உதைக்கவும் பையன் சொன்னான். புறாவளர்க்கும் பையன்களிடம் இருக்கும் 'புறா எறியும் பழக்கம்' அவனுக்கும் தெரியும். ஒருபுறாவை நன்றாகப் பழக்கப் படுத்திய பிறகு தனிப்புறாவாய் உயர எறிந்து விடுவார்கள். அது பறந்து போய் 'இணை'யோடு மீண்டு வரும். ஏதோ ஒரு இடத்திலான இழப்பு எறிந்தவர்களின் வரவாய்ப் போய்விடும். இவன் திரும்பிக் கேட்டான்.

"ஏன் தம்பி..."

பையன் தன் கூட்டத்தவரைப் பார்த்து ஒருமாதிரிச் சிரித்தான்.

"அதுக்கு உள்ச்சிறகு ஒண்டுமில்லை அண்ணை... எல்லாம் வெட்டி விட்டிட்டன்..."

முன்புறக் கூடைக்குள்ளிருந்த புறாவின் முதுகுப்புறச் சிறகிரண்டும் விரித்தான். உள்ளே சிறகு கத்தரிக்கப்பட்டிருந்த புறாவின் உடம்பு வெறும் தோலாய்த் தெரிந்தது.

"எறிஞ்சால் பிடரியடிபட விழுந்துடும் அண்ணை... "

வரதட்சணையின் பின்னும் மகனில் உரிமை கொள்ளும் பெற்றவராய்ப் பையன் புறாவை விற்றபிறகும் கவனம் சொன்னான்.

"நான் அப்பிடிச் செய்யமாட்டன் தம்பி..."

"இடைக்கிடை பார்த்துக் கத்தரிச்சு விடுங்கோ அண்ணை...சிலவேளை பறந்து போகவும் பார்க்கும்..."

பையனின் குரல் அவனது மோட்டார் சைக்கிளைத் துரத்தியது. ரம்யாக்குட்டிக்கு கரை காண முடியாத சந்தோஷம். மனைவிக்கும் தான்.

அவள் தான் சொன்ன வார்த்தைகளையெல்லாம் மறந்து போனது போல நடந்து கொண்டாள். வழமையான 'புருஷ இலக்கணத்துக்கமைய' அவனும் அதைக் கிளற விரும்பவில்லை. புறா வந்தபொழுதிலேயே வணக்கம் சொல்லும் வித்தையால் சகலரையும் கவர்ந்து விட்டது.

உடனடியாகப் புறாக்கூண்டினுள் தான் அதனை விட்டான். திறந்து விடும் பொழுதில் புறா வீடெங்கும் தத்தித் திரிந்தது. விரும்பினாலும் அதனால் பறக்க முடியாதென்ற உண்மையை மனைவியிடம் சொல்லி பெரும்பாலான வேளைகளில் அதைத் திறந்தே விட்டான். பையன் சொன்னபடி, புறா புத்திசாலிதான். கழித்தலுக்கும் உண்பதற்கும் மட்டும் கூண்டை வைத்திருந்தது அது. ஈரத்து நனைத்து அதன் மேல்சிறகு ஒற்றியதில் பளீர் வெண்மையாய் ஒளிர்ந்தது .இப்போது புறா வந்து மூன்று மாதங்களாகி விட்டது. அதுவும் வீட்டின் தவிர்க்கமுடியாத அங்கத்தவராய் ஆகிவிட்டது.

பலமுறை பறக்க முயன்று தோற்றதிலோ என்னமோ புறா பறப்பதற்கான எத்தனிப்பையே கைவிட்டிருந்தது. அவன் மெல்லப் புறாவைப் பிடித்து உள்ச்சிறகு விரித்துப் பார்த்தபோது அவை சற்றே வளர்ந்திருக்கக் கண்டான். ஆனால் அது பற்றிய பிரக்ஞையே புறாவுக்கு இருப்பதாய்த் தெரியவில்லை. எனினும் மனைவிக்கு விஷயம் தெரியவந்ததிலிருந்து

அவளுக்கு அதே நினைப்புத்தான். அதன் உள்சிறகைக் கத்தரித்து விடும்படி அல்லும் பகலும் சொல்லிக் கொண்டிருக்கிறாள்.

ரம்யாகுட்டி கட்டமிட்ட ஊஞ்சலில் இருக்க, புறா அவளின் முன்பாக நின்று தன் வெளிர்ச்சிறகு பரத்தி விளையாட்டுக் காட்டிக் கொண்டிருந்தது. குழந்தையின் குலுங்கல் சிரிப்பில் வீடு மகிழ்ந்திருந்தது.

"என்னப்பா... உள்ச்சிறகை இண்டைக்கு வெட்டி விடுறது எண்டு நேற்றுச் சொன்னீங்கள்... வெட்டிவிடுறியளே..."

புறாவுக்குத் தானியந் தூவியபடியே கேட்டாள் மனைவி. மொழிபுரியாத அப்பாவித்தனத்தோடு புறா தானுண்ணும் தானியத்தில் கவனமாயிருந்தது. அந்தப் பொழுதில் தான் வெளியே அழைப்புக் கேட்டது.

"அக்கா நிக்கிறாவோ..."

மென்மையான பயந்தது மாதிரியான குரல். மாதங்கிதான். நாலாம் வீட்டுப் பிராமணப் பெண். பதினேழு வயதில் மணம் முடித்துக் கொடுத்துவிட்டார்கள். புருஷன் பெரிய சிவன் கோவில் குருக்களைய்யா. அவரது கடைசி மகள் என்று சொன்னாலும் நம்பலாம். ஆனால் அந்தப் பொன்னிறத்திலும் பெரிய விழிகளிலும் தாயைக் கொண்டிருப்பதாகச் சேர்த்துச் சொல்ல வேண்டும். லட்சுமிநாதர் ஐயாவின் ஒன்பது பிள்ளைகளில் நடுப்பெண்ணாக, ஆறு பெண்களில் ஒருத்தியாகப் பிறந்து விட்டதில், அழகு ஒன்றே குருக்களய்யா வீட்டுக்கு 'வரும் தட்சணை'யாகக் கொண்டு இத்தனை சிறிய வயதில் தாலிக் கொடிக்குள் கழுத்தைப் புதைத்துக் கொண்டு விட்டிருந்தது அந்தப் பெண்.

துணிமணிக்குக் குறைச்சலில்லை. வேளாவேளைக்குச் சாப்பாடு. பிராமணப் பெண்கள் பலரும் படித்துப் பட்டம் பெற்று பெரிய பதவி வகிக்கின்ற இந்தக் காலத்திலும் அதிகாலையில் தலைக்குக் குளித்து ஈரக்கூந்தல் முடிந்தபடி முன் வாசலில் கோலம் போடுகின்ற 'தீவிர' ஆசாரம். அவ்வாறான ஒரு காலையில் இவனது பார்வையில் தற்செயலாக அந்தக் காட்சி விழுந்திருந்தது. கோலமாவைக் கையில் வைத்துக் கொண்டு பள்ளிக்குப் போகின்ற உயர்தர வகுப்பு மாணவியை ஏக்கத்துடன் பார்த்துக் கொண்டிருந்தது இந்தப் பெண். இவன் புன்னகைத்த போதிலும் பதிலுக்குச் சிரிக்கவில்லை. ஆனால் அடிக்கடி வீட்டுக்கு வந்து கீதாவுக்காக இவன் வாங்குகின்ற மாத இதழ்களை இரவலாக வாங்கிப் போகும். வரும் பொழுதுகள் பெரும்பாலும் குருக்களைய்யாவுக்குச் 'சேவகம்' செய்யத் தேவையற்ற, இவன் வீட்டில் இல்லாத பொழுதுகளாய் இருக்கும். மாத இதழ்களின் 'விட்டுவிடுதலையான' பெண்களைப் பார்த்துப் பெருமூச்செறியுமோ என்னமோ? ஏன் சில பெண்களின் வாழ்க்கை மட்டும்

நம்பமுடியாதபடி கழ்வுப்பொழுதின் சற்று முன்பதான காலப்பகுதியிலேயே உறைந்து ன்று விடுகிறதோ தெரியவில்லை.

"கீதா..."

உள்ளே திரும்பிக் கூப்பிட்டான். பதிலாய் வெளிப்பட்ட கீதா, மாதங்கி கொண்டு வந்திருந்த மாதஇதழ்களை வாங்கி முக்காலியில் போட்டு விட்டு அவளை உள்ளே அழைத்துக்கொண்டு போனாள். பெண்கள் இருவர் கூட்டு சேர்ந்து விட்டால் பொழுதுகள் பொருள் இழப்பது உண்மை எனினும் மாதங்கி விடயத்தில் அது மெய்ப்படவில்லை. கீதாவின் மற்றைய சிநேகிதிகள் 'போகமாட்டார்களோ?' என்று னைக்கும் வரை இருந்து கதைப்பார்கள். இடையிடையே படீர்ச் சிரிப்பு வேறு. அப்படி எதைத்தான் கதைத்துத் தீர்க்கிறார்களோ? கீதாவிடம் கேட்டால் 'அதெல்லாம் எங்கடை விஷயம்....உங்களுக்கெதற்கு?' என்று வெட்டுத் தெறித்தாற்போலச் சொல்லுவாள். ஆக, அவன் ஏதும் கேட்பதில்லை.

"அந்தப் புறாச் செட்டையை வெட்ட வேண்டாமப்பா..."

மாதங்கி போனதும் அவனருகில் வந்து மெல்லிய குரலில் சொன்னாள் மனைவி.

"ஏன்...? ஏன் திடீரெண்டு இப்பிடிச் சொல்லுறீர்...?"

"அந்த மாதங்கி தான் கேட்டுது...தனக்காய் ஒரு உதவி செய்வியளோ எண்டு சொல்லிப் பெரிய பீடிகையெல்லாம் போட்டுப் பிறகு தான் கேட்டுது..."

"ஏனாம்...?"

"நான் கேக்கேல்லை...பிராமணக்குடும்பம் தானே... அதுதானாக்கும்..."

"சிறகு வெட்டிறது பறவைக்கு வலியில்லைத்தானே..."

"சொன்னன்... சிறகு வெட்டின பறவை செத்ததுக்குச் சரிதானே எண்டு சொல்லிச்சுது..."

அவன் எதுவும் சொல்லாமல் இருந்தான்.

"திருப்பித் திருப்பிக் கேட்டுதப்பா... விடுங்கோ...புறா நிக்குமட்டும் நிண்டிட்டுப் போகட்டும்...எனக்குப் புரியேல்லை ஏன் மாதங்கி இதைக் கேட்டுதெண்டு..."

சொன்னபடியே கீதா சமையலறைக்குப் போனாள். ஒரு புறாவின் சிறகு பற்றிய புரிதல்கள் இரு பெண்களிடமும் வேறுபடும் விதம் பற்றி அவனுக்குச் சிந்திக்காதிருக்க முடியவில்லை. மனைவி சொல்லியது போல மாதங்கிக்கு எழுத வாசிக்க மட்டுமன்றிச் சிலவற்றைச் சிந்திக்கவும் முடியும் என்று தோன்றியது அவனுக்கு. கூடவே கீதாவுக்குப் புரியாத அந்தக் காரணமும் அவனுக்குப் புரிந்து போய் விட்டிருந்தது

பதிவுகள் மார்ச் 2005 இதழ் 63

**40. கூலி! - வேதா மஹாலஷ்மி -**

அன்றைக்கு தான் புது மானேஜர் வந்திருப்பான் போல.... எல்லாரும் துளி கூட சத்தமே இல்லாமல் கொடுக்கப்பட்ட வேலையை செய்தபடி இருக்க, எப்போதும் எதையாவது பேசியபடியே வேலை செய்து பழகியிருந்த எனக்கு, அந்த இறுக்கம் கொஞ்சமும் பிடிக்கவில்லை.

வேலை பாட்டுக்கு போய்க்கொண்டிருந்தது. மானேஜர் என் கிட்டே வந்து நின்று பார்த்துக் கொண்டிருந்தான். என்னைத் தான் பார்க்கிறான் என்ற பயத்தில் எனக்கு வேலை ஓடவில்லை. புடவையை சரியாகத் தானே செருகியிருந்தேன்!? மெல்ல அவனை நிமிர்ந்து பார்த்தால்....

என் பக்கத்தில் நின்றபடிக்கு கொஞ்ச தூரத்தில் வேலை முனைப்பில் இருந்த செம்பாவை அவன் கண்கள் மொய்த்திருந்தன. அதற்கான காரணத்தை, ஊடுருவும் வகையில் அவள் போட்டிருந்த உள்ளாடை சொல்லியது!! அவளோ, இது எதையுமே அறியாதபடி, அறிய விரும்பாதபடி, மும்முரமாக கடமையில் மூழ்கியிருந்தாள்.

செம்பா வித்தியாசமாக வந்திருந்தாள். தலைக்கு குளித்து, பதவிசாக உடுத்தி, நிறைய அலங்கரித்துக்கொண்டு , பார்ப்பவர்கள் "இன்னைக்கு என்ன விசேஷம்?" என்று கேட்கும் அளவுக்கு இருந்தாள். அவள் செய்து முடிக்க வேண்டிய வேலையை, இப்போது அந்த மானேஜர் செய்து கொண்டிருந்தான். பக்கத்தில் அவள் சும்மா போக்குக் காட்டியபடி இருக்க, நான் முகத்தைத் திருப்பிக்கொண்டு என் வேலையைத் தொடர ஆரம்பித்தேன். செம்பாவின் சிணுங்கல் மட்டும் கேட்டுக் கொண்டே இருந்தது.

என்ன...வேலையில் வேண்டுமென்றே கணக்குத் தப்பியதாக சாக்கு சொல்லி, மானேஜரை கூப்பிடுவாள். அவன் சரிபார்த்துக் கொண்டிருக்கும் போதே, தெரியாமல் நழுவுவது போல் மேலாடையை நழுவ விடுவாள். இந்த மாயாஜாலத்துக்கு அதிகம் பேர் தப்பிக்க மாட்டார்கள். கடைசியாக, வேலைக்கு வேலையும் முடியும், சம்பளமும் எகிறும். செம்பா அப்படித்தான். வேலைத் திறமை இருக்கும் அளவை விடவும் வேலைத்தனம் அதிகம்!! அதனால் தான் அவளால் என்னை விட எப்போதும் ஒரு படி மேலே, கூடுதல் சம்பளத்தில் இருக்க முடிகிறது.

நான் பாதி வேலை தான் முடித்திருப்பேன். அதற்குள் பசி வயிற்றைக் கிள்ளியது. சாப்பிடலாம் என்று எழுந்திருக்கவும், எங்கிருந்தோ செம்பா வரவும் சரியாக இருந்தது. "ஏய்! நான் போயிட்டு வரேன்டி!" அவள் வீட்டுக்குக் கிளம்பும் உற்சாகத்தில் இருந்தாள். போட்டிருந்த ஆடை நிறைய.... கலைந்திருந்தது. கொஞ்ச நேரம் கழித்து மானேஜரும் அவள் பின்னே போனான். இப்போது எனக்குப் புரிந்தது, அவர்கள் எங்கே போகக் கூடும்

என்று!

"இதெல்லாம் ஒரு பொழப்பா?" என்று எனக்குக் கூட அடிக்கடி தோன்றும். சரி, நம் அளவில் ஒழுக்கத்தை கடைப்பிடிப்போம் என்று என் வேலையை மட்டும் பார்த்துக் கொண்டிருந்தால், இல்லாத குறையெல்லாம் சொல்லுவார்கள். அதென்னமோ இந்தக் 'கணக்கு' மட்டும் எனக்கு படிக்கும் காலத்தில் இருந்தே சரியாக வராது. எனக்கு அதில் பிடித்தமும் இல்லை. சில சமயம் எரிச்சலில் நான் ஏதாவது பேசினால் அவ்வளவுதான்! அடுத்த தடவை எனக்கு லீவு கிடைக்காது. தொடர்ந்து இரண்டு வாரம் ஞாயிற்றுக்கிழமையும் வேலைக்கு வர வேண்டி இருக்கும்.

இன்றைக்கு வேலை நிறைய இருந்தது. கை விரல்களும், முதுகும் அநியாயத்துக்கு வலித்தது. கொஞ்ச நேரம் விட்டு வேலை செய்யலாம் என்றால், அதற்கும் மனசு வரவில்லை. சீக்கிரம் முடித்தால் வீட்டுக்கு நேரமே போகலாமே என்றுதான்! என் வீட்டுக்காரருக்கும் இதே வேலை தான். இதே அலுப்பு தான். அவர்கள் வரச் சொன்ன நேரத்துக்கெல்லாம் போக வேண்டும்.

ஒரு வழியாக வேலையை முடித்து நிமிரவும், மணி பத்து அடிக்கவும் சரியாக இருந்தது. செம்பா இன்னமும் வேலை செய்தபடி இருந்தாள். என்னைப் பார்த்ததும், "முடியவே மாட்டேங்குதுடி!" என்று சலித்துக் கொண்டாள். முடியாது... எந்த வெள்ளிக்கிழமை அவள் பன்னிரண்டு மணிக்கு முன் வேலையை முடித்திருக்கிறாள்!? நான் மனதிற்குள் சிரித்துக் கொண்டேன். இப்போதைக்கு வேன் எதுவும் புறப்படுகிற மாதிரி தோன்றவில்லை. எனக்கு எரிச்சல் எரிச்சலாக வந்தது. திரும்ப வந்து மானேஜரிடம் சொன்னேன். இன்னும் ஐந்து நிமிடத்தில் தானும் கிளம்புவதாகவும், என்னை வீட்டில் விடுவதாகவும் சொன்னான்.

"ம்!? கார்ல போறே....ஜாலிதான் போ!" செம்பா என்னைப் பார்த்து கண்ணடித்தாள். நானும் மானேஜரும் வெளியே வந்தோம். அவன் காரை ரிவர்ஸ் எடுத்து, என் பக்கத்தில் வந்து நிறுத்தினான். "ரொம்ப நன்றி!" என்று சொல்லியபடி பின்னால் கதவைத் திறக்கப் போனேன். "இல்ல இல்ல... இங்க வாங்க" முன் கதவைத் திறந்துவிட்டான். நான் தயங்கினேன். "கமான்...! இத்தனை திறமையா வேலை செய்ற பொண்ணு... இந்த சின்ன விஷயத்துக்கெல்லாம் போய் தயங்கினா எப்படி?" என்று கிலோ கணக்கில் ஐஸ் வைத்தான். கார் கிளம்பியது.

கொஞ்ச தூர பயணத்தில் ஏதேதோ பேசிக் கொண்டோம். "இத்தனை தூரத்தில் இருந்து வர கஷ்டமா இருக்குமே.. பேசாம இந்தப் பக்கமே வந்திடலாம்ல?" அவன் கேட்டதற்கு "சொந்த வீடு" என்று பதில் சொன்னேன். "அப்ப உங்களுக்கு கல்யாணம் ஆயிருச்சா!? பார்த்தா இன்னும் சின்னப் பொண்ணா தான் தெரியுது!" அவன் பேச்சில் வழிசல் கூடுதலாகத் தெரிந்தது. இன்னும் முக்கால் மணி நேரம் இதைப் பொறுத்துக் கொள்ளத்தான் வேண்டும்.

கடவுளே... பல்லைக் கடித்துக் கொண்டேன். திடீரென்று காரை ரோட்டில் ஓரங்கட்டினான். பக்கத்தில் ஏதும் கடை இல்லை.... நான் எதிர்பார்க்காத சமயத்தில் சட்டென்று என்னைப் பிடித்து அழுத்தி முத்தமிட்டான். அவசரம் அவசரமாக விடுவித்துக் கொண்டு, 'தூ' என்று மூஞ்சியிலேயே துப்பினேன்.

கார் கதவை அவனே திறந்துவிட்டான். "பிடிக்கலன்னு ஒரு வார்த்தைசொல்லிருக்கலாம்ல.." மன்னிப்புக் கேட்கும் தொனியில் சொன்னான். "அப்போ...? பிடிக்குதுனு சொன்னேனா!?" என் கேள்விக்கு அவனிடம் பதில் இல்லை. நான் அந்த இடம் விட்டு விறு விறு என்று நடந்தேன். கார் என்னைத் தாண்டிப் போனது.

அநேகமாக நாளை நான் வேலைக்குப் போக மாட்டேன். இவன் தான் அங்கே எல்லாம்... இவனைப் பகைத்துக்கொண்டு வேலை செய்வது முடியாத காரியம். வேறு ஏதாவது நேர்முகத்தேர்வுக்குத் தயாராக வேண்டும். ச்சே!! என்ன வேலை இது! வெறுப்பாக இருந்தது. எதற்காக கல்லை உடைக்கிறோம் என்பதே தெரியாமல், உடைப்பது மட்டுமே குறிக்கோளாய்.... நான் உடைக்கும் கல் கோயிலுக்குப் போகிறதா, கல்லறைக்குப் போகிறதா என்பது கூடத் தெரியாமல், என் அடையாளம் கொஞ்சமும் இல்லாமல், உடைந்து உடைந்து எங்கோ தூரமாய் பயணம் போகும் கற்கள்.... செம்பாவுக்கும் எனக்கும் தான் எத்தனை ஒற்றுமை! எங்களை நாங்களே விருப்பப்பட்டு செதுக்கிக் கொண்டிருக்கிறோம், இந்த சாஃப்ட்வேர் துறையில்!! இரண்டு பேருமே சிற்பமாக இருந்தாலும், என் இருப்பிடம் என்னவோ கருவறை என்பதில் மட்டும் இன்னமும் எனக்கு இனம் தெரியாத சந்தோஷம் தான். எப்போதும் எதையாவது பேசியபடியே வேலை செய்து பழகியிருந்த எனக்கு, அந்த பின்னிரவின் இறுக்கம் நிறையவே பிடித்திருந்தது.

பதிவுகள் மார்ச் 2005 இதழ் 63

## 41. இருப்பும் இழப்பும்! - கே.எஸ்.சுதாகர் -

"மஞ்சு! குசினிக்குள்ளை சாப்பாடு தட்டாலை மூடி வைச்சிருக்கிறன். எடுத்துக் கொண்டு போய் மாமாவுக்குப் பக்கத்திலை வைச்சுவிடு பிள்ளை." பழைய கதிரை ஒன்றிற்குள் இருந்து, கிழிந்த உடுப்பு ஒன்றைத் தைத்துக் கொண்டிருந்த மங்கை திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தாள். ஓலைப்பாயிலிருந்து ஏதோ எழுதிக் கொண்டிருந்த மஞ்சு, ஒருவித ஏக்கத்துடன் தாயை நிமிர்ந்து பார்த்தாள்.

"அண்ணாவை வந்தவுடனை எல்லாருமா சேர்ந்து ஒண்டா சாப்பிடுவம் எண்டு சொன்னியள். இப்ப?"

"இப்பவே ரண்டு மணியாப் போச்சு. அவையள் எப்ப வருகினமோ தெரியாது. மாமா மருந்து எடுக்கிறவர். சாப்பிடாமல் இருந்தா உடம்புக்கு கூடாது."

மஞ்சு சாப்பாட்டை எடுத்துக் கொண்டு ஓலைக் குடிசைக்குள் புகுந்தாள். மண்குடிசை, செங்கல் வீட்டின் பின்புறம் இருந்தது. அவள் போவதையே வெறித்துப் பார்த்தபடி அம்மா இருந்தாள். தகப்பனின் நிறம் மகளிற்கு இடம் மாறியிருந்தது, வாழ்க்கையில் எவ்வளவு கொடூரத்தை ஏற்படுத்தி விட்டது. கறுப்பு என்றால் கூட பரவாயில்லை. அது என்ன நிறம்? சாம்பலில் எண்ணெய் விட்டுக் குழைத்து அப்பியதுமாப்போல்!

உள்ளே மாமாவைக் காணாததால், வெளியே வந்து நின்று சுற்றுமுற்றும் பார்த்தாள் மஞ்சு. வீட்டிற்குக் கிழக்குப் புறமாகவிருந்த குறுக்கு வேலிக்கம்பியைப் பிடித்தபடி, எதிர்ப்புறக் காணிக்குள் எதையோ உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார் இராமலிங்கம்.
வருஷம் பூராவும் விளைச்சலைத் தந்த அந்தக் காணி, இப்போது முள்ளும் புதருமாகிக் கிடக்கின்றது.

ஒவ்வொரு நாளும் அந்தக் காணிக்குள் இராமலிங்கத்தார் என்னத்தை எட்டிப் பார்க்கின்றார்?

"மாமா!" என்று மஞ்சு பதட்டத்தில் கத்தியதில் இராமலிங்கத்தார் திடுக்கிட்டுத் திரும்பினார்.

"கிணற்றடியையும் வீட்டையும் தவிர, வேறொரு இடமுமல்லே போகக்கூடாது எண்டு சொல்லியிருக்கினம். கண்ணிவெடி எங்கையெல்லாம் புதைஞ்சு கிடக்குதோ ஆருக்குத் தெரியும்."

மஞ்சு ஏதாகிலும் பேசினால் இராமலிங்கத்தின் முகத்தில் ஒரு வேதனையின் சாயலில் புன்னகை தோன்றும். தற்பாது காப்புக்காக வைத்திருந்த தடியை ஊண்றிக் கொண்டு மஞ்சுவை நோக்கி வந்தார். மங்கை திருமணம் செய்யும் வரையும்

காத்திருந்ததில் இராமலிங்கத்திற்கு திருமணம் நடக்காமலே போய் விட்டது. மங்கையின் கணவன் கதிரவேலு இருக்கும் வரையிலும்இ அவருடன் இவருக்கு எந்த நாளும் பிணக்குத்தான். பிரச்சினை உருவாகுவதே கோவிலில் இருந்துதான். கதிரவேலுவுக்கு அருணகிரிநாதர், பட்டினத்தார், விவேகசிந்தாமணி பாட்டுகள் என்றால் உயிர். இராமலிங்கத்தார் அவற்றை கோவிலிலே பாடக்கூடாதென்பார்.

வாழ்க்கையைத் தோச்சுப் பிழிஞ்சு கடைந்தேறியவர்களின் காட்டுக் கத்தல் என்பார்.

கதிரவேலு காணாமல் போனதன் பின்புதான், தங்கைச்சிக்கு தரவாகவும் - தனது எதிர்காலம் கருதியும் அங்கே வந்து ஒட்டிக் கொண்டார்.

இராமலிங்கம் குடிசைக்குள் வந்து சேரும் வரைக்கும் வைத்த கண் வாங்காமல் அவரையே பார்த்துக் கொண்டு நின்றாள் மஞ்சு. வந்தவர் குடிசைக்குள்ளிருந்த சாக்குக் கட்டிலில் சரிந்து கொண்டார்.

"உம். என்னடி பிள்ளை? மாதமும் ஒண்டாப் போச்சு. அயலட்டையிலை இன்னமும் சனம் வந்து சேரேல்லைப் போல கிடக்கு."

"அதுதான் பொட்டுப் பிரிச்சு பூராயம் பாக்கிறியளோ? சரி மாமா, மேசையிலை சாப்பாடு வைச்சிருக்கிறன்."

"ஓம் பிள்ளை. அது சரி, எப்ப யோகன் வாறது எண்டு அறிவிச்சவன்?"

"அண்ணாவை மத்தியானம் வந்திருக்க வேணும். இன்னமும் காணேல்ல."

ஊரில் அங்கொன்றும் இங்கொன்றுமாகத்தான் சன நடமாட்டம் இருந்தது. ஒருவேளை அவசரப்பட்டுத் தெல்லிப்பழைக்கு வந்துவிட்டோமோ என நினைத்தாள் மங்கை. இருந்ததோடு இன்னுமொரு வருஷம் கொழும்பிலை இருந்துவிட்டு வந்திருந்தால், அவர்களின் வாழ்க்கை வட்டத்திலும் ஒரு 'அஞ்ஞாத வாசம்' வந்து போயிருக்கும்.

*****

பாதை குண்டும் குழியுமாக மோசமாகி இருந்தபடியால்,, காரை ஓட்டுவதற்கு யோகனுக்கு நெடுநேரம் எடுத்தது. இது என்ன கனடாவா, காரை சறுக்கிக் கொண்டு ஓட்டுவதற்கு! மனைவி ரேவதி, பிள்ளைகள் துவாரகன், அனு இவர்களைச் சுமந்தபடி நாலுமணியளவில் கடகடவென்ற சத்தத்துடன் கார் வந்து சேர்ந்தது. ரேவதியின் சொந்த ஊர் நாவற்குழி. அவளின் பெற்றோருக்கு இடம் பெயர்ந்து அல்லற்படும் பாய்க்கியம்

கிடைக்கவில்லை. இன்னமும் நாவற்குழியில்தான் இருக்கின்றார்கள். யோகனது குடும்பம் கனடாவிலிருந்து நேற்றே நாவற்குழி வந்திருந்தது.

வந்தவுடன் அம்மா ஒப்பாரி வைத்து அழுவாள் என்றுதான் எதிர்பார்த்திருந்தான் யோகன். ஆனால் அது நடக்கவில்லை. ஒப்பாரியை அவள் அடகு வைத்து பதின்மூன்று வருடங்களாகிவிட்டன.

வீடு சின்னாபின்னமாகி சிதறிப் போய் கிடந்தது. வாசலில் இருந்த இரண்டு இரும்புக் கேற்றுகளும் இப்போது இருக்கவில்லை. வீட்டிற்கும் முன்பக்க வேலிக்குமிடையிலிருந்த நிலம் சுத்தம் செய்யப்பட்டிருந்தது. கடைசியாக இடம்பெயர முன்பு அந்த நிலத்தில் - செவ்வரத்தை, நந்தியாவட்டை, நித்தியகல்யாணி, துளசிச்செடிகள் எல்லாம் செழித்து சடைத்து இருந்தன. இப்போது பாளம் பாளமாக வெடித்துப் போயிருந்தது நிலம்.

"யோகன், வரேக்கை எல்லா அறையளும் ஒழுகினபடி. பிறகு மேசன் ஐயாத்துரையின்ர மகன்தான் ஓடுகளை தரம் பிரிச்சு, குசினிக்கும் ஒரு அறைக்குமாக போட்டுத் தந்தவன். மிச்ச அறையள் பாவிக்க ஏலாது."

"கொட்டிலை வடிவா மேஞ்சு வைச்சிருக்கிறன். மஞ்சு சாணகத்தாலை மெழுகி வைச்சிருக் கிறாள். நாலைஞ்சு பெடி பெட்டையளுக்கு ரியூசன் சொல்லிக் குடுக்க உதவும். கொழும்பிலை இருக்கேக்கை எத்தினை பேருக்கு படிப்புச் சொல்லிக் குடுத்திருப்பாள். ஒரு சதம் காசு வாங்கியிருக்கமாட்டாள்."

வாங்கின் ஒரு நுனியில் யோகன், ரேவதி பிள்ளைகளுமிருக்க மறு நுனியில் மஞ்சு இருந்தாள். மங்கை இன்னமும் கதிரைக்குள்தான் புதைந்திருந்தாள். இப்போதுதான் அவர்கள் ரேவதியையும் பிள்ளைகளையும் முதன் முதலாக நேரில் பார்க்கின்றார்கள். மஞ்சு யோகனைப் பார்ப்பதும் நிலத்தைக் குனிவதுமாக இருந்தாள்.

"அம்மா! எங்கை மாமாவைக் காணேல்ல. ஒருக்கா வந்து பாத்திட்டுப் போ எண்டு கடிதம் போட்டிருந்தார். ஹொஸ்பிட்டலிலை இருந்ததிற்குப் பிறகு சரியாப் பயந்திட்டார் போல."

"அவருக்கு இப்ப கொட்டில்தான் தஞ்சம். என்ன மாதிரி திடகாத்திரமாக இருந்தவர். இப்ப முந்தியைப் போல ஒண்டுக்கும் ஏலாது. ஒன்பது பத்துக் குளிசைகள் எண்டு ஒரு நாளைக்குப் போட்டால்தான் உடம்பு கொஞ்சம் அசையும். மருந்தை நிப்பாட்டினாள் முடிஞ்சிடும். கொழும்பிலை இருக்கேக்கை ஒருக்கா இந்தா போறன் எண்டு ஹொஸ்பிட்டலிலை படுத்துக் கிடந்தவர்."

"அண்ணா! காலை ஒருக்கா காட்டு" என்று சொல்லிக் கொண்டே உரிமையுடன் யோகனின்

காலைத் தூக்கிப் பார்த்தாள் மஞ்சு. அது இன்னமும் மாறாத வடுக்களாகி பெரிய பள்ளங்களாகக் குழி விழுந்து கிடந்தது. அவை யோகன் கடைசியாக பங்கு கொண்ட சண்டையின் தழும்புகள். பலாலி மிக் காம்பின் எல்லைப் புறங்களில் நடந்த சண்டை. முதல் வரிசையில் நின்று போரிடுகையில் சன்னங்கள் துழைக்க, நண்பர்கள் இழுத்து வந்து பற்றைக்குள் போட்டதும், தப்பிப் பிழைத்ததும் தனிக் கதை. அதன் பிறகு வாழ்க்கை என்ற போராட்டத்தில் அவனால் ஓட முடியாமல் போய் விட்டது. இப்போது கூட அவனால் நடக்கத்தான் முடியும். ஓட முடியாது. அதற்குப் பின் எவ்வளவோ நடந்து விட்டன. யோகன் வெளிநாடு போய்விட்டதால் எதுவுமே நடக்காமல் போய் விடவில்லை.

"அண்ணா! இப்ப கால் எப்பிடி இருக்கு?"

"தங்கைச்சி! வாழ்க்கையிலை ஏதாவது நடந்து கொண்டே இருக்க வேணும். விறுவிறுப்பா! இல்லாட்டி வாழ்க்கை வெறும் உப்புச் சப்பற்றதாப் போய் விடும்."

மஞ்சுவின் வாழ்க்கையில் எது நடந்தது? விறுவிறுப்பா! வெறும் உப்புச் சப்பற்ற..... அவளின் நெஞ்சு விம்மித் தணிகிறது.

*** *** ***

திண்ணையிலிருந்து எல்லாரும் இஞ்சிப் பிளேன்ரி குடித்துக் கொண்டிருந்தார்கள்.

"அம்மா! நான் ஒருக்கா இவையளை மாமாவிட்டை அறிமுகப்படுத்திப் போட்டு வாறன்" சொல்லிக் கொண்டே இருக்கையை விட்டு எழும்பினான் யோகன்.

குடிசையை அண்மிக்கும்போது இராமலிங்கத்தார் அனுவுக்கும் துவாரகனுக்கும் கதை சொல்லிக் கொண்டிருப்பது கேட்டது. உள்ளே சாம்பராணி வாசனை தூக்குத் தூக்கியது.

" தம்பி யோகனே, வா. தலை அடிச்சுப் போடும். குனிஞ்சு வா."

"என்ன மாமா, கதை சொல்லிக் கொண்டிருக்கிறியள் போல."

"இராமாயணத்தையும் மகாபாரதத்தையும் விட்டா பிள்ளையளுக்கு இன்ரறெஸ்ரா சொல்ல வேற என்ன இருக்கு?"

"ஏன் மாமா எங்கட நாட்டுக்கதைகளையும் சொல்லுங்கோவன்."

"இப்பென்ன இண்டைக்கே கனடா போகப் போற மாதிரி! வந்தனியள் ஒரு மூண்டு மாதம் நிண்டுதானே போவியள்? றுதலா சொல்லுவம்."

"ஒரு மாதம் நிக்கிறதுதான் மாமா திட்டம்."

'ஒரு மாதம்' என்று யோகன் சொன்னவுடன் இராமலிங்கத்தின் நெஞ்சு திக்கென்றது. முகம் இருண்டு கறுத்துப் போனது.

"இவன் பாலச்சந்திரன் - கள்ளியங்காடு. இது கிருஷ்ணா - திருக்கோணமலை."

"யோகன்! ஊருகளை விட்டிட்டு பேருகளைச் சொல்லு. எல்லாரும் கனடாவிலை இருந்து வந்த க்கள்தானே!"

"ஓம் மாமா. இவன் திருக்குமார். இதிலை கிருஷ்ணதேவா மாத்திரம் தனிக்கட்டை."

"அப்ப என்னைப் போல எண்டு சுருக்கமா சொல்லு."

மண் குந்திலிருந்து கேட்டுக் கொண்டிருந்த எல்லாரும் கெக்கட்டம் விட்டுச் சிரித்தார்கள். இராமலிங்கத்திடம் கதைத்துக் கொண்டிருப்பதில் பொழுது போவதே தெரியாது. ஆயிரத்துத் தொளாயிரத்து எழுபத்தி நாலில் நடந்த தமிழ் ஆராய்ச்சி மகாநாடு பற்றிய புதினங்களைச் சொல்வதென்றால் அவருக்குப் படு குசி. நேரில் பங்கு பற்றி அடிதடி பெற்ற அனுபவம். அவர்கள் எல்லாருக்கும் இராமலிங்கத்தைப் பிடித்துப் போய் விட்டது. கதை முடிந்து இருக்கையை விட்டு எழும்பினார்கள்.

"யோகன் ஒரு விஷயம் கதைக்க வேணும்?" என்று முத்தாய்ப்பிட்டார் இராமலிங்கம். இங்கிதம் புரிந்த நண்பர்கள் விலக, யோகன் அவர்களைப் போக விடாது தடுத்துக் கொண்டான்.

"பரவாயில்லை மாமா. நாங்கள் எல்லாரும் நண்பர்கள்தான். நீங்கள் சொல்லுங்கோ!"
"மஞ்சுவுக்கு ஒண்டுமே சரிவராதா?"

திடீரென்ற இந்தக் கேள்வியை யோகன் எதிர்பார்க்கவில்லை.

"சாதகங்கள் சரிவருகுதில்லை எண்டு அம்மா சொல்லுறா."

"அம்மாவை விடு. நீ ஏதாகிலும் பாத்தியா? சாதகங்களை மாத்திரம் குறை சொல்லிப் பிரயோசனம் இல்லை. அவளின்ர நிறமும் ஒரு பிரச்சினை யோகன். இந்த உலகத்திலை

ணுக்கொரு நிறம், பெண்ணுக்கொரு நிறம் எண்ட நிலை மாற வேணும்."

தன்னைப் போல அவளும் தனித்து விடுவாளோ என்பது இராமலிங்கத்தாரின் கவலை.

"தம்பியவை நான் சொல்லுறன் எண்டு குறை நினையாதையுங்கோ. ஆனால் அதுதான் உண்மை. வெளிநாட்டிலை இருந்து வாறவை, வடிவான பெம்பிளப்பிள்ளையளாப் பாத்து கலியாணம் செய்து கொண்டு போயிடினம். அதுவும் தாங்கள் என்ன நிறம் எண்டது பற்றி அவைக்குக் கவலை இல்லை. பெம்பிள சிவப்பா இருக்க வேணும். சில இடங்களிலை மாப்பிள்ளையே பெம்பிளைக்கு சீதனமும் குடுக்கிறதாகவும் கேள்விப்பட்டன். அப்பிடியெண்டா மஞ்சு போலப் பிள்ளையளை ஆர் செய்யுறது?"

உண்மைதான். அதை யோகனும் அறிவான். அவனால் என்ன செய்ய முடியும்? காசு, நகை எல்லாவற்றையும் குடுக்கலாம். மாப்பிள்ளையை எப்பிடிக் குடுப்பது?

"அது சரி. நீயென்னத்தைச் செய்யிறது. பிள்ளையளுக்கு நல்லா தமிழ் படிப்பிச்சிருக்கிறாய். அட்சரம் பிசகாமல் நல்ல தமிழிலை கதைக்குதுகள். வெளிநாடு போனாலும் நீ செய்த ஒரு நல்ல காரியம், பிள்ளையளுக்கு தமிழ் சொல்லிக் குடுத்ததுதான்."

மாமாவுடன் கதைத்ததில் யோகனின் மனம் கனத்துப் போயிருந்தது. இராமலிங்கத்தின் கேள்விகள், வந்திருந்த நண்பர்களில் கிருஷ்ணாவின் மனதில் சலனத்தை ஏற்படுத்தி ஒரு பதியத்தைப் போட்டது. போகும் போது பதியத்திலிருந்து ஒரு முளை அரும்பு விட்டு கள்ளத்தனமாக மஞ்சுவை எட்டிப் பார்த்தது.

*** *** ***

இன்று அம்மாவுடனும் மாமாவுடனும் கதைத்து ஒரு முடிவு எடுத்து விடவேண்டும் என விரும்பினான் யோகன். கிருஷ்ணா நேற்று பாலச்சந்திரனுடன் தங்கிக் கொண்டான். அவனுக்கு யாழ்ப்பாணத்தில் தெரிந்தவர்கள் யாருமில்லை. ஒவ்வொரு நாளைக்கு ஒவ்வொருவருடன் தங்கிக் கொள்வான். இன்று அவன் காரணத்தோடு வரவில்லை. யோகன் வரும்போது திருக்குமார் குடும்பத்தையும் கூட்டிக் கொண்டு வந்தான். திருக்குமார்தான் இப்போது கலியாணப் புறோக்கர்.

"ஒருநாளைக்கு எண்டாலும் இரவு நில் எண்டா கேட்டால்தானே! சுடுகுது மடியைப் பிடி எண்ட மாதிரி மனிசியையும் பிள்ளையளையும் தள்ளிக் கொண்டு நாவற்குழிக்கு ஓடி விடுகிறாய்."

"இஞ்சை உங்களுக்குக் கஸ்டம் அம்மா!"

"இஞ்சை ஒரு பிரச்சினையும் இல்லை. இப்ப வெய்யில்காலம். மழை ஒழுக்கு பிரச்சினை இல்லை. விறாந்தையிலை பாயை விரிச்சு விட்டேனெண்டால் இருபது பேர் மட்டிலை படுத்து எழும்பலாம்."

"இண்டைக்கு ஒடியல் கூழ் அண்ணா. மூக்கு முட்டப் பிடிச்சுப் போட்டு எல்லாருமா இஞ்சையே நில்லுங்கோ."

மஞ்சு பேச்சில் ஜெயித்து விடுவாள். கடைசியில் தங்கையின் பேச்சுக்கு மகுடிப் பாம்பாக அடங்கினான் யோகன்.

பாதுகாப்பு வலயத்தில் மிகவும் பாதுகாப்பாக இருந்த மீன்கள் கொழுத்து தினவெடுத்து இருந்தன. அரசாங்கம் மீன் பிடிப்பதற்கு ஏற்படுத்தியிருந்த தடையைத் தளர்த்தியிருந்ததால் மீன்கள் தாராளமாகவும் மலிவாகவும் கிடைத்தன.

கூழ்  குடிக்கும் படலம் முடிவடைந்ததும் எல்லாரும் விறாந்தையில் சரிந்து கொண்டார்கள். வேப்பமரம் பூத்து வாசனை வீசியது. தேசமெங்கும் அனல்காற்று வீசிற்று. முற்றத்தில் வேப்பம் பூ வடகம் காய்ந்து கொண்டிருந்தது.

குசினிக்குள் அம்மாவும் ரேவதியும் மஞ்சுவும் கனடாப் புதினங்கள் பற்றிக் குசுகுசுத்தபடி இருந்தார்கள். யோகன் திருக்குமாருக்கு கண்ணைக் காட்டினான். திருக்குமாரின் மனைவி விறாந்தையில் இருந்தபடியேஇ குசினிக்குள் எட்டிப் பார்த்து "அம்மா! இஞ்சை ஒருக்கா வந்துட்டுப் போங்கோ" என்றாள். அம்மாவின் பின்னால் மஞ்சு எழுந்தாள். "நீ இஞ்சை இரு! உன்னோடை கனக்கக் கதைக்க வேணும்" என்று மஞ்சுவைப் பிடித்து குசினிக்குள் இருத்திக் கொண்டாள் ரேவதி. ஒருநாளுமில்லாதவாறு தனது கையை பலாத்காரமாகப் பிடித்து இழுத்த அண்ணியை வியப்புடன் பார்த்தாள் மஞ்சு.

சற்று நேரத்தில் மங்கையின் சிரிப்பொலி வீட்டை நிறைத்தது. அம்மா இப்படிச் சிரிப்பது அத்தி பூப்பது போல்தான்.

"எங்கே திருமதி கிருஸ்ணா?" என்றபடியே ஒவ்வொருவராக குசினிக்குள் புகுந்தார்கள். மஞ்சு வெட்கத்தால் முகத்தை மூடிக்கொண்டாள்.

மூடியிருந்த மஞ்சுவின் கைகளை இழுத்து  விட்டாள் ரேவதி. கடைசியில் தோற்றுப்போன மஞ்சுவின் முகம் - வெட்கம், ஆனந்தம், கண்ணீர் என மாறி கடைசியில் இத்தனை காலமும் தேக்கி வைத்திருந்த கவலை வெடித்து அழுகையாயிற்று.
இராமலிங்கத்தாருடன் பேச்சுக் கொடுப்பதற்காக கொட்டிலுக்குச் சென்றான் யோகன். மாமா

முள்ளுவேலியைக் கட்டிப் பிடிச்சுக் கொண்டு அடுத்த வளவிற்குள் மூழ்கிக் கொண்டிருந்தார்.

"அம்மா! என்னம்மா எப்ப பாத்தாலும் மாமா குறுக்கு வேலியோடை மினக்கெடுறார்?"

"ஒரு நாளைக்கு ஒருக்கா எண்டாலும் உந்தக் குறுக்கு வேலியை எட்டிப் பாக்காட்டி உவருக்குச் சரிவராது. உனக்கு வேலாயுதத்தைத் தெரியும்தானே! அடுத்த வளவுக்கை குத்தகைக்கு தோட்டம் செய்தவர். அவர் மாமாவின்ர பெஸ்ற் பிறண்ட். அந்தாள் வந்திட்டுதா எண்டுதான் அடிக்கடி போய் பாக்கிறார்."

"அவர் வந்திருந்தா, இங்சையும் ஒருக்கா வந்து எட்டிப் பாப்பர்தானே. உதுக்குப் போய் எந்த நாளும்."

யோகனுக்கு சிறுவயது ஞாபங்கள் தலை தூக்கின. நவராத்திரி, திருவெம்பாவை எல்லாத்துக்கும் வேலாயுதத்திடம்தான் வாழைக்குலைகள் வாங்குவார்கள். நிலத்திலே குலை கொள்ளக் கூடியளவிற்கு கிடங்கு அகழ்ந்து, அதற்குள் குலையை வாழை இலைச் சருகுகளால் சுற்றி, வாழைமடல் தண்டுகளை கிடங்கின் மேல் பரப்பி பின் அதன் மேல் மண்ணை மெதுவாக மூடுவார். கிடங்கிற்கு சற்றுத் தள்ளி,இன்னொரு சிறிய பொந்து தோண்டி கிடங்குடன் இணைய வைப்பார். தேங்காய் சிரட்டையின் கண்களை உடைத்து விட்டு, அதற்குள் பொச்சுகளை திணித்து நெருப்பூட்டி பொந்திற்குள் வைத்து கரையெங்கும் மண் பரப்பி, 'பூ... பூ' என்று ஊதுவார். புகை வாழை மடல் தண்டுகளினூடு பரவி மண்ணிற்குள்ளால் வெளிக் கிழம்பும். அப்படியே ஒரு நாளைக்கு இரண்டு தடவை வீதம் இரண்டு நாட்கள் புகை ஊதுவார். குலை பச்சையும் மஞ்சளுமாக தோன்ற தூக்கித் தருவார்.

"அம்மா! இப்ப வேலாயுதம் அண்ணை எங்கை இருப்பார்?"

"இஞ்சை பார் இவன்ர கதையை.. ர் ர் எங்கை இருப்பினம் எண்டு ஆர் கண்டது?"

உண்மைதான். ஒரு விடியற்புறமாக நாலைந்து மணத்தியாலங்களிற்குள், மந்திரவாதி துணியை மூடி எடுப்பதற்குள், ஊரே காலியானது. இந்த இடம்பெயர்வு எத்தினை பேருக்குள் விரிசலை ஏற்படுத்தி விட்டது. அண்ணன் - தம்பி; பெற்றார் - பிள்ளைகள், அயலட்டைகள், உறவினர்கள், நண்பர்கள் என்று எல்லோருக்குமிடையிலான உறவுகளை எல்லாம் சிதைத்து விட்டது.

இரவு மாமாவுடன் கதைக்கலாம் என்று யோகன் நினைத்திருக்கையில், இராமலிங்கத்தாரைப் பிடித்து நடத்திக் கொண்டே திருக்குமார் வீட்டிற்குள் அடியெடுத்து

வைத்தான்.

"இராமலிங்கண்ணை விழப்பாத்திட்டார். அதுதான் பிடிச்சுக் கொண்டு வாறன்" என்றான் திருக்குமார்.

"மஞ்சுவுக்கு ஒரு சம்பந்தம் சரிவரும் போல கிடக்கு" என்ற திருக்குமாருக்கு,
"!" என்றார் இராமலிங்கம்.

காது கேட்கவில்லையோ அல்லது அவரால் நம்ப முடியவில்லையோ தெரியவில்லை. திருக்குமார் திரும்பவும் சொன்னான்.

"ஆரடா மாப்பிள்ளை! நீதானே தம்பி" என்றாரே பார்க்கலாம். திருக்குமாரின் மனைவி கொடுப்பிற்குள் சிரித்துக் கொண்டாள்.

இராமலிங்கம் ஏகப்பட்ட குசியில் இருந்தார். எங்கே தன்னைப் போல மஞ்சுவும் திருமணம் செய்யாமல் இருந்து விடுவாளோ என்ற பயம் இப்போது அவரை விட்டு நீங்கி விட்டது. 'அதுதான் கூழ் காச்சிக் கொண்டாடி இருக்கிறாளோ?' என்று தனக்குள் கேட்டுக் கொண்டார். பொழுதுபட்ட நேரத்தில் பாலச்சந்திரனும் கிருஷ்ணாவும் சைக்கிளில் வந்து சேர்ந்தார்கள். வீட்டிற்குள் காலெடுத்து வைக்கும்போது, வீரபத்திரர் கோவில் பக்கமாக க்கள் கத்திக் குழறும் அவலக்குரல் கேட்டது. இப்போது எந்தச் சத்தமுமே அலறலாகத்தான் இருக்கிறது.

என்னவென்று பார்த்து வரப் புறப்பட்டார்கள்.

தூரத்தே மொட்டையாகிப் போய்விட்ட பனைமரங்களும் தென்னை மரங்களும் தெரிகின்றன. கோயிலுக்கு முன்பாகவிருந்த பனங்கூடல் 'ஷெல்'லடி பட்டு அரையும் குறையுமாகி மூழியாகிப் போயிருந்தது. காலகாலமாக ஒரு அரக்கனைப் போல, கோவில் வாசலில் இருந்த அரச மரம் வெட்டப்பட்டிருந்தது. கோவில் மணி சீந்துவாரற்று துருப்பிடித்துக் கிடந்தது. ஒரு காலத்தில் எப்படி சுறுசுறுப்பாக ஆரவாரமாக இருந்த ஊர் இன்று சாக்கடையாகிக் கிடக்கிறது. எத்தனை மிருகங்கள் நாங்கள் இல்லாத போது இந்தக் காணிகளிற்குள் உலாவியிருக்கும்? கோவிலைச் சமீபிக்கையில் சத்தம் தச்சு வேலை செய்பவர்கள் பகுதியிலிருந்து வருவதை அறியக்கூடியதாகவிருந்தது.

குடில் வீடுகளிற்கு முன்னால் சனம் குழுமியிருந்தது. அழுகையும் ஒப்பாரியுமாக.

ஆட்டிற்கு குழை ஒடிப்பதற்காக பூவரசு வேலிக் கரைக்குச் சென்ற ஒருவனின் கால் கண்ணி வெடிக்குப் பலியாகியிருந்தது. முழங்காலிற்கு கீழே இரத்தம் பெருக்கெடுத்த

நிலையில் முனகிக் கொண்டிருந்தான். கார் ஒன்று வந்து சேர அவனை அதற்குள் ஏற்றினார்கள். தேகம் ஒருமுறை சிலிர்த்துக் கொண்டது. யோகன் ஒருகணம் மாமாவை நினைத்துக் கொண்டான்.

வீடு திரும்பிப் போகும்போது நன்றாக இருட்டி விட்டது. வாசலில் எல்லாரும் இவர்களைப் பார்த்தபடியே நின்றார்கள். அனு ஓடி வந்து யோகனிடம் தொங்கிக் கொண்டாள்.

"அப்பாஇ இண்டைக்கு தாத்தா ஒரு புதுக்கதை சொல்லித் தந்தவர்"

"என்ன கதை அனு?"

"காலொடிந்த ஆட்டிற்கு கண்ணீர் விட்ட புத்தரின் கதை அப்பா" என்றாள் அனு.

*** *** ***

இரவு நெடு நேரம் வரை கதைத்துக் கொண்டிருந்தார்கள். சுடச் சுட தேநீர் கொண்டு வந்து குடுத்து விட்டுப் போனாள் மஞ்சு. அடிக்கொரு தடவை கிருஷ்ணாவை சீண்டி வேடிக்கையாக இருந்தார் இராமலிங்கம். இப்போது முன்பு போல அவரால் கலகலப்பாக இருக்க முடியவில்லை. கொஞ்சம் கதைப்பதற்குள் இழைத்துப் போகின்றார்.

"கனடாவிலை இருந்து இஞ்சை வர எவ்வளவு மட்டிலை ஒவ்வொருத்தருக்கும் செலவாகுது?"

"ஆயிரத்து எண்ணூறு டொலர்கள். ஏன் மாமா நீங்களும் ஒருக்கா கனடா வந்து பாக்கலாமே!?"

"கண் பார்வையும் மங்கிக் கொண்டு வந்திட்டுது. இனியென்னத்தை நான் பாக்கிறது. சொந்த மண்ணிலை நாலு இனசனத்தோடை இருக்கேக்கை செத்துப் போயிட வேணும் எண்டதுதான் இப்ப என்ர ஆசை. ஒருவேளை நான் செத்தா, என்ர செத்த வீட்டுக்கு எல்லாரும் வருவியளோ?"

"இதென்ன இண்டைக்கு இராமலிங்கம் அண்ணை மடக்குக் கேள்வியள் எல்லாம் கேட்கிறார். நாங்கள் வராமல்!"

"தயவு செய்து ஒருத்தரும் இஞ்சை வந்துடாதையுங்கோ! அந்தக் காசை எல்லாருமா சேத்து மஞ்சுவுக்குக் குடுங்கோ."

"நல்ல ஒரு மாமாதான் நீங்கள்."

கடைசிவரை சொந்த ஊரிலேயே இருக்க வேண்டும் என்ற ஓர்மம் உடைய மாமாவைப் போல பலரும் இருக்கத்தான் செய்கிறார்கள். பத்து மணி வரையும் நீ£டித்த உரையாடலுக்குஇ திருக்குமாரும் பாலச்சந்திரனும் முற்றுப்புள்ளி வைத்து தங்கள் வீடுகளிற்குச் சென்றார்கள். யோகனும் கிருஷ்ணாவும் வீட்டு விறாந்தையில் சரிந்து கொண்டார்கள். ஒரு மண்ணெண்ணை விளக்கு அறைக்கும் விறாந்தைக்கும் இடையிலிருந்து துடித்துக் கொண்டிருந்தது.

மஞ்சுவிற்கு ஒரு இருப்புக் கிடைத்ததில் யோகனுக்கு திருப்தி. இந்த நேரத்தில் அப்பாவும் இருந்திருந்தால் எவ்வளவு நன்றாக இருந்திருக்கும். ஒரு 'மோட்டர் பம்'பின் மீது கொண்ட சையால் காணாமல் போய் விட்டார். 'கரண்ட்' இல்லாத நேரத்தில் அதற்கு ஒரு பெறுமதி இல்லை என்று தெரிந்து கொண்டும் விசர்த்தனமாக எடுத்த முடிவில் அழிந்து போனார்.

எத்தனை பேர் வீடுகளுக்கு சென்று, விறகுகளும் மிச்ச சொச்ச சாமான்களையும் அள்ளிக் கொண்டு வந்திருக்கிறார்கள். யோகனும்தான் அப்போது அவருடன் கூடச் சென்றான். அது ஒரு மழை நாள். அளவெட்டி வீதியால் வந்து அம்பனை வீதிக்கு ஏறும்போது சடசடவென ஷெல் அடிச் சத்தம் கேட்டது. மழைக்கு அந்த ஒலி வீறாப்புடன் எதிரொலித்தது. ஒரு கடைக்குள் ஒதுங்கி நின்றார்கள். திடீரென என்ன நினைத்தாரோ, "நான் போகப் போறன். நீ வாறியா?" என்றார் அப்பா. "பொறுங்கோ அப்பா! ஷெல் அடி கொஞ்சம் தணியட்டும்" என்று யோகன் சொல்லி முடிப்பதற்குள், "நீ வீட்டை திரும்பிப் போ. உனக்குக் காலும் ஏலாது" என்று சொல்லி விட்டு பாய்ந்து சைக்கிளில் ஏறிப் போய்விட்டார். அவரது பிடிவாதம் கடைசியில் அவருக்கு வினையாக முடிந்தது. அதன் பிறகு அவர் வீடு திரும்பவில்லை.

உண்மையிலே அப்பா ஒரு சரியான பயந்தாங்கொள்ளி. எப்படி அப்படியொரு துணிச்சல் திடீரென அவருக்கு வந்தது என்பது யோகனுக்கு இன்னமும்தான் புரியவில்லை. துளித் துளியாகச் சேர்த்த சொத்தை இழக்கும் நேரம் வரும்போது எல்லாருக்கும் அப்பிடியான ஒரு மன நிலைதான் வருமோ?

அப்பா எங்கோ பத்திரமாக இருப்பதாகவும்இ என்றோ ஒருநாள் திரும்பி வந்து விடுவார் என்றும் அம்மா நம்பிக்கை கொண்டிருக்கின்றாள்.

திரும்பி மறுபுறம் சரிந்து படுத்தான் யோகன். கிருஷ்ணாவின் குறட்டை ஒலி தாள லயத்துடன் முழங்கியது. அவனது குடும்பம் எண்பத்திமூன்று இனக்கலவரத்துக்குள் அடக்கம். காலி வீதியில் எரியும் கார் ஒன்றிற்குள் அப்பா, அம்மா, தம்பி தங்கை என ஐந்து பேரும் தூக்கி எறியப்பட்டார்கள். அவனது காலம்இ அவன் மாத்திரம் காரினின்றும் வழுகி விலகி வீதியில் விழுந்து கொண்டான். காரிற்குள் இருந்த ஒட்டு மொத்தக்

குடும்பத்தின் கதறலைக் கேட்டுக் கொண்டே சிறுவனான அவன் மயங்கிப் போனான்.

மஞ்சுவிற்கு உறக்கம் வரவில்லை. யோகன் போர் முனைகளில் இருந்த நாட்களில் எத்தனை நாட்கள் இப்படி உறங்காமல் விழித்திருந்திருப்பாள் அவள்.

"அண்ணா இந்தா போர்வை. போத்துக் கொண்டு படுங்கோ. சாமத்திலை குளிரும். உங்களுக் கும்தான்"

"அண்ணா! நுளம்புச் சுருளை இதிலை கொழுத்தி வைக்கட்டுமா?"

நிமிடத்திற்கு நிமிடம் ஒரே 'அண்ணா' புராணமாக இருந்தாள்.

"எடியேய் போய் படடி கெதியா" என்றாள் மங்கை.

"அம்மா! நித்திரை வருகுதில்ல."

"கொஞ்ச நாளைக்கு அப்பிடித்தான் இருக்கும்."

"போம்மா!"

யோகன் அன்று அப்பாவுடைய நினைவுகளுடன் உறக்கத்திற்குப் போனான். விடியற்புறம் நாலு மணி இருக்கலாம். ஒரு கையில் விளக்கும், மறுகையில் தட்டமும் கொண்டு அப்பா பூ புடுங்குகின்றார். தேவாரம் அப்படியே காற்றில் எழுந்து வந்து இவன் காதில் விழுகிறது. மெய் மறந்து போகின்றான். பக்கத்து வீட்டிலே மாடுகள் சாணி போடும் சத்தமும்இ தொடர்ந்து பால் கறக்கும் ஓசையும் கேட்கிறது. "தம்பி யோகன்இ ஒருக்கா எழும்பு. பாம்பு ஒண்டு பூமரங்களுக்கிடையிலை நிக்குது" அப்பாதான் கூப்பிடுகின்றார். திடுக்கிட்டு கண் விழிக்கின்றான். பிரமை. அப்படியே முற்றத்தை எட்டிப் பார்க்கின்றான். பூ மரங்களற்று மொட்டையாகிப் போவிட்ட பூமியிலிருந்து ஒரு சாரைப் பாம்பு நெளிந்து நெளிந்து தெரு வீதிக்குள் போக எத்தனிக்கிறது. பயந்து
போய் விட்டான் யோகன்.

அதன் பிறகு யோகனுக்கும் நித்திரை வரவில்லை. நிலவு பால் போல எறித்தது. எழுந்து நடமாடித் திரிந்தான். சீதளக் காற்று வேப்பம் பூ வாசனையுடன் மெல்லத் தழுவிச் சென்றது. குடிசைக்குள் காலடி எடுத்து வைத்து மாமாவை எட்டிப் பார்த்தான்.
மாமா குறட்டை விட்டு தூங்கிக் கொண்டிருந்தார்.

*** *** ***

மஞ்சுவின் கலியாண எழுத்து, வெய்யில் தணிந்த ஒரு மாலை நேரப் பொழுதில் நடந்தது. ஆடம்பரமில்லாமல் ஊரில் இருந்த கொஞ்சப் பேரின் சீர்வாதத்துடன் அவளின் வாழ்க்கை தொடங்கியது.

மங்கையைக் காட்டிலும் இராமலிங்கத்தாரே மகிழ்ச்சியில் இருந்ததாகப்பட்டது. குழந்தை களைக் கூட்டி வைத்துக் கதைகள் பல சொல்லி, பல வினோதமான நொடிகளும் போட்டார். தியாகி திலீபனின் கதை அன்றைய கதைகளில் முக்கியமான இடத்தைப் பிடித்தது. கோடை காலமாதலால் பொழுது நீண்டு கொண்டே போயிற்று. முற்றத்தில் கதிரைகளைப் பரப்பிஇ புகையிலை பாக்குப் போடுவதும் தேநீர் அருந்தி சிரிப்பதுமாக விருந்தினர்கள் இருந்தார்கள். இடையிடையே அரசியலும் வந்து போயிற்று. இராமலிங்க, யோகனை கை ஜாடை செய்து கூப்பிட்டார். 'எல்லாம் நல்லபடி முடிந்து விட்டன. வா' என்று கூட்டிக் கொண்டு குறுக்கு வேலிப் பக்கமாகச் சென்றார். பயந்து பயந்து அடியெடுத்து வைத்தான் யோகன். 'அங்கை பார்!' என்று அடுத்த வளவிற்குள் கை நீட்டினார் இராமலிங்கம். அடுத்த வளவின் முள்ளுப் பற்றைக்குள் சாரமொன்றின் பகுதி ஒன்று சிக்கியிருந்து காற்றினுள் படபடத்தது. அது கதிரவேலு கடைசியாக அணிந்திருந்த சாரத்தின் ஒரு பகுதிதான்.

யோகன் நிமிர்ந்து மாமாவைப் பார்த்தான். அவன் பார்வையில் கேள்வி தொக்கி நின்றது. இராமலிங்கம் 'மாம்' என்பது போல் தலையை ஆட்டினார்.

"அப்பா உயிருடன் திரும்பி வருவார் எண்டு அம்மா காத்திருக்கின்றாள். அவளின்ர காத்திருப்பு அப்பிடியே இருந்து விட்டுப் போகட்டும். நீ ஒண்டும் சொல்லிப் போடாதை யோகன்."

யோகனிற்கு கண்கள் முட்டின. இராமலிங்கத்தார் அவனைக் கட்டிப் பிடித்து தழுவிக் கொண்டார். அதுவே யோகனுக்கும் இராமலிங்கத்தாருக்குமான கடைசித் தழுவலாக இருந்தது.

கலியாண எழுத்து நடந்து, இரண்டாம் நாட்காலையில் மாமாவிற்கு தேநீர் குடுப்பதற்காக குடிசைக்குள் நுழைந்தபோது அவர் இறந்து கிடப்பதை மஞ்சு கண்டாள்.

இராமலிங்கத்தின் சடலத்திற்கு கொள்ளி வைத்ததால் மேலும் ஒரு மாதம் நின்றுவிட்டுப் போவதென யோகன் முடிவு செய்தான். கிருஷ்ணதேவாவும் அவனுடன் தங்கிக் கொண்டான். பாலச்சந்திரனும் திருக்குமாரும் குறிப்பிட்ட நாளில் திரும்புவதென முடிவு செய்தார்கள்.

மங்கை தனக்குள்ளாக கதைத்துக் கொண்டு விசர் பிடித்தது போலத் திரிந்தாள். சில மணி

நேரங்கள் மகிழ்ச்சி. பின் மீண்டும் துயரம். ஒவ்வொரு தடவையும் பழைய நினைவுகளிலிருந்து தப்பித்து வெளியே வர அவள் முயற்சிக்கும் போதும் ஏதோ ஒன்று அவளைப் பிடித்து உள்ளே இழுத்து விடத்தான் செய்கிறது.

'ஊரிலை இனசனத்தோடை இருக்கேக்கை போய் விட வேண்டும்' என்று இராமலிங்கம் சொன்னதில் ஏதாவது அர்த்தம் இருக்கலாம் என அவள் நினைத்தாள். அங்கேதான் அவளது சிந்தனைக் கப்பல் இப்போது நங்கூரம் பாய்ச்சி நிற்கின்றது. ஒரு தேவாரப் புத்தகமொன்றை சாட்டுக்கு எடுத்துக் கொண்டு அதே பழைய கதிரைக்குள் முடங்கிக் கிடக்கின்றாள்.

ரேவதியும் மஞ்சுவுமாக குசினிக்குள் இருந்த மேசை ஒன்றைத் தூக்கிக் கொண்டு வந்து விறாந்தையினுள் வைத்தார்கள்.

புத்தகத்தினின்றும் கண்களைத் தாழ்த்தி என்ன நடக்கின்றது எனப் பார்த்தாள் மங்கை. மாமாவின் படமொன்றைக் கொண்டு வந்து மேசைமீது வைத்து விட்டு குத்து விளக்கொன்றைக் கொழுத்தி வைத்தாள் மஞ்சு. யோகனது பிள்ளைகளும் பக்கத்து வீட்டுக் குழந்தைகளுமாக முற்றத்திலே ஓளித்துப் பிடித்து விளையாடிக் கொண்டிருக்கின்றார்கள்.

கதிரையை விட்டெழும்பிய மங்கை படுக்கையறைக்குள் சென்று சூட்கேசினுள் கிளறி ஏதோ ஒன்றை எடுத்தாள். அது கதிரவேலுவினுடைய ஒரு பழைய படம். அதைக் கொண்டு வந்து இராமலிங்கத்தின் படத்திற்குப் பக்கத்தில் வைத்து விட்டு, குத்து விளக்கினுள் மேலும் எண்ணெயை ஊற்றினாள். உள்ளேயிருந்து வந்த மஞ்சு அம்மாவின் செய்கையைத் திகைப்புடன் பார்த்தாள்.

"அம்மா! அம்மா!! இஞ்சை ஓடி வாங்கோ" என்ற அனுவின் குரல் கொட்டிலிற்குள் இருந்து கேட்டது. "பிள்ளை, ஒருக்கால் எட்டிப் பார். ஓடிப் பிடிச்சு விளையாடினதுகள். விழுந்து போச்சுப் போலக் கிடக்கு" என்று ரேவதியைப் பார்த்து மங்கை சொன்னாள்.

கொட்டிலிற்குள் சென்ற ரேவதியும் மஞ்சுவும் மூக்கைப் பொத்தியபடி போன வேகத்தில் திரும்பினார்கள்.

"ஒரே மணம். புழுத்த நாத்தம். ஏதோ செத்துக் கிடக்குது போல."

"அண்ணா, மூக்குக்கு துணியைக் கட்டிக் கொண்டு போய் பாரண்ணா."

மூக்கிற்கு லேஞ்சியைக் கட்டிக் கொண்டு கொட்டிலிற்குப் போன யோகனும் கிருஷ்ணாவும்இ வரும் போது ஒரு பித்தளைக் குடத்துடன் வந்தார்கள். முற்றத்திலே அதைத் திருப்பிக் கவிட்டுக் கொட்டினார்கள். உள்ளேயிருந்து நாட் பட்ட சோறு கறியள் எல்லாம் கூழாம் பாணியாக வந்து வெளியே விழுந்தன. இடையிடையே நனைந்து ஊதிப் பருத்த  பச்சை சிவப்பு மருந்துக் குழிசைகள் ஏராளமாகக் கிடந்தன. அவற்றிலிருந்து கொழுத்த புழுக்கள் நெளிந்து நெளிந்து வெளியே வந்து கொண்டிருந்தன.

kssutha@optusnet.com.au

பதிவுகள் ஏப்ரல் 2005; இதழ் 64

**42. மன்ற மதுஷாலா பொம்மை! - பாஸ்டன் பாலாஜி -**

"அறிவின் மூலமாக உங்களுக்கு லாட்டரியில் வாகனம் விழும்".

பின்பக்கம் திரும்பினால் 39 Kg. வாகனம் லாட்டரியில் கிடைத்தாலும் ஓட்டுவதற்கு அதிர்ஷ்டம் வேண்டும். பஜாஜ் பல்ஸர் மேல் நான் உட்கார்ந்து ஒட்டுவது, சினிமாஸ்கோப் திரையில் தனுஷ் பறந்து பறந்து அடிப்பதை போல் இருக்கும்.

அமெரிக்காவில் இருக்கும் பத்து வயதே ஆன சித்தப்பா மகள் கூட நாற்பது கிலோ. வயதுக்கேற்ற எடை வேண்டும் என்று படித்ததினால் முப்பத்தொன்பது வயதில் முப்பத்தொன்பது கிலோ. 'நான் இருவர்; நமக்கு ஒருவர்' என்ற வசனத்தைக் கேட்டு 19.5 கிலோவாக இல்லாமல் இருப்பதுதான் ஆறுதல். என்ன செய்தும் எடை ஏற மாட்டேன் என தலைவனைப் பிரிந்த சங்க காலத் தலைவி போல் மெலிந்து வருகிறது. இருபத்தியாறு இன்ச் வைத்து பேண்ட் தைக்க கொடுத்தால், தைத்து முடிப்பதற்குள் இடுப்பு இருபத்தி நான்காக மெலிகிறது.

ஞாயிற்றுக்கிழமை என்று பார்க்காமல் எல்லா நாட்களிலும் 'ஐஸ்க்ரீம் சண்டே' சாப்பிட்டுப் பார்க்கிறேன். இரவில் தேன் குடிக்கிறேன். காலையில் மாட்டுப்பால், கோழி முட்டை, ஆட்டுப்பாயா, மீன் வறுவல் சாப்பிடுகிறேன்.

வீட்டின் படுக்கையறையில் இருந்து குளியலறைக்கும், அங்கிருந்து சாப்பாட்டு மேஜைக்கும், எஸ்கலேட்டர் போட்டு இருக்கிறேன். அதிலும் நின்றால் சக்தி வீணாகிப் போய் எடை போடாமல் போய் விடலாம் என்பதால் உட்கார்ந்தே வீட்டின் அனைத்து இடங்களுக்கும் உலாவி வருகிறேன்.

விளம்பரத் துறையில் வேலை பார்ப்பவர்களை விட கணினி வல்லுநர்கள் சீக்கிரமே குண்டாகிறார்கள் என்று சொல்ல தொழிலையும் மாற்றி விட்டேன். உட்கார்ந்த இடத்தில் காபி, வேளா வேளைக்கு பீட்ஸா, சாய்ந்து உட்கார சொகுசு நாற்காலி, குளிரூட்டப்பட்ட அறை, அவ்வப்பொழுது மொறுக்க, உருளையை -- விரல் நீளத்துக்கும் கவிதைப் புத்தக தடிமனுக்கும் நறுக்கி தேங்காய் எண்ணெயில் பொறித்தெடுத்த ·ப்ரை, மாலையில் காலோரிகள் சீனாவின் ஜனத்தொகையாகக் கொட்டிக் கிடக்கும் பியர் என்று கவனித்தாலும் இன்னும் முப்பத்தொன்பதிலேயே நிற்கிறேன்.

தெருமுக்கு கருமாரியில் ஆரம்பித்து நியுயார்க் பிள்ளையார் அருள்பாலிக்கும் பெசண்ட் நகர் அறுபடை வீடு முருகன் வரை எல்லாரையும் பொதுப்பணித்துறை காரியம் ஆக கவனிக்கும் பொதுஜனமாக திருப்திப் படுத்தியாச்சு. பட்டினி இருப்பதால் ஐயப்ப விரதமும், மொட்டை அடித்து இரண்டு கிலோவை கழிக்க வைப்பதால் திருப்பதியும்,

முஷார·ப் கிடைக்காமல் போனதால் என்னைப் போட்டுத் தள்ளும் வாய்ப்பு உள்ளதால் அமர்நாத்தும், இருபது மைலுக்கு நடராஜா சர்வீஸ் விடுவதால் மானசரோவரும் மட்டுமே பாக்கி.

நண்பர் சொல்லித்தான் ராஜசன்னிதானத்தைப் பார்க்க சென்றேன். எல்லா சாமியாரையும் போல் இல்லாமல் கோட் சூட் டையுடன் பளபளக்கும் கருப்பு காலணிகள். பாம்பின் தோல் போல் கண்ணைப் பறிக்கும் மென்மையுடன் கன்னங்கள். புருவத்தின் மத்தியில் இருந்து அளவெடுத்து பிரித்துப் போட்ட சாலையின் வெள்ளைக் கோடு போல் கருஞ்சாந்து. சாலையில் செல்லும் கார்கள் போல் விபூதி துணுக்குகள். சாம்பாரில் போடப்படும் துளிப் பெருங்காயம் போல் கொஞ்சம் சந்தனம். அதன் மேல் உப்பு போல் தேவைக்கேற்ற குங்குமம.

"நான் செத்துப் போயிடுவேனா?" ஆறாவது ப்ளடி மேரி அவனுக்காக மேஜையில் உட்கார்ந்திருந்தது.

"நிச்சயமாக எல்லோரும் ஒருநாள் இறந்துவிடுவோம்." மாறாதப் புன்னகையுடன் சாமியாருக்கு பியர் ஊற்றி நிரப்பும் ஜமுனா, அவனுக்கும் அதே புன்சிரிப்புடன் இன்றும் சொல்லிக் கொண்டிருப்பாள்.

அதிக மனிதரில்லாமல், ஜமுனா போன்ற சிரத்தையான சிப்பந்தியைக் கொண்ட பார்வையாளர் மன்றம். அங்கு பரிமாறப்படும் உணவில் எனக்கு அவ்வளவாக ஆர்வமில்லை. உள்ளே நுழைந்தவுடன் உயரமான நாற்காலிகள் அணிவகுத்து நிற்கும். ஒன்றுக்கிருப்பதற்கு வசதியாக, ரெஸ்ட்ரூம்களுக்கு மிக அருகே ஓரமாக உட்கார்ந்து கொண்டு, தினமும் ஒருவன், நாம் அனைவரும் இல்லாமல் போவதை உறுதி செய்துகொண்டு இருந்தால், இருப்பை உறுதிப்படுத்தும் உணவின் அவசியம் இல்லாமல் போகிறது.

மன்ற மதுஷாலாவில் இருந்து இரண்டடி நடந்தால் இரயில்வே ஸ்டேஷன். எனக்குரிய ட்ரெயின் வந்துவிட்டதா என்று உள்ளே உட்கார்ந்தபடியே அறிந்துகொள்ள முடியும். வண்டியில் ஏறித் தூங்கிவிட்டால் கடைசி நிறுத்தம் என்னுடைய ஊர். அங்கிருந்து மூன்று நிமிடம் நடந்து இரண்டு மாடி படிக்கட்டு ஏறினால், என் வீடு. நிம்மதியாக மது உண்ணும் வாய்ப்பு எல்லாருக்கும் கிடைப்பதில்லை. இங்கே இருக்கும் முகமூடி மனிதர்கள் கூட மதுவருந்துகிறார்கள். ஆனால், வாய்க்குள் ஓட்டை இருக்கிறது.
கண்கள் எப்படி பார்ப்பார்களோ தெரியவில்லை. என்னுடைய மூத்திரம் இங்கேதான் கொட்டியிருக்கிறது. அந்த மணமும், அவர்களின் தூங்க முடியாத நிர்ப்பந்தமும், போதைக்காக குடிப்பதை விட, வாயில் எப்போதும் பெப்பர்மிண்ட் மிட்டாய் வைத்திருக்கும் என் முப்பத்தொன்பது கிலோ நாட்களைக் கொண்டு வந்தது. எனக்கு

எப்போதுமே பால்குடி மாறவில்லை. அம்மாவிடம் எட்டு வயதுவரை பாலுண்டேன். அதன் பிறகு வாயில் பெப்பர்மிண்ட் வைத்துத் திரிந்ததாக அக்கா சொன்னாள்.
எல்லோரும் ஒரு நாள் இறந்து போவார்கள் என்பதை நான் முதன் முதலில் தெரிந்து கொண்டது, என் அக்காவின் மூலம்தான். குழந்தைப் பேறு காலத்தில் வாந்தி எடுப்பதும், மயக்கம் வருவதும், தலைசுற்றுவதும் நிறைய சினிமாவில் பார்த்திருக்கிறேன்.
ஆனால், சினிமாவில் எள்ளி நகையாடிய ப்ரெயின் ட்யூமர் என்னுடைய அக்காவிற்கு வந்தபோது, மனிதர்களுக்கு இல்லாத நோய்கள் வரும் என்று புரிந்து கொண்டேன்.

நமக்குத் தெரிந்தவர்கள் நம் கண் முன்னே, மெதுவாக, துளித் துளியாக சிதைவது பார்க்கத் தகாதது. கொடுமைப் படுத்துபவர்களுக்கு நல்ல மனநிலை வேண்டும். அடுத்தவன் அழிவதை, வருந்துவதைப் பார்ப்பதால் கடவுள் போன்ற தீவிரவாதி தொழத்தக்கவன்.

வாரம் ஒரு தடவை கீமோதெரபி, மொட்டையடிக்கப்பட்ட நீண்ட கூந்தல், என்னை விட விநாடிக்கு நூறடி மெதுவாக நடந்து கரிசனப்பட வைக்கும் நடையைப் பெறுவது, பிறர் மகிழாவிட்டாலும் சலிக்க வைக்கிறோமோ என்னும் குற்ற உணர்வு, இவ்வளவு செய்தும் உயிர் வாழ முடியுமா அல்லது வேண்டுமா என்னும் எண்ணம் எல்லாம் மட்டும் நினைவில் நிற்கும். ஒரு வழியாகக் கருணைக் கொலை பாக்கியம் இல்லாமல் அக்கா தவறிப் போனாள்.

அப்பொழுது நான் வாயில் வைத்துக் கொள்ளும் ரப்பரை விட்டு விட்டேன். ஆனால், பெப்பர்மிண்ட் பபுள் கம் தொற்றிக் கொண்டது. சவைப்பது. மீண்டும் சவைப்பது. பல் வலிக்க சவைப்பது தொழில். எதிர்பாலாரைக் கண்டால் புன்னகைப் பூப்பதை விட நுரை பூப்பது என்னால் முடிந்தது. அதன் மூலம், அவர்கள் பால் என்னுடைய ஈர்ப்பு அறிவிப்பை எளிதாகப் பகர முடிந்தது. என்னுடைய மன்ற அழகி ஜமுனாவைப் போல் அவர்கள் புன்னகையும் சிந்தவில்லை. கடைக்கண் பார்வைகள் பயனில்லை. அவை அவர்களுக்காக மட்டுமே. நமக்கு விருப்பத்தை அறிவிக்க அகலவழிப் பார்வைகள் அவசியம்.

மனற மதுஷாலா நாயகி ஜமுனாவிற்கு பின்புறமும் கண்கள் இருக்கிறதோ என்று நான் அவளை திரும்பச் சொல்லிப் பார்த்ததுண்டு. இறப்பை விசாரிக்கும் மனிதனின் நிலையாமையை விளக்கும்போதே, அவள் பார்வை என்னுடைய காலியான கோப்பையை அறிந்து, நிரப்பி, பழைய கோப்பையை சுத்தம் செய்யப் போட்டுவிடும். எங்கோ இன்னொருவன் போதையே இல்லாமல், குடிக்கத் தெரியாமல், பேச்சு சுவாரஸ்யத்தில் சிந்திய திரவத்தைத் துடைத்துத் தள்ளும். நடுவே அந்த மூலை மனிதனின் சந்தேகத்தை அதே புன்னகையுடன் நிவர்த்திக்கும். நான் அறிந்தவர்களில் ஒருவரிடம் ஒன்றுக்கு மேற்பட்ட நல்ல குணங்கள் இருப்பது அரிது. அவளிடம் நாலைந்து

கண்டு கொண்டது அவளின் ஆச்சரியம்.

ஜமுனா என்னைத் தேடுவாளா என்று எனக்குத் தெரியாது. ஆனால், தேடும் அவசியத்தை தொலைக்காட்சியும், தினசரிகளும் கொடுத்து இருக்காது. ஒரு இந்தியக் குடிமகன் கடத்தப் படுவது அன்றாடம் நடக்கும் நிகழ்வா? அதுவும் இந்தியாவிலேயே?

"குழந்தைகளுக்குப் பரிசு பொருள் தருவீர்களா?"

சாமியார் என்னிடம் கேட்டவுடன் அறுபது மைல் வேகத்தில் வரும் காரின் முன் நிற்கும் அணிலாகக் குழம்பினேன். குழந்தைகளை அன்றாட வாழ்வில் பார்ப்பேன். பள்ளிக்கு செல்பவர், ஹோட்டலில் துடைப்பவர், ஜெராக்ஸ் எடுப்பவர், செருப்பு கண்காணிப்பவர் என்று பழக்கப்பட்டவர்கள். ஆனால், பரிசுப் பொருள் தரவேண்டிய நிர்ப்பந்தமே ஏற்பட்டதில்லை.

என்னுடைய கணினில் அதிசயமாக முளைக்கும் கிருமிகளைப் போல எப்போதாவது உறவினரைப் பார்க்க செல்வதுண்டு. பூ, பழம், மைசூர்பா, பார்லேஜி வாங்கிச் செல்வதுண்டு.

லியோ டாய்ஸ் காலங்களில் துப்பாக்கி வாங்கிக் கொண்டு போய் நின்று சுடப் பட்டிருக்கிறேன். 'என்னுடைய பொண்ணு தீவிரவாதி ஆகணும்னு நினைக்கிறாயா?'

சரி... சாதுவாக பார்பி கொடுப்போம், 'லெஸ்பியனாகி எவளையாவது இழுத்துக்கிட்டு ஓடணும்னு கொடுக்கிறாயா?' என்றார்கள்.

மூளைப் பிரயோகம் செய்வதற்கு ஏற்ற அறிவாளி விளையாட்டுக்களுடன் சென்றால் 'பையனால் முடிக்க முடியவில்லையே என்று தாழ்வுணர்ச்சியில் உழல வைக்கப் போகிறாயா?' என்றும் கிண்டல்கள் மீளவே இல்லை.

வாசலில் நுழையும்போது கூட எதிர்ப்பு கோஷங்கள் நிரம்பியிருந்தது. நான் உள்ளே நுழைவதைத் தடுக்க +

```
  |
-----
  |
  |
```

என்று விதவிதமான பெரிய குறிகளுடன் மாதவிடாய் நின்றுபோன வயதான பாட்டியும், மாதவிடாய் வராத வயசுப்பசங்களும் இருந்தார்கள். எல்லோரையும் மீறிதான் என்

அம்மாவே என்னை இங்கு சிறையிலிட்டிருக்கிறார்கள்.

கடைசியாக நான் கொடுத்துக் கொள்ளும் விளையாட்டு சாதனங்கள் டாக்டர் செட். கத்தி, கபடா, கண் பார்க்கும் சார்ட், ஸ்டெதஸ்கோப், இருதயத் துடிப்பு அளந்து சொல்லியும் கொடுப்பதுடன் சென்றேன். அவன் இப்போது பிறக்காத என் போன்ற குழந்தைகளை அரை மணிக் கூற்றில் அபார்ஷன் செய்யும் அபார டாக்டராகி பரிசு பெறாத குழந்தைகளை முடித்து வருகிறார்கள்.

bsubra@yahoo.com
பதிவுகள் மே 2005; இதழ் 65

**43. குஞ்சுபொறிக்கும் மயிலிறகுகள்! - நாகரத்தினம் கிருஷ்ணா -**

ஊரை நெருங்கிவிட்டிருந்தேன்.

தைமாதம், எப்போதும்போல ஏரியில் தண்ணீர் வடிந்து கோடைகாலமென்று கைகட்டி சாட்சி சொல்லிக்கொண்டிருக்கிறது. தலைக்குமேலே காய்ந்தவண்ணமிருந்த சூரியன் கைங்கர்யத்தால், வெள்ளிச் செதிள்கள் நீரில் ஆங்காங்கே மினுக்கிக் கொண்டிருக்கின்றன. சித்தேரிக் கரையில் இரண்டொருவர், நனைந்த கோவணமும் தலையில் முண்டாசுமாய் செம்மண்நிறத் தண்ணீரை வாரியிறைத்து, வண்டிமாடுகளைக் கழுவுகிறார்கள். இடைக்கிடை வைக்கோல் பிரிகளைக்கொண்டு அவற்றைத் தேய்க்கவும் தவறவில்லை. மாடுகளைத் தேய்க்கின்றபோது, அவைகள் உடல்களைச் சிலிர்க்கவும், தலைகளைச் சிலுப்பிக்கொள்ளவும் செய்ய, மண்டைச் சலங்கைகளும் கழுத்துமணியும் கலகலவென்று அசைந்து அவ்விடத்திலோர் காரியக் கூத்து. தூரத்தில் ஏரிக்கரையிலிருந்து பார்க்க, தெற்கில் கத்தாழை, தாழம்புதர்கள் கரை வரிசைகளுக்கிடையே மணலும், கூழாங்கற்களுமாக வறண்டு கிடக்கும் ஓடை. ஐப்பசி கார்த்திகை மாதங்களில் நுங்கும் நுரையுமாக காவிவண்ண வெள்ளம் ஏரிக்குள் ஆக்ரோஷத்துடன் நுழையும். ஓடை வறண்டிருந்த சித்திரை மாதமொன்றில் தாழம்புதர் மறைவில், ஒரு பெண்ணின் அந்தரங்கத்தை முதன்முதலாக பார்த்ததும், அதனால் இரவு முழுக்க அவஸ்தைப்பட்டதும் உண்டு.

சித்தேரிக்கரையிலிருந்து வடக்காக இறங்கினால், ஊரிலிருக்கின்ற கொஞ்சம் பாரியான பெரியதெருவில் கால் வைக்கவேண்டும். இருபுரங்களிலும் தழையதழைய பூவரசுமரங்கள், தப்பிய இடங்களில் முருங்கை மரங்கள், பச்சைப்பாம்புகள்போல கொத்துகொத்தாக முருங்கைக்காய்கள். வலப்புறம் ஏரியை ஒட்டி மிகப்பெரிய ஆலமரம். தாழ்ந்த கிளைகளில், பசுமாடுகள் கன்று ஈன்றும்போது, வந்துவிழும் நச்சுக்கழிவுகள் வைக்கோலில் வைத்துச்சுற்றியவைச் சிறுசிறு பொதிகளாக ஊசலாடிக்கொண்டிருக்கின்றன. அப்படிக் கட்டித்தொங்கவிட்டால், 'கன்றுப் போட்டிருக்கும் பசுவிற்கு கூடுதலாக மடி சுரக்கும் என்பதான நம்பிக்கை. ஆல் பழுத்து, கீழே கிடக்கும் பழுத்த இலைகளில் விழுவது, உச்சிவேளை நிசப்தத்தை கலைத்துக்கொண்டு துல்லியமாகக் கேட்கிறது. மேல்கிளைகளில் காகங்கள், கீழ்க்கிளைகளிகளில் அணில்கள், விழுதுகளில் சிறுவர்களென்று, ஆலமரத்தினைப் பங்குப் போட்டுக்கொண்டு விளையாடுவது இன்றைக்கும் தொடர்கின்றது.

ஆலமரத்திற்கு தெற்காக புளியமரம், முன்பு இருந்ததைவிட இளைத்து இருக்கிறது. ஆனாலும் மெல்லிய புளியங்கொம்புகளெங்கும் சடைசடையாய் புளியம்பழங்கள், காற்றின் சலசலப்பில் ஒன்றிரண்டு பூமியில் விழவும் செய்கின்றன, ஊர்க்குத்தகை எடுத்தவன் இன்னும் உலுக்காதிருக்கவேண்டும். காவலுக்கென்று ஒரு கிழவி மரத்தடியிற் கொம்பினை வைத்துக்கொண்டு, ஒப்புக்குச் சப்பாணி என்றவகையில்

உட்காரவைக்கப்பட்டிருக்கிறாள். கோடாலி முடிச்சும், கூன் முதுகும், 'கைப்பேணிக்கிழவி'யின் அவதார வரிசை என்பதை முன்வைக்கிறது.

கைப்பேணிக்கிழவியைப் போக்குக்காட்டி எடுத்த புளியம்பழங்களின் ஓட்டில் அளவாய் ஓட்டை போட்டு, கறந்த வெள்ளாட்டுபாலின் வெதுவெதுப்பில் ருசிபார்த்தது; ஞாபகத்தில்வந்து நாவில் எச்சில் ஊறுகிறது. தெரு, சிமெண்ட் கான்க்ரீட்தனத்துடன் சிங்காரமாக நீண்டிருக்கிறது. மேலே சிமெண்ட் இருந்தாலென்ன, அடியிலிருப்பது மண்தானே; என்னைப்போல. வலப்புறம் கிடந்த திறந்த வெளியில் நரிக்குறவர்களின் கூடாரங்கள் முளைத்திருந்தன. தள்ளிக்கிடக்கின்ற ஈச்சம்புதர்களின் மறைவில்தான் அவசரத்திற்குப் பெண்கள் ஒதுங்குவார்கள். ஆண்களைக் கண்டால் அதே அவசரத்துடன் எழுந்துகொள்வார்கள் இரண்டு நரிக்குறவ பெண்களுக்கிடையேயான சண்டை நடப்பதின் காரணமாகக் கூச்சல்கள். அதனை வேடிக்கைபார்க்கின்ற ஆர்வம் இன்றைக்கும் தொடர்வதன் அடையாளமாக, ஒரு கும்பல். அக்கும்பலின் பார்வை இப்போது என் மீது விழுகிறது. அங்கிருக்கின்ற முகங்களை ஞாபகபடுத்திப் பார்க்கிறேன். என் நினைவேட்டில் அவர்களுக்கேதும் முகமிருப்பதாகத் தெரியவில்லை. ஆனாலும் உள்ளத்திலே பொத்திவச்ச வேறுவகையான ஓவியங்களுக்குச் சிதைவில்லையென்றுதான் சொல்லணும்.

காலத்தூசுகளை அவ்வபோது தட்டித் துடைத்துவிட்டு; ஒன்றன்பின் ஒன்றாய் எடுத்துப் பார்த்து பழகியநினைவுகள். ஒவ்வொன்றையும் முட்டைகளாகப் பாவித்து உடைந்து விடாமற் கவனத்துடன் இறக்கியாகணும். இருபதுவருடங்களாக, அவற்றில் சில மனப்புத்தக மயிலிறகுகளாய் குஞ்சுபொறித்துகொண்டு உள்ளன. அவற்றைப் பருந்துக்கும், வல்லூறுக்கும் இறையாக்காமல் இன்றுவரை, எண்ணிக்கைக்குச் சேதமின்றி பாதுகாக்கிறேன்.

ஏரியைவிட்டு இறங்கியதுமே அந்த அனுபவத்திற்காகக் காத்திருந்தேன். தலைப்பிரவசத்தின்போது பெண்ணுக்கு ஏற்படும் அச்சமும் ஆனந்தமும், நானிட்ட முதற் காலடியில் ஒட்டிக்கிடக்கிறது, மண்ணில் விழுந்த கழிவுகளோடு சீம்பாலுக்காக தாய்ப்பசுவின் மடியினை முட்டும் கன்றினைப்போல. சித்தேரியில் படர்ந்திருக்கும் ஆலமர விழுதுகள், செம்மண்குளத்து பாசியும் தாமரையும், பாறாங்கற் பீடத்தில் கிழக்குப்பார்த்து அமர்ந்து எண்ணெய் பிசுக்குச் செதிள்களை உரித்துக்கொண்டிருக்கும் மூளிப்பிள்ளையார், எங்கள் வீட்டுக் கூன்விழுந்த தென்னை மரம், எருக்கஞ்செடி முளைத்திருக்கும் ஆதிமூலப் பிள்ளைவீட்டுக் குட்டிச் சுவர், அங்கே போஸ்டரில் தெரியும் நடிகர் நடிகைகள், அவர்களின் உதடுகளில் கரித்துண்டாற் கீறிய மீசைகள், மந்தைவெளி நாவல்மரங்கள் நாவற்பழங்கள், இலுப்பைமரம் பொன்வண்டு, இன்னும் எத்தனையோ...

இது என்னுடைய வீதி, இங்கேதான் சைக்கிள் டயரை உருட்டிக்கொண்டு, அரைக்கால் சட்டையுடன் சில நேரங்களில் அம்மணமாகக் கூட வீதிகளில் ஓடியிருக்கேன். இது

என்னுடைய மந்தைவெளித் திடல் இங்கே நிலவொளியில் புழுதியில் வியர்க்க வியர்க்க 'பலிஞ்சடுகுடு' விளையாடியிருக்கேன், அப்பா புதுச்சேரிக்கோ, திண்டிவனத்துக்கோ அல்லது பக்கத்து ஊருக்கு நிலவரி வசூலுக்கோ போயிருக்குக்கும் நேரங்களில் 'கோட்டிப்புள்ளோ, பேந்தாவோ, இலுப்பைகாய் ஆட்டமோ ஆடுவதும், சில சமயங்களில் அவர் கண்ணிற்பட்டு அடிபடுவதும் நடந்திருக்கிறது. திருவிழாக் காலங்களில் உறவுப் பெண்களின் மஞ்சட் தண்ணீரிலே நனைந்திருக்கேன். சித்திரை வெயிலில் அரசமரத்து நிழலில் ஆடுபுலி விளையாடியிருக்கேன். என் வீட்டுக் கூடத்துத் தாழ்வாரத்தில் உட்கார்ந்து, பெரிய எழுத்து விக்கிரமாதித்தன் கதைகளை அம்மா படிக்க, பக்கத்திலிருந்து கேட்டிருக்கேன்.

"இந்த வயசுல அங்கே போயிட்டு என்னச் செய்யப் போறீங்க. இங்கே நமக்கு என்ன குறை. வாரந்தோறும் பிள்ளை வந்துட்டு பார்த்துக்கிறான். மாதத்துக்கு ஒரு முறை மாப்பிள்ளையும் பெண்ணும் வந்துட்டுப் போறாங்க. புதுச்சேரியிலிருந்து பொன்னி அரிசி, பஞ்சாபிலிருந்து பாசுமதி, யாழ்பாணத்து மரக்கறிகள்னு சகலமும் வீடு தேடிவருது. ஆபத்தென்றால் ஓடோடிவரும் அரசாங்கம், மருத்துவ வசதிகள். இதற்கு மேல என்னவேணும். இவைகளையெல்லாம் இந்தியாவில எதிர்பார்க்கத்தான் முடியுமா? "

"ஒனக்குப் புரியாது கற்பகம்.. நாந்தேடுறது மேலானது, பவித்ரமானது. நான் தவழ ஆரம்பித்தபோது சுவைத்தமண். அம்மா விரல்விட்டு எடுத்தும் அகலாமல் கொழகொழவென்று நாவில் ஒட்டியிருக்கின்ற மண்."

"இதைத்தான் திரும்பச் திரும்ப சொல்றீங்க. நீங்க வரலைண்ணு யாரங்கே அழுவறாங்க"

"சொந்தமண் நினைவுகள் என்பது ஜீவாத்மா பரமாத்மா உறவு மாதிரி. ஜீவாத்மாவை யாரும் அழைக்க வேண்டியதில்லை. அதுவாகத்தான் தேடிப் போகணும்."

"நீங்க மாதந்தவறாம பணம் அனுப்பனுப்ப உங்கக் தம்பியும் மறக்காம கடிதம்போட்டாரு. எப்போது நீங்க பணம் அனுப்பறது நிறுத்தனீங்களோ, அப்போதையிலிருந்து எந்தத் தகவலுமில்லை. யோசிச்சுப் பாருங்க..அந்தப் பணமெல்லாம் இங்கே இருந்திருந்தா, இன்றைக்கு நமக்குண்ணு ஒரு அபார்ட்மெண்டை சொந்தமா வாங்கியிருக்கலாம். இப்படி அரசாங்கத்தின் தயவுல வாழவேண்டியதில்லை."

"கற்பகம் எதற்காக இப்படிச் சத்தம்போடற? இங்கே நமக்கென்ன குறைச்சல்?"

கற்பகம் பாயிண்டைப் பிடித்துவிட்டாள்.

"அதனைத்தான் தொண்டை கிழிய நானும் சொல்லறேன். கேட்டுத் தொலைக்கணும்.

நாற்பது ஆண்டுகளாக இல்லாத ஊர் நினைப்பு, இப்போதைக்கு எதற்கு?"

என்னிடம் பதிலிருந்தது. சொல்லத் தைரியமில்லை. இந்தத் நாற்பது ஆண்டுகால தாம்பத்தியத்தில் நிறைய சுமந்து சுமந்து, அவள் மனது கூன்போட்டிருக்கிறது. என் மனதிலிருக்கும் நெல்லிக்காய் சிப்பத்தை அவிழ்த்துக்கொட்டினால், இந்தியாவிற்கான எனது பயணம் நின்றுபோகலாம்.

"கற்பகம் ஏதாவது தெரிந்துதான் பேசறியா? என் தம்பி இருக்கான். உறவுக்காரர்கள் இருக்காங்க. பால்ய சிநேகிதன் ராகவன் இருக்கான். எனக்குண்டானது எங்கே போய்விடும்."

"ஆ...மாம் நினைப்புப் பொழப்பைக் கெடுக்குது."

"கற்பகம்..! பாண்டவர்கள் கேட்டதுபோல, தம்பியிடம் சின்னதாய் வீட்டில் ஒரு பகுதியை எனக்காக ஒதுக்கச்சொல்லிக் கேட்கப்போகிறேன். கிடைக்கும் பட்சத்தில் அங்கேயேத் தங்கிக்கொண்டு, தெம்புள்ளவரை ஊர் மண்ணில் காலார நடந்துவிட்டு, உன்னிடம் வந்து சேருவேன்"

அவளிடம் சத்தியம் செய்தேன். இடையில் சேர்க்கவேண்டிய வார்த்தையை தாம்பத்திய தருமம் கருதி பிரயோகிக்கலை. நாற்பது ஆண்டுகால இடைவெளியில் மனதில் எழுதியிருந்த ஊர்ப் பிம்பம் கலையாமலிருக்கிறது: ஆச்சாரி வீட்டு தென்னங்கீற்றுத் தட்டியின் மறைவில் இன்றைக்கும் விறுவிறுப்பாக சீட்டாட்டம் நடக்கிறது, ஆனால் ஆடுகின்ற மனிதர்கள்தான் வேறு. பெரியபிள்ளை வீட்டுத்திண்ணையில் வெட்டிப்பேச்சு இன்றைக்கும் நடக்கத்தான் செய்கிறது, ஆனால் நானறிந்த கார்மேகம் பிள்ளையோ, தானப்பக் கவுண்டரோ, தரகர் அருணாசலமோ அல்ல; இவர்கள் வேறு. அந்தத் தூலக்கட்டுவீடு ஆனந்தக் கவுண்டருடையதாகத்தான் இருக்கவேண்டும். அவர், எந்த நேரமும் வண்டிமாடுக¨ளை வைக்கோல் பிரியால் தேய்த்துத் தேய்த்துத் அவற்றின் உடலிலிருந்து உணியெடுத்துக்கொண்டிருப்பார். இப்போதும் பூவரசு மரத்தில் ஒருஜதை வண்டிமாடுகள் கழுத்தில் கட்டிய மணிகளோடு தலையை அசைத்து வைக்கோலை அசைபோடுகின்றன, ஆனந்தக் கவுண்டர் அங்கில்லை. மேற்கால இருப்பது கூத்துவாத்தியார் வீடு. சித்திரை மாதமானால், அவர் வீட்டு வாசலில் கூத்து ஒத்திகை நடக்க, தாளச் சத்தமும், மிருதங்கச் சத்தமும் பின்னிரவுவரை கேட்டுக்கொண்டிருக்கும். பனிக்காக தலையில் முக்காடிட்டுக்கொண்டு ஒத்திகைப் பார்ப்பதற்கென் ஒரு கூட்டம் நள்ளிரவு வரை விழித்துக்கொண்டிருக்கும்.

"தெரியாமல் நடந்துபோச்சு தாத்தா." எதிரே நுங்கை உறிஞ்சி, மிச்சமிருக்கும் பனங்காயில் சவுக்குக் குச்சியைச் சொருகி, தலையை குனிந்தவாறு உருட்டிவந்த பையன் என்மீது மோதி நிற்கிறான். நினைவுகளில் பின்னோக்கி ஓடியதில் நான்கூட இப்படி

மோதி என்னுடைய மனிதர்களின் கோபத்துக்கு ஆளாகியிருக்கிறேன். ஒதுங்கி ஓட நினைத்தச் சிறுவனைத் தடுத்து நிறுத்துகிறேன்.

"ஏண்டா தம்பி.. வாத்தியார் ராகவன் வீட்டுக்குப் போகணும்"

"வாத்தியார் ராகவன் வீடா? யாரைச் சொல்றீங்க?"

"நம்ம, முரளியோட தாத்தாவைச் சொல்றார்னு நினைக்கிறேன்." அவனோடு சேர்ந்துகொண்ட மற்றொரு பையன் உதவிக்கு வருகிறான்.

"ஓ அவங்க வீடா? அதோ அந்த கல்வீடு. திண்ணையிலே குத்துகாலிட்டு ஒக்காந்திருக்கிறாரே, அவர்தான் ராகவன் தாத்தா." சிறுவர்கள், மீண்டும் பனங்காய்களை உருட்டிக்கொண்டு ஓடுகிறார்கள்.

ராகவன் பால்ய சினேகிதன். எனது இளம் வயது வினைகளின் பங்காளி. கைகொட்டிச் சிரித்திருக்கிறோம், கட்டிப் பிடித்து உருண்டிருக்கிறோம். மணிக்கணக்கில் பேசியிருக்கிறோம், நிமிடக் கணக்கில் பேசாமலிருந்திருக்கிறோம்.

அவந்தான்.. அப்படியே இருக்கிறான். முகச் சுருக்கங்கங்களை எடுத்துவிட்டு, தலைக்கு கறுப்புச் சாயமும் இடமுடியுமானால், என் மனத்திலுள்ள ராகவந்தான்.

"ராகவா..!"

"யாரது? நெத்திக்கெதிரே தெரியும் சூரியனால கண்ணு கூசுது. கேட்ட குரலா இருக்குது. நெருங்கி வாங்க."

"ராகவா.. உன்னோட சிநேகிதன் பட்டாபி வந்திருக்கேன்"

"பட்டாபியா? எந்த பட்... அடடே.. வாடா வா..என்னால நம்ப முடியலை. சித்திரையில் மழைபேஞ்ச மாதிரி இருக்குது." ஆர்வத்துடன் தள்ளாடி நெருங்கிவந்தவன், இறுகக் கட்டிக்கொள்கிறான்.

"என்னடா..இதற்குள்ள இப்படி ஆட்டம்போடற."

"வயசு ஆகுதல்ல.. நீ மேற்கத்திய நாட்டுல இருந்துவர, கடேசிவரை காயாவே இருந்துட்டுப் போகலாம். நாங்க பூ, காய், கனிண்ணு வாழப்பழகியவங்க. வயதோடு இணங்கிப் போகிறோம்.."

"ஆரம்பிச்சுட்டியா?. இந்த விஷயங்கள்ல நீ மாறலையே"

"சரி சரி எப்போ பிரான்சுல இருந்து வந்த? மனைவி, பிள்ளைகள் எப்படி இருக்காங்க..?"

"நேற்றைக்கு. பிள்ளைகளும், மனைவியும் நல்லாவே இருக்காங்க. என்னோட ஆரோக்கியத்திலதான் சேதம். உடம்புல இல்லை, மனசுல. எப்படிச் சொல்றது? ஓடிக்கொண்டிருக்கும்போது தெரியலைடா. உட்கார்ந்திட்டோம் இல்லையா? மனசு அலையுது. தப்புப் பண்ணிட்டேன் ராகவா. எஞ்சிய நாட்கள் முச்சூடும் நம்ம மண்ணில விழுந்து, அங்கபிரதட்சணம் பண்ணனும்னு மனசு துடிக்கிது. இப்பல்லாம் தொடர்ச்சியா, எதையாவது காரணமா வச்சுகிட்டு, நம்ம ஊரின் ஞாபகங்கள் திரும்பத் திரும்ப மனசை ஆக்ரமிச்சுடுது. எந்த மண்ணுல முளைத்தேனோ, அந்த மண்ணுக்கே எருவாகனுமென்கிற தீர்மானத்தோட புறப்பட்டு வந்துட்டேன்."

அவன் கைகளைப் பிரித்து முகம் புதைக்கிறேன். ஆறுதலாக என் தோளில் கைவத்து அருகே இழுத்துக்கொள்கிறான். அவன் கண்களும் கலங்கியிருக்கின்றன.

"மீனா.. கொஞ்சம் வந்துட்டு போ".. திண்ணையிலிருந்து, வீட்டின் உட்பக்கத் திசைக்காய்க் குரல் கொடுக்கிறான்.

"என்ன மாமா.. கூப்பிட்டீங்களா?"

"என்னோட மருமகள் மீனா.. இவன் பட்டாபி, பால்ய சினேகிதன்; பிரான்சுல இருக்கான். நாற்பது வருசத்துக்கு முன்னாடி கிளம்பிப் போனவன், மறுபடியும் வந்து நிக்கிறான். சரி.. காப்பி போட்டுக்கொண்டுவாம்மா. அதற்காகத்தான் கூப்பிட்டேன்."

"எனக்குச் சர்க்கரை சேர்க்கவேண்டாம்மா.. எங்கிட்ட நிறைய இருக்குது"

"உனக்கும் சர்க்கரை வியாதியா? வியாதியை மட்டும் கடவுள் வித்தியாசம் பார்க்காமல் கொடுத்திடறான்"

"ராகவா என் உருப்படாத தம்பி எப்படி இருக்கிறான்? இப்பவும் அப்படித்தானா?"

"ஏண்டா பட்டாபி? இப்படி கேக்கிற.. உனக்கு நடந்தது எதுவும் தெரியாதா?"

"நீ என்ன சொல்ற கடேசியா அவனிடமிருந்து கடிதங்கள் வந்து பத்துவருடங்களுக்கு மேலாகுது."

"அவன் உயிரோடு இருந்தாத்தானே உனக்குக் கடிதம் போடமுடியும். ஆனால் உன் தம்பிப் பெண்சாதி கோகிலா நல்லப்பெண்ணாயிற்றே. அவள் கூடவா உனக்கு எழுதலை"

"அவள் எனக்குக் கடிதம் போடாததில ஆச்சரியமில்லை. என் தம்பிக்கு எழுதிய கடிதங்களில் அந்தப் பெண்ணை குறைகூறி நிறைய எழுதியிருக்கேன்."

"அங்கிருந்துகொண்டே, அப்பெண்ணிடம் குற்றம்கண்டு எழுதியதில எனக்கு உடன்பாடில்லை. உன் தம்பியிடம்கூட அப்படியென்ன பெருசா குறை கண்டிட்டீங்க?"

"என்னடா ராகவா? நீயா இப்படி பேசற? நடந்ததெல்லாம் உனக்குந் தெரிஞ்சதுதானே? அப்பாவும் அவனைப் படிக்கவைக்க எவ்வளவோ பிரயத்தனம் செய்தார். புதுச்சேரியில் வாடகைக்கு வீடுபிடித்து, பாட்டியை சமைத்துப் போடச் செய்து, வாராவாரம் ஆட்கள் தலையில் உப்பு மிளகாய் முதற்கொண்டு அனுப்பிவச்சார். குறைந்த பட்சம் எஸ்.எஸ்.எல்.சி. தேறியிருந்தாலாவது, ஆசிரியர் பயிற்சி பள்ளியில் சேர்ந்திருக்கலாம்னு நீதானே சொன்னே. சரி அதைவிடு. அப்பாவின் பேச்சைக்கேட்டு, இருக்கிற நிலபுலங்களையாவது ஒழுங்காக மராமத்துப் பார்த்திருந்திருக்கலாம். ஊர் சுத்திக்கொண்டிருந்தவன், எவளோ ஒருத்தியை வீட்டிற்கு அழைத்து வந்து பொண்டாட்டி என்றிருக்கிறான். அப்பாவால் பொறுக்கமுடிலை, அவர் குணமும் உனக்கு நல்லா தெரியும். போடாவெளியே என்று சொல்லியிருக்கிறார். அப்பா எடுத்த முடிவு என்வரைக்குஞ் சரி."

"பட்டாபி.. உன் தம்பி திடீர்னு விபத்துல போயிட்டான். ஆனால் நாமதான் அவனைச் சரியாப் புரிஞ்சுக்கிலையோன்னு நினைக்கிறேன். அடிப்படையிலேயே நம்மிடம் கோளாறுகள் இருக்கின்றன. நமக்குச் சரியென்பதை ஒரு வாழ்க்கைமுறை சட்டமாக வரித்துக்கொண்டு, முரண்படுகின்றவர்களைத் தண்டிக்க நினைக்கிறோம். நீ நம்ம ஊர்க்காரந்தான் இல்லைண்ணு சொல்ல முடியுமா? ஆனாலும் வெளிநாட்டவர்க்கு ஊழியம் செய்யணும்னு புறப்பட்டுப்போய்ட்ட. திடீரென்று எதையோ நினைத்துக்கொண்டு அந்திமக் காலத்துல இங்கே வந்திருக்கிற. இதெல்லாம் உன் வகையில் சரியென்று நினைக்கலாம். நான் அப்படி நினைக்கிலை."

"...."

"பெரிய படிப்பு, வெளிநாட்டுல உத்தியோகம், பணக்கார மனைவியென நீ அரிதாரம் பூசிக்கொண்டப்போ, எங்களுக்கெல்லாம் பிரம்மிப்பாகத்தானிருந்தது. ஆனால் அந்த பிரமிப்பினை காலமும் இடைவெளியும், தின்று செரித்துவிட்டன பட்டாபி. உன்னைத் தலையில்வச்சுக் கொண்டாடிய உன் தகப்பனாருக்கு உன்னால என்ன செய்ய முடிஞ்சது. மாதம் தவறாம பணம் அனுப்பின. நான் இல்லைன்னு சொல்லலை. ஆனா படுத்தபடுக்கையிலேயே அவர் மலஜலம் போனப்போ, முகம் சுளிக்காமல்

சிசுருட்ஷைகள் செய்தது உன்னோட பணமில்லை. அவர் வேண்டாமென்று ஒதுக்கிய உன்னோட தம்பிப் பெண்சாதி. உன் தம்பி செத்தப்போ இந்த ஊரே திரண்டிருந்தது. உனக்கு ஒண்ணு ஆச்சின்னா எத்தனை பேரு வருவாங்கண்ணு நெனக்கிற. நாற்பது வருஷத்துக்குப்பிறகு, இந்த மண் என்னுடையது, இந்த மனிதர்கள் என்னுடையவர்கள்னு உணர்வுபூர்வமா உரிமைகொண்டாடிவருவதற்கு சமூக நீதிகள் என்ன சொல்லும்ணு யோசிக்கிறேன்."

"ராகவா என்ன சொல்ற?"

"என் மனதிற் பட்டதைச் சொன்னேன். உண்மையைச் சொல்லப்போனா என்னால கூட உன் மனதிலிருக்கின்ற, பழைய நண்பனா பழகமுடியாது, பழசையெல்லாம் புதுப்பிக்க முடியாது. இந்த நாற்பது ஆண்டுகால இடைவெளியில், என்னென்னவோ நடந்து போச்சு. உறவோ நட்போ, இடைவெளி எல்லையைப் பொறுத்தே அதன் ஜீவிதத்தை நடத்துது. அன்றாடம் பழகுகிற மனிதர்களிடத்திலேயே இப்போதெல்லாம் நமக்கு அக்கறை வரமாடேங்குது. திடீரென்று படரவருகிற உறவுக்கொடிகளிடம் எப்படி? அறுத்துவிடத்தான் சொல்லும். மனைவி, பிள்ளைகளைவிட்டு இங்கேயே காலந்தள்ளப் போகிறேன் என்கின்ற நினைப்பெல்லாம் ரொம்பகாலத்துக்குத் தாக்குப்பிடிக்காது. நீங்காத நினைவுகளென்பது எப்போதாவது நினைத்து சந்தோஷப்படவும், பெருமூச்சிடவும் உதவும். யதார்த்தத்துக்கு உதவாதுண்ணு நினைக்கிறேன். நான் சொல்றேன்னு வருத்தப்படாதே. ஏதோ வந்தற்கு என்னோட இரண்டு நாட்கள், உன் தம்பிவீட்டுல இரண்டு நாட்கள்னு தங்கியிருந்து ஊரைபார்த்துட்டுக் கிளம்பு. இறுதிகாலத்துலயாவது ஓரிடமா இருக்கப் பழகிக்க."

ராகவன் மருமகள், இரண்டு தம்ளர்களில் காப்பி கொண்டுவந்து ஆளுக்கொன்றாகக் கொடுத்துவிட்டுத் தயங்கி நின்றாள்.

"ஏதாவது சொல்லணுமா?" ராகவன்.

"ஆமாம் மாமா. உங்கப் பிள்ளை அவர் தங்கச்சிக்கிணு போனவாரம் ஓட்டிம்போய் விட்டுட்டுவந்தக் கிடாரிக்கண்ணு, திரும்பவும் நம்மவீட்டுக்கு வந்துட்டுது, கொட்டாயிலே நிக்குறதைப் பாத்துட்டு வறேன்."

girdja@yahoo.fr
பதிவுகள் ஜூலை 2005; இதழ் 67

**44. ஒரு மா(நா)ட்டுப் பிரச்சினை - வ.ந.கிரிதரன் -**

ஞாயிற்றுக் கிழமையாதலால் 'றோட்டி'னில் அவ்வளவு சனநடமாட்டமில்லை. வாகன நெரிச்சலுமில்லை. பொன்னையாவின் 'கொண்டா அக்கோர்ட்' 'சென்றிகிளயர்' மேற்கில் ஆறுதலாக ஊர்ந்துகொண்டிருக்கின்றது. ஞாயிற்றுக் கிழமைகளில் அல்லது விடுமுறை நாட்களில் காரோடுவதென்றால் பொன்னையாவிற்கு மிகவும் பிடித்தமானதொன்று. எந்தவித 'டென்ஷ'னுமின்றிப் பின்னால் 'ஹோர்ன்' அடிப்பார்களேயென்ற கவலையேதுமின்றி ஆறுதலாக நகரை ரசித்துச் செல்லலாமல்லவா? இருந்தாலும் அண்மைக்காலமாகவே ஞாயிற்றுக்கிழமைகளிலும் 'ஹோர்ன்' அடிக்கத்தான் தொடங்கி விட்டார்கள். நகரம் பெருக்கத் தொடங்கி விட்டது. 'நகரம் பெருக்கப் பெருக்க சனங்களும் பொறுமையை இழக்கத் தொடங்கிட்டாங்கள் போலை' இவ்விதம் இத்தகைய சமயங்களில் பொன்னையா தனக்குத்தானே சொல்லிக் கொள்வான். 'நகரம் வளருகின்ற வேகத்திற்குச் சமனாக சனங்களின்ற வாழ்க்கைத்தரமும் உயரவேண்டும். இல்லாவிட்டால் பிரச்சினைதான்' என்றும் சில வேளைகளில் ஒருவித தீவிர பாவத்துடணும் அவன் சிந்தித்துக் கொள்வான்.

'ஓல்ட்வெஸ்டன்' றோட்டைக் கடந்து 'கீல் இண்டர்செக்ஷ'னையும் கடந்து கார் விரைந்தது. இடப்புறத்தில் 'கனடாபக்கர்ஸி'ன் 'ஸ்லோட்டர்' ஹவுஸ்' பெரியதொரு இடத்தைப் பிடித்துப் ப்டர்ந்திருந்தது. ஒவ்வொரு நாளும் நூற்றுக்கணக்கில் மாடுகளைத் துண்டு போடும் பெரியதொரு கசாப்புக்கூடம்.

பொன்னையா இயற்கையிலேயே சிறிது கருணை வாய்ந்தவன். ஏனைய உயிர்களின்மேல் அன்பு வைக்க நினைப்பவன். ஊரிலை இருக்கும் மட்டும் சுத்த சைவம்தான். இங்கு வந்ததும் கொஞ்சங்கொஞ்சமாக மாறி விட்டான். 'இங்கத்தைய கிளைமட்டிற்கு இதையும் சாப்பிடாட்டி மனுஷன் செத்துத் துலைக்க வேண்டியதுதான்'. திடீரென் ஊர்ந்து கொண்டிருந்த 'டிரபிக்' தடைப்பட்டது. பொன்னையா மணியைப் பார்த்தான். நேரம் பதினொன்றையும் தாண்டி விட்டிருந்தது. பஞ்சாப்காரன் பத்து மணிக்கே வரச்சொல்லியிருந்தான்.

பொன்னையாவிற்குத் தெரிந்த ஓரளவு நாணயமான கராஜ் அந்தப் பஞ்சாப்காரனின் கராஜ்தான். ஸ்டியரிங்கில் மெல்லியதொரு உதறல் நேற்றிலிருந்து. அதனைக் காட்டத்தான் பொன்னையா விரைந்து கொண்டிருந்தான். 'நேரங் கெட்ட நேரத்திலை இதென்ன டிரபிக் புளக்..' இவ்விதம் எண்ணியபடி டிரபிக் தடைப்பட்டதற்குக் காரணம் என்னவாகயிருக்குமென் எதிரே நோக்கினான்.

இதற்குள் றோட்டுக் கரையில் சனங்கள் விடுப்பு விண்ணானம் பார்க்கக் கூடத்தொடங்கிட்டுதுகள். இந்த விஷயத்தில் எல்லா மனுஷருமே ஒன்றுதான். எதிரே

அவன் பார்வையை மறைத்தபடி கனடா பக்கர்ஸிற்குச் சொந்தமான பெரிய 'ட்றக்'கொன்று நின்றதால் இவனால் ஒழுங்காகப் பார்க்க முடியவில்லை.

றோட்டுக் கரையில் விடுப்புப் பார்த்துக் கொண்டிருந்த சைனாக்காரனொருவனைப் பார்த்து "ஏ..மேன் ..வட்ஸ் த மாட்டார்? வட்ஸ் கோயிங் ஓன்..." பலமாகக் கத்தினான்.

அதற்கு அந்தச் சைனாக்காரன் தனக்குத் தெரிந்த ஆங்கிலத்தில் "பீவ்..எஸ்கேப்..ஸ்லோட்டர்.." என்றான்.

அருகிலிருந்த வெள்ளையனொருவன் சைனாக்காரனின் ஆங்கிலத்தைக் கேட்டுச் சிரித்தான். இவனுக்கும் சிரிப்பாகவிருந்தது. ஆனால் அந்த ஆங்கிலம் கூட விளங்கியது. மாடொன்று ஸ்லோட்டர் ஹவுஸ்ஸிலிருந்து தப்பி வந்து விட்டது என்பதைத்தான் அந்த சைனாக்காரன் அவ்விதம் கூறினான் என்பதும் விளங்கியது.

மரணத்திலிருந்து தப்பிவந்த அந்த இனந்தெரியாத மாட்டின் மேல் ஒருவித பரிதாபம் தோன்றியது. அநுதாபம் படர்ந்தது. காரை வெட்டி றோட்டுக்கரையோரம் நிறுத்தி விட்டு பொன்னையா காரை விட்டிறங்கி வேடிக்கை பார்க்கும் சனங்களில் ஒன்றானான். 'ஸ்ட்ரீட் கார்' செல்லும் இருப்புப் பாதையின் மேல் , சுற்றிவர வேடிக்கை பார்த்தபடி நிற்பவர்களைப்பார்த்து முறைத்தபடி அந்த மாடு நின்றது. அதன் கண்களில் மரண பயம் கவ்விக் கிடந்ததை இவன் உணர்ந்தான். அதைப் பார்க்கப் பாவமாயிருந்தது. பொன்னையாவிற்குக் கவலை தோன்றியது.

உருண்டு திரண்டு கொழுகொழுவென்று வாட்ட சாட்டமாக வளர்ந்திருந்தது. அருகில் சென்று பிடிக்க முனைந்த கனடா பக்கர்ஸ் ஊழியர்களைப் பார்த்து முறைத்தது. முட்டுவது போல் பாசங்கு செய்து முரண்டு பிடித்தது. அருகில் ஒருவரையும் வரவிடாமல் தடுத்து வைப்பதில் ஓரளவு வெற்றி கண்டிருந்தது.

எவ்வளவு நேரத்திற்குத்தான் அதனால், அந்த ஐந்தறிவு உயிரினால், தாக்குப் பிடிக்க முடியும்? 'மட மாடே! மனிதனுடன் போட்டி போட்டு உன்னால் வெல்ல முடியுமா என்ன?'

திடீரென பொன்னையாவிற்குச் சிந்தையில் ஒரு எண்ணம் எழுந்தது.

'இந்த மாட்டின் மனநிலை என்னவாயிருக்கும்?' அருகிலுள்ள ஸ்லோட்டர் ஹவுஸிற்குள் வெட்டுப் படுவதற்காகக் காத்து நிற்கும் ஏனைய மாடுகளின் ஞாபகமும் எழுந்தது. 'இவ்விதம் தப்பிவர இந்த மாடு எவ்வளவு கஷ்ட்டப் பட்டிருக்கும்?'

'கிடைத்த சுதந்திரத்தின் நிரந்தரமற்ற தன்மையைப் பாவம் இந்த மாட்டால்

உணரமுடியவில்லை..அதனால்தான் தன்னுயிரைக் காத்துக்கொள்ள கிடைத்த அற்ப சுதந்திரத்தைப் பாதுகாக்க இந்த மாடு வீராவேசத்துடன் முயல்கிறது..'

ஊரில் இருப்பவர்களின் நினைவுகளும் எழாமலில்லை...'இந்த மாட்டைப் போன்ற நிலையில் இருப்பவர்கள் எத்தனை பேர்?..அரைகுறையாகத் தப்பி மீண்டும் அகப்பட்டவர்கள்..தப்புவதற்கு முடியாமல் சமாதியாகிப் போனவர்கள்...'

மீண்டும் கவனம் மாட்டின் மேல் திரும்புகின்றது. இன்னமும் அது மூர்க்கத்துடன் தன்னை நெருங்குபவர்களை எதிர்த்து நிற்கின்றது. யாரும் நெருங்காத சமயங்களில் ஒருவித சோகம் கலந்த பாவத்துடன் அமைதியாக ஒருவித பயத்துடன் நிற்கிறது.

அதன் கண்களிருந்து மெல்ல மெல்ல இலேசாகக் கண்ணீர் வடிகிறது..எதை நினைத்து அழுகிறது? தன் பரிதாபகரமான நிலையை நினைத்தா?தன்னை சமாதியாக்குவதற்குக் கங்கணம் கட்டி நிற்கும் மனிதர்களால் தனக்கேற்பட்ட நிராதரவான நிலையை உணர்ந்தா? ஏன் அது அழுகிறது?

திடீரெனப் பொன்னையாவிற்கு ஒரு எண்ணம் தோன்றுகிறது. 'ஏன் இந்த மாட்டிற்குரிய விலையைக் குடுத்து, இதன் உயிரைக் காப்பாற்றினாலென்ன? ஊரிலையென்றாலும் வீட்டு வளவிலை போய்க் கட்டி வைக்கலாம்...இங்கு எங்கு போய்க் கட்டி வைப்பது..? அப்பார்ட்மென்றிலையா..?அப்படித்தான் காப்பாற்றினாலும் இந்த ஒரு மாட்டைக் காப்பாற்றுவதால் மட்டும் இதன் நிலையில் இருக்கின்ற ஏனைய மாடுகளின் பிரச்சினை தீர்ந்து விடுமா..?'

இதற்கிடையில் யாரோ மாடு டிரபிக்கிற்குத் தடையாயிருப்பதை பொலிஸிற்கு அறிவித்து விட்டார்கள் போலும்.. 'எமர்ஜன்ஸி பிளாஸிங் லைட்'டுடன் 'சைரன்' முழங்க பொலிஸ் காரொன்று விரைந்து வந்து இறங்கியது. இரு பொலிசார் இறங்கினார்கள். கயிறொன்றில் வளையம் செய்து சிறிது நேரம் முயற்சி செய்தார்கள். பலனில்லை. மாடு மிகவும் உறுதியாகவே எதிர்த்து நின்றது. இதற்கிடையில் விஷயத்தை மோப்பம் பிடித்துப் பத்திரிகைக்காரர்கள், தொலைக்காட்சிக்காரர்களென்று கமராக்களுடன் கூடி விட்டனர்.

மாடு தன்னுயிரைக் காப்பதற்கானதொரு போராட்டத்தில், ஜீவமரணப் போராட்டத்திலீடுபட்டிருக்கின்றது. இதை அடக்க, வேடிக்கை பார்க்க, படம் பிடிக்க ஒரு கூட்டம். ஒன்றிற்கும் செயல் பட முடியாத , இயலாத கூட்டம். தானும் அக்கூட்டத்தில் ஒருவன் என்பதை நினைக்கையில் பொன்னையாவிற்குத் தன்மேல் ஒருவித வெறுப்புக்கூடத் தோன்றியது.

தங்கள் முயற்சி சிறிது தோல்வியுற்றதைக்கண்ட பொலிஸார் தங்களிற்கு கூடிக் கதைத்தார்கள். இதற்குள் வீதியில் இரு திசைகளிலும் வாகனங்கள் பெருமளவில் முடங்கத் தொடங்கிவிட்டன.

தொலைவிலிருந்தவர்கள் போக்குவரத்து தடைப்பட்டதன் காரணத்தை அறியாத நிலையில் ஹோர்னகளை மாறிமாறி அடிக்கத் தொடங்கிவிட்டார்கள். நிலைமை கட்டுமீறுவதைப் பொலிஸார் உணர்ந்தார்கள்.

இறுதியில் மாட்டுப் பிரச்சினை ஒரு முடிவிற்கு வந்தது.

ஆறறிவுப் பிராணியின் முன்னால் சுதந்திர வேட்கை நசுக்கப் பட்ட நிலையில் 'ட்ரான்குலைசரா'ல் மயக்கப்பட்டு சாய்ந்த மாட்டைத் தூக்கிய கனடாப் பக்கர்ஸ் ஊழியர்கள் அதனை 'ஸ்லோட்டர் ஹவுஸி'ற்குள் கொண்டு சென்றார்கள்.

ஒருவழியாகப் போக்குவரத்துச் சீர்பட்டது. சனங்கள் ஒவ்வொருவராகக் கலையத் தொடங்கினார்கள்.

பஞ்சாப்காரன் திட்டப் போகின்றானென்ற நினைப்புடன் தன்காரில் பாய்ந்தேறினான் பொன்னையா. கூடவே அடிக்கடி மிருகங்களை வதைப்பதாகக்கூறி வழக்குப் போடும் 'ஹியுமேன் சொசைடி'யின் ஞாபகமும் வந்தது. சிரிப்பு வந்தது.

சிறிது போராடித் தோல்வியுற்ற மாட்டின் நிலைமை அநுதாபத்தை தந்தாலும் அதன் சுதந்திர வேட்கையும் அதற்காக அது போராடிய தீவிரமும் அதன் மேல் ஒருவித பக்தியை, பெருமிதத்தை ஏற்படுத்தியது. சொன்னால் நம்ப மாட்டீர்கள்! அன்றிலிருந்து பொன்னையா மீண்டும் முழுச் சைவமாகிவிட்டான்.

[இச்சிறுகதை ஸ்நேகா பதிப்பகத்தினரால் வெளியிடப்பட்ட 'அமெரிக்கா' தொகுப்பில் இடம் **பெற்றுள்ளது.** எஸ்.போ மற்றும் இந்திரா பார்த்தசாரதியால் தொகுக்கப்பட்டு வெளியிடப்பட்ட 'பனையும் பனியும்' சிறுகதைத் தொகுதியிலும் இடம் பெற்றுள்ளது.]

நன்றி: பதிவுகள் யூலை 2000; இதழ் 7. , திண்ணை, தாயகம் (கனடா)

**45. நீ எங்கிருந்து வருகிறாய்?' - வ.ந.கிரிதரன் -**

கி.பி.1964 ஆம் ஆண்டு தை மாதம் 14 ந்திகதி, தமிழ் மக்களின் முக்கிய திருநாளான தைப்பொங்கள் திருநாளன்று, அவன் இந்து சமுத்திரத்தின் முத்து , சொர்க்கம் என்றெல்லாம் வர்ணிக்கப்படுகின்ற, ஒரு காலத்தில் போர்த்துகேயர், ஒல்லாந்தர் மற்றும் ஆங்கிலேயர்களின் காலனியாக விளங்கிய, 'சிலோன் (Ceylon) என்றழைக்கப்பட்ட, தீவான இன்று ஸ்ரீலங்கா என்றழைக்கப்படுகின்ற இலங்கைத் தீவில் அவதரித்தான். அவன் அவதரித்தபொழுது அவனுக்கொன்றும் இவ்விதம் அவனது வாழ்க்கை பூமிப்பந்தின் பல்வேறு திக்குகளிலும் அலைக்கழியுமென்று தெரிந்திருக்கும் வாய்ப்பு இருந்ததில்லை. ஆனால் தீவின் தொடர்ச்சியான அரசியல் நிலைகள் அவனைப் புலம்பெயர வைத்து விட்டன. இன்று அவன் வட அமெரிக்காவின் முக்கியமானதொரு நாடான கனடாவின் குடிமகன். இது அவனைப்பற்றிய சுருக்கமான வரலாறு. என்புருக்குமொரு அதிகாலைப் பொழுது. அவன் வேலை செல்வதற்காக போக்குவரத்து வாகனத்தினை எதிர்பார்த்துக் காத்திருக்கின்றான். அருகிலொரு வெள்ளையின நடுத்தர வயதினன் அவனுக்குத் துணியாக. அவர்களிருவரையும்தவிர வேறு யாருமே அச்சமயத்தில் அங்கிருக்கவில்லை. நிலவிய மௌனத்தினைக் கலைத்தவனாக அந்த வெள்ளையினத்தவன் அவர்களிருவருக்கிமிடையிலான உரையாடலினைத் தொடங்கினான்:

"இன்று வழமைக்கு மாறாகக் குளிர் மிக அதிகம்!"

இங்கு ஒருவரையொருவர் சந்திக்கும்பொழுது அதிகமாகக் காலநிலையினைப் பற்றி அல்லது 'ஹாக்கி' அல்லது 'பேஸ் பால்' விளையாட்டு பற்றியுமே அதிகமாக உரையாடிக் கொள்வார்கள். வருடம் முழுவதும் மாறி மாறிக் காலநிலையினைக் குறை கூறல் பொதுவானதொரு விடயம்.

"உண்மைதான். ஆனாலும் எனக்கு இந்தக் குளிரைத் தாங்க முடியும். ஆனால்.. இந்த உறைபனி (Snow) இருக்கிறதே... அதனை மட்டும் தாங்கவே முடியாது.." என்று இவன் பதிலுக்கு உரையாடலினைத் தொடர்ந்தான். அதற்கு அந்த வெள்ளையினத்தவன் சிரித்தவனாகத் தொடர்ந்தான்:

"நீ வெப்பமான நாட்டினில் பிறந்தவன் அதுதான். ஆனால் எனக்கு இந்த உறைபனியில்லாவிட்டால் இருக்கவே முடியாது. இதற்குள்ளேயே பிறந்து, வளர்ந்து, விளையாடி வளர்ந்தவர்கள் நாம்... அது சரி..."

இவ்விதம் அவன் கூறிச் சிறிது நிறுத்திய பொழுது உடனடியாகவே இவனுக்கு அவன் அடுத்து என்ன கேள்வி கேட்கப் போகின்றானென்பது தெரிந்து விட்டது. இருபது

வருடங்களாக இந்த மண்ணில் இருக்கிறானல்லவா. இது கூடத் தெரியாமல் போய் விடுமாவென்ன?

"ஏ! நண்பனே! நீ அடுத்து என்ன கூறப் போகின்றாயென்பது எனக்குத் தெரிந்து விட்டது..." என்று இவன் கூறவும் அவனது முகத்தில் சிறிது வியப்பு படர்ந்தது.

"நீ என்ன சோதிடனா எதிர்காலத்தை எதிர்வு கூறுவதற்கு?"

"நான் சோதிடனல்லன். ஆனால் இந்த மண்ணுடனான எனது பிணைப்பும் சொந்தமும் எனக்கு இந்த விடயத்திலெதிர்வு கூறும் வல்லமையினைத் தந்து விட்டன. அது சரி.. 'நீ எங்கிருந்து வந்தாய்" (Where are you from?') என்பது தானே நீ கேட்க எண்ணிய வினா?"

அதற்கு அவன் சிரித்தபடியே பதிலிறுத்தான்: "நீ நன்றாகவே கனடாவினைப் பற்றிக் கற்றறிந்து விட்டாய்."

"உண்மைதான். ஏனெனில் நான் இந்த நாட்டுக் குடிமகனல்லவா!" என்றான். இந்தக் கேள்வியினை, 'நீ எங்கிருந்து வருகிறாய்?' என்னும் வினாவினை, அவன் இந்த மண்ணில் காலடியெடுத்து வைத்த நாட்களிலிருந்து எதிர்கொண்டு வருகின்றான். இளையவர், முதியவரென்ற பாகுபாடின்றி அவன் அனைவரிடமிருந்தும் அவ்வப்போது எதிர்கொண்டு வருகின்றான். அவன் வந்த பின் இந்த மண்ணில் அவதரித்தவர்களும் வளர்ந்து பெரிதாகி அவனிடம் இந்த வினாவினைத் தொடுக்கத் தொடங்கி விட்டார்கள். அண்மையில் அவனிடம் மட்டுமே கேள்விக் கணைகளைத் தொடுத்துக் கொண்டிருந்தவர்கள், இந்த மண்ணில் பிறந்த அவனது வளர்ந்து விட்ட அவனது குழந்தையிடமும் கேட்கத் தொடங்கி விட்டிருந்தார்கள். வந்த புதிதில் அவன் இந்தக் கேள்வியினை ஒருவித ஆர்வத்துடன் எதிர்நோக்கினான். தன்னைப் பற்றி அறிய இவர்களுக்கெல்லாம் எவ்வளவு ஆர்வமென்று மகிழ்வுற்றான். எனவே அப்பொழுதெல்லாம் அவனது இதற்கான பதிலும் விரிவானதாகவே இருக்கும். தன் நாட்டைப் பற்றி, மக்களைப் பற்றியெல்லாம் விரிவாகவே அலுக்காமல், சலிக்காமல் அவன் பதிலுறுப்பான். இப்பொழுதெல்லாம் அவனுக்கு அந்த ஆர்வமில்லை. ஆரம்பத்தில் ஆர்வமாககப் பதிலிறுத்தவன் அதன் பின் பதிலிறுப்பதலில் ஒரு மாற்றத்தினைக் கொண்டு வந்தான். வினாத்தொடுப்போருக்குப் பூகோள சாத்திரம் கற்பிக்கத் தொடங்கினான். இந்தக் கேள்வி எதிர்பட்டதுமே அவன் பின்வருமாறு தனது பதிலைக் கேள்வியொன்றுடன் ஆரம்பிப்பான்.

"இதற்கான பதிலை நீ அறிய வேண்டுமானால்.. அதற்கான எனது பதில். ஊகி என்பதுதான்.."

"ஓகே.. ஊகிப்பதா.. சரி..எங்கே முகத்தைக் காட்டு பார்ப்போம்.... " என்பார்கள். இவனும் முகத்தைக் காட்டுவான். உரையாடல் தொடரும்.

"பார்த்தால்... கயானா.. அல்லது கிழக்கிந்தியனைப் போல் தெரிகிறாய்... ஓகே. நீ இந்தியனா.." என்பார்கள்.

இவன் அதற்குக் கீழுள்ளவாறு பதிலிறுப்பான்:

"நீ நன்கு நெருங்கி விட்டாய்... ஆனால் நான் இந்தியனில்லை... ஆனால் எனது மண் இந்தியாவுக்கு மிக அண்மையிலுள்ளது..."

"ஓகே.... பாகிஸ்த்தானா.. "

"அதுவுமில்லை.... " என்பான்.

"பங்களாதேஷ்.." என்பார்கள். அவ்வளவுதான் அதற்குமேல் பெரும்பாலோருக்கு வேறு நாடுகளின் பெயர்களே தெரிவதில்லை. இவனும் விட மாட்டான்.

" சரி.. உனக்கு நான் சிறிது உதவி செய்கிறேன்.. தயாரா" என்பான்.

அவர்களும் அடுத்த கட்டத்திற்குத் தயாராவார்கள்.

"அது ஒரு அழகான தீவு.. ஆங்கிலேயர்களின் முக்கியமான காலனிகளிலொன்று."

" நீ என்னை நல்லாவே சோதிக்கிறாய்... இனி நான் பூகோள சாத்திரம் இதற்காகவே படிக்க வேண்டும்..." என்று கூறியபடியே மண்டையினைப் போட்டு உடைத்துக் கொள்வார்கள். இறுதியில் இவனும் மனமிரங்கிப் பதிலிறுத்து விடுவான். பின்னர் அதிலும் இவனொரு சிறியதொரு மாற்றத்தினைக் கொண்டு வந்தான். இறுதியாகப் பதிலிறுப்பதைத் தவிர்த்துப் பின்வருமாறு கூறுவான்: 'உனக்கு உண்மையிலேயே இதற்கான பதில் தேவையென்றால்.. வீடு சென்றதும் உலக வரைபடத்தை எடுத்துப் பார் புரிந்து கொள்வாய்... இந்தியாவின் தெற்குப் புறமாக உள்ள தீவு என்னவென்று அறிய முயற்சி செய். பதிலை நீயே கண்டு கொள்வாய்....'

"......."

"என்ன சிந்தனையிலாழ்ந்து விட்டாய்? என் கேள்விக்கென்ன பதில்?" என்றான் அவன்.

"நண்பனே! இதற்கான பதிலுனக்குத் தேவையென்றால்... என் கேள்விக்கு நீ பதில் தரவேண்டும்."

"உன் கேள்வியா? நீ தான் கேள்வியே கேட்கவில்லையே... கேட்காத கேள்விக்கு எவ்விதம் பதில் தரமுடியும்? "

"அவசரப்படாதே... இனிமேல் தான் கேட்கப் போகின்றேன்... நீ தயாரா?'

"நான் தயார். நீ தயாரென்றால் சரிதான்..."

"நீ எங்கிருந்து வருகின்றாய் நண்பனே! "

" நானா.... தொடராண்டோவின் கிழக்குப் பகுதியிலிருந்து வருகின்றேன்.."

"நான் அதைக் கேட்கவில்லை.."

"பின் எதைக் கேட்கிறாய்.."

"உன் மூலமென்ன.. நீ எங்கிருந்து வந்தாய்... இந்த மண்ணுக்கு..."

" நீயென்ன விளையாடுகின்றாயா... இது நான் பிறந்த மண்... "

"நான் அதைக் கேட்கவில்லை.... உன்னுடையா மூலமென்ன.. ஆதியில் உன் குடும்பத்தவர் எங்கிருந்து வந்தார்கள்... அது உனக்குத் தெரியும் தானே..."

"ஓ.. அதுவா... அவர்கள் ஒண்டாரியோ மாநிலத்தில் வடக்கிலுள்ள தண்டர்பேயிலிருந்து வந்தவர்கள்....."

"அதையும் நான் கேட்கவில்லை... அது சரியான பதிலுமல்ல.... " என்றான். கேள்வி கேட்டவன் முகத்தில் சிறிது பொறுமையின்மை, ஆத்திரம் பரவியதை இவன் அவதானித்தான். அது அவன் குரலிலும் தொனித்தது.

" நீ என்னுடன் விளையாடுகிறாய். நான் யார் தெரியுமா? இந்த மண்ணின் குடிமகன். என்னைப் பார்த்து நீ கேலி செய்கிறாய்.."

" நண்பனே... பொறு.. அவசரப்படாதே... நீ இன்னுமென் கேள்விக்குப் பதில் கூறவில்லை. நான் கேட்டதென்னவென்றால்.... உன் தாத்தா, பாட்டி அவர்கள் எங்கிருந்து வந்தார்கள்..."

அவன் கூறினான்: " இந்தக் கேள்வி மூலம் நீ என்னை அவமதிக்கின்றாய்.. கனடியக் குடிமகனொருவனை நீ அவமதிக்கின்றாய்.... அது உனக்குத் தெரிகிறதா?"

"எனக்கு நன்றாகவே தெரிகிறது. உனக்குத் தெரிந்தால் சரிதான்" இவ்விதம் கூறிவிட்டு அவர்களை நோக்கி வந்து கொண்டிருந்த போக்குவரத்து வண்டியில் ஏறுவதற்குத் தயாரானான் இவன்.

நன்றி: இசங்கமம் , பதிவுகள் டிசம்பர் 2004; இதழ் 60, திண்ணை

**46. தேவதரிசனம்! - வ.ந.கிரிதரன் -**

கண்ணுக்கெட்டியதூரம் வரையில் விரிந்து பரந்திருந்தது இரவு வான். அந்த இரவின் கருமையினைக் கிழித்துக் கொண்டு முழுநிலா. அடிவானில் தெரிந்த வட்டநிலா உண்மையில் நகரின் இன்னுமொரு தெருவிளக்காகத் தொலைவில் தெரிந்தது. அருகில் கட்டிலில் குழந்தையை அணைத்தபடி தூங்கிக் கிடந்த மனைவியின்மேல் ஒருகணம் பார்வை பதிந்து மீண்டது. மீண்டும் ஜன்னலினூடு விரிந்து கிடக்கும் இரவு வான் மீது கவனம் குவிந்தது. வழக்கம் போல் தத்துவ விசாரம். அர்த்தமேதுமுண்டா? வாழ்க்கையின் நிலையாமையினை உணர்ந்த சித்தார்த்தன் துறந்து சென்றான். துறத்தல்தான் கேள்விக்குரிய பதிலா? அப்பொழுதுதான் அந்த அதிசயம் என் கண் முன்னால் நிகழ்ந்தது. எனக்கு வியப்பை ஏற்படுத்தும் வகையில் என்னருகில் இன்னுமொரு மனித உருவமிருப்பதை அப்பொழுதுதான் அவதானித்தேன். வியப்புடன் ஒருவித திகிலும் கலந்ததொரு உணர்வு மேலிட வினவினேன்:

"யார் நீ? எப்பொழுது இங்கு வந்தாய்?"

"நான்?" இவ்விதம் கேட்டுவிட்டு ஒரு கணம் அந்த அந்நியன் சிரித்தான். தொடர்ந்தான்: "விபரிப்பதற்கு அதுவொன்றும் அவ்வளவு சுலபமல்ல நண்பனே! உனக்குப் பொறுமையிருந்தால் சிறிது விளக்குவேன்."

நான் அந்தப் புதியவனை மௌனமாக எதிர்நோக்கி நின்றேன். அவன் தொடர்ந்தான்.

"என் கால்களைப் பார்க்கிறாயா?" இவ்விதம் கூறியவன் தனது ஆடைகளைச் சிறிது உயர்த்தினான். எனக்கு ஆச்சரியமாகவிருந்தது. அங்கு பாதங்கள் நிலத்தைத் தொடாமல் அந்தரத்தில் மிதந்ததை அவதானித்ததின் வியப்பின் விளைவே எனது ஆச்சரியத்துக்குக் காரணம்.

வந்தவன் தொடர்ந்தான்" "இப்பொழுது என் கண்களைச் சிறிது நேரம் பார்." பார்த்தேன். ஏற்பட்ட வியப்பு தொடர்ந்தது. அங்கு அசைவற்ற கண்களைக் கண்டேன்.

வந்தவன் மேலும் தொடர்ந்தான்: "இப்பொழுது உண்மை புரிந்ததா?"

நான் சிறிது தடுமாறினேன்: "அப்படியென்றால் நீ.. நீங்கள் தேவர்களில் ஒருவரா?"

அவன்: "பரவாயில்லை! நீ தேவனென்றே கூறலாம். அப்படித்தான் உன்னவர்கள் என்னைக் கூறுகின்றார்கள். ஆனால் அவர்கள என்னை அறிந்தது பூரணமற்றது. கட்டுக் கதைகளால் இட்டு நிரப்பி விட்டார்கள். அறியாததனாலேற்பட்ட விளைவு. உனக்கு

உண்மை பகர்வேன். நீ அதிசயித்துப் போவாய். புரிந்து கொள்வாய். அதற்காகவே நான் இங்கு வந்துள்ளேன். மேலும் நீ காணும் இந்த உருவம் கூட எனது உண்மையான உருவமல்ல. நான் உன்னுலகுனுள் அடியெடுத்து வைக்கும் சமயங்களிலெல்லாம் இது போன்றுதான் வருவது வழக்கம். சில சமயங்களில் நான் ஆணாகவும் வருவேன். வேறு சில சமயங்களில் நான் பெண்ணாகவும் வருவேன். இன்னுமோர் சமயம் நான் ஆணும் பெண்ணும் கலந்த உருவுமெடுப்பேன்."

அவனே தொடர்ந்தான்: "உண்மையில் உன்னால் ஒருபோதுமே ஒரு நிலைக்குமேல் என்னை அறியவே முடியாது. இருக்கும் உன் அறிவின் துணையுடன் ஓரளவு புரிய மட்டும் தான் முடியும்."

"எனக்கு ஒன்றுமே புரியவில்லையே.." எனக்குச் சிறிது குழப்பமாகவிருந்தது.

"உனக்கு உண்மையில் புரிந்தால் மேலும் குழம்பி விடுவாய்."

"குழப்பமா?"

"ஆம்! கூறுகிறேன் கவனமாகக் கேள்."

சிறிது நேரம் இருவருக்குமிடையில் மௌனம் நிலவியது.

அவனே தொடர்ந்தான்: " நண்பனே! நீ வாழ்ந்து கொண்டிருக்கின்றாயே. இந்த வெளி. கழித்துக் கொண்டிருக்கின்றாயே இந்த நேரம். உண்மையில் இந்தப் பரிமாணங்களுக்குள் சிக்கிக் கிடக்கும் உன்னால் எவ்விதம் உண்மையினை அறிதல் சாத்தியம். உண்மையில் இன்னுமொன்றினையும் அறிந்தால் .."

"அறிந்தால்..."

"உண்மையில் இந்தப் பிரபஞ்சம். நீ காணும் இந்தப் பிரபஞ்சம். நான் என் ஓய்வு நேரத்தில் உருவாக்கியதொரு விளையாட்டு. உன்னைப் போல் தான் நானும் என் இருப்பினைப் பற்றிய விசாரங்களுக்குள் சிக்கிக் கிடந்த வேளை விடை புரியாமல் தவித்த போது ஏற்பட்ட வெறுப்பின் விளைவாக என் முழு அதிகாரத்தின் கீழுள்ளதொரு உலகினைப் படைக்க விரும்பினேன். அதன்பொருட்டு நான் உருவாக்கிய விளையாட்டே நீ காணும் இந்தப் பூவுலகு; அண்டசாரசரங்கள்..எல்லாம். புரிந்ததா?"

"புரியவில்லையே நண்பனே?"

"நீ பரிமாணங்களுக்குள் சிக்கிக் கிடக்கின்றாய். அவற்றைக் கடந்தவன் நான். உனது பரிமாணங்களுக்குள் நீ கணினி விளையாட்டுக்களை உருவாக்கி விளையாடுவதைப் போல் நான் என் பரிமாணங்களுக்குள்ளிருந்து உருவாக்கிய விளையாட்டுத்தான் நீ வாழும், நீ காணும், நீ உணருமிந்த உலகு. உன்னவரைப் பொறுத்த அளவில் நான் தேவன். கடவுள். எது எப்படியோ... உன் பரிமாணங்களை மீறியவன் நான். ஆயின் எனக்கும் சில எல்லைகள் உண்டு. உன்னைப் போல் தான் என் பரிமாணங்களுக்கும் அப்பால் என்ன இருக்கிறது என்பதைப் பொறுத்த வரையில் எனக்கும் ஒன்றுமே தெரியாது. அதற்காகவே என் இருப்பும் கழிந்து கொண்டிருக்கிறது. உன்னைப் போன்ற முப்பரிமாணப் பிரபஞ்சத்தின் எந்த மூலைக்குள்ளும் என்னால் உடனடியாக உன்னையொத்த வடிவினை எடுத்து மிக இலகுவாக உட்சென்று பங்கு பற்ற முடியும். உண்மையில் உன்னுடன் இங்கு உரையாடிக் கொண்டிருப்பபதைப் போன்றதொரு தோற்றமே ஒருவித ஏமாற்றுத்தான். நான் உருவாக்கிய இந்த விளையாட்டுக்குள் செல்வதற்காக நான் உருவாக்கியதொரு பொய்யான தோற்றந்தான் இது. உண்மையில் நான் உன்னைப் பொறுத்தவரையில் உருவமற்றவன் எல்லா உருவங்களையும் எந்நேரத்திலும் எடுக்கக் கூடியவன். பரிமாணங்களை மீறியவன். சகலவிதமான பரிமாணங்களுக்குள்ளும் புகுந்து விளையாடக் கூடியவன். இருந்தும் நானும் ஒரு குறிப்பிட்ட பரிமாணங்களை எல்லையாகக் கொண்டவன் தான். உனக்கும் எனக்குமிடையிலான வித்தியாசம்... நீ என்னை விடக் குறைந்த அளவிலான பரிமாணங்களுக்குள் வாழுமோர் ஐந்து அவ்வளவே. வெளியையும் காலத்தையும் உன்னால் என்றுமே மீற முடியாது. ஆனால் அதற்காக உனது பரிமாணங்களுக்கப்பாலெதுவுமில்லையென்று ஆகி விடமாட்டாது. நீ நான் உருவாக்கியதொரு விளையாட்டின் அங்கம் தான். ஆயினும் உன்னைப் பொறுத்த வரையில் இயலுமானவரையில் இருக்கும் சூழல்களுக்கேற்றபடி நீ ஓரளவுக்காகவாது சுயமாக இயங்கும்படி நான் உன்னை, இந்த உலகை, இங்குள்ள அனைத்து உயிர்களையுமே உருவாக்கியுள்ளேன். இந்த எனது விளையாட்டில் காணப்படும் அனைத்துமே சூழலுக்கு ஈடு கொடுத்து தங்களைத் தாங்களே அறிதற்கு, புடமிடுதற்கு முடியும். அதற்கு ஏற்றவகையில் நான் எழுதிய , வடிவமைத்த விளையாட்டு இருப்பதை நீ இங்கு காணும் உயிர்கள் அனைத்தினதும் அடிபப்டை இயல்புகளிலிருந்து இலேசாகப் புரிந்து கொள்ள முடியும்.. ஆனால் முற்றாக அறிந்து கொள்ளல் சாத்தியமற்றது. அந்த வகையில் நீ உருவாக்கும் கம்யூட்டர் வீடியோ விளையாட்டுக்களை விட எனது இந்த விளையாட்டு அதி அறிவியல் நுட்பம் கொண்டது. இந்தப் பிரபஞ்சத்தில் நான் எழுதிய விளையாட்டில் பல இன்னும் தீர்க்கப்படாத குறைகள் உள்ளன. நீ எழுதும் கணினி ஆணைத்தொடர்களில் காணப்படும் வழுக்கள் போன்றவைதான் அவையும். குறைகளற்ற 'புறோகிறாம்'கள் ஏதேனும் உண்டா. ஆனால் உன்னைப் போல் நான் எனது இந்த விளையாட்டின் பிரச்சினைகளில் தலையிட்டுத் திருத்துவதில்லை. உன்னைப் போல் புதிய புதிய பதிப்புக்களை வெளியிடுவதில்லை. எனது படைப்புக்களான உங்களிடமே அதற்குரிய ஆற்றலையும் கூடவே சேர்த்தே படைத்துள்ளேன். நீ சுயமாக இயங்கும் இயந்திர மனிதர்களை, 'ரோபோட்'டுக்களைப் படைப்பதை ஒத்ததிது. உனது அறியும் ஆற்றல் எனது முக்கியமான

அம்சங்களிலொன்று. அதனை நீ எவ்விதம் பாவிக்கின்றாயென்பதில் தான் உனது பிரபஞ்சத்தில் காணப்படும் சகல பிரச்சினைகளுக்கும் உரிய வழிவகைகள் உள்ளன."

இவ்விதம் கூறிய எனது படைப்புக்குக் காரணகர்த்தா மேலும் கூறினான்: "இப்பொழுது சிறிது நேரம் என்னுடன் பயணிக்க உனக்கு விருப்பமா? விரும்பினால் இன்னும் சிறிது உண்மையினை உனக்குக் காட்ட என்னால் முடியும்."

எனக்கு இடையிலொரு சந்தேகம் எழுந்தது. கேட்டேன்: "உன் படைப்பிலொரு அற்பப் புழுவான என்மேல் ஏனிவ்விதம் பரிவு காட்டுகின்றாய்? ஆர்வம் கொள்கிறாய்?"

அதற்கு அவன் சிரித்தான்: "யார் சொன்னது உன்மேல் மட்டும் தான் இவ்விதம் ஆர்வம் காட்டுகின்றேனென்று. இது போல் உன்னவர் பலபேரிடம் அவ்வப்போது நான் இரக்கம் கொண்டு காட்சியளிப்பதுண்டு. அறிதலுக்கு உதவுவதுண்டு. பொதுவாக என் அறிவின் குழந்தைகளான உங்களில் எவரெவர் சிந்திக்கும் ஆற்றலைப் பாவித்துச் சூழலை மீறிச் சிந்திக்க விளைகின்றார்களோ அவர்களிடத்தில் எனக்கு மிகுந்த பாசம் உண்டாவதை என்னால் ஒருபோதுமே தவிர்க்க முடிவதில்லை. அவர்களுக்கு உதவுவது எனக்கு மிகவும் உவப்பானதொரு பொழுதுபோக்கு. எனது படைப்புகளின் திறமை கண்டு நானே அத்தகைய சமயங்களில் பிரமிப்பதுண்டு. நான் உருவாக்கிய விளையாட்டின் அடிப்படையினைப் புரிந்து கொள்ள நீங்கள் முனைவது எனக்கு என் விளையாட்டின் சிறப்பினை எடுத்துக் கூறும் முக்கியமான செயல்களிலொன்று. நன்கு இயங்கும் உனது 'புறோகிறாம்' கண்டு நீ வியப்பது, களிப்பது போன்றது தான் இதுவும். பயணத்தைத் தொடங்குவோமா?"

ஆமெனத் தலையசைத்தேன்.

என் கடவுள் , தேவன் (எப்படி வேண்டுமானலும் நீங்கள் கூறிக் கொள்ளுங்கள். எனக்கு ஆட்சேபணையேதுமில்லை) தொடர்ந்தான்: "இப்பொழுது நான் உன்னை என் பரிமாணங்களுக்குள் காவிச் செல்லப் போகின்றேன். உன் நகரின் முக்கியமான, பலத்த காவலுள்ள சிறைச்சாலையொன்றிற்குச் செல்லப் போகின்றேன். மிகவும் பயங்கரமான காவலுள்ள அச்சிறைச்சாலையில் பல பயங்கரச் செயல்களைப் புரிந்த உன்னவர்களை உன்னவர்கள் அடைத்து வைத்திருக்கின்றார்கள்."

இவ்விதம் அவன் கூறியதைத் தொடர்ந்து என்னைக் கடவுள் தன் பரிமாணத்தினுள் எடுத்துச் சென்றான். அதே கணத்திலேயே நானும் அவனும் என் நகரின் முக்கியமான அந்தச் சிறைச்சாலையினுள் நின்றோம். சிறைக்கைதிகளுக்கு மத்தியில் நாம் நின்றோம். ஆனால் அவர்களில் யாருமே எம்மைப் பொருட்படுத்தியதாகத் தெரியவில்லை. இரவானதால் எல்லோரும் துயில்வதற்குத் தயாராகிக் கொண்டிருந்தார்கள்.

"என்ன வியப்பிது. யாருமே எம்மைப் பொருட்படுத்தியதாகத் தெரியவில்லையே" என்றேன்.

அதற்கு அந்தக் காரணகர்த்தா கூறினான்: "அதிலென்ன ஆச்சரியம். நாமிருவரும் இன்னும் எனது பரிமாணத்தினுள் தான் இருக்கின்றோம். அதுதான் காரணம். அவர்களால் தான் அவர்களது பரிமாணங்களை மீறமுடியாதே. நான் இப்பொழுது அவர்களில் சிலரை, உன்னவர்களைப் பொறுத்தவரையில் மிகவும் ஆபத்தானவர்களாகக் கருதப்படும் சிலரை எனது பரிமாணத்தினுள் காவி வரப் போகின்றேன். "

அதனைத் தொடர்ந்து சிலரை அவன் மிக இலகுவாகவே தனது உலகுனுள் எடுத்து வந்தான். சிறைச்சாலையினுள் ஒருவித பதட்டமான சூழல் உருவாகியதை அவதானிக்க முடிந்தது.

கடவுள் கூறினான்: "அவர்கள் தமது உலகிலிருந்து மாயமாக மறைந்த இவர்களைத் தேடுகின்றார்கள். அதுதான் பதட்டத்தின் காரணம்"

"என்ன வழக்கம் போல் கனவுதானா?"

குரல் கேட்கவே திரும்பினேன். எதிரில் துணைவி மரகதவல்லி. எனக்குச் சிறிது குழப்பமாகவிருந்தது. கனவா...இதுவரையில் நிகழ்ந்ததெல்லாம் வெறும் கனவா. இவ்வளவு நேரமும் என்னுடன் இவ்வளவு அறிவுபூர்வமாக உரையாடிக் கொண்டிருந்த கடவுள் கனவுத்தோற்றம் மட்டுமே தானா? இருப்பின் இரகசியத்தினை ஓரளவு அறிந்து விட்டேனென்று களிப்படைந்ததெல்லாம் வெறும் கற்பனை மட்டுமே தானா? இது தான் இவ்விதமென்றால் மறுநாட் காலையோ எனக்கு இன்னும் வியப்பளிப்பதாக புலர்ந்தது. முக்கிய தினசரியொன்றின் அன்றைய காலைப் பதிப்பின் முக்கிய செய்தி பின்வருமாறு தொடங்கியிருந்தது:"சிறைச்சாலையிலிருந்து கைதிகள் மறைவு! மறைவின் காரணம் புரியாத சிறைக் கைதிகள், காவலர்கள் திகைப்பு! பார்த்துக் கொண்டிருக்கும் பொழுதே வெளியில் மறைந்தனர் கைதிகள் சிலர். கூடு விட்டுக் கூடு பாய்ந்தனரா? விடை தெரியாத புதிர்." அப்படியானால்....?

ngiri2704@rogers.com

பதிவுகள் நவம்பர் 2004; இதழ் 59, திண்ணை

## 47. 'ஆத்மாவின் புத்துயிர்ப்பு!' - வ.ந.கிரிதரன் -

- கி.பி.3025 இல் ஒருநாள்.

- பொழுது மெல்லப் புலர்ந்தது சேவல்களினது பறவைகளினதோ ஒலிகளேதுமில்லாமலே.

- கி.பி. 2800 அளவிலேயே இந்த நீலவண்ணக் கோளிலிருந்து உயிரினங்கள் அனைத்தும் ,றறிவு போட்ட குதியாட்டத்தில், மனிதனைத் தவிர அழிந்தொழிந்து போய் விட்டன.

- ஒரு சில விருட்ச வகைகளே எஞ்சியிருந்தன.

- மனிதர்கள் மாத்திரை உணவு வகைகள் பாவிக்கத்தொடங்கி மூன்று நூற்றாண்டுகளைத் தாண்டி விட்டிருந்தன.

- இதற்கிடையில் ஏனைய உயிரினங்களுக்கு ஏற்பட்ட நிலை மனித இனத்துக்கும் ஏற்படும் காலம் வெகு அண்மையில், ஒரு நூற்றாண்டு காலத்துக்குள், அண்மித்து விட்டது. மனிதர்கள்

ஆயிரம் வருடங்களுக்கு முன்னிருந்த பூமியின் நிலையினையொத்த கோளமொன்றினைக் காண்பதற்கான தேடுதலை விரைவுபடுத்த வேண்டிய தேவையிலிருந்தார்கள்.

- கதிரவன் 'சிவப்பு அரக்கன்' நிலைக்கு வருவதற்கு இன்னும் பல பில்லியன் வருடங்களிருந்தன. அதுமட்டும் மனித இனம் இங்கிருக்க முடியாத நிலையினை மானுட இனம் ஏற்படுத்தி விட்டது.

- எவ்வளவு மாசுபடுத்த முடியுமோ அவ்வளவுக்கு மாசுபடுத்தப்பட்டு விட்டது இந்த அழகிய நீல வண்ணக் கோள்.

- இத்தகையதொரு சூழலில் விஞ்ஞானிகள் அண்டவெளிப்பயணங்களின் வேகத்தினைத் துரிதப்படுத்தும் ஆய்வில் ஈடுபட்டிருந்தார்கள்.

- அதில் முன்னணி வகித்த உலகப் புகழ்பெற்ற மருத்துவ விஞ்ஞானி ஆத்மாநாமின் மனம் அன்று மிகுந்த மகிழ்சியுடனும், ஒரு வித பரபரப்புடனுமிருந்ததற்குக் காரணமிருந்தது.

- அவர் ஒரு முக்கிய ஆய்வில் ஈடுபட்டிருந்தார்.

- சுமார் ஆயிரம் வருடங்களுக்கு முன்னர் ஆஸ்திரேலியர்களால் ஆரம்பிக்கப்பட்டிருந்த ஆய்வொன்றின் தொடர்சியினைப் பூரணப்படுத்துமொரு நாளை அண்மிக்கும் வகையிலானது அவரது ஆய்வு.

- குறைந்தது ஒளி வேகத்திலாவது செல்லும் வகையில் பிரயாணத்தின் வேகமிருக்க வேண்டும்? கி.பி.2003 இல் ஆஸ்திரேலியர்கள் இதற்கான முதல் வித்தினை விதைத்திருந்தார்கள். அதற்கான பலனை அறுவடை செய்யுமொரு காலம் ஆயிரம் வருடங்களுக்குப் பின்னர் ஆத்மாநாமின் முயற்சியினால் அண்மித்துக் கொண்டிருந்தது. அன்று ஆஸ்திரேலிய விஞ்ஞானிகள் லேசர் கதிர்களை அழித்து மீண்டும் சிறிது தொலைவில் உருவாக்கிச் சாதனையொன்றினைப் புரிந்திருந்தார்கள். 'தொலைகாவு'தலுக்கான (Teleporting) சாத்தியத்தினை அவர்களின் ஆய்வு அன்று தொடக்கி வைத்திருந்தது. அதன் தொடர்ச்சியான ஆய்வுகளின் விளைவாக இன்று ஆத்மாநாம் ஒரு முழு மனிதனையே 'தொலைகாவு'தல் மூலம் பிரயாணிக்கும் வகையிலானதொரு பொறியினை உருவாக்கி, அதனை வெற்றிகரமாகப் பரீட்சித்துப்பார்க்கவிருக்கின்றார். இதற்காக நகரின் இரு எதிரெதிர் திக்குகளில் சுமார் 10 கிலோ மீற்றர் தொலைவில் அமைந்திருந்த இரு ஆய்வு கூடங்களிலுள்ள இரு 'தொலைகாவும்' அறைகள் பாவிக்கப்படவுள்ளன. தொலைகாவும் அறை இலக்கம் 1 இலிருந்து தொலைகாவும் அறை இலக்கம் 2 ற்கு முழு மனிதரொருவனைக் கடத்துவதற்கான சோதனை அன்று நடக்கவிருந்தது. ஒரு மனிதனின் உடலிலுள்ள, ட்ரில்லியன்கள் கணக்கிலுள்ள மூலக்கூறுகளையெல்லாம் அழித்து மீண்டும் உருவாக்குவதென்றால் அவ்வளவு இலேசான காரியங்களிலொன்றாயென்ன!

- மானுட வரலாற்றில் மிகப்பெரியதொரு பாய்ச்சலை நிகழ்த்திக் காட்டவுள்ளார் ஆத்மாநாம். விஞ்ஞானப் புனைகதைகளில், விஞ்ஞானத் திரைப்படங்களில் மட்டுமே நிகழ்ந்து வந்திருந்ததொரு விடயம், இதுவரையில் கற்பனையில் மட்டுமே சாத்தியமாகியிருந்ததொடு விடயம், இன்று அவரது முயற்சியினால் நடைமுறைச் சாத்தியமாகும் தருணம் ஏற்பட்டுள்ளது. இந்தப்

பரிசோதனை மட்டும் வெற்றிகரமாக அமைந்து விட்டால்..... அதனை எண்ணவே ஆத்மாநாமின் சிந்தையெல்லாம் களியால் பொங்கிக் குதித்தது. சரித்திரத்தில், அவரது சாதனை பொறிக்கப்பட்டுவிடும். சாதாரண சாதனையா என்ன? இந்தப் பரிசோதனை மட்டும் வெற்றியடைந்து விட்டால்.... மனிதர் ஒரு சில வருடங்களிலேயே அயலிலுள்ள சூரியமண்டலத்திலுள்ள கோள்களுக்கு பயணிப்பதற்கான சாத்தியம் ஏற்பட்டு¢விடும்.

- அண்டத்தை அளப்பதற்குரிய வல்லமையினை அவரது ஆய்வின் வெற்றி மனிதருக்கு வழங்கிவிடும்.

- எத்துணை மகத்தான வெற்றியாக அது அமைந்து விடும்.

"ஆத்மா! உன்னைத்தான் பெரிதும் நம்பியிருக்கிறேன். என்னை இந்தக் கடைசித் தருணத்தில் ஏமாற்றி விடாதேயடா?" இவ்விதம் ஆத்மாநாம் ஒருமுறை தனக்குத்தானே கூறிக்கொண்டார்.

அவர் உண்மையில் தனக்குத்தானே கூறிக்கொண்டாலும் அவர் ஆத்மாவென்று விளித்தது அவரையல்ல. அவரது பரிசோதனைக்குத் தன்னை உட்படுத்திக்கொள்ளத் துணிச்சலுடன் வந்ததொரு ஆத்மாவான 'ஆத்மா'வைத்தான். இளைஞனான ஆத்மாவைத்தான்.

ஆத்மாநாம் பத்திரிகையில் சுகாதார அமைச்சினூடாக வெளியிட்டிருந்த விளம்பரத்தைப் பார்த்து முன்வந்திருந்த இளைஞர்களில் அவர் தேர்ந்தெடுத்திருந்தது இந்த ஆத்மாவைத்தான். ஆத்மா உண்மையிலேயேயொரு இயற்பியல்-வானியற் பட்டதாரி. அத்துடன் அத்துறையில் வெகுஜனப்பத்திரிகைகளில் ஆய்வுக்கட்டுரைகள் எழுதிவரும் பிரபல்யமான எழுத்தாளன். ஆத்மாநாமின் ஆய்வின் முக்கியத்துவத்தை மனதார விளங்கி, உணர்ந்து, தனது காலகட்டத்துக்கான பங்களிப்பு என அதனைப் புரிந்து முன்வந்திருந்தான். இந்தப் பரிசோதனையில் தன்னை இழப்பதற்குமவன் துணிந்து வந்திருந்தான்.

சரியாக காலை மணி பத்துக்குப் பரிசோதனை ஆரம்பிப்பதாகவிருந்தது. ஆத்மாநாம் தனது கைக்கடிகாரத்தைப் பார்த்தார். சரியாக மணி ஒன்பது. ஆத்மாநாமை கூட்டிச் செல்வதற்காக ஆய்வு கூடத்திலிருந்து பணியாட்களிருவர் வாகனத்தில் வந்திருந்தார்கள். தொலைகாவும் அறை இலக்கம் 1இல் ஏற்கனவே ஆத்மாவுட்பட வெகுசன ஊடகவியலாளர்கள் பலரும் வந்து காத்திருந்தனர். முதல் நாளிரவிலிருந்தே அவர்களில் பலர் வந்து கூடாரம் அடித்து விட்டிருந்தார்கள். ஆத்மாநாம் ஆய்வுகூடத்தை அடைந்தபொழுது மணி சரியாக ஒன்பது மணி பதினைந்து நிமிடங்கள். அவரை எதிர்பார்த்து ஆத்மா காத்திருந்தான். ஏற்கனவே அவன் உடல்நிலையெல்லாம் சக வைத்தியர்களால் பரிசோதனைகுட்படுத்தப்பட்டு, பரிசோதனைக்கு அவன் தகுதியானவனென அவர்களால் அத்தாட்சிப்படுத்தப்பட்டிருந்தான்.

ஆத்மாநாம் ஆத்மாவைப்பார்த்துக் கேட்டார்: "என்ன திரு.ஆத்மா! பரிசோதனைக்குத் தயாரா?"

ஆத்மா அதற்கு இவ்விதம் பதிலிறுத்தான்: "நான் தயார். நீங்கள் தயாரா?"

இவ்விதம் அவன் கூறியதும், அவனது நகைச்சுவையுணர்வு கண்டு அனைவரும் வியந்து சிரித்தார்கள். ஆத்மா எவ்வளவு நகைச்சுவையுணர்வு மிக்கவனாகவிருக்கிறானென்று

மூக்கில் விரல் வைத்து அவனை வாழ்த்தினார்கள்.

ஆத்மாநாம் கேட்டார்: "திரு. ஆத்மா. நீங்கள் வெகுசன ஊடகவியலாளர்களுக்கு ஏதாவது கூற விளைகின்றீர்களா?"

அதற்கு ஆத்மா கூறினான்: "அவர்களேதாவது கேட்கும் பட்சத்தில்"

ஆத்மாநாம் ஊடகவியலாளர்களைப் பார்த்துப் பின்வருமாறு கேட்டார்: "நீங்கள் திரு.ஆத்மாவிடம் ஏதாவது கேட்கவிரும்புகின்றீர்களா""

அதற்குப் பலர் தங்களது கைகளை உயர்த்தினார்கள்.

ஆத்மாநாம் கூறினார்:" எல்லாருக்கும் பதிலிறுப்பது சாத்தியமில்லை. இருவருக்கு மட்டுமே திரு.ஆத்மா பதிலிறுப்பார்"

ஊடகவியலாளர் ஒருவர் எல்லாரையும் முந்திக்கொண்டு பின்வருமாறு கேட்டார்: "திரு.ஆத்மா! உங்களுக்கு இத்தகையதொரு விஷப்பரீட்சையில் ஈடுபடும் எண்ணம் எவ்விதமேற்பட்டது?"

இந்த ஆயிரம் வருடங்களில் கேள்வி கேட்பதில் மட்டும் இன்னும் இந்த ஊடகவியலாளர்கள் இன்னும் கொஞ்சம் கூடப் பரிணாம வளர்சியின்றியிருந்தார்கள் என்பதற்கு சான்றானதொரு வினா.

அதற்கு ஆத்மா சிறிது யோசித்துவிட்டுக் கீழ்வருமாறு பதிலுரைத்தான்:"இதனை விஷப்பரீட்சையென்று சொன்ன முட்டாள் யார்? இது என் வரலாற்றுக் கடமை. ஆயிரம் வருடங்கள் வாழும் வினாடியையொத்த எம் வாழ்வின் பயனாக இதனை நான் கருதுகின்றேன். சிறுவயதிலிருந்தே அண்டவெளிப்பயணம் பற்றிக் கனவு கண்டு வளர்ந்தவன் நான். அதுதான் முக்கிய காரணம்." [ கி.பி.3000 இல் மனிதர்கள் ஆயிரம் வருடங்கள் வரை வாழும் நிலையிலிருந்தார்கள். பிறக்கும் ஒவ்வொருவரும் , இருதயம் தொடக்கம், மூளை தவிர, சகல உடலின் அங்கங்களையும் அடிக்கடி மாற்றுவதன் மூலம் சுமார் ஆயிரம் வருடங்கள் வாழக்கூடியதொரு நிலை நிலவிய காலகட்டம்.]

எல்லோரும் ஆத்மாவின் தைரியத்தை மெச்சினார்கள். இன்னுமொரு ஊடகவியலாளர் கூறினார்: "திரு.ஆத்மா! உங்கள் தைரியத்துக்கு நாம் தலை வணங்குகின்றோம். மானுட குலத்தின் நீட்சிக்குத் தங்கள் பங்களிப்பு வரலாற்றில் பொறிக்கப்படும். உங்கள் பயணம் வெற்றியடைய எமது வாழ்த்துக்கள்".

அவரைத் தொடர்ந்து அனவரும் வாழ்த்தி வழியனுப்ப, ஆத்மா தொலைகாவும் அறை இலக்கம் 1ற்குள், விஞ்ஞானி ஆத்மாநாம், மற்றும் அவரது உதவியாளர்கள் சகிதம் நுழைந்தான். வெளியில் ஏனைய மருத்துவர்கள், ஊடகவியலாளர்கள், அரசியல்வாதிகளெனப் பலர் பார்வையாளர் கூடத்தில் காத்திருந்தார்கள். பரிசோதனை தொடங்க இன்னும் சில நிமிடங்களே இருந்தன. ஆத்மாநாம் தொலைகாவும் அறை இலக்கம் 2இலிருந்த சக மருத்துவர்களுடன் கதைத்து அங்கு எல்லாம் தயார்தான் என்பதை உறுதிப்படுத்திக் கொண்டார். அங்கும் ஊடகவியலாளர்கள், அரசியல்வாதிகளெனப் பலர் மீள உயிர்த்தெழும் ஆத்மாவை வரவேற்பதற்காகக் காத்திருந்தார்கள்.

ஆத்மாநாம் இறுதியாக ஆத்மாவை பார்த்துக் கூறினார்: "திரு.ஆத்மா! உங்களது இந்தப் பங்களிப்புக்காகத் தலை வணங்குகின்றேன் மானுட இனம் சார்பில். உங்களைப் போன்ற சூழலை மீறிய துணிச்சற்காரர்களால்தான் மானுட இனம் இத்துணைதூரத்துக்கு வளர்ச்சி கண்டுள்ளது. வரலாற்றில் நிலைத்து நின்று விட்டீர்கள் இந்த ஒரு செய்கையின் மூலம். திரு.ஆத்மா உங்களுக்காகத் தலை வணங்குகின்றேன்."

அதற்கு ஆத்மா கூறியவைதான் கீழேயுள்ளவை: "நீங்கள் மிகவும் புகழ்கின்றீர்கள். நான் செய்யும் இந்தச் சாதாரண காரியத்துக்காக என் மனித இனம் பெரும் பயனடையுமானால் அதுவே எனக்குப் பெரு மகிழ்ச்சி".

இதன் பின்னர் ஆத்மா தொலைகாவும் அறை இலக்கம் 1இனுள் விஞ்ஞானி ஆத்மாநாமுடன் நுழைந்தான். அவனைச் சரியாக இருக்கையில் அமர்த்தி விட்டுச் செய்யவேண்டியவை பற்றிய

அறிவுறுத்தல்களை மீண்டுமொருமுறை ஞாபகப்படுத்திவிட்டு ஆத்மாநாம் வெளியில் வந்தார். வரும்பொழுது அவர் பின்வருமாறு தமக்குள் எண்ணினார்: 'எத்துணை துணிச்சலான பையன். ஆத்மா நீ வாழ்க!'

சரியாகப் பத்துமணிக்கு விஞ்ஞானி ஆத்மாநாம் தொலைகாவும் அறை இலக்கம் 1இனை இயக்கி வைத்தார்.

அதே கணத்தில் தொலைகாவும் அறை இலக்கம் 2இல் காத்திருந்த விஞ்ஞானிகள் அறைக் கதவினைத் திறந்தார்கள்.

ஒளிவேகத்தில் தொலைகாவுதல் நடப்பதால் ஆத்மாவின் புத்துயிர்ப்பு அதே சமயத்தில் நிகழவேண்டும்.

அறையினைத் திறந்த மருத்துவ விஞ்ஞானிகளை வெற்றிகரமாகத்

தொலைகாவப்பட்டிருந்த ஆத்மாவின் ஆத்மாவற்ற ஸ்தூல உடல் வரவேற்றது.

பதிவுகள்ப் பெப்ருவரி 2005; இதழ் 62

**48. தப்பிப் பிழைத்தல்! - வ.ந.கிரிதரன் -**

அந்தக் கழிவுகள், குப்பைகளைச் சேகரிப்பதற்கான தாங்கி அல்லது பெட்டி நாங்கள் குடியிருந்த தொடர்மாடிக் கட்டடத்திற்கருகாக சென்று கொண்டிருந்த வீதியில் மாநகராட்சியினால் அவைக்கப் பட்டிருந்தது. இவ்விதமான குப்பை சேகரிக்கும் பெட்டிகளை மேற்கு நாடுகள் பலவற்ற¢ல் ஆங்காங்கே வைத்திருப்பார்கள். மூன்றாம் உலகத்து நாடுகள் பலவற்றில் இவற்றைக் காண்பதே அரிது. இத்தகைய பெட்டிக்குள் குப்பைகளைக் கழிவுப் பொருட்களைப் போடவேண்டுமென்றால் போடுவதற்கு வசதியாக கைகளால் உட்புறமாகத் தள்ளக் கூடியமூடியுடன் கூடியதொரு துவாரம் வைக்கப் பட்டிருக்கும். மனிதர்களால் மட்டும் தான் குப்பைகளைல் இதற்குள் போட முடியும். ஏனெனில் கைகளைப் பாவித்து மூடியை உட்புறமாகத் தள்ளுவதற்குரிய திறமையுள்ள உயிரினத்தால் தான் இது முடியும். ஒருவேளை நன்கு பழக்கப் பட்ட மனிதக் குரங்கான சிம்பான்ஸி அல்லது கொரில்லாக் குரங்குகளால் முடியக் கூடும்.

இந்தக் கழிவு சேகரிக்கும் பெட்டிக்கு என்ன அவ்வளவு முக்கியத்துவம் என்று கேட்க வருகின்றீர்களா? அவசரப் படாதீர்கள். சிறிது பொறுமையாகத் தான் இருங்களேன். முக்கியத்துவம் இருப்பதால் தானே அது பற்றி இவ்வளவு தூரம் விபரிக்கின்றேன். இந்தப் பெட்டிக்கும் உயிர்களின் முக்கிய்மானதொரு இயல்புக்கும் மிகவும் தொடர்பிருக்கிறது என்பதை நான் கூறினால் ஒருவேளை நீங்கள் சிரிக்கக் கூடும். ஆனால் அவசரப்பட்டுச் சிரித்து விடாதீர்கள். பின்னால் நீங்களே உங்களது அவசரத்துடன் கூடிய அறியாமைக்காக வெட்கித்துக் கொள்ளவேண்டியேற்படலாம். ஜாக்கிரதை.

இந்தத் தொடர்மாடிக் கட்டடத்திற்கு நான் அண்மையில் தான் குடிவந்திருந்தேன். இருள் விலகா அதிகாலைப் பொழுதுகளில், இருள் கவியும் அந்திகளில் என் பெண் குழந்தையுடன் உலாவி விட்டு வருவதற்காக நான் புறப்படுவதுண்டு. அத்தகையதொரு சமயத்தில் தான் என் குழந்தை அந்தப் பெட்டியிலுள்ள அந்த விடயத்தை அவதானித்தாள். அவள் கூறித்தான் நானும் அவதானித்தேன். அவளது அவதானம் எனக்கு வியப்பினையும், பெருமிதத்தினையும் அதிகமாகவே அளித்தது. விளையும் பயிர் முளையில் தெரியுமல்லவா? அவ்விதமானதொரு பெருமை.

விடயம் இதுதான்... கழிவுகளைப் போடுவதற்காக அப்பெட்டியிலிருந்த துவாரத்தின் அருகில் ஒரு ஒழுங்கற்ற வட்டத்தில் இன்னுமொரு துவாரம் காணப்பட்டது. எதற்காக அப்பெட்டியில் அந்தத் துவாரம்? யார் போட்டார்கள்? இவை தான் என் மகளின் வினாக்கள். என்னால் உடனடியாகவே விடை கூறமுடியாமல் போன வினாக்களை என் மகள் கேட்டிருந்தாள். யார் அத்துவாரத்தினை உருவாக்கியிருப்பார்கள்? என்று என் மண்டையினை அதிகமாகவே போட்டுக் குடைந்தேன். உருப்படியான பதில் தெரியவில்லை. அச்சமயம் எனக்குச் சிறுவயதில் படித்த சே.ஐசாக். நியூட்டனின்

வாழ்க்கைச் சரிதக் கதையொன்றின் ஞாபகம் வந்தது. நியூட்டன் வீட்டில் ஒரு பூனை இருத்ததாம். அது அவர் அறைக்குள் வருவதற்காக ஒரு துவாரம் சுவரிலிடப்பட்டிருந்ததாம். ஒரு நாள் அந்தப் பெண் பூனை குட்டியொன்றினைப் போட்டு விட்டதாம். அந்தக் குட்டி அவர் அறைக்குள் வரவேண்டுமே. பார்த்தார் நியூட்டன்.உடனடியாக பெரிய பூனை வரும் துளைக்கு அருகிலேயே சிறியதொரு துளையினையும் சுவரில் உருவாக்கி விட்டாராம் சிறிய பூனை வருவதற்காக. இவ்விதமானதொரு அறிஞனொருவரின் அற்புதமானதொரு ஏற்பாடோ இந்தக் கழிவு சேகரிக்கும் பெட்டியிலிருந்த கோணலான வட்ட வடிவத் துவாரமும். கைகளின் வலு குறைந்த குழந்தைகள் குப்பைகளைப் போடுவதற்கானதொரு ஏற்பாடோ?

அதிகாலைகளில், அந்திகளில் இவ்விதமாக உலா வரும் பொழுது நானும் குழந்தையும் ஒவ்வொரு நாளும் அந்தப் பெட்டியினை அவதானித்துக் கொண்டு வரலானோம். யாராவது அந்தத் துவாரத்தினைப் பாவிக்கின்றார்களாவென்று. ஒருவரும் பாவிப்பதாகத் தெரியவில்லை. யாராவது குறும்புக்காரச் சிறார்கள் அதனையிட்டு விட்டு மறந்து விட்டார்கள் போலும் என்றொரு முடிவுக்கு நானும் என் குழந்தையும் வரலானோம்.

இவ்விதமானதொரு பொழுதில் தான், எமது உலாவினை முடித்துக் கொண்டு சிறிது தாமதமாக நாம், நானும், எனது குழந்தையும், இருப்பிடம் நோக்கித் திரும்பிக் கொண்டிருந்த பொழுதுதான் மாநகரசபைத் தொழிலாளியொருவன், ஒரு போர்த்துகேயன், அந்தக் கழிவைச் சேகரிக்கும் பெட்டியிலிருந்த குப்பைகளை கழிவகற்றும் தனது வாகனத்தின் தாங்கியினுள் கொட்டிக் கொண்டிருந்தான்.

"அப்பா! அந்த மாமாவிடம் கேட்டாலென்ன?" என்று என் குழந்தை அந்தத் துவாரம் பற்றி ஞாபகமூட்டவே கேட்டாலென்னவென்று எனக்கு படவே நான் அந்தத் தொழிலாளியிடம் கேட்டேன்.

"ஹாய்! நண்பனே! உன்னிடம் கேட்டால் சிலவேளை இதற்கு விடை கிடைக்கலாம்//"

அதற்கவன் சிறிது வியப்புடன் "எதைப் பற்றிக் கூறுகின்றாய்?" என்று கேட்டான். நான் அந்தத் துவாரத்தினைக் காட்டி "இதுதான். இந்தத் துவாரத்தினை யார் போட்டது என்று உனக்குத் தெரியுமா? என் மகள் என்னைப் போட்டு நச்சரிக்கின்றாள். அவளுக்கு விடை தெரிய வேண்டுமாம்" என்றேன்.

அவன் என் மகளைப் பார்த்து "நல்ல அறிவுள்ள குழந்தை. இந்த வயதிலேயே அதிகமாகக் கேள்விகளைக் கேட்க ஆரம்பித்து விட்டதே" என்று பாராட்டினான். அத்துடன் "உனக்கு இதற்குரிய விடை தெரிய வேண்டுமானால் பகல் முழுவதும் ஒரு நாள் இதனை அவதானித்து வந்தாயானால் புரிந்து விடும். நான் இப்பொழுதே இதற்குரிய

விடையினைக் கூறி விட்டால் இதற்குரிய உன் சுவாரசியம் குறைந்து விடலாம். மாறாக நீயே காத்திருந்து அவதானித்து அறிந்து கொண்டால் அது உனக்கொரு மறக்க முடியாத நல்லதொரு அனுபவமாகவிருக்கலாம்." என்று கூறி விட்டுச் சென்று விட்டான். எனக்கு அவன் மேல் ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. வினாவுக்குரிய விடை தெரிந்தால் அதனைக் கூறவேண்டியது தானே. அடங்கிக் கிடந்த எனதும் என் மகளினதும் ஆவலினை இவ்விதம் பெரிதாக அதிகரிக்கச் செய்து விட்டுச் சென்று விட்ட அந்த மனிதன் மேல் ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. ஆனால் ஆத்திரப் பட்டு என்ன செய்வது... இந்த விடயத்தில் என் குழந்தை தான் எனக்கு ஆறுதல் கூறினாள்: "அப்பா! நாளை சனிக்கிழமை உனக்கு விடுமுறைதானே. நாம் அந்த மனிதன் கூறியது போல் அவதானித்தாலென்ன?" அவள் கூறியதும் சரியாகப் பட்டது. வேறு வழி?

மறு நாள் காலையிலிருந்து எம் 'பலகணி'யிலிருந்து அந்த பெட்டியினையே நானும் குழந்தையும் அவதானித்துக் கொண்டிருந்தோம். நண்பகல் வரையில் எந்த வித புதிய தகவல்களையும் அறிந்து கொள்ள முடியவில்லை. சரியாக பொழுது நண்பகலை அண்மித்த பொழுது தான் அந்த அற்புதம் அங்கே நிகழ்ந்தது. ஓர் அழகான, புஸ¤புஸ¤வென்று அடர்த்தியான கறுத்த உரோமத்துடன் கூடிய அணிலொன்று (எம் ஊர் மர அணிலின் அளவிலிருந்த அணில். இவ்விதமான கறுத்த உரோமத்துடன் கூடிய அணில்களைத் தாரளமாகவே டொராண்டோ மாநகரில் அதிகமாகக் காணலாம்.) மிகவும் மகிழ்ச்சியுடன் துள்ளிக் குதித்து வந்தது. ஒரு முறை சுற்றும் முற்றும் பார்த்து விட்டு அந்தப் பெட்டியில் காணப்பட்ட அந்தத் துவாரத்தின் வழியாக உள்ளே சென்று மறைந்தது. மிக நீண்ட நேரமாக அந்த அணில் உள்ளேயேயிருந்து ஆனந்தமாக உள்ளே மனிதர்களால் எறியப்பட்ட உணவுக் கழிவுகளை உண்டு தீர்த்தது. அதன் பின் ஆறுதலாக வெளியே வந்து துள்ளிக் குதித்துச் சென்று மறைந்தது. "ஓ! இதுவா விசயம்" என்று என் மகள் ஆச்சரியப் பட்டாள். நானும் தான். அதன் பின் சமயம் கிடைக்கும் போதெல்லாம் அந்த அணிலினை அவதானித்து வந்தோம். அந்த அணிலுக்கோ அந்தக் கழிவு சேகரிக்கும் பெட்டி ஒரு காமதேனு. ஒவ்வொரு நாளும் தனியாகவே வந்து, யாரும் சந்தேகப் படாத விதத்தில், ஆனந்தமாக உண்டு விட்டுச் சென்று வந்தது. யார் கவலைப் ப்படப் போகின்றார்கள். எம்மைப் போன்ற வேலையற்ற முட்டாள்கள் சிலர்தான் கவனித்திருக்கக் கூடும்? ஆனால் முக்கியமாக எம்மைக் கவர்ந்த அம்சம் என்னவென்றால்.. அந்த அணில் இரகசியமாகவே அந்தக் கண்டு பிடிப்பினை வைத்திருந்தது. சக அணில்களுக்குக் கூட அது அந்த இருப்பிடத்தைத் தெரியப்படுத்தவில்லை. ஏனெனில் அது ஒவ்வொரு முறையும் தனியாகவே வந்து சென்று கொண்டிருந்தது. இவை எல்லாவற்றையும் விட மிக ஆச்சர்யமான விடயத்தை என் மகளே ஞாபகப் படுத்தினாள்.

"அப்பா! மிருகங்கள் சிந்திக்குமா?" என்று அவள் கேட்டதற்கு "நம்மைப் போல் அவை சிந்திப்பதில்லை?" என்றேன். அதற்கு அவள் பதில்க் கேள்வி கேட்டாள்:

"அப்படியென்றால்..எப்படி இந்த அணிலுக்கு இதற்குள் உணவு இருக்கிற விடயம் தெரிந்தது?"

"அதுதான் எனக்கும் தெரியவில்லை" என்றேன்.

"அப்படி உள்ளே உணவிருக்கிற விடயம் தெரிந்ததும் எவ்விதம் அதற்கு இவ்விதம் துவாரமொன்றினை ஏற்படுத்தி உள்ளே செல்லவேண்டுமென்ற விடயம் தெரிந்தது? அப்படியென்றால் அது சிந்தித்திருக்கிறது தானே?"
என்று கேட்ட என் மகளுக்கு என்னால் இவ்விதம் தான் பதிலினைக் கூற முடிந்தது:

"மகளே! அற்புதமானவிந்தப் பிரபஞ்சத்தில் நம்மால் அறிந்து கொள்ள முடியாத விடயங்கள் எவ்வளவோயுள்ளன. ஆனால் ஒன்று மட்டும் புரிகிறது உயிரினம் எத்தகைய சிரமமான சூழல்களிலும் தப்பிப் பிழைக்க வழியொன்றினைக் கண்டு பிடித்து விடும்
என்பது தான் அது மகளே!"

அதற்கவள் சிரித்துக் கொண்டே "உன்னைப் போல அப்பா" என்றாள். என் மகள் எவ்வளவு சூட்டிகையான குழந்தையென்று தூக்கி அணைத்துக் கொண்டேன்.

நன்றி: திண்ணை, பதிவுகள்.

**49. யன்னல்! - வ.ந.கிரிதரன் -**

யன்னலினூடு உலகம் எதிரே விரிந்து கிடக்கின்றது. யன்னலினூடு விரிந்து கிடக்கும் உலகைப் பார்ப்பதில் ரசிப்பதில் இருக்கும் திருப்தி இருக்கிறதே.. அது ஒரு அலாதியானதொரு சுகானுபவம். ஒரு சட்டத்தினில் உலகைப் படம் பிடித்து வைத்துப் பார்ப்பதைப் போன்றதொரு ஆனந்தம். 'பேப்' வீதி வழியாகப் போய்க்கொண்டிருக்கும் பல்வேறு விதமான மனிதர்களைப் பார்ப்பதில் ஒரு 'திரில்' இருக்கத்தான் செய்கின்றது. கரிபியன் தீவுகளைச் சேர்ந்த 'யமேய்க்க' மனிதர்கள்; கயானா இந்தியர்கள்; இவர்கள் வெள்ளயர்களால் கூலிவேலைகளிற்காக ஆரம்பத்தில் கொண்டு செல்லப் பட்டவர்களின் சந்ததியினர். 'பேப்' வீதியை அண்மித்துள்ள பகுதி கிரேக்கர்கள் அதிகளவில் வாழும் பகுதி. டொராண்டோ மாநகரில் இது போல் பல பகுதிகளைக் காணலாம். 'சிறு இந்தியா' , 'சிறு இத்தாலி'..இப்படி பல பகுதிகள். அது ஒரு மாலை நேரம். மெல்ல மெல்ல இருள் கவியத் தொடங்கியிருந்த சமயம். இலேசாக மழை வேறு தூறிக்கொண்டிருந்தது. வழக்கம் போல் யன்னலினூடாக எதிரே விரிந்திருந்த உலகைப் பார்த்து ரசித்துக் கொண்டிருக்கின்றேன்.

'யன்னல்'. அன்னியர் வருகையால் தமிழிற்குக் கிடைத்த இன்னுமொரு சொல். 'சப்பாத்து' 'அலுகோசு' போல் போர்த்துக்கேயரின் வருகை பதித்து விட்டுச் சென்றதொரு சொல் 'யன்னல்'. 'யன்னல்' யன்னலாகை நிலைத்து நின்று விட்டது. 'சாளர'த்தை விட எனக்கு 'யன்னல்' என்ற சொல்லே பிடித்து விட்டிருந்தது. 'மின்ன'லிற்கு எதுகையாக நன்கு அமைந்த சொல் யன்னல். யன்னல் என்ற பெயரிற்கு ஒரு மகிமை இருக்கத்தான் செய்கிறது. உலகப் பணக்காரனை உருவாக்கியதும் ஒரு 'யன்னல'ல்லவா! யன்னலின் மறைவில் உலகை ரசிக்கலாம் இணையத்தில். இங்கும் தான். திரும்பிப் பார்த்தாலொழிய யார்தான் கண்டு பிடிக்கக்கூடும்? தனித்தமிழ் தனித்தமிழென்று சொல்லி நின்றிருந்தால் தமிழ் நல்லதொரு சொல்லினை இழந்திருக்கும். வந்தாரை வாழவைக்கும் தமிழ் நாடு என்போம். வந்தாரை வரவேற்று உபசரிப்பது தமிழ்ப் பண்பென்று புளகாங்கிதம் அடைகின்றோம். வந்த சொல்லினை வரவேற்று உள்வாங்குவம் மொழி தமிழ் மொழி என்று இறும்பூதெய்வதிலென்ன தயக்கம்?

'பேப்' வீதியின் தெற்குப் பக்கமாக நோக்கி அவன் வந்து கொண்டிருந்தான். அவன் நிறத்தை வைத்துப் பார்த்தால் அவன் ஒரு கறுப்பு மனிதன். 'யமேய்க்க' நாட்டவனாக இருக்கலாம் போல் பட்டது. ஆனால் அதனையும் நிச்சயமாகச் சொல்வதற்கில்லை. பலரை , நைஜீரியாப் பக்கம் இருந்து வந்த பலரை 'யமேய்க்க'ர்களாக எண்ணி ஏமாந்த அனுபவம் பல உண்டு. அவர்களது உரையாடும் பாங்கினை வைத்துப் பிடித்துக் கொள்ளலாம். நம்மவரிற்கு அவனைக் 'கறுவல்' என்று சொல்வதிலொரு அலாதிப் பிரியம். ஏதோ 'வறுவல்' என்று சொல்வதைப் போல் ஆசையாகக் 'கறுவல்' என்று கூறுவார்கள். 'கறுவல்' என்று சொல்வதில் பெரிய தவறேதுமிருப்பதாகத் தெரியவில்லை.

ஆனால் அந்தச் சொல்லினை சொல்லும் போது அவர்களையறியாமலேயே தென்படுகின்றதே அந்த இளக்காரத் தொனி.. அது அவர்களைக் காட்டிக் கொடுத்து விடுகின்றது....ஊரிலை கூறுவார்களே....'வடக்கத்தையான் வருகின்றான்' என்று....அதுமாதிரி இங்கு இந்தக் 'கறுவல்'...

அந்தக் கறுப்பு மனிதன் கறுப்புக் கண்ணாடி அணிந்திருந்தான். பார்ப்பதற்கு 'ரப்' இசை வழங்குமொரு பாட்டுக் காரன் போலொரு தோற்றம்...ஒருவிதமான ஆட்டம் அவன் நடையில் தென்பட்டது. கூடவே ஒரு நாய் வந்து கொண்டிருந்தது. கறுப்பு நாய். எந்த வகையான நாய் என்று சொல்வதற்கில்லை. நான் ஒரு நாய் ஆராய்ச்சியாளனல்ல. எனக்குத் தெரிந்த ஒருசில நாய் வகைகளில் அடங்கிய நாயல்ல அது. சாதாரண ஊர் நாய் வகைகளைப் போன்ற தோற்றம். வாலைக் குழைத்துக் கொண்டு நன்றியுடன் அந்தக் கறுப்பு மனிதனைத் தொடர்ந்து கொண்டிருந்தது அந்த வாயில்லா ஜீவன். நாயென்ன வாயில்லா ஜீவனா? அதெப்படி அதற்கு வாய்தானே இருக்கிறதென்று குதர்க்கமாகக் கேட்டு வைத்து விடாதீர்கள். 'வாய் வங்காளம் மட்டும் போகின்றதே'யென்று நான் உங்களிற்குப் பதிலிறுக்க வேண்டி வந்து விடும். ஏதோ ஒரு பாடலை அவனது வாய் முணுமுணுத்தபடியிருப்பதைப் பார்க்க முடிகின்றது.

இதற்கிடையில் எதிர்த் திசையில் , 'பேப்' வீதியில் வடக்கு நோக்கி இன்னுமொரு மனிதன் வந்து கொண்டிருந்தான். நிறத்தில் இவன் முன்னவனிற்கு முற்றிலும் எதிரானவன். பார்ப்பதற்கு கிரேக்கனைப் போல் தென்பட்டான். இவனைப் போல் அவனுடன் கூடவே ஒரு நாய்.. அதுவும் அவனைப் போலவே ஒரு வெள்ளை நாய்.. இவனுடைய நாயைப் போலவே சாதாரண ஊர் நாயென்றினைப் போன்றதொரு தோற்றம். அவனது கவனம் எதிர்த்திசையில் சென்று கொண்டிந்த மதமதர்த்த மார்புகளுடன் சென்று கொண்டிருந்த பெண்ணொருத்தியின் மேல் திரும்பியிருந்தது. அதே சமயம் நடந்து கொண்டுமிருந்தான். எதிராகச் சென்று கொண்டிருந்த கறுப்பின மனிதனுடன் மோதி விடுவான் போல் பட்டது. கறுப்பு மனிதனும் எதிரே வருபவன் கவனம் திசைமாறி வந்து கொண்டிருப்பதைக் கவனித்ததாகத் தெரியவில்லை. அவன் முணுமுணுத்தபடியிருந்த பாட்டிலேயே ஒன்றியிருந்ததாகப் பட்டது. அவனை எச்சரிக்கலாமாயென்று எண்ணி முடிப்பதற்குள்ளேயே மோதல் நிகழ்ந்து விட்டது. 'சே.. கொஞ்சம் முந்தியிருக்கலாமே' என்று பட்டது. மோதல் நிகழ்விற்கு இருவரிலும் தவறிருந்தது. ஆனால் அவர்கள் அதனையுணரவில்லையென்பதையே தொடர்ந்த சம்பவம் காட்டியது.

வெள்ளைக்காரன் என்ன கூறினான் என்பது தெரியவில்லை. ஆனால் அவனது வாய் அசைப்பிலிருந்தும், அவன் முகத்தில் வெடித்துக் கொண்டிருந்த ஒருவித அசூயை கலந்த சினத்திலிருந்தும் அவன் தன் தவறினை உணர்ந்ததாகத் தெரியவில்லை என்று பட்டது. கறுப்பு மனிதனின் ஆத்திரமும் அதிகரித்து விட்டது. இவனிலும் தவறிருந்தது.

மோதலைத் தவிர்ப்பதற்கு இவனுக்கும் ஒரு சந்தர்ப்பமிருந்தது. ஆனால் இவனும் அதனை உணர்ந்ததாகத் தெரியவில்லை. பதிலிற்கு இவனும் பலமாகத் தலையினை அசைத்துக் கத்துவதைப் பார்க்க முடிந்தது. இவர்கள் இருவரிற்குமிடையில் ஏற்பட்ட மோதல் பாதசாரிகள் பலரது கவனத்தினை இழுத்து விட்டது. இவர்களைச் சுற்றி வேடிக்கை பார்க்கத் தொடங்கினார்கள். 'உப்புச் சப்பில்'லாததொன்றிற்காக இவர்கள் மோதுவதாக யன்னலிற்கப்பாலிருந்து வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த என்னால் உணர முடிந்தது. ஒருவேளை யன்னலிற்கப்பால் இருந்திருந்தால் நானும் அவர்களைப் போல்தான் மோதியிருப்பேனோ? யன்னலிற்கிப்பாலிருப்பதால் தான் இவ்விதம் எண்ணுகின்றேனோ? இங்கிருந்து பார்க்கும் போது ஏன் தான் அங்கு இவ்விதம் அடிபட்டுச் சாகின்றார்களோ என்று படுவதில்லையா? மிகவும் இலகுவான தீர்விற்கான வழிகள் இருக்கும் போது அவர்கள் ஏன் தான் இவ்விதம் மோதுகின்றார்களோவென்று படுவதில்லையா? அதுபோல் தான் இதுவுமோ?

யன்னலிற்கிப்பாலிருந்து பார்க்கும் போது எல்லாமே தெரிகின்றது. யன்னலிற்கப்பால் ஏன் அவர்களுக்குத் தெரியவில்லை? கறுப்பு மனிதனும் வெள்ளை மனிதனும் முறுகிக் கொண்டிருந்த நிலையில் பெரிதாக மாற்றமேதுமில்லை. அடிபடாத குறைதான். யாரோ ஒருவர் மோதலைத் தவிர்ப்பதற்கு முன்வந்து முயன்று கொண்டிருந்தார். எனக்குச் சற்றே சுவாரசியம் குறைந்தது. கவனம் நாய்களின் மேல் திரும்பியது. அந்தக் கறுப்பு நாயினதும் வெள்ளை நாயினதும் முகங்களில் தான் எவ்வளவு மகிழ்ச்சி ரேகைகள்! வாலை வாலை ஆட்டியபடி ஒன்றினை ஒன்று முகர்ந்தபடி எவ்வளவு சந்தோசம்! யன்னலிற்கப்பால் சந்தோசப்படுவதற்கும் உயிரினங்கள் இருப்பதை யன்னலிற்கிப்பாலிருந்து பார்க்கையில் ஆனந்தமாகத்தானிருக்கின்றது.

- நன்றி: உயிர் நிழல் ஆகஸ்ட் 2000 -
பதிவுகள், திண்ணை

**50. சுண்டெலிகள்! - வ.ந.கிரிதரன் -**

"...இந்தப் பிரபஞ்சத்தில் படைக்கப்பட்ட ஒவ்வொரு உயிருமே தனது வாழ்நாளில் இயலுமானமட்டும் முயன்றுதான் பார்க்கின்றது சுண்டெலியைப் போல் ஏன் என்னைப் போல் என்றும் வேண்டுமானால் சொல்லிக் கொள்ளலாம். நாட்டில் பிரச்சினை மூண்டுவிட்டதென்று சொந்த மண்ணைவிட்டு வந்ததிலிருந்து இன்றுவரை எத்தனை வழிகளில் எத்தனை முயற்சிகள். ஒன்று சரி வந்தால் இன்னுமொரு முயற்சி. ஒன்று பிழைத்து விட்டாலும் இன்னுமொரு முயற்சி. எத்தனை அதிசயமான பிரமாண்டமான பிரபஞ்சம். புதிர்கள் நிறைந்த பிரபஞ்சம்..."

கரப்பான் தொல்லையைத் தாங்க முடியவில்லை. எல்லா வழிகளிலும் முயன்று பார்த்தாகி விட்டது. சீனாக்காரனின் 'சாக்' தொடக்கம் முயலாத வழிகளில்லை. வெற்றி கரப்பான் பூச்சிக்குத்தான். பேசாமல் தோல்வியை ஒப்புக்கொண்டு 'அப்பார்ட்மென்ற்' விட்டு 'அப்பார்ட்மென்ற்' மாறினால் கிணறு வெட்டப் பூதம் புறப்பட்ட கதைதான். கரப்பான் பூச்சிகளிற்குப் பதில் சுண்டெலிகளின் தொல்லை. கனடாவில் கட்டடங்கள்தான் உயர்ந்தனவே தவிர எலிகளல்ல. கொழுத்துக் கொழுத்து உருண்டு திரிந்த ஊர் எலிகளைப் பார்த்த எனக்கு இந்தச் சுண்டெலிகள் புதுமையாகத் தெரிந்தன. நாட்டுக்கு நாடு மண்ணிற்கு மண் உயிர்கள் பல்வேறு வடிவங்களில் உருமாறி வாழத்தான் செய்கின்றன.

சுண்டெலிகளின்பால் என் கவனம் திரும்பியதற்கு என் தர்மபத்தினியின் ஓயாத கரைச்சலும் புறுபுறுப்பும் இன்னுமொரு காரணம். குழந்தை வேறு ஆங்காங்கே ஓடித்திரியும் பூச்சிகளையும் சுண்டெலிகளையும் வியப்புத் ததும்பப் பார்ப்பதைக் கண்டதும் என்னவளிற்கு நெஞ்சைக் கலக்கத் தொடங்கி விட்டது. 'இஞ்சாருங்கோ.. உந்த சுண்டெலிகளை அடிச்சுத் துரத்தாட்டி ஒரு நிமிஷங் கூட என்னாலை இங்கேயிருக்கேலாது.. தவளுற குழந்தை இருக்கிற வீட்டிலை..' கனடா வந்து ஆறு மாதங்களிலேயே பலரிற்குத் தமிழ் மறந்து போய்விடுகின்றது. என் மனைவியோ கனடா வந்து ஆறு வருடங்கள் ஓடியும் இன்னும் சுத்தமான யாழ்ப்பாணத் தமிழில்தான் கதைத்து வருகின்றாள். தமிழ் மறந்தவர்களைப் பற்றிக் கூறினால் 'இதெல்லாம் சுத்தப் புலுடா;பம்மாத்து;சுத்துமாத்து' என்பாள். எதை வேண்டுமானாலும் பொறுத்துக் கொள்ளலாம். இவளுடைய நச்சரிப்பையும் பொச்சரிப்பையும் தாங்க மட்டும் என்னால் முடியாது. சுண்டெலிகளிற்கு ஒரு முடிவு கட்டாமல் இவளும் விடமாட்டாள். முடிவாகச் சுண்டெலிகளை ஒரு கை பார்ப்பதற்கு முடிவு செய்தேன்.

சுண்டெலிகளை ஒரு வழிக்குக் கொண்டு வருவதற்கு முதல் படி சுண்டெலிகளைப் பற்றி அறிவது. சுண்டெலிகளின் பழக்க வழக்கங்கள் , நடமாட்டம் பற்றிய தகவல்களைப் பற்றிப் போதுமான தகவல்களை எவ்வளவுக்கு எவ்வளவு அதிகமாகப் பெற முடியுமோ அவ்வளவிற்கு அவ்வளவு அவற்றை அடக்குவதும் இழகுவானதாக அமையக் கூடும்.

சுண்டெலிகளைப் பற்றி ஆரம்பத்தில் நாம் பெரிதாகக் கவனம் எடுக்கவில்லை. ஆனால் அரிசி, மாப் பைகளைப் பதம் பார்க்கத் தொடங்கிய போதுதான் விழித்துக் கொண்டோம். இப்படியே விட்டல் நிலைமை கட்டுக்கடங்காமல் போகலாம். மனையின் நச்சரிப்பிலும் பொச்சரிப்பிலும் நியாயமிருப்பதை உணரக் கூடியதாகவிருந்தது.

ஓரிரவு என் சகதர்மிணியும் குழந்தையும் படுக்கையில் விழுந்த பிறகு சுண்டெலிகளைப் பற்றி உளவு பார்ப்பதற்கு முடிவு செய்தேன்.புதிதாக வாங்கிய எலிப் பொறிகளை வைப்பதற்குப் பொருத்தமான இடங்களைத் தெரிவு செய்வதற்கு இந்த உளவு நடவடிக்கை உதவக் கூடும். அரிசி, மாப்பைகளைக் கொண்டுவந்து சாப்பாட்டு மேசையில் வைத்து விட்டு வந்து 'சோபா'வில் சாய்ந்தபடி, தொலைக்காட்சிப் பெட்டியைத் தட்டி விட்டேன். சுண்டெலிகளின் வரவை எதிர் பார்த்தபடி, ஆவலும் காவலுமாகக் காத்திருந்தேன். இடையிடையே 'டேவிட் லெட்டர்மா'னின் அறுவைகளையும் ரசித்தபடியிருந்தேன். நேரம் ஓடிக்கொண்டேயிருந்தது. சுவர் மூலையில் மெல்லதொரு சத்தம். காதுகளையும் கண்களையும் கூர்மையாக்கிக் கொண்டேன். சாப்பாட்டு மேசைக்கருகாமையில் போடப்பட்டிருந்த சோபாவின் அருகாகச் சிறியதொரு 'குறுணி' என்போமே அப்படியொரு தலை மெல்ல எட்டிப்பார்த்தது. சிறிய கருமணிக் கண்கள். குட்டி சுளகுக் காதுகள். ஒருகணம் எந்த அசைவையும் காணோம். அந்த நேரம் பார்த்துத்தானா இந்தப் பொல்லாத தும்மல் வந்து தொலைக்க வேண்டும். அடக்க முயன்றும் என்னையும் மீறி வெடித்து விட்டது. சுண்டெலியின் வேகத்தைப் பார்க்க வேண்டுமே! கடுகிப் பறந்தது. மறைந்தது என்று வேண்டுமானால் கூறலாம்.

சிறிது நேர அமைதிக்குப் பின்னர் பழையபடி அதே குட்டித்தலை. கருமணிக் கண்கள்.சுளகுக் காதுகள். இம்முறை வெகு அமைதியாகப் பார்த்துக் கொண்டிருந்தேன். சமையலறைப் பகுதியில் வழக்கமானவிடத்தில் அரிசி, மாப்பைகளைத் தேடிப்பார்த்து விட்டுத்தான் அவற்றின் மணம் பிடித்துச் சாப்பாட்டு மேசைப்பக்கம் வந்து விட்டது போலும். எனக்குள் வினோதமானதொரு ஆசை உருவானது. மேசைக்குக் கதிரைகள் மூலம் ஏறாத வண்ணம் கதிரைகளைச் சற்றுத் தள்ளி ஏற்கனவே இழுத்து வைத்து விட்டிருந்தேன். எப்படி அந்தச் சுண்டெலி மேசையில் ஏற முயல்கிறதோ? இயலுமானவரையில் என் அசைவுகளைக் குறைத்துக் கொண்டு அதன் அசைவுகளையே அவதானித்துக் கொண்டிருந்தேன். சிறு அசைவு கூட அதனை உசார் படுத்தி விடுவதை ஏற்கனவே அவதானித்து விட்டிருந்தேன். சிறிது நேரம் அங்குமிங்குமாக அலைந்துதிரிந்து விட்டு மோப்பம் பிடித்தபடி மேசைக்குக் கீழ் வந்து விட்டது அந்தச் சுண்டெலி. சிறிது நேரம் அமைதியாகச் செவிகளை உசார் நிலையில் வைத்தபடி நின்றிருந்தது. பின்னர் அண்ணாந்து ஒருமுறை பார்த்தது. உணவு இருக்குமிடத்தை ஊகித்து விட்டது போலும். அறையினுள் சிணுங்கிய குழந்தையைத் தட்டிச் சீராட்டியபடி என் இல்லத்தரசி மெல்லப் புரண்டு படுப்பதின் அசைவை என்னால் உணரக் கூடியதாகவிருந்தது.

இந்தப் பிரபஞ்சத்தில் படைக்கப்பட்ட ஒவ்வொரு உயிருமே தனது வாழ்நாளில் இயலுமானமட்டும் முயன்றுதான் பார்க்கின்றது சுண்டெலியைப் போல் ஏன் என்னைப் போல் என்றும் வேண்டுமானால் சொல்லிக் கொள்ளலாம். நாட்டில் பிரச்சினை மூண்டுவிட்டதென்று சொந்த மண்ணைவிட்டு வந்ததிலிருந்து இன்றுவரை எத்தனை வழிகளில் எத்தனை முயற்சிகள். ஒன்று சரி வந்தால் இன்னுமொரு முயற்சி. ஒன்று பிழைத்து விட்டாலும் இன்னுமொரு முயற்சி. எத்தனை அதிசயமான பிரமாண்டமான பிரபஞ்சம். புதிர்கள் நிறைந்த பிரபஞ்சம்.

இந்தச்சுண்டெலி இப்பொழுது மேசையின் வழவழப்பான உருக்குக் காலொன்றில் ஏறுவதற்கு மீண்டும் மீண்டும் முயன்று கொண்டிருந்தது. எப்படியும் மேசையின் மேலிருக்கின்ற உணவைஅடைந்துவிட வேண்டுமென்ற அவா பேரார்வம் அதனிடம் தொனிப்பது போல் தென்பட்டது. ஏறுவதும் விழுவதும், ஏறுவதும் விழுவதும், ஏறுவதும் விழுவதுமாக அந்தச் சுண்டெலி முயன்று கொண்டிருந்தது. சிலவேளை அது தன் முயற்சியில் வெற்றியடையலாம். அடையாமற் போகலாம். அதற்காக அது தன் முயற்சியைக் கைவிடும் வகையைச் சேர்ந்தது போல் தென்படவில்லை. இறுதி வெற்றி கிடைக்கும்வரை அல்லது களைத்துச் சோரும்வரை அது தன் முயற்சியைத் தொடரத்தான் போகின்றது. இந்தச் சின்னஞ்சிறு உயிரிற்குள்தான் எத்தனை நூதனமான வைராக்கியம்! முயற்சி! சுண்டெலிகளிற்கு ஒருவழி காணவேண்டுமென்று என்மனைவி நச்சரித்தது இலேசாக நினைவிற்கு வருகின்றது. எடீ விசரி! நம்மைப்போல்தானே இந்தச் சுண்டெலிக்கும் ஒரு குடும்பம் குழந்தையென்று சொந்த பந்தங்கள். இதை நம்பி எத்தனை உயிர்களோ? 'இது ஒரு எப்பன் சாப்பாட்டைத் தின்னுறதாலை எங்களிற்கென்ன குறையவாப் போகுது..?' நித்திரை கண்களைச் சுழற்றுகின்றது. அந்தச் சுண்டெலிமட்டும் தன் முயற்சியைக் கைவிட்டதாகத் தெரியவில்லை. அரைத் தூக்கத்திலும் அதன் சிறு அசைவுகள் கேட்கத்தான் செய்கின்றன.

நன்றி: தாயகம், திண்ணை, பதிவுகள்.

## 51. அழகிய வேப்பமரம்... - றஞ்சனி -

நீண்டு அடர்ந்து வளந்திருக்கும் மரங்களுக்கடியில் துண்டை விரித்து உட்காருகிறேன். புத்தகங்களை இன்று வெளியில் எடுப்பதாக இல்லை. படுத்திருந்து கனவுகாண ஆசை. வானம் தெளிவாக நீலமாகவும் இருக்கிறது. சூரியன் சந்தோசமாக சிரித்துக் கொண்டிருக்கிறான்.

வெய்யிற் காலங்களில் இந்தப்பார்க்கில் எனது மரங்களுக்கடியில் புத்தகங்களைப்பரப்பி உறங்குவதுண்டு . வழமைபோல் இல்லாமல் இன்று மனதை இலகுவாக்கி அண்ணாந்து படுககிறேன். எனது மரத்தின் இலைகள் எனக்கு வானத்தைக்காட்டிவிடாது போட்டிபோட்டு மறைத்துக் கொண்டிருந்தன. தம் அழகைமட்டும் ரசி என்பதுபோல அதிசயமாக இன்று எனது அழகிய வேப்பமரத்தின் நினைவுவந்தது.

எனது அழகான வேப்ப மரமே! நீ இப்போதும் எமது முற்றத்திலதான் நிற்கிறாயா? நீ இருந்தால் என்னை நினைப்பாயா? என்போல் உனக்கும் வயதுகள் கடந்திருக்கும். எத்தனை நாட்கள் உன்னடியில் ஊஞ்சலில் உறங்கியிருப்பேன். என் கனவுகளுக்கும் கற்பனைகளுக்கும் உரமிட்டவள் நீதானே. உன்னில் பழந்தின்ன வரும் பச்சைக்கிளிகளின் மொழிகூட எமக்கு புரியுமே. உனக்குத்தெரியாமல் எந்த ரகசியமும் என்னிடம் இருந்ததில்லை. இப்போ என் வாழ்வில் நீ அறியாத எத்தனை மாற்றங்கள் ரகசியங்கள். உன்னை பார்க்க வேண்டும்போல் இருக்கிறது. என்னை அறியாமல் கண்கள் கலங்கி மனம் சோர்வுற்றது.

என் சோகத்தை கலைக்க அந்தக் கணீரென்ற குரல். எழுந்து உட்கார்ந்தேன். நானிருந்த இடத்திலிருந்து சிறிது தள்ளி சிலரில் ஒருவன் கிற்றார் இசைத்து பாடினான். அவனது குரலும் கிற்றார் இசையும் என்னை அவர்களருகில் போய்நிறுத்தியது. அவர்கள் 'ஹாய்' சொன்னார்கள. அவன் பாடிக்கொண்டே இருந்தான் அவர்கள் என்னைத் தம்முடன் உட்காரும்படி கூறினார்கள.; அவன் எந்த தடங்கலும் இன்றி தனது உடல்முழவதையும் அழகாக அசைத்து பாடிக்கொண்டிருந்தான். மற்றவர்கள் என்னிடம் கதைத்துக் கொண்டிருந்தார்கள்.

இந்தியர்கள் ஆபிரிக்கர்களுடன் கதைக்க மாட்டார்களே. நீ மட்டும் எப்படி என்று வியந்தனர். என் கவனமெல்லாம் அவனில்தான் இருந்தது. ஆபிரிக்கருக்கே இசை சொந்தமானதுபோல் அவர்களின் ஒவ்வொரு அசைவும் இசையினால் படைக்கப்பட்டுமாதிரி. அப்படி ஒரு திறமை இவர்களுக்கு. பொறாமையாக இருந்தது. அவன் என்னுடன் கதைப்பதை விரும்பாதவன் போல், ஆனால் எதோ ஒரு குதூகலத்தில் அவன் குரலை உயர்த்திப் பாடிக் கொண்டிருந்தான். நீங்கள் சொல்வது சரிதான். எம்மவர்களில் அனேகர் மூளை பாவிக்கப்படாமல் துருப்பிடித்து போய்விட்டது. எனது கருத்துப்படி நிறவாதம்

மூளையில்லாதவர்கள் ஏற்படுத்தியது. எமது நேரத்தை இவர்களுக்காக வீணாக்க வேண்டுமா? இப்போது திடீரென அவன் பாடுவதை நிறுத்தினான். பல விடயங்கள் பேசினோம். நேரம் போனதே தெரியவிலை. அவர்களிடம் விடை பெற்றுக்கொண்டேன். வழிமுழுக்க அந்த பாடகனின் நினைவு. அவனின் கண்கள் றஜனீசின் கண்களை ஞாபகப்படுத்தியது .

சில நாடகளின் பின்'ஹாய்'; என்ற குரலுக்கு திரும்பினோம.; அதே பாடகன்; பதிலுக்குக் 'ஹாய்' சொல்லிவிட்டு, அவனை மீண்டும் சந்தித்தும் என்னையுமறியாமல் எனக்குள் இரத்தம் குப்பென்று தலைக்கேறியது. என்னை சமாளித்துக் கொண்டதாக எண்ணி ,என்ன இந்தப்பக்கமென்று அசடு வழிந்தேன். சசிக்கு புரிந்ததுபோல் புன்சிரிப்பெறிந்தாள். அவனுக்கும் எதோ தெரிந்திருக்க வேண்டும் . அவன் எம்மிடம் விடைபெறும் போது தனது தொலைபேசி எண்ணையும் விலாசத்தையும் என்னிடம் தந்து தனது பிறந்தநாளுக்கு வரும்படி அழைத்தான். உனது நண்பியையும் கூட்டிக்கொண்டு வா என்று செல்லிவிட்டு நடக்க, ஆ இது எனது நண்பி ! ஹலோ. அவன் போய்விட்டான். என்நினைவு இப்போதாவது உனக்கு வந்ததே. என்ன கண்டதும் காதலா ? பார்க்க அழகாகத்தான இருக்கிறான்.

அவனுக்கும் உன்னிடம் ஏதோ... என்றவளை, அப்படி எதுவுமில்லை சும்மா ஒரு இது. அவனின் பெயர்கூட மறந்திருந்தது . என்செய்கை குழந்தைத்தனமாக இருந்தது எனக்கு ஒருமாதிரியாக அவனின் வீட்டை கண்டுபிடித்து உள்ளுக்குச் சென்றோம். அவனை முன்னுக்குக் காணாதது அந்தரமாக இருந்தது.

அவனின் நண்பர்கள் எம்மை வரவேற்றனர் . ஜp ம்மி யார் வந்திருக்கிறார்கள் என்றுபாரேன் என்றான் ஒருவன். மற்றவர்கள் தமக்குள் சிரித்தார்கள். சகியும் அவர்களுடன் சேர்ந்து கொண்டாள். அவனது வீடு அவனது நாட்டு கலைப் பொருட்களாலும் அவனது ஒவியங்களாலும் அலங்கரிக்கப் பட்டிருந்தது. அவன் மீண்டுமொருதடவை என்மனதில் இடம்பிடித்தான். அதன் பின் நாம் அடிக்கடி சந்தித்தொம் . அன்று நல்ல வெய்யில். அந்தப் பாக்கில் நான் எழுதிக்கொண்டிருந்தேன். அவன் என்னையே பார்த்துக்கொண்டிருந்தான்.

நான் எழுதுவதை நிறுத்தினேன். ஏன் நிறுத்திவிட்டாய்? தொடர்ந்து எழுது சுமி . இந்தக் கவிதையைக் கேள் ஜிம்மி. இதை உனக்காகத்தான் எழுதினேன். ;எனக்காகவா ஆம் ஜிம்மி உனக்காக. நான்கவிதையை வாசித்துக் கொண்டு போனேன். அவன் கண்களை மூடிக்கொண்டு கேட்டுக் கொண்டிருந்தான். நான் முடித்துவிட்டு அவனைப்பார்த்தேன் . அவன் கண்களை திறக்கவில்லை. என்ன நல்லா இல்லையா? அவன் கண்களை மெதுவாக திறந்தான் கண்கள் கலங்கியிருதது . என் கைகளைப் பற்றி இந்தக்கணமே இறந்து விடலாம் போலிருக்கிறது சுமி. அவன் ஆங்கிலம் ஜேர்மன் இரண்டிலும் மாறி மாறி

என்னைக் காதலிப்பதாக சொன்னான். அவனை மேலும் பேச விடாது ............. அன்று நாம் நிறையக்கதைத்து சிரித்து சந்தோசமாக இருந்தோம். எம்மைக் கடந்து சிலர்போனார்கள். நான் அவர்களை சரியாக கவனிக்கவில்லை. எமது நாட்டவர் மாதிரி இருக்கென திரும்பினேன். சந்தேகமில்லை அவர்களேதான். சிறிது தூரம் சென்றதும் ஒருவன் சொன்னான். எங்கட பெட்டை போல கிடக்கு. காப்பிலியோட. மற்றவன் இந்தியனா இருக்கும். இன்னொருத்தன்: வளவையளுக்கு அண்ணன் தம்பி கிடையாதோ. நானென்டால் வெட்டிப்புதைச்சிருப்பன். காப்பிலிகளுடனும் கழுசறைகளுடனும்... எனக்கு கேட்க வேண்டுமென்பதற்காக சிறிது சத்தமாக சொல்லிக்கொண்டு போனான். எதிர்பாராத அதிர்ச்சியிலிருந்து விடுபட்ட எனக்கு அவர்களை உதைப்பது போல்பதில் கொடுக்காமல் விட்டதற்கு என்னில் ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. எனக்கு மேலும் அங்கிருக்கப்பிடிக்கவில்லை.

வா போகலாம் என்றேன். உன் நாட்டவரா? என்தொடர்பாக எதாவது சொன்னார்களா? நான் மௌனமானேன். ஏன் இந்த மடையர்களில் ஆத்திரமடைகிறாய்? இந்த அழகிய நாளை இவர்களால் வீணாக்கவேண்டாம் சுமி. இந்த நாளில் எனக்கு வெறுப்பில்லை ஜிம்மி. இந்த மனிதர்களை நினைக்கத்தான்.. .அவனும் ஆத்திரமடைந்திருந்தான் இருவரும் அங்கிருந்து வெளியே வந்தோம்.

அவர்கள் கடந்து வந்த அந்தப் 'பாக்கி'ன் வெளிச் சுவரில் வெளிநாட்டவரே வெளியேறு என எழுதி நாசிகளின் அடையாளம் கீறப்பட்டிருந்தது .

shanranjini@yahoo.com
பதிவுகள் நவமபர் 2007; இதழ் 95

## 'பதிவுகள்'/ 'தமிழர் மத்தியில்' ஆதரவுச் சிறுகதைபோட்டி முடிவுகள் 2004!

*- 'பதிவுகள்' மற்றும் நந்தா பதிப்பகத்தாரின் (கனடா) 'தமிழர் மத்தியில்' ஆதரவுடன் 2004 இல் சிறுகதைப் போட்டியொன்றை நடாத்தியது. அப்போட்டியின் நடுவர்களாக பிரபல எழுத்தாளர்கள் அ.முத்துலிங்கம், என்.கே.மகாலிங்கம் ஆகியோர் இருநது பரிசுக்கதைகளைத் தேர்ந்தெடுத்தனர். அது பற்றிய விபரங்களையும், பரிசுக் கதைகளையும் ஒரு பதிவுக்காக மீள் பிரசுரம் செய்கின்றோம். - பதிவுகள் -*

**முதற் பரிசு (200 கனேடிய டாலர்கள்):** 'எல்லாம் இழந்த பின்னும்..'
**எழுதியவர்:** சாந்தினி வரதராஜன் (ஜேர்மனி)

**இரண்டாம் பரிசு (100 கனேடிய டாலர்கள்):** 'நான், நீங்கள் மற்றும் சதாம்'
**எழுதியவர்:** ஆதவன் தீட்சண்யா (தமிழ்நாடு)

**மூன்றாம் பரிசு (75 கனேடிய டாலர்கள்):** 'தீதும் நன்றும்'
**எழுதியவர்:** அலர்மேல் மங்கை (அமெரிக்கா).

### நடுவர்கள் என்ன கூறுகின்றார்கள்....

அ.முத்துலிங்கம்என்.கே.மகாலிங்கம்பதிவுகள் நந்தா பதிப்பகத்தின் 'தமிழர் மத்தியில்' ஆதரவுடன் நடாத்திய சிறுகதைப் போட்டிக்கு உலகின் பல பாகங்களிலிருந்தும் கலந்துகொண்ட படைப்பாளிகள் அனைவருக்கும் எமது மனப்பூர்வமான நன்றி. போட்டிக் கதைகளைத் தேர்ந்தெடுப்பதற்கு நடுவர்களாக இருக்க முடியுமா எனக் கேட்டபோது, தயக்கமின்றி மகிழ்ச்சியுடன் சம்மதித்தார்கள் எழுத்தாளர்களான திரு.அ.முத்துலிங்கமும், திரு.என்.கே.மகாலிங்கமும். இவர்களிருவரைப் பற்றி ஈழத்துத் தமிழ் இலக்கிய உலகு மட்டுமல்ல, தமிழக இலக்கிய உலகும் நன்கறியும். பதிவுகள் நடாத்தும் சிறுகதைபோட்டி பற்றிக் குறிப்பிட்டதும் அதற்குரிய பரிசுப் பணத்துக்குத் தானே பொறுப்பு என மகிழ்ச்சியுடன் முன்வந்தார் 'நந்தா பப்ளிகேஷன்ஸ்' அதிபரான கட்டடக்கலைஞர் திரு. நந்தகுமார் இராஜேந்திரம். இவர்கள் அனைவருக்கும் எமது நன்றி.பதிவுகள் நந்தா பதிப்பகத்தின் 'தமிழர் மத்தியில்' ஆதரவுடன் நடாத்திய சிறுகதைப் போட்டிக்கு உலகின் பல பாகங்களிலிருந்தும் கலந்துகொண்ட படைப்பாளிகள் அனைவருக்கும் எமது மனப்பூர்வமான நன்றி. போட்டிக் கதைகளைத் தேர்ந்தெடுப்பதற்கு நடுவர்களாக இருக்க முடியுமா எனக் கேட்டபோது, தயக்கமின்றி மகிழ்ச்சியுடன் சம்மதித்தார்கள் எழுத்தாளர்களான திரு.அ.முத்துலிங்கமும், திரு.என்.கே.மகாலிங்கமும். இவர்களிருவரைப் பற்றி ஈழத்துத் தமிழ் இலக்கிய உலகு மட்டுமல்ல, தமிழக இலக்கிய உலகும் நன்கறியும். பதிவுகள் நடாத்தும் சிறுகதைபோட்டி பற்றிக் குறிப்பிட்டதும் அதற்குரிய பரிசுப் பணத்துக்குத் தானே

பொறுப்பு என
மகிழ்ச்சியுடன் முன்வந்தார் 'நந்தா பப்ளிகேஷன்ஸ்' அதிபரான கட்டடக்கலைஞர் திரு. நந்தகுமார் இராஜேந்திரம். இவர்கள் அனைவருக்கும் எமது நன்றி.

தமிழ்ச் சிறுகதை உலகில் அறுபதுகளிலிருந்து இன்றுவரை சளைக்காமல் எழுதிவரும் அ.முத்துலிங்கத்தின் சிறுகதைத் தொகுதிகளை தமிழகத்தில் காந்தளகம், காலச்சுவடு மற்றும் அண்மையில் தமிழினி பதிப்பகங்கள் வெளியிட்டுள்ளன. இதுவரை இவரது 'அக்கா' (1964), 'திகடசக்கரம்' (1995), 'வம்சவிருத்தி' (1996), 'வடக்கு வீதி' (1998), 'மகாராஜாவின் ரயில் வண்டி' (2001) மற்றும் 'அ.முத்துலிங்கம் கதைகள்' (2003) ஆகிய சிறுகதைத் தொகுதிகள் வெளிவந்துள்ளன. தினகரன் தமிழ் விழா சிறுகதைப் போட்டியில் முதற்பரிசு, கல்கி சிறுகதைப் போட்டிப் பரிசு, லில்லி தேவசிகாமணி பரிசு( 'திகடசக்கரம்'), தமிழ்நாடு அரசு முதற் பரிசு ('வம்சவிருத்தி'), ஸ்டேட் பாங் ஒவ் இந்தியா முதற் பரிசு ('வம்சவிருத்தி'), இலங்கை அரசின் சாகித்திய மண்டலப் பரிசு ('வடக்கு வீதி) ஆகிய பரிசுகளையும் இவர் பெற்றுள்ளார்.

இவரது படைப்புகளைப் பற்றி எழுத்தாளர் அம்பை " அ.முத்துலிங்கத்தின் கதைகள் நாம் அறிந்த உலகங்களுக்கு நம்மை நாம் அறியாத பாதைகளில் இட்டுச் செல்பவை. நாம் அறிந்த உலகங்களின் கதவுகளையும், சாளரங்களையும், காதல்களையும் ஓசைப்படுத்தாமல் மெல்லத் திறப்பவை" என்று குறிப்பிடுவார்.

அடுத்தவர் எழுத்தாளர் என்.கே.மகாலிங்கம். தமிழ் இலக்கிய உலகில் 'பூரணி' மகாலிங்கம் என அறியப்பட்டவர். இவரும் அறுபதுகளிலிருந்து இன்றுவரை தமிழ் இலக்கிய உலகில் தன் பங்களிப்பை சிறுகதை, கவிதை, கட்டுரை, மொழிபெயர்ப்பு, விமரிசனம் எனப் பல்வேறு வழிகளில் ஆற்றி வருபவர். 'பூரணி' என்னும் சஞ்சிகை இவரை ஆசிரியராகக் கொண்டு வெளிவந்ததன் காரணமாகவே இவர் 'பூரணி' மகாலிங்கம் என அழைக்கப்பட்டார். கனடாவிலிருந்து வெளிவரும் 'காலம்' சஞ்சிகையின் ஆசிரியர் குழுவில் இவரும் ஒருவர். அண்மையில் காலச்சுவடு பதிப்பகம் வெளியிட்ட, நோபல் பரிசு பெற்ற நைஜீரிய எழுத்தாளர் 'சினுவா ஆச்சிபி'யின் மிகவும் புகழ்பெற்ற நாவலான 'Things Fall Apart' நாவலின் தமிழ் மொழிபெயர்ப்பான 'சிதைவுகள்' நாவலைத் தமிழுக்கு மொழிபெயர்த்தவர் இவரே. இவரது 'உள்ளொளி' என்னும் கவிதைத்தொகுதி 'காலம்' வெளியீடாக வெளிவந்துள்ளது. இவர்கள் இருவரும் போட்டிக்கதைகளில் முதல் மூன்று பரிசுக் கதைகளையும் தேர்ந்தெடுத்துத் தந்தார்கள்.

நாம் போட்டிக் கதைகளைத் தெரிவு செய்வதில் பின்வரும் முறையினைக் கையாண்டோம். நடுவர்களிடம் எழுத்தாளர்களின் பெயர்களை நீக்கிவிட்டுக் கதைகளை மட்டுமே கொடுத்தோம். எழுத்தாளர்களின் பெயர்கள் எந்தவிதத்திலும் கதைகளைத் தேர்வு செய்வதில் பாதிப்பினை ஏற்படுத்தி விடக்கூடாதென்பற்காகவே அவ்விதம் செய்தோம்.

அதற்கு நடுவர்களும் மனப்பூர்வமாகச் சம்மதித்தார்கள். அதற்கும் எமது நன்றி. போட்டிக்கு வந்த கதைகளைத் தெரிவு செய்வதில் நடுவர்கள் சிறிது திணறிப்போய் விட்டார்களென்றும் கூறலாம். பெரும்பாலான கதைகள் மிகவும் தரமாகவிருந்தன. எனவே போட்டிக்கு வந்த சிறுகதைகளில் சிறப்புச் சிறுகதைகளாகச் சில கதைகளைத் தேர்ந்தெடுக்கவுள்ளோம். அவை தேர்ந்தெடுக்கப்பட்டபின்னர் அதுபற்றிப் படைப்பாளிகளிடம் அறிவித்து, அவர்கள் சம்மதிக்கும் பட்சத்தில் அவற்றைப் பதிவுகளில் பிரசுரிப்போம். போட்டியில் கலந்துகொண்டு சிறப்பித்ததோடு, போட்டியினையும் வெற்றிகரமாக முடிப்பதற்கு உதவிய அனைத்துப் படைப்பாளிகளுக்கும், நடுவர்களாகவிருந்து பரிசுக் கதைகளைத் தேர்ந்தெடுத்த திரு. அ.முத்துலிங்கம், திரு.என்.கே.மகாலிங்கம் அவர்களுக்கும் மற்றும், முதல் மூன்று பரிசுக்கதைகளுக்குரிய பரிசுகளை வழங்கச் சம்மதித்த நந்தா பதிப்பக உரிமையாளர் திரு.நந்தா இராஜேந்திரம் அவர்களுக்கும் மீண்டுமொருமுறை எமது மனப்பூர்வமான நன்றி உரித்தாகுக. பரிசுபெற்ற படைப்பாளிகளுக்குப் பரிசுப் பணமும், சான்றிதழும் அனுப்பி வைக்கப்படும். பரிசு பெற்ற கதைகள் அடுத்த இதழில் வெளியாகும்.

**புதிய உலகம்! - நடுவர்கள் -**

'இளம் எழுத்தாளர் நாவலுக்கு முன் எழுதுவது, முதிய எழுத்தாளர் இரண்டு நாவல்களுக்கு இடையில் எழுதுவது' என்று சிறுகதையை பற்றி சொல்வார்கள். இந்த போட்டியில் இளம் எழுத்தாளர்களும், முதிய எழுத்தாளர்களும் சரிசமமாக கலந்து கொண்டார்கள் என்பது கதைகளைப் படித்தபோது தெரிந்தது. உலகம் எங்குமிருந்து போட்டிக்கு கதைகள் வந்திருந்தன. எழுதியவர்களுடைய பெயர்கள் நடுவர்களுக்கு தரப்படவில்லை. இவற்றில் 50 சத வீதத்துக்கு மேலான கதைகள் மிகத் தரமானவையாக இருந்து உற்சாகமூட்டின. எழுத்திலே முதிர்ச்சியும், வடிவத்தில் இறுக்கமும், சொல்லவந்த விடயத்தில் வேகமும் இருந்தது. மொழி, நடை, உருவம், கரு என்று ஏறக்குறைய அனைத்து கதைகளும் தரமாகவே இருந்ததால் சிறந்ததை தேர்ந்தெடுப்பதற்கு நடுவர் குழு சில விதிமுறைகளை வகுத்துக்கொண்டது:

1) கருவிலே புதுமை இருக்கவேண்டும்
2) உலகைப் புரிவதில் ஒரு புது வெளிச்சம் தர வேண்டும்
3) ஏதோ விதத்தில் மனசை நெகிழவைக்க வேண்டும்

ஹெமிங்வே சொல்லுவார் சிறுகதையின் முக்கிய அம்சம் அதன் நடுப் பிரச்சினையை எவ்வளவு முடியுமோ அவ்வளவுக்கு வாசகர்களுக்கு சொல்லாமல் தள்ளிப்போடுவது என்று. சில கதைகளில் இந்த அம்சம் நல்லாக அமைந்து கதை முடிந்த பிற்பாடும் நடுவர்களுக்கு மையப் பிரச்சினை என்னவென்று தெரியாமல் மறைக்கப்பட்டிருந்தது. இன்னொரு கதை, நகைச் சுவையாக அமைந்து படிப்பதற்கு சுவாரஸ்யமாக இருந்தது, ஆனால் முடியும்போது ஒரு துணுக்கை வாசித்த நிறைவோடு முடிந்தது; கலையம்சம் கூடிவரவில்லை. இன்னும் சில கதைகள் பிரசாரத்தை தலையிலே காவி கதையை நசித்துவிட்டன. இன்னும் சில சூழல் மாசு அழிவு தரும் போன்ற பெரும் உண்மையை கண்டுபிடித்தன, ஒரு புது வெளிச்சமும் தராமல். சுனாமி பற்றி ஒரு கதை. என்ன சொல்ல வருகிறாரோ அதை மறைக்கவேண்டும் என்பது எழுத்தாளருக்கு தெரியவில்லை.

இனி தேர்வு செய்த கதைகளுக்கு வருவோம்:

முதலாவது: 'எல்லாம் இழந்த பின்னும்': ஜேர்மனியில் நடப்பது.இலங்கையில் இருந்து அகதியாக வெளிக்கிட்ட ஒரு பெண் துப்புரவுத் தொழிலாளியின் கதை. ஓலம் இல்லாமல் அந்தப் பெண்ணின் துயரம் சொல்லப்படுகிறது. ஜேர்மன் சீமாட்டியிடம் பார்க்கும் அடிமை வாழ்வும், இலங்கை சுகபோக வாழ்வும் மாறி மாறி காட்சியாகிறது. ஒரு நாள் மேற்கையும் கிழக்கையும் பிரிக்கும் ஜேர்மன் சுவர் உடைகிறது. பிரிந்த உறவுகள் சேர்ந்து விடுதலை கிடைக்கும்போது இவள் மனமும் பறக்கிறது. 'வெளியே

பாரம் தாங்காமல் மேகம் கீழே இறங்கிக் கொண்டிருக்கிறது' என்று கதை முடிகிறது.

இரண்டாவது: 'நான், நீங்கள் மற்றும் சதாம்': இந்தியாவில் நடப்பது. மர்மமான பின்னணியுடன் ஒரு தோட்டக்காரன். அவனுடைய இறந்தகால வாழ்க்கை அவனுக்குள் பெரும் குற்ற உணர்வை ஏற்படுத்துகிறது. கணத்துக்கு கணம் மாறும் அவன் செய்கைகளை உளவியல் ரீதியாக நுட்பமாக இந்தக் கதை படம் பிடித்திருக்கிறது.

மூன்றாவது: 'தீதும் நன்றும்': அமெரிக்காவில் நடப்பது. சிறுவன் ஒருவனுடைய அம்மா ஒரு அமெரிக்க வெள்ளைக்காரனுடன் போய்விடுகிறாள். தனக்கு நடக்கும் துன்பம் எல்லாவற்றுக்கும் அவளே காரணம் என்று பையன் நினைக்கிறான். இறுதியில் ஒரு சம்பவம், மனிதர் கையில் எதுவுமே இல்லை என்பதுபோல நடக்கிறது. 'தீதும் நன்றும் பிறர் தர வாரா' என்ற கணியன் பூங்குன்றனின் வார்த்தைகளை நினவூட்டிக்கொண்டு கதை முடிகிறது.

கதைகளைப் படித்தது நிறைவு கொடுக்கிறது. உலகின் மூன்று வெவ்வேறு பகுதிகளில் இருந்து வந்த இந்தக் கதைகள் ஒரு புதிய உலகை வாசகர்களுக்கு திறக்கின்றன.

**52. முதற் பரிசு: எல்லாம் இழந்தபின்னும்............. - சாந்தினி வரதராஜன் (ஜேர்மனி) -**

அந்த வீட்டிலிருந்து வெளியே வரும்பொழுதுதெல்லாம் இப்படித்தான் அந்த முயலும் சிங்கத்தின் குகையிலிருந்து வெளியே வந்திருக்கும் என்ற நினைப்பு எப்பவும் வரும். வரும் வழியெல்லாம் முப்பது ஈரோவைப்பற்றிய கனவும் அது இருக்கா இருக்கா என்று ஜீன்ஸ் பொக்கற்றை தடவி பார்ப்பதும் வெளியே எடுத்துப்பார்த்து தொலைத்த நாட்கள் நினைவில் வர மனம் எதை எதையோ நினைத்து பெருமூச்சை வெளியே தள்ளியது. இப்¦;பாழுதெல்லாம் வாழ்வின் பிடிப்பு மெல்ல நழுவுவதுபோல் உணர்வு எழுந்து கொண்டே இருக்கிறது. எல்லாமே கொஞ்ச நாட்களில் சலிப்பு தட்டிவிடுகிறது. எப்பவும் வேலையையும் காசையும் அசைபோடும் மனசு எந்த வேலையென்றாலும் என்னைக்கேட்காமலே ஓம் என்று தலையாட்டுகிறது. எல்லா வேலையையும் ஒருநாள் தூக்கி எறிந்துவிட்டு எந்த அழுத்தமும் இல்லாமல் பழையபடி கவிதையை,கதையை அசைபோட்டபடி.

இப்படி பல முறை முடிவுகள் எடுத்திருக்கின்றேன். அப்பொழுதெல்லாம் இல்லாமை பல வழிகளில் மனவெளியில் தன் இருப்பை உணர்த்தி என் உறுதியை பொல பொலவென உடைத்தெறியும். ஆனால் இம்முறை அப்படியல்ல இனி இயலாது என்று கைகளும் கால்களும் கூட மறுக்கத் தொடங்கிவிட்டன. மனமோ வங்கிக்கடனை கணக்கு பார்த்து உடைந்து விழத்தொடங்கியது. என்ன செய்ய ? அம்மா புத்தகம் வாங்க நிறைய காசு வேணும். மகனின் குரல் திரும்ப திரும்ப கேட்டுக்கொண்டே இருந்தது.
நான் உடைந்து விழும் பொழுதேல்லாம் காற்றோடு அடிபட்டு போகும் சருகைப் போல. வெள்ளைக்காரியும் என்னை அப்படித்தான் நினைத்திருக்கிறாள்

இல்லாவிட்டால் ஒரு சின்ன தவறுக்காக படிகளில் நடக்க முடியாவிட்டாலும் தவண்டு கொண்டு வாயில் துடைக்கும் துணியை கவ்வியபடி பாய்ந்து வந்த தோற்றம் ஏதோ ஒரு பெரிய நாய் என்னை கடித்து துப்புவதற்கு வருவதுபோல். ராகினி வீட்டு ஐ¢ல்லும் அப்படித்தான் வந்தது. அதுக்கு தன் குட்டிகளை நான் தூக்கிவிடுவேனோ என்ற பயம். ஆனால் வெள்ளைக்காரி தான் எஜமானியாகவும் நான் ஏதோ அடிமைமாதிரியும் அப்படித்தான் நினைத்திருக்கிறா. நான் பிறந்து வளர்ந்த என்ர மண்ணிலையும் கூனிக்குறுகி அவர்கள் கேட்கும் பொழுதெல்லாம் கர்ணணோடு ஒட்டிய கவசம் மாதிரி காவித்திரியும் அடையளா அட்டையை காட்டி களைத்து இவைகள் எல்லாம் வேண்டாம் என்றுதானே ஓடிவந்தனான். வந்த இடத்திலும்.

இந்த பொழுதுகளிலெல்லாம் அண்ணா பொகவந்தலாவிலிருந்து வீட்டு வேலைக்கு அனுப்பிய ஒவ்வொரு முகமும் என்னை பார்த்து சிரிப்பதுபோல் இருக்கும். அதிலும் கடைசியாக வந்த குமார். அவன் இப்ப கொழும்பில பெரிய மொத்த வியாபாரி.
காலம் எப்படி எல்லாம் சுழன்றுகொண்டு ஓடுகிறது. ஏணிப்படியின் உச்சத்தில் இருந்த

வாழ்க்கை என்ன நடக்கிறது என்று சிந்திக்கும் முன் மலைப்பாம்பின் வாய்க்குள் அகபபட்டு சட்டென்று கீழ் இறங்கிய விளையாட்டுப்போல் எல்லாம் நடந்து முடிந்துவிட்டது. இயலாமையும், இல்லாமையும் இணைந்து வேதனை தீயை வளர்த்தபடி இருக்க இவைகளிலிருந்து மீளமுடியாத மனசு பெரும் குரல் எடுத்து அழுகிறது.

இருட்டு எங்கும் இருட்டு. இலைகளை இழந்த மரங்களும், மௌனித்து கிடக்கும் வெளிகளும் வெறும் வெள்ளைச்சுவர்களும். சில சமயம் இந்த வெள்ளைச்சுவர்கள் என்னை நெரிப்பது போல் இருக்கும் பல சமயம் விரல்களை நீட்டியும் மடித்தும் என்னை குற்றவாளி ஆக்கும். இனி இயலாது வெள்ளைக்காரியின் வீட்டு சுவர்களும் கதவுகளும் கூட என்னை இப்படித்தான் அடிக்கடி முறைத்து பார்க்கும். அங்கு வேலை செய்யும் பொழுதெல்லாம் மனம் ஏதோ ஏதோ நினைத்து அழுதாலும். கை கூவர் பிடிக்க, கண் மணிகூட்டை பார்க்க, மனம் பெருக்கல் வாய்பாட்டை பெருக்கி பார்க்கும். இந்த மாதம் அண்ணாவுக்கு காசுஅனுப்பவேணும்.அனுவுக்கும் புத்தகம் வாங்க நிரம்ப காசு தேவை எண்டு சொன்னவர். கிறிஸ்மஸ் காசு ஐம்பது ஈரோ தருவா அதையும் சேர்த்து அனுப்புவம். இப்படி பல கற்பனைகள் முப்பது ஈரோவை சுற்றி சுற்றி ஓடும். கை படிகளை துடைக்கும்: வெள்ளைக்காரி கண்ணாடி முன்னால இருந்து கொண்டு ஒரு கண் என்னிலும் மறு கண் கண்ணாடியிலுமா இருப்பதை பார்த்தால் ஆறுகுள்ளரும் இளவரசியும் கதைதான் ஞாபகத்தில வரும் அதிலையும் இப்படித்தான் சூனியக்காரி  இளவரசியை வீடுதுடைக்கவிட்டிட்டு எந்த நேரமும் கண்ணாடிக்கு முன்னால இருந்து கொண்டு கண்ணாடி கண்ணாடி இப்ப சொல்லு நான் அழக இல்லை அவள் அழகா? என்று கேட்டுக்கொண்டே இருப்பா. இவவும் அப்படித்தான் கேட்கிறவோ? நான் எனக்குள் சி¡¢ப்பதை பார்த்தால் போதும் நான் நினைக்கிறன் நீ எங்கோயோ போய்வராய் போல இருக்குது எனக்கு அப்பவும் சிரிப்புவரும். இந்த வெள்ளைக்காரர் எப்ப எப்படி இருப்பினம் என்று சொல்லவே முடியாது. போன கிழமை சிரிச்ச மனுசிதானே எண்டு சிரிச்சா இந்தக் கிழமை பிடரியை சிலுப்பிக் கொண்டு இருக்கும். கறுப்பிக்கு காசு வேணும் அவள் என்ன சொன்னாலும் வருவாள். இவள் அகதிதானே. இவளுக்கு மானம் ரோசம் ஒன்றும் இருக்காது இருக்கவும் கூடாது அப்படித்தான் மனதுக்கள் என்னைப்பற்றிய ஒரு வரைவிலக்கணத்தை வைத்திருப்பா. ஒரு நாள் வேலை செய்யும்  பொழுது கேட்டாள். உனக்கு உன்ர நாட்டை பார்க்க ஆசை இல்லையே? ஏன் இல்லை ஒரு நாள் எண்டாலும் நான் பிறந்த வீட்டை பார்க்கவேணும். அப்ப என்னத்துக்கு இங்க வந்தனீ ? மனிதனுடைய உணர்வுகளை புரிந்து கொள்ள முடியாத ஜென்மத்திடம் என் உணர்வை கொட்டியதை நினைத்து வெட்கப்பட்டுபோனேன்.

ஓம் நான் ஏன் எல்லாவற்றையும் உதறிப்போட்டு இங்க வந்தனான்? ஏன் இப்படி ஒரு வேலைக்காரி வாழ்க்கைக்குள் உழன்று கொண்டு இருக்க வேணும். வேலையை முடித்துவிட்டு வீட்டுக்கு போனால் அங்கேயும் அதே தும்புத்தடியும் மப்பண்ணிற

தடியும் எனக்காக காத்துக்கொண்டிருக்கும். எப்படியெல்லாம் என்னை அம்மா வளர்த்தா. நினைவுகள் பெருக பெருக இனி இந்த வீடு இருக்கும் தெருவுக்குள் என் கால்கள் வராது என்ற நினைப்பும் சேர விறு விறுவென கால்கள் நடைபோட தொடங்கும். ஆனால் எங்கேயோ என் முதுகிலயோ, அல்லது புறங்காலிலையோ எங்கேயோ அந்த வீட்டு தும்புத்தடியும் மப்பண்ணிற தடியும் என்னோட ஒட்டிக்கொண்டே வரும்.

இப்படித்தான் எனக்குள் எழும் எல்லா உணர்வுகளும்.நம்பிக்கையும் எதிர்பார்ப்பும் பொய்யாகி போகும் பொழுது வாழ்க்கை வெறுத்து போய்விடுகிறது. வருவன் என்று சொல்லிவிட்டுத்தானே வந்தனான். கட்டிப்பிடித்து பின் கைகள் இறுகி, விரல் நுனி தடவி, கண்கள் கலங்கி, ஏங்கி அம்மா நின்ற காட்சி அப்போதும் கால்கள் தன் பாட்டில் நீட்சியான பாதையை நோக்கி நடைபோட்டன. இடைவெளிகள் நீள நீள மனம் பெருங்குரல் எடுத்து அலைபோல் அழுதிருக்கும். அலைகள் அழுவது யாருக்கும் புரியாது. இலைகள் உதிரும் பொழுது மரங்கள் மௌனித்து அழுவது போல்தான்அலைகளும். நடந்து நடந்து பாதைகள் இல்லாத இடமெல்லாம் பாதைகள் வகுத்த பொழுது எத்தனை முகங்கள் நடைபோடத் தொடங்கின. வேர்களின் முகங்களில் காலால் புழுதியை வாரி இறைத்தபடி நடந்தன. புழுதி அப்பிய முகங்களில் வழிந்த கண்ணீரால் புழுதியை கழுவவே முடியவில்லை. இப்பொழுது நான் வேராகி வேர்களில் முளைத்ததெல்லாம் மலர்கள் என முகிழ்த்து நின்ற பொழுது அவை நெருஞ்சி முட்களாக முகம் காட்டி சிரித்தன .அப்போதுதான் நான் முதல் முதலாக உடைந்து போனேன். மறுபடியும் என் வேர்களை தேடினேன் அழுதழுது தேடினேன். அவை அழுது, களைத்து, உக்கி,நெருப்போடு போன சேதி காலம் கடந்து...........................

கரை கடந்து, கடல் கடந்து விலகி வரும் பொழுது அலைகள் உடைந்து சிதறி அழுத பொழுது என் காதுக்கு கிட்டவே இல்லை. மல்லாந்து படுத்து தனக்குதானே துப்புகிறது என்றல்லவா நினைத்திருந்தேன்.யாரும் அறிய முடியாத ஆழத்தில் துயர்கள் நிரம்பி வழியும் பொழுது வெடித்து ஓவென பெரும் இரைச்சல் கொண்டு எழுந்து பாறாங்கற்களில் மோதி மோதி அழுதது.,அழுத அலைகள் கரைகளுக்கு வருவதும் பின் பெரும் துயர் சுமந்து திரும்பியதையும் அது யாருக்கம் சொல்லவே இல்லை. கணவர் என்ற பெரும் சுவர் எல்லாவற்றையும் மறைத்துவிட்டது. எல்லா நினைவுகளுமே குளத்தில் போட்ட கல்லாக அடங்கிக் கிடக்கிறது. அவை மேலெழும் பொழுது கலங்கிப்போகும் குளம்போல்தான் நானும்.

எந்த நினைவையும் என்னால் தூர வீசி எறிய முடியவில்லை.அவை எப்போதும் ஓர் மூலையில் பதுங்கியிருந்து சில சமயம் என்னை பார்த்து சிரிக்கும் பல சமயம் முறைக்கும். அது எலலோருடைய குரலிலும் என்னை கேள்வி கேட்கும். .யாழ்ப்பாணத்திலிருந்து வந்த அக்காவிடம் எதை எதையோ கேட்க மனம் துடித்தது. ஆனால் பாலைமரம் எப்படியிருக்கிறது? என்று மட்டும்தான் கேட்க முடிந்தது.

கடந்தகாலங்கள் என்னை பிடித்து வைத்துக்கொண்டிருக்கிறதா? அல்லது நான் அதை பிடித்து வைத்திருக்கின்றேனா? எல்லவாற்றையும் உதறிவிட்டுத்தானே வந்தேன்.

பகலை தொலைத்த நாட்கள் அவை. வெறும் இருட்டுமட்டுமே பரவிக்கிடந்தது. எல்லாவற்றையும் தொலைத்த வெறுமை. மனிதர்களின் புரியாத மனம் குழம்பிப்போய் கிடந்தது

குழம்பிப்போய் கிடக்கும் வானத்தை போல. சில வேளைகளில் மட்டும் வெளிச்சம் பரவும் அதுவும் சில நிமிடங்களில் ஓடி ஒளிந்து கொள்ளும். இரவின் அமைதி தொலைந்து போயிருந்தது. ஏராளமான கனவுகளை தொலைத்து நடுங்கிய இரவில் வீடும,; காற்றும், அந்த ஊரும், சந்தியும் எல்லாவற்றையும் உள்வாங்கி தனக்குள் புதைத்து வைத்துக் கொண்டிருந்தது. யாழ்ப்பாண வீதிகள் அங்கு வாழ்ந்தவர்களின் மனதை பிரதிபலித்துக்கொண்டிருந்த காலம் வேற்று முகங்களினால் பறிக்கப்பட்டுக்கொண்டிருந்தது. எல்லா நிகழ்வும் நிரப்படாத இடைவெளியாய் நீண்டு கொண்டே போனது. காட்டிக் கொடுப்போரின் விரல்களும் எல்லா திசைகளிலும் நீள நீள காணமல் போவோரின் பட்டியலும் நீண்டு கொண்டே போனது. அதே விரல்கள் என் தோழியின் கணவர் முன் நீண்ட பொழுதுதான் எனக்குள் பயம் இன்னும் அதிகமாக படரத் தொடங்கியது. இலைகள் அசைந்தாலும், இரவு கவியத்தொடங்கினாலும், நாய்கள் குரைத்தாலும் எல்லாவற்றுக்குமே பயம். பயம் வாழ்க்கையை ஆதிக்கம் பண்ணத் தொடங்கியது. கற்பனைகளை சுமந்த முகங்களெல்லாம் மரண பயத்தை சுமந்தபடி உலவியதை பார்க்க வாழ்க்கையின் கொடுரம் புரியத்தொடங்கியது. சிரித்தும், கதைத்தும் கழிந்த வாழ்க்கை அடங்கி, ஒடுங்கி, நடுங்கி வாழமுயன்றபோது நாளைய வாழ்வு கேள்விக் குறியானது. கேள்விகள் நிறைந்து நிறைந்து வழியத் தொடங்கியது. அத்தனை முகங்களிலும் துயரமும், பயமும், கேள்வியும் மட்டுமே. போரின் நிஜமுகத்தை எதிர் கொள்ள என்னால் முடியவில்லை என் முகத்தை எங்கேயாவது ஒளிக்க வேண்டும்.

பனிப் புகார் என் அடையாளத்தை மறைக்கத்தொடங்கியது. வீட்டை விட்டு ஓடியகால்கள் பனிகளுக்குள்ளும், ஆற்றிலும் புதைந்து விறைத்தன.புதைந்த கால்களின் அழுகுரல் ஊரில் கேட்டது போலவே. ஆனால் இங்கு ஊர் அசையவே இல்லை.ஏது இயலாது என்று ஓடி வந்தேனோ அது இங்கேயும்........................ வழமைபோலவே என் கால்கள் புதிய பாதையை நோக்கி நடந்து நடந்து முற்றுப்புள்ளியில் நின்றபோது அடையாளங்களை அழித்தும் ஒழித்தும் முகத்தில் பொய்களை அப்பியபடி இங்கேயும் விஷஜந்துக்கள் பற்களை நீட்டியபடி காத்திருக்கின்றன என்பதை அறியாத அப்பாவியாய்.

அப்போது எல்லாவற்றிக்கும் பெயர் இருந்தது. வீட்டுக்கும், அறைகளுக்கும், எங்களுக்கும். இப்போ வெறும் கற்குவியலும் மணலுமாக இருக்கும் வீட்டுக்கு என்ன பெயர்? இங்கு

நாங்கள் இருக்கும் வீட்டுக்கு பெயர் அகதி முகாம். எனக்கும் அகதி பொம்பிளை விறாந்தை, கோல், குசினி, சாப்பாட்டறை, சாமிஅறை, படிக்கிறஅறை, படுக்கைஅறை எல்லாமே ஒரு அறை. அம்மாவுக்கு கடிதம் எழுதுவம் என்று நினைத்தவுடன் மனம் வரிகளை எழுதி எழுதி அழித்துக்கொண்டு இருக்கும். நான் நலம் அதுபோல் நமசிவாய பள்ளிக்கூடத்தில சிவஞான ரீச்சர் கடிதம் எழுதுவது எப்படி? எண்டு எப்ப காட்டித்தந்தாவோ அதில இருந்து இப்படித்தான் எழுதிறன். வெளியில போனாலும் வெள்ளைக்காரர் எப்பிடி சுகமா? ஏன்று கேட்டால் போதும் எங்கிருந்துதான் இந்த பொய் சிரிப்பு வந்து ஒட்டிக்கொள்கிறதோ தெரியவில்லை. எல்லாமே பொய்யாகி நான் உடைநது அழும்பொழுது  வழியும் கண்ணீர் கூட பனியில் இறுகி நிற்கும்.

அழுவதற்கும் நேரம் இல்லாத வாழ்க்கை. எவர் கண்களுக்கும் புலப்படாத விலங்கு கால்களில் பூட்டப்பட்டுக்கிடந்தது.ஒரு குறிப்பிட்ட எல்லைக்குள் நடந்து நடந்து அலுக்கும் மனதை இசைக்கும் கருவியாக பழைய நினைவுகள். நினைவுகள் தழும்பி தழும்பி பல சமயம் அதுவும் அழும். அம்மா, வீடு, ஜிம்மி என்னை அழவைக்க வேறு எதுவும் தேவையேயில்லை. என்மேல் யார்கை பட்டாலும் பாய்ந்து கடிக்கும் ஜிம்மி. அம்மா சொல்லுவா நீ ஜிம்மிவேணுமென்டு ஜில்லிட்ட கடி வாங்கினனிதானே அதனாலதான் உனக்கு ஆர் அடிச்சாலும் அவையளை கடிக்குது. எங்கட றோட்டில உள்ள எல்லாரும் சொல்லுவினம்.

இது நாய் இல்லை கடவுள்.

ஓம் நானும் அப்பிடித்தான் நினைக்கிறன் எண்டு அம்மாவும் சொல்லுவா.  அது எப்பவும் இப்பிடித்தான் சா¢யா நாலுமணிக்கு அம்மாவோட சேர்ந்து கேற்றில காவல் நிற்க்கும். சந்தியில என்ரை வெள்ளை சாறி தொ¢ஞ்சா போதும் பாய்ந்து கொண்டுவரும் தண்ணி எடுக்க றோட்டில நிற்க்கிற எல்லாரும் சொல்லுவினம் சுகந்தி பள்ளிக்கூடத்தால வறாள்.

என்ர அம்மா மாதிரியே ஜிம்மியும் எப்பவும் என்னோடையே இருக்கும். எல்லாரையும் கடிக்கிற ஜிம்மி ஏன் கணக்கு மாஸ்ரை கடிக்கிதில்ல? விடியாத இருட்டில இருட்டு மாதிரியே இருக்கிற அவரின்ட நிழல் விறாந்தை யன்னல் கண்ணாடியால தெரியும். பிறகு ராகினி, கமலா வருவினம் எனக்கும் ராகினிக்கும் மடக்கை கணக்கு படிப்பிக்கத்தொடங்குவார்.மார்கழி மாதம் வந்தா போதும் பண்ணைப் பாலச்சத்தம், நல்லூர்மணி, பெருமாள்கோவில் சுப்பிரபாதம், எல்லாம் யாழ்தேவிகூட காதுக்க கூவும் அதில நாங்கள் நித்திரை தூங்கிறதை பாங்கொலி காட்டிக்கொடுக்கும். இறுக்கி குட்டுவார். ஆனால் ஜிம்மி பார்த்துக்கொண்டு சும்மா இருக்கும். சோதனை வந்தாபோதும் நானும் அக்காவும் சரஸ்வதி கலண்டருக்கு சண்டை போடத் தொடங்கிவிடுவம். பிறகு அம்மா பூபாலசிங்கம் கடையில இரண்டு மெய்கண்டான் கலண்டர் வாங்குவா. நான்

கலண்டரில எனக்கு மட்டும் விளங்கிறமாதிரி ஏதாவது குறிப்பு குறிச்சுவைச்சிட்டு அதில கட்டியிருக்கிற சணலில பிடிச்சு ஆட்டிக்கொண்டு போவன். அக்கா சொல்லுவா எனக்கென்ன கடவுள் உன்னை கோபிப்பார். அக்கா எப்பவும் இப்பிடித்தான். நல்லா பொய் சொல்லிறன் எண்டு அம்மாட்டை கோள்மூட்டுவா. அம்மாவும் நல்லுர்ர் உதய பூஜைக்குபோற நேரமெல்லாம் திருஞர்ன சம்பந்தர் ஆதினத்துக்கு கூட்டிக்கொண்டுபோய் மணி அய்யரிடம் சொல்லுவா. சுவாமி இவள் வாய்திறந்தா பொய் சொல்லிக்கொண்டே இருக்கிறாள். அவரும் ஆதினத்தில பெரிய கரும்பலகையில ஒட்டியிருக்கிற படத்தை காட்டுவார். இங்க பார் பொய் சொன்னா என்ன தண்டனை கிடைக்கும் கண்டியோ? அதில அம்புலிமாமாவில வருகிறவை மாதிரி கொம்புவைச்சு பெரிய மீசைவைச்ச அரக்கர்கள் நகங்களை பிடுங்கிக் கொண்டு இருப்பினம். மற்றவை கொதிக்கிற எண்ணைக்குள்ள கைவைச்சு அமுக்குவினம். எனக்கு பயம்வந்திடும். அக்கா என்னை பார்த்து சிரிப்பா. பிறகு சுடச்சுட கற்கண்டு போட்ட பால்தீர்த்தம் தருவார். இரண்டு தரம் வாங்கி குடிச்சதுக்கு அம்மாட்டை நுள்ளுவாங்குவன். அக்கா அம்மா சொல்லிற மாதி¡¢யெல்லாம் கும்பிடுவா. ஆனால் நான் நாங்கள் வீட்டை போறதுக்கிடையில காப்புக்கடைக்காறன் பலுர்ன் கடைக்காறன், இனிப்பு விற்க்கிற பொரிகடலை வண்டில்காரன் எல்லாரும் எழும்பி கடையை திறந்திட வேணும் கடவுளே எண்டு முருகனிட்டை கேட்டுககொண்டே இருப்பன்.

அக்காவின்ர பள்ளிக்கூட சூட்கேஸ் உள்மூடியில சரஸ்வதி, பிள்ளையார் எல்லாரையும் ஒட்டிவைச்சிட்டு படிக்க முதல் கும்பிட்டிட்டுதான் படிக்கத் தொடங்குவா. சமயபாடத்தில கேள்வி கேட்டுக்கொண்டே இருப்பா. நா¢யை பா¢ ஆக்கினது ஆரெண்ட சொல்லு, திருமறைக்கதவை திறக்க பாடினது யார்? மூடப்பாடினது யார்? நீ முதல்ல சமயபுத்தகத்தை மூடு இவையளுக்கு வேற வேலை இல்லாமல் அற்புதங்கள் செய்தவை இவையாலதான் சமயபாடத்தில கேள்வி கூடிக்கொண்டே போகுது.அதுக்கும் அம்மாட்டை கோள்மூட்டி அடிவாங்கி தருவா. சோதனை முடிந்த பிறகு இரண்டு விரலில ஒண்டை தொடு என்டு நெடுகலும் கேப்பா. ரஞ்சன,; ராஜன், ரவி, பபா எல்லாரும் பிறேமக்கா வீட்டுக்கு பின்னால இருக்கிற சோனக வழவுக்க போய் வெடிக்கிற காய்க்கு எச்சில துப்பிப்போட்டு கண்ணை மூடிக்கொண்டு வெய்யிலில பிடிப்பம். அது வெடிச்சா பாஸ் அக்கான்ர காய் சத்தத்தோட வெடிக்கும். பிறகு பள்ளிக்கூடத்தால வரேக்க இந்த கல்லை வீடுமட்டும் காலால தள்ளிக்கொண்டு போன நான் பாஸ்பண்ணுவன் எண்டு சொல்லி தள்ளிக்கொண்டே வருவா அக்காவுக்கு எல்லாம் சா ¢யாத்தான் இருக்கும். ஆனா சோதனை மறுமொழி மட்டும் மாறிவரும். பிறகு கொஞ்ச நாளைக்கு எனக்கு பிறேமக்கா வீட்டுக்கு போய் எங்கட வீட்டில இல்லாத திருவாத்தி பூ பிய்க்கிற வேலை இருக்காது. எனக்கு ஒரே யோசனையா இருக்கும் எல்லாம் சா¢யாத்தானே வந்தது. பிறகேன் அக்கா பாஸ்பண்ணேல்ல?

எந்தக்கேள்விக்கும் எனக்கு சா¢யா விடை கிடைப்பதே இல்லை. எந்த வேலை

தேடிப்போனாலும் முன் அனுபம் இருக்கா.......?

நீங்க வேலை தந்தால்தானே முன் அனுபவம் வரும். வெள்ளையனின்ர முகம் மெல்ல சிவக்கும்

இந்த வேலைக்கு படிச்சனியோ?

உங்கட அரசாங்கம் என்னை மொழியே படிக்க விடேல்லை.

ஆனா உனக்கு வாய் பெரிசா இருக்கு.

எல்லாம் உங்கட ஆட்களோட பழகி பிடிச்சது

உனக்கு சரியான வேலை ஒன்று இருக்குது. காலையில கடை திறக்க முதல்வந்து கூட்டி துடைச்சிட்டு போ. இப்ப எனக்கு காது எரியும் ஏன் அதுக்கு முன் அனுபவம் வேண்டாமோ? என்ர கோபத்தை காதவில மட்டும்தான் காட்ட முடிந்தது. பகல் வருவதும் போவதுமாக இருந்தது. ஆனால் இரவுமட்டும் நிரந்தரமாக தங்கியிருந்தது. கடலையும் காற்றையும் தொலைத்து உயர்ந்த கட்டிடங்களுக்கிடையில் சிறு குப்பையாக வாழும் வாழ்க்கை சலிப்பும் வெறுப்பும் கலந்த கலவையாக. தொலைகாட்சி தன்பாட்டில் ஓடிக்கொண்டிருந்தது. அங்கேயும் வெள்ளைக்கா¡¢ கதிரையில இருக்க அமொ¢க்க கறுப்பு இன மனுசி மண்டியிட்டுவீட்டை துடைத்தக்கொண்டிருந்தாள். எ¡¢ச்சலுடன் சனலை மாற்றினேன். ஓட்டப்போட்டி வெள்ளையர்களுடன் கறுத்தவர்களும் விடதே விடதே என மனம் பதைபதைத்துக் கொண்டிருந்தது. படாசாலையால் வந்து பிள்ளைகள் கேட்கும் கேள்விகளுக்கு சில வேளைகளில் என்னிடம் பதிலே இருக்காது. நாங்கள் ஏன் அம்மா கறுப்பா பிறந்தனாங்கள்? இந்த சோப்போட்டு குளிச்சா வெள்ளையாவருவமோ? லூக்காஸ் இதுபோட்டுத்தான் குளிக்கிறவனாம். அதுதான் அவன் வெள்ளையா இருக்கிறானோ?. அம்மா ஏன் சாத்தானையும் கள்ளனையும் கறுப்பா காட்டினம்? பள்ளிக்கூடத்தில எல்லாரும் படம் கீறேக்க என்னை பார்க்கினம். எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டிருந்த பெரிய மகன். மை பமிலியை பற்றி எழுதவேணும் என்னுடைய அம்மா ஒரு புட்ஸ் பிறா (துடைக்கிறமனுசி) எண்டே எழுதிறது. மற்ற பிள்ளையள் எல்லாம் தங்கட அம்மா லேரா (ஆசிரியர்), பாங்கில புக்கள்ரா¢ன்(கணக்காளர்), எண்டு எழுதிக்கொண்டு வருவினம் எங்கட அம்மாவும் ஜ ஏ பி எல்லாம் படிச்சவ எண்டுதானே அப்பா சொன்னவர். பிறகேன் சுமிற்சிக் (ஊத்தை) வேலையெல்லாம் செய்யிறா? எங்களோட படிக்கிறவை ஆராவது கண்டிட்டா எங்களுக்கு வெக்கமா இருக்கு அம்மா. ஓம் என்கிறமாதிரி மற்றப்பிள்ளைகளும் என்ர முகத்தை பார்ப்பினம். பிள்ளைகளின் ஆதங்கங்கம் ஒவ்வொன்றாய் எதிரொலித்துக்கொண்டிருக்க. முள்ளந்தண்டில் குளிர் ஊசியை ஏற்றியபடி இருந்தது.

கால்கள் சிங்கத்தின் குகையை நோக்கி தன்பாட்டில் நடைபோட்டது. காலம் என்னோடு வர மறுக்கின்றது. நானும் அதுவும் எப்போதும் விலகியபடி.

பள்ளிக்கூட யூனிபோமை கஞ்சிபோட்டு அலம்பி அயன்பண்ணி கசங்கமா கை முட்டாமல் றோட்டுக்கு வந்தா தேவிகாவின்ர அம்மா குப்பை லொறிக்குள்ள குப்பையை அள்ளிபோடும் பொழுது எழும் புழுதியில் கோபம் வரும். என்னுடைய கோபம் தேவிகாவை அழவைக்கும். மரங்களும் வெள்ளைக்காரி மாதிரியே. சருகுகளை அள்ளிபோட்டிட்டு முதுகைதடவியபடி திரும்பி பார்த்த அடங்கா பிடரிமாதிரி தலையை உலுப்பி திரும்பவும் கொட்டிப்போட்டு என்னை பார்க்கும்.. அள்ளின சருகுகளை குப்பை வாளிக்குள் கொட்டும் பொழுது பாடசாலைக்கு போகும் ஒவ்வொரு சிறுவர்களின் பார்வையிலும் தேவிகா தொ¢வாள். கொட்டடி பள்ளிக்கூடத்தில் மாமரத்துக்கு கீழே வட்டமாக இருந்து கொண்டு முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும் என்று அர்த்தமே புரியாது கத்தி கத்தி பாடமாக்கினதன் அர்த்தம் இப்பொழுதுதான்................ றொயிலற்றை கழுவும் பொழுது தண்ணீரைவிட கண்ணீரால் கழுவுவது அதிகமாக இருக்கும். வாளியின் கம்பிச்சத்தம் எதையெல்லாமோ நினைவுபடுத்தும். கோடியால் வந்து போகும் ஊத்தை துரை வந்திட்டான் என்று அம்மாவுக்கு அடையாளம் காட்டுவது இந்த வாளியின் கம்பிச்சத்தம்தான். ஒரு நாள் வாளியை வாங்கும் பொழுது ஊத்தை துரையின் விரல் என் கைமீது பட்டுவிட்டது என்பதற்காக இழுத்துவைத்து முழுகவார்த்த அம்மா. இப்போ எதைவைத்து என்னை முழுகவார்ப்பா? பொய்யாகி போன வாழ்க்கையில் இனி சொல்வதற்கு எதுவும் இல்லை கேட்பதற்கும் ஆரும் இல்லை. தொலைகாட்சியில் பிரிந்த ஜேர்மனி ஒன்றான நாளைப்பற்றிய விமர்சனம் ஓடிக்கொண்டிருந்தது. வெள்ளைக்காரி ஒரு கையில் பாண்துண்டும் மறுகையில் கோப்பியுமாக மிக ஆர்வமாக பார்த்துக்கொண்டிருந்தா. நானும் ஒரு கையில் துடைக்கிற துணியும் மறுகையில் தும்புத்தடியுமாக ஓடிக்கொண்டிருந்தேன். ஒரு நொடியில் மதில் கீழே சரிந்து கொண்டிருந்தது. பலர் அதன் துண்டுகளை இடிபட்டு எடுத்துக்கொண்டிருந்தார்கள். இரண்டு பக்கமாக உறவுகளை பிரித்து வைத்திருந்த மதிலின் சரிவை வானங்கள் எழுந்து வெடித்து மகிழ்வை தெரிவித்துக்கொண்டிருக்க பிரிந்த உறவுகள் கட்டிப்பிடித்து ஆனந்தக் கண்ணீர் வடிக்க, எனக்கும் அழுகைவந்தது. இப்படித்தான் ஏ 9 பாதை திறக்கும் பொழுது இருந்தாக அண்ணா எழுதியிருந்தார். இதை மூடும் பொழுது எத்தனை உயிர்களின் இரத்தம் இந்த மண்ணில் சிந்தியிருக்கும். எத்தனை உறவுகள் பிரிக்கப்பட்டிருக்கும். எத்தனையோ நாட்களாக மெழுகுதிரியை ஏற்றிக்கொண்டு ஒரு ஓரத்தில் நின்று வயது முதிர்ந்த அன்னையர்கள் தங்கள் குழந்தைகளின் பெயர்களை சொல்லிச் சொல்லி அழைத்தார்களாம். அவர்களின் ஒப்பாரிகளை ஏக்கங்களை எல்லாவற்றையும் உள்வாங்கியும் இரங்காத சுவர் இப்போ மண்ணில் சாய்ந்து கிடந்தது. அந்தகாட்சியும,; பிள்ளைகளை இறுதிக்காலம் வரையும் காணது ஏக்கத்துடன் இறந்த அத்தனை அம்மாவைபற்றிய நினைவும் என்னை ஆக்கிரமித்துக்கொண்டிருக்க என்கையிலிருந்த பூனையின் கோப்பை என்னை அறியாமலே விழுந்து சிதறியது. ஓரு

கணம் நடுங்கிப்போனேன். வெள்ளைக்கா¡¢யின் உள்ளிருந்து பிடா¢யை சிலுப்பிக்கொண்டு சிங்கம் எழும்பியது. என் உயிர் சிங்கத்தின் கோரப்பற்களுக்குள் அகபபட்டு துடிக்கும் காட்சி என் கண்முன்னே வி¡¢ந்தது. சிங்கத்தின் கண்கள் என் அச்சத்தையும், துயரையும் உள்வாங்கியபடி நெருப்பை கக்க தொடங்கியது. என்னுள் இருந்த இரத்தம் வேர்வையாக கொட்டியது. உடல் அனலின் பிடியில் சிக்கியது. இம்முறை அகதி வேலைக்காரியின் கையிலிருந்த தும்புத்தடியும், ஊத்தை துணியும் அதற்கான இடத்தில்போய் சுழன்று கொண்டு விழுந்தது. வெளியே பாரம் தாங்காமல் மேகம் கீழ்இறங்கிக்கொண்டிருந்தது.

**53. இரண்டாம் பரிசு: நான் நீங்கள் மற்றும் சதாம் -ஆதவன் தீட்சண்யா-**

விழிப்படலத்தின்மீது கருமுழிபோல் சுழன்று கண்மூடவிடாது உறுத்திக்கிடந்த பூமியுருண்டையை தூக்கியெறிந்த மாயத்தில் உறக்கமென்ற பேரானந்த அமைதி தழுவிக்கொண்டது. தான் கண்டுபிடித்த கடிகாரத்திடம் இரவையும் பகலையும் ஒப்புக்கொடுத்துவிட்டு அந்த முள்ளின் நொடிப்பில் வாழப் பழகிவிட்ட நடப்புலக மனிதனில்லை நீ... தூங்கு மகனே... தூங்கு.. என்றபடி தனது றெக்கையின் பொன்னிற இறகுகளால் வருடியபடியே கடலுக்கும் வானுக்கும் ஒய்யாரமாய் தாலாட்டினாள் தேவதையொருத்தி. செகன்ட்ஷிப்டின் அலுப்பை தூங்கியே போக்கிக்கொள்ள வேண்டியதை அறிந்திராத அந்த கடிகாரஎந்திரம் பனிரெண்டு அடித்து யாருக்கும் பிடிபடாத காலம் எனக்கும் நழுவிப்போயிருந்ததை உணர்த்தி நகர்ந்தது. தாய் வயிற்றிலிருந்து பிரியும் துக்கத்தோடு எழுந்து கதவைத் திறந்தால் தாரக்நாத் நிற்கிறான்.

மாதமிரண்டு ஆகியிருந்தது நாங்கள் சந்தித்து. மெலிந்திருந்தான் முன்பிலும். சோர்வின் பிடியில் வாதையுறும் கண்களில் பீளையாய் தங்கியிருந்தது தூக்கத்தின் ரேகை . பதுங்கிடம் கிடைத்ததும் ஒளிந்து கொள்ளும் நிம்மதியின் பாவனை துளிர்க்கிறது இப்போது முகத்தில். கெண்டைச்சதை திரளும் துடியான நடை ஓடிப்போயிருந்தது. கொட்டிவிட்ட நீரைப்போல் ஓசையற்று உள்நுழைந்தான். எப்போதும் உட்கார தேர்ந்தெடுக்கும் மோடாவை தவிர்த்து சுவற்றில் சாய்ந்து கால்களை நீட்டி தரையிலேயே உட்கார்ந்துகொண்டான். உபசரிக்குமளவு அன்னியனில்லை அவன். நானெதுவும் சொல்லவில்லை.

தாடி இப்போது நீண்டு வளர்ந்திருந்தது கொசகொசத்து. கோயிலுக்கா என்றேன் சைகையில். அங்கே என்னயிருக்கு போக என்றான். கோயிலே கதி என்றிருந்தவன் இப்படி தீவிர சார்வாகம் பேசுகிறானே...? சிரித்துக்கொண்டேன். சிரிப்பின் உட்பொருள் அவனுக்கா புரியாது? பொருட்படுத்தாதிருப்பதாய் காட்டிக்கொள்வதன் மூலம் தனது சமநிலை குலையவில்லை என்று தெரிவிப்பனாக தாடியை மெல்ல வருடிக்கொண்டான்.

குளித்து தயாராகி வருவதற்குள் இரண்டு சிகரெட்டுகளை முடித்து மூன்றாவதை பற்றவைத்திருந்தான். நெளிந்தலையும் புகையூடே எதையோ தேடுபவனாக கவனங்குவிந்திருந்தது. பூப்போல சாம்பல் துளிர்ந்து கிடக்கிறது. அமைதியில் கரையவிட்டவனைப் போன்றிருந்தவனின் தோள்தட்டி உசுப்பினேன். சலனமற்ற பார்வையில் எந்த செய்தியுமற்று எழுந்துகொண்டான். அந்த கரிமண்டி மிஷினில் அரைபட இத்தனைநேர அலங்காரமா உனக்கென்னும் அவனது வழக்கமான கொச்சைத்தமிழ் கிண்டலில்லை இன்று. பூட்டிக்கொண்டு சாப்பிடக் கிளம்பினோம்.

நான் மட்டுமே சாப்பிட வேண்டியதாயிருந்தது. காபியோடு நிறுத்திக்கொண்டான் அவன்.

இதுபோன்ற ஓட்டல்கள் தேர்வுடையதாயில்லை எப்போதும் அவனுக்கு. கை கழுவுமிடத்திலிருக்கும் ஒடுங்கிய ஈயத்தம்ளரிலிருந்து எதுவுமே அவனுக்கு ஒம்பவில்லை. ஒரு இடத்தில் சாப்பிடவும் மறுக்கவும் அனந்தமான காரணங்களை அடுக்கமுடியுமா ஒருவனாலென்று ஆச்சர்யம் கொள்வேன். சுத்தமில்லாத இடத்தில் ருசியுமிருக்காது என்று தீவிரமாக நம்பினான். எதுவொன்றின் சுத்தமும் ருசியும் அதற்குள்ளேயே இருக்கும். அதை உன் மனசிலிருக்கும் சுத்தத்திலும் ருசியிலும் கலக்காதே என்பதை ஏற்பதில்லை அவன். கழுத்துக்கு கீழே போனால் நரகல், அதற்கெதற்கு இத்தனை ஆர்ப்பாட்டம்... பசியின் காந்தலாற்ற அப்போதைக்கு எதையாவது கொட்டிக்கொள்வதைத் தாண்டி உணவுக்கொள்கை ஏதுமில்லை எனக்கு. நடக்கமாட்டாதவன் சித்தப்பன்வீட்டில் பெண்ணெடுத்தக் கதையடா உன்னுடையது என்று பரிகாசம் செய்வான். இருக்கட்டுமே, இந்த சித்தப்பன் பெரியப்பன் அத்தை சித்தி உறவெல்லாம் ஆதியிலேயே மனுசனோடு இருந்ததில்லை என்பேன். தலையிலடித்துக் கொள்வான்.

என் வசிப்பிடமும் அவனுக்கு அசூயையால் நிரம்பியதே. காத்து கிடையாது. வெளிச்சமில்லை. பாச்சை மிலுமிலுக்கும் பொந்தென்று முகஞ்சுளிப்பான். வந்தாலே இருப்பின்றி தவிப்பான். சுவற்றில் காய்ந்து கிடக்கும் மூட்டைப்பூச்சி ரத்தம் இப்போதும் ஈரத்தோடு பொங்குவதான பதற்றம் கொள்வான். கிளப்பிக்கொண்டு வெளியில் போவதிலேயே குறியிருக்கும். ஏரிக்கரையிலோ ரயில்வே ஸ்டேசன் மரத்தடியிலோ வந்து உட்கார்ந்த பின்தான் சற்றே இயல்பு திரும்புவான். அம்பது நூறு அதிகமானாலும் அக்கம்பக்கம் படித்த நாகரீகமானவர்களுக்கு மத்தியில் நீ குடியிருக்கவேண்டும் என்பான் அடிக்கடி. நீலப்படம் எடுத்த டாக்டர் பிரகாஷ் கைநாட்டா? நாட்டையே திவாலாக்கின ஹர்ஷத் மேத்தாவும் டெல்ஜியும் படிக்காதவங்களா? லவ்வரைக் கொன்னு தந்தூரியடுப்புல எரிச்ச சுசீல் சர்மாவும் ஐம்பத்திநாலு பேரை ரயிலில் எரிச்சவங்களும் பதினாலுபேரை பெஸ்ட் பேக்கரியில உயிரோடு கொளுத்தினவங்களும் படிப்பறிவில்லாத பாமரர்களா? என்று எப்போதாவது நானும் எகிறுவதுண்டு. நாகரீகமானவங்கன்னு நான் சொன்னதை வசதியா மறந்திட்டு நீ பேசறே என்று வாதாடுவான். அப்படியானால் படிப்புக்கும் நாகரீகத்துக்கும் சம்பந்தமில்லேன்னு ஒத்துக்கோ என்பேன். வாதம் நீண்டு மனஸ்தாபமாகிவிடுமோ என்கிற எச்சரிக்கை இருவருக்குமே இருந்தது.

பத்துநிமிட சைக்கிள் மிதிப்பில் கம்பனிக்குப் போய்வர ஏதுவான தூரத்தில் இவ்வளவு குறைவான வாடகையில் ஓரிடம் கிடைப்பதே பெரும்பாடு. லாட்ஜ் போலுமில்லாமல் வீட்டுக்கான லட்சணங்களுமற்று ஒரு பெரிய ஹாலை குறுக்குச் சுவரெழுப்பி தடுத்ததுபோலிருந்ததில் ஆறுகுடும்பங்கள். மூன்று கழிப்பறைகளும் இரண்டு குளிப்பறைகளும் பொதுவிலிருந்தன. என் ரூம் தான் கடைசியில். அண்டையில் வாழ்பவர்கள் சுத்தபத்தமாக இல்லை என்பதே அவனது அதிருப்திக்கும் அசூயைக்கும்

காரணம் என்பதை நானறிவேன். ஆனால், இயல்பிலேயே சுத்தபத்தமாகவும் இணக்கமாகவும் வாழ்வதன்வழியாக அவனது அபிப்ராயங்களை பொய்யாக்கிக் கொண்டிருந்தனர் எனது அண்டைவீட்டார்கள் என்பதிருக்கட்டும் ஒருபுறம். அவர்களென்ன ஆபீஸ்வேலைக்கா போய்வருகிறார்கள், மினுக்கும் தளுக்கும் குறையாதிருக்க...? சைக்கிள்ஷாப், லேத் பட்டறை, லாடமடிப்பது, குடைரிப்பேர், தோல்வியாபாரம், கறியறுப்பது.... என்று அழுக்கின் நியமத்தில் புழங்கியாக வேண்டியவர்களிடம் இன்னதுதான் சுத்தமென்று இவனாக எதிர்பார்ப்பது எத்தகைய அராஜகம்....? அதுவுமில்லாமல் சுத்தமென்றால் என்னவென்று வரையறுத்தாகிவிட்டதா...? யார் பார்வையில் எது சுத்தம்...? காலகாலமாய் நடந்துகொண்டிருக்கும் ஒரு விவாதத்தின் மீது உடனடியாய் தீர்ப்பெழுதும் அதிகாரம் யாருக்கிருக்கிறது...? எப்போதோ ஒன்றின்மேல் எதற்காகவோ உருவான கருத்தை எல்லாக்காலத்திற்கும் நீட்டிப்பதாயிருந்தது அவனது பிடிவாதம்.

அவனிருப்பது மத்திகிரி பிரிவு ரோட்டில். இங்கிருந்து ஆறு கிலோமீட்டர் தள்ளி. அங்கும் ஊருக்குள் இல்லை. வெளியொதுங்கி ஜனசஞ்சாரமற்ற காடு அது. பகிரங்கமற்ற வழிபலதிலும் கொள்ளை தீட்டிய பணத்தில் பெங்களூரிலிருக்கும் வடக்கத்தியான் ஒருவன் இந்தக் காட்டுக்குள் உருவாக்கியிருக்கும் பண்ணைவீட்டின் மேனேஜர், கேர்டேக்கர், பலநேரங்களில் வாட்ச்மேன் என்று சகல பதவிகளையும் ஒருசேர வகிக்கும் அந்தஸ்து ரேகையோடியது தாரக்நாத்தின் ஜாதகத்தில். வருடத்தில் ஓரிரு நாட்கள் தவிர எஞ்சிய காலத்தில் முதலாளியெனும் மகுடத்தையும் அவனே சுமக்கவேண்டியிருந்தது.

பெருஞ்சாலையின் சந்தடிகளில் அலுப்புறும்போது முதலாளி மனைவியுடனோ மனைவிபோல் யாருடனோ வந்து ஓரிருநாட்கள் தங்கிப்போவதுண்டு. முதலாளிச்சியும் வருவதுண்டு அதேரீதியில். அப்போது மட்டுமே வேலை முறியும் இவனுக்கு. மற்றநாட்களில் அவசியமேயற்ற டெலிபோனுக்கு பில் கட்டுவது, கழுதையுயர நாய்க்கு மாட்டெலும்பும் கறியும் வாங்கிவந்து தின்னடிப்பது, மிஞ்சியப்போதுகளில் அந்த செடியில் ஏன் பதினோரு பூ...இந்த மரத்தில் எப்படி நாற்பத்திரண்டு பழம் என்பதான யோசனைகளில் ஆழ்ந்துவிடுவான். காய்கனி வர்க்கங்கள் மிகும் காலங்களில் பக்குவம் பண்ணி பெங்களூரில் முதலாளி வீட்டில் சேர்ப்பது, அப்படியே பருத்த ஸ்தனங்களின் மேல்வெட்டு தெரிய மூடாக்கில்லாத சுடிதாரில் வெறிக்க வெறிக்க வளையவரும் முதலாளிச்சியை பார்த்துவிட்டு வந்து பொம்பளையா அவளென்று திட்டிக்கொண்டிருப்பதாக அவனது நித்யகர்மங்கள் தீர்மானமாகியிருந்தன. இப்படியான வேலைகளில் சலிப்புத் தட்டுமானால் ஓட்டை மொபட்டை துடைத்தெடுத்துக் கொண்டு என்னை பார்க்கவருவான். அல்லது இங்கு வந்த மூன்றாம் மாதத்திலேயே வாங்கிய முப்பதுநாளில் தமிழ் கற்பிக்கும் புத்தகத்தை புதிதெனக் கருதி படிப்பான்.

ஆனாலும் எட்டுமணிநேர வேலை, நாலுமணிநேர கட்டாய ஓ.டி என்று என்னைப்போல் அவதியுற வேண்டியதில்லை. இன்னவேலையை இப்போதே செய்தாக வேண்டுமென்று மிரட்டவும் அதிகாரம் கொள்ளவும் யாருமில்லை. வாங்கும் சம்பளத்தில் நயாபைசாவையும் செலவழிக்க வேண்டிய தேவையேதுமில்லை. ஆனால் காலியாகிவிடும். வாச்சாத்தி பெண்களின் வழக்கு செலவிற்கு, பம்பாய் கலவரத்தில் பாதிக்கப்பட்டவர்களுக்கு, குஜராத் கலவரங்களில் பாதிக்கப்பட்டவர்களுக்கு, ஹரியானாவில் அடித்துக்கொல்லப்பட்ட ஐந்து தலித் குடும்பங்களுக்கு, அதற்கு முன்பு தாமிரபரணிக்குள் மூழ்கடித்து கொல்லப்பட்ட மாஞ்சோலை தோட்டத்தொழிலாளர் குடும்பங்களுக்கு, இலங்கை அகதிகள் முகாமின் குழந்தைகளுக்கு என்று சேமிப்பை செலவழித்துக் கொண்டிருக்கிறான். இப்படியான அவனது உதவிகள் அநேகமாய் என்னைத்தவிர பிறத்தியார் யாருக்கும் தெரிந்தவிடக்கூடாது என்பதில் வெகுகவனமாய் இருந்தான். படிப்பதற்கோ மருத்துவ சிகிச்சைக்கோ நிதியுதவி கோரும் எத்தனையோ வேண்டுகோள்களை பத்திரிகைகளில் தினசரி பார்க்க நேர்ந்தாலும் அதை பொருட்படுத்தமாட்டான். அவர்களுக்கு உதவிட வெறும் தயாளகுணமோ அல்லது குறைந்தபட்சம் டை கட்டிக்கொண்டு போட்டோ எடுத்துக் கொள்ளுமளவுக்காவது விளம்பரப் பிரியமோ உள்ள ஏராளமான தனிநபர்கள், அமைப்புகள் முன்வரக்கூடும். ஆனால் கலவரங்களில் பாதிக்கப்பட்டவர்களுக்கு உதவுவதற்கு முன்னிபந்தனையாக ஒருவன் தன் சாதியை மதத்தை மொழியை இனத்தைமீறுகிற முடிந்தால் கைகழுவுகிற அரசியல் முடிவை மேற்கொள்ள வேண்டியுள்ளது. மட்டுமல்லாமல் கலவரங்களுக்கு காரணமான அதிகாரத்தை எதிர்க்கிற நடவடிக்கையின் ஒருபகுதியாகவுமே இப்படியான நிதியுதவியை கருதுகிறான்.

சுத்தமான காற்று... மாசுபடாத தண்ணீர்... இரைச்சலற்று அமைதியில் திளைக்கும் அந்த வீட்டிற்குள் வாழ்கிறோம் என்ற நினைப்பே போதுமானது ஒருவன் சந்தோசம் கொள்ள. எத்தனை இருந்துமென்ன, தனிமை பேரெதிரியாகி அவனை வாட்டியது. முளையடித்த மாடுபோல் இந்த அநாதிக்காட்டுக்குள் உளைவது எத்துணை வாதையானது என்பதை நீ அறிய நேரவில்லை என்பான்.

அவன் சொல்வதைப்போல் அது அநாதிவெளி தான். நூறு ஏக்கருக்கு மேலான விஸ்தீரணத்தில் காட்டுமரங்களின் முரட்டுவாசத்தோடு மலையடிவாரத்தில் பரவிக்கிடந்தது பண்ணை. மையத்தில் வெளிநாட்டு மோஸ்தரில் அரண்மனைப் பாங்கிலானது வீடு. ஆள்மயக்கும் நீச்சல்குளமும் உண்டு. கிழமேலாய் பிரியும் பாதைகளின் மருங்கிரண்டிலும் நெடிதுயர்ந்த மரங்கள். உலகின் மாறுபட்ட மண்பாகங்களிலும் விளைகிற தாவரஜாதிகள் யாவும்கூடி பண்ணை வினோத வண்ணத்தில் இரவும்பகலும் ஒளிர்ந்து கிடந்தது மாயலோகமாய். வேலியடைத்தாற்போல் சீரான இடைவெளியில் தென்னையும் கமுகும். வீட்டின் பின்வெளியில் படர்ந்திருக்கும் புல்வெளியிலிருந்து தொடங்கும் பழத்தோட்டம். பலா, முந்திரி, கொய்யா, மாதுளை, மா,

சப்போட்டா...என்று சடைசடையாய் காய்ப்பிருக்கும். பழங்களுக்காகவே கூடிக்களிக்கும் பறவைகளின் உல்லாசமொழியைக் கூட ரசிக்கமுடியாதபடி தான் இறுகிவருவதாக அவன் பயம்கொண்டிருப்பதை சொல்கையில் குரல் உடைந்து அழுகையில் தோயும்.
பகலின் ஆரவாரம் சூரியனோடு அடங்கிப்போகும் இரவின் அந்தகாரத்தில் தூக்கமின்றி பைத்தியம்போல் அறைக்குள் உழன்று தவிக்கும் அவனுக்கு சுபிட்சத்தின் மார்க்கத்தை எந்த விடியலும் கொண்டுவரப்போவதில்லை என்று நம்பியிருந்தான்.

கர்நாடக தமிழக ஆந்திர எல்லையில் இருப்பதால் அந்தந்த மாநிலங்களில் பல்வேறு குற்றங்களுக்காக தேடப்படுபவர்கள் அண்டைமாநிலத்தின் பரப்பொன்றுக்குள் தப்பி ஒளிந்துகொள்வது எளிதாயிருந்தது. அப்படியானவர்கள் தேர்ந்தெடுக்கும் பாதுகாப்பான மறைவிடங்களாக இப்படியான பண்ணைவீடுகளிருந்தன. பகலிலும் இருள்மண்டியிருக்கும் அடர்ந்த புதர்களும் பம்மிப் படர்ந்திருக்கும் மரங்களும் அவர்களது நோக்கத்திற்கு எப்போதும் உதவியாயிருந்தன. இரண்டுமாதங்களுக்கு முன்னான அமாவாசைக்கு பிந்தைய இரவில் இவனது பண்ணையின் ஒரு புதருக்குள் வீசப்பட்டிருந்த பெண்ணொருத்தியின் சடலத்தை காலையிலேயே காகங்களும் கழுகுகளும் நிறக்கப் பறந்து கண்டெடுத்தன. இரவில் ஏமாந்துவிட்டதை மறைப்பதற்காக தனக்கு றெக்கையில்லாததையும் மறந்துவிட்டு அண்ணாந்து எகிறியபடி குரைத்துக்கொண்டிருந்தது நாய். இந்தப்பகுதியின் காடுகளிலும் ஏரிகளிலும் இப்படியான பிணங்கள் கண்டெடுக்கப்படுவது பரபரப்புக்குரிய விசயமில்லை. ஆனால் குரூரமாய் கொலையுண்ட பிணமொன்றும் தானும் ஒரேயிடத்தில் இருந்திருக்கிறோம் என்ற நினைப்பே அவனை திகிலடைய வைத்திருக்கும் போல. போலிஸ் வந்து பிரேதத்தை எடுத்துக் கொண்டு போய்விட்ட பிறகும் ஒன்பதாண்டு பழக்கத்தில் நான் ஒருநாளும் கண்டிராத பதற்றம் கொண்டிருந்தான் தாரக்நாத்.

ஆசுவாசம் கொள்ளவைக்கும் பொருட்டு அவனை மாந்தோப்புக்குள் அழைத்துவந்து சிகரெட்டை நீட்டினேன். வாங்கும்போது கை நடுங்கியது. பற்ற வைத்துக்கொள்ளாமலே வெறித்துப் பார்த்திருந்தவன் 'காலையிலிருந்து ரெண்டு பாக்கெட்டாகிவிட்டது. தொண்டை எரியுது' என்றான் கம்மியக் குரலில். பின், பசியில் தின்பவனைப்போல் நகம் கடித்தபடி ராத்திரிக்கு உன் ரூமில் வந்து படுத்துக்கட்டுமா என்றான். அன்றிரவு அவனுடனேயே பண்ணைவீட்டில் தங்கி தைரியம் சொல்லி தேற்றிக் கொண்டிருந்தேன். அவன் தூங்குவதைத் தவிர்க்க பிரயாசை கொள்பவனாகி என் கால்மாட்டில் வந்து அமர்ந்து கொண்டான் மௌனமாக. அயர்ச்சி மீதுற தூக்கத்திற்குள் விழுந்து கொண்டிருந்த என்னை உலுக்கி 'நான் போலிசில் சரணடைந்துவிடட்டுமா' என்றான். எனக்கு ஒடுங்கிவிட்டது சர்வமும்.

'அந்தப் பொண்ணை நீயா கொன்றாய்?'

'இல்லை....'

'அப்புறமெதுக்கு சரணடையனும்?'

அமைதியாய் இருந்துவிட்டு, 'யார் எவரென்று தெரியாத ஒரு பெண்ணின் கொலையைக் கண்டு இத்தனை பதற்றமடையும் நான், என்னோடு உறவாடி வாழ்ந்த எட்டுப்பேரை குத்திக் கொன்றேனே அதற்காக...'

'முட்டாள்... என்ன உளறுகிறாய்...?'

'உளறவில்லை. உண்மை. இத்தனை நாளும் உனக்கும் உலகத்துக்கும் சொல்லாத உண்மை.யாருக்கும் தெரியக்கூடாதென்று எனக்குள்ளேயே மறைத்துவைத்த உண்மை. எனக்குள்ளிருந்து என்னை வதைத்துக் கொல்லும் உண்மை.'

'பிணத்தைப் பார்த்த அதிர்ச்சியில் புத்திபேதலித்துவிட்டதா உனக்கு...?'

'ஆமாம். புத்தி பேதலிக்கும்போதுதான் பொய்சொல்லும் சாதுர்யம் மறைந்து உண்மை மேலெழுந்து வருகிறது.'

என்னால் மேற்கொண்டு பேசமுடியவில்லை. விரக்தியான சிரிப்போடு 'ஆமாம், நீ நம்பித்தான் ஆகவேண்டும்... நானொரு கொலைகாரன்' என்றான். இப்போது அவன் குரலில் பிசிறில்லை.

'யாரவர்கள்...?'

'எனது அண்டைவீட்டுக்காரரும் அவரது மனைவியின் வயிற்றிலிருந்த எட்டுமாத சிசு உள்ளிட்ட அவரது குடும்பத்தாரும் இன்னும் சிலரும்.'

இப்போது அவனைப் பார்க்க அச்சமாயிருந்தது. கண்களை மூடியபடி மௌனத்தில் மூழ்கியவன் 'எதற்காக சாகிறோம் என்பதும் கூட அவர்களுக்குத் தெரிந்திருக்கவில்லை. உண்மையில் அவர்கள் ஒருபாவமும் செய்யாத அப்பாவிகள்... ஆனால் அவர்கள் திரும்பிவரப்போவதில்லை...' என்றான்.

'அந்த அக்கா எவ்வளவு பிரியமானவள் தெரியுமா... என்னைவிட நாலைந்து வருடம் மூத்தவளாக இருக்கலாம். கல்யாணம் முடிந்து குடித்தனம் வந்த அன்றே எனக்கு பிடித்துப்போனது அவளை. பள்ளிக்குச்செல்லும் என் தங்கைக்கு அவள்தான் தினமும் சடை பின்னிவிடுவாள். அம்மாவுக்கு கண் ஆபரேஷன் செய்திருந்தபோது அவள்தான் எங்கள்வீட்டை பார்த்துக்கொண்டாள். அம்மா குணமாகி சமையல்கட்டில் புழங்க வரும்வரை அவங்க வீட்டிலிருந்துதான் சாப்பாடு வரும். அவளது கைப்பக்குவம்

எப்படியான ருசி கொண்டது தெரியுமா?

தலைப்பிரசவத்தின்போது அம்மாதான் அவளுக்கு உடனிருந்து பார்த்துக்கொண்டாள். குழந்தையை தண்ணீர் வைத்து துடைத்துக் கிடத்தியிருந்தார்கள். ரோஸ் நிறத்தில் மிருதுவாயிருந்த உள்ளங்கையில் நான்தான் முதல்முத்தம் கொடுத்தேன். களங்கமற்றது அதன் சிரிப்பு. ஒரு கொலைகாரனைப் பார்த்து குழந்தையால் மட்டும்தான் சிரிக்கமுடியும். அந்த சிரிப்பில் சொக்கிப்போய்த்தான் மாலையில் நடக்கும் ஷாகாவுக்குப் போகாமல் பள்ளியிலிருந்து நேராக வீட்டுக்குவரத் தொடங்கினேன். எனது மாலைப்பொழுதுகளும் விடுமுறைகளும் அவனுக்குரியதாயின. தூக்கத்திலேயே உயிர் பறிபோவதற்கு நான்குதினங்களுக்கு முன்புதான் அவனது ஐந்தாவது பிறந்தநாளைக் கொண்டாடியிருந்தோம்.

ப்ளஸ் டூவில் பெயிலாகி தாறுமாறாய் யோசனையோடிய காலத்தில் அவளது அருகாமையும் ஆறுதலும் தான் தற்கொலை மனோபாவத்திலிருந்து என்னை மீட்டெடுத்தது. அவள் என்னை அப்போதே சாகவிட்டிருக்கலாம். அவளைக் கொல்வதற்காக சாவிலிருந்து என்னை மீட்டெடுத்து போஷித்துவந்தாள். அருள் நிரம்பிய அவளது கண்கள் இன்னும் என் ஞாபகத்தில் இருக்கிறது. அவளது வயிற்றில் கத்தியைப் பாய்ச்சும் போது கூட கண்ணா என்று கத்திக்கொண்டு சாய்ந்தவளின் கண்ணில் அந்த அருள் மருளவேயில்லை....' விசும்பல் மீறி அழுகையில் கரைந்தான்.

தெய்வமெல்லாம் உங்க கட்சி மெம்பராடா.. கோயில்ல கொண்டாந்து கொடி கட்றீங்களே... நிம்மதியா போய் சாமி கும்புட்டுட்டுத் திரும்ப முடியல. எந்நேரமும் கோயில் வாசல்ல குண்டாந்தடியோடு... உன் சேர்க்கையே சரியில்லை ... நெற்றியில் ரிப்பன் கட்டிச்சுற்றும் அந்த ரவுடிக்கும்பலோடு சுத்தறதை நிறுத்து... என்று ஓயாமல் சொல்லிக்கொண்டேயிருப்பாள் அம்மா.

நாங்க அப்படி காவலில்லேன்னா அவங்க கோயிலை இடிச்சிருவாங்கம்மா...

பொய் சொல்லாதடா... அவங்கக் கோயிலை இடிக்கணும்னு நீங்கதாண்டா வீட்டுவீட்டுக்கு கடப்பாறை கொடுக்கறீங்க... சும்மாகிடந்தவங்கள வம்பிழுத்துட்டு இப்ப அவங்க இடிச்சிருவாங்கன்னு பூச்சாண்டி காட்றீங்க... கோயிலுக்கு ஆபத்துன்னு சாமி கும்பிட வர்றவங்களையெல்லாம் உங்க கட்சியில சேத்துடலாம்னு நடக்குது இந்த சூதாட்டம்... என்று கிளிப்பிள்ளைக்கு சொல்றமாதிரி அம்மா புத்தி சொன்னாள். எனக்குத்தான் எதுவுமே மண்டையில் ஏறவில்லை அப்ப.

துணைக்கு யாருமற்று தனிமைப்பட்டதைப்போல் உணர்ந்தவன் நடுங்கும் கைகளால் சிகரெட்டை பற்றவைத்துக் கொண்டான். பொங்கிவரும் பேச்சை புகைமூலம்

தடுக்கநினைத்து ஆழ்ந்து உள்ளிழுத்தான். நான் அவனது முகத்தையே பார்த்திருந்தேன். ஜன்னலுக்கு வெளியே வெறித்துப் பார்த்தபடி தொடர்ந்தான்.

அன்று முன்னிரவிலேயே தெருவில் நடமாட்டம் குறைந்துவிட்டிருந்தது. நடமாடிய ஓரிருவரும் கூட போலிஸ் விசாரிப்புக்கு பயந்து அடையாளம் காணமுடியாதபடி கம்பளியாடைகள் தரித்து வேகமாய் கடந்து மறைந்தனர். நேற்று மதியம் ரவுண்டானா அருகில் வெடித்தக் கலவரமும் அதையொட்டி நடந்த துப்பாக்கிச்சூடும் எங்கும் திகிலை பரப்பியிருந்தது. ரதயாத்திரையை வரவேற்க திரண்டிருந்தவர்களுக்கும் இன்னொரு பிரிவுக்குமிடையே மூண்ட கலவரத்தில் ஆறுபேர் வெட்டிக் கொல்லப்பட்டனர். கலவரத்தையடக்க நடந்த துப்பாக்கிச்சூட்டில் இறந்தவர்கள் பதினாலுபேர் என்று போலிஸ் சொன்னாலும் கூடுதலாயிருக்கும் என்றே பேசிக்கொண்டார்கள்.

துள்ளத்துடிக்க ஏராளமானவர்களை ஜீப்பில் தூக்கிப்போனதாகவும் அவர்கள் இப்போது ஆஸ்பத்ரியிலும் இல்லையென்பதால் அனேகமாக போகும் வழியிலேயே உயிர் பிரிந்துவிட போலிசே எங்காவது குவித்து எரித்திருக்கும் என்றும் ரகசியம்போல் பேசிக்கொண்டனர் ஊர்மக்கள். கூட்டத்தில் என்பக்கத்திலேயே இருந்த மங்கத்ராம் நெற்றியில் குண்டடி பட்டு கீழே சாய்வதை நானே பார்த்தேன். ஆனால் அதற்கப்புறம் அவன் எங்குமே காணவில்லை. சேதியறியாத அவனது தாயோ அவனுக்கு ஒண்ணும் ஆகியிருக்காது திரும்பி வந்தவிடுவான் என்று சொல்லிக்கொண்டு சகஜமாயிருக்க பட்டபாடு மிகுந்தத் துயரமானது.காணாமல் போன தங்கள் வீட்டாள்கள் என்னவானார்கள் என்று மறைந்து மறைந்து தேடிக் கொண்டிருந்தனர். என்னதான் போலிஸ் குவிந்திருந்தாலும் இன்னொரு பெரிய கலவரம் மூளக்கூடும் என்று இருதரப்பிலும் பீதி நிலவியது.

நான் அவள் வீட்டுக்குப் போனபோது அவளும் ஊரிலிருந்து வந்திருந்த அவளது தங்கையும் இரவுச்சாப்பாட்டுக்கான தயாரிப்பிலிருந்தார்கள். 'எங்கடா போய்த் தொலைஞ்சே நாலைந்து நாளாய்... அம்மாக்கிட்டயாச்சும் எங்கயிருக்கிறேங்கிற தகவலைச் சொல்லியிருக்கலாமில்ல... என்ன ஆச்சோ ஏதாச்சோன்னு பதறிப்போயிட்டோம் தெரியுமா... ' என்று கோபமும் கரிசனமுமாய் விசாரித்தாள். திட்டி முடித்ததும் ஆசுவாசம் கொண்டவளாகி 'நீ இல்லாம உன் தோஸ்த்துக்கு ரொம்ப போரடிச்சிருச்சு. சாப்பிடாமக்கூட தூங்கிட்டான். அவனை எழுப்பு. நீயும் கை கழுவு சாப்பிடலாம்' என்றாள்.

'மாமா இன்னம் வரலையாக்கா...'

'மாடியில என்னவோ எழுதிக்கிட்டிருக்கார். இரு கூட்டியாறேன். அவரும் கூட உன்கிட்ட ஏதோ பேசணும்னு சொல்லிக்கிட்டிருந்தார்.'

'நீ இருக்கா, நான் போய் கூட்டியாறேன்...'

டிசம்பர் ஆறாம் தேதி நடக்கவிருக்கும் அம்பேத்கர் நினைவுநாள் நிகழ்ச்சியில் பேச குறிப்பெடுத்துக் கொண்டிருந்தார் மாமா. உள்ளூர் கல்லூரியில் பேராசிரியர். ஊரிலும் மாணவர்களிடமும் நல்ல மரியாதை பெற்றவர். என்னைப் பார்த்ததும் எழுதுவதை நிறுத்திவிட்டு சிகரெட் பற்றவைத்துக் கொண்டார். இத்தனை பேரைக் கொன்று கட்டப்படுவது கடவுளுக்கான கோயிலாயிருக்க முடியாது... சாத்தானின் வதைக்கொட்டடியாகத்தான் இருக்கும்... என்ற வரியோடு நின்றிருந்தது அவரது குறிப்பு. நீ எதிலும் மாட்டிக்கலையே கண்ணா என்று பதற்றத்தோடு விசாரித்தார். சில அமைப்புகளோடு எனக்கிருக்கும் தொடர்புகளை அவரறிவார். அவற்றின் பிரதிநிதியாக என்னை பாவித்து நீதிகேட்டு முறையிடும் தொனியில் 'யாரோ எவரோ முன்பின் தெரியாத கொடியவர்கள் கையால் இன்றோ நாளையோ சாவதைவிட என்வீட்டில் ஒருவனாயிருக்கும் நீயே எங்களைக் கொன்றுபோடு....நிம்மதியாகவாவது செத்துப்போகிறோம்' என்றார் உடைந்த குரலில். அதற்காகத்தான் நான் வந்திருக்கிறேன் என்பதை சொல்லமுடியவில்லை என்னால்.

மாமாவுக்கு பசியில்லையாம்... உங்களை சாப்பிடச் சொன்னார் என்றேன் படியிறங்கியபடியே. இதைக் கேட்டு வரவா இவ்வளவு நேரம்... சரி வா... நீயும் உட்கார் என்றாள் அக்கா. அவசரமாய் மறுத்தேன். வலுக்கோலாய் உட்காரவைத்தாள். இதென்னடா மாடியேறி இறங்கினதுக்கா உனக்கு இப்படி வேர்க்குது. ஸ்வெட்டரை கழட்டிட்டு சாப்புடு... என்கிறாள். எனக்கு நிலை கொள்ளவில்லை. ஐயோ... தன் புருசனை கொன்றுவிட்டு வந்திருக்கும் பாதகனை பாசத்தால் தண்டிக்கிறாளே புண்ணியவதி.... அழுகை முட்டிக்கொண்டு வருகிறது. கவனித்துவிட்டாள். ஏண்டா எதுவும் பிரச்னையா... மாமா எதுவும் திட்டினாரா... தலையை ஆதுரமாக கோதிக் கொடுக்கிறாள். அவளது நிறைவயிறு இரைகிறது. ஏழேழு ஜென்மத்துக்கும் எனக்கு மன்னிப்பு இல்லையக்கா... என்று சொல்லிக்கொண்டே........

கதவைச் சாத்திக்கொண்டு நான் வெளியே வருவதைப் பார்த்ததும் ஆங்காங்கு பிரிந்து மறைந்திருந்த மூவரும் சமிக்ஞை ஒலியெழுப்பியபடி மாந்தோப்புக்கு விரைந்தனர். திட்டத்தின் அடுத்த பகுதி அங்கே சந்தித்து நிலையை பரிசீலிப்பதுதான்.

என்ன சகோதரா... வீட்டாள்கள் எல்லாரும் இருக்காங்களான்னு பார்த்துவர இவ்வளவு நேரமா... லேட்டாக ஆக டென்சனாயிருச்சு... என்று சலித்துக்கொண்டான் தாராசிங். அவன்தான் இங்கு தலைவன். நான் ரத்தத்தின் பிசுபிசுப்போடிருந்த கத்தியை நீட்டினேன். அவசரப்பட்டுட்டியே சகோதரா... அவங்களை மிரட்டி வச்சாப் போதும்னு நினைச்சேன். வீட்டில் பெண்களும் குழந்தைகளும் இருக்கும்போது பக்குவமா மிரட்டினால் அந்தாளு கொஞ்சம் அடங்கி மத நல்லிணக்கக்குழு அதுஇதுன்னு

போகாமயிருப்பான்னுதான் எல்லாரும் இருக்காங்களான்னு பார்த்துவரச் சொன்னேன்... அதுக்காகத்தான் அவங்களுக்கு ரொம்ப வேண்டிய உன்னை அனுப்பினேன்... என்றான்.

பொய்... பசப்பாதே... உன்னோட ஹிட்டன் அஜென்டா என்னன்னு எனக்கு தெரியும். நான் தோது பார்த்து வந்ததற்கு பிறகு கும்பலாய் நீங்கள் வீட்டுக்குள் புகுந்து சூரத்தில் செய்தமாதிரி அவங்களை நிர்வாணமாக்கி தெருவிலே ஓடவிட்டு வீடியோ எடுத்துட்டு அப்புறமா சூலத்தால் குத்தி கொல்லணும்னு நீயும் கோபாலனும் போட்ட வக்கிரத் திட்டத்துல அவங்க மாட்டிக்கக் கூடாதுன்னுதான் எல்லாரையும் கொன்னுட்டேன்...

நாலுநாள் ஓசி பிரியாணி சாப்பிட்டதுக்கே இவ்வளவு விசுவாசம் காட்டுற நீ உன் தாய்நாட்டுக்கு நல்லது பண்ண தயங்கிட்டியே என்றவன் அவன் கொழுந்தியாளையாவது நீ எங்களுக்கு விட்டுவைத்திருக்கலாம் என்று ஓநாயைப்போல இளித்தான். அவர்கள் மூன்றுபேரும் ஒருவாகாய் நிற்க நான் எதிரில். வாக்குவாதம் முற்றி ஒரு கட்டத்தில் கைகலப்பாக மாறும்போது அவர்களையும் கொல்வதைத் தவிர எனக்கு வேறுமார்க்கம் தெரியவில்லை.

விடிய விடிய கால்போன திசையில் நடந்தேன்.வெகுவாகப் பயின்று தேறியதொரு தொழில்முறை கொலைகாரனைப்போல் எட்டுபேரைக் கொன்றவனை பிணங்கள் தேலிவரும் இந்த கங்கை மட்டும் தூய்மைப்படுத்திவிட முடியுமா என்ற யோசனையற்று ஆற்றில் முங்கியெழுந்தேன். கவனமாய் கத்தியை கங்கைக்குள் வீசினேன் அதன் கறையாவது கழுவப்படட்டுமென்று. அதன்பின் தப்பியோடும் எண்ணம்கூட எனக்கில்லாமல் போய்விட்டது. கரையெங்கும் நிறைந்திருந்த கோயில்கள் தான் என்னை பீதியடைய வைத்தன. எத்தனைப்பேரின் உடல்களை சதுரித்து செங்கல்லாய் அடுக்கி கட்டப்பட்டிருக்கிறதோ என்ற பயம் விரட்டியது என்னை வேறுபக்கம். இலக்கின்றி ரயிலேறி ஊர்ஊராய் அலைந்து திரியும்போதுதான் ஜோலார்பேட்டை ஜங்ஷனில் உன்னை சந்திச்சேன்....

தனது நெடிய கதையை சொன்ன களைப்பும் துயரமும் தந்த ஆயாசத்தில் கண்மூடி தரையிலேயே படுத்துக்கொண்டான் . பொத்திவைத்திருந்த ரகசியங்களை வெளிக்கொட்டிவிட்டதில் ரத்தமற்று சோகை பீடித்தது போலிருந்தது முகம்.

நான் ஜோலார்பேட்டையில் சந்திக்கும் போதும் இதேபோல் தானிருந்தான். வண்டி மாறுவதற்காக நான் காத்திருந்த சமயத்தில் வடநாட்டிலிருந்து வந்த ஒரு வண்டியிலிருந்து டிக்கெட்டில்லாமல் பயணம் செய்வதற்காக இறக்கிவிடப்பட்டான். ரயில்வே போலிஸ்காரன் அடித்தபோது என்னையும் விட்டுவிட்டால் நீயும்தான் யாரை அடிக்கமுடியும் என்று இரக்கம் கொண்டவனைப்போல அடிக்கத் தோதாக உடம்பை

காட்டிக்கொண்டு நின்றான். அவனது ஒத்துழைப்பினால் அவமானம் கொண்ட போலிஸ்காரனுக்கு அடிக்கமுடியவில்லை. திமிறும் குற்றவாளியை எகிறியடிக்கப் பழகியிருந்த போலிஸ்காரன் இவனை என்ன செய்வதென்று தெரியாத ஆத்திரத்தில் ஓடு ஓடு என்று லத்தியை வீசி விரட்டினான். அங்குமிங்குமாய் போக்குகாட்டி மறைந்தவன் எங்கிருந்தோ ஓடிவந்து நானிருந்த பெட்டியில்தான் ஏறினான். கிளம்பிவிட்ட வண்டியில் இத்தனை லாவகமாய் ஏறுமளவுக்கு அவன் பழகியிருப்பான் போலும்.

கழிப்பறைக்கு பக்கத்தில் ஒடுங்கி நின்றிருந்தான். அவனது ஏதோவொரு அம்சம் என்னை கவருவதாயிருந்தது. இன்னதென்று திட்டவட்டமாய் சொல்லத் தெரியவில்லை. பேச்சுக் கொடுத்தேன். அவனுக்கு தமிழ் தெரிந்திருக்கவில்லை. எனக்கு ஓரளவே தெரிந்திருந்த இந்தியைக் கொண்டு பேசிக்கொண்டோம். வீட்டைவிட்டு ஓடிப்போக நாலைந்துமுறை முயன்றும் தப்பிக்கமுடியாமல் பிடிபட்டுப்போன எனக்கு எங்கோ வடநாட்டிலிருந்து தப்பி இங்குவரைக்கும் வந்துவிட்ட அவனைப் பார்க்கும்போது பெரிய சாகசக்காரனாய் தெரிந்தான்.

எதையாவது திருடிக்கொண்டு ஓடிவிடுவானோ என்று உள்ளூர பதைத்துக்கொண்டே தான் அவனை ரூமுக்கு அழைத்துவந்தேன். குளித்தபின் எனது துணிகளை உடுத்தக் கொடுத்தேன். இந்திக்காரன் என்பதாலேயே இந்த பண்ணைவீட்டின் வாட்ச்மேனாக சேர்ந்துவிட முடிந்தது அவனால். நாளாவட்டத்தில் நம்பிக்கை கொண்ட முதலாளி அவனுக்கு மற்ற பொறுப்புகளையும் தந்தான். ஒன்பது வருசம் கழித்து இப்போது நானொரு கொலைகாரன் என்று சொல்லி அழுபவனை என்ன செய்வது?

என்னால் அவன்மீது எந்த அபிப்ராயத்துக்கும் வரமுடியவில்லை. சட்டப்படி அவன் கொலைகாரன் தான். கொலைகாரர்கள் எல்லோருமே தண்டிக்கப்பட்டுவிட்டார்களா? ஆயிரக்கணக்கானவர்களைகி கொன்றவர்களெல்லாம் இன்று அந்தஸ்தான பதவிகளில் இருக்கிறார்களே... தவிரவும் நோக்கத்தை வைத்து தீர்ப்பிட்டால் இவன் செய்தவை கொலைகள்தானா என்ற கேள்வியும் எனக்கிருக்கிறது. உன்னை யாரும் கண்டுபிடிக்கப் போவதில்லை. பயப்படாமலிரு... என்றேன். நான் யாருக்கும் பயப்பட்டு சரணடையும் முடிவுக்கு வரவில்லை. மறைந்து வாழ்கிறோம் என்ற நினைப்பே கொடுந்தண்டனையாய் வாட்டுகிறது. குற்றத்தை ஒப்புக்கொண்டு தண்டனை அனுபவிக்கும் போதாவது என்னால் நிம்மதியாக இருக்கமுடியும் என்று நினைக்கிறேன்...என்றான். ரொம்பவும் பதட்டமாயிருக்கிறாய். இப்போ எடுக்கும் எந்த முடிவும் சரியாயிருக்காது... என்றேன். நான் நன்றாக யோசித்துவிட்டேன் என்றான். அப்படியானால் உனக்கு அடைக்கலம் கொடுத்த குற்றத்திற்காக நானும்தான் உன்னோடு கம்பி எண்ண வரவேண்டும் என்றேன். பிறகு விடியும்வரை எதுவும் பேசிக்கொள்ளவில்லை. உண்மையில் நான்தான் பேச்சை தவிர்த்தேன். ஆனாலும் எந்நேரத்திலும் அவன் காவல்நிலையத்திற்கு ஓடி சரணடையவோ அல்லது சுயவாதை பொறுக்காமல் தற்கொலை

செய்து கொள்ளவோ முயலக்கூடும் என்ற அச்சம் வாட்டியது என்னை.

அதற்குப் பிறகு போனில் பேசிக்கொண்டோம் ஓரிருமுறை. இரண்டுமாதம் கழித்து இப்போதுதான் வந்திருக்கிறான். என்ன குண்டு கை வசமிருக்கிறதோ தெரியவில்லை.

சாப்பிட்டு முடிக்கும்வரை காத்திருந்தவன் வெளியே வந்ததும் சிகரெட் பற்றவைத்துக் கொண்டான். சதாம் உசேனை கைது பண்ணிட்டோம்னு அமெரிக்காக்காரன் சொல்றதை நீ நம்பறயா...என்றான்.

அதான் டிவியில் காட்டினாங்களே... நீ பாக்கலியா... ?

பாத்தேன். என்னால நம்பமுடியல.

ஏன்?

அமெரிக்காக்காரனோட தில்லுமுல்லு தெரிஞ்சதாலத்தான். நிலாவுக்கே போகாம செட் போட்டு படமெடுத்து உலகத்தையே நம்ப வச்சிட்டதா அமெரிக்காவிலயே ஒரு விவாதம் நடந்துக்கிட்டிருக்குது தெரியுமா.. இன்னைக்கு கிராபிக்ஸ் அதுஇதுன்னு டெக்னாலஜி வளர்ந்திருக்கிற நிலையில சதாமை பிடிச்சிட்டோம்னு காட்டறது ரொம்ப ஈஸிதானே... அதிலும் மீடியா பூராவும் அவன் கையில ஸ்ட்ராங்கா இருக்கும்போது நம்பவைக்கிறது சாத்தியம் தான்.. என்றான்.

என்னாச்சு இவனுக்கு, இப்படி திடீரென்று துப்பறியக் கிளம்பிட்டான் என்ற யோசனை வந்துவிட்டது எனக்கு. அப்படியெல்லாம் நடந்துடக்கூடாதுன்னுதானே அவங்க டிஎன்ஏ சோதனையெல்லாம் பண்ணினாங்க...

என்ன பெரிய சோதனை... குளோனிங் மாதிரி ஆயிரத்தெட்டு டெக்னாலஜி வளர்ந்திட்ட காலத்துல...

பொழுதுபோகாமல் நிறைய யோசித்திருப்பான் போல. தன்னை நினைத்து உழப்பிக்கொள்ளாமல் அவன் இன்னொன்றை யோசித்திருப்பது நல்லதுதான் என்று திருப்திகொண்டவனாகி 'அப்படின்னா, நான் அமெரிக்காகிட்ட பிடிபடலேன்னு சதாம் உசேன் சொல்லவெண்டியதுதானே...'

எதுக்கு சொல்லணும்... இப்ப என்னையே எடுத்துக்க... நான் காணலேன்னதும் அந்தக் கலவரத்துல நான் செத்துட்டதாகவோ அல்லது போலிஸ்கிட்ட மாட்டி அவங்க கொன்னு எறிஞ்சிருப்பாங்கன்னோ தானே ஊரும்உறவும் நம்பிக் கிடக்கும்... ஆனா நான்

இங்கே செட்டிலாயிட்டேன் பாத்தியா.. என்னாலயே ஒளிஞ்சு வாழமுடியும்கிறப்ப ஒரு நாட்டையே ஆண்ட ராஜதந்திரியால தப்பிக்க முடியாதா...
தப்பிப்போகலையே... அதான் வகையா குழிக்குள்ள இருந்து மாட்டிக்கிட்டாரே.
இல்லை. அவங்களை திசைதிருப்ப சதாமே அவராட்டம் ஒருத்தரை தயார் பண்ணி மாட்டவிட்டிருக்கார்.

எனக்கு சிரிப்பு வந்துவிட்டது. என்னவோ சதாம் உசேனே உன்னைக் கூப்பிட்டுச் சொன்னது மாதிரி பேசறே என்றேன்.

உண்மைதான். அவரே என்கிட்ட சொன்னதுதான். எப்ப... ராத்திரி தூங்கறப்பவா... என்ற எனது கேலியை பொருட்படுத்தாமல் 'இல்லை. அவர் இப்போ என்கூட பண்ணைவீட்டில்தான் இருக்கார்..' என்றான் உறுதியான குரலில். அறையலாம்போல் கோபமும்,
புத்தி பேதலித்துவிட்டதா இவனுக்கு என்ற பதட்டமும் வந்துவிட்டது எனக்கு. நீ நம்பமாட்டேன்னு எனக்குத் தெரியும். அதனால்தான் கையோடு கூட்டிப்போக வந்தேன். கம்பனிக்கு லீவ் சொல்லிட்டு வா பண்ணைக்கு போகலாம் என்றான்.

இவனது பைத்தியக்காரத்தனம் எல்லையற்றதாக விரிந்தவிட்டதென்று தோன்றியது.அதற்குள் என்னையும் இழுத்து வீழ்த்தப் பார்க்கிறான் என்ற அச்சம் கிளம்பி தப்பியோடிவிடுமாறு விரட்டியது. இப்போதைக்கு பக்குவமாய் கழன்று கொள்ளும் வழியெதுவும் பிடிபடவில்லை. திடீரென்று லீவ் கிடைக்காது. நான் நாளைக்கு வருகிறேன் என்றேன். அவன் சமாதானம் கொள்ளவில்லை. வற்புறுத்தும் பாவனையில் நின்றிருந்தான். கட்டாயம் நாளைக்கு வந்திடுவே தானே.. என்றான் கொஞ்சநேரம் கழித்து.

தேற்றியனுப்பி வைத்தபிறகு எனக்கு பதட்டம் கூடிவிட்டது. இவனை என்ன செய்வது என்ற குழப்பத்தில் வேலைக்குப்போக பிடிக்காமல் ரூமுக்கு வந்து கதவை தாளிட்டுக்கொண்டு படுத்துவிட்டேன். தூக்கம் வரவில்லை. யோசிக்க யோசிக்க அவன் மீதிருந்த கோபம் வடிந்துபோனது. அவனை அழைத்துப்போய் மனநல மருத்துவர் ஒருவரிடம் காட்டுவதுதான் உடனடியாய் செய்தாக வேண்டியக் காரியம் என்று தோன்றியதும் பண்ணைக்கு கிளம்பினேன்.

முதலாளி வந்து தங்கியிருக்கும் காலங்களைத் தவிர மற்றநாட்களில் மூடப்பட்டேயிருக்கும் பண்ணையின் பிரதான வழி வழக்கத்திற்கு மாறாக திறந்திருந்தது. வெயிலை உச்சியில் தாங்கிக்கொண்டு நிழலை விரித்திருந்தன மரங்கள். குளுங்காற்றில் பூக்களின் வாசனை நிரம்பியிருந்தது. பின்வேலிக்கருகிலிருந்து குரைத்துக் கொண்டே வந்த நாய் கிட்டத்தில் வந்ததும் அடையாளம் கண்டு செல்லமாய் வாலாட்டிக்கொண்டு

வினோதமான ஒலியுடன் குழைந்தது. வழிகாட்டுவதைப்போல் முன்னோடிய நாய் வீடு சமீபித்ததும் இனி உன்பாடு என்பதுபோல் பின்பக்கம் ஓடிவிட்டது. அவனைக் காணவில்லை. இங்கேதான் சுற்றிக்கொண்டிருப்பான். வரட்டுமென்று வராண்டாவில் உட்கார்ந்தேன்.

செய்தித்தாள்களும் வாரப்பத்திரிகைகளும் இறைந்துகிடந்தன. எல்லாவற்றிலுமிருந்து சதாம் உசேன் பிடிபட்ட படங்களையும் செய்திகளையும் கத்தரித்து ஒரு உறைக்குள் போட்டுவைத்திருந்தான். சிலதின் மீது குறிப்பெழுதியிருந்தான். ஏராளமான தாள்கள் கசக்கி எறியப்பட்டிருந்தன மேசையைச் சுற்றி. நான், சதாம் உசேன் வந்திருக்கிறேன் என்று தலைப்பிட்டு எழுதி அடித்துத் திருத்தி கசக்கி எறிந்திருந்ததை படிக்....

மடப்பயலே.. என்னடா ஆச்சு உனக்கு... கத்திக்கொண்டே ஒதிய மரத்தடிக்கு ஓடினேன். படுத்திருந்த நாய் விருட்டென்று எழுந்து ஓடியது வேறுபக்கம். மூடப்பட்டிருந்த இலைதழைகளை அப்புறப்படுத்தியதும் தெரிந்த மூங்கில்படலை நீக்கியதும் அதிர்ந்துவிட்டேன். ஆள் மறைக்குமளவு ஆழத்தில் குழி. பக்கவாட்டில் குடைந்தெடுக்கப்பட்ட வளையின் இருளில் கரைந்துவிட்டவனைப் போல ஒடுங்கி உட்கார்ந்திருந்தான். என்னைக் கண்டதும் போலிசும் வந்திருக்கிறதா என்று நடுங்கும் குரலில்
கேட்டான். இல்லை, எழுந்து வா... என்றேன். இப்படி பதுங்கியிருந்ததால் தான் சதாமை பிடிச்சார்களாம்... நானும் இங்கேயே காத்திருக்கிறேன்... என்னை பிடிக்க ஏன் வரவில்லை என்று அழத் தொடங்கிவிட்டான். நீ வெளியே வா... நாமே அவர்களிடம் போகலாம் என்றேன். வந்த பிறகு அன்னிக்கு மாதிரி குழப்பக்கூடாது.... சரியா ... என்று திரும்ப திரும்ப சொல்லியபடியே வெளியே வந்தான். ஓடியும் பதுங்கியும் களைப்புற்றிருந்த சதாமின் பரிதாபத்திற்குரிய தோற்றம் ஒருகணம் மின்னி கலைந்தது அவனில். வளைக்குள் நுழைந்ததில் உடம்பெங்கும் சிராய்த்து ரத்தம் காய்ந்திருந்தது. நான் மேலேறி குனிந்து அவனுக்கு கை கொடுத்தேன். அவன் குழிக்குள் இழுப்பதுபோல் கைநீட்டினான்.

**54. மூன்றாம் பரிசு: தீதும் நன்றும் - அலர்மேல் மங்கை -**

[*தற்போது அமெரிக்காவில் வசிக்கும் அலர்மேல்மங்கை 'கல்லுக்குள் ஈரம்' நாவலை எழுதிய எழுத்தாளர் ர.சு.நல்லபெருமாளின் மகள் என்பது குறிப்பிடத்தக்கது.*]

ஸ்டேட் ரோடும், லிபர்ட்டி ரோடும் சந்திக்கும் முனையில் இருந்த ம்யூஸியம் அப் ஆர்ட் முன்னே கிடந்த கல் பெஞ்ச்சில் அமர்ந்திருந்தான் கௌதம். பல்கலைக் கழக மாணவர்கள் சிலர் சுறுசுறுப்புடனும், சிலர் மந்தமாகவும், சிலர் பிரகாசமாகச் சிரித்தபடியும், சிலர் உலகத்தின் பாரமே தன் தோளில் மட்டுமே என்பது போலவும் போய்க் கொண்டிருந்தனர். "இவர்களுக்கெல்லாம் வாழ்க்கை இந்த பல்கலைக்கழகமும், பாடங்களும், ஆண் தோழனும், பெண் தோழியும், விடுமுறை நாட்களில் சந்திக்கும் பெற்றோர்களும், உடன் பிறந்தவர்களும் மட்டுமா, இல்லை அதற்கு மேலும் வேறு தேடல்கள் உண்டா?," என்று நினைத்தான். இதில் எத்தனை பேருக்குத் தாய் வேறு ஒருவனுடன் போயிருக்க முடியும்? எத்தனை பேருக்குத் தந்தை - நண்பனும், ஆசானும் போல் இருந்து வளர்த்த தந்தை இறந்து போயிருக்க முடியும்? யாருடைய முகத்திலும் துயரத்தின் அறிகுறி தெரியவில்லை. எல்லோரும் மாணவர்களாக அவரவர் கடமையை நோக்கிப் போய்க் கொண்டிருப்பது போலத்தான் தெரிந்தது. ஏதோ ஒரு அர்த்தமுள்ள வாழ்க்கையை நோக்கி அவர்கள் யாவரும் நகர்ந்து கொண்டிருப்பதாகத் தோன்றியது. அவனுக்கு மட்டுமே வாழ்க்கை அர்த்தமில்லாததாகவும், துயரம் நிறைந்ததாகவும் தோன்றியதும், மீண்டும் அன்றே தான் இறந்து விட வேண்டும் என்ற முடிவு உறுதியானது. ஆர்ட் ம்யூஸியத்தின் படிகளில் அமர்ந்து ஒரு ஆப்பிளைக் கடித்துக் கொண்டே ஏதோ புத்தகத்தை திருப்பிக் கொண்டிருந்த பெண் இவனைப் பார்த்து புன்னகைக்க முகத்தைத் திருப்பிக் கொண்டான்.

கடந்த ஒரு மாதமாக ஆர்ட் ம்யூஸியத்தில் ஜார்ஜியா ஓ' கீபின் ஓவியங்கள் பொது மக்களின் பார்வைக்கு வைக்கப் பட்டிருந்தன. விக்ரம் கௌதமை போன வாரம்தான் வலுக்கட்டாயமாக அழைத்துப் போனான் ஓவியங்களைப் பார்க்க. கௌதமுக்கு ஓவியங்களில் எல்லாம் அவ்வளவாக ஆர்வமில்லை. விக்ரம் ஒவ்வொரு ஓவியத்துக்கும் முன் பத்து நிமிடங்களாவது நின்றான்.

"என்ன ஒரு வெரைட்டி அப் தீம்ஸ் பார். வித விதமான பூக்கள். அப்புறம் நியூ மெச்சிக்கோவின் சிவப்பு மண் மலைகள். அப்புறம் மிருகங்களின் எலும்புகள்...கலர் காம்பினேஷனைப் பார்த்தாயா? பூக்களின் நிறங்களையும், செழுமையையும் வரைந்த அதே கைகள் நியூ மெச்சிக்க மலைகளின் வறட்சியையும் வரைந்துள்ளதே! என்ன காரணத்துக்காக இப்படி வரைந்திருப்பார்னு நினைக்கிறே?," என்றான். விக்ரம் மருத்துவ மாணவன்.நியூரோ சர்ஜனாகும் லட்சியம் அவனுக்கு. மனித மூளையின் ஆழத்தையும், வீர்யத்தையும் அவனால் வியக்காமல் இருக்கவே முடியாது.

"ப்ச," என்றான் கௌதம் அஸ்வாரஸ்யமாக. விக்ரம் அதையெல்லாம் கண்டு கொள்வதாகத் தெரியவில்லை. ஒரு ஓவியத்தின் முன்னே தீவிர யோசனையுடன் நின்று கொண்டிருந்த ஒரு வெள்ளைக்கார தாடிக்காரர் ஆர்ட் ப்ரொபசராக இருக்க வேண்டும். அவருடன் விக்ரம் ஒரு அரை மணி நேரம் அந்த ஓவியத்தைப் பற்றி விவாதித்தான். அவரும் பொறுமையாக விளக்கிக் கொண்டிருந்தார். இவர்களுக்கெல்லம் இதற்கு நேரமும் இருக்கிறதே! மருத்துவ மாணவனுக்கு, ஓவியத்தில் என்ன ஈடுபாடு? ஆனால் விக்ரம் அப்படித்தான். அவனுடைய பலமும் அதுதான், பலகீனமும் அதுதான். பல விஷயங்களில் ஈடுபாடு கொண்டதால், அவனுடைய மருத்துவப் படிப்பில் அவனால் தீவிர கவனம் செலுத்த முடிகிறதா என்று கௌதம் எப்போதும் வியந்திருக்கிறான். நேரம் காலம் இல்லாமல் படிக்கும் மருத்துவப் படிப்பின் நடுவே அவனுக்கும் இதற்கெல்லாம் எப்படியோ நேரம் இருக்கத்தான் செய்கிறது!

ஒரு தாயும் மகனும், ஆர்ட் ம்யூஸியத்தின் படிகளில் ஏறிக் கொண்டிருந்தார்கள். இப்படித்தான் விக்ரமின் தாயும் அவனை ஆர்ட் ம்யூஸியத்துக்கும், பல்கலைக் கழக வளாகங்களில் நடக்கும் இலவச விரிவுரைகளுக்கும் அவனை அழைத்துச் சென்றதாக விக்ரம் கூறியுள்ளான்.

"எல்லா இந்திய அம்மாக்களும் தங்கள் பிள்ளைகளை பஜனை க்ளாஸிலும், ஸ்லோகக் க்ளாஸிலும் சேர்த்து விட்ட கால கட்டத்துல, என்னோட அம்மா என்னை ஆர்ட் ம்யூஸியத்துக்கும், ப்ளேனட்டொரியத்துக்கும், நோபல் ப்ரைஸ் வாங்கின விஞ்ஞானி பல்கலைக் கழகத்துக்கு வந்த போது அவருடைய லெக்சருக்கும் கூட்டி போனா. இன்னிக்கு நான் பலதரப் பட்ட விஷயங்களிலில் ஆர்வம் உள்ளவனா இருக்கிறேன்னா அதுக்கு அம்மாதான் காரணம்" என்றான் பெருமிதமாக. அப்போது அவனைப் பார்க்கப் பொறாமையாக இருந்தது கௌதமுக்கு. இப்போது ஆர்ட் ம்யூசியத்தின் படிகளில் ஏறிக் கொண்டிருக்கும் அந்தத் தாயையும், மகனையும் உற்று நோக்கினான். இவனும் ஒரு நாள் விக்ரம் போல இதே பல்கலைக் கழகத்தில் படிக்க வரலாம். அப்போதும் அவனுடைய படிப்புக்கு நடுவே கிடைக்கும் சில நிமிடங்களில், ஆர்ட் ம்யூஸியத்துக்கு ஓடி வரலாம். ஏன் சிலருக்கு மட்டும் இது போன்ற அற்புதமான தாய் அமைந்து விடுகிறார்கள்? கடவுள் என்ற ஒருவர் இருந்தால், இவர்கள் எல்லாம் அவரால் அனுப்பப் பட்ட தேவதைகளாக இருந்திருப்பார்கள்.

"எனக்கு மட்டும் அப்படி ஒரு தாய் அமைந்திருந்தால் நானும் விக்ரமப் போலத்தான் இருந்திருப்பேன்," என்று கௌதமின் எண்ணம் ஓடியது. அப்படி ஒரு தாய் அமையாத கொடுமைதான் இன்று இப்படி உயிரை மாய்த்துக் கொள்ள வேண்டிய நிலைக்குத் தள்ளியுள்ளது என்ற நினைப்பும் ஓடியது.

இரு மாதங்களுக்கு முன், அப்பா திடீரென்று மாரடைப்பில் இறந்து போனது முதலாகத்

தாயின் மீது அவனுடைய வெறுப்பு கூடிக் கொண்டுதான் இருக்கிறது. விக்ரம் கூறியது போல எல்லா இந்திய அம்மாக்களும் போலக் கௌதமின் அம்மாவும் அவனுக்கு எட்டு வயதாகும் வரை அவனை ஒரு இந்தியப் பையனாக, அதுவும் ச்லோகங்களும், சாஸ்திரங்களும் தெரிந்த ஒருவனாக வளர்க்கப் பிரயத்தனம் செய்யத்தான் செய்தாள். அவள் செய்த பூஜைகளுக்கும், செய்த ஹோமங்களுக்கும் குறைவில்லை. ஆனால் அதனாலெல்லாம் என்ன பலன் என்று அவனுக்கு அன்றும் புரிந்ததில்லை, இன்றும் புரியவில்லை. அர்த்தம் தெரியாத மந்திரங்களையும், ஸ்லோகங்களையும் முழங்கி விட்டுப் பின், எட்டு வயது மகனையும், அன்பான கணவனையும் விட்டு ஒரு வெள்ளைக்கார மருத்துவனுக்குப் பின் சென்ற அந்த ஒழுக்கமின்மையை என்னவென்று சொல்வது? அப்பா ஒரு சாதாதாரணப் பொறியாளராக இருந்தது அம்மாவுக்கு எப்போதுமே உறுத்தலாக இருந்துள்ளது என்பது அவனுக்கு விபரம் தெரிந்த போது புரிய வந்தது. அம்மா மாபெரும் அழகி. அவளுடைய அழகில் மயங்கிய மிகப் பெரிய இருதய அறுவை சிகிச்சை நிபுணருடன் அம்மா தொடர்பு கொண்ட போது, அவள் பாடிய ஸ்லோகங்களும், மந்திரங்களும் அவளுக்கு எந்த விதத்திலும் ஒழுக்கத்தையும், அடிப்படை மனித நல்லியல்புகளையும் கற்றுத் தரவில்லையென்றே அவனுக்கு இன்றும் தோன்றுகிறது. அதற்குப் பின்னும் அவள் தன் ஜெப தபங்களையும், மந்திரங்களையும் முழங்கிக் கொண்டுதான் இருக்கிறாள். வேடிக்கை என்னவென்றால் அந்த வெள்ளைக்கார மருத்துவனுக்கும் பட்டு வேஷ்டி கட்டி விட்டு, அவனுடன் பெற்ற மகனுக்கு பூணூல் கல்யாணமும் செய்து வைக்கிறாள்.

அம்மா, அப்பாவிடம் இருந்து விவாகரத்து வாங்கிக் கொண்டு விலகிப் போன நாள் முதலாகவே அப்பாவும் இந்த வெற்றுச் சம்பிரதாயங்களில் நம்பிக்கை அற்றுப் போனவராகத்தான் இருந்தார். அவருடைய தாய், அவரைச் சந்தியாவந்தனம் செய்யச் சொல்லி வற்புறுத்திய போது, "இது பண்றதால மட்டும் நான் ஒரு முழு மனுஷனாவோ, நல்ல மனுஷனாவோ ஆகிட மாட்டேன். உன் மாட்டுப்பொண் பண்ணாத பூஜையும் இல்லை, செய்யாத ஹோமமும் இல்லை. ஆனால் உறவுகளுக்கு முக்கியம் தராமல் பணத்துக்காக, புருஷனையும், புள்ளையையும் விட்டுட்டு ஒரு வெள்ளைக்கார டாக்டர் கூட ஓடிப் போனாளே? அதுனாள் வரை நீ பண்ண பூஜையும், நான் சொன்ன மந்திரமும் எந்த விதத்தில் எனக்கு உதவியது?", என்ற போது பாட்டியால் ஒன்றும் கூற இயலவில்லை. அதன் பின் அம்மா மீதுள்ள கசப்பு அவருக்குப் போன பின்பும் கூட, அவருக்குக் கடவுள் மீதோ, பூஜைகள் மீதோ மீண்டும் எந்த நம்பிக்கையும் ஏற்பட்டு விடவில்லை.

ஏழு வயதில் அம்மா பண்ணிய செயலின் தீவிரம் அவனுக்குப் பனிரெண்டு வயதில்தான் புரிந்தது. வார இறுதி விடுமுறைகளை, அவளுடன் கழிக்க வேண்டும் என்று கோர்ட் உத்தரவு. அம்மா இன்னமும் தன் பூஜை, புனஸ்காரங்களை நிறுத்திய பாடில்லை. தன்னுடைய ஆசாரத்தை, சைவ உணவை உண்ணுவதால் மட்டுமே நிலை

நிறுத்திக் கொண்டிருந்தாள். டாக்டருக்குக் கோழியும், மாடும், பன்றியும் சமைக்க ஒரு தென் அமெரிக்கப் பெண் இருந்தாள். ஆறாயிரம் சதுர அடிகள் கொண்ட வீட்டில் வசிப்பதில் அவள் ஜென்மம் சாபல்யமாகி விட்டதாகத்தான் தெரிந்தது. வீட்டில் இருந்த டென்னிஸ் கோர்ட்டில் விளையாடி, நீச்சல் குளத்தில் நீந்தி, உடலையும் சிக்கென வைத்துக் கொண்டு, டாக்டருக்கு, தான் இன்னும் இளமையாகவே இருப்பதாகவும் காட்டிக் கொண்டாள்.

எல்லாத் தவறுகளும் செய்து கொண்டு அவள் வாழ்க்கை சந்தோஷமாகத்தானே கழிகிறது? கௌதமுக்குத் தொண்டை கசந்தது. அப்பா என்ன பாவம் செய்தார்? தன் கடமைகளை எப்போதும் தவறாமல் செய்து கொண்டு, மனித நேயம் பேணிய அவரை வாழ்க்கை ஏன் இவ்வளவு அலைக் கழித்தது? இதில் எந்த விதத்தில் நியாயம் இருக்கிறது? அம்மா சொகுசான வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருக்க, அப்பா தனியாக, இந்த அமெரிக்க மண்ணில் அவனை வளர்க்க எத்தனை சிரமப்பட்டார்? அவன் மனமெல்லாம் பரவியிருந்த கசப்பைக் கண்டு அவரே எத்தனையோ முறை திகைத்திருக்கிறார். அவருக்கு ஒன்றிரண்டு வருடங்களில் அம்மா மீது இருந்த வருத்தமெல்லாம் மாறி விட்டது.

"We were not meant to be together," என்பார் ஒரு நாள்.

" நானே அவள் பண்ணியதை ஏத்துக்கிட்டாச்சு. அவளை மன்னிச்சுட்டேனான்னு நீ கேக்கறே? யோசிக்க யோசிக்க, அவள் பண்ணியது ஒண்ணும் பெரிய பாவமில்லன்னுதான் தோணுது. அம்மா அப்பா சொல்றாங்கன்னு என்னக் கல்யாணம் பண்ணிக்கிட்டா. இப்பத்தான் தெரியுது, அவ என் கூட இருந்த எட்டு வருஷமும் அவ்வளவு சந்தோஷமா இல்லன்னு. எந்த மனுஷனுக்கும் வழ்க்கையில முக்கிய குறிக்கோள் சந்தோஷம்தான? ஸோ, சந்தோஷத்தத் தேடி அவ போனதுல நான் தப்பு சொல்ல மாட்டேன். என்னோட நடந்த அவ கல்யாணமும், நீ பிறந்ததும் அவ வாழ்க்கையில அவ சந்தோஷத்துக்கு இடையில வந்த குறுக்கீடுகள்னுதான் நாம எடுத்துக்கணும். நீ ஒரு தாயில்லாமல் வளர்வது உன்னுடைய துரதிர்ஷ்டம்தான். ஆனா, ஒண்ணு ஞாபகம் வச்சுக்கோ. உன்னிடம் இருந்து ஒன்று பறிக்கப் பட்டதுன்னா, வேறு ஒன்று உனக்குக் கிடைக்கும். அம்மா செஞ்சது பெரிய தப்புன்னு நினைச்சியானால், அவளை மன்னிச்சுடு. உன்னுடைய வெறுப்பே உன்னுடைய கைவிலங்கா மாறிடுமோன்னு பயமா இருக்கு," என்பார் இன்னொரு நாள்.

அவருக்கு அடுத்தபடியாக அவனால் விக்ரமுடன் மட்டுமே அப்படியெல்லாம் பேச முடிகிறது. விக்ரம் உடன் அவன் கழிக்கும் நேரமெல்லாம் அவன் மிக சந்தோஷமாக உணர்கிறான். விக்ரம் மிகவும் சந்தோஷமானவன். எதையும் சுலபமாக எடுக்கத் தெரிகிறது அவனுக்கு. மறுனாள் 'அனாட்டமி'யில் பரீட்சை வைத்துக் கொண்டு, இன்று

அவனால் சியெர்ரா க்ளப் மீட்டிங்கில் கலந்து கொண்டு சுற்றுப் புறச் சூழலைப் பற்றிப் பேச முடிகிறது. மருத்துவக் கல்லூரியில் உடன் படிக்கும் மாணவியை டின்னருக்கு அழைத்து அவள் வர மறுத்ததை, அவன் அம்மாவிடம் சொல்லி, அவள் கேட்கும் ஆயிரம் கேள்விகளுக்கும் சிரித்துக் கொண்டே பதில் சொல்ல முடிகிறது. வீட்டுக்குத் திடீரென்று எட்டு இந்திய மாணவர்களை அழைத்துச் சென்று, அவன் அம்மாவின் சமையலறையில் நின்று அவன் அம்மாவுக்கு எடுபிடியாக எட்டு பேருக்கும் சமைக்க முடிகிறது. தந்தூரிச் சிக்கனையும், ரசத்தையும் ருசிக்கும் அளவு, மங்கோலியன் பார்பெக்யூ உணவையும் ரசிக்க முடிகிறது. மதங்கள் எதிலும் நம்பிக்கை இல்லை என்று சொல்லிக் கொண்டே, தலாய் லாமாவின் புத்தகங்களை வாசிக்க முடிகிறது. நேரம் கிடைக்கும் போதெல்லாம், சூப் கிச்சனுக்குச் சென்று எழைகளுக்குப் பரிமாறி, பாத்திரம் கழுவ முடிகிறது. இதையெல்லாம் அவன் எங்கிருந்து கற்றான் என்ற ஆச்சர்யம் கௌதமுக்கு எப்போதும். அவனுடன் சந்தோஷமாக எதைப் பேசினாலும், கடைசியில், அது அம்மாவைப் பற்றி பேசுவதில்தான் முடிகிறது.

"நீயேன் இன்னும் அம்மா பண்ணியதை உன் தோளில் சுமந்துட்டுத் திரியறே? பர்கெட் இட், கௌதம். இவ்வளவு பெரிய யுனிவர்ஸில, நீயும், நானும் உன் அம்மாவும், அப்பாவும் ஒரு துளி கூட இல்லை. சுயனலவாதி பிழைக்கிறான், உன் அம்மாவைப் போல. சந்தோஷமாகவும் இருக்கிறான். இதிலெல்லாம் நீ ஒரு ஜஸ்டிசைத் தேடினியானால், உனக்குத்தான் ஏமாற்றம். இந்த வாழ்க்கைக்கு அர்த்தமில்லையென்று நினைக்காதே. உன் வாழ்க்கையின் அர்த்தத்தை நீதான் தேட வேண்டும். உன் அம்மாவுக்கு அர்த்தம் பணத்தில் இருந்தது. அந்த பணத்தால் கிடைகிற வசதிகளில் இருக்கிறது. உன்னுடைய அப்பாவுக்கு அர்த்தம் உன்னை வளர்ப்பதிலும், மனித நேயத்திலும் இருக்கிறது. அவர்கள் இருவரும் சேர்ந்து வாழ முடியாமல் போனது உன்னுடைய துரதிர்ஷ்டம் மட்டுமே. அவர்கள் இருவரும் சேர்ந்து இருந்திருந்தாலும் அவர்கள் சந்தோஷமாக இருந்திருப்பார்களா என்ன? அவர்கள் இருவருக்கும் வேறு வேறு தேடல்கள் அல்லவா? உன்னுடைய அர்த்தம் எதில் இருக்கிறது என்று நீ தேடு," என்றான் விக்ரம்.

ஆனால் இன்று அவனுடைய தேடல்களுக்கு எல்லாம் முடிவுதான் என்று நினைத்துக் கொண்டான். அப்பா இருக்கும் வரை அவனுடைய வாழ்க்கைக்கு அர்த்தம் இருந்தது போலவும் அவர் இறந்த பின்னே அவன் இருப்பிற்கே அர்த்தம் இல்லாதது போலவும் தோன்றியது. விக்ரம்தான் அவன் முழுதும் உடைந்து போகாமல் இன்று வரை தாங்கிக் கொண்டிருக்கிறான். ஆனாலும் வெறுமை அவனைச் சூழ்ந்து இருப்பது போன்ற துயரம்! மிச்சிகன் பல்கலைக் கழகத்தில் எம்.பி.ஏ சேர்ந்த போது இருந்த சந்தோஷம் எல்லாம் அப்பாவின் மரணத்துடன் மறைந்து விட்டது. படிப்பதிலும் ஆர்வம் குறைந்து விட்டது. எந்த நேரத்திலும், ப்ரொபஸர்கள் கூப்பிட்டு அவனை எச்சரிக்கலாம். எதிர்காலமே ஒரு சூன்யமாகத் தெரிந்தது.

அப்பா இறந்த புதிதில் இரு வாரங்கள் விக்ரம் வீட்டில்தான் தங்கி இருந்தான். அப்போது ஒரு நாள், அவன் துக்கத்தில் கண்ணீர் வடித்த போது விக்ரமின் தாய் அவனை அணைத்துக் கொண்டாள். அது அவனுக்கு ஒரு புது அனுபவமாக இருந்தது.

"உன்னை அழாதேன்னு சொல்ல முடியாது. நல்லா அழு. அழுது உன் துக்கததையெல்லாம் கரைச்சுடு." என்றாள். அவனுடைய தாய் அவனை அணைத்த ஞாபகமே இல்லை அவனுக்கு. அன்றும் அவனுக்கு இதே கேள்விகள் இருந்தன. பணத்துக்காக, கட்டிய புருஷனையும், பெற்ற பிள்ளையையும் விட்டுப் போன அம்மா சகல சௌபாக்கியங்களுடன் சந்தோஷமாக ஐரோப்பா டூர் போந நேரம், அப்பா தனியாக வீட்டில், இரவில் மாரடைப்பில் சாவானேன்? அன்றும் இப்படித்தான் அம்மா மீது கோப வெறியில் குமுறினான்.

"அதுக்கு என்ன பண்றது, கௌதம்? அவரவர்க்கு விதிச்சதுன்னு இருக்குல்லியா? உன் அம்மாவுக்கு விதிச்சது அவளுக்கு. அப்பாவுக்கு இப்படி விதிச்சுருக்கு. அதது அதன் போக்கிலேதான் போகுது. இதுதான் முரண்பாடே. நீ அம்மா தப்பானவள்னு நினைக்கிறே. Right and wrong is very relative தான் இல்லியா? உனக்கு ரைட்டாத் தோண்றது எனக்குத் தப்பாத் தெரியலாம். உன் அம்மா கெட்டவள் அப்படின்னு நீ நினைக்கிறே? எதனால்? அவள் உன்னையும், உன் அப்பாவையும் விட்டுப் போனதாலா? அவளைப் பொறுத்த வரை அவளுக்குப் பணம் முக்கியமா இருந்திருக்கு. அவள் மனசு அவளுக்குக் காட்டிய பாதையில்தான் அவ போயிருக்கா? அவள் எடுத்த அந்த முடிவு உன்னையும், உன் அப்பாவையும் பாதிச்சிருக்கு. ஆனா, உன் அப்பா அவளை மன்னிச்ச மாதிரி நீயும் மன்னிச்சுப் பாரேன், உன்னுடைய வருத்தங்களும் , சோகங்களும் மறைஞ்சிடும். இன்னொண்ணும் தமிழில் இருக்கு, 'தீதும், நன்றும் பிறர் தர வாரா', அப்படின்னு," என்றவள், "அப்படின்னா என்ன தெரியுமா? நல்லதும், கெட்டதும் மற்றவங்களால நமக்கு வர்றது இல்லை," என்றதும்,

"பின்ன என்னையும், அப்பாவையும் இப்படி விட்டுட்டு அவன் கூடப் போனது சரின்னா சொல்றீங்க?" என்றான் கோபத்துடன்.

"அவளப் பொறுத்த வரை சரி. உன்னப் பொறுத்த வரை தப்பு. ஆனால் உன்னுடைய கஷ்டமெல்லாம் அவளாலதான்னு நீ சொல்றதுதான் தப்பு. நல்லா யோசிச்சுப் பார். புரியும்," கூறி விட்டுக் கீழே சென்று விட்டாள்.

விக்ரம் அவனைக் கலக்கத்துடன் பார்த்தான். "அம்மா இப்படித்தான். பட்டுன்னு உண்மைன்னு அவள் நினைக்கிறதைச் சொல்லிடுவாள். ஆனால் அவள் சொன்னதால

அதுதான் உண்மைன்னும் நீ எடுத்துக்க வேண்டாம். அவளைப் பொறுத்தவரை அது சரின்னு அவ நினைக்கிறா. நீயே யோசி. உன் அப்பா இறந்த துக்கத்தில், நீ உன் அம்மாவிடம் வருத்தப் படுவதில் என்ன அர்த்தம் என்று யோசி. உன் அம்மா விட்டுப் போய் பதினெட்டு வருடங்கள் கழித்துதான் அப்பா இறந்திருக்கார். அவர் ஹார்ட் அட்டாக்கில் இறந்ததற்கு அவள் இத்தனை வருடங்கள் கழித்து எப்படிப் பொறுப்பாக முடியும்? உன்னுடைய அம்மா அவள் குடும்பத்தில், பணக்கார வாழ்க்கையில் சந்தோஷமாக இருப்பதுதான் உன்னுடைய கோபத்துக்குக் காரணம். அவளை அவள் கணவன் விட்டுப் பிரிந்தாலோ, வேறு எந்த வகையிலோ அவள் சிரமப்படுகிறாள் என்றால், நீ உன் அம்மாவை மன்னித்திருப்பாயோ?" என்றான்.

விக்ரம் கூறியதில் இருந்த உண்மை அவனைத் தாக்கினாலும், அந்த உண்மையை அவன் மனம் நிராகரித்து விட்டது.

இன்று இந்த ஆர்ட் ம்யூஸியத்தின் முன்னால் அமர்ந்து, தற்கொலைக்கு உரிய நாளாகத் தேர்ந்தெடுத்த இந்த நாள் முதல் அம்மாவின் மேல் கோபம் கூடத்தான் செய்கிறதே தவிர குறையவில்லை. தான் தற்கொலை செய்து கொண்ட செய்தி கிடைத்ததும் அம்மா என்ன செய்வாள் என்ற எண்ணம் ஓடியது. அவளால் முகம் சுழித்துப் பெருங்குரலெடுத்து அழக் கூட முடியாது. வெள்ளைக்காரக் கணவன் முன்னே எப்போதும் அழகு முகத்தை மட்டுமே காட்ட வேண்டும் என்று நினைப்பவள் அல்லவா என்று தோன்றியது. விக்ரமுக்குத் தெரிய வரும் போது அவன் என்ன செய்வான் என்று நினைத்தான். விக்ரம் வருத்தமாக இருந்தே பார்த்ததில்லை அவன். இவனுடைய மரணத்தையும் அவன் ரெம்பச் சாதரணமாகத்தான் எடுத்துக் கொள்வானோ என்று தோன்றியது, கௌதமுக்கு. இல்லை, இவ்வளவு பரந்து, விரிந்திருக்கும் யுனிவர்ஸில் கலந்து விட்ட துளி என்று கூட அவன் நினத்துக் கொள்வான் என்று நினைத்த போது, கௌதமுக்குச் சிரிப்பு வந்தது. தற்கொலை எண்ணம் மனத்தைக் கான்சராக அரித்துக் கொண்டிருக்கும் நாள் முதலாக அந்த எண்ணத்தைப் பற்றி விக்ரமிடம் சொல்லவில்லை, அவன். விக்ரமிற்குத் தெரிந்திருந்தால் வற்புறுத்திக் கவுன்சிலிங்கிற்கு அழைத்துச் சென்றிருப்பான், உயிர் வாழ மில்லியன் காரணங்களைத் தொகுத்து வழங்கியிருப்பான், 'வாழ்க்கையில் மாற்றங்கள் மட்டுமே நிரந்தரம்' என்று தலாய் லாமா புத்தகத்தில் படித்திருப்பதைச் சொல்லியிருப்பான். விக்ரம் நினைவில் சிறிது நேரம் அமர்ந்திருந்தான்.

இரண்டு மணி நேரம் அந்தப் பெஞ்சிலேயே அமர்ந்திருக்கும் உணர்வு வர, பார்வையை ஓட விட்டான். பல்கலைக் கழக வகுப்பு நேரம் துவங்கி விட்டிருக்கும். தெருக்களில் மாணவர்கள் நடமாட்டம் குறைந்திருந்தது. இனி பகல் உணவு நேரம் மீண்டும் தெருக்களில் கூட்டம் கூடும். அந்த இடத்தைத்தான் அவன் தற்கொலைக்குத் தேர்ந்தெடுத்திருந்தான். ஸ்டேட் ரோடும், லிபர்ட்டி ரோடும் சந்திக்கும் இடத்தில்

எலெக்ட்ரிக் சிக்னல் இல்லை. வெறும் ஸ்டாப் சைன் மட்டுமே உள்ளது. போக்குவரத்து குறைந்த நேரங்களில், ஹார்மோன்களின் உந்துதலில் அதிவேகமாக கார் ஓட்டி வரும் அமெரிக்க மாணவர்கள் அங்கு வேகத்தைக் குறைக்காமலேயே போய் போலீஸில் மாட்டியதை கௌதம் அடிக்கடி கவனித்திருக்கிறான். அது போன்ற ஒரு கார் வேகமாக வரும் தருணத்துக்காகக் காக்கத் துவங்கினான். ஆர்ட் ம்யூஸியத்துக்குள்ளும் வெளியேவும் வரும் கூட்டம் குறைந்திருந்தது. உள்ளே போயிருந்த அந்தத் தாயும், மகனும் வெளியே வந்து கொண்டிருந்தனர். அந்தச் சிறுவன் முகத்தில் சந்தோஷம் துள்ளிக் கொண்டிருந்தது. ரோடுகள் சந்திக்கும் முனையில் 'ஹாட் டாக்' ஸ்டாண்டைப் பார்த்ததும் ஏதோ தாயிடம் கேட்பது தெரிந்தது. அந்தக் குட்டிப் பையனின் வாழ்க்கை இது போன்ற தாயால் சந்தோஷமாக இருக்கும் என்ற நினைப்பு மின்னல் போல கௌதமுக்கு ஓடியது. இபோது அவனுக்கு ஆர்ட் காலரியில் பார்த்த எதுவும் பாதித்திரா விட்டாலும், வளர்ந்தவனானதும்கவன் ஒரு பண்பட்டவனாக இருப்பான் என்றும் நினைத்துக் கொண்டான். கலையையும், வாழ்க்கையையும் ரசிக்கத் தெரிந்த மனிதனாக வளரும் அதிர்ஷ்டசாலியாக இருப்பான்.

பார்த்துக் கொண்டிருக்கும் போதே அந்த விபரீதம் நடந்தது. ஹாட் டாக் ஸ்டாண்ட் அருகே போன போது, அந்தச் சிறுவன் திடீரென்று ஒரே ஓட்டமாகச் சாலையை கடக்க, அதிர்ச்சியில் உறைந்த அவனது தாய், பின்னாலேயே ஓடும் போது, ஸ்டாப் சைனில், நிற்காமலேயே போன கார் அவளைத் தூக்கி எறிந்தது.

அதன் பிறகு நீண்ட நாட்களுக்குக் கௌதமுக்குக் கவுன்ஸலிங் வேண்டியிருந்தது.

## 55. சாவித்திரி ஒரு ஸ்ரீலங்கன் அகதியின் குழந்தை! - - வ.ந.கிரிதரன் -

இந்த அப்பா எப்பொழுதுமே இப்படித்தான். Harry Potter and The Goblet of fire புத்தகத்தைக் கடைசியில் ஒரு மாதிரி வாங்கித் தந்து விட்டார். ஜெ.கெ.ராவ்லிங்கின் ஹரி பாட்டர் தொடர் புத்தகங்கள் எனக்குப் பிடித்த தொடர்களிலொன்று. ஆனால் இந்தப் புத்தகத்தை மட்டும் அப்பா ஒவ்வொருமுறையும் வாங்குவதற்குச் சாக்குப் போக்குச் சொல்லி இழுத்தடித்துக் கொண்டு வந்தார். காரணம் இதன் விலைதான் தான். முப்பத்தைந்து கனடியன் டொலர்கள். சென்ற முறை சாப்டர்ஸ்ஸிற்குக் கூட்டிப் போனபோது இந்தப் புத்தகத்தை வாங்கித் தருவதாகத் தான் கூட்டிப் போனார். ஆனால் வழக்கம் போல் இறுதியில் கையை விரித்து விட்டார். 'உனக்கம்மா இந்த ஒரு புத்தகத்திற்குப் பதிலாக இரண்டு 'துரதிருஷ்ட்டவசமான சம்பவங்கள்' ( The unfortunate events ) புத்தகங்களை வாங்கித் தருகிறேன்' என்று வாங்கித் தந்து விட்டார். லெமொனி சினிக்கெட்டின் 'துரதிருஷ்ட்டவசமான சம்பவங்கள்' தொடரும் எனக்கு மிகவும் விருப்பமான தொடர் தான். இந்ததொடரை எனக்கு அறிமுகப்படுத்தியவர் மிஸ் எலிஸபெத். எனது கிளாச் டீச்சர். தாய் தகப்பனில்லாத வயலட், கிளாஸ், குழந்தை சனியை பொல்லாத ஓலாவ் படுத்தும் பாடிருக்கிறதே. பாவம் அவர்கள். அவர்களது அப்பா அம்மாவை இந்தப் பொல்லாத ஓலாவ்தான் கொன்று விட்டான். இப்பொழுது இவர்களின் சொத்தினை அடைவதற்கும் முயன்று கொண்டிருக்கின்றான். திரு. போ (Mr.Poe) மட்டுமில்லையென்றால் இவர்களது பாடு இன்னும் அதிகத் துன்பம் நிறைந்ததாகவிருந்திருக்கும். இந்தப் புத்தகங்களென்றால் எனக்கு ரொம்பவும் உயிர். அப்பாவுக்கும் தான். எந்த நேரமும் புத்தகம் புத்தகமாய் வாங்கி வருவார். ஆனால் ஒவ்வொருமுறையும் இந்தத் தொடர் புத்தகங்களை வாங்கித் தருவதற்கு மட்டும் அப்பா எப்பொழுதுமே முதலில் தயங்கத் தான் செய்கிறார். அது தான் ஏனென்று இன்னும் எனக்குப் புரியவில்லை. இப்படித்தான் மேரி பாப் ஆஸ்பார்னின் மந்திர மர வீடு (Magic Tree House) தொடர் நூல்களையும் முதலில் வாங்கித் தர அப்பா தயங்கிக் கொண்டிருந்தார். எனக்கு மிகமிகப் பிடித்த தொடர் இது தான். ஜக்கும் ஆன்னியும் ஒவ்வொரு முறையும் மந்திர மர வீட்டிலுள்ள புத்தகங்களினூடு கடந்த காலம், வருங்காலமென்று அலைந்து திரிந்து வருவதைப் போல் எனக்கும் அலைந்து திரிந்து வர ஆசைதான். நாங்கள் இருப்பதோ நகரத்துத் தொடர்மாடி இல்லமொன்றில். இதற்கெல்லாம் சாத்தியமேயில்லை.அப்பா எப்பொழுதுமே சொல்லிக் கொண்டுதானிருக்கிறார் 'கொஞ்சம் பொறம்மா! இன்னும் இரண்டு வருடங்களிற்குள் வீடு வாங்கி விடுகின்றேன்' என்று. இந்த அப்பாவை ஒரு போதுமே நம்ப முடியாது. ஆனால் அப்பவுக்கு நான் நிறையத் தொந்தரவு தான் செய்கின்றோனோ தெரியவில்லை. பாவம் அப்பா! என்னால் அவருக்கு நிறையச் செலவு. தொலைக் காட்சியில் செய்திகள் பார்ப்பதற்கு அப்பாவுக்கு என்னால் நேரமே கிடைப்பதில்லை. பாடசாலை இல்லாத நேரங்களில் தூங்கப் போகும் மட்டும் எனக்குத் தொலைக்காட்சி பார்க்கவேண்டும். எனக்குப் பிடித்தமான காட்சிகள் பார்த்துக் கொண்டிருப்பேன். 'டி.வி.ஒ.கிட்ஸ்' நிகழ்ச்சியினை நடத்தும் பில், யூலி ஒன்று, யூலி இரண்டு, படி (Patty), சிசெல் எல்லோரும் நன்றாக நடத்துவார்கள். ஆனால் எனக்குப்

பிடித்தவை 'பெரு வெடிப்பு' (The Big Bang) காட்சி தான். வயலட் பேர்லினும், ஹேரித் ஜோன்ஸ்சும் இணைந்து நடாத்தும் நிகழ்ச்சி. விளையாட்டுகள், புதிர்கள் எல்லாவற்றையும் எவ்விதம் செய்வதென்று விளக்கம் தருவார்கள். நீல் பஞ்சனானின் ' ஓவியத் தாக்குதலும்' (Art Attack) எனக்கு மிகவும் பிடித்தவை. வீட்டில் ப'விக்கப் படாமலிருக்கும் பொருட்களைக் கொண்டு எவ்விதம் ஓவியங்களை உருவாக்குவதென்று அழகாக நீல் செய்து காட்டுவார். மார்டின் க்ராட், கிறிஸ் கிராட் சகோதரகளின் 'சுபூமொவூ' ( Zoboomofoo) , பொம்மை லீமா எல்லாம் என்னைக் கவர்ந்தவை. இவர்களின் 'கிராட் உயிரினங்கள்' காட்சியும் நல்லதொரு காட்சி. மிருகங்களைப் பற்றிய தகவல்களைத் தரும் காட்சிகளிவை.

என்ன இவள் ஓயாமல் தனக்கு விருப்பமானதைப் பற்றியே கூறிக் கொண்டிருக்கிறாளென்று பார்க்கின்றீர்களா? தன்னைப் பற்றி ஒன்றுமே கூறவில்லையேயென்று பார்க்கின்றீர்களா? கொஞ்சம் பொறுங்கள் கூறி விடுகின்றேன் கேளுங்கள். என் பெயர் சாவித்திரி. எனக்கு வயது ஒன்பதுதான் ஆகிறது. நான் ஒரு கனடியப் பிரசை. நான் பிறந்தது டொராண்டோ மாநகரிலுள்ள ஸ்கார்பரோ கிரேஸ் ஆஸ்பத்திரியில் தான். நான் பிறக்கும் பொழுதே அம்மாவை நல்லா வருத்திப் போட்டுத் தான் இவ்வுலகிற்கு வந்துதித்தேனாம். என் அப்பா அம்மா இருவரும் ஸ்ரீலங்காப் பிரசைகளாகவிருந்து கனடியப் பிரசைகளானவர்கள். ஸ்ரீலங்காவில் ஒரே யுத்தமாம். அதனால் தான் இங்கு வந்தவர்களாம். அகதியாக வந்தவர்களாம். அப்பா தான் முதலில் வந்தவராம். அப்பாவிற்கு அவரது ஊரில பெரிய வீடு தோட்டமெல்லம் இருந்ததாம். அவர் ஸ்ரீலங்காவில் சீமெந்துத் தொழிற்சாலையில் பொறியியலாளராக வேலை பார்த்து வந்தவராம். அங்கு மட்டும் யுத்தம் ஏற்பட்டிருக்காவிட்டால் அவர் ஒரு போதுமே இங்கு வந்திருக்க மாட்டாராம். அப்பொழுதெல்லாம் நான் கூறுவேன்: "டாடி! அப்போ என்னை நீங்கள் இழந்திருப்பீர்களேயென்று." அதற்கவர் கூறுவார்: "குஞ்சு! எப்படியம்மா நான் உன்னை இழந்திருக்க முடியும். அப்பொழுது நீ தான் கனடாவை இழந்திருப்பாய். நீ தான் ஸ்ரீலங்காப் பிரசையாக இருந்திருப்பாயே!". அப்பா என்னை அப்படிக் 'குஞ்சு' என்ற் அழைக்கும் போது எனக்கு எப்பொழுதுமே அப்பாவைக் கட்டிக் கொள்ள வேண்டுமென்றிருக்கும். அவ்வளவு தூரம் அன்பையெல்லாம் குழைத்துக் கூப்பிடுவார். அப்பா கூறுவார் அம்மா அவரது குடும்பத்தில் ஒரேயொரு பெண்பிள்ளையாம். மற்ற மூவரும் ஆண்பிள்ளைகள் தான'ம். எல்லோருக்கும் அவவென்றால் உயிராம். அவ்வளவு செல்லமாக வளர்ந்தவ இங்கு வந்து தொழிற்சாலையில் வேலை செய்வதைப் பார்த்தால் அவருக்குக் கவலையாகவிருக்குமாம். அவ கனடாவிற்கு வந்ததிலிருந்து பலவருடங்களாக அவவை வேலை செய்யவே அவர் விடவில்லையாம். ஆனால் ஒரு வருடமாகத் தானாம் அவ தானாகவே வேலைக்குப் போகவேண்டுமென்று அடம் பிடித்து வேலைக்குப் போகின்றாவாம். அதுவும் ஒரு விதத்திற்கு நல்லதுதானே என்று எனக்குப் பட்டது. அம்மா பகலிலை தொழிற்சாலையில் வேலையென்றால் அப்பா நள்ளிரவிலிருந்து காலை வரை நகரிலுள்ள ஆஸ்பத்திரியொன்றில் பாது காவலனாக வேலை செய்கின்றார். அப்பா சொல்லுவார் தான் கனடா வந்து செய்யாத வேலையில்லையென்று. உணவகங்களில்

கோப்பை கழுவியதிலிருந்து, பொருட்களை உணவுகளை விநியோ'க்கும் சாரதி, ஆபிஸ் தளங்கள், வங்கிகளைக் கழுவியதிலிருந்து பாதுகாவலன் வேலை வரை எத்தனையோ வேலைகள் செய்து விட்டாராம். அம்மா அடிக்கடி சொல்லுவா 'பாவம் இந்த மனுசன். ஊரில் என்ன மாதிரி இருக்க வேண்டிய மனுசன் இங்கு வந்து இப்படி அனுபவிக்க வேண்டுமென்று விதிதான். ஊரில் மட்டும் பிரச்சினை இல்லையென்றால் அடுத்த கணமே உங்கள் எல்லோரையும் கூட்டிக் கொண்டு நான் அங்கு போய் விடுவேன்.'
அப்பொழுதெல்லாம் நான் 'அதெப்படி. நான் இந்நாட்டுப் பிரசை. நான் அங்கெல்லாம் வர மாட்டேன். எனக்குக் கனடா தான் வேண்டும்' என்று அழுது அடம் பிடிப்பேன். இந்த நாட்டை விட்டு வேறு ஒரு நாட்டிற்குப் போவதை என்னால் நினைத்துப் பார்க்கவே முடியாது. ஏன் இதனை அப்பாவும் அம்மாவும் உணர்கின்றார்களில்லை. அவர்களிற்கு எப்படி அவர்களது நாடு முக்கியமோ அப்படி முக்கியம் எனக்கு இந்த நாடும்.
முன்பெல்லாம் அப்பா அடிக்கடி கூறுவார் 'கொஞ்சக் காசு சேரட்டும். பேசாமல் எல்லோரும் கொடைக்கானல் போய் விடலாம். குழந்தைக்கு எங்களுடைய பண்பாடெல்லாவற்றையும் காட்ட வேண்டுமெ'ன்று. ஆனால் நான் அப்பொழுதெல்லாம் 'அது மட்டும் முடியாது. நான் கனடியன். இங்குதானிருப்பேன்' என்று அடம் பிடித்து அழுவேன். இப்பொழுதோ அந்தக் கொஞ்சக் காசையும் அவர்கள் உழைத்து விட்டார்கள் போல் தெரிகிறது... ஆனால் அப்பா இப்பொழுது முன்போலில்லை. 'யோசித்துப் பார்த்தால் ..என்னுடைய ஆசைக்காக ஏன் எங்களுடைய குழந்தையின் எதிர்காலத்தைப் பாழாக்க வேண்டும். எங்களுக்கு ஏற்பட்ட நிலைமை இங்கு பிறந்த எங்களுடைய குஞ்சுக்கும் ஏன் ஏற்படவேண்டும். எங்களுக்குத் தான் எங்களுடைய வெளிநாட்டுக் கல்வித் தகைமைகளிற்குரிய அங்கீகாரம் இங்கு கிடைக்கவில்லை. கிடைப்பதற்கும் எவ்வளவோ போராட வேண்டும். எல்லொருக்கும் போராடுவதற்கும் அவர்களது குடும்ப நிலைமைகள் விடுவதில்லை. எங்களுடைய குஞ்சு இந்தியாவில் படித்து விட்டு ஒருகாலத்தில் இங்கு திரும்பி வந்தால் அவளும் எங்களைப் போல் தானே பிரச்சினைகளை முகம் கொடுக்க வேண்டி வரும்' என்பார். அப்பா இப்பொழுது தனது எதிர்காலத் திட்டத்தை மாற்றிக் கொண்டார். 'நான் இன்னும் கொஞ்சம் நல்லாக உழைத்து, முழுதாகப் பணம் செலுத்தி ஒரு வீடு வாங்கிக் கொஞ்சம் காசையும் வங்கியில் உங்களுடைய அன்றாடச் செலவுக்காக வைப்பில் போட்டு வைத்து விட்டு நான் மட்டும் கொஞ்சக் காலம் அங்கும் கொஞ்சக் காலம் இங்குமாகக் காலம் தள்ள வேண்டும்.' என்பார். அப்பொழுதெல்லாம் அம்மா 'இவ்வளவு காலம் உங்களுடன் காலந்தள்ளியது போதும். என்னுடைய கடைசி காலத்திலும் ஒரு போதும் உங்களுடன் இருக்க மாட்டேன்' என்று வேடிக்கையாகக் கூறுவா. ஆனால் அதற்கு அப்பா என்னிடம் 'குஞ்சூ! நீ டாக்டராக வந்து அம்மாவுக்கும் ரிஷப்சனில் ஒரு வேலை போட்டுக் கொடுத்து விடு. அது தான் அவவுக்குச் சரி' என்று கூறிச் சிரிப்பார். அதற்கு நான் 'அப்பா! உங்களுக்கும் கூடவேலை போட்டுத் தந்து விடுகிறேன்' என்பேன். அதற்கு அப்பா சிரித்துக் கொண்டே 'நீ பொல்லாத குஞ்சம்மா!' என்பார்.

ஆனால் கொஞ்ச நாட்களாக அம்மாவுக்கும் அப்பாவுக்கும் அடிக்கடி சண்டை வர

ஆரம்பித்து விட்டதன் காரணம் தான் சரியாக எனக்கு விளங்கவில்லை. சின்னச்சின்ன விசயங்களிற்கெல்லாம் சண்டை பிடிக்க ஆரம்பித்து விடுகின்றார்கள். சாதாரணமாக ஆரம்பிக்கும் சண்டை விரைவிலேயே சூடு பறக்க ஆரம்பித்து விடுகிறது. அப்பா கையில் கண்டதையெல்லாம் எடுத்து அம்மாவின் மேல் எறியத் தொடங்கி விடுகிறார். கையில் அம்மா அகப்பட்டு விட்டால் கண்டபடி அடிக்கவும் ஆரம்பித்து விடுகின்றார். ஆரம்பத்தில் சும்மா இருந்த அம்மாவும் பதிலிற்கு கையிலகப்பட்டதையெல்லாம் எடுத்து அப்பாவின் மேல் எறிய ஆரம்பித்து விடுகின்றா. அம்மாவும் அப்பாவும் சிறுவயதிலிருந்தே ஒன்றாகப் பழகியவர்களாம். அவர்களிற்கிடையில் என்ன நடந்து விட்டது. அப்பாவின் ஆக்களெல்லோரையும் அப்பா கனடா எடுத்து விட்டாராம். அம்மாவின் ஆக்களெல்லாம் இன்னும் ஸ்ரீலங்காவில் தான். அப்பா அடிக்கடி கூறுவார் 'நீ கொஞ்ச நாளைக்காவது ஊருக்குப் போய் உன்னுடைய ஆக்களைப் பார்த்து வா'வென்று. ஆனால் அம்மாவோ அடிக்கடி தேவையில்லாமல் அப்பாவுடன் அப்பாவின் ஆக்களை எடுத்தெறிந்து கதைக்கத் தொடங்குவா. உடனே சண்டை ஆரம்பித்து விடும். அதுவரை அமைதியாகவிருக்கும் அப்பாவுக்கும் ஆத்திரம் பொத்துக் கொண்டு வரும். யுத்தம் தொடங்கி விடும். இடையில் அகப்பட்டுக் கொண்டு நான் முழிக்க வேண்டி வரும். எதற்காக இவர்கள் இப்படி எதற்கெடுத்தாலும் சண்டை பிடிக்கிறார்கள். ஒரு நாள் பொறுக்க மாட்டாமல் 'கனடியர்கள் இவ்விதம் சண்டை பிடிக்க மாட்டார்கள். நீங்கள் ஸ்ரீலங்கர்கள் ஏனிப்படி சண்டை பிடிக்கிறீர்களோ' என்று கேட்டு விட்டேன். அப்பாவுக்கு அது மனதைத் தைத்து விட்டது. 'இங்குள்ள ஏனைய கனடியர்கள் சிலர் கேட்பதைப் போலவே கேட்டு விட்டாயேயம்மா' என்று கவலைப் பட்டார். எனக்கும் வருத்தமாகப் போய் விட்டது. 'எப்படியம்மா இவ்விதம் பிரித்துப் பார்க்க இந்தச் சின்ன வயசிலை மனசு வந்தது' என்று சரியாகக் கவலைப் பட்டார். அப்பாவைத் தடவி ஒரு மாதிரி சமாதானம் செய்து விட்டேன்.' ஒரு மாலையில் வழக்கம் போல் இருவரும் சண்டை பிடித்துக் கொண்டிருந்தார்கள்.

'கனடா வந்த இந்த பத்து வருடங்களில் என்னத்தைச் சாதித்துக் கிழித்துப் போட்டீர்கள். உங்களுடைய ஆட்களென்றால் உங்களுக்குப் பதறிக் கொண்டு வருகின்றது. எங்களைப் பற்றிக் கொஞ்சமாவது உங்களுக்குக் கவலையிருக்கிறதா?' என்று அம்மா கேட்டதும் அப்பாவுக்கு ஆத்திரம் பொத்துக் கொண்டு வந்து விட்டது. 'இத்தனை வருசமாய் உங்களை பராமரித்துக் கொண்டு வருகின்றேனே. அது உனக்குத் தெரியவில்லையா?' என்று அப்பா கேட்டதும் அம்மா 'என்ன ஊரில் மற்றவர்கள் செய்யாததைச் செய்து கிழித்துப் போட்டீர்கள். எல்லோரும் தானே குடும்பத்தைப் பார்க்கின்றார்கள். நீங்களில்லையென்றால் சமூக உதவிபணத்திற்கு விண்ணப்பித்திருப்பேன்' என்று கூறியதும் தான் அப்பாவால் தாளமுடியவில்லை. அதன் பிறகு நானும் என்னை வெகுவாகக் கட்டுப்படுத்திக் கொள்ள ஆரம்பித்து விட்டேன். அவர்களிருவரின் சண்டையில் இடையில் குறுக்கிடுவதில்லை. ஆனால் சரியாகக் கவலையாகத் தானிருக்கும். ஆனால் இவ்விதம் அடிக்கடி ஆரம்பித்த சண்டைகள் கொஞ்சம் கொஞ்சமாகப் பெரிதாகி ஒரு நாள் அப்பா வீட்டை வருவதையே

நிறுத்திக் கொண்டார். என்னால் அதன் பிறகு வீட்டில் இருக்கவே பிடிக்கவில்லை. அம்மாவும் எந்த நேரமும் ஒரே அழுதபடி. அப்பா எங்கிருக்கிறாரென்றே யாருக்கும் தெரியவில்லை.ஆனால் அப்பா டொராண்டோவில தான் தன்னுடைய நண்பரொருவருடன் இருப்பதாக அறிந்தோம். அந்த நண்பரூடாக அப்பா என்னுடன் தொடர்பு கொண்டார். 'அப்பா! ஏனப்பா! எங்களை விட்டுப் பிரிந்து போனீர்கள். நீங்களில்லாமல் எனக்கு ஒன்றுமே பிடிக்கவில்லை. வீட்டு வேலை ( Home work) செய்வதற்கு எனக்கு யாருமே உதவியில்லையே' என்றேன். அதன் பிறகு அப்பா ஒவ்வொரு நாள் மாலையிலும் எனக்காக வந்து எமது தொடர் மாடிக் கட்டடத்தில் வெளியில் அழைப்பு மணியை அழைத்துவிட்டுக் காத்திருப்பார். இருவருமாக அருகிலிருக்கும் நூலகம் செல்வோம். வீட்டு வேலைகள் எல்லாம் செய்து முடிந்ததும் அப்பா என்னை 'மக்டானல்ட்; கூட்டிச் செல்வார். ஒவ்வொரு நாளும் அப்பா என்னை மறுபடியும் வீடு கொண்டு வந்து விடும்போது 'அப்பா! எப்ப திரும்பவும் எங்களுடன் வந்திருக்கப் போகின்றீர்கள்' என்பேன். அதற்கு அவர் 'குஞ்சூ! உன் அம்மா தனியாக இருந்து வாழ்ந்து பார்த்தால் தான் எல்லாவற்றையும் உணர முடியும். அவ உணர்ந்த பின் அழைத்தால் வருவேன். அதன் பிறகு இவ்விதம் தேவையற்ற சண்டைகளைப் போடக் கூடாது.' என்பார். அம்மாவிடம்' அம்மா! நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள். அப்பா இவ்விதம் கூறுகிறார்களே' என்பேன். அதற்கவர் 'நீ பேசமல் இருக்க மாட்டாய். எப்ப அவர் போய் விட்டாரோ. அப்பவே அவரை நான் கை கழுவி விட்டேன். என்னாலும் தனியாக வாழ முடியும்." என்று ஆத்திரத்துடன் கூறுவா. ஆனால் அதன் பிறகு அவவிற்கு அழுகை வந்து விடும். எதற்காக அம்மாவும் அப்பாவும் இவ்விதம் வீண் பிடிவாதம் பிடித்துக் கொண்டு வாழுகிறார்களோ தெரியவில்லை..

நான் ஒருத்தி இருப்பதை இதனால் எனக்கேற்படும் பாதிப்புகளை ஏன் இவர்கள் உணர்கிறார்களில்லை.

இவர்களது சண்டைகளெல்லாம் தேவையற்ற விடயங்களிற்காக இருப்பதாக எனக்குப் படுகிறது. இவர்களுக்கேன் அவ்விதம் படுவதில்லை. அப்பா! வேண்டுமானல் எங்களுடன் மீண்டும் வந்து விடுங்கள். அப்படி வந்து விட்டால் நாங்களெல்லோருமாக நீங்கள் கூறியது போல் இந்தியாவோ எங்கோ வரவும் நான் தயாராகவிருக்கிறேன் அப்பா! எனக்கு அது விருப்பமில்லாவிட்டாலும் எனக்கு நீங்களும் அம்மாவும் தான் முக்கியம் அப்பா. மீண்டும் எங்களுடன் வந்து விடுங்களப்பா. வேண்டுமானால் நீங்களிருவரும் ஒருவருக்கொருவர் கதைக்காவிட்டாலும் பரவாயில்லை. ஒன்றாயிருங்கள். அது போதுமெனக்கப்பா! அப்பா! அடிக்கடி நீங்கள் உங்களது பால்ய காலத்து அனுபவங்களைப் பற்றிக் கூறுவீர்களே! எனக்கும் அத்தகைய அனுபவங்களைத் தரவாவது நீங்கள் எங்களுடன் வந்திருக்கத் தான் வேண்டும். அங்கு உங்களது சொந்த ஊரில் யுத்தம்மென்றுதானே இங்கு வந்தீர்கள். அங்கு தான் யுத்தம் எல்லோரையும் பிரித்து வைத்திருக்கிறது. இங்கும் உங்களிற்கிடையிலொரு யுத்தம் தேவைதானா? தேவையில்லாத விசயங்களிற்கெல்லாம் இவ்விதமொரு பிரிவினைத் தரும் யுத்தம் தேவைதானா? சொல்லுங்கள் அப்பா! சொல்லுங்கள் அம்மா!

அப்பா! எப்போ நீங்கள் மீண்டும் வரப் போகின்றீர்கள்? அம்மா! எப்போ உங்களுடைய வீண் பிடிவாதத்தினை விட்டொழிக்கப் போகின்றீர்கள்?

- நன்றி: திண்ணை.காம், பதிவுகள், ஞானம் புகலிடச்சிறப்பிதழ்-